உ

விநாயகர்துணை.

வேலுமயிலுந்துணை.

# கந்தபுராணச்சுருக்கம்

தருமபுர-ஆதீனம்.

## சம்பந்தசரணாலயசுவாமிகள்

அருளிச்செய்தது.

இஃது

திருவூர்

உருத்திரகோடிமுதலியார்

குமாரர்

கந்தசாமிமுதலியார்

கேட்டுக்கொண்டபடி

வித்வான்-காஞ்சீபுரம்

## சபாபதிமுதலியாரவர்களியற்றிய

பொழிப்புரையுடன்.

மகாகனம்பொருந்திய

விநாயகசதுர்த்திபக்த

சபையாரால்

கொலம்பியன்பிரஸில்பதிப்பிக்கப்பட்டது.

சென்னைமாநகரம்.

வி-ச-ப-சபா ௵ ௨௰. தில் நிகழும்

ரௌத்திரி ௵ மார்கழி ௴.

REGISTERED COPYRIGHT.



உ

விநாயகர் துணை.

வேலுமயிலுந்துணை.

# கந்தப்புராணச் சுருக்கப் பொழிப்புரை.



## பாயிரம்,

கடவுள்வாழ்த்து.

காப்பு,

### விருத்தம்.



பொங்குகந்தப்புராணச்சுருக்கநூல். - *
இங்கிசைத்திடவின்பொடுமுற்றுவான். - *
மங்கைபாலகன் மாதங்கமாமுகப். - - *
புங்கவன்றுணைப்பொற்பதம் போற்றுவாம். *

(இதன்பொழிப்புரை) - மிகுதியாகவிளங்குகின்ற - கந்தப்புராணச்சுருக்கமென்னுங் காப்பியம் - இப்போது நவமாகச்சொல்லவும் - விக்கினமின்றிச் - சொல்லிநிறைவேறவும் - பார்வதிதேவியார் - திருமைந்தராகிய யானைமுகவிநாயகருடைய - அழகிய இரண்டு திருவடிகளையும் - யாப்போற்றுதல செய்வாம்.—(என்றவாறு.)

---

(பரசிவவணக்கம்.)

சீர்கொண்டவானந்தமாகியெங்கும்... ... ... ... ... *
செறிவாகிப்பரமாகித்திரமதாகி... ... ... ... ...*
யேர்கொண்டகருணைதிருவுருவமாகி.. ... ... ... ... *
யெழில்கொண்டமலைமகளையிடத்திற்கொண்டோன் ...*
கார்கொண்டநிறங்கொண்டமுகுந்தனுதிக்... ... ... ... *
கடவுளர்வந்தடிபரவுங்கடவுள்கொன்றைத். ... ... *
தார்கொண்டமுடியனவனடியைத்தாழ்ந்து... ... ... ...*
தாழாதபெருங்கதியில்வாழாநிற்பாம் ... ... ... *

(இ-புரை.) சீர்கொண்ட ஆனந்தமாகியும் எங்கும்பரிபூரணமாகியுமெல்லாக்கடவுளர்க்கும் உயர்வாகியும்-நித்தியமாகியும்அழகும்பொருந்திய திருவருளே திருமேனியாகக்கொண்டு - சௌந்தரியமுள்ளபார்வதிதேவியாரைத் தம்மிடப்பாகத்தில் வைத்தவரும் - நீருண்டமேக நிறம்போலக் கருமைநிறங்கொண்ட மாயவன் முதலான தேவர்களெல்லாரும் வந்து தமது திருவடியைத் துதிக்கும்படியான முதற்கடவுளும் கொன்றைப்பூமாலையணிந்த சடாமகுட முடையவருமாகிய பரமசிவன்திருவடிகளைவணங்கி யெப்போதுந் தாழ்வுபடாத பெருங்கதியாகிய மோக்ஷவீட்டில்வாழ்ந்துகொண்டிருப்போம்.—(எ-று.) (க)

(பார்வதிதேவியார்வணக்கம்.)

மாற்கரியசெம்பதத்தோன்றேவியாகி ... ... ... ... ...
வல்வினையேனெனதாவிக்காவியாகி ... ... ... ...*
மேற்கருணைத்திருவுருவமுடையளாகி ... ... ... ... *
வித்தகமா§வையந்தொழிற்கும்வித்தாய்நின்ற... ... ...*
சேற்கருங்கட்டளவநகைக்களபக்கொங்கைச். ... ... ... *
சிற்பரையிங்கெமையாளுமுமையாள்செம்பொற்... ...*
காற்கமலந்¶தலைக்கமலம்பொருந்தத்தாங்கிக் ... ... ... *
கைக்கமலங்குவித்தருந்*துங்கமலந்தீர்வாம்... ... ...*

(இ-புரை.) திருமால்காணுதற்கரிய செய்யதிருவடியையுடைய-ஸ்ரீ கயிலாயபதியின் தேவியாராகியும் வலிய இருவினைச்சம்பந்தப்பட்டுள்ளவனுகிய என்னுயிருக்குயிராகியும் மேன்மைபொருந்திய அருளாகியதிருமேனி யுள்ளவராகியும் ஞானமேயாகியும் - பஞ்சகிருத்தியங்களுக்குங் காரணமாயுமிருக்கும்-சேல்மீன் போன்று கருமை நிற முள்ளதிருநேத்திரங்களையும் முல்லையரும்பொத்ததந்தங்களையும் சந்தனக்குழம்பணிந்த திருத்தனபாரங்களையுமுடைய சிற்பரையாயும் எம்மையிப்பிறப்பில் ஆட்கொண்ட உமையாள் என்னுந்திருநாமமுமுள்ளவராகியும்விளங்குகின்றபார்வதிதேவியின்- செவ்விதாய்ப்பொலிவுள்ள திருவடித்தாமரைமலரை எமது சிரசுக்குப் பரிசுத்தமுண்டாகும்படி சூட்டிக்கொண்டு கைம்மலரால் அஞ்சலித்து நீங்குதற்கரிய வன்மையுள்ள ஆணவமலத்தை நீங்குவாம்.—(எ-று.) (உ)

---

§ ஐந்தொழிலாவன சிருஷ்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்பவை.
¶ தலைக்கு-அமலம் எனவும்.
* அரும் துங்கம் மலம் எனவும் பிரித்துக்கொள்க.

(விநாயகர்துதி)

மாவேலையாலமதையடக்கித்தன்னுண் ... ... ... ... ...*
மண்டிலகமண்டமெலாம்வளர்ந்துதானோர். ... ... *
காவேயின்முன்னுதித்தவரசிற்றோன்றிக் ... ... ... ...*
கடம்புபுனைகுருந்தினுக்குத்துணையதாகித். ... ... *
தூவேதந்தலைகாண்டற்கரியதாகித் ... ... ... ... ...*
துன்பமுறுபிறவியெனுந்துகள்சேர்வெய்யி... ... *
லாவேனைத்தன்னடியாநிழலிற்சேர்த்த .. ... ... ... ...*
அத்திதனைப்பத்திசெய்துமுத்திசேர்வாம்... ... ... *

(இ-புரை.) பெரியசமுத்திரத்திலுண்டாகியஆலகாலவிஷத்தைத்தன்கண்டத்துக்குள்ளடக்கி உலகங்கள் அண்டங்களெங்கும் பரவிமுற்காலத்தில் ஒருமூங்கிற் புதரிலே தோன்றிய இறைவனிடத்திலே திருவவதாரமாகியுங்கடப்பம் பூமாலையணிந்த முருகக்கடவுளுக்குச் சகோதரமாகியும் நிர்மலமான வேதங்களாலுந் திருமுடியைக்காணுதற்கரிய பொருளாகியும்- துன்பமே மிகுந்துள்ள பிறவியாகிய குற்றம்பொருந்திய வெய்யிலில் அகப்பட்டுக்கொண்டிருக்கும் அடியேனைத்தன்திருவடியாகிய நிழலில்சேர்த்தயானைமுக விநாயகருக்குப் பத்திசெய்து முத்தியிற் சேர்வாம்.—(எ-று.) (௫)

அத்தி என்று மரப்பெயர் தோன்றக்கூறினமைக்கேற்ப-முற்கூறியபெயர்களையும் மரப்பெயர்தோன்றக்கூறினார் - எவ்வாறெனில்-மா-வேல்-ஆலம்-அரசு-கடம்பு-குருந்து- இவைகள்-மரப்பெயராக் கூறுஞ்சொற்கள் - மூங்கிற்புதரிலே தோன்றிமாமரத்தையும் - வேலமரத்தையும்-ஆலமரத்தையும் தனக்குள்ளடக்கி உலகங்கள் அண்டங்களிவ்விடங்களெங்குமாகவளர்ந்த அரசமரத்தில் முளைத்துக்கடப்பமரத்தினைச்சேர்ந்தகுருந்தமரத்துக்குத் துணையாயிருக்கும் அத்தியென்றும் - பொருள்படுமாறு அறிக-மூங்கிற்புதரில் சிவலிங்கப்பெருமான் றோன்றியது திருநெல்வேலியென்னுந் தலத்தில். விநாயகர்துதி முதலிற்கூறி மீட்டுங்கூறியதென்னையெனின் நாம் ஒருகாரியஞ்செய்யுமிடத்து அது இடையூறின்றி நிறைவேறும்பொருட்டு ஆரம்பத்தில் விநாயகரைத்துதி செய்து சுவாமி அம்மை விநாயகர் சுப்பிரமணியர் இவர்களைத்துதி செய்வது சைவசமயத்தின் முறைமை.

(சுப்பிரமணிய சுவாமி துதி.)

தேவர்குலப்பெருங்கமலமிடுக்கனை ... ... ... ... ...*
திமிரமகன்றளியோடுசிறந்துவாழ ... ... ... ... *
மாவலிசேரவுணர்குலக்குவளைவாடி ... ... ... ... ...*
மண்ணினிடைச்சுருங்கியிடவந்தபானு... ... ... ...*
தூவடிவேற்குமரேசனடியனேன்புன் ... ... ... ... ...*
சொல்லினுக்குமிரங்கியருள்சுரக்கும்பெம்மான்... ... *
பூவடியாமிருபோதுமூன்றுபோதும்... ... ... ... ...*
பூசைபுரிந்தன்பினொடுபுகழ்ந்துவாழ்வாம்... ... ... *

(இ-புரை.) தேவர்குலமாகிய பெரியதாமரைமலர்கள்-துன்பமாகிய இருளை நீங்கிக்கிருவையுடன் சிறந்துவாழவும்-மிகுந்தபலமுள்ள அவுணர்குலமாகிய குவளைமலர்கள் வாடிமண்ணினிடத்திற்சுருங்கவும்- உதயஞ்செய்தசூரியன் - ஞானசொரூபமான வடிவேலையேந்தியகுமரேசன் அடியேன் கூறும்புன்சொல்லுக்குந் திருவுளமிரங்கியருளும்பெருமான்-என்னும் - சுப்பிரமணியசுவாமியின்- பொலிவாகிய - இரண்டு திருவடித்தாமரைகளையும் பூசித்துத்திரிசந்தி காலங்களிலும் அன்புடன்புகழ்ந்துவாழ்வாம்.—(எ-று.) தாமரை யென்றதற் கேற்ப - அளியென்றார்- அளி-வண்டு. சூரியோதயமானவுடன் தாமரை மலர்ந்து குவளை வாடுவதுபோலச் சுப்பிரமணியசுவாமி திருவவதாரஞ்செய்தவுடன் தேவர்கள் வாழ்வடைந்து அவுணர்கள்வாடினார்களென்பது கருத்து. (ச)

(வீரவாகு தேவர் துதி.)

பொங்குகிரிகளிற்றலைமையோதும்போது... ... ... ...*
பொற்புடையபொற்கிரிமுனிற்குமாபோற் ... ... *
றங்குதிறற்புகழ்வீரர்தம்மையெண்ணிற் ... ... ... ...*
றானேமுன்னெண்ணவருந்தலைமையாளன்... ... ... *
பங்கமிலாநீடுலகைமூடுமல்லின் ... ... ... ... ... *
பகைவனவன்பகைவனவன்பகைவனானோன்... ... ...*
மங்கலிலாப்புகழ்வீரவாகுவாய ... ... ... ... ... *
வரிசிலைக்கைக்குரிசிலையாம்வணங்கல்செய்வாம் ... ...*

(இ-புரை.) உயர்வாகியமலைகளில் முதன்மையானமலையின்னதென்றுசொல்லத்தொடங்கும்போது அழகுள்ள பொன்மலையாகியமகமேருவானது முதன்மையாய்நிற்பதுபோல் வெற்றிபொருந்தியபுகழுள்ளவீ

ரர்களை யெண்ணத்தொடங்கினால் தம்மை முன்னேதொடங்கியெண்ணும்படி வருகின்ற முதன்மையானவராகியும் பழுதில்லாத பெரியவுலகத்தைமறைக்கும் இருளுக்குப் பகைவனாகிய சூரியனுக்குப் பகைவனாகிய பானுகோபனுக்குப் பகைவராயுங் கெடாதபுகழுள்ள வீரவாகு என்னும்பெயருள்ளவராகியுமிராநின்ற நீண்டவில்லேந்திய இறைவனையாம்வணங்குவாம்.—(எ-று.) (௫)

(திருஞானசம்பந்த சுவாமிகள்-முதலிய சைவசமயாசாரிகள் துதி.)

வெங்குருவிற்சற்குருவாயுதித்துக்கூடன்... ... ... ... *
மீனவன்மேலவினைதீர்த்தோன்விரைத்தாள்போற்றி.. ...*
துங்கமுறுமலைகடலிற்சிலையதான.... ... ... ... ... *
தோணியில்வந்தவன்பாததூளிபோற்றி... ... ... ...*
யெங்கள்பிரான்றனையிருளிற்பரவைவாசற். ... ... ... *
கேவல்கொண்டோன்பதப்பதுமவிருமைபோற்றி... ...*
புங்கவர்சூழ்திருவாதவூரில்வந்த... ... ... ... ... ...*
புண்ணியனிணையடிகள்போற்றிபோற்றி.. ... ... *

(இ-பொ.) வெங்குரு என்பதாகவும்-ஒருபெயருள்ள சீகாழியில்-ஞானகுருவாய்த்திருவவதாரஞ் செய்து மதுரைப்பாண்டியராசன் சரீரத்திலவியாபித்திருந்த சுரப்பிணியை நீக்கியருளிய திருஞானசம்பந்த சுவாமிகளுடைய வாசனைதங்கியசெந்தாமரைமலர் போன்றதிருவடிகள் போற்றி-வன்மையுள்ளதாயலையும் நீரோடுகூடியகடலினிடத்துக்கற்றூணாகிய தெப்பத்தில மிதந்துவந்து கரையேறியதிருநாவுக்கரசு சுவாமிகளுடையதிருவடித்துகள்போற்றி- எங்கள் பெருமானாகிய பரமசிவனை யிராப்பொழுதில பரவைநாச்சியார் திருமாளிகைக்குத் தூதாகஎழுந்தருளத்திருவருள் பெற்ற சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய இரண்டுதிருவடித்தாமரைமலர்களும் போற்றி- தேவர்கள்வந்து சூழ்ந்திருக்கும்படியானதிருவாதவூரில திருவவதாரஞ் செய்தபுண்ணியசொரூபரான மாணிக்கவாசக சுவாமிகளுடைய இரண்டுதிருவடிகளும் போற்றி போற்றி.—(எ-று.) (௬)

(ஆசாரியர் துதி.)

கடியதிரிமலவிருளைக்கடியஞானக்... ... ... ... ... *
கரமுதவவெதிர்செறிந்துகண்டோர்தங்கள் ... ... *
வடிவுடைப்பனிதயசரோருகங்களெல்லா.. ... ... ... ...*
மலரவமதிநிலவுமழுங்கித்தாழப்... ... ... ... *

படியடியர்கண்டுதொழமண்டுசீர்த்திப் ... ... ... ...*
பரன்கமலைபெழுந்தவருட்பானுவெண்மைப்... ... *
பொடியணியுமெழின்ஞானப்பிரகாசன்றன் ... ... ... *
பூங்கமலமலரடிகள்போற்றிபோற்றி... ... ... ...*

(இ-புரை.) கொடியதானமும்மலவிருளைக்கெடுக்கும்படி ஞானமாகிய கிரணங்களையுதவவும் எதிரில்வந்து தரிசித்தவர்களுடைய பக்குவமுள்ள இருதயதாமரைமலர்களெல்லாமலரவும் - பயனில்லாமுயற்சியில்வியாபித்திருக்கும் பரசமயத்தர்புத்தியாகிய நிலவுமழுங்கித்தாழவும் இவ்வுலகத்திலிருக்கும் அடியார்கள் தரிசித்துத்தொழுதுய்யவும் சிறப்புள்ளதாய் வீதிவிடங்கப்பெருமாள் திருக்கோவில் கொண்டெழுந்தருளியிருக்குந்திருவாரூரில் உதயஞ்செய்த அருள் நிறைந்தசூரியன் - விபூதிருத்திராக்ஷங்கள் அணிந்திருக்கும் அழகுள்ள ஞானப்பிரகாச தேசிகர் - இவருடையதாமரைமலர் போன்ற திருவடிகள் போற்றி போற்றி.—(எ-று.) அவமதி - அவமதிப்பான - எனினுமமையும். (எ)

(பிரதானஆசாரியர்துதி)

சீரணியுநுதலின்விழிமழுமானாகந் ... ... ... ... ...*
திருந்துமெரிபொருந்துவிடந்தெரிந்திடாமற் ... *
நூரணியன்பரையாளவவர்போல்வந்த... ... ... ... ...*
சைவசிகாமணியெவர்க்குந்தலைவனெங்கோன் ... ... *
காரணியுநெடியபொழிற்கமலைவேந்தன் ... ... ... ...*
கருணைமழைபொழியுமருட்கடைக்கணுளன் ... ... *
பார்புகழுந்திருஞானசம்பந்தனெந்தை ... ... ... ...*
பரமனிருசரணமலர்பரவிவாழ்வாம். ... ... ... *

(இ-புரை.) சீர்பொருந்திய நெற்றிக்கண் - மழு-மான்-சர்ப்பாபரணம்-திருத்தமுள்ளதீ - கண்டத்திற்பொருந்தியவிஷம்-இவைகள் தெரியாவண்ணம்மறைத்து- இவ்வுலகத்தில்-அடியார்களை ஆட்கொள்ளும்படி அவர்கள்போல மானிடவடிவங்கொண்டு வந்த சைவசிகாமணி யானவரும்யாவர்க்குமுதன்மையானவரும் எம்மிறைவரும்-மேகங்கள்தவழும்படியான பெரியசோலைகளாற் சூழப்பட்டிருக்குந் திருவாரூரில் வீற்றிருக்கும் இறைவரும் கிருபையாகிய மழையைப்பொழியுமிருகடைக்கணுள்ளவரும்-பூலோகத்தார் புகழ்ந்து சொல்லுந் திருஞானசம்பந்ததேசிகரொன்னுந் திருநாமமுள்ளவரும் எங்கள்குருவானவருமாகி

ய பரமனுடைய இரண்டுதிருவடித் தாமரைமலர்களையுந் துதிசெய்துவாழ்வாம்— (எ-று.) (அ)

(திருஞானசம்பந்த தேசிகர் - தருமபுர ஆதினபிரதான தேசிகர்)

கச்சியப்பக் குருக்கள் துதி.

போதமுறுசூதமுனிபுகன்றகாந்தப் ... ... ... ... ...*
புகழ்க்கடலிற்படிந்ததன்கட்பொருளதான ... ... *
மேதகுவண்புனலருந்திவையமுய்ய ... ... ... ... ...*
வெய்யதுயர்ப்பிறவியெனும்வெம்மைதீரத் ... ... *
தாதவிழ்பூம்பொழிற்காஞ்சிக்குவட்டிலேறிச் ... ... ...*
சலதியமுதினைநிகர்செந்தமிழதான ... ... ... *
காதன்மழைபொழிந்தவருட்கொண்டலான... ... ... ...*
கச்சியப்பனிருபாதமுச்சிவைப்பாம் ... ... ... *

(இ-புரை.) ஞானமிகுந்துள்ள சூதமுனிவர்- சமஸ்கிருதபாஷையால்அருளிச்செய்தகந்தப்புராணமென்னும்புகழ்நிறைந்தசமுத்திரத்தில் மூழ்கி அதன்பொருளாகிய மேன்மைதங்கிய நல்லநீரையுண்டு இவ்வுலகத்திலிருப்பவர்கள் (ஓதியுணர்ந்து) வெவ்விதானதுன்ப மிகுந்துள்ள பிறவியாகிய வெப்பம் நீங்கியுய்யும் பொருட்டு மகரந்தங்களுடன் மலரும் பூஞ்சோலை சூழ்ந்தகாஞ்சீபுரமென்கிற மலையினிடத்தேறித்திருப்பாற்கடலினுண்டான - அமிர்தத்தை யொத்ததாக யாவரும் விரும்பத்தக்கசெந்தமிழ்ப்பாஷையால்காந்தமாகியமழைபொழிந்தஅருள்நிறைந்தமேகமென்றுசொல்லலான கச்சியப்பக்குருக்களுடையஇரண்டுதிருவடிகளையும் எமதுமுடியில் தரித்துக்கொள்ளுவாம்.—(எ-று.)நீரையுண்டுமலையிலேறிமழை பொழிந்தமேகமெனக்கூட்டிக் கொள்ளுக. (கூ)

(இனி இதன்வழி கூறுகின்றனர்.)

(வேறு)

நன்புவியிடத்துமிக்க நைமிசவனத்துவாழுந் ... ... ...*
துன்பில்சீர்முனிவர்கேட்பச்சூதனங்குரைத்தகாந்த ... ... *
மின்புறுகச்சியப்பனியம்பினன்றமிழாலன்னு ... ... ...*
னன்புறுதமிழைப்போற்றியறிந்தவாசுருக்கிச்சொல்கேன்... *

(இ-புரை.) நல்ல பூலோகத்தில் மேன்மை பொருந்திய நைமிசாரணியத்தில் - தவஞ்செய்து கொண்டிருக்கும் பிறவித்துன்பமில்லாத

## ௮ கந்தப்புராணச்சுருக்கப்பொழிப்புரை.

முனிவர்கள் வினவினதால் சூதமுனிவர் - சொல்லியகாந்தத்தை இன்பம் பொருந்திய கச்சியப்பக்குருக்கள் தமிழினாற் சொல்லினர் நானிப்போது அன்புதருவதாகியஅவர்கூறுங்கந்தப்புராணத்தைப்போற்றிசெய்து எனக்குத் தெரிந்தமட்டில்சுருக்கிச் சொல்லுகிறேன்.—(எ-று.) (௰)

.............

(அவையடக்கம்.)

சுருக்கடன்முருக்கிமுத்திக்கரைதருகாந்தநூலைச் ... ... ...*
சுருக்கவேகல்வியில்லாத்தொண்டனேன்றுணிந்தவாறு ... *
திருக்கில்வான்முழுதுமிங்கோர்செங்கையிலடக்குவேனென்...*
றுருக்கரமில்லானெண்ணுமூக்கமேபோன்றதன்றே... ... *

(இ-புரை.)செனனசாகரத்தைச்சுவற்றிமோக்ஷமாகியகரையைச்சேர்க்கத்தக்க கந்தப்புராணத்தைச் சுருக்கிச்சொல்லும்படி கல்வியுணர்ச்சியில்லாத அடியேன் துணிவுகொண்ட முறைமை எப்படியிருக்கின்றதென்றால் - கெடுதி யில்லாத ஆகாயமுழுவதையும் இங்கிருந்தபடியே என்னொருகையி லடக்குவேனென்று உருவத்தில் கைகளில்லாதவனெண்ணுகின்ற மனவெழுச்சி போலிருக்கின்றது.—(எ-று.) (௰௧)

(இதுவுமது.)

அத்தமுஞ்சொல்லுஞ்சொல்லுமாதிமாதாதலானு... ... ...*
மெத்தியவனப்புவேல்லான்வியன்கதையுறுதலானும்... ... *
பித்தனேன்றனதுபாட்டிற்பிழைகள்வந்திடினுந்தீர்த்திட். ..*
டுத்தமர்கொள்வரென்னுமுரத்தினாலுரைக்கலுற்றேன் ... *

(இ-புரை.)அர்த்தமும் சொல்லும் வேதங்களாற் சொல்லப்படுகிற சிவமுஞ் சத்தியுமா யிருப்பதினாலும் யான்சொல்லுமிந்தச் சுருக்கத்திடைத்து மேன்மையும் அழகுமுள்ளவேலாயுதமேந்திய சுப்பிரமணியக்கடவுளுடைய பெருமைதங்கிய சரித்திரம் பொருந்தியிருப்பதினாலும்- பித்தனாகிய என்பாடல்களில் இலக்கணக்குற்றங்கள் நேரிட்டிருக்குமானாலும் அக்குற்றங்களை நீக்கி என்னாற் கூறப்படுமிதனை உத்தமர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்னுமனவுறுதிப் பாட்டினால் - சொல்லத்தொடங்கினேன்.—(எ-று.) (௰௨)

தனக்கிணைதானேயானசம்பந்தன்கமலைவேந்தன்.... ... ...*
கனக்கவேயென்பாலன்பாற்கருணைவைத்திடுதலாலே... ... *
யுனற்கருங்காந்தந்தன்னையுரைத்தனன்சுருக்கியல்லா ... ...*
லெனக்குமிக்கதைக்குநாடிலெத்தனைதூரமாமால் ... ... *

(இ-புரை.) தனக்குத்தானே ஒப்பாகிய திருஞானசம்பந்ததேசிகர்-என்னுந்திருநாமங்கொண்டு திருவாரூரில்வீற்றிருக்கும் ஆசாரிய சுவாமிகள் அடியேனிடத்தில் பூரணமான அன்புடன்கிருபைவைத் திருப்பதினாலே - சொல்ல நினைப்பதற்குமரியதான கந்தப்புராணத்தைச் சுருக்கிச் சொன்னேன் அவர்கிருபை யில்லாவிட்டால் என் கல்வித்திறத்திற்கும் இக்கதையின்பெருமைக்கும் எவ்வளவுதூரமாகும்—(எ-று) (௰௩)

பாயிரம்.

முற்றிற்று.



உ

வேலுமயிலுந்துணை.

## புராணவரலாறு.



விரிகின்றகடற்புனலுண்டிருண்டுமின்னி ... ... ... ...*
விண்மூடிவருங்கருமைக்கொண்மூவீறி... ... ... *
யெரிகின்றவொளித்தாவமொளிப்பவோங்கு... ... ... ...*
மெழினந்திவரையும்பரிம்பர்வாழச்... ... ... *
சொரிகின்றவெள்ளமிகுபாலிசூழ்ந்த ... ... ... ... ...*
தொண்டைவளநாட்டுளதுதொண்டைச்செவ்வாய்ச் ... *
சரிகின்றவளைத்தளிர்க்கைமடவார்மேவுந் ... ... ... ...*
தடமாடநெடுவீதித்தமிழ்சேர்காஞ்சி ... ... ... *

(இதன்-பொழிப்புரை.) பரந்திருக்குங் கடனீரையுண்டுகறுத்துமின்னி ஆகாயத்தைமறைத்து வருகின்றமேகமானது - மிகுந்துவெதும்புகின்ற வெய்யில்வெப்பம் ஒளிப்பவும் இவ்வுலகத்தார் வாழவும் உயர்ந்த அழகுள்ள நந்திமலையின் மேல்பொழிகின்ற வெள்ளமிகுந்து பரவும் பாலிநதிசூழ்ந்த தொண்டைவளநாட்டில் இருக்கின்றது - கோவைக்கனியையொத்த செவ்வாயினையும் சரிகின்றவளையணிந்தமாந்தளிர்போன்றகையினையுமுடைய மாதர்கள்வாழும்பெரிய வீடுகள்நிறைந்த நெடியவீதியினையுடைய இன்பம்பொருந்திய காஞ்சிமாநகரமானது—(எ-று.) காஞ்சீபுரமானது தொண்டைநாட்டி லிருக்கின்றதெனக்கூட்டுக. (௧)

இன்னபரிசென்னவெழிலன்னமேப... ... ... ... ...*
விறையாலுமெவராலுமியம்பவொண்ணு... ... ... *
வந்நகரின்வளர்பெருமைசொன்றிலென்று... ... ... ...*
லடங்குமோவடங்காதாலதன்கண்முன்னாட் ... ... *
பொன்னவிருந்திருமார்பன்கமடமாகிப் ... ... ... ...*
புரங்கடிந்தகடவுளடிபோற்றிவாழ்ந்த ... ... ... *
நன்னலஞ்சேர்கச்சபாலயமென்றேத்து... ... ... ... ...*
நாமவாலயமொன்று நண்ணிற்றன்றே ... ... ... *

(இ-புரை) இத்தன்மையுள்ளதென்று அழகுள்ள அன்னவாகனத்தை
யுடைய பிரமதேவனாலும் மற்றுமுள்ள எவர்களாலும் சொல்லக்கூடாத
அந்தநகரத்தின்மிகுந்த பெருமையைச் சொல்லத்தொடங்கினால்என்னு
ல்சொல்லி அடங்குமா அடங்காது ஆகையினாலே யதனைச்சொல்லுதல்
விட்டுச்சுப்பிரமணியசுவாமியின்சரித்திரமாத்திரஞ் சொல்லுகின்றேன்-
இலக்குமிவாசஞ்செய்கின்ற திருமார்பினையுடைய விஷ்ணுவானவர் முன்
னாளிலகூர்மாவதாரஞ்செய்து திரிபுரங்களை நகைத்தெரித்த பரமசிவனு
டைய திருவடிகளைப்போற்றி வாழ்வு பெற்றுக்கொள்ளும்படியாகிய நன்
மைசேர்ந்தகச்சபாலயமென்றுசொல்லப்படுகிற பெயரினையுடைய ஆ
லயமானதொன்று அந்தக்காஞ்சிமாநகரத்தில் பொருந்தியிருக்கின்றது
—(எ-று.) கமடம் - கச்சபம் - கூர்மம் - என்பவை ஆமையின்பெயர்க
ள்-கச்சப ஆலயம் என்பது கச்சபாலயமெனத்தீர்க்கசந்தியாயிற்று.(௨)

அன்னபசினகரமதனின்மதனைவென்ற... ... ... ... ...*
வமலனிருகமலமலரடிகள்போற்றிப் ... ... ... *
புனையுநறுந்துழாய்மௌலிக்கடவுடந்த ... ... ... ...*
போதனுறும்பாதுவளர்போதமேவு ... ... ... *
முனிவர்பலரடைந்தவன்செய்பதங்கடாழ்ந்து ... ... ...*
முண்டகமேன்முதல்வவொருமுதுசீர்க்கானந்... ... *
தனையினியியாங்கடவப்புரிந்துவாழச்... ... ... ... ...*
சாற்றுகெனவவ்வையானித்தன்மைசெய்வான் ... ... *

(இ-புரை.) அத்தன்மையுள்ள ஆலயத்தினிடத்தில் காமனைக்காய்ந்
தபரமசிவனுடைய இரண்டுதிருவடித்தாமரைகளையும் போற்றிசெய்து
கொண்டுவாசனைதங்கிய துளசிமாலை யணிந்த விஷ்ணுவால் பெறப்பட்
ட பிரமதேவனிருக்கும்போது மிகுந்த ஞானமுள்ள பலமுனிவர்கள்அ
வருடைய திருவடித்தாமரைமலர்களை வணங்கித் தாமரைப் பூவினிடத்
து வீற்றிராநின்ற கடவுளே நாங்க ளினிதாகத்தவஞ்செய்து வசிக்கப்ப

ழமையாகிய சிறப்புள்ள ஒரு ஆரணியத்தைச்சொல்ல வேண்டுமென்று கேட்டவளவில அவரித் தன்மைசெய்கின்றார்.—(எ-று.) (௩)

ஒருதருப்பையெடுத்துவளைத்தவனிமீதி ... ... ... ...*
லுருட்டியிதுநின்றவனத்துறைதிரென்ன... ... ... *
வருமுனிவரெல்லோருநம்பின்னபோக ... ... ... ... ...*
வதுசென்றுதுன்றியவோராடவியூடே ... ... ... *
மருவிபவனின்றிடவங்கிருந்தாரன்ன... ... ... ... ...*
வனைநைமிசாரணியவனமென்றாட்... ... ... ... *
பொருவில்புகழ்மாதவமோர்மேவியாங்கே. ... ... ...*
புரிந்தமலம்பொருந்தியினிதிருந்தபோது ... ... *

(இ-பு-ரை.) ஒருதருப்பையை எடுத்து வட்டமாகவளைத்து முடிந்து பூமியினிடத்து உருட்டி இது நிற்கும் ஆரணியத்தில் நீங்கள்தவஞ்செய்து கொண்டிருங்களென்று சொல்ல அவ்வார்த்தையைக் கேட்டமுனிவர்களெல்லோரும் அந்தத்தருப்பையின் பின்னே செல்ல - அதுபோய் நெருங்கிய ஒருவனத்துநகர் பொருந்தி அவ்வனத்துக்குநைமிசாரணியமென்னும் பெயருண்டாகும்படி அவ்விடத்தில் சுமனே நின்றிடக் கண்டு பிரமதேவனுக்கருளிப்படி அங்கேயிருந்தவர்களாகியஒப்பில்லாத புகழுடைய அம் முனிவர்கள் ஒருயாகஞ்செய்து மலரகிதர்களாய்- இன்பமுடனிருக்கும்போது.—(எ-று.) நேமி.- யென்பது - வட்டத்துக்கொரு பெயர் - வட்டமாக முடியப்பட்ட தருப்பைசென்று நின்றகாரணத்தினால் -அந்த வனத்துக்குநைமிசாரணியமெனப் பெயருண்டாயது - நேமி-சம்பந்தம் நைமிசமென்பர். (௪)

சூதமுனியீதறிந்துவரவுநேர்போய்த் ... ... ... ... *
தொழுதனரங்கிழுதனவிற்றேய்ந்தாலொப்ப ... ...*
மேதகுமன்புளமுருகமுகமன்கூறி ... ... ... ... *
வீறுதமதாசிரமம்மேவச்சேர்த்திச்... ... ... ... *
சோதிமணிப்பெரும்பீடமொன்றுநாப்பண் ... ... ... *
டுலங்குறவிட்டதன்மீதுதுகளிலாவம் ... ... ... *
மாதவனையினிதிருத்தியருத்தியோடு... ... ... ... ...*
வல்லையிலர்க்கியமுதலவழங்கினரால் ... ... ... *

(இ-பு-ரை.) இதையறிந்து சூதமுனிவர் அங்கேவரலும் அவருக்கெதிரில்போய்த் தொழுது நெய்யானது தீயிற்படிந்தாலொட்பமேன்மை பொருந்திய அன்பினுமேலுள்ள முகஞ்சுப்படி உபசாரவார்த்தைகள்சொல்லி விளங்குகின்ற தங்களாசிரமத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் அதனடுவிலே ஒளியுள்ள ஒருரத்தினாசனம் விளங்கும்படியிட்டு அதன்மே

ஸ்ரீர்மலராகிய அம்முனிவரையினிதுடனிருக்கச்செய்துவினாவாக அன்பினோடு அருக்கிய முதலானவை கொடுத்தார்கள்.—(எ-று.) (௫)

மற்றதுபின்பின்னனெடுஞ்சடிலச்சென்னி... ... ... ...*
மன்னியமாதவரனையான்மருங்குவைகிப்... ... ... *
பற்றலர்தம்புரமெரியநகைத்தசெவ்வாய்ப்... ... ... ...*
பாலவிழித்தனிக்கடவுள்பாலனுை... ... ... ... *
செற்றநெடுங்கதிர்வேற்கைப்பெரியோன்காதை... ... ...*
சிறியோமிங்கறியவுரைசெய்வாயென்னக் ... ... *
கொற்றமுனியதுவினவிவிழிகள்வெள்ளங்... ... ... ...*
கொள்ளவவரோடின்னகூறலுற்றான் ... ... ... *

(இ-புரை.) அதன் பின்பு பின்னலாகிய நெடிய சடைமுடியையுடைய முனிவர்கள் சூதமுனிவர் அருகிலிருந்து தேவர்களுக்குப்பகைவராகிய அவுணர்களுடைய திரிபுரங்கள் தகனமாகும் படி நகைத்தருளிய செவ்வாயினையும் மன்மதனை யெரித்தருளிய நெற்றிக்கண்ணினையுமுடைய ஒப்பில்லாத பரமசிவன் புத்திரராகிய வீரமுள்ள நெடியஒளிபொருந்திய வேலாயுதமேந்திய திருக்கரமுடையசுப்பிரமண்ணிய சுவாமியின் சரித்திரத்தை அடியேங்கள் தெரிந்து கொள்ளும்படி அருளிச்செய்ய வேண்டுமென்றார்கள் - ஐம்புலன்களையும் வென்றுள்ள சூதமுனிவர் அவர்கள்சொன்ன வார்த்தையைக்கேட்டுக் கண்களிலானந்த வெள்ளம்பெருகும்படி சந்தோஷித்து அவர்களுடன் இந்தவார்த்தைசொல்லுகிறார்.

ஒன்னலார்சோரிகுடித்தொளிருஞ்செவ்வே... ... ... ...*
லொருவனதுபெருங்காதையுரைப்போர்கேட்போர்... *
முன்னெலாம்புரிந்தவினையனைத்துந்தீர்த்து ... ... ... *
முத்திதருமதுகேட்கமுயன்றீர்மன்றே ... ... ...*
பின்னலான்மறைந்தபிடர்முனிவீர்நீவீர்... ... ... ... *
பெருங்காதலொடுகேண்மின்பேசுகேனென்... ... *
பின்னலானவைநவைகளெவையும்போக்கு... ... ... ...*
மேதமில்சீர்ச்சூதமுனியியம்பலுற்றான்... ... ... *

(இ-புரை.)பகைவராகிய அவுணர்களுடலுதிரத்தைக் குடித்தொளிருகின்ற செவ்வேலையுடைய சுப்பிரமணியக்கடவுளது சரித்திரமானது சொல்லுகின்றவர்களும் கேட்பவர்களும் முன்செனனங்கள் தோறுஞ் செய்தபாவங்களை யெல்லாந்தீர்த்து மோக்ஷந்தரும் அத்தன்மையுள்ள சரித்திரத்தைக் கேட்கவேண்டுமென்கிற விருப்பங் கொண்டீர்கள் ஆதலால் சடையினால் மறைந்தபிடரியுள்ள முனிவர்களே நீங்களிகுந்தவிருப்பத்துடன் கேளுங்கள் சொல்லுகிறேனென்று முனிவர்களுக்கு

டிய காமவெகுளி மயக்க முதலிய குற்றங்களையும் அவைகளால்நேரிடுந் துன்பங்களையும் நீக்கிய பழுதுபடாத தவப்பெருமை தங்கியசூதமுனி வர் சொல்லுகின்றார்.—(எ-று.) (எ)

மூற்காலத்தரன்புகன்றமறைகளியாவு ... ... ... ... *
முதன்முடிவுதடுமாறமுனிவர்தேவர்... ... ... ... *
நற்காருந்தரையிருந்தமாக்களெல்லா ... ... ... ... *
நல்லறிவுநீங்கிமயனண்ணினரா ... ... ... ... *
யற்காளகண்டனையுமறந்துவீறும்... ... ... ... *
அறமாற்றிமறமாற்றவாற்றன்மாயோன் ... ... ... *
விற்காமர்நெடும்புருவவாணிகேள்வன். ... ... ... ... *
விண்ணவர்சூழ்தரக்கயிலைமேவினரால் ... ... ... *

(இ-பொ.) மூன்காலத்தில் பரமசிவன் மொழிந்த வேதங்கள் ஆதி யுமந்தமும் தடுமாறினதால் முனிவர்களுந் தேவருங் காலமழைபெய்யும் நல்லமேகங்களும் இவ்வுலகத்திருக்கும் மனிதர்களும் மற்றஎல்லாருப் ந ல்லறிவுநீங்கி மயக்கம் பொருந்தினவர்களாய்ப் பரமசிவனையு மறந்து மேன்மையுள்ள தருமஞ் செய்வதைவிட்டுப் பாவஞ்செய்தலைக்கண்ட ர க்ஷிக்குந் தொழில் வல்லவிஷ்ணுவும் வளைந்த வில்லொத்து நீண்ட அழகு ள்ள புருவத்தையுடைய சரஸ்வதி கணவனாகியபிரமனும் தேவர்களெல் லாருங் கூடிவாக் கயிலையிற் சேர்ந்தார்கள்—(எ-று) (அ)

விண்ணவர்கண்மகுடமுடிகடவுஞ்செந்தாள் ... ... ...*
விறனந்திதேவனொடுவிமலன்பாலியா ... ... ... *
நண்ணியதுபுகன்றருளவேண்டுமென்ன ... ... ...*
நம்பனெதிரடைந்திறைஞ்சிநவிற்றலோடுந் ... ... *
தண்ணருளெம்பெருமானிங்கவரைவல்லே ... ... ... ...*
தருதியெனமீண்டுநெடுஞ்சார்ங்கபாணிக்... ... ... *
கண்ணன்முதலினையவரைவிடுப்பநாதன் ... ... ... ...*
கழறொழுதுபணிந்தின்பங்கலந்துநின்றார் ... ... *

(இ-பொ.) இவ்வாறு சேர்ந்த பிர்ம்ம விஷ்ணுக்கள்தேவர்களுடன் நாங்கள் வந்திருப்பதைப்பரமசிவனிடத்திற்சென்று சொல்லியருளவே ண்டுமென்று தேவர்களுடையகிரீடமணிந்த சிரசுகள்வருடும்படியான செய்விய திருவடிகளையும் வெற்றியினையு முடைய நந்திதேவரிடத்திற் சொல்ல அவர்சுவாமியினெதிரிலடைந்து பணிந்து சொன்னவளவில்அ வர்களைவிரைவிலிங்கே அழைத்துக்கொண்டுவாவென் றுண்மையானஅ ருள்நிறைந்த எம்பெருமான் கட்டளையிடத் திரும்பிவந்து நெடியசார் ங்கமென்கிற வில்லேந்தியகையையுடைய விஷ்ணுமுதலியவர்களை விடு

ப்ப அவர்கள் சென்று இறைவனுடைய திருவடிகளை வணங்கியின்பம டைந்துநின்றார்கள்.—(எ-று.) (௯)

நின்றுபுகழ்மான்முதல்வானவரைநோக்கி... ... ... ... *
நிமலனுமசுரசுபுரிநெறிகளெல்லா ... ... ... ...*
நன்றுபெறநடந்தனவோவென்னமாயோ... ... ... ... *
னுதவுனதின்னருளினடந்தவிந்நா ... ... ... ...*
ளின்றுமெமக்களித்தருள்வதொன்றுண்டன்ன... ... ... *
தியம்புவனம்புவிமாந்தரொவருந்தென்றற் ... ... ...*
கன்றுலவுங்குளிர்சோலைக்கயிலைமேய ... ... ... ... *
கடவுளிணைமறந்துமறங்கருதினரால்... ... ... ...*

(இ-புரை.) தம்மெதிரில்நின்று புகழ்கின்ற விஷ்ணுமுதலானவர் களைப்பரமசிவன்பார்த்து உங்கள் அரசுசெய்யும் நெறிகளெலாம் நன் மைபெற நடக்கின்றதுகளோவென்று திருவாய்மலர்ந்தருள-விஷ்ணுவா னவர் எங்களையனேதேவரீர் கிருபையினாலே யிந்நாள்வரையிலும் நடந் தன- ஆகிலும் இப்போதும் அடியேங்களுக்குக் கிருபைசெய்தருளவே ண்டுவதொன்றிருக்கின்றது-அது என்னவெனில சொல்லுகிறன்பூலோ கத்திலிருக்குமனிதர்களெல்லாரும் இளந்தென்றலுலாவுங் குளிர்ந்தசோ லைசூழ்ந்த கயிலையில பொருந்திய கடவுளதேவரீரைமறந்துபாவத்தை யே சிந்தித்திருக்கிறார்கள்.—(எ-று ) (ய)

நற்போதமவர்படைத்துநினதுபாத ... ... ... ... *
நணுகும்வகையருள்சிறிதுநல்குவாயென் ... ... ...*
நற்போடுமொழிந்திடலுமொழியாச்சீர்த்தி ... ... ... *
யருளாளனொருகலையோடவனிமேலீ.... ... ... ...*
பொற்போடுவியாதனெனவுதித்துவேதப்... ... ... ... *
புகழ்க்கடலைநான்குவகைபுரிந்தியாருந் ... ... ...*
கற்போலுந்திரண்டபுயப்புயலேயின்பக்... ... ... ... *
கதியடையும்படிபுகறிகடிதின்மாதோ... ... ... ...*

(இ-புரை) அவர்கள் நல்லறிவைப்படைத்துத்தேவரீருடையதிரு வடிகளையடையும்படிசிறிதுகிருபை செய்தருளவேண்டுமென்று அன் புடன்விண்ணப்பஞ்செய்தவளவில்அழியாதசீருள்ள அருளாளனாகியபர மசிவன்மலைபோல்திரண்டபுயமுமேகநிறமுமுள்ளமாயவனே நீஒரு கலையுடன்உலகத்தினிடத்தில் அழகோடு அவதாரஞ் செய்துவியாதனெ ன்னும் பெயர்பெற்றுவேதமாகிய புகழுள்ளகடலை நான்காகவகுத்து எ ல்லாருமின்பக்கதியடையும்படிவிரைவிற்சொல்லக்கடவை.(எ-று.)

ஓங்குமறையுணர்ந்துமுளந்தேறாதாரு ... ... ... ... *
முணராருமையமகன்றுய்யுமாறு... ... ... ... ...*
பாங்குறமொழிபதிற்றிரட்டிப்புராணமுண்டு ... ... ...*
பண்டுநாநந்தியொடுபகர்ந்தாமன்னோன் ... ... ... *
ரங்குபுகழ்படைத்தசனற்குமாரனென்னுந்... ... ... ..*
தவமேவுமுனிக்கெனக்குச்சாற்றினுல் ... ... ... *
வாங்குதிரைக்கடலுடுத்தபுடவிமீது ... ... ... ...*
மற்றவன்பாற்கேட்டினிதுவாழ்தியென்றான் ... ... *

(இ-பொ.) ஓங்கியவேதமுணர்ந்தும்மனந்தெளியாதவர்களும்வே தமுணராத வர்களும் சந்தேகம் நீங்கியுய்யும்படி நன்மைபொருந்திய பதினெண்புராணமுண்டு அவைகளைமுன்னேநாம்நந்திக்குச்சொன்னோ ம் அந்தநந்திபுகழ் தாங்கியசனற்குமார னென்கிற தவமேவியமுனிவனு க்குச்சொல்லினான் - வளைந்த கடல்சூழ்ந்த பூமியினிடத்தில் அச்சனற்கு மாரனிடத்தில நீ கேட்டுக்கொண்டினிதாகவாழக் கடவையென்றருளிச் செய்தார்.—(எ-று.) (௰௨)

இப்பணியைப்பணியும்பணிசேர்சென்னி... ... ... ...*
யிறைபுளமுடம்மற்கொண்டிறைஞ்சியாங்கே.. ... *
கைப்பதுமங்குவித்துவிடைகொண்டுநீங்கிக் ... ... ...*
கடிதுதனதிடத்தடைந்துகடைந்தவேற்கட் ... ... *
டுப்பனையதுவரதரவாணிகொங்கைச் ... ... ... ... ...*
சுவடுபடும்புயனுநிசுரர்களியாரு ... ... ... .. *
மொப்பாறப்பதப்புகுதவிடுத்துவைகி... ... ... ...*
யொருகலைப்பாடுதித்திடவுந்துன்னினுல்... ... ... *

(இ-பொ.) இந்தக்கட்டளையைக் கங்கையும் பாம்புந்தரித்த திருமு டியையுடையகைலாயபதியானவர் அருளிச்செய்த வளவில் விஷ்ணு அ ந்தக்கட்டளையைச் சிரசாக வகித்துக்கொண்டுகைத்தாமரைமலர்களைக்கு வித்துத்தொழுது பணிந்துவிடைபெற்றுக்கொண்டு நீங்கிவிரைவில் த ம்மிடஞ்சேர்ந்து கடைச்சல்பிடித்த வேல்போன்றகண்களையும் பவளம் போன்ற செவ்விதழையுமுடைய சரஸ்வதியின் கொங்கைச் சுவடுபடும் புயமுள்ள பிரமன் முதலாகிய தேவர்கள் யாவரும் - ஒப்பில்லாததங்கள் பதியிற் சேரும்படி அனுப்பிவிட்டிருந்து பரமசிவன் கட்டளையிட்ட பிரகாரம் ஒருகலையுடன் உதிக்கநினைத்தார்.—(எ-று.) (௰௩)

புண்டரிகக்கடவுள்வழிப்பராசரப்பேர்ப்... ... ... ... *
புகழ்மேவுமுனிவனிமம்பொழியும்போது ... ... ...*

தண்டாரளந்திரையிறைக்குங்கங்கைதன்னிற் ... ... ... ...*
றன்னிகர்யோசனைகந்திதடந்தோடோய ... ... ... *
வெண்டரங்கப்புவிபோற்றவவர்பாற்றோன்றி ... ... ...*
வெதிரிகமாவனத்திருந்துவேதமியாவும் .. ... ... *
பண்டையுணர்வாலுணர்ந்தியாருமுய்யப் ... ... ... ...*
படிமிசைமாணாக்கராற்பரப்பினனால் ... ... ... *

(இ-புரை.) அவ்வாறுநினைத்தவிஷ்ணு பிரமதேவன் சந்ததியாகிய பராசரர் என்னும் பெயருள்ள புகழ்தங்கிய முனிவரானவர்பனிபெய்யுங் காலத்தில் குளிர்ச்சியுள்ளமுத்துகளை அலைகளால் வீசுகின்ற கங்காநதியில்தனக்குத்தானே யொப்பாகிய யோசனை கந்தியைச்சேர்ந்தார்அவ்வாறு சேர்ந்தபோது வெண்மை நிறமுள்ள அலைநீரையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகம் போற்றும்படி அவ்விருவரிடமாகத்தோன்றியிலந்தைவனத்திலிருந்து கொண்டு முன்னுணர்ச்சியினால் வேதங்களையோதாதுணர்ந்து- இவ்வுலகத்திலிருப்பவர்கள்யாரும் உய்யும்பொருட்டுத்தம்முடையசிஷ்யர்களால்அந்தவேதங்கள்பரவும்படிசெய்தார்.(எ-று.)(௰௪)

ஆங்கதுபின்சனற்குமரன்பாலீரோன்பா... ... ... ... *
னானபுராணங்களுணர்ந்தடியேற்கீந்து... ... ... ...*
தீங்ககலவனைவோர்க்குமுரைத்தியென்று ... ... ... ... *
செப்பினனன்னவற்றுட்டிங்கள்வேணிக் ... ... ...*
கோங்கலர்மென்முலைப்பாகத்திறைக்கீரைந்து... ... ... *
கொலைத்திகிரிப்படையோற்குநான்குகோலப் ... ...*
பூங்கமலத்தவிசிருந்தோற்கிரண்டுசெந்தீ... ... ... ... *
புகழ்த்தபனற்கோரொன்றாப்பொலிந்தவன்றே ... ...*

(இ-புரை.) அதன்பின்பு சனற்குமார முனிவரிடத்தில் பதினெண்புராணங்களையுமுணர்ந்து அடியேனுக்குபதேசித்துத் துன்பம் நீங்கும்படி எல்லாருக்கும்போதனைசெய்யக்கடவையென்றுசொன்னார் அந்தப்புராணங்கள்சந்திரனையணிந்தசடைமுடியினையுடைய பார்வதிபாகருக்குப்பத்தும்- கொலைத்தொழில்செய்யுஞ்சக்கிராயுதமேந்தியதிருமாலுக்குநான்கும்-அழகுள்ள பதுமாசனத்திலிருக்கும் பிரம்மதேவனுக்கிரண்டும்-அக்கினிதேவனுக்குஒன்றும்-சூரியனுக்கொன்றுமாகப்பொலிவுபெற்றன.—(எ-று.) கோங்கலர்மென்முலைபாகத்து- என்பதற்குக்- கோங்கின் அரும்பினை யொத்துவளருகின்ற திருத்தனபாரமுள்ளவராகிய பார்வதிதேவியாரையிடப்பாகத்தில்வைத்தருளியபரமசிவனுக்கு-என்பதம்பிரித்துக்கொள்க. (௰௫)

புரமூன்றுமெரிக்களித்தாற்போற்றுஞ்சைவம் ... ... ...*
பொருவில்சீர்ப்பவுடிகமேபொற்புமிக்க ... ... *
வரமாருமார்க்கண்டமிலிங்கங்காந்தம்... ... ... ... ...*
வராகமேவாமனமேமச்சங்கூர்மம் ... ... ... ... *
பிரமாண்டமிவைகள்சிவபுராணமாமேயான் ... ... ... ...*
பெருங்காதைகாருடநாரதமேவிண்டாங் ... ... *
கருண்மேவுபாகவதமாகுமென்ப ... ... ... ... ...*
வயன்காதைபதுமமேபிரமமாமால் ... ... ... *

(இ-புரா.) திரிபுரதகனஞ்செய்தபரமசிவனைப்போற்றிசெய்யும் சைவம்-ஒப்பில்லாத சீருள்ளபவுடிகம்-அழகுமிகுந்துமேன்மையுள்ள மார்க்கண்டேயம்-இலிங்கம்-காந்தம்-வராகம்-வாமனம்- மச்சியம்-கூர்மம்-பிர்ம்மாண்டமென்னும் இப்பத்தும்சைவபுராணங்களாம்- விஷ்ணுவின்பெரியசரித்திரமாகியபுராணங்கள் நான்காவன-காருடம்- நாரதீயம்-வைஷ்ணவம்-அருள்மேவுபாகவதமென்பவைகளாம்-பிரமபுராணம்-பதுமம்- பிரமமென்பவைகளாம்.—(எ-று.) (௰௬)

கூறுபிர்ம்மகைவர்த்தமிரவிகாதை ... ... ... ... ...*
கொடுந்தழலின்கதையாக்கினேயமாமென்... ... ... *
றூறில்பரன்கதைபத்திற்பத்தர்போற்று... ... ... ... *
மூயர்குமரன்கதைசுருக்கியுரைத்தானென்ப... ... ... *
மாறில்புகழ்வெதிரிகமாவனத்துவைகி ... ... ... ... *
வாதராயணனாகிமறைகளியாவும்... ... ... ... *
வீறுபெறநான்குநிலைபுரிந்தவாற்றால்... ... ... ... ... *
வியாதனெனும்பெயர்படைத்தோன்வியன்மாணக்கன்... *

(இ-புரா.) சொல்லுகின்ற பிர்ம்மகைவர்த்தமென்பது சூரியபுராணமாம்-ஆக்கினேயமென்பது அக்கினிபுராணமாமென்றுசொல்லிஅதற்குமெலுஞ்சொல்லுகிறார், பழுதில்லாதசிவபுராணம் பத்திலொன்றாகிஅடியார்களால்-துதிசெய்யப்படுகின்ற கந்தப்புராணத்தைச்சுருக்கிச்சொன்னதொன்றுமூன்னோர்கள் சொல்வார்கள் அவ்வாறுசொன்னவர்யாரெனில்மாறுபடாதவெதிரிகவனத்திலிருந்துவாதராயணனென்னும்பெயருள்ளவராய் வேதங்களெல்லாம் யாவருக்கும் விளங்கும்படி நான்குவகையாகச் செய்தமையால்வியாதனெனப்பெயர்பெற்ற முனிவருடையபெருமைபொருந்திய சீஷராகியசூதமுனிவர்.—(எ-று.) (௰௭)

வளங்குலவுமலயரயன்மகளாயம்மை ... ... ... ... *
வளர்ந்தசெயன்முதலாகமன்னுஞ்செவ்வேள்... ... *

# ஸ்கந்தப்புராணச்சுருக்கப்பொழிப்புரை

விளங்குசுரராசளித்தகொம்பினோடும் ... ... ... ... *
வேடர்குலக்கொடியோடும்வேழக்கூற்றின் ... ... *
களங்கமில்செக்கர்த்தவிசிலிருந்ததீறுக் ... ... ... ... *
கவின்முனிவன்றொகையாகக்கழறலோடு ... ... *
உளங்குளிர்ந்துமுனிவோர்கள்விரிவாலெங்கட் .. ... ... *
குரைத்தருளவேண்டுமெனவுரைக்கலுற்றான்.... ... *

(இ-புரை.) வளப்பமிகுந்த மலையரையன்புத்திரியாயுமையம்மைவளர்ந்தசரித்திரமுதலாக நித்தியராகியசுப்பிரமணியக்கடவுளான வர்விளங்குகின்றதேவேந்திரன்பெற்ற தெய்வயானையம்மையுடனும்வேடர்குலப்பெண்ணாகியவள்ளியம்மையுடனும்- யானைகளுக்குக்கூற்றுவன்போன்றசிங்கங்கள்தாங்கும் ஆசனத்தின்மேல்வீற்றிருந்தசரித்திரமிறுதியாகத் தவத்தினால் அழகுபெற்றசூதமுனிவர் தொகுப்பாகச்சொன்னவளவில்- நைமிசாரணிய முனிவர்கள்மனமகிழ்ந்து இந்தச்சரித்திரத்தையெங்களுக்குவிரிவாகச் சொல்லியருளவேண்டுமென்றுவினவ - அந்தச்சூதமுனிவர் சொல்லத்தொடங்கினார்.—(எ-று) (ஸஅ)



புராண வரலாறு.





உ

வேலுமயிலுந்துணை.

முதல்,

# உற்பத்திகாண்டம்.



திருமருவுகயிலைமிசைக்கனகமான ... ... ... ... ... *
சினகரஞ்சேர்மண்டபத்துச்சிறந்தசீயப் ... ... *
பொருவிலெழிலணைமீதுகணைமீனாட்டப் ... ... ... ... *
பூவையொடுபரமெரித்தோன்பொருந்தும்போதின் ... *
முருகுமலர்க்குழலுமையாளெழுந்துநாதன் ... ... ... *
முண்டகத்தாளிணைவணங்கிமுன்னாநின்று ... ... *
குருகுவளைக்தலநெருங்குகரங்கள்கூப்பிக். ... ... ... *
குமுதவாய்திறந்திணையகூறலுற்றாள் ... ... ... *

(இதன்-பொழிப்புரை.) செல்வம் நிறைந்தகயிலையங்கிரியில் சுவர்ணமயமான ஆலயத்தினிடத்தில் பொருந்தியமண்டபத்தில்சிறப்புடைய தாயொப்பில்லாத அழகுள்ளசிங்காசனத்தின்மேல் பாணத்தையும்சேல்மீனையுமொத்தநேத்திரங்களுள்ளபார்வதிதேவியாருடன்திரிபுராந்தகனாகியபரமசிவன் வீற்றிருக்கும்போது வாசனைதங்கியபூமாலையணிந்த அளகபாரமுள்ள அந்தப்பார்வதிதேவியாரெழுந்து பரமசிவனுடையதிருவடித்தாமரைகளைவணங்கியெதிரில்நின்று குருகென்றுமொருபெயர்பெற்றவளையணிந்த- திருக்கரங்களை அஞ்சலியாகக்குவித்துக்கொண்டு செவ்வல்லிமலர்போன்ற செவ்வாய்மலர்ந்து இந்தவார்த்தைசொல்லுகின்றார்.
—(எ-று.) சீயம் - சிங்கம். (க)

இற்றைவரைவளைத்தகரத்தோய்நின்னை ... ... ... *
யெண்ணாதக்கன்மகளென்றுநாமம்... ... ... ... *
பெற்றனன்மேலதுபரிப்பவெருவினேனைப் ... ... ... *
பெயரகலவருடியெனப்பேசலோடுந்... ... ... ... *
தற்றுபொழிலிமயநெடுஞ்சைலவேந்தன்... ... ... ... *
றன்மகளாயுனைப்பெறுவானறவஞ்செய்கின்றான்.... ... *
மற்றவன்பால்வளர்த்திடுதிவந்தியாம்பின்... ... ... ... *
மணத்துமெனவிடைகொடுமலையிற்சேர்ந்தாள்.. ... *

# உ ஸகந்தப்புராணச்சுருக்கப்பொழிப்புரை.

(இ-புரை.) மகமேருவைவில்லாகவளைத்த திருக்கரமுள்ள இறைவனே - நின்னையெண்ணுததக்கன்மகளென்னும்பெயர இதுவரையிலபெற்றனன் இனி அப்பெபர்தாங்க அச்சப்படுகின்றேன் ஆதலால்அப்பெயர்நீங் தம்படிகிருபை செய்யவேண்டுமென்று விண்ணப்பம் பண்ணிக கொண்டவளவிலநெருங்கியசோலைசூழ்ந்த இமயமலையரசனுனவன் உன்னைத்தனக் தப்புத்திரியாகப்பெறவேண்டுமெ ன்று தவஞ்செய்துகொண்டிருக்கின்ருன் ஆகலாலநீயவனிடத்தில்வளர்ந்துகொண்டிரு-பின்புநாம்வந்து விவாகஞ் செய்துகொள்ளுகிருேமென்றருள்செய்ய உமையவள்விடைபெற்றுக்கொண்டு இமயமலையிற்சேர்ந்தாள்.—(எ-று.) தக்கன்மகள்-தாக்ஷாயணி. (உ)

அங்கொருபூந்தடத்திளிடைக்கமலமீதி .. ... ... ... *
மலைநாயகி குழவியாகிமேவ ... ... .. .. ... *
மங்கைதனையாண்டுதவம்புரிந்துநின்ற .. ... ... ... *
மலையரையன்கண்டெடுத்துமகிழ்ந்துவான்ருேய்... ... *
துங்கமனைக்கொடுபோகிமேனையான ... ... ... ... *
துணைவிகரத்தளிப்பவவடொழுதுவாங்கிட்... ... ... *
பங்கமறவளர்த்தனளையாண்டுசெல்லப் ... ... ... ... *
பரனையுறவம்மைதவம்பண்ணவெண்ணி ... ... ... *

(இ-புரை.) அங்கேயொருதாமரைத்தடாகத்தில உமையம்மைசிறுகுழந்தையாயிருக்க அவ்விடத்தில தவஞ்செய்துகொண்டிருந்த மலையரையன்கண்டுமகிழ்ந்தெடுத்து ஆகாயத்தையளாவிய பரிசுத்தமானதன்அரண்மனைக்குக்கொண்டுபோய் மேனையென்னும்பெயருள்ள தன்மனைவிகையில்கொடுக்க அவள்தொழுதுவாங்கிக் கொண்டுபழகறவளர்த்தனள் அவ்வாறுவளர்க்க அஞ்சுவயதானவுடன்பார்வதிதேவியார் பரமசிவனைப்பழையபடிசேரவேண்டுமென்கிற ஞாபகத்திஞலதவஞ்செய்யஎண்ணி.—(எ-று.) (ங)

வென்றியுறுதந்தையொடுமிந்தவாறு ... ... ... ... *
விளம்புதலுமலையரையன்விளம்புவானீ ... ... ... *
யின்றுதவம்புரிந்திடவேபொருதுன்மேனி ... ... ... *
யிளம்பருவமிதுதவிர்தியென்னவன்னை ... ... ... *
மன்றலுறுகொன்றைமுடிப்பரமன்காப்பன்... ... ... *
மறுத்தறையேலெனவிசைந்துமாதரோடு... ... ... *
குன்றிலொருபாங்கர்தவச்சாலையூடு.. ... ... ... ... *
கோதிறவம்புரிந்திருப்பக்குயிற்றினனே ... ... ... *

(இ-புரை.) செயமிகுத்துள்ள தன்பிதாவுடனிந்த முறைமையைச் சொல்ல அம்மலையரையன் மொழிகின்றான்- தாயேயுனக்கிளம்பருவமாதலாலிப்போது தவஞ்செய்தால் உன்னுடையதிருமேனிதாளாது ஆதலாலிந்தஎண்ணத்தைவிட்டுவிடு என்றுசொல்ல- வாசனைதங்கியகொன்றைமாலையணிந்தபரமசிவங்காத்துரக்ஷிக்கும்ஆதலாலநீர்மறுத்துச்சொல்லவேண்டாவென்ன மலையரையன் சம்மதித்துத் தோழிகளுடன் தவஞ்செய்துகொண்டிருக்கும்படி அம்மலையினொருபுறத்திலொருதவச்சாலைசெய்வித்தான்—(எ-று.) (ச)

செல்லாரும்பொழிலிமயத்தானைச்சேரத் ... ... ... ... *
திருந்துதவம்புரிந்துமையாளிருந்தகாலை ... ... *
யெல்லாருந்தழனுதற்கட்பெருமான்விண்ணோ... ... ... *
ரொலலாரும்பரவவரமீந்தவாற்றால்... ... ... ... *
வில்லாருங்கனகநெடுமாடநீடு... ... ... ... ... ... *
வீதிமகேந்திரமூதூர்மீதுவெம்மை ... ... ... *
யல்லாருங்கடுவனையதருவர்சூழ... ... ... ... ... ... *
வரசுபுரிந்திருஞ்சூரனமர்ந்தானன்றே ... ... ... *

(இ-புரை.)பரமசிவனைச்சேரவேண்டுமென்றுமேகங்கள்சூழ்ந்த இமயவரையில் உமையம்மைநல்லதவஞ்செய்துகொண்டிருக்கும்போது- ஒளிமிகுந்ததழலாகிய நெற்றிக்கண்ணையுடையபரமசிவன்தேவர்களெல்லாரும்புகழும்படிவரமளித்தமையால் பிரகாசம்பொருந்திய பொன்வீடுகள் நிறைந்துள்ள வீதிகளையுடையமகேந்திரபட்டணத்தில்வெம்மையுடன்கருமைநிறம்பொருந்திய ஆலகாலவிஷம்போன்ற அவுணர்கள்சூழச்சூரபத்மன் அரசாட்சிசெய்துகொண்டிருக்கிறான்.—(எ-று.) (ரு)

சொற்றருமக்காலத்தின்ஞாலத்தின்பாற் ... ... ... ... *
றொல்லைமறைப்பொருளினைமுன்சோதிபாங்கர்ப் ... ... *
பெற்றசனகாதிமுதன்முனிவர்நால்வர் ... ... ... ... *
பெருந்தவங்கள்பலபுரிந்துபின்னுமுன்னும்... ... ... *
வெற்றிநெடுங்கயிலையெனுஞ்சைலமேவி ... ... ... *
வீறுமெழினந்திவிடவிடஞ்சேர்கண்டக்... ... ... *
கொற்றவன்றனடிவணங்கிமுடிமேற்செங்கைக்.. ... ... *
கோகனகங்குவித்திணையகூறலுற்றார்... ... ... ... *

(இ-புரை.) சொல்லுகின்றஅக்காலத்தில்பரமசிவனிடத்தில்பழமையாகியவேதப்பொருளைப்பூர்வம் உபதேசிக்கிரமமாகப் பெற்றுக்கொண்ட சனகாதிமுதலானநான்கு முனிவர்களும்பூலோகத்தினிடத்தில்பலவாறு

கப்பெரியதவங்கள் செய்துமறுபடியும் யாவரும்தியானிக்கும்படியாகி யமேன்மைதங்கிய கயிலாயகிரியிற்சென்றுமிகுந்தஅழகுள்ளநந்திதேவ ருள்ளேபோகும்படியுத்தரவுகொடுக்கப் பெற்றுக்கொண்டுசென்றுவி ஷந்தங்கியகண்டத்தை யுடையபரமசிவன் திருவடியைப்பணிந்துதங்க ள்முடியில்தாமரைமலரொத்துள்ளகைகளைக்கு வித்துவைத்து நமஸ்கரி த்து இத்தன்மையானவார்த்தைசொல்லுகின்றார்கள்.—(எ-று.) (சு)

அருமறையின்பலபொருடேர்ந்திந்நாள்காறு ... ... ... *
மடியமேம்புந்திவிரிந்தலைந்ததீண்டுப் ... ... ... *
பொருவிடையோயறிவடங்கியாங்களுய்யப் ... ... ... *
புரிந்தருளவேண்டுமெனப்புகறலோடுங் ... ... *
கருமறலியுரங்கிழித்தபதுமச்செந்தாட் ... ... ... ... *
கருணைநெடுங்கடலிருமின்காமர்நன்னூன் ... ... *
மருளறுநும்முணர்வொடுங்கவுரைப்பாமென்னா ... ... *
மன்னுமவன்றிருத்தாண்முன்னிருந்தார்மன்னோ ... *

(இ-புரை.) பொருதுகின்றவிரிஷபவாகனத்தையுடையகடவுளேஇந் நாள்வரையில்அருமையாகியபலவேதப்பொருள்களையாராய்ச்சிசெய்து அடியேங்கள்மனம்விரிவாயலைந்து கொண்டிருக்கின்றது ஆதலால்எங்க ள்மனமடங்கிநாங்கள்கடைத்தேறும்படிகிருபைசெய்தருள வேண்டுமெ ன்று விண்ணப்பஞ்செய்த வளவில்கருமைநிறமுள்ள யமனுடையமார் புகிழிய உதைத்தருளிய திருவடித்தாமரைகளையுடைய கிருபாசமுத்திர மாகியபரமசிவன் அம்முனிவர்களைநோக்கிநீங்க ளிங்கேயிருங்கள்மயங் குகின்றஉங்களறிவொடுங்கும்படி அழகுள்ளநல்லசாஸ்திரங்களைப்போ திக்கின்றோமென்றுகட்டளையிடநித்தியராகிய அந்தப்பரமசிவன்திருவடி க்கருகி லிருந்தார்கள்.—(எ-று.) (எ)

சங்கரன்முன்னவரிருப்பநந்திதன்னைத் ... ... ... ... *
தந்திதனையுரித்தகரத்தலைவனோக்கிப் ... ... ... *
புங்கவர்களெவர்வரினும்விடுவாயல்லை ... ... ... ... *
போர்மதவேள்வரில்விடுதிபோதியென்ன ... ... *
வங்கவனேகினன்முனிவர்மகிழ்ந்துகேட்ப ... ... ... ... *
வாகமத்தின்பொருண்மூன்றுமாதியோத ... ... ... *
விங்கெமதுபுந்திவிரிவொடுங்கஞான ... ... ... ... *
மிறைவபுகன்றருள்வாயென்றியம்பினரால் ... ... *

(இ-புரை.) பரமசிவனுக்குமுன் அவர்களிருக்கயானையையுரித்ததி ருக்கரமுள்ளஅவ்விறைவன்நந்திதேவரைப்பார்த்துத் தேவர்கள்யார்வந்

னாலும் உள்ளேவிடவேண்டுவதில்லை போர்செய்யுமன்மதன்வருவானாகி ல்-உள்ளே அனுப்பென்றுகட்டளையிட்டு நீபோவென்றருள-அந்தநந்தி தேவர்தாமிருக்குமிடத்திற்குப்போனார்பின்பு அம்முனிவர்மகிழ்ந்துகே ட்கும்படி ஆகமத்திற்கூறு முப்பொருளாகியபதி பசுபாசங்களைப்பர மசிவம் அருளிச்செய்ய அவர்கள் ஐயனேஎங்கள்மனம்விரிந்திருப்பதி னாலேயது ஒடுங்கும்படி இனிஞானோபதேசஞ் செய்யவேண்டுமென்று விண்ணப்பம்பண்ணினார்கள்.--(எ-று.) பதி-சிவம்-பசு-ஜீவன்-பாசம்-ஆ ணவமலம்-முனிவர்-நால்வராவார்-சனகர்-சனந்தனர்-சனாதனர்-சனற்கு மாரர். (அ)

என்றிடலு நகைத்தருளியா றுமாங்கே... ... ... ... ...*
யிசைத்திலனப்பொருளிருப்பதிவ்வாறென்று... ... *
துன்றுநெடுஞ்சடைமுனிவர்க்குணர்த்துமாற்றாற்.. ... ... *
றுலங்குமொருகரமுரத்திற்றோயச்சேர்த்தி ... ... *
மூன்றகுவர்புரமெரித்தபரமன்ஞான... ... ... ... ... *
முத்திரையாங்குறிகாட்டிமுனிவரோபோ... ... ... *
லொன்றொருநுண்கணப்பொழுதியோகமாகி ... ... ... *
யுறைந்தன்னங்கவரருள்பெற்றுய்யுமாறு. ... ... *

(இ-புரை.) முனிவர்களிவ்வாறுவிண்ணப்பம் பண்ணிக்கொண்டவ ளவில் ஆதியில்தானவர்களுடையபுரங்களையெரித்தபரமசிவன் நகைசெ ய்தருளியா தொருவார்த்தையுஞ்சொல்லாமல் அப்பொருளிவ்வண்ணமி ருப்பதென்று நெருங்கியசடைமுடியுள்ளமுனிவர்களுக்குஅறிவிக்குமு றையாகவிளங்குகின்ற ஒருதிருக்கரத்தைத் தமதுமார்பிற்சேர்த்துச்சின் முத்திரையாகியகுறியைக்காட்டி அவர்களுய்யும்படி முனிவர்கள்போல நுண்ணிதாகிய ஒருக்ஷணப்பொழுதுயோகத்திலிருந்தருளினார்.-(எ-று)

பிள்ளைச்சந்திரமவுலிச்சிறுமான்செங்கைப்... ... ... ...*
பெருமானிவ்வாறிருப்பப்பெருமைசான்ற ... ... *
வுள்ளத்தன்பினராநற்றவருந்தத்தமுணர்வொடுங்கி... ... ...*
ஞானமுணர்ந்துறும்பேரின்ப ... ... ... ... *
வெள்ளத்துட்படிந்துசெயலொன்றுமின்றி ... ... ...*
மேவினரோரிறைப்போதுவிமலற்காய ... ... ... *
தள்ளற்றெண்டிணையுடுத்தபுடவிமாக்கட்... ... ... ... *
கமரர்தமக்கெண்ணிலுகமாயிற்றம்மா... ... ... *

(இ-புரை.) இளந்திங்களணிந்தசடாமகுடமுஞ் சிறுமானேந்தியதி ருக்கரமுமுள்ளபெருமானிவ்வாறிருப்பத்தங்களுள்ளத்தி லன்புடையவ ர்களாகியதவப்பெருமைமிகுந்த அம்முனிவர்கள்நால்வருந்தங்கள் அறி

வொடுங்கி ஞானநிலைபுணர்ந்து நிலையாகிபேரின்பவெள்ளத்தில் அழுந்தித் தங்கள்செயலொன்றுமில்லாமலிருந்தார்கள் அப்போது பரமசிவத்துக்கு ஒருக்ஷணப்பொழுதாயிருந்தகாலம் குழைசேறுள்ளதாய்த்தெளிவுள்ள அலையையுடையகடல்சூழ்ந்த உலகத்திலிருக்குமனிதர்களுக்குந்தேவர்களுக்கும் அளவில்லாதயுகமாயது.(எ-று.) (௰)

விரிபதுமத்திருமருமப்பெருமானாதி... ... ... ... ...*
விண்ணவர்க்குமண்ணவர்க்கும்வேந்தனாகிப் ... ... *
பொருவிலவருயிர்க்குயிராயுணர்வுநல்கும் ... ... ... *
பொருவிடையோனுமையோடுபொருந்தலன்றி .. ... *
யருமுனிவர்பொருட்டாகயோகிபோல ... ... ... ... *
வமர்தலாலனைவோருமரிவைமார்தோண்... ... ... *
மருவிமுயங்குதலின்றியிருந்தார்கஞ்ச ... ... ... ... *
மலர்விதிக்கும்விதிக்குமுறைமாறிற்றன்றே. ... ... *

(இ-புரை) மலர்ந்ததாமரைப்பூவில் வீற்றிருக்குந்திருமகள்பொருந்தியமார்பினையுடையவிஷ்ணுமுதலான தேவர்களுக்கும்- மனிதர்களுக்கும் இறைவனாகி ஒப்பில்லாத அவர்களுயிர்க்குயிராயிருந்தறிவைக்கொடுத்தருளும்-போர்செய்யும்படியானரிஷபவாகனமுள்ளபரமசிவன் உமையம்மையுடன் கூடியிராமல்தனித்து அருமையானமுனிவர்கள் பொருட்டாகயோகிபோலிருப்பதினால் யாவருந்தங்களுக்குரியமாதர்கள் தோள்களைத்தழுவிச்சேராமலிருந்தார்கள் ஆதலால்தாமரைமலர்மேலிருக்கும் பிரமனுக்குச்சிருட்டிக்கு முறைமைமாறியது.(எ-று.) (௰௧)

இப்படியிப்படிவானத்திருந்துவாழு ... ... ... ...*
மெவ்வுயிருமுறுங்காலத்திருணஞ்சேய்க்குந் ... ... *
துப்பவுணர்பெருந்தகையாஞ்சூரன்செய்யுந் ... ... ...*
துயரினாலுயர்துறக்கந்துறந்துநீங்கிக் ... ... ... *
கைப்படுவெங்குலிசநெடும்படையான்முன்னங் ... ... ...*
கனவரைகளிறகறுத்தகடவுள்கோல... ... ... ... *
மைப்பொலியுநயனவயிராணியோடும் ... ... ... ... ...*
வானவரோடும்புவியின்மருவினால் ... ... ... *

(இ-புரை.) இவ்வாறாக இவ்வுலகத்திலுஞ் சுவர்க்கலோகத்திலும்வாழ்கின்ற உயிர்களெல்லாமிருக்கும்போது- கறுத்தவிஷம்போன்றவலிய அவுணர்களுக்கிறைவனாகிய சூரபன்மன்செய்யுந்துயரினால்முன்னந்தன் கையிலிருக்கும் வச்சிராயுதத்தைக்கொண்டுமலைகள் சிறகறுத்ததேவேந்திரனவன் உயர்வாகியசுவர்க்கத்தைவிட்டுநீங்கி அழகியமைவிளங்கும்

நேத்திரமுள்ள இந்திராணியுடனுந்தேவர்களோடும்பூலோகத்திற்சேர்ந் தான்.—(எ-று.) (௰௨)

வெள்ளிமலையடைந் தரனை வணங் கமாறு... ... ... ... *
வேளைபலாதிருந்திடலும் வேலைநஞ்சந் ... ... ...*
கொள்ளுமடன்மிடறுடையோன் றவிர்த்தசெம்பொற்.. ... *
கோதண்டவேதண்டங்கூடி யாங்கே ... ... ... ...*
கள்ளுறுதார்ச்சயந்தனொடுமடவோனைக்... ... ... ... *
காரவுணன் சிறைபுரிந்த கொடுஞ்சொற்கேட்டுத்... ... ...*
தள்ளுமதற்கரிய துயர்கொண்டு நாதன் ... ... ... ... *
றாட்கமலமலர்நினைந்து தவம்புரிந்தான்... ... ... *

(இ-புரை.) வெள்ளிமலையாகிய கயிலையங்கிரியிற்சேர்ந்து பரமசிவனைவணங்குதற்குச் சமயமல்லாமலிருந்ததினுற் கடலிலுண்டானவிஷத்தைக்கொண்டிருக்கும் படியானவல்லமையுள்ள கண்டத்தையுடையகாளகண்டமூர்த்தியானவர் முன்னொளிலவளைத்தவில்லாகிய பொன்மலையில் போயிருக்கும்போது தேனைமொழியும் பூமாலையணிந்தசயந்தனென்னுந்தன்புத்திரனையுந் தேவர்களையுங் கரியநிறமுள்ளசூரன் சிறையில்வைத்தகொடுஞ்சொல்லைக்கேட்டு நீக்குதற்கரிய துயரங் கொண்டுகயிலாசபதியினுடையதிருவடித்தாமரைகளைத் தியானித்துக்கொண்டுதவஞ் செய்தான்.-(எ-று.) (௰௩)

புரிந்திடலுமிறைகவளவிடைமேற்றோன்றிப் ... ... ... *
பொருவிறவத்திளைத்தனைநீபுரந்தரன்னில் ... ... ...*
விரும்பியதென்னெனவறியான்போன்றுரைப்ப ... ... ... *
வெஞ்சூர்க்காய்ந்தெமையாளவேண்டுமென்னத் ... ...*
திருந்தலனால்வருந்தலெல்லாந்தக்கன்வேள்வி ... ... ... *
சேர்ந்திருந்ததீமையெனச்செப்பிநந்த.. ... ... ...*
முரந்திகழுமகனொருவனுணர்ச்சாடி ... ... ... ... *
யுமைப்புரப்பானெனவருளாலுரைத்துப்போனான் ...*

(இ-புரை) தேவேந்திரனிவ்வாறுதவஞ்செய்துகொண்டிருக்கும்போது பரமசிவன்வெள்ளைவிடைமேல்வந்துகாட்சிகொடுத்து ஒப்பில்லாததவத்தினுல்நீயிளைத்தாய்உன்மனதில்விருப்பங்கொண்டுவேண்டுவதென்னவென்றுஒன்றும்அறியாதவர்போலக்கேட்க.(இந்திரனுனவன்பணிந்து ஆண்டவனே) கொடியசூரனைக்கொன்றுஎங்களை ஆட்கொள்ளவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்யுமளவில் பகைவனுகியசூரனுல் நீங்கள் வருந்துவதெல்லாம்தக்கன்யாகத்தில்போயிருந்தகுற்றத்தினுல் சம்பவித்ததென்று

சொல்லி(ஆகிலும் நீங்கள் துன்பமடையவேண்டுவதில்லை)பலம்பொருந் தியநம்முடையபுத்திரனொருவன் அந்தஅவுணர்களையெல்லாங்கொன்று உங்களைரக்ஷிப்பானென்றுகிருபையினாற் சொல்லியெழுந்தருளினார்.— (என்றவாறு.) (௰௪)

ஆங்கமலனீங்குதலுமமரர்கோமா ... ... ... ... ...*
னாகுலமுமின்பமுங்கொண்டனையவெற்பிற் ... ... *
றூங்குபுகழயிராணியென்னுநாமத் ... ... ... ... ...*
தன்மனைவிபொன்மனைவிதன்பால்வைத்துத் ... ... *
தேங்கமழுங்கமலநிதிப்பொகுட்டின்மன்னுஞ் ... .. ...*
சென்னிநான்குடையானைச்சேர்ந்துதாழ்ந்து ... ... *
தீங்குபெறுசூர்புரியுந்துயருநாதன்...... ... ... ... ...*
செப்பியதுமவனோடுசெப்பினானால்... ... ... ... *

(இ-புரை) பரமசிவம்இவ்வாறு அருள்புரிந்துஎழுந்தருளினபின்பு தேவேந்திரனானவன் துக்கமுஞ்சந்தோஷமுங்கொண்டு அந்தமகமேரு வில்கற்பினால்புகழ்பெற்ற அயிராணியென்னும் பெயருள்ளதன்மனைவி யைப்பிரகஸ்பதிபகவான் மனைவியினிடத்திலொப்பித்து வாசனைகமழ்கி ன்றதாமரைமலரின்பொகுட்டில்வீற்றிருக்கும்நான்குசிரமுள்ளபிரமனி டத்திற்போய்வணங்கிப் பாவங்களைத்தேடிக்கொள்ளுஞ் சூரன்செய்யுங் கொடுமையினையும்பரமசிவன்அருளிச்செய்ததையுஞ்சொன்னான்(எ-று.

போயமரர்க்கிறையுரைத்தவாறுதேர்ந்து... ... ... ... *
புகுந்தபடிமுகுந்தனுக்குப்புகலவெண்ணித்.. ... ...*
தூயகமலத்திருந்துதிருந்துவேதன்... ... ... ... ... *
சுரர்குழுவுமகவானுஞ்சூழவேகி... ... ... ... ...*
மாயனுடனரன்யோகத்திருந்தவாறும் ... ... ... ... *
வானவர்கடானவரால்வருந்துமாறு ... ... ... ...*
மேயபலவுங்கூறவரியுமோர்ந்து...... ... ... ... ... *
விதியதுமமுகநோக்கிவிளம்பலுற்றான் ... ... ...*

(இ-புரை) தேவேந்திரன்போய்ச்சொன்னதைப்பரிசுத்தமான தாம ரைமலரிலிருந்துதிருந்தியபிரமதேவன் அறிந்துதேவகூட்டமுந்தேவே ந்திரனுந்தன்னுடன் சூழ்ந்துவரச்சென்றுசதாசிவமூர்த்தியாகியபரமசி வன்யோகத்திலிருந்தமுறைமையுந்தேவர்கள்தானவர்களாகியசூரன்முத லானவர்களால்வருந்துமுறைமையும் மற்றும்பொருந்திய பலகாரியங்க ளையும்மாயவனுடன்சொல்லஅம்மாயவனாகியஅரியும் அதையறிந்துபிரம தேவனுடையதாமரை மலர்போன்ற முகத்தைப்பார்த்துச்சொல்லுகின் றார்—(எ-று.) (௰௫)

எம்பெருமான்முனிவோர்கட்காகயோக... ... ... ... *
மிருந்திடுதறவிர்ந்தருளியிமயவெற்பி... ... ... *
லம்பிகையைமணம்புரிந்தோர்சுதனைநல்க... ... ... ... *
வரன்பான்மாரனைவிடுகென்றறைதலோடு ... ... ...*
மும்பர்பெருந்தரு வோடிமையவரோடு... ... ... ... *
மொளிதருபாரதிகேள்வனுவந்துமீண்டு... .. ...*
செம்பதுமவகத்தினிதுற்றகத்துவேளைச் ... ... ... *
சிந்தனைசெய்திடவவனுஞ்சேர்ந்தானன்றே... ... ...*

(இ-புரை.) நம்பிறைவன்முனிவர்கள் பொருட்டாகயோகமிருக்குதல் நீங்கியிமயமலையில் வீற்றிருக்குஞ்சங்கரியைத் திருமணஞ்செய்து கொண்டுஒருபுத்திரனையருளிச்செய்வதற்காகஅந்தஅரனிடத்தில்மன்மதனைஅனுப்பென்றுதிருமால்சொல்லியவளவில்சரஸ்வதிகணவனாகியபிரமதேவன்சந்தோஷித்துத்தேவர்களுடனுந் தேவேந்திரனுடனுந்தன்னுலகில்வந்து பதுமாசனத்தினினிதாயிருந்துகொண்டு தன்சித்தத்திருக்குமன்மதனைச்சிந்தித்தவளவில்அம்மன்மதனும் வந்தான்.—(எ-று.) (மஎ)

வந்தமதன்றனைநோக்கியேகன்யோக ... ... ... ... ...*
மருவுதல்விட்டுமையவளைமருவுமாறுன் ... ... ... *
கந்தமலர்சிந்திவருவாயென்றோதக் ... ... ... ... ...*
கரங்கொடிருசெவிமூடியரன்பேரோதி... ... ... *
யந்தமிலாவையனைச்சென்றெய்யவஞ்சி... ... ... ... ...*
யனைகவிதம்மறுத்தறையவலரோன்சீறி ... ... ... *
யிந்தமொழிமறுத்திடிற்சூளறைவோமென்ன ... ... ...*
விசைந்தனனிவ்வாசகமங்கிசைக்கலுற்றான் ... ... *

(இ-புரை.)வந்தமன்மதனைப்பார்த்துச்சாம்பவமூர்த்தியானவர்யோகம்நீங்கிஉமையவளிடத்தில் சேருமாறுவாசனைதங்கியமலர்ப்பாணமேவிவருவாயென்றுசொல்லஅந்தவார்த்தையைக்கேட்டவுடன்மன்மதனானவன்கைகளா லிரண்டுகாதுகளையும்மூடிக்கொண்டுஅரகராவென்றுசிவநாமஞ்சொல்லிநித்தியராகியசிவபெருமானிடத்திற்சென்று பாணப்பிரயோகஞ்செய்யப்பயந்து அனேகம்விதத்தால்மறுத்துச்சொன்னான் அயனானவன்கோபித்து நாஞ்சொன்ன வார்த்தையைத்தடுத்தால் சாபமிடுவோமென்றுசொல்லஅதற்குமேல்சம்மதித்துஅப்போதொருவார்த்தைசொல்லுகிறான்.--(எ-று.)தகுதியில்லாதவார்த்தையைக்கேட்டால்வருந்தோஷநிவர்த்தியின்பொருட்டுச்சிவநாமங்கூறுவதுமுறைமை. (மஅ)

மண்டுபவக்கடற்படியநினதுடாங்கர்... ... ... ... ...*
வருஞ்சூளின்மாளுதலின்வாளுலாவுந் ... ... ... *
துண்டமதிச்சடைமீயான்பாற்கணைகடுவித்... ... ... ...*
துஞ்சினுநன்றுஞ்சுவருந்தொழிலுமுண்டா ... ... *
முண்டகவண்டவிசிருந்தமுனிவமெவன்பாற்... ... ... ...*
முனியலையாணிறைவனொடுமுராட்போராற்றத்... ... *
திண்டறிறலினேகுவனென்றியம்பவஞ்சேல் ... ... ...*
செல்கவெனத்தனதுலகஞ்சேர்ந்தான்மன்னே.... ... *

(இ-புரை.) மேலும்மேலும்வரும்படியானபிறவிக்கடலில்அழுந் தும்படி உன்னிடத்திலிருந்து வருகிறசாபத்தினலிறப்பத்தைப்பார்க்கி லும் ஒளிவிளங்கும்பிறைத்துண்ட மணிந்தசடா மகுடமூர்த்தியிடத்தி ல்பாணப்பிரயோகஞ்செய்துஇறந்தாலும் உத்தமம்மறுபடிபிழைத்து வருந்தன்மையுங்கிடைக்கும்ஆதலால்வளப்பம்பொருந்திய கமலாசனத் திலிருக்குங்கடவுளேயென்னிடத்தில் கோபம்வைக்காதே நானிறைவனு டன் வலியபோர்செய்ய மிகுந்தபலத்தினுடன் செல்லுகிறேனென்று சொல்ல-அவனைப்பார்த்துநீபயப்படாமற்போவென்று சொல்லிப்பிரம தேவன்தன்னுலகஞ்சேர்ந்தான்.—(எ-று.) (௰௧)

இருங்கிள்ளைப்பரித்தென்காலிரதமீதே ... ... ... ... *
யிரதியொடுபுகுந்துபடர்ந்திந்துவேணிக் ... ... ...*
கருங்கண்டன்கயிலைமலையண்மேலே. .. ... ... ... *
கரஞ்சிரமேற் கூப்புபுமீர்கடிதுநீங்கி ... ... ...*
மருங்குள்ளதனதுபரிசனங்களாங்கே ... ... ... ... *
வைகும்வகைநிறுவிநறுமலர்த்தருவன்சோலை ... ... ...*
நெருங்கந்தவரைமீதுமாதிரேறு ... ... ... ... ... *
நெடுஞ்சிலைமேவளைறியிதுநினைந்துசெய்வான் ... ... *

(இ-புரை.) பெருமைபொருந்தியகிளிப்பிள்ளையாகிய குதிரை கட்டிய தென்றற்காற்ருகிய இரதத்தின்மேல் இரதியுந் தானுமாக ஏறிக் கொண்டுசென்றுசந்திரனையணிந்தசடையினையுங்காளகண்டத்தினையுமு டையபரமசிவனதுகைலாசகிரியைக்கண்டுவிரைவாகத்தன் கைகளைச்சிர சின்மேல்வைத்துக்கொண்டு நமஸ்கரித்துத்தேரைவிட்டுநீங்கித்தன்பக்க த்திற்சூழ்ந்திருக்கும்பரிசனங்களவ்விடத்திலேதானேயிருக்கும்படிநிறுத் தி -வாசனைதங்கியமலர்களையுடையகுளிர்ச்சிபொருந்துஞ் சோலைநெரு ங்கியஅந்தக்கிரியின்மேல் நெடியகருப்புவில்லையுடைய மன்மதனவ ன்தன்மனைவியாகியஇரதியுங்கூடவரும்படியேறியிப்படியாக நினைந்து செய்கின்றான்.—(எ-று.) (௨௰)

விண்டுவருளைங்கணைவேளனையதான ... ... ... ... *
விலங்கலிடைவிலங்காப்புள்விலங்குமோகங் ... ... *
கொண்டிடவெஞ்சரந்தூண்டநந்திசீறக் ... ... ... *
கொடுவாளிநெடுவானிற்சூழநிற்பக் ... ... ... *
கண்டுமதனிறைஞ்சவரலெஃதொலென்று ... ... ... *
காரணங்கேட்டணிமேலைவாசறன்னு ... ... ... ... *
ளண்டர்பிரான்மொழிப்படிபோகென்னப்போந்தாங் ... ... *
கரனையெதிர்கண்டாங்கேயயர்ந்துவீழ்ந்தான் ... ... *

(இ-புரை.) விஷ்ணுவினால்பெறப்பட்டமன்மதன் அத்தன்மையுள்ளகயிலைமலையிடத்தைவிட்டுநீங்காதபக்ஷிகளும்மிருகங்களும்மோகங்கொள்ளும்படி வெவ்விய பாணங்களையேவினன் அதைக்கண்டநந்திதேவரானவர்கோபித்தவளவில்அந்தப்பாணங்களப்படியே அந்தரத்தில்கூட்டமாக நிற்கக்கண்டுமன்மதன்வணங்க நந்திதேவரவனைப்பார்த்துநீவந்தகாரியமென்னவென்று அவன்வந்தகாரணத்தைக்கேட்டுத்தேவர்பெருமான்கட்டளையின்படி அழகியமேற்குவாசலாற் போவெனச்சொல்லப்போய் அவ்விடத்தில்நிர்மலமூர்த்தியாகிய சிவபெருமானைக்கண்டுசோபித்துவிழுந்துவிட்டான்.—(எ-று.) (உக)

பின்னிரதிதேற்றவெரீஇப்பொருவானிற்பப் ... ... ... *
பிரமன்முதலோர்மதன்செய்பெற்றிகாண்பா ... ... *
னன்னகிரிக்கொருபுடைபோய்மருவினாவே ... ... ... *
ளைங்கணைவிட்டானவைசென்றரன்பான்மேவ ... ... *
வன்னிவிழிதிறப்பமதனிறப்பத்தேவி ... ... ... ... *
வருந்துமதுதெரிந்தமரர்வருந்திநாதன் ... ... ... *
பொன்னடிநின்றேத்துதலுமியோகநீங்கிப் ... ... ... *
புந்திதனினந்திதனைச்சிந்தைசெய்தான் ... ... ... *

(இ-புரை.) பின்பு இரதியானவள் சோபம்நீக்கஎழுந்துமறுபடியுத்தம்செய்யத்தொடங்குகின்றவளாயிருப்பப் பிர்மதேவன்முதலோர்கள் மன்மதன்செய்யும் முறைமையைக்காண அந்தமலைக்கு ஒருபுறமாகப் போயிருந்தார்கள் - அவன்பஞ்சபாணங்களைச் சுவாமியின் மேலேவினான்- அந்தக்கணைகள்போய்-யோகத்திலிருக்கும்பரமசிவனிடத்தில்பொருந்தினவளவில் சுவாமிநெற்றியிலிருக்கும்நெருப்புக்கண்ணைத்திறந்துபார்த்தார்பார்த்தவுடன் மன்மதனிறக்கவே அவன்மனைவிதுயரப்படுவதைப்பார்த்துத் தேவர்கள்வருந்தித்தங்கள்நாதனாகிய சாம்பவமூர்த்தியின்பொலிவுள்ள திருவடிகளைமனதில்தியானித்துத் துதிசெய்தார்கள் சுவாமியோகம்நீங்கித்தமது திருவுளத்தில் நந்திதேவரை நினைத்தருளினார்.—

அண்ணனினைந்திடவறிந்துநந்தியேகி ... ... ... ... *
யடிதொழுதுநின்றிடநீயல்ரோனுதி ... ... ... ...*
விண்ணவரைத்தருதியெனத்தருதலோடும்... ... ... ... *
வேண்டியதேதெனவுமையைவிமலநீவேட் ... ... *
டெண்ணில்புகழ்க்குமரனைத்தந்தருள்வாயென்ன ... ... *
விசைந்தவரைவிடுத்திரதிக்கிமயமாதை ... ... ...*
வணண்மணம்புரிந்துனதுகணவனுவி... ... ... ... *
வழங்குதுமேனவிமயவரையிற்சேர்ந்தாள் ... ...*

(இ-புரை) கயிலாசபதி நினைந்ததைநந்திதேவரறிந்து சென்று அவர் பாதங்களைத்தொழுதுநிற்க நீபிரமன்முதலாகிய தேவர்களை யிங்கே அழைத்துக்கொண்டுவாவென்று கட்டளையிட்டவளவில் நந்திதேவர் அழைத்துக்கொண்டுபோனபோது அவர்களைநோக்கிநீங்கள்விரும்பியதென்னவென்று சுவாமிகேட்க எங்களையனேதேவரீர் உமையம்மையைத்திருமணஞ்செய்துகொண்டு அளவில்லாதபுகழுள்ளபுத்திரனையருளிச்செய்யவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்ய அப்படியே செய்கிறோமென்று அவர்களையனுப்பிவிட்டு-அழகுள்ளரதியைப்பார்த்துப் பார்வதியைத்திருமணஞ்செய்துகொண்டு உன்கணவனுவியைத் தருகிறோம் நீபோவென்றுதிருவாய்மலர்ந்தருள அவளிமயமலையிற்போய்ச்சேர்ந்தாள்.—என்றவாறு. (உ௬)

இன்னமொழிமொழிந்தருளிப்பின்னரீச ... ... ... *
ணிட்டமுடனிடையனுட்டித்துவாழு ... ... ...*
மென்னவுரைத்தருண்மேவுஞ்சனகனுதி... ... ... ... *
யிருந்தவராயிருந்தவர்களேகம்வாதிக்... ... ... ...*
கன்னிதவங்காணமுதுமறையோன்போலக்... ... ... ...*
கௌரிபாலுறவெழுந்துகரங்கள்கூப்பி... ... ... *
யன்னவணின்றிடுதலுமோர்தவிசின்மேவி... ... ... ...*
யருந்தவநீபுரிந்திடலேதறைதியென்றான் ... ... *

(இ - புரை.) பரமசிவனித்தன்லடையுள்ளவார்த்தையுரைத்தருளிய பின்பு உங்களிஷ்டப்படி நிஷ்டையனுஷ்டித்துவாழுங்களென்னச்சொல்லித் திருவருள்பெற்றுக்கொண்ட பெருமைபொருந்திய சனகன்முதலாகிய முனிவர்களைப் போம்படி உத்தரவுகொடுத்துப் பார்வதிசெய்யுந்தவத்தைக்காண ஒருகிழப்பிராமணன்போல்திருவுருவங்கொண்டுபார்வதிதேவியாரிடத்துக்குச்செல்ல அவர்கைகூப்பித்தொழுது நின்றவளவில் பரமசிவம்அங்கொருஆசனத்திலிருந்து நீயாதுகாரணம்பற்றி அருமையானதவஞ் செய்கின்றாய் சொல்லென்றார்.(எ-று.) (உ௭)

என்றிடலும்விசையையுமைபரனைச்சேர்தற் ... ... ... *
கிச்சித்தாளெனப்பரனையிகழ்ந்துகூற ... ... ...*
நின்றவுமைசினம்புரிந்துபோதிபோதி ... ... ... ... *
நீதியிலாவேதியநீயெனனவுன்னை ... ... ... ...*
யின்றுமணந்திடவந்தனென்றுகூற ... ... ... ... *
விடர்மூழ்கியிணையறுதாளிணைகளுவக் ... .. ...*
குன்றிலொருபுடைபோகவிடையின்மீது ... ... ... *
குழகனுயெதிர்காட்சிகொடுத்தானன்றே ... ... ...*

(இ-பொ.) பிராமணன்போலவந்தவரிவ்வாறு கேட்கவும்விசையை யேன்னும்பாங்கி யெங்களுமையவள் கயிலாயமூர்த்தியைத்திருமணஞ் செய்துகொள்ளவிருப்பங்கொண்டாளென்றுசொல்ல-வந்தவர்பரமசிவ னையிகழ்ந்துசொன்னார் அந்தவார்த்தையைக்கேட்டவளவிலங்கிருந்த உ மையவள்கோபங்கொண்டு நீபோபோநீதியில்லாதபிராமணனே யென் றுசொல்ல நான்போவதேது உன்னைவிவாகஞ்செய்துகொள்ள இப்போ துவந்தேனே யென்றுசுவாமிசொன்னார்-அந்தவார்த்தையைக்கேட்டவள வில்- உமையம்மைதுன்பத்திலாழ்ந்துஒப்பில்லாத இரண்டுதிருவடிகளு ம்நோகும்படி அம்மலையிலொருபுறத்திற்சென்றார் சுவாமிகிழப்பிராம வடிவம்நீங்கிச்சடைமுடிமான்மழுகாளகண்டந்திரிநேத்திரமுதலியவை யுள்ளதம்முடைய உண்மைச்சொரூபத்துடன் ரிஷபவாகனத்தின்மேல் தோன்றியெதிர்காட்சிகொடுத்தருளினார்.—(எ-று) (உரு)

நாயகனும்பரம்பரனையெதிர்கண்டம்மை .... ... ... ...*
நாணமொடுபணிந்துகரநளினங்கூப்பிப் ... ... ... *
பேயனையேனுனையறியாதுரைத்தவெஞ்சொற் ... ... ...*
பிழைபொறுக்கவேண்டுமெனப்பேசலோடுந் ... ... *
தூயநதிச்சடைக்கடவுளவைகளெம்மைத் ... ... ... ...*
துதித்தனவாக்கொண்டோநீசோரோ லுன்னை ... ... *
நேயமொடுநாளைமணம்புரியச்சேர்து ... ... ... ... ...*
நீயரியதவம்புரிதனீங்குகென்றான் ... ... ... ... *

(இ-பொ.) தன்னுயகனுகியபரமசிவனை உமையமையெதிர்க்கண்டு நாணமுடன் பணிந்துகைத்தாமரைமலர்களைக்குவித்துத்தொழுதுபே யையொத்தநான் தேவரீரையறியாமற்சொல்லிய கொடியசொற்குற்றத் தைப்பொறுத்தருளவேண்டுமென்று சொன்னவளவில்பரிசுத்தமானகங் காநதியையணிந்தசடாமகுடமுள்ள சுவாமியானவர்பார்வதிதேவியாரை நோக்கிநீசொன்ன அவ்வார்த்தைகளையெல்லாம்நம்மைத்துதிசெய்ததோ

த்திரமாகக்கொண்டோம்நீசோர்தலடையவேண்டுவதில்லை நாளையதினம் நேயத்துடன் உன்னைவிவாகஞ்செய்துகொள்ள வருகிறோம்ஆகையாலி நீதமட்டில்நீயருமையானதவஞ்செய்தலை நீங்கென்றருளினார்.—(எ-று.)

பொன்றாங்குகனகவரைகுனித்தோனின்ன ... ... ... ...*
புகன்றகலச்சிலவரிதுபொருப்பன்முன்போய்.... ... *
நின்றாங்குமொழிந்திடலுமுவகையென்னு... ... ... ...*
நெடுங்கடலினிடைப்படிந்துநிமலைபால்வந் ... ... *
தென்றாயவருகவெனமனையிற்சேர்த்தா... ... ... ...*
னிறைவனுயர்கயிலையடைந்திலங்குமோரேழ். ... ... *
பின்றாழ்செஞ்சடைமுனிவர்தம்மையுன்னப்... ... ... ...*
பின்னுகன்முன்னடைந்திறைஞ்சல்பெற்றுநின்றார் ... *

(இ-புரை.) பொலிவுபொருந்திய பொன்மலையாகிய மகமேருவை வில்லாகவளைத்த சுவாமியானவர் இந்தவார்த்தைசொல்லியெழுந்தருளி னவுடன்இதைக்கண்டசிலதோழிமார்கள் மலையரையன்முன் சென்றுநின்று சொன்னார்கள் அம்மலையரையன் சந்தோஷமென்கிறபெருங்கடலில் மூழ்கிப் பார்வதியாரிடத்தில்வந்து என்தாயே நம்முடையமாளிகைக்கு வாவென்றுஅழைத்துக்கொண்டுபோய்ச்சேர்த்தான் பரமசிவன்கைலாய மலையிற் சேர்ந்துபிரகாசிக்கின்றதாகப் பின்புறத்தில் தாழ்ந்திருக்கும் சடையையுடைய சப்தமுனிவர்களைத்தமது திருவுளத்தில் நினைத்தருளி னார்அதையறிந்துஅவர்கள்வந்து சுவாமிசந்நிதானத்தில்வணங்கி நின்றார்கள்.—(எ-று.) (உஎ)

[வேறு.]

அன்னமாதவரையாதிதெரிந்தே... ... ... ... ... ...*
மன்னுகின்றவிமவான்மகளாகு ... ... ... ... ... *
மின்னினைத்தரவிருவதிரென்னப் ... ... ... ... ... *
பொன்னுலாவுமிமயக்கிரிபுக்கார் ... ... ... ... ...*

(இ-புரை.)அந்தமுனிவர்களை ஆதியாகியசுவாமிநோக்கி நீங்கள் போய் நிலைபெற்ற இமவான்புத்திரியாகியகன்னிகையைநமக்குவிவாகஞ்செய்துகொடுக்கும்படிகேளுங்களென்றருள்செய்தவளவில் அவர்கள்பொன்னிறமுள்ளஇமயவரையிற் சேர்ந்தார்கள்—(எ-று.) (உஅ)

மாதவங்கொளிமவானெதிர்கொண்டே ... ... ... ... *
யாதனங்கண்மிசையன்பொடிருத்தி ... ... ... ...*
யேதுவெஃகியிவணெய்தியதென்ன ... ... ... ...*
வாதியோதியதுரைத்தனரன்றே... ... ... ... ...*

(இ-புரை.) பெருமைபொருந்தியதவப்பயன்கொண்டபர்வதராசன்எதிர்கொண்டுவந்து அம்முனிவர்களை அழைத்துக்கொண்டுபோய்ப்பண்புடன்தனித்தனியாசனங்கொடுத்திருக்கச்செய்து முனிவர்களே நீங்கள் என்னகாரியம்பற்றிப்பிங்குவந்தீர்களென்ன அவர்கள்சுவாமிகட்டளையிட்டவார்த்தையைச் சொன்னார்கள்.—(எ-று.) (௨௧)

கூறுதற்கிசைவுகொண்டதூகண்டே... ... ... ... ... ... *
யாறுலாவுச்சடையண்ணலைநண்ணி... ... ... ... ... ...*
மாறிலாதவிமவானியைவோதி... ... ... ... ... ... ... *
வீறுத்தத்பிடைமேவினரன்றே... ... ... ... ... ...*

(இ-புரை.)தாங்கள் சொன்னதற்குமலையரையன் சம்மதித்ததையறிந்துகங்கையுலாவுஞ் சடைமுடியுள்ள கடவுளிடஞ்சேர்ந்து மாறுபாடில்லாதமலையரையன் சம்மதியைச்சொல்லி அந்த எழுமுனிவர்களும்மேன்மைபொருந்தியதங்கள்தங்களாச்சிரமத்திற்சேர்ந்தார்கள். (எ-று.)(௩௰)

ஏறுநின்றிடவிமக்கிரிமன்னன்... ... ... ... ... ... *
காதலோடமரர்கம்மியனைக்கொண் ... ... ... ... ...*
டோதிமக்கிரியிலூர்புனைவித்தே ... ... ... ... ... *
யாதிமுன்புறவணைந்துபணிந்து... ... ... ... ... ... *

(இ-புரை.)இதுநிற்க-மலையரையன்யாவரும்புகழ்ந்துசொல்லும்படியானஇமயமலையில்அன்புடன்தேவதச்சனைவிட்டணத்தைஅலங்காரஞ்செய்வித்துப்பரமசிவன்சந்நிதானத்தில் சேர்ந்துதொழுது.(எ-று.)(௩௧)

ஒன்றுபங்குனியிலுத்திரமாகு... ... ... ... ... ... *
மின்றுநன்றுபொழுதென்றிருமாதை... ... ... ... ...*
மன்றல்செய்யவருவாயெனமுன்போ ... ... ... ... *
வென்றிதன்கொடுபின்மேவுதுமென்றான் ... ... ... ...*

(இ-புரை.) கர்த்தனேபங்குனியுத்திரநக்ஷத்திரம்பொருந்தியஇத்தினந் சுதினமாயிருப்பதினால் என் அழகுள்ள புத்திரியைத்திருமணஞ்செய்துகொள்ள எழுந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய- நீமுன்போ- பின்புநாம் வெற்றியுள்ளசிவகணங்களுடன்வருகிறோமென்றருளிச்செய்தார்.—(எ-று) (௩௨)

நாரவேணியரனந்தியைநோக்கிச் ... ... ... ... ... *
சீருலாவியசிறப்புடைமன்றற் ... ... ... ... ... ...*
கியாரையுந்தருதியென்றனனியாருஞ் ... ... ... ... *
சேரநந்தியிறைசிந்தனைசெய்தான்... ... ... ... ......*

(இ-புரை.) நீருருவமானகங்கையைத்தரித்தசடைமகுடமுள்ளபரம வசின்நந்திதேவரைப்பார்த்துச்சீர்பொருந்தியசிறப்புடையநமது திருமணத்துக்குளெல்லாரையும்வரவழையென்ன அவ்வாறேயாவரும் வரும்படி நந்திதேவர்சிந்தித்தார்.—(எ-று.) (௩௩)

உன்னவக்கினியுருத்திரராதி... ... ... ... ... ... *
மன்னுருத்திரர்கண்மான்முதல்விண்ணோர் ... ... ... ...*
துன்னுமாமுனிவர் துன்றுகணங்கள் ... ... ... ... *
மின்னுறுங்கயிலைவெற்பிடைவந்தார் ... ... ... ... *

(இ-புரை.) நந்திதேவர் நினைத்தவளவில் காலாக்கினிருத்திரர்கள்முதலாக நிலைபெற்ற ருத்திரர்களும் - விஷ்ணுமுதலாகியதேவர்களும் நிலைபெற்ற மகத்துவமுள்ள முனிவர்களும் நிறைந்துள்ளகணங்களும் ஒளிபொருந்திய கயிலைமலையினிடத்துக்குவந்தார்கள்.—(எ-று) (௩௪)

வந்துநந்தியுறுவாயிலினண்ண... ... ... ... ... ...*
முந்துநந்தியரன்முன்புவிடுப்ப ... ... ... ... ... *
வெந்தைதாளிணையிறைஞ்சினர்சூழ்ந்தா ... ... ... ...*
ரந்தவேலையலரோனிதுசெய்வான் ... ... ... ... ... *

(இ-புரை.) எல்லாரும்வந்துநந்திதேவரிருக்கு முதற்கோபுரவாயிலிற்சேர முதன்மையாகியஅந்தநந்திதேவர் வந்தவர்களைச்சுவாமிசன்னிதியிற் போம்படிஅனுப்பினர் அவர்கள்நம்அத்தனுடையஇரண்டுதிருவடித்தாமரைகளையும்வணங்கிச் சூழ்ந்திருந்தார்கள்அப்போது பிரமதேவன் இதுசெய்கின்றான்.—(எ-று) (௩௫)

ஆசிலாமகுடமாதிகலன்க... ... ... ... ... ... ...*
ளீசனங்கணியவின்பொடுநல்க ... ... ... ... ... *
மாசிலாமுதல்வன்மற்றிதுகொண்டா... ... ... ... ...*
நேசமோடெனநெடுங்கரம்வைத்தான் ... ... ... ... *

(இ-புரை) குற்றமில்லாத கிரீடமுதலானஆபரணங்கள் பரமசிவனப்போது தரித்துக்கொள்ளும்படி யின்புடன் எதிரில்வைக்க நிர்மலராகிய ஆதிமூர்த்தியானவர்இவ்வணிகளையெல்லாம் விருப்புடனணிந்துகொண்டோமென்று தம்முடைய திருக்கரங்களாற் பரிசித்தருளினர். (எ-று)

வைத்துமெய்ப்பணிகள்வண்பணியாக... ... ... ... *
நித்தனன்பொடுநினைந்துதரித்தே... ... ... ... ...*
மொய்த்தியாவருமுரண்கொடுசூழ ... ... ... ... *
வித்தகன்திருவிடைப்புறமுற்றான்... ... ... ... ...*

(இ-புரை) இவ்வாறுபரிசித்துத்தம்முடையதிருமேனியிலணிந்திருக்குஞ்சர்ப்பாபரணங்களையாவர்பார்வைக்கும் ரத்திநாபரணங்களாகும்படி கிருபையுடன் திருவுள்ளங் கொண்டுதரித்தருளி முன்வந்தருத்திரர்முதலாகிய எல்லாரும் உச்சாகத்தினால் மிகுந்தபலங்கொண்டு நெருங்கிச்சூழ்ந்துவர நித்தியனும் ஞானசொரூபனுமாகிய பரமசிவன் சிறந்தானரிஷபவாகனத்தின்மேல்ஆரோகணித்துக்கொண்டார்.—எ-று.(௩௭)

ஏறம்தநினனெழிற்கயிலாய... ... ... ... ... ... *
வீறுகின்றதிருவெற்டையகன்றே... ... ... ... ... ...*
யூறிலும்பரொடுருத்திரர்சூழ... ... ... ... ... ... *
மாறிலாவிமவரைப்புடையுற்றான்... ... ... ... ... ...*

(இ-புரை.) இவ்வாறு ரிஷபவாகனத்தின்மேலாரோகணித்துக் கொண்டு அழகுடன் அழிவில்லாததாய்விளங்கிக்கொண்டிருக்கும் திருக்கயிலையங்கிரியைநீங்கித்துன்பமில்லாத தேவர்களும்ருத்திரர்களுஞ்சூழ்ந்துவரச்சென்றுமாறுதலில்லாத இமயமலையிற்சேர்ந்தருளினர். —(எ-று.)

வேதமேவுதிருவீதியினண்ணிக்... ... ... ... ...*
காதன்மாதர்ந்னிகண்டுமயங்கக் ... ... ... ... ... *
கோதிலாதவிமவானுறுகோயின்... ... ... ... ... ...*
மாதவங்கொடலைவாயிலில்வந்தான்... ... ... ... ... *

(இ-புரை.) ஆசைகொள்ளுமாதர்கள்கண்டுமிகவுமயங்கும்படிவேதவோசைநிறைந்த திருவீதியிலெழுந்தருளிக் குற்றமில்லாத இமவானுடையதாய்ப்பொருந்திய அரண்மனையில்பரமசிவன் தன்னிடத்தில்வரத்தக்கமேன்மைபொருந்தியதவஞ்செய்துள்ளமுதற்கோபுரவாயிலிற்சேர்ந்தருளினர்.—(எ-று) (௩௯)

எங்குறுவிடையியிழிந்தவணிற்பப்... ... ... ... ... ...*
பாங்குமேனையெதிர்பால்கொடுவந்தே ... ... ... ... *
யோங்குதாளிணையுவந்துவிளக்கித்... ... ... ... ... *
தீங்கிலணமொடுசென்றனளன்றே ... ... ... ... ...*

(இ-புரை.) இளையாதரிஷபவாகனத்தைவிட்டிழிந்து அவ்விடத்துநிற்க- இமவான் மனைவியாகிய கற்புள்ளமேனையம்மை - சுவாமிக்கெதிரில்பால்கொண்டுவந்துசந்தோஷித்துடன்அவருடையமேன்மைதங்கியஇரண்டுதிருவடிகளையும் பழுதில்லாதநாணத்துடனின்றுவிளக்கஞ்செய்துசென்றாள்.—(எ-று,) (௪௰)

ஆறுலாவுசடையண்ணலதற்பி ... ... ... ... ... ... *
ளூறில்யாவருமுவந்தயல்சூழ ... ... ... ... ... ...*
மாறிலாதவதுவைக்களனண்ணி... ... ... ... ... ...*
வீறுசிங்கவணைமீதுறுபோது... ... ... ... ... ... *

(இ-புரை.) கங்கைநதியுலாவுகின்ற சடையுடையபரமசிவன் அதன் பின்பு- யாதொருதுன்பமுமில்லாதருத்திரர்கள்முதலாகிய எல்லாரும்சந்தோஷித்துத்தம்மருகில் சூழ்ந்துவரமாறுபடாத அலங்கார முள்ளதிருக்கல்யாண மண்டபத்திற்சேர்ந்துவீறுகின்ற சிங்காசனத்திருக்கும்போது.—(எ-று.) (௪௧)

[வேறு.]

தென்பால்வடபாலுயர்ந்திழியத்தேர்ந்துதேவர்வருந்துதலாற்..*
றுன்பாசகன்றகுறுமுனியைத்தொலையாமலயந்தனில்மேவ... ...*
முன்பானதுபோற்படியிருப்பமுனிவரமரர்முகமலர்ந்தா... *
ரன்பாலரம்பையர்கள்சூழவரன்பால்வந்தாளம்பிகையே... ...*

(இ-புரை.) அண்டங்களிலிருப்பவர்களும்மற்றவுலகங்களிலிருப்பவர்களும் ஓரேயிடத்திற்சேர்ந்தமையால்பூமி தென்புறமுயர்ந்துவடபுறந்தாழ அதையறிந்ததேவர்வருந்துதலால் துன்பந்தருவதாகியமுக்குற்றங்கள்நீங்கியஅகஸ்தியமுனிவரைத்தொலைவுபடாத பொதிகைமலையினிடத்திலிருக்கும்படிசுவாமியனுப்பினதால பூமியானதுமுன்பிருந்தது போற்சமனாயிருக்கக்கண்டுமுனிவர்களும்அமரர்களுமுகமலர்ச்சியடைந்தார்கள்அதன்பின்பு அன்புடன்ரம்பாஸ்திரிகள்சூழ்ந்துவரப்பார்வதிதேவியார்பரமசிவனிடத்தில்வந்தார்.—(எ-று.) (௪௨)

வந்துபரனைப்பணிந்திடலும்வள்ளறவிசினிருந்திடென ... *
வெந்தையோடுமுமையிருப்பவிமவானடைந்தங்கெழின்மனைவி
யுந்துகரகநீர்வார்ப்பவுயர்மாற்கரியவொளிப்பதந்தனைப்.. ...*
பந்தவினைகளறவிளக்கிப்பரிந்துபூசைபுரிந்தனனே .. ... *

(இ-புரை.) வந்துசுவாமியைவணங்கலும்அவர்சிங்காசனத்திலிருவென்றுத்தாரஞ்செய்யநம்மையனாகியபரமசிவனுடன் உமையம்மையிருந்தார் அவ்வாறிருக்கமலையரையன் அங்குவந்துதன்மனைவிகரகத்துச்சலம்விடுப்பப்பெருமையுள்ளமாயவனுக்கும்அருமையானபரமசிவத்தின்திருவடிகளைப்பந்தவினைகள்நீங்கும்படிவிளக்கிப்பரிவுடன்பூசைசெய்தனன்.—எ-று (௪௩)

பூசைபுரிந்துநாரிகரம்புனிதன்கரத்திற்கொடுத்தானுக்... ...*
காசைபொருந்துமம்பிகையையளித்தேனென்னவறைந்திடலும்.*

மேசிலிமையோர்புகழ்ந்தார்களிருவர்கீதமிசைத்தார்கண். ...*
மாசில்கணங்கண்முழுவலறைந்தார்மடவார்பல்லோர்வாழ்த்தெடுத்தார்-

(இ-புரை.) இவ்வாறுபூசைசெய்து பார்வதிதேவியாருடையதிருக்கரத்தைப்பரமசிவனுடையதிருக்கரத்திற்கொடுத்து ஆசைபொருந்தியஅம்பிகையாகிய என்புத்திரியைப் பரமசிவனுக்குக் கொடுத்தேனென்று சொன்னபோது ஏசப்படுந்தன்மையில்லாததேவர்கள்புகழ்ந்தார்கள் தும்புருநாரதர்கள்கீதம்பாடினார்கள்-குற்றமில்லாதகணங்கள்முழவமுதலாகியவாத்தியம்அறைந்தார்கள்-தேவமாதர்கள்முதலானமாதர்கள்வாழ்த்துக்கூறினார்கள்.—எ-று (சச)

அங்கணினையநிகழ்ந்ததற்பினசலவேந்தனசலமலைத்... ... *
திங்கண்முகத்தம்பிகைமேயவள்வன்றிருமுன்கனியாலகொடுவந்தே *
யிங்கிதயிலவேண்டுமெனவிவைகொண்டாமென்றவைநம்பின். *
மங்குன்மிடற்றோன்கரந்தொடலுமலரோன்சடங்குதொடங்கினனே.

(இ-புரை.) அவ்விடத்தில்இத்தன்மையானசெய்கைநடந்தபின்புபர்வதராசன்மலையொத்ததனங்களும்சந்திரனொத்தமுகமுமுள்ள உமைமணவாளன்திருமுன்பாலும்பழமுமாகியமதுவர்க்கங்கொண்டுவந்து இதனைத்திருவமுதுசெய்தருளவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தான்மேகம்போலக் கறுத்தகண்டமுடையசுவாமியானவர் நாம் அமுதுகொண்டோமென்று அவைகளில்தமதுதிருக்கரம்வைத்துப்பரிசித்தவளவில்பிரமதேவன்திருக்கல்யாணச்சடங்குசெய்யத்தொடங்கினன்.—(எ-று-)(சரு)

மன்றற்சடங்குமுடிந்ததற்பின்மாலுமயனுமகபதியுந் ... ... *
துன்றுஞ்சுரருமிமவானுஞ்சுற்றத்தோருமற்றெவருங் ... ...*
கொன்றைமுடித்தநெடுவேணிக்குழகன்றாளுங்குழகனிட ... *
மென்றும்பிரியாவுமைதாளுமிணங்குமன்பால்வணங்கினரே... *

(இ-புரை.) பிரமதேவன்செய்யத்தொடங்கியவிவாகச்சடங்குநிறைவேறினபின்பு அங்குவந்திருக்கும்விஷ்ணுவும்பிரமதேவனும்தேவேந்திரனும்தேவர்களும் பர்வதராசனும் அவன்சுற்றத்தாரும்மற்றுமுள்ள எல்லாருங்கொன்றைமாலையணிந்தநெடியசடையையுடையபரமசிவன் திருவடிகளையும்பரமசிவனைவிட்டெப்போதும்பிரியாத உமையம்மைதிருவடிகளையுந்தங்களுள்ளத்திற்பொருந்திய அன்புடன்வணங்கினார்கள்.எ-று

ஈதுபுரிந்துமுற்றுதலுமெமையாளுமையாளிருந்தாதை.... ...*
யாதிகரமுன்றொடுஞ்சேடமனைவர்தமக்குமளித்தனனப் ... *
போதிலிரதிவந்தெதிர்ந்தாய்போர்வேடன்னையளித்தியெனச் ...*
சோதிமதனைநினைத்திடலுஞ்சுரர்கள்வெருவத்தோன்றினனால்... *

(இ-புரை.) இது செய்து நிறைவேறினவுடன் நம்மையாட்கொள்ளு ம்உமையம்மைபிதாவாகியமலையரையன் பரமசிவன்திருக்கரத்தால்முன்ப ரிசித்தமதுவர்க்கசேஷித்தை அங்கிருந்த எல்லாருக்கும்கொடுத்தான் அப் போது ரதிவந்துஎன்னையனேபோர்செய்யு மன்மதனைஅருள்செய்யவே ண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தவளவில் பரமசிவன்மன்மதன்வரும்ப டிதிருவுளத்திற் சிந்தித்தருளினவுடன்தேவர்கள் அஞ்சும்படிமன்மதன் தோன்றினான்.—(எ-று.) (சஎ)

மருவாரிதழிமதிபொதிந்துவளர்செஞ்சடிலவானவனத் ... ...*
திருமாலளித்தமலர்ப்பகழிச்சிலைபான்வதனந்தெரிந்தருளி.... *
யுருவாயிரதிக்கிருத்தியமோரொழிந்தோர்க்கெல்லாமுருவல்லா....*
தருவாயிருந்துன்னரசுபுரிகென்றேயவனோடவண்விடுத்தான் *

(இ-புரை.) வாசனைபொருந்தியகொன்றைப்பூமாலையும்இளம்பிறை யுந்தங்கிவளருகின்ற செஞ்சடையையுடைய சாம்பசிவமூர்த்தியானவர்தி ருமாலாற்பெறப்பட்டமலர்ப்பாணங்களையுடைய அம்மன்மதன் முகத் தைநோக்கிரதியினுடையபார்வைக்குமாத்திரம்உருவமாயிருக்கக்கடவை மற்றவர்களுக்கெல்லாம்-உருவந்தோன்றாமல்அருவமாயிருந்துகொண்டு உன்னசு செலுத்தக்கடவையென்று ரதியுடன் அவனைச்செல்லும்படிக ட்டளையிட்டருளினார்.—(எ-று.) (சஅ)

கன்னற்சிலைவேடனைவிடுத்துக்கெளரியோடும்விடையேறி ... *
பின்னுங்கயிலையடைந்தெவர்க்கும்விடையையுதவிவிடையையிழி
துன்னற்கரியவரியணைமேலுமையோடிருப்பவுயிரனைத்து [ந்
மின்னலகலவிருங்காமவின்பமேவியிருந்தனவே... ... ...*

(இ-புரை.) கரும்புவில்லையுடைய மன்மதனை அனுப்பிவிட் டுப்பார்வதியுடன் ரிஷபவாகனத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டுபி ரகாசிக்கா நின்ற கயிலாயமலையிற்சேர்ந்து எல்லாருக்கும் விடைகொடுத் தருளி ரிஷபவாகனத்தைவிட்டிழிந்து உமையவளுடன் நினைத்தற்குமரி யசிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தார்- இவ்வாறுசத்தியுஞ் சிவமுங்கூடி யொன்று யிருந்தமையால் சராசரமாகிய எல்லாவுயிர்களு முன்னிருந்த துன்பம்நீங்கும்படிமிகுந்தகாமஇன்பம்பொருந்தியிருந்தன.—(எ-று.) உன்னற்கரிய - என்பது இப்படிக்கொத்ததன்மையுடையதென்றுவாக்கி னாற் சொல்லுதற்கேயன்றிமனத்தினாலும் நினைத்தற்கரியது. (சகூ)

பின்னொருநாளரிமுதலாம்பெருஞ்சீரிமையோர்மேருவின்பான்
மன்னியிருந்தேயெமைவருத்தும்வலியசூரன்வலிகெடப்ப... *

வன்னநடைமாதினைமணந்துமரணிந்திலன்மைந்தனையெனவே. .*
யுன்னிக்கயிலைப்பரம்பரனோருற்றுவெண்டநச்சினரால்... ...*

(இ-பொ.) ஒருநாள் விஷ்ணு முதலானமிகுந்தசிறப்புள்ளதேவர்கள்மேருமலையினிடத்திற் சேர்ந்திருந்து நம்மைவருத்துகின்றவலியுள்ள சூரபத்மன் பலத்தைக் கெடுக்கும்படி அன்னப்பக்ஷியினடை யொத்தநடையையுடைய பார்வதியை விவாகஞ்செய்துகொண்டும் பரமசிவன் புத்திரனை அருளிச்செய்திலரொன்று நினைத்துக்கயிலாயபதியின் சந்நிதியிற்போய்ப்பிரார்த்திக்கவேண்டுமென்று விருப்பங்கொண்டார்கள்.-(௩௰)

வேளையெரித்தவிழியாளன்வேலையறிந்துமீளுதற்கு... ... *
நாளுமுலவுகாலைவிடநந்திதனைக்கண்டஞ்சியது ... ... ...*
மீளவரலுங்கயிலைதனில்விண்ணோரடைந்துநந்திவிட... ... *
வாளும்பரனைத்தொழுதேத்தவரனிங்கேதுவேண்டுமென ... *

(இ-பொ.) இவ்வாறுநினைத்துமன்மதனையெரித்த நெற்றிக்கண்ணுடைய பரமசிவன் சந்நிதியிற்போய்க்காணும்படியான காலமறிந்துவருவதற்கு எக்காலமுஞ் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் வாயுதேவனையனுப்ப அந்தவாயுதேவன் நந்திதேவனைக்கண்டு பயந்துதிரும்பிவிடவும்தேவர்கள் கயிலையிற்சேர்ந்து நந்திதேவர் உள்ளேபோம்படிவிடச்சென்று யாவரையும் ஆட்கொள்ளும்பரமேசுரனைத்தொழுது துதிசெய்தார்கள்சுவாமியவர்களைநோக்கியுங்களுக்குவேண்டியதென்னவென்றார்,--(எ-று.)

சற்றுந்தகவில்கொடுஞ்சூரன் றன்னாலிந்நாளின்னன்மிக ... *
வுற்றுவருந்தித்திரிந்திளைத்தோ முன்னைப்போலவொருசுதனை ...*
வெற்றிபொருந்தவளித்தெமதுவிழுமந்துரப்பவேண்டுமென.[ன்
வற்றுன்றியசீர்க்களப்பெருமானறுமா முகங்கொண்டாங்கிருந்தா

(இ-பொ.) தகுதியென்பதுசிறிதுமில்லாத கொடியசூரனால் இந்நாள்வரையில் மிகுந்ததுன்பமடைந்துவருந்தியலைந்திளைத்தோம் இனித்தேவரீரைப்போல ஒருபுத்திரனைநாங்கள்செயம்பொருந்த அருள்செய்து எங்கள்துன்பத்தை நீக்கவேண்டுமென்றார்கள்-கருமைநிறம்பொருந்திய பெருமையிணையுடைய கண்டமுள்ளபெருமான் அப்போது ஆறுதிருமுகங்கொண்டிருந்தார்.—(எ-று.) (௩௨)

[வேறு.]

செம்மைதொளாறுமுகத்தொடிருந்தே ... ... ... ... *
தீவிழியாறினுமாறுபுலிங்கம் ... ... ... ... ...*
வெம்மையொடுந்தரவங்கனவசென்று ... ... ... ... *
வீறுலகத்துவிரிந்திடவஞ்சிப் ... ... ... ... ...*

பொம்மறருங்கவினம்மையெழுந்து ... ... ... ... ...*
புலம்புசிலம்புபொலன்கழன்மோத ... ... ... *
விம்மெனவோடியிருக்கைபுகுந்தா ... ... ... ... ...*
ரெங்கணுமாகியிருந்தனர்விண்ணோர் ... ... ... *

(இ-புரை.) செம்மைநிறம்பொருந்திய ஆறுதிருமுகத்தோடிருந்து அம்முகங்கள் தோறுமிருக்கும் ஆறுநெற்றித்தீக்கண்களிலும் ஆறு தீப்பொறிகள்வெப்பத்துடன் உண்டாகும்படியருள்செய்ய அப்பொறிகள்உலகமெங்கும்பரந்திடக்கண்டுபயந்துபொலிவைத்தரும் சௌந்தரியமுள்ளபார்வதிதேவியாரெழுந்து பொன்னிறமுள்ளதிருவடிகளிலணியப்பட்டு ஒலித்துக் கொண்டிருக்குஞ் சிலம்புகளொன்றுடனொன்று மோதத்தக்கதாகவிரைவுடனோடிஅந்தப்புரத்திற்சேர்ந்தார்-தேவர்களிருந்தவிடம்விட்டு எங்குமாயோடினர்.—(எ-று.) (௫௩)

ஓடியவிண்ணவர்கூடினர்வந்தே ... ... ... ... ... ...*
யுந்திய தானவரானவர்தம்மைச் ... ... ... ... ... *
சாடியவிங்கொருமைந்தனையெந்தாய் ... ... ... ...*
தந்தருளென்றனைவந்தனைசெய்ய ... ... ... ... *
வீடுறுவெம்மைகொளங்கியளித்தா ... ... ... ... ...*
பெங்ஙனமுய்வதியாமெனவோதப் ... ... ... ... *
பீடுறுமோர்முகமாகியிருந்து ... ... ... ... ... ...*
பெருந்தழன்முன்புவரும்படிமுன்ன ... ... ... *

(இ-புரை.) இவ்வாறு ஓடினதேவர்கள்மறுபடிகூடிவந்து ஐயனே எங்களைத்துரத்திவிட்டசூரன்முதலானதானவர்களைக்கொல்லஒருபுத்திரனையிப்போது அருளிச்செய்யவேண்டுமென்று நாங்கள் தேவரீரைவந்தனைசெய்தால் பலம்பொருந்திய வெப்பங்கொண்ட தீபபொறிகளையருளிச்செய்தீர் நாங்களெவ்வாறுபிழைப்போமென்று அவர்கள்விண்ணப்பஞ்செய்தவளவில்பெருமைபொருந்திய ஒருதிருமுகத்துடனிருந்து பெரிதானஅந்தத்தீபபொறிகள் தம்மெதிரில்வரும்படிசுவாமிதிருவுளங்கொண்டருளினார்.—(எ-று.) (௫௪)

அந்நிலைதன்னில்விரிந்திடுசெந்தீ.... ... ... ... ... ...*
யாறுபெரும்பொறியாகியரன்றன் ... ... ... ... *
முன்னுறவந்திடவண்ணறெரிந்தே ... ... ... ... ...*
மொய்ம்புளதேயுவைவாயுவைநோக்கி ... ... ... *
மன்னியவிப்பொறிதன்னையெடுத்தே... ... ... ... ...*
மங்கையில்கங்கையுள்வைத்திடுமென்றே ... ... ... *

யின்னலில்சத்திகொடுத்திடமாறி ... ... ... ... ... *
பெடுத்துயர்கங்கையடுத்ததில்வைப்ப... ... ... ...*

(இ. புரை.) பரமசிவம் அவ்வாறுதிருவுள்ளங்கொண்டவளவில்எங்கும்பரவியசெந்தீயானது ஆறுபெரும்பொறிகளாகிச் சுவாமியின்திருமுன்னர்வரலும் அவர்நோக்கிப்பலமுள்ளஅக்கினிதேவனையும் வாயுதேவனையும்பார்த்து இங்கிருக்குமிப்பொறிகளை நீங்களிருவருமாகத் தாங்கிக்கொண்டு போய்த்துன்பமில்லாத கங்கையினிடத்தில் வைத்திடுங்களென்று அவர்களுக்கு வருத்தமில்லாதிருக்கத் தக்கபலமுங்கொடுத்தருளினர் அவர்கள் மாறிமாறியெடுத்துக்கொண்டுபோய் மகத்துவ முள்ளகங்கையையடுத்து அதனிடத்தில் வைத்தார்கள்.—(எ-று.) (ருரு)

மங்கலில்கங்கையுமப்பொறிதன்னை ... ... ... ... ...*
வண்ணமுறுஞ்சரவணமிசைவைப்பப் ... ... ... *
பொங்கெழிலையிருதிக்கினுமான்முற்... ... ... ... ...*
புங்கவர்நின்றுபுரந்தனரப்போ... ... ... ... ...*
தங்கநிலாறுமுகத்தொடுமீரா... ... ... ... ... ... *
றத்தமொடுங்கமலத்தினிடத்திற்.... ... ... ... ...*
சங்கரனேமுருகேசனெனச்சீர் ... ... ... ... ... *
தங்கவிருந்திடவண்டர்கள்கண்டார் .... ... ... ...*

(இ-புரை.) கெடுதலில்லாதகங்கையானது அந்தப்பொறிகளைப் பசுமைநிறமுள்ளசரவணமென்னும்புல்லினிடத்தில்விடுப்பஅவைகளை மிகுந்த அழகுள்ளபத்துத்திக்கிலும்விஷ்ணுமுதலானதேவர்கள் பாதுகாத்துக்கொண்டிருந்தார்கள் அப்போது அந்தச்சரவணத்தில்ஆறுதிருமுகங்களுடனும்பன்னிரண்டுபுயங்களுடனும் தாமரைமலரினிடத்தில்பரமேஸ்வரனேமுருகேசனெனச் சீர்தங்கத்தோற்றமாயிருக்கத் தேவர்கள்கண்டார்கள்.—(எ-று.) பத்துத்திசையாவது கிழக்குமுதலிய எட்டுத்திசையும் - ஆகாயம் பூமிஆகப்பத்தெனக்கொள்க. (ருசா)

பன்னிருமொய்ம்புநெடுந்தகைதன்னைப்... ... ... ... *
பாலதருத்திவளர்த்திடமார்பிற்... ... ... ... ... *
பொன்னையிருத்தியபச்சுருவத்துப் ... ... ... ... *
புங்கவன்முற்படுபுங்கவரெல்லா ... ... ... ... *
மின்னறுமீனைவிடுத்ததுகண்டே ... ... ... ... ... *
வீறியவாறுசிறுரெனமேவு ... ... ... ... *
வன்னமடந்தையரன்னமுலாவு ... ... ... ... ... *
மன்னதடத்திலடைந்துபுரந்தார் ... ... ... ... *

(இ-புரை.) அவ்வாறுகண்டவுடன் பன்னிரண்டு திருத்தோள்களுள்ளமுருகேசனைப்பாலூட்டி வளர்க்கமார்பில் திருமகளைவைத்திருக்கும்பச்சைநிறமுள்ளவிஷ்ணுமுதலானதேவர்களெல்லாரும் ஒளியுள்ள ஆறுகியகார்த்திகைநக்ஷத்திரத்தை அனுப்பினதைமுருகேசன்கண்டருளி ஆறுகுழந்தைகளாயிருக்க நக்ஷத்திரங்களாகிய அம்மாதர்கள் அன்னப்பக்ஷிகளுலாவிக்கொண்டிருக்கும் படியான சரவணப்பொய் கையிற் சேர்ந்து பாலகொடுத்துவளர்த்துக்கொண்டிருந்தார்கள்.—(எ-று) (ருஎ)

ஓதிதுநின்றிடமுன்னமொழுந்தே... ... ... ... ... ...*
யோடியசங்கரிபின்பு திரும்பிச் ... ... ... ... *
சோதியிடத்திலடைந்துமடங்கல்... ... ... ... ... ...*
சுமந்திடுகின்றதுலங்கணைமேவக் ... ... ... ... *
கோதில்சிலம்பதுடைந்ததின்முன்வீழ்... ... ... ... ...*
கொன்னவமாமணியன்னவள்சாயை ... ... ... *
யேய்தலுமொன்பதுமங்கையராகி ... ... ... ... ...*
யெந்தைவிளித்திடவின்பொடுவந்தார் ... ... ... *

(இ-புரை.) சொல்லுமிந்தச்சரித்திரமிந்தமட்டிலிருக்க- முன்னெழுந்தோடினபார்வதிதேவியார்மறுபடிபரமேஸ்வரனிடத்தில் வந்துசிங்கங்கள்சுமந்துகொண்டிருக்கும்பிரகாசமுள்ளஆசனத்தில்வீற்றிருந்தார் முன்னுடைந்தசிலம்புகளிலிருந்து சிதறியபெருமைபொருந்திய நவரத்தினங்களில்பார்வதிதேவியார்சாயைபொருந்தினவுடன் அந்தச்சாயை ஒன்பதுமாதர்களாகிச்சுவாமியழைக்கப்புறத்தில் இன்பத்துடன்வந்தார்கள் —(எ-று.) (ருஅ)

வித்தகமங்கையரெம்பெருமானை... ... ... ... ... *
விருப்பொடுகண்டுகருப்பமதாகச் ... ... ... ... *
சத்திசினந்துகருப்பயவாதே ... ... ... ... ... ...*
தாங்குமினென்றிடவேங்கினராங்கே... ... ... ... *
மெத்தியமேனிவியர்ப்பிலிலக்க ... ... ... ... ... ...*
வீரருதித்தனராரியைசொல்லா ... ... ... ... *
ஆத்தமமாதர்கள்பின்பொருநாளி ... ... ... ... ...*
லொன்பதுமைந்தரையன்பொடுதந்தார்... ... ... *

(இ-புரை.) ஞானவடிவமாகிய அந்த ஒன்பதுபேர்களும் நம்மிறைவனைவிருப்பத்துடன்பார்த்துக்கருப்பங்கொள்ள அதையறிந்தபராசத்திகோபங்கொண்டு நீங்கள் கருக்குமலிருக்கக்கட வீர்களென்றுசொல்ல அம்மாதர்கள் ஏக்கங்கொண்டார்கள் அப்போது அவர்களுடையமே

ன்மையுள்ளவடிவத்தி லுண்டானவேர்வையினிடமாகலக்ஷம்வீரர்கள்தோ ன்றினார்கள் பின்பொருநாள் பரமேஸ்வரியின் கட்டளையினால் நன்மையு ள்ள அம்மாதர்கள் அன்புடன்ஒன்பதுபுத்திரர்களைநாபியினிடமாகஈன் றார்கள்.—(எ-று.) நாபியினிடமாகவந்தனர்களென்பதைப்பெரியகாந்த த்திற்கண்டுகொள்க. (ருக)

மாசறுமன்னவர்தம்பெயர்வீர... ... ... ... ... ... *
வாகுவெனுந்திருவள்ளல்வளைக்கைக் ... ... ... *
கேசவனும்பர்புகழ்ந்திடுவீர ... ... ... ... ... ...*
கேசரிவீரமகேந்திரனென்போன் ... ... ... ... *
வீசுபுகழ்ப்பெறுவீரமகேசன் ... ... ... ... ... ...*
வீரபுரந்தரன்வீரவரக்க... ... ... ... ... ... *
ஞசறுவீரதிவாகரன்வீர ... ... ... ... ... ...*
ராந்தகன்வீரமடைந்திடுதீரன்.. ... ... ... ... *

(இ-ரை.) குற்றமற்றஅவர்கள்பெயர்சங்கமேந்தியகையையுடைய விஷ்ணுவுந்தேவர்களும்புகழும்வீரவாகு என்கிற சிறப்புள்ளவள்ளல் எ ன்றும்- வீரகேசரி-வீரமகேந்திரன்- என்றும்- எங்கும்பரவுகின்ற புகழ் பெற்றவீரமகேசன்என்றும்-வீரபுரந்தரன் என்றும்-வீரராக்ஷசன் என் றும்-குற்றமில்லாதவீரமார்த்தாண்டன்என்றும் - வீரராந்தகன்என்றும்- வீரதீரன்என்றும்-சொல்லப்படும்.—(எ-று.) (சுய)

மற்றவர்தங்களையாதிதெரிந்தெம்... ... ... ... ... ... *
மைந்தர்களென்றுமைமாதொடுகூறி ... ... ... ...*
நற்றிறல்கொண்டவிலக்கர்களோடு ... ... ... ... ... *
நந்திருமைந்தனதேவல்புரிந்தே... ... ... ... ...*
யுற்றிடுவீரெனவோதுபுமாதோ .... ... ... ... ... *
டுந்துவிடைப்புறமொல்லைபுகுந்தே ... ... ... ...*
யற்றமறுஞ்சரவணமதடைந்தா ... .... ... ... ... *
ஞசறுவானவரானவர்சூழ ... ... ... ... ... ...*

(இ-புரை.) அவ்வொன்பதுவீரர்களையும் பரமசிவன் பார்த்தருளி யிவர்கள்நம்முடைய புத்திரர்களென்று உமையம்மையுடன் சொல்லிமி குந்தபலங்கொண்டலக்ஷம் வீரர்களுடனீங்களொன்பதுவீரர்களும்நம் முடைய திருமைந்தன் ஏவலைச்செய்துகொண்டிருங்களென்று கட்டளை யிட்டருளி ஏறிச்செலுத்தத்தக்க ரிஷபவாகனத்தின்மேல் பார்வதிதேவி யோடகூரோகணித்துக்கொண்டு குற்றமற்றதேவர்கள்யாவருஞ்சூழ்ந்துவ ரும்படிவிரைவுடனெழுந்தருளிச் சோர்வடையாத சரவணப் பொய்கை யினிடத்திற்சேர்ந்தார்.—(எ-று) (சுக)

மாசிலிமக்கிரியின்புடைதன்னின் ... ... ... ... ...*
மன்னுசெழுஞ்சரவணமுனமெய்தத் ... ... ... *
தேசுறுமன்னதில்லைகியசெவ்வேள் ... ... ... ... ...*
சிற்பரனரிசெறிந்ததுகண்டான் ... ... ... ... *
பாசமகற்றரனம்பிகையோடுஞ்... ... ... ... ...*
பாலகனைக்கொடுவாவெனவோத ... ... ... ... *
வாசறுபூவிலிழிந்துநடந்தே ... ... ... ... ... ...*
யாறுருமைந்தனையம்மையெடுத்தாள் ... ... ... *

(இ-புரை) அவ்வாறுசேர்ந்தவர்கள்பழுதில்லாத இமயமலையின் சாரலிலிருக்கும் செழுமையுள்ள சரவணப்பொய்கையருகு சேர்ந்தவுடன் ஒளிபொருந்திய அந்தப்பொய்கையில் வீற்றிருக்கும் முருகக்கடவுள் பரமசிவனும் பார்வதிதேவியாரும் வந்ததைக்கண்டார் அடியார்கள்பாசத்தை நீக்கியருளும் பரமேஸ்வரன் பார்வதிதேவியாரைப்பார்த்து உன் புத்திரனை யெடுத்துக்கொண்டுவாவென்று சொன்னவளவில் பார்வதிதேவியார்குற்றம்நீங்கியபூமியிலிழிந்துநடந்து ஆறுருவமாயிருக்குமைந்தனையெடுத்தருளினார்.—(எ-று.) (சுஉ)

அம்மையெடுத்துழியாறுருமைந்த... ... ... ... ... *
னாறுமுகங்களுமாதிருமூலையுஞ் ... ... ... ... ...*
செம்மைபொருந்தொருமேனியுமாகச் ... ... ... ... *
செப்பினையொத்ததிருத்தனநின்று ... ... ... ...*
பொம்மலுடன்சொரிபாலருத்திப்.... ... ... ... ... *
பொற்புறுசிற்பரனைப்பணிவிக்க ... ... ... ... ...*
நம்மையளித்திடுகந்தனையன்பா ... ... ... ... ... *
னதனெடுத்துரமீதிலணைத்தே ... ... ... ... ...*

(இ-புரை.) எவ்வுயிர்க்குந்தாயாகிய பார்வதிதேவியார் எடுத்தவளவில் ஆறுதிருவுருவமாயிருந்த குமாரக்கடவுள் ஆறுதிருமுகங்களும்பன்னிரண்டுதிருக்கரங்களுஞ்செம்மைநிறம்பொருந்திய ஒருதிருமேனியுமுடையவராயிருக்க அப்போது பார்வதிதேவியின் பொற்குடமொத்த திருத்தனங்களிலிருந்து பொலிவுடன்பொழிகின்றபாலையூட்டிஅழகுபொருந்தியபரமசிவனிடத்திற்கொண்டுவந்துபணியும்படிசெய்தருளினார்-நம்மைரக்ஷிக்குங்கந்தனென்னுந்திருநாமம்அப்போதுகொண்டமுருகக்கடவுளையன்புடன் சுவாமியெடுத்து மார்பில்அணைத்துக்கொண்டார்.—

அந்தரியோடுவிடைப்புடைவைத்தங் ... ... ... ... ...*
காரன்மடந்தையருக்கருள்செய்தான் ... ... ... *

சுந்தரிமைந்தனருந் துமுலைப்பா.... ... ... ... ... ...*
றுண்ணெனமுன்னர்சொரிந்தநதன்னிற் ... ... *
சிந்தியதோடுபுகந்தன்வளர்ந்த.... .... .... ... ... ...*
செழுஞ்சுனையூடுசெறிந்திடவங்கண் ... ... ... *
வெந்திறன்மீனெனவாழ்பவருண்டே .. ... ... ... ...*
வீறியதொல்லுருமேவினர்மன்றே.... ... ... ... *

(இ - புரை.) உமையம்மையுடன் ரிஷபவாகனத்தில் வைத்துக்கொண்டு அங்கிருந்தகார்த்திகை நக்ஷத்திரமாகிய மாதர்களுக்கு அருள்புரிந்தார் கந்தசுவாமியானவர் முன்னம்அமுதுசெய்தமுலைப் பால்விளாவிலிழிந்ததனால் அதிற்சிந்தியபாலோடிக் கந்தசுவாமிவளர்ந்திருந்த செழுமையுள்ள சுனைக்குட்பொருந்த அவ்விடத்துமிருந்தபலமுள்ள மீனுருவாகி இருந்தவர்கள் அந்தப்பாலையுண்டு வீறுள்ளபழையஉருவத்தை யடைந்தார்கள்.(எ-று.) கார்த்திகைமாதர்களுக்கு அருள்செய்ததென்னவெனில கார்த்திகைநக்ஷத்திர விரதமிருப்பவர்கள் வேண்டியவரம் பெறுவார்களென்பதாம். இதனையும்பெரியகாந்தத்திற் கண்டுகொள்க. (சுச)

கொற்றமதுற்றபராசரனல்குங் ... ... ... ... ... ...*
கோதகலாறுகுமாரருமன்றால்.. ... ... ... ... *
சொற்றிடுசூள்கொடுமீனெனவாழந் ... ... ... ... ...*
துன்பமகன்றுயர்தொல்லுருவுற்றே... ... ... ... *
பெற்றமிசைக்கிரிமாதொடிருந்த.. ... ... ... ... ...*
பெருந்தகைமுன்றுதிபேசிவணங்க... ... ... ... *
வற்றமதற்றபுகழ்க்கொள்பரங்குன் ... ... ... ... ...*
றத்திடைநீவிரடைந்திடுமென்றான் ... ... .. ... *

(இ-புரை.) தவவெற்றிபொருந்திய பராசரமகாரிஷி ஈன்றகுற்றம் நீங்கிய அந்தஆறுபுத்திரர்களுந்தங்கள்பிதாகூறிய சாபங்கொண்டு மீன்களாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருந்த துன்பம் நீங்கிப் பழையவடிவம் பெற்று-ரிஷபவாகனத்தின்மேல் பார்வதிதேவியாருடனிருந்த பரமசிவன்முன்சென்று துதிசொல்லிவணங்கினார்கள் குற்றம்நீங்கியபுகழ்கொண்டதிருப்பரங்குன்றத்தில் நீங்கள்போயிருங்களென்று சுவாமி கட்டளையிட்டருளினார்.—(எ-று.) (சுரு)

அந்தரமீதுறுமாரலவிண்ணோ ... ... ... ... ... ...*
ராளையுமன்புடனங்கண்விடுத்தே ... ... ... ... *
யெந்தைபிரானுயர்வெள்ளிவிலங்க ... ... ... ... ...*
லிணங்கியதன்கணிருந்தருள்போதின் ... ... ... *

வெந்திறல்கொண்டவிலக்கர்களொன்பான் ... ... ... ...*
வீரர்கள்கந்தனைவந்தனைசெய்தார்... ... ... ... *
சுந்தரிமைந்தனெழுந்தவரோடுந் ... ... ... ... ... ...*
தூவிளையாடறொடங்கினனன்றே ... ... ... ... *

(இ - புரை) ஆகாயத்தினிடத்திற்பொருந்திய கார்த்திகைநக்ஷத்திரத்தையுந்தேவர்களெல்லாரையும்-அவரவர்களிடத்துக்குப்போகும்படிவிடைகொடுத்தருளி- நம்அய்யனாகியபரமசிவன் வெள்ளியங்கிரியிற்சேர்ந்து அதனிடத்தில் வீற்றிருக்கும்போது வெவ்வியபலங்கொண்ட லக்ஷம்வீரர்களும் நவவீரர்களுஞ்சென்று ஸ்கந்தமூர்த்தியைவணங்கினார்கள்-பார்வதிபுத்திரராகிய அந்தக்கந்தசுவாமியெழுந்து அவர்களோடும்விநோதமான திருவிளையாடல் செய்யத்தொடங்கினார்.—(எ-று) (சுசு)

மண்ணிலுலாவுறும்விண்ணிலுலாவும் ... ... ... ... ...*
வண்ணவயன்பதநண்ணியுலாவுங் ... ... ... ... *
கண்ணனிருந்ததலத்திலுலாவுங் ... ... ... ... ...*
கண்ணுதனண்ணியகண்ணிலாவுவு... ... ... ... *
மெண்ணில்வளம்பெறுமண்புனநீகா ... ... ... ...*
லின்புறுவிண்டனிலண்டமுலாவும்... ... ... ... *
பண்ணியல்வீணையிசைத்தினிதாடும் .... ... ... ... ...*
பாடுமரன்றருபாலகனம்மா..... ... ... ... ... *

(இ - புரை.) பரமசிவனருளிய திருமைந்தராகிய ஸ்கந்தமூர்த்தி பூலோகத்தில்உலாவுவர்-ஆகாயத்திலுலாவுவர்-அழகியபிரமதேவனுலகத்திற்சென்றுலாவுவர்- விஷ்ணுவிருக்குமுலகத்திற்சென்றுலாவுவர்-நெற்றிக்கண்ணுள்ளபரமசிவனிருக்குமிடத்திற்சென்றுலாவுவர்- அளவில்லாதவளமைபொருந்திய பிரிதிவு-அப்பு-தேயு-வாயு இன்பமிகுந்த ஆகாயமென்னும் பஞ்சபூதங்களினிடத்தும் அண்டங்களிலுமுலாவுவர்-பண்கள்பொருந்தியவீணைவாசித்துக்கொண்டு இனிதாகவிளையாடுவர்.—(எ-று)

நீடுகடற்களையொன்றுபடுத்து ... ... ... ... ... ...*
நேமிநகத்தைநிலத்திலழுத்து... ... ... ... ... *
பீடுறுதிக்கரவங்களைவெற்பூ ... ... ... ... ... ...*
டின்பொடுகட்டியிழுத்திடுமாகத் ... ... ... ... *
தோடிருவோரையுமுன்னியல்பன்றி ... ... ... ... ...*
யொருத்தர்பதத்திலொருத்தனையுய்க்கும்..... ... ... *
ஒடுறுமெண்டிசையாளர்பதங்கள் ... ... ... ... ...*
பிடுங்குபுவல்லைபிறழ்ந்திடவைக்கும்... ... ... ... *

(இ-புரை.) நீட்சியுள்ளதாயிருக்கும் எழுகடற்களையும் ஒன்றாகும்படிசேர்த்துவிடுவர் - சக்கரவாகமலையைப் பூமிமட்டத்துக்கழுத்திவிடுவர்-வன்மைபொருந்தியஅஷ்டதிசைநாகங்களைஅஷ்டகுலபர்வதங்களில்கட்டியின்பமுடனிழுப்பர் ஆகாயத்திற் செல்லுகின்ற சந்திரசூரியர்களை முன்கிரமப்படி செல்லவொட்டாமல் சூரியமண்டலத்தில்சந்திரனும் சந்திரமண்டலத்திற்சூரியனு மிருக்கும்படிசேர்ப்பர் - பெருமைதங்கியஅஷ்டதிக்குப்பாலகர்பதவிகளைவிரைவுடன் பெயர்த்துஒன்றிலொன்று மாறும்படிவைப்பர்.—(எ-று.) (சஅ)

தண்டருகொண்டல்விசும்பிலுறுங்கோ ... ... ... ... *
தண்டம்வளைத்துயர்தாரகையெல்லா ... ... ... ...*
முண்டையெனும்படிகொண்டிமையோர்க ... ... ... *
ளூரங்கள்சிரங்களினூடுநெறிக்கு ... ... ... ...*
மண்டிதுபோலவனேகமியற்ற... ... ... ... ... ... *
மற்றதியற்றியவன்மையராரென்... ... ... ... ...*
றண்டருமன்னனுமேருவினின்று ... ... ... ... ... *
மயற்கிதுகூறவகன்றனரங்கண்... ... ... ... ...*

(இ-புரை.) ஆகாயத்தில்சஞ்சரிக்கும் குளிர்ச்சிபொருந்திய மேகத்தினிடத்திலிருக்கும்இந்திரதனுசுவையெடுத்துவளைத்து- உயர்ச்சியுள்ளநக்ஷத்திரங்களெல்லாம்உண்டையாகும்படி வைத்துக்கொண்டுதேவர்களுடைய சிரங்களிலும் மார்புகளினுள்ளும்படும்படிஎறிவார்-பொருந்திய இவ்விநோதம்போல் அநேகம்விநோதஞ்செய்தருளினர்-இப்படிக்கொத்தவிநோதமானசெய்கைசெய்தவர் எவரென்றுகருதித்தேவர்களுமிந்திரனும்பிரமதேவனிடத்திற்சொல்லிக்கொள்ள அவ்விடத்திற்குப்போனார்கள்.—(எ-று.) (சகூ)

[வேறு.]

அந்நேரத்தினிலன்னநகத்தையலைத்தே.... ... ... ... *
முன்னேநின்றொரூர்முகத்தொடுமாறுமுகத்தோ ... ... ...*
னன்னேயத்துடனாடியுலாவுதனாடி ... ... ... ... *
யின்றோனேயிவைசெய்தவனாமெனவெண்ணி ... ... ...*

(இ-புரை.) அப்போது அந்தமகமேருவானது கிடுகிடென்று நடுங்கும்படிசெய்து ஆறுமுகக்கடவுளானவர்அவர்களுக்கெதிரில் ஒருதிருமுகங்கொண்டு நல்லஇன்பத்துடன் விளையாடல்செய்துகொண்டுலாவுகின்றதைதேவர்கள்பார்த்து இவனேயிப்படிக்கொத்தவிபரீதங்கள்செய்தவனாமென்றுநினைத்து.—(எ-று.) (எய)

வெவ்வேளாகமெரித்தவன்வமைந்தனைவெல்வா ... ... ... *
னவ்வேள்விக்கிறையும்பர்களோடுமேவற்சூழ்ந்... ... ... ...*
தெவ்வேல்தன்னையுமுய்த்தனனுய்த்தவையெல்லாஞ்... ... *
செவ்வேண்மீதலருற்றனவொத்தனசென்றே... ... ... ...*

(இ- புரை.) யாவருக்கு மோகத்தையுண்டாக்குமன்மதனுடலையெரித்த பரமசிவனுடைய திருமைந்தராகியமுருகேசக் கடவுளுடன்போர்செய்து வெற்றிகொள்ளத் தேவேந்திரனவன் தேவர்களுடன்சென்றுஅக்கடவுளைச்சூழ்ந்துகொண்டு பலவிதஆயுதங்களையும்ஏவினன்அந்தஆயுதங்களெல்லாம் போய்ச்சுப்பிரமணியக்கடவுள்திருமேனியில்மலர்பொருந்தியதுபோலப்பொருந்தின.—(எ-று.) வேல்என்பது- ஆயுதப்பொது. (எக)

பிள்ளைத்தண்மதிசூடியகண்ணுதல்பிள்ளை ... ... ... ...*
யுள்ளத்தாலொருவிற்கொடுநற்கணையொன்றால்... ... ... *
வெள்ளைத்தந்தியையட்டனனட்டபின்விண்ணோர்.... ... ...*
வள்ளற்கேழ்கணையுய்த்தவசத்தைவழங்கி... ... ... ... *

(இ-புரை.) குளிர்ச்சிபொருந்திய இளந்திங்கள்தரித்திருக்கும்நெற்றிக்கண்ணுள்ளபரமசிவனுடையபுத்திரனாகியசுப்பிரமணியக்கடவுளானவர்தமது திருவுள்ளத்தினு லொருவில்நியமித்துக் கையிலேந்திக்கொண்டு கூர்மையாகிய ஒருபாணம்விட்டுவெள்ளையானையாகிய ஐராபதத்தைக் கொன்றருளினர் அதைக்கொன்றபின்தேவேந்திரன்மேல்ஏழுபாணமேவிமூர்ச்சையாக்கி.—(எ-று.) (எஉ)

நாலம்பால்வருணனன்றனையொன்றுறுநான்மைக் ... ... ...*
கோலம்பாவியமன்றனைவென்றிருகோலா... ... ... ... *
லாலம்பாவியவங்கியையங்கடல்செய்தான் ... ... ... ...*
வாலம்பான்மொழியந்தரிதந்திடுமைந்தன். ... ... ... *

(இ-புரை.) வெண்மைநிறமும் அழகுமுள்ள பால்போலுமினியசொல்லுடைய பார்வதிதேவியார்ஈன்றருளியபுத்திரர்நா லுபாணத்தினல்வருணனையும்அஞ்சுபாணங்களினால்நமனையும்வென்று இரண்டுபாணத்தினால் அழகுமிகுந்த அக்கினிதேவனையும் அவ்விடத்துக்கொன்றருளினர்.(எ-று) (எங)

குன்றுநின்றவரல்லரவன்புடைசூடி ... ... ... ... ...*
நின்றார்யாவருமோடுதலோடுநெடுஞ்சீர் ... ... ... ... *
துன்றுருமுகனங்கதுகண்டுதிரந்தே ... ... ... ... ...*
மூன்றுனூற்றகளத்திடைவந்தனன்மொய்ம்பால் ... ... *

(இ-புரை.) இறந்தவர்கள்போக இறவாதவர்களாய் இந்திரனருகிற் சேர்ந்திருந்தவர்களெல்லாரும்ஓடினபோது மிகுந்தசீர்மைபொருந்திய ஆறுமுகக்கடவுள் அவர்களோடுவதைக்கண்டுபின்னும் அதிகமாகத்தூரத்திமுன்னேதாமிருந்த போர்க்களத்தில் பராக்கிரமத்துடன்வந்தருளினர்.—(எ-று.) (எச)

[வேறு.]

மற்றதனை நாரதனுமாமுனிகண்டண்டர்குரு ... ... ... ...*
வுற்றுழிச்சென்றோதுதலுமும்பர்கடம்வாழ்வெல்லா.... ... *
மிற்றதுகொலெனவேங்கியெழுந்துருகனிடத்தடைந்து... ...*
பொற்றிருத்தாளிணைதொழுதுபுகழ்ந்தினையபுகலுகின்றான்... *

(இ-புரை) இவ்வாறு நடந்ததைநாரதமகாரிஷிகண்டுதேவர்குருவாகிய பிரகஸ்பதிபகவானிருக்குமிடத்திற்போய்ச்சொல்லலும் அவர்தேவர்வாழ்வெல்லாமுடிந்துபோய்விட்டதாவென்றுவிசனங்கொண்டு எழுந்துமுருகேசரிடத்திற்சென்று அவருடையபொலிவுள்ள இரண்டுதிருவடிகளையும்புகழ்ந்துஇவ்வார்த்தைசொல்லுகிறார்.—(எ-று.) (எரு)

அத்தநினையறியாமலமர்புரிந்தவண்டர்கட ... ... ... ...*
மெத்துபிழைபொறுத்தெழுப்பவேண்டுமெனவெண்மைநிறத் .*
தத்தியையுமத்தியின்மேலரசையுமற்றனைவரையும் ... ... *
வித்தகனங்கெழுப்புதலும்விழுந்தார்களெழுந்தார்கள் .... ...*

(இ-புரை.) ஐயனேஉன்னையறியாமல் போர்செய்ததேவர்களுடையபெரியபிழையைப்பொறுத்துக்கொண்டுஅவர்களையெல்லாம்எழுப்பவேண்டுமென்றுநாரதர்விண்ணப்பஞ்செய்துவேண்டினவளவில் முருகக்கடவுளானவர் வெண்மைநிறமுள்ளயானையையும் அந்தயானையின்மேலேறுகின்றதேவேந்திரனையும்மற்றுமுள்ளதேவர்களையும் எழுப்பினவளவில்முன்இறந்துவிழுந்தவர்களெல்லாரும்பிழைத்தெழுந்தார்கள்(எ-று.

உஞ்செழுந்தவிமையோர்களுயர்குகனென்றுணராதே... ...*
வெஞ்சமராற்றினமெனவேமிகநடுங்கியவனடிதாழ்ந் ... *
தஞ்சலிசெய்தேத்துதலுமஞ்சலிரென்றருள்கூர்ந்து ... ...*
குஞ்சரமாமுகற்கிளையகுமரவேள்கூறுவான்....... ... ... *

(இ-புரை.) பிழைத்தெழுந்ததேவர்கள்மேன்மைபொருந்தியமுருகக்கடவுளென்று அறியாமல்கொடியபோர்செய்தோமென்று மிகவும்நடுங்கிஅவர்பாதத்தில்வணங்கி அஞ்சலிசெய்து நிற்கக்கண்டு நீங்கள்அஞ்சவேண்டுவதில்லையென்று யானைமுகக்கடவுளுக்கிளையகுமாரசுவாமி அருளிச்செய்கிறார்.—(எ-று.) (எஎ)

சேயெனமுன்பெமைக்கருதிச்செருப்புரிந்தீரினியெமது... *
தூயவிறல்காணுமெனத்தொல்லுலகமண்டமுயிர்... ... ...*
ராயவெலாந்தனதுருவேயல்லால்வேறில்லையென.. ... ... *
நேயவொருவடிவுகொடுநின்றனெம்பெருமானே... ... ...*

(இ-புரை.)நம்முடையகர்த்தாவாகிய சுப்பிரமண்ணியசுவாமியான வர்முன்புநம்மைச்சிறுபிள்ளையெனநினைத்துச்சண்டைசெய்தீர்கள் இப்போழுதுநம்முடையபரிசுத்தமுள்ளவல்லமையைப்பாருங்களென்று பழையஉலகங்கள்அண்டங்கள்அவைகளிலிருக்கும் உயிரானவைகளெல்லாந்தம்முடையதிருமேனியேயல்லதுவேறில்லையாகநேயமுள்ள ஒருவிசுவரூபங்கொண்டுநின்றார்.—(எ-று.) (எ௯)

அன்பொடுமற்புதத்தோடுமமரரெல்லாந்தொழுதேத்தக்... ...*
கொன்பொலிமுன்னுருவாகிக்குமரவேணின்றிடலு ... ... *
மின்பொடுநீவிளையாடவிவ்விடைவேறுற்றவெலா... ... ...*
முன்பெனவைத்தருடியெனமுகிலூர்திவேண்டினனால் ... *

(இ-புரை.) அதைக்கண்டதேவர்களெல்லாரும்- அன்புடனும் ஆச்சரியத்துடனும் தொழுதுதுதிசெய்யக் குமாரசுவாமி முன்போலப் பாலசுப்பிரமணியமூர்த்தமாக நின்றருளினர் அதன்பின்பு மேகவாகனனாகிய தேவேந்திரன் சுவாமியைப்பார்த்துத் தேவரீர் முன்புஇன்பமுடன் திருவிளையாடல்செய்தருளினதால் இவ்விடத்தில் வேறுபட்டவைகளெல்லா முன்புபோலாகும்படி வைத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான்—(எ - று.) (எக)

மகவேந்தன்வேண்டவுமைமைந்தவேந்தலதன்பொருட்டான்... *
மிகவேவேறுற்றவெலாம்வேறின்றிமுன்னுளவாந்... ... ...*
தகவேய்கவெனவெவையுஞ்சார்ந்தனவப்படிநவிரப்.... ... *
பகைவேலோன்குகன்றாள்கள்பணிந்திணையபகர்கின்றான்... ...*

(இ-புரை.)மகவானென்றும்ஒருபெயருள்ளதேவேந்திரன்வேண்டுதலினால்பார்வதிபுத்திரராகியசுப்பிரமணியசுவாமியானவர்அந்தவேண்டுதலின்பொருட்டுமிகுதியாக வேறுபட்டதுகளெல்லாம் வேறுபாடின்றி முன்னிருந்தகுதிப்படிக்குப் பொருந்தியிருக்கக்கடவதுகளென்று அருளிச்செய்ய அந்தக்கட்டளையின்படி அவைகளெல்லாமிருந்தனஅதைக்கண்டு மலைகளுக்குப்பகையாகிய வச்சிராயுதமுள்ளதேவேந்திரன் சுப்பிரமணியசுவாமியின் திருவடிகளைவணங்கி யிவைசொல்லுகின்றான்.—(எ-று.) நூறுஅசுவமேதயாகஞ்செய்து இந்திரப்பட்டம் அடைவதினால் தேவேந்திரனுக்கு மகவானென்றொருபெயர். மகம் என்பது - யாகம்.

இங்குநினையருச்சிக்கவேண்டுமெனவிசைந்தருளிப் ... ... *
பொங்குகயிலைக்கொருசார்பொருப்பினிடைவிருப்பொடுபோ *
யங்கமரர்பூசனைகொண்டருங்கயிலைமருங்கடைந்தான் ... ...*
றங்குபுகழ்ப்புலவருமத்தனிவரையைத்தணந்தனரால்... ... *

(இ-புரை) இப்போதிவ்விடத்தில்தேவரீரை நாங்கள்பூசைசெய்யவேண்டுமென்றுவிண்ணப்பம்பண்ணிக்கொள்ளுதலும்அதற்குச் சுவாமிதிருவுள்ளமிசைந்தருளிஉண்டுதோறும் ஒங்குகின்றகைலாயகிரிச்சாரலிலொருபுறத்திலிருக்கு மலையினிடத்துவிருப்பமுடனெழுந்தருளி அவ்விடத்தில்வீற்றிருந்துதேவர்கள்செய்த பூசையை யேற்றுக் கொண்டுயாவருஞ்சேர்தற்கு அரியகைலாசகிரியைச்சேர்ந்தார் அதன்பின்புபுகழ்தங்கிய தேவர்களும் ஒப்பில்லாத அந்தமகமேருகிரியைவிட்டுநீங்கிப் போனார்கள்.-

வீசுபுகழாறுமுகவித்தகனையும்பரெல்லாம்... ... ... ...*
பூசைபுரிந்திடலாலேபொற்புறமவ்வெற்பதுதான் ... ... *
காசின்முருகற்கிடமாய்க்கந்தவெற்பென்றொருநாமம் ... ...*
பேசும்வகைபெற்றதினிப்பெருந்நகரோறியதிசைப்பாம் ... *

(இ-புரை.)எவ்வுலகத்தும் பரந்தபுகழ் பொருந்திய ஆறுமுகசுவாமியைத்தேவர்களெல்லாரும்அவ்விடத்திலபூசைசெய்தலினுலே-அழகுள்ள அந்தமலையானது குற்றமில்லாத முருகக்கடவுளுக்கு இடமாய்க்கந்தமலையென்றுசொல்லும்படி ஒருபெயர்பெற்றது இனிப்பெரிய ஆட்டுக்கடாவின்மேல்அவர்ஆரோகணித்ததைச்சொல்லுகிறோம்.—(எ-று) (அஉ)

நாடுபுகழ்நாரதனிருரதன்செய்வேள்வியின்மாட் ... ... ...*
டாடுபிறந்துயிர்கடமையழித்திடலுமகத்திற்... ... ... *
கூடுமுனிவருஞ்சுரருங்கோதிலருளாரதனும்... ... ... ...*
பீடுடையகயிலையெனும்பிறங்கன்மிசையுற்றனரால் ... ... *

(இ-புரை.) எல்லாருங் கருதும்படியாகிய தேவலோகத்தில்நாரதமுனிவர் செய்தயாகத்தினிடத்து ஒருஆட்டுக்கடாஉண்டாகி உயிர்களையெல்லாம்அழிக்குமளவில் அந்தயாகத்துக்குவந்திருந்த முனிவர்களுந்தேவர்களும் குற்றமில்லாதகிருபையையுடையநாரதமுனிவரும் பெருமைபெற்ற கைலையாகியவெள்ளியங்கிரியிற்சேர்ந்தார்கள்.—(எ-று) (அரு)

உற்றபொழுதிலக்கமுடனொன்பதுவீரருஞ்சூழ... ... ...*
வெற்றிபுனையருட்குமரவேளிருந்தபடிநோக்கி ... ... *
மற்றிவணங்குறைமுடிக்கவல்லவனென்றெல்லோரு ... ... *
நற்றிருத்தாளிணைவணங்கநம்பெருமானவின்றருள்வான்... ...*

(இ-புரை.) நாரதர்முதலானவர்கள்அவ்விடத்திற்போனபோது லக்ஷம்வீரர்களுடன் ஒன்பது வீரர்களுஞ் சூழவெற்றிமாலையணிந்த அருட்குமாரசுவாமியங்குவீற்றிருந்ததைப்பார்த்து-இவர்நம்முடைய குறையைநிறைவேற்றத்தக்கவல்லமையுள்ளவரெனக்கருதி முருக்கடவுளது நல்லதிருவடியைப்போற்றிசெய்தார்கள்அப்போது அவர்களைப்பார்த்து நம்முடைய இறைவர்சொல்லுகின்றார்.—(எ-று) (௮௪)

நொந்தனைந்தீர்புகுந்தபடி நுவன்றிடுதிரென்றருள.... ... *
சிந்தைமகிழ்ந்தொருவேள்விசெய்யவொருசெச்சையதில்.. ...*
வந்ததுமையிங்கடநினைபமகந்தணந்துவந்தனமவ். ... ... *
வெந்தகர்மண்ணுயிர்களொடுவிண்ணுயிர்கொன்றுலவியதே ...*

(இ-புரை.)தேவர்களேநீங்கள்வருந்தியிங்குவந்தீர்கள்- வந்தகாரியத்தைச்சொல்லுங்களென்றுசுப்பிரமணியக்கடவுள்திருவாய்மலர்ந்தருளினார்அவர்கள்மனமகிழ்ந்து நாரதமுனிவரொருயாகஞ்செய்தார்அதனிடத்தில்ஒருஆட்டுக்கடா உண்டாகியெங்களைக்கொல்லநினைந்தது ஆதலாலந்தயாகத்தைவிட்டு இங்கு அடைக்கலமாக வந்தோம்கொடுமையுள்ள அவ்வாடுமண்ணுலகத்துயிர்களையும்விண்ணுலகத் துயிர்களையுங் கொன்றுதிரிகின்றது.—(எ-று.) (௮௫)

வெய்யவதனடலடக்கிவேள்விமுடித்தடியேங்க ... ... ...*
ளுய்யவளித்தருளெனவேயுயர்வீரவாகுவைப் பார்த் ... ... *
தையவதுதனைப்பிடித்திங்கணேதியெனவவனேகிக் ... ...*
கையில்விறற்றகர்பிடித்துக்கந்தனிடைவந்தனனே ... ... *

(இ-புரை.) கொடியதாகிய அதன்பலத்தையடக்கியாகத்தைநிறைவேற்றி அடியேங்களுய்யும்படி ரக்ஷித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள்சுவாமிமேம்பாடுடையவீரவாகுதேவரைப்பார்த்துஐயாநீபோய் அந்தக்கடாவைப்பிடித்துக் கொண்டிங்கேவாவென்று கட்டளையிட்டருளினார்அவ்வாறேவீரவாகுதேவர்சென்றுதமது கையினாலந்தஆட்டைப்பிடித்துக்கொண்டுஸ்கந்தமூர்த்தியினிடத்துக்குவந்தார்.—என்றவாறு. (௮௬)

அத்தகரைப்பரியாக்கொண்டவர்வேள்விசெயவிடுத்து... ... *
வித்தகனுமுருகேசன்விளையாடியமர்நாளிற் ... ... ... ...*
றத்தைமொழிக்கலைமாதுதலைவனுயர்கயிலையடைந் ... ... *
தத்தனடிபணிந்துபுறத்தணிவாயிலிடையடைந்தான் ... ...*

(இ-புரை.) அந்த ஆட்டை வாகனமாக ஆரோகணித்துக்கொண்டு அவர்கள்யாகஞ்செய்யும்படிஅனுப்பிவிட்டுச்சர்வகாரணராகியமுருகே

க்கடவுள் திருவிளையாடல்செய்துகொண்டிருக்கும்நாளில் கிளிமொழி போலுமினிய மொழிவசனிக்கும்சரஸ்வதிகணவனாகியபிரமதேவன்ஊழிதோறுமோங்குகின்றகயிலையங்கிரியில்அடைந்து பரமசிவனதுதிருவடியைவணங்கிப்புறத்திலிருக்கும் அலங்காரமுள்ள கோபுரவாயிலினிடத்துவந்தான்.—(எ-று-) (௮௭)

ஆலயத்தின்முன்பிருந்தவணிமணிக்கோபுரத்தலத்தில்... ... *
கோலமுடனிருந்தருளுங்குமரவேள்கண்டருளி ... ... ...*
ஞாலமளித்திடுவோனை நம்முன்வருகெனவேகிச்... ... ... *
சீலமுறப்பணிந்திடுதல்செய்யாமற்பரவுதலும் ... ... ...*

(இ-புரை) பரமசிவன் வீற்றிருக்கும் ஆலயத்துக்கு முன்பிருக்கும் மணிகள்பதிக்கப்பட்ட கோபுரவாயிலினிடத்து அலங்காரத்துடனிருந்தருளும் குமாரசுவாமியானவர்பார்த்தருளி இவ்வுலகத்தைச் சிருஷ்டிக்கும் அந்தப்பிரமனை நம்மெதிரில் வாவென்றழைத்தருளினபோது அவன் சென்று முறைமையுடன் தாழ்ந்துவணங்காமல் நின்றபடி நமஸ்காரஞ் செய்தான்.—(எ-று) (௮௮)

ஏதுபுரிவாயென்னயான்படைப்பேனெனவருமோ ... ...*
வேதமெனவருமென்னவியனிருக்குவிளம்பென்ன ... ... *
வாதியினிற்றடிலையெடுத்தறைகுதலுமதன்பொருளை ... ...*
யோதியபின்றெனவேயோதினனுமையாலன் ... ... *

(இ-புரை.) நீயென்னதொழில்செய்வாயென்று சுவாமிவினவியவளவில்யான்சிருஷ்டிசெய்கிறவனென்று பிரமதேவன்சொன்னான்-ஆனால் உனக்குவேதந்தெரியுமாவென்று சுவாமிவினவினார்- தெரியுமென்றான்-சுவாமிமேன்மைபொருந்திய ருருக்குசொல்லென்றார் - பிரமன் ஆரம்பிக்கும்போது பிரணவத்தைச்சொல்லிப்பின்பு-ருக்குசொல்லென்றுசுப்பிரமணியக்கடவுள் உத்தரவுசெய்தருளினார்.—(எ-று) (௮௯)

மன்னுகுடிலைப்பொருளையறியாமன்மயங்குதலுங் ... ... *
கொன்னுடையநரசிங்கக்குட்டிதலைக்குட்டியுதைத்... ... ...*
தின்னலுறக்கந்தவெற்பிற்சிறையிடுவித்ததிலேகி ... ... *
யன்னநடையுமைபாலனாவிகள்பன்னாட்படைத்தான்... ... ...*

(இ-புரை.) நிலைமையாகிய பிரணவப்பொருள் தெரியாமல் பிரமதேவன்மயங்கினவளவில் அன்னநடைபோன்ற நடையினையுடைய உமாதேவியின்புத்திரராகிய சுப்பிரமணியசுவாமியானவர் பெருமையுள்ளந

ரசிங்கமூர்த்தியின் மகனுகியபிர்ம்மதேவன்தலையிற்குட்டி புடைத்துஅவ ன்துன்பமுறும்படி கொண்டுபோய்க் கந்தவெற்பிற்சிறையிடும் படிக ட்டளையிட்டுத்தாமும் அம்மலையிலெழுந்தருளி உயிர்களை நெடுநாள் ப டைத்தருளினுர்.—(எ-று.) (கூ௰)

அங்கதுபின்னொருநாளிலண்டரொடுமுனிவரொடுஞ் ... ...*
செங்கண்மால்கயிலைநெடுஞ்சிலம்படைந்துநந்திவிடச். ... *
சங்கரனைப்பணிந்தயனைச்சண்முகத்தோனிட்டசிறை ... ...*
தங்கள்பிரான்றவிர்த்தியெனநந்தியொடுநவின்றருள்வான் ... *

(இ-புரை.) அதன்பின்பொருநாளில்தேவர்களுடனும் முனிவர்க ளுடனும் விஷ்ணுவானவர் ஓங்கியகயிலாசகிரியில்அடைந்து நந்திதேவ ர்விடஉள்ளேசந்நிதானத்திற்போய்ப் பரமசிவனைவணங்கி யெம்மிறைவ னேஆறுமுகக்கடவுள் பிரமதேவனையிட்டசிறையை விடுவித்தருளவேண் டுமென்றுவிண்ணப்பஞ் செய்ய - சுவாமி நந்திதேவருடன்சொல்லுகின் றுர்.—(எ-று.) (கூக)

வென்றியுறுகுமரனிடைமேவியாம்விடச்சொன்னே ... ...*
மென்றுவிதிசிறைவிடுவித்திங்கணைவாயெனவெதிர்போய் ... *
நின்றிதனைப்புகன்றிடலுநின்றிடிலிங்குன்றனையு ... ... ...*
மின்றுசிறைபடுத்திடுவமென்றிடமீண்டிறைக்குரைத்தான். *

(இ-புரை.) நீ-வெற்றிபொருந்திய குமரனிடத்திற்போய் நாம்விட ச்சொன்னேமென்று பிரமன்சிறையைவிடுவித்து இங்குவா வென்றுகட் டளையிட்டருளநந்திதேவர்போய்ச் சுப்பிரமணியசுவாமியெதிரில்நின்று இந்தவார்த்தையைச்சொன்னவளவில் இனியிங்கு நீநிற்பையாகிலின்றுஉ ன்னையும் சிறைபடுத்துவமென்று சுப்பிரமணியசுவாமி சொல்ல அந்தவா ர்த்தையைக்கேட்ட நந்திதேவர்பயந்து திரும்பிவந்து பரமசிவனுக்குவி ண்ணப்பஞ்செய்தார்.—(எ-று.) (கூஉ)

இந்தமொழிகேட்டுநகைத்தேறேறிக்குமரனுறு ... ... ...*
கந்தமலைப்புகுந்திடலுங்கழல்பணிந்தென்வந்ததென ... ... *
வந்தணனைவிடுத்திடெனவது செய்யேனெனச்சினம்போ. ... *
லந்தமிலானேதுதலுமயன்றனைமுன்புறவுய்த்தான். ... ... *

(இ-புரை.)பரமசிவன்இந்தவார்த்தையைக்கேட்டுநகைத்தருளி ரிஷ பவாகனத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டு- குமாரசுவாமி வீற்றிருக் கும் கந்தமலைக்கெழுந்தருளினுர்-குமரவேள் அதைக்கண்டுதிருவடிகளை

வணங்கித் தேவரீரிவ்விடத்துக் கெழுந்தருளியதென்னவென்று வினவுத லும் பிரமனைவிட்டுவிடு என்றுசொல்லினர் - முருகக்கடவுள் அவனை நான்விடமாட்டேனென்ன முடிவில்லாத பரமசிவன் கோபங்கொண்ட வர்போல் அவனைவிட்டுவிடென்றுசொன்னவுடன் முருகக்கடவுள் பிரம தேவனைப்பரமசிவன் எதிரில்கொண்டுவந்துவிடச்செய்தருளினார்.(எ-று.

அந்தணனுக்கருள்புரிந்தேயமுமுருகனைக்கவானிடைவைத் ...*
துந்துகுடிலைப்பொருணீயுரைத்தியெனவுரைத்ததுகேட் ... *
டெந்தைமகிழ்ந்தருங்கயிலையெய்தினன்குறுமுனிக்குச்... ...*
சுந்தரமூலப்பொருளைச்சொல்லினன்குமரேசன் ... ... *

(இ-புரை.) சிறைமீண்டுவந்தபிரமதேவனுக்குப்பரமசிவன் அருள் புரிந்து அனுப்பிவிட்டு ஆறுமுகக்கடவுளைத்தமது தொடையின்மேல் வைத்துக்கொண்டு ஓதுகின்றபிரணவத்தின்பொருளைநீசொல்லென்றுவி னவினவளவில் முருகக்கடவுள்பிரணவத்தின்பொருள்சொன்னதைக்கே ட்டுமகிழ்ந்து பரமசிவன் கயிலாயத்துக்கெழுந்தருளினார் - அதன்பின்பு ஒருநாள் அகஸ்தியருக்கு அழகுள்ள பிரணவப்பொருளை முருகேசர் உபதேசித்தருளினார்.—(எ-று.) (கூச)

[வேறு.]

அணியார்முருகேசன்வளர்ந்தடத் ... ... ... ... ... *
அமுதக்கொடிசுந்தரியென்றிருவோர் ... ... ... ...*
தணியாநசையிற்குகனைத்தழுவத் ... ... ... ... ... *
தவமுற்றதுகண்டவர்தங்களுறப் ... ... ... ... ...*
பணியாவெதிர்நிற்பவிரும்பியதென் ... ... ... ... *
பகர்கீரொனவெம்மைமணத்தியெனப்... ... ... ...*
பிணியானதறுத்தெனையாளுமருட் ... ... ... ... ... *
பெருமானவரோடிதுபேசுவனால். ... ... ... ...*

(இ-புரை.) சௌந்தரமுள்ள முருகேசன்வளர்ந்த தடாகத்தினிடத் தில் அமுதக்கொடி-சுந்தரவல்லியென்றுசொல்லப்படுகின்ற இரண்டுமா தர்கள் குறையாதஆசையுடன்முருகக்கடவுளைவிவாகஞ்செய்துகொள்வ தற்காகத்தவம்பண்ணிக்கொண்டிருப்பதையறிந்து அவர்களிடத்தில் எ ழுந்தருளினார்-அம்மாதர்கண்டுபணிந்துஎதிரில்நின்றார்கள் அப்படிஅவ ர்கள்நிற்பதைநோக்கிச் சுவாமியார்நீங்கள் விருப்பங்கொண்டது என்ன வென்றுவினவ - எங்களைவிவாகஞ்செய்துகொண்டருள வேண்டுமென் றுவிண்ணப்பஞ்செய்தவளவில் பிறவிப்பிணியை நீக்கிநம்மையாட்கொ

ண்டருளுஞ் சுப்பிரமணியக்கடவுள் அவர்களுடனிந்தவார்த்தைசொல்லு கிறார்.—(எ-று-) (கரு)

பேரன்புபொருந் தியநுங்கடமைப்... ... ... ... ... ✱
பின்மன்றலியற்று துமவ்வளவுஞ்.... ... ... ... ...✱
சீரிந்திரன்வேடர்கள்பான்மகவாயச்... ... ... ... ... ✱
சென்றேயிருமென்றருளோடுவிடுத் ... ... ... ...✱
தாருந்தொழுகந்தவிலங்கலில்வந்... ... ... ... ... ✱
தணிசேர்கயிலாயமடைந்தரனை ... ... ... ...✱
டேருந்துமையாளைவணங்கியவர்க்... ... ... ... ... ✱
கிடையாகவிருந்தனனெம்பெருமான்... ... ... ...✱

(இ-புரை.) மிகுந்த அன்புபொருந்திய உங்களைப்பின்பு விவாகஞ் செய்துகொள்ளுகிறோம் அதுவரையில் சிறப்புள்ள இந்திரனிடத்திலு ம்வேடர்களிடத்திலும் குழந்தைகளாய்ப்போயிருங்களென்று கிருபை யுடன் உத்தரவுகொடுத்தனுப்பிவிட்டுயாவருந்தொழத்தக்ககந்தமலையி ல்வந்துபின்புஅழகுபொருந்தியகயிலாயத்திற்சேர்ந்து பரமசிவனையும் அழகுபிரகாசித்துக்கொண்டிருக்கும் பார்வதிதேவியாரையும் வணங்கிந ம்மிறைவனாகிய முருகக்கடவுள் அவ்விருவர்மத்தியில் வீற்றிருந்தார்.— (எ-று) (கசா)

அப்போதினிலண்டர்களிந்திரன்மா... ... ... ... ... ✱
லயன்மாகயிலாயமடைந்திடலுந்... ... ... ... ...✱
றப்பாரருணந்திதடுத்துவிடத் ... ... ... ... ... ✱
தோகைக்கொருபாகனையன்பொடுகண் ... ... ...✱
டெப்போதுமிடுக்கண்விளைத்திடுசூ... ... ... ... ... ✱
ரன்போன்புரிதுன்பமிசைத்திடலு... ... ... ...✱
மெய்ப்பார்குகனேடவுணன்றனைநீ... ... ... ... ... ✱
வென்றேவருகென்றுவிளம்பினனே... ... ... ... ✱

(இ-புரை.) அப்படிவீற்றிருக்கும்போது தேவர்களுமிந்திரனும் விஷ்ணுவும் பிரமதேவனும் பெருமைபொருந்திய கயிலாயத்திற்சேர் ந்தவளவில்வன்மைபொருந்தியநந்திதேவர்தடுத்து-சுவாமியினுத்தாரம் பெற்றுக்கொண்டுஉள்ளேசெல்லும்படிவிடஅவர்கள் உமையவளுக்கொ ருபாகனாகியபரமசிவனையன்புடன்தரிசித்துஎப்போதுந் துன்பத்தையு ண்டாக்கிக்கொண்டிருக்கும் சூரபன்மன் என்பவன்விளைக்குந்துன்பங்க ளைநீக்கியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள் அப்போது

மெய்ம்மைத்தன்மையுள்ள குமாரசுவாமியையுங் கயிலாயபதிநோக்கி அந்த அவுணனை நீ வெல்லுவாயென்றுகட்டளையிட்டருளினார்.—(எ-று.)(கஎ)

அப்பான்மைபுரிந்திடுமேவினைமேவ ...*
யடல்சேர்பதினொன்றெனுருத்திரரை ... *
மெய்ப்பார்பதினோர்படையாவருளி...*
வேலொன்றுகுகன்கரமீதுகொடுத்... *
தொப்பானதிலாதவிலக்கர்களோ...*
டொன்பானெனுமுத்தமர்கைத்தலமேற்... *
றப்பார்பலவெம்படையங்கருளித் ...*
துணையாகவுறும்படிசொற்றனனே.... *

(இ-ள்.) அவ்வாறேசெய்கிறேனென்று கந்தசுவாமி சொன்னவளவில் பலமிகுந்தபதினொருவரொன்னும் உருத்திரர்களைத் திண்மையுள்ள ஆயுதங்களாகஎற்படுத்திக்கொடுத்து இதுவுமன்றிஒரு வேலாயுதமும்அவர்கையினிடத்துக்கொடுத்தருளிஒப்பில்லாத லக்ஷத்தொன்பது வீரர்கள் கைகளிலும்பலம்நிறைந்தவெம்படைகளையப்போதே கொடுத்துத் தம்முடையபுத்திரனுக்குத் துணையாயிருக்கும்படி கட்டளையிட்டருளினார்.

இத்தன்மைநிகழ்ந்தபினாறுடனே.. ...*
யெட்டாகியபூதவிராசர்தமைச் ... *
சுத்தன்பரிவோடுதெரிந்தருளித் ...*
தொல்பூதவிராயிரவெள்ளமுட ... *
னத்தம்பதினென்றுடனென்றுடையா...*
னடல்சேர்படையாவுறுமென்றருளி ... *
மெத்துந்திறல்கொண்டிடுமோரிரதம்...*
வேலோனுறநல்கினன்வித்தகனே ... *

(இ-ள்.) இவ்வாறுநடந்தபின்பு பரமசிவன் நூற்றெட்டுப்பூதராசாக்களையும் பரிவுடன் பார்த்தருளி நீங்கள் பழமையாகியஇரண்டாயிரவெள்ளப் பூதங்களுடனேபன்னிரண்டுதிருக்கரங்களுள்ள சுப்பிரமணியனுடையபலம்பொருந்தியபடைஞராயிருங்களென்று கட்டளையிட்டருளிமேன்மையுள்ள வன்மைபொருந்திய ஒருதேர் சுப்பிரமணியசுவாமி ஆரோகணிக்கும்படியருளிச்செய்தார்.—(எ-று) (கக)

இவ்வாறுகொடுத்துமதிச்சடையோ ...*
னேகென்னவலங்கொடிறைஞ்சுதலுஞ் ... *
செவ்வானுரமீதிலணைத்தருளிச் ...*
சீர்தங்கியநாரிதிருக்கரமேன்.... *

மைவாழ்வுறுகண் டனளித்தருள ... ... ... ... ... ...*
மாதன்பின்வயிற்றிலணைத்திமைபோ. ... ... ... *
ருய்வானவுணப்படைமுற்றுமழித். .. ... ... ... ...*
துறுவாயிவணென்னவுரைத்தனளால் ... ... ... *

(இ-பு.) சந்திரனையணிந்த சடைமுடியையுடையபரமசிவன்இவ்வாறு இரதங்கொடுத்தருளிப்போய்வாவென்றுத்தரவு செய்தவளவில் சுப்பிரமணியசுவாமியானவர்வலம்வந்து பணியச் செவ்வானம்போன்ற தமதுதிருமார்பில் அணைத்துக்கொண்டு சுவாமி பெருமைபொருந்திய பார்வதிதேவியார் திருககரத்திலவிஷம்பொருந்தியகண்டத்தையுடைய பரமேஸ்வரர்கொடுத்தருளினர் பார்வதி தேவியார்வாங்கி அன்புடன்வயிற்றிலணைத்துக்கொண்டுதேவர்கள்பிழைக்கும்படி- அவுணப்படை முழுவதையும்அழித்துமறுபடி யிவ்விடத்துககு வரக்கடவை யென்றுஅருளிச்செய்தார்.—(எ-று.) (௩)

ஈதம்மையிசைத்திடலுந்தொழுதே..... ... ... ... ... *
யிருவோரையுமன்புடனேவிடைகொண் ... ... ...*
டோதும்புகழ்வேலனகன்றுயர்தே .... ... ... ... ... *
ருற்றன்ப துபேருமிலக்கர்களு ... ... ... ...*
மேதந்தவிர்சாரதமன்னவரு ... ... .. ... ... ... *
மிமையோருமிராயிரவெள்ளமெனும்... .. ... ...*
பூதங்களுமெங்கணுமங்கணுகிப் ... .. ... ... ... *
புடைசூழவடைந்தனனம்புவிமேல் ... ... ... ...*

(இ-புரை.) பார்வதிதேவியா ரிந்தவார்த்தைசொன்னவுடன் வேதங்களாற்சொல்லப்பட்ட புகழுள்ள வேலாயுதக்கடவுள் அன்புடன் தாய்தந்தையரைத்தொழுது விடைபெற்றுச்சென்று உயர்ந்ததேரில் ஆரோகணித்துக்கொண்டு லக்ஷத்தொன்பது வீரர்களுங்குற்றம்நீங்கிய பூதராசர்களும் தேவர்களும் இரண்டாயிரம்வெள்ளமாகியபூதர்களும்அங்குவந்து நாலுபுறமுஞ் சூழத்தக்கதாக அழகுள்ள பூலோகத்திற்சென்றருளினர்.

[வேறு.]

பாருலகமீதி லுமைபாலன்வருபோதிற் ... ... ... ...*
றாருக்னெனும்பெயர்தரித்தவொருவெய்யோ ... ... *
னோரணமானகிரவுஞ்சகிரிகண்டார் ... ... ... ...*
வீரமுறுவேலனயன்மேவிவருவிண்ணோர்... ... ... ... *

(இ-புரை.) சுப்பிரமணியக்கடவுள் பூலோகத்தினிடத்தில்வரும்போது தாருகாசுரனென்கிறபெயர்பெற்ற ஒருகொடியவன் ஒப்பற்ற கா

வலாகிய கிரவுஞ்சகிரியை வீரம்பொருந்திய வேலாயுதக்கடவுளருகில்சூழ்ந்துவருகிறதேவர்கள்கண்டார்கள்.—(எ-று.) (௱௨)

கண்டனர்வெருண்டனர்கலங்கினரிடுக்கண் ... ... ... ...*
கொண்டனருளங்குலைகுலைந்தனர்தளர்ந்தார் ... ... ... *
திண்டிறல்கொள்வேலனிருசேவடிவணங்கி.... ... ... ...*
யண்டர்புகழ்நாரதனறைந்திடுதலுற்றான் ... ... ... ... *

(இ-புரை.) கண்டுபயந்துமனங்கலங்கித்துன்பங்கொண்டு உள்ளங்குலைந்து தளர்ந்தார்கள் - தேவர்கள்புகழும் நாரதமுனிவர் திண்மையும் வெற்றியுமுள்ள வேலாயுதக்கடவுளுடைய இரண்டுதிருவடிகளையும் வணக்கிச்சொல்லலுற்றார்.—(எ-று.) (௱௩)

உற்றகிரியீதுகிரவுஞ்சமிதிஞோர்சார் ... ... ... ... ...*
மற்றுநிகரற்றதொருமாயநகரூமே.... ... ... ... ... *
சுற்றவுணர்சேனையொடுசூரிளையலாகும்.... ... ... ... ...*
வெற்றிபுனைதாருகன்விருப்புடனிருப்பான் ... ... ... *

(இ-புரை.) இங்கிருக்குமிந்த மலையானதுகிரவுஞ்சமென்னும் பெயருள்ளது இதனொருபுறத்திலேவேறொன்றுந்தனக்கொப்பில்லாத மாயாபுரியென்னொரு நகரமிருக்கின்றது அதற்குள்ளே சூழ்ந்தஅவுணர் சேனைகளுடன்சூரன்தம்பியாகிய வெற்றிபொருந்திய தாருகனிருக்கின்றான்

வென்றியுறவின்றிவனைவென்றிடவையாயின் ... ... ... ...*
வன்றிறல்கொள்சூரனைவதைப்பதெளிதென்னத் ... ... *
துன்றுகதிர்வேலன்முனிசொன்னவைவினவிச் ... ... ...*
சென்றிவனதாருயிர்சிதைத்திடுதுமென்றான் ... ... ... *

(இ-புரை.) செயம்பொருந்தும்படி இவனையின்றுவென்றிடுவீராலுல்வலியதிறல்கொண்ட சூரனைக்கொல்லுவதெளிதென்றுசொல்ல ஒளிபொருந்தியவேலாயுதக்கடவுள் நாரதர்சொன்னவார்த்தையை விஞவினாம் சென்றிவனுடைய உயிரைக்கொல்லுகிறோமென்றார்.—(எ-று.)(௱௫)

என்றுபினடற்பெறுமெழிற்புயனைவேலோ ... ... ... *
னன்றெடுதெரிந்திவையநாகமதிஞோர்சார் ... ... ... ...*
வென்றியுளமாயநகர்மீதவுணரோடும் ... ... ... ... *
வன்றிறல்கொடாருகன்வயத்தொடுவதிந்தான்... ... ... ...*

(இபுரை.) இவ்வாறுசொன்னபின்பு வேலாயுதக்கடவுள் அழகுள்ள வீரவாகுதேவரைக்கிருபையுடன்பார்த்து இந்தமலைக்கொருபுறத்தில்வெற்றியுள்ள மாயாநகரத்தினிடத்தில் அவுணர்களுடன் வலியதிறல்கொண்டதாருகனென்பவனிருக்கிறான்.—(எ-று.) (௱௬)

அம்புவியழுந்தவருமாயிரநல்வெள்ளத் ... ... ... ...*
தும்பர்தொழுசாரதருவர்க்கிறையினேருன் ... ... ... *
றம்பியர்களோடுமிகுதானவர்களோடு .. ... ... ... ...*
மொய்ம்பொடுசெருப்புரியமுந்துபடலொன்றான் ... ... *

(இ-புரை.) சண்டைசெய்யஅழுகுள்ளஇந்தப்பூமிஅழுந்தும்படிவருகிறநன்மைபொருந்தியஆயிரவெள்ளமென்னும்பூதர்களுடனும்தேவர்கள்தொழும்படியானஅவர்களுடையஇராசர்களுடனும்உன்தம்பிமாருடனும் பலமுள்ள தானவர்களுடன் பலத்தோடும் போர்செய்ய நீமுன்னேபோவென்றுகட்டளை யிட்டருளினார்.—(எ-று.) (௩௭)

என்னவிதுநன்றெனவிறைஞ்சிமுருகேசன்... ... ... ...*
றன்னைவிடைகொண்டினியதம்பியர்களோடு ... ... ... *
மின்னுகதிர்வேலனருள்வீரிரதமேறி ... ... ... ... ...*
மன்னுபடையோடவுணன்மாயநகருற்றான் ... ... ... *

(இ-புரை.) நீமுன்னேபோவென்று சுப்பிரமணியசுவாமிகட்டளையிட்டதைக்கேட்டவீரவாகுதேவர் இதுநமக்குப்பாக்கியமென்று சுவாமியிடத்தில்விடைபெற்றுக்கொண்டு இனியவர்களாகியதம்பிகளுடனும்பிரகாசிக்கும்வேலாயுதக்கடவுள்அருளியபெரியதேரின்மேலேறித்தம்மைச்சூழ்ந்திருக்கும்பூதசேனையுடன்தாருகாசுரனுடையமாயாபுரியிற்சேர்ந்தார்.-

ஒற்றறிதுசொற்றிடவுணர்ந்தவுணர்மன்னன் ... ... ... *
செற்றமிகவுளவொருதேரின்மிசையேறித் ... .. ... ...*
சுற்றவனிகங்கள்புடைசுற்றவெதிருற்று... .. ... ... *
னற்றமறுபூதருமவற்கெதிர்புகுந்தார் .. ... ... ... ...*

(இ-புரை.) தூதர்களிதனையறிந்து போய்ச்சொன்னார்கள் அவுணர்க்கரசனாகிய தாருகனறிந்துகோபம் அதிகமாயுண்டாகஒருதேரின்மேலேறிக்கொண்டு நெருங்கியதன்படை புடைசூழ்ந்துவரும்படிஎதிர் சென்றான்குற்றம்நீங்கியபூதருமவனுக்கெதிரடைந்தார்கள்.—(எ-று.) (௩௯)

தெண்டிரைகடுத்தவிருசேனையுமெதிர்ந்தே ... ... ... ...*
மண்டுபடைசிந்தியமர்வல்லைபுரிபோதிற்... ... ... ... *
சண்டமிகுதானவர்கள்சாரதர்கடம்மா. ... ... ... ...*
லொண்டிறலிழந்துதொலைவுற்றனர்களன்றே... ... ... *

(இ-புரை.) சமுத்திரத்தையொத்தஇருசேனையும் எதிர்ந்து தங்கள் கையிலிருக்கும் படைகளைவிட்டு விரைவாகச்சண்டைசெய்யும் போது வேகமிகுத்த தானவர்கள் பூதர்களால்விளக்கமாகிய தங்கள்பலமிழந்து ஓடிப்போனார்கள்.—(எ-று.) (௩௰)

வாரணமுகத்தவுணர்மன்னனிதுகண்டே ... ... ... ...*
தேரினுமிறங்கியொருதிண்கதைபிடித்தே ... ... ... *
பாரிடர்கள்பாரிடைபதைப்புறவதைப்ப ... ... ... ...*
வேருறுமிலக்கருமெதிர்ந்துசமர்செய்தார் ... ... ... *

(இ-புரை.) யானைமுகமுள்ள தாருகனிதனைப்பார்த்துத்தேரைவிட்டிறங்கிப்பலமுள்ளஒருதிண்ணியதண்டாயுதத்தைப்பிடித்துக்கொண்டு. பூதர்கள் பூமியிற்பதைக்கும்படி வதைக்கும்போது அழகுபொருந்திய லக்ஷம்வீரர்களுமெதிர்ந்து போர்புரிந்தார்கள்—(எ-று.) (ஙயக)

போரினிலெதிர்ந்துழிபுழைக்கைகொடுசுற்றி.. ... ... ...*
வாரியிலெறிந்தனனெழுந்துபினும்வந்தா ... ... ... *
ரோருலவுகோளரியெதிர்ந்துகணைநூறுற் ... ... ... ...*
கோரவவுணன்றன்மகுடத்தைவிழவெய்தான் ... ... ... *

(இ-புரை.) அவ்வாறுயுத்தத்திலெதிர்ந்தபோது அவர்களைத்தாருகன் தன்துதிக்கையினாற்சுற்றியெடுத்துச்சமுத்திரத்திலேறிந்தான்அதில்போய்விழுந்தவர்கள்மறுபடியும் எழுந்துவந்தார்கள் அவர்களில் அழகுள்ள வீரகேசரியென்பவன்எதிர்ந்து நூறுபாணத்தினால்கோரமாகியதாருகன் மகுடம்விழும்படியெய்தான்.—(எ-று.) (ஙயஉ)

சென்னிமுடிவீழ்ந்தலுமொர்திண்கதையெறிந்தே... ... ...*
பொன்னிரதமீமிசைபுகுந்தனனெதிர்ந்தான் ... ... ... *
மன்னுகதைபட்டிடமயங்கவதுகண்டே ... ... ... ...*
துன்னுவிறல்கொண்டுவளர்தோளினனெதிர்ந்தான் ... ... *

(இ-புரை.) தன்சிரசிலிருந்தகிரீடம் விழுந்தவளவில்திண்மையான ஒருகதையைஅந்தவீரகேசரிமேலெறிந்து பொன்னாற் செய்யப் பட்ட தன்தேரிலேறிக்கொண்டெதிர்த்தான் பொருந்தியஅந்தக்கதாயுதம்பட்டவளவில்வீரகேசரிமயங்கஅதுகண்டு அழிவில்லாத பலங்கொண்டுவளர்கின்றதோளுடைய வீரவாகுதேவரெதிர்ந்தார்.—(எ-று.) (ஙயங)

வந்தெதிர்புகுந்ததிறல்வாகுமிசைவெய்யன் ... ... ...*
சுந்தரவிறற்கொளொருசூலமதுகைத்தா... ... ... ... *
னுந்தெழிலுரத்தினிடையுற்றிடலுமீசன் ... ... ... ...*
மைந்தனிளையோன்மிகுவருத்தமொடுநின்றான் ... ... *

(இ-புரை.) வந்துஎதிரில்நேரிட்டவெற்றிபொருந்தியவீரவாகுதேவர்மேல் கொடியவனானதாருகன் சுந்தரமும் பலமுமுள்ள ஒருசூலாயுதத்

னையேவினன்அது அழகுபரந்ததன்மார்பில்பட்டவுடன்முருகக்கடவுள் தம்பியாகியவீரவாகுதேவர்மிகுந்தவருத்தமுடனின்றார்.--(எ-று.)(௱௰௪

[ஈசன்மைந்தன்-சிவன்புத்திரன்.]

மொய்ம்புடையவாகுமிகுமோகமொடுநின்றேழ் ... ... ...*
தம்பியரெதிர்ந்துடைவதானதுதெரிந்தே... ... ... ... *
வெம்பதகன்றன்பனுகவெய்யனுமெதிர்ந்தா ... ... ...*
னம்புமழைசிந்தியிருவோருமமர்செய்தார் ... ... ... *

(இ-புரை.) பலமுள்ளவீரவாகுதேவர் மிகுந்தசோபத்துடனின்று தன்னேழுதம்பிமார்வந்தெதிர்த்துத்தோற்றுப்போவதானசெயலையறிந்து கொடியபாதகனுகியதாருகனெதிர்அடைந்தார்-அந்தவெய்யனுமெதிர்த்தான்இவ்வாறிருவர்களுமெதிர்ந்துபாணவருஷம்பொழிந்து போர்செய்தார்கள்.--(எ-று.) (௱௰௫)

பொற்சகடமீதிலுறுபுல்லனதுபோதின் ... ... ... ...*
விற்சமர்புரிந்திவனைவெல்வதரிதென்றே ... ... ... *
கற்பொருவுதோளுடையகாளைமிசைசெல்ல... ... ... ...*
விற்குலவுமும்பர்கள்விறற்படைகள்விட்டான்... ... ... *

(இ-புரை) அவ்வண்ணம்போர்செய்யும்போது-பொன்னுலாகியதேரின்மேலிருக்கும் தாருகன் இவ்விதவிற்சண்டைசெய்திவனைவெல்வதரிதெனக்கருதிமலையொத்ததோளுடைய வீரவாகுதேவர்மேல் செல்லும்படி ஒளிபொருந்தியபலமுள்ளதேவாஸ்திரங்களையேவினன். (எ-று)(௱௰௬)

விட்டிடலுமப்படைகள்விட்டருளிவெய்யன்... ... ... .. *
றொட்டபடைமுற்றுமிகுதுண்டமதுகண்டான்... ... ... *
மட்டிலுருவங்கொடுவளைந்துசமராடக்... ... ... ... ...*
கட்டழகுகொண்டதொருகாளையிதுசெய்தான்... ... ... *

(இ-புரை.) இவ்வாறுதாருகன் தேவாஸ்திரம்விட்டவுடன் மிகுந்த அழகுள்ள வீரவாகுதேவர் அவன்விட்ட அஸ்திரங்களுக்குச்சரியானஅஸ்திரங்கள்விட்டு அந்தக்கொடியவன் விட்டஅஸ்திரங்களையெல்லாம்துண்டமாக்கினர் அதற்குமேல் அவன்மாயையினால் அளவில்லாததாருகனுகஉருவங்கொண்டுபோர்செய்தான் அதுகண்டுமிகுந்தஅழகுள்ளகாளையாகியவீரவாகுதேவரின்னதுசெய்தார்.—(எ-று.) (௱௰௭)

மெத்துமுருவத்தவுணன்மீதுவிடவீர .. ... ... ... ...*
பத்திரநெடும்படைபரித்திடலுமாயக் ... ... ... ... *
கொத்தறவவன்றனிமைகூடியொருபாயஞ்... ... ... ...*
சித்தமிசைகொண்டுகிரவுஞ்சகிரிசென்று,... ... ... ... *

(இ-புரை)வீரவாகுதேவர்என்னசெய்தாரெனில்-மேன்மையுள்ளபலவுருவங்கொண்டதாருகன்மேலேவுதற்கு வீரபத்திராஸ்திரமெடுத்தார் அதையெடுக்கக்கண்டவளவிலமாயைக்கூட்டம் நீங்கிவிட்டது அது நீங்கினவுடன்அவன்முன்போலொரு உருவமாகநின்றுமனதினிடத்தி லோருபாயஞ்சிந்தித்துக்கிரவுஞ்சகிரியிற்சென்று.—(எ-று.) (௱௰அ)

மற்றதினொளித்திடலும்வாகைபுனைவாகு ... ... ... ...*
சுற்றமொடுதம்பியர்கடோன்முகனொளித்த ... ... ... *
பொற்றைபுகவாண்டுமயல்பூண்டனர்கிடந்தா.. ... ... ...*
ரற்றமறுசூரிளவலன்னது தெரிந்தான். ... ... ... ... *

(இ-புரை.) அவ்வாறுசென்றவன் அந்தமலையிலொளித்துக் கொண்டவளவில் செயம்பெற்றவீரவாகுதேவர் பூதப்படைமன்னவரும்தன்சகோதரர்களும்மற்றதம்பியர்களாகியலக்ஷம் வீரர்களும்பின்வரும்படி சென்றுயானைமுகத்தாருகனொளித்தமலையிற்சேரவே அவ்விடத்தில்அந்தக்கிரவுஞ்சகிரியின்மாயையினால்வீரவாகுதேவரும் அவருடன்சென்றவர்களும்மயக்கங்கொண்டிருந்துவிட்டார்கள்அதனைச்சோரவற்றதாருகன் அறிந்தான்.—(எ-று.) (௱௰௯)

தெரிந்துமகிழ்வாகியொருதேரின்மிசையேறி.. ... ... ...*
யருந்திறல்கொடண்டமொடமர்க்களமடைந்தே.. ... ... *
விரிந்துசெறிபூதர்மிசைவெங்கணைகள்சிந்த ... ... ... ...*
விரிந்தனர்களும்பரினுமிம்பரினுமன்னோர்.. ... ... ... *

(இ-புரை.) தாருகனதனையறிந்து மகிழ்ந்து ஒருதேரின்மேலேறி அருமையாகிய பலங்கொண்டசேனையுடன் யுத்தகளத்திற்போய்ப் பரவி நெருங்கியிருக்கும் பூதர்கள்மேல் வெவ்வியபாணங்களையேவ அவர்கள் ஆகாயத்திலும் பூமியிலுமாக ஓடிப்போனார்கள்.—(எ-று.) (௱௨௰)

நண்ணினையகண்டுபுகழ்நாரதனெனும்பேர்ப். ... ... ...*
பண்ணவனிடர்க்கொடுபடர்ந்தமரர்செய்த. ... ... ... *
புண்ணியமுறைநதுழும்பாருந்துயடிதாழூஉ ... ... ...*
விண்ணவர்மெலிந்திடவிளைந்தனவிளம்ப... ... ... ... *

(இ-புரை.)புகழுடையநாரதனென்னும்முனிவர் அங்கேபொருந்தியவிச்செய்கையைப்பார்த்துத்துன்பங்கொண்டு அவ்விடம்விட்டுப்போய்த்தேவர்கள் செய்தபுண்ணியம்போன்ற குமாரசுவாமிவீற்றிருக்குமிடத்திற்சேர்ந்து அவர்திருவடிகளைவணங்கித்தேவர்கள்மெலியும் படிபோர்க்களத்தில் விளைந்தகாரியங்களைச்சொன்னார்.—(எ-று.) (௱௨௰௧)

அங்கதைவிருவியெமையாளுடையசெவ்வே... ... ... ...*
ளிங்கவனை நூறுவனிறைப்பொழுதிலென்றே ... ... ... *
துங்கமுறுபூதர்கடுவன்றியயல்சுற்றச் ... ... .. ... ...*
செங்குருதிதங்கியசெருக்களமடைந்தான்.... ... ... ... *

(இ-புரை.) நம்மைப்பாட்கொள்ளும்முருகக்கடவுள் அவர்சொல்லிய தைத்திருச்செவியுட்கொண்டு இந்தத்தாருகனைக்ஷணப் பொழுதிற்கொல்லுவேனென்றுபலம்பொருந்தியபூதர்கள்நெருங்கித்தம்மயலிற்சூழ்ந்துவரச்செம்மைநிறமுள்ளஉதிரந்தங்கியபோர்க்களத்திற்சேர்ந்தார்,-(எ-று.

ஈடுசெறிபூதருமிருந்தகுவரியாருஞ் ... ... ... ... ...*
சாடுசமராடமிகுதானவருடைந்தே... ... ... ... ... *
யோடவதுகண்டனனுருத்தவுணர்மன்ன ... ... ... ...*
னீடியகரத்துறுநெடுஞ்சிலைவளைத்தான் ... ... ... ... *

(இ-புரை.)பலம்பொருந்திய பூதர்களும் பெருங்கூட்டமாகிய அவுணர்களெல்லாரும் சாடுகின்றபோர்செய்யும்போது மிகுந்தஅவுணர்களீதோற்றுஓடுவதைத்தாருகன்கண்டுகோபித்து நீண்ட வில்லைக்கையிலெடுத்துவளைத்தான்.—(எ-று.) (௱உ௩)

வெங்கணைகளும்பலவியன்படையுநேரே ... ... ... ...*
யங்கணைகணக்குழுவினங்கமுறவுந்திக் ... ... ... ... *
கங்கைமுடியானுதவுகந்தனெதிர்வந்தே ... ... ... ...*
சங்கையில்பவங்குலவுதாருகனுரைப்பான் ... ... ... *

(இ-புரை) அவ்வாறு வில்லைவளைத்த அளவில்லாத பிறவிகளடைந்த தாருகன்வெவ்விதாகிய பாணங்களும் பெரியபலவிதஆயுதங்களும் அங்குவந்திருக்கும் பூதகூட்டத்தின்சரீரத்தின்மேல்படும்படி செலுத்திக்கங்கையணிந்த திருமுடிக்கடவுளீன்றருளியகந்தசுவாமியினெதிரில்வந்து சொல்லுகிறான்.—(எ-று.) (௱உ௪)

மேதகுமரிக்குமலர்மீதிலயனுக்கு... ... ... ... ... ...*
மாதவளவும்பலிறைவற்குமலதிந்நா... ... ... ... ... *
ளாதிபரனுக்குமெமருக்குமமராட ... ... ... ... ...*
வேதுவிலைவந்தபடியேதுமொழியென்றான் ... ... ... *

(இ-புரை.)மேன்மைபொருந்தியவிஷ்ணுவுக்கும் தாமரைப்பூவினிடத்திலிருக்கும் பிரமதேவனுக்கும்வெண்மைநிறமுள்ள பெரியயானையிலேறும் இந்திரனுக்குமேயல்லது பரமசிவனுக்கும்எங்களவர்களுக்கும் போர்செய்யக்காரணமில்லை அப்படியிருக்க நீவந்தகாரணமென்னசொல்லென்றான்.—(எ-று.) (௱உ௫)

நற்றொழில்புரிந்திடுநதிச்சடிலநம்ப ... ... ... ... ...*
னற்றமறுவானவர்களானவர்கடம்மைச் ... ... ... ... *
செற்றமொடுநீவிர்சிறைசெய்ததையுணர்ந்தே ... ... ...*
மற்றமைவிடுத்தனனும்வன்மைவிறல்சிந்த ... ... ... *

(இ-பொ.) குற்றமில்லாததேவர்களை யெல்லாம் கோபத்துடனீங்கள் சிறைவைத்திருப்பதை அனுக்கிரககிருத்தியஞ் செய்கின்ற கங்காநதியையணிந்தசடாமகுடமுள்ளபரமசிவன் திருவுளத்தில் அறிந்து - உங்கள் வலுமையுள்ளவென்றியைக்கெடுக்கும்படி நமக்குக்கட்டளை யிட்டனுப்பினர்.—(எ-று.) பஞ்சகிருத்தியங்களுக்குள்ளும் அனுக்கிரககிருத்தியஞ் சிறந்ததாதலின் அவ்வொன்றையுமீண்டெடுத்துக்கூறினர். (௱௨௬)

என்றுபலவேலவனிசைத்தமொழிகேளாச்.... ... ... ... *
குன்றுறழுமொய்ப்புளகொடுந்தகுவர்மன்னன் ... ... ...*
வன்றனுவளைப்பவுமைமைந்தனும்வளைத்தான்... ... ... *
றுன்றிருவருங்கணைசொரிந்தமர்புரிந்தார் ... ... ... ...*

(இ-ள்.) இவ்வாறுபலவாறாக வேலாயுதக்கடவுள் சொல்லியவார்த்தையைக்கேட்டுமலையொத்தபுசங்களுள்ளகொடியஅவுணர்க்கிறைவனான தாருகாசுரன்வலிய வில்லைவளைத்தான் அதுகண்டுபார்வதிபுத்திரரானசுப்பிரமணியக்கடவுளும்வில்வளைத்தருளினார்இவ்வாறுவில்வளைத்தேற்றஇருவரும்பாணங்களைவிட்டுப்போர்புரிந்தார்கள்.—(எ-று) (௱௨௭)

கையன்விடுவெங்கணைகள்கந்தனெதிர்சிந்துந் ... ... ...*
துய்யன்விடுவெங்கணைகள்சூர்துணையகற்றும்.. ... ... *
வையமிசையோர்வெருவவையமிசைநின்றே... ... ... ...*
வெய்யசமரிவ்வகைவிளைத்தனர்வெகுண்டே ... ... ... *

(இ-பொ.) வஞ்சகனாகியதாருகாசுரன் ஏவுகிறகொடியபாணங்களையெல்லாம் அதற்குநேரானபாணங்கள்விட்டுக்கந்தசுவாமி அறுத்துத்தள்ளுவார் - சுவாமிவிடுகின்ற பாணங்களைச்சூரன்தம்பிநீக்கிவிடுவான்- இவ்வகையாகப் பூலோகத்திலிருப்பவர்கள் அஞ்சும்படிதேர்மேலிருந்துகொண்டுகோபித்துக்கொடுஞ் சமர்புரிந்தார்கள்.—(எ-று.) (௱௨௮)

இந்தவகைவிற்சமரியற்றுமதுபோதிற் ... ... ... ... *
கந்தனபுயங்களுளகந்தன்முருகேசன்... ... ... ... ...*
வெந்திறல்கொடாருகன்விடுங்கணைவிலக்கிச் ... ... ... *
சிந்தினனொர்கோடிகணைதீயன்மிசைசெல்ல.... ... ... ...*

(இ-புரை.) இவ்வகையாகவிற்சண்டை செய்யும்போது வச்சிரத்தம்பமொத்தபுசங்களுள்ள முருகேசக்கடவுள் மிகுந்தபலங்கொண்டதாருகன் விடுங்கணைகளையெல்லாம்விலக்கி அந்தத்தியவன்மேல் செல்லும்படி ஒருகோடிபாணங்களையேவினார்.—(எ-று.) (௩௨௯)

கோடிகணைபட்டுழிகொதித்ததினிரட்டி ... ... ... ... *
நீடுகணைவிட்டிடலுநேசமுருகேச ... ... ... ... ...*
ரூடிமிகுகோல்சிதறிநண்ணலன்விடுப்பக.... ... ... ... *
கூடிவருவாளிகள்குறைத்தனனறுத்தே.... ... ... ... ...*

(இ-புரை.)சூரவழியேவியகோடிபாணங்களும் தன்மேல்தைக்கவே தாருகன்கோபித்துநெடிய இரண்டுகோடிபாணங்களைவினான்-நேசமுள்ள முருகக்கடவுள் அதனைநாடி அநேகம்பாணங்கள் விட்டுப்பகைவன் விடச்சேர்ந்துவரும்பாணங்களை அறுத்துக்குறைத்தருளினார்.—(எ-று.)

கன்னியிடநண்ணுமிறைகண்ணில்வருமண்ணல் ... ... ... ... *
பின்னருமிலங்கிருபெருங்கணைதுரந்தே ... ... ... ...*
யின்னல்புரிசூரனிளையானுடலிளைப்பக்... ... ... ... *
கொன்னுறுமுகக்கையொடுகோடுகளறுத்தான் .. ... ...*

(இ· புரை.) பார்வதிதேவியார் தமதிடப்பாகத்திற் பொருந்தியிருக்கும்படியாகியபரமசிவனதுநெற்றிக்கண்ணினிடமாகத் திருவவதாரஞ்செய்த குமாரசுவாமியானவர்மறுபடியும் பிரகாசிக்கும் இரண்டுபெரிய பாணம் விட்டுத்தேவர்களுக்குத் துன்பஞ்செய்யும் சூரன்தம்பியுடலிளைக்கும்படிஅவனுடையபெருமையுற்றமுகத்திற்பொருந்தியதுதிக்கையினையுங்கொம்புகளையும்அறுத்தருளினார்.—(எ—று.) (௩௩௧)

சந்துறுமுகக்கைநெடிதானதனதந்தஞ்.. ... ... ... ...*
சிந்தலுமனத்திடைசினந்தவுணர்செம்மல்... ... ... ... *
வெந்திறல்கொளாயிரம்விறற்கணைவிடுத்தே ... ... ... ...*
கந்தனிரதத்துறுகவின்கொடியறுத்தான் ... ... ... ... *

(இ-புரை.) அழகுபொருந்தியமுகத்தினிடத்திருக்குந்துதிக்கையும்நெடியதானதன்தந்தங்களும் அறுந்தவளவில் அவுணர்க்கரசனானதாருகன்மனதிற்கோபித்துவெவ்வியதான கூர்மையுடன்பலமுமுள்ள ஆயிரம் பாணங்கள்விட்டுக்கந்தசுவாமியின்தேரின்மேலிருக்குங்கொடியை அறுத்தான்.—(எ-று.) சந்தம்எனற்பாலதுவிகாரவகையாற்சந்தெனநின்றது

அப்பொழுதுவேலவனருங்கணைகளெட்டு ... ... ... ...*
மெய்ப்புறவிடுத்தவுணன்விற்றனையொடித்துத்... ... ... *

துப்புடையவாயிரநெடுங்கணை துரந்தே ... ... ... ...*
யொப்பிலவனேறிரதமொல்லை துகள்கண்டான் ... ... ... *

(இ-புரை.) கொடியை அவன அறுத்தபோதுவேலாயுதசுவாமியானவர்அருமையானஎட்டுப்பாணங்கள்யாவரும் அதிசயிக்கும்படியேவித்தாருகன்வில்லையொடித்துப் பின்னும்பலமுள்ள ஆயிரம்பாணங்கள்விரைவாகப்பிரயோகித்து ஒப்பில்லாதஅவன்ஏறிய தேரையுந்தூளாக்கினார்.

தேரழியவேறுமொருதேரின்மிசையேறி...... ... ... ...*
வீரமுறமற்றுமொருவிற்றனையெடுத்தே... ... ... ... *
சீரியகுகன்றனதுதேர்கடவுவான்மே... ... ... ... *
லாரும்வகையாயிரமடற்கணைவிடுத்தான் ... ... ... ...*

(இ-புரை.) தேரழிந்தவுடன் தாருகன்வேறொருதேரிலேறிப்பலம்பொருந்தியவேறொருவில்லுமெடுத்துப்புகழுள்ளசுப்பிரமணியக்கடவுள்தேரைச்செலுத்தும்பாகன்மேல் பொருந்தும்படி வலுமையுள்ள ஆயிரம்பாணம்எவினான்.—(எ-று) (௱௩௪)

மன்னுகணைமேனிபடமாருதம்வருந்த... ... ... ... ...*
வன்னதுதெரிந்துகுகனுயிரநெடுங்கோல்... ... ... ... *
யொன்னவுணர்மன்னனுளத்தினுளழுத்தப், ... ... ...*
பொன்னினிரதத்திடைபுலம்பினன்விழுந்தான்... ... ... *

(இ-புரை) அழிவுபடாதஅந்தப்பாணங்கள்தன்மேல்பட்டவுடன்சாரதியாகிய வாயுதேவன்வருந்தினான் சுப்பிரமணியக்கடவுள்அதைப்பார்த்துத்தேவர்களஞ்சும் தாருகன் நெற்றியில் தைக்கும்படி ஆயிரம்பாணங்களைவினார் அவன்பொன் மயமுள்ளதேரில்புலம்பிக்கொண்டு விழுந்தான்.—(எ-று.) (௱௩௫)

சோரியொடுசோபமொடுசூரிளவல்வீழ ... .. ... ... ...*
வீரமுறவன்படைஞர்வேலனைவளைந்தே ... ... ... ... *
போரதுபுரிந்துழிபொலிந்தகணைதூவிச் ... ... ... ...*
சீரியகுகன்றகுவர்சேனைகளறுத்தான்... ... ... ... ... *

(இ-புரை.) உதிரத்துடனும் சோபத்துடனும் சூரன்தம்பிவிழவே வீரம்பொருந்திய அவன்படைஞர்கள் வேலாயுதக்கடவுளைவளைத்துகொண்டு சண்டைசெய்யும்போது பெருமைபொருந்திய வேலாயுதக்கடவுள் பொலிவுள்ளபாணங்கள்தூண்டிஅவுணச்சேனைகளை அறுத்தருளினார்.—(எ-று.) (௱௩௬)

மைபலதொழிந்திடவெழுந்தவுணர்மன்னன் ... ... ... *
செய்யமுருகன்புடைசிவன்படைசெலுத்தக் ... ... ... ...*
கைகொடுபிடிப்பவதுகண்டுபலமாயை ... ... ... ... *
வெய்யமலையோடுசெயவேலினைவிடுத்தான் ... ... ... ...*

(இ-புரை.) சோபம்நீங்கினவுடன்தாருகனெழுந்துசெம்மைநிறமுள்ள முருகக்கடவுள்மேல்சிவாஸ்திரமேவினான்அதை ஆறுமுகக்கடவுள் கையினாற்பிடித்துக்கொண்டார் அதைப்பார்த்துத்தாருகனும் கிரவுஞ்சகிரியும்பலமாயைசெய்யக்கண்டுசுவாமிவேலாயுதத்தை விட்டருளினார்.

வென்றிபுனையெஃகமதுவிஞ்சைதருகுன்றை ... ... ... *
வன்றிறல்கொடாருகனைவல்லையிலழித்தே ... ... ... ...*
யொன்றுதிறல்வீரரையெழுப்பியுயர்கங்கைச் ... ... ... *
சென்றதனிலாடுபுதிரும்பியதையன்றே ... ... ... ...*

(இ-புரை.) வென்றிபொருந்திய அந்தவேலானது மாயைசெய்யும் கிரவுஞ்சகிரியையும் வலியவென்றிகொள்ளும் தாருகனையும் விரைவாக அழித்துக்கிரவுஞ்சகிரியில்மயங்கியிருந்தபலம் பொருந்திய வீரர்களையெழுப்பிமேன்மை பொருந்தியகங்கையிற்சென்று ஸ்நானஞ்செய்து திரும்பியது.—(எ-று.) (௱௩௮)

வெந்திறல்கொள்வேலதுவிசாகனதுகைமேல் ... ... ... *
வந்தினிதிருப்பவடல்வாகுமுதல்வீர ... ... ... ... ...*
ரெந்தையெதிர்வந்திடவிலங்குமுருகேசன் ... ... ... *
புந்திகள்களிப்பவவருக்கருள்புரிந்தான் ... ... ... ...*

(இ-புரை.) வெம்மையுள்ள வீரங்கொண்ட அவ்வேலானது விசாகனென்றும்ஒருதிருநாமமுள்ளசுப்பிரமணியசுவாமி திருக்கரத்தினிடத்தில்வந்துஇனிதாகவிருந்தது - பலம்பொருந்திய வீரவாகுதேவர்முதலான வீரர்கள்யாவரும்நம்முடையஅப்பராகிய முருகக்கடவுளெதிர்வந்துதொழுதார்கள்பிரகாசிக்கு முருகேசரானவர் அவர்கள்மனங்களுக்குக் களிப்புண்டாகும்படி கிருபைசெய்தருளினார் —(எ-று.) (௱௩௧)

மற்றதுபுனைந்துதிறல்வாகுவைவிளித்தே... ... ... ... *
வெற்றியொடுதாருகனைவிடுத்துழிபிடித்த ... ... ... ...*
வற்றமிலரன்படையவன்கையிலளித்தான்... ... ... ... *
தற்றுமிகுதானவர்கடங்கள்குலகாலன்... ... ... ... ...*

(இ-புரை.) நெருங்கிமிகுந்துள்ள தானவர்கள்குலத்துக்கு எமன்போன்ற சுப்பிரமணியக்கடவுள் அதன்பின்பு வெற்றியுள்ள வீரவாகு

தேவரையழைத்துச் செயத்துடன் தாருகன்விட்டபோது பிடித்தகுற்றமில்லாதசிவாஸ்திரத்தையவர்கையிற்கொடுத்தருளினூர்.—(எ-று)(௱௪௰)

இறந்தமிகுபூதர்களியாரையுமெழுப்பி ... ... ... ...*
நிறைந்தபடைசூழ்தரநிவந்திடுகவந்தப் ... ... ... ... *
பறந்தலைகடந்தடல்கொள்பன்னிருபுயத்தோன் ... ... ...*
சிறந்தவிமயக்கிரியினெல்லையதுதீர்ந்தான்... ... ... ... *

(இ-புரை.) இறந்தவர்களாகிய மிகுந்தபூதர்களெல்லாரையுமெழுப்பிநிறைந்தபடைகள்சூழ்ந்துவரும்படி சென்றுவந்தங்களெழுந்துகூத்தாடுகின்ற போர்க்களத்தை நீங்கிப்பலம்பொருந்தியபன்னிரண்டுபுயங்களுடைய முருகக்கடவுளானவர்சிறப்புள்ளஇமயமலையினெல்லையைக்கடந்தார்.—(எ-று.) (௱௪௧)

தென்றிசையினேகியுயர்தேவகிரிநண்ண ... ... ... ... *
வன்றிறல்கொளாதவன்மறைந்தனனவ்வேலைக்... ... ... ...*
குன்றுதலிலாவனையகுன்றின்மிசைவென்றிப்... ... ... *
பொன்றிகழுமெய்க்குமரபுங்கவனிருந்தான்... ... ... ...*

(இ-புரை.) வெற்றியுடன் பொன்மயமானதாய்ப்பிரகாசிக்கும் வேலாயுதமேந்திய முருகக்கடவுள்அங்கிருந்துபுறப்பட்டுத்தெற்குத்திசைநோக்கிச்சென்று-உயர்ந்ததேவகிரியிற்சேர்ந்தருளினபோது மிகுந்தபலமுள்ள சூரியன்மறைந்தான் மறைந்தவளவில குன்றுதலில்லாத அந்தமலையினிடத்தில்தங்கியிருந்தார்—.(எ-று.) (௱௪௨)

ஆசிலருள்வேலவனையவ்வரையின்விண்ணோர் ... ... ... *
பூசனைபுரிந்தனர்புகன்றவிதுநிற்க... ... ... ... ... ...*
வீசுபுகழுப்பன்முகன்வீடியதுகேளா ... ... ... ... *
மாசவுரியென்னுமனைமாதுதுயருற்றாள்... ... ... ... *

(இ-புரை.) அம்மலையினிடத்திற்குற்றமில்லாதஅருள்பொருந்தியவேலாயுதக்கடவுளைத்தேவர்கள்பூசனைசெய்தார்கள் சொல்லிவந்தஇந்தச்சரித்திரம் இதுவரையில்நிறுத்திமேல்நடந்ததைச்சொல்லுகிறார்-எங்கும்பரந்த புகழ்பெற்ற யானைமுகனாகிய தாருகனிறந்ததைகேள்விப்பட்டுஅவன்மனைவிமாசவுரியென்பவள் துயருற்றாள்.—(எ-று.) (௱௪௩)

மையுறுதடங்கண்மடமங்கையரோடேகிச் ... ... ... ...*
செய்யதொருமின்னனையசெல்வமெனுமாயப் ... ... ... *
பொய்யினில்விழுந்துபலபுன்மைகள்புரிந்தோன்... ... ...*
மெய்யினில்விழுந்தலறிமெத்துதுயருற்றாள் ... ... ... *

(இ-புரை.) மைபொருந்தியநீண்டகண்களுள்ள தோழியர்முதலா னமாதர்களுடன்போர்க்களத்திற்சேர்ந்துசெவ்விதாகியமின்னல்போலத் தோன்றிமறையத்தக்க செல்வமாகிய மாயப்பொய்யில்விழுந்துபலபல பாபகாரியங்கள்செய்துகொண்டிருந்தவனாகியதாருகன்சரீரத்தின்மேல் விழுந்துஅலறிமிகுந்ததுன்பமடைந்தாள்.—(எ-று.) (௱௪௪)

அந்தவமையத்தின்முனமாசுரமடைந்த... ... ... ... ...*
சுந்தரமிகுந்தவசுரேந்திரன்வினவி... ... ... ... ... *
வந்துதனதத்தன்மடிவானசெயல்கண்டு... ... ... ... ...*
வெந்துயர்பொருந்திடவிழுந்தலறினனால்... ... ... ... *

(இ-புரை.) அந்தச்சமையத்தில் முன்னேஆசுரபுரியென்னுஞ்சிங்க முகாசுரன்பட்டணத்துக்குப்போயிருந்த அசுரேந்திரனென்கிறபெயரு ள்ளதாருகன்மகன்கேள்விப்பட்டுவந்துதன்தகப்பனிறந்துபோனசெய் கையைக்கண்டு கொடிதான துயர்பொருந்தினதால் விழுந்தலறினான்.—

அங்குளகடன்செய்தவனைத்தகனமாற்றித்... ... ... ... *
திங்கண்முகவன்னையர்களியாருமெரிசேரப்... ... ... ...*
பொங்குதுயர்கொண்டுசிலபேரவுணரோடு ... ... ... *
மங்கலகறென்கடன்மகேந்திரமடைந்தான் ... ... ... ...*

(இ-புரை.) அவ்விடத்தில்செய்யவேண்டியமுறைமைகளை நடத்தி த்தகப்பனைத்தகனஞ்செய்துசந்திரன்போன்றமுகமுள்ளதாயரெல்லாரு ம்அக்கினிப்பிரவேசமாகஅதைக்கண்டு மிகுந்ததுயரங்கொண்டு-சிலஅவு ணர்கள்தன்னுடன்வரும்படிசென்று அழிவில்லாததாகித்தெற்குச்சமுத் திரத்தினிடத்திலிருக்கும்மகேந்திரபுரியிற்சேர்ந்தான்.--(எ-று.)(௱௪௫)

அந்நகரினுள்ளவருந்துயர்பொருந்தக் ... ... ... ... *
கொன்னுடையசூரனுறுகோயிலவையுற்று ... ... ... ...*
மன்னவனடித்துணையின்வல்லையின்விழுந்தே ... ... ... *
யின்னலொடரற்றினனிகழ்ந்தனவிசைத்தான்... ... ... ...*

(இ-புரை.) அந்தமகேந்திரபுரியி லிருப்பவர்கள் இவனைக்கண்டுமி குந்ததுயரம் அடையும்படிசென்றுபெருமைபொருந்திய சூரன்அரண் மனையிலுள்ளதான ராஜசபையில் வீற்றிருக்கும் அந்தச்சூரனுடைய இ ரண்டு பாதங்களிலும் விரைவாகவிழுந்து துன்பத்துடனழுது நடந்த காரியங்களைச்சொன்னான்.—(எ-று) (௱௪௭)

தம்பிமடிவானமொழிதன்செவியிலேற ... ... ... ... *
வெம்பினனரித்தவிசின்மீமிசையிருந்தோ ... ... ... ...*

னம்புவிவிழுந்தனனாற்றினனதற்பின் ... ... ... ... *
மொய்ம்புடையவேலனொடமர்க்கெழமுயன்றான் ... ... ...*

(இ-புரை.) தன்தம்பி யிறந்தானென்கிற சொல்காதில் சேர்ந்தவுடன்மனம்வெதும்பிச்சிங்காசனத்தின்மேலிருந்தசூரபன்மன் அழுகிப்பூமியில்விழுந்தழுது அதன்பின்புவீரமுள்ள வேலாயுதக்கடவுளுடன் போர்செய்யப்புறப்படவேண்டுமென்கிற எத்தனங்கொண்டான்.—(எ-று.)

அன்னசெயல்கண்டனனமைச்சரிலமோகன் ... ... ... ...*
முன்னுறவடைந்துசிலபுந்திகண்மொழிந்தே ... ... ... *
மன்னவனமர்க்கெழன்மறுத்திடவிருந்தே... ... ... ... *
பின்னல்புரிசூரனவணின்னதையியற்றும்... ... ... ... ...*

(இ-புரை.)சூரன்எத்தனத்தை மந்திரிகளிலொருவனாகிய அமோகனென்பவனறிந்து அவனுக்கெதிரில்வந்து சிலபுத்திகள்சொல்லித் தங்கள்அரசனாகிய சூரன்சண்டைசெய்யப் புறப்படுவதைத் தடுக்கவிருந்து தேவர்களுக்கெல்லாந் துன்பஞ்செய்யும் சூரன் அப்போதின்னசெய்கைசெய்கிறான்.—(எ-று.) (ரசுக)

மற்றிணையில்வேலவன்மருங்கினினெருங்கும் ... ... ... *
வெற்றியுறுசேனையைவிஞ்விவருமாறங்... ... ... ... ...*
கொற்றனைவிடுத்துவிடமொத்தவனிருந்தான் ... ... ... *
கொற்றமுருகேசனதுகொள்கையுரைசெய்வாம் ... ... ...*

(இ-புரை) வேறொப்பில்லாதவேலாயுதக்கடவுள் அருகில்சேர்ந்திருக்கிற வென்றியுள்ளசேனையிவ்வளவென்றுஅறிந்துவரும்படி அங்கிருக்கும் தூதர்களைவிடுத்துவிஷமொத்தசூரனிருந்தான் இனிவெற்றிகொண்ட முருகேசமூர்த்தியின் செய்தியைச் சொல்லுகிறோம்.—(எ-று.)

தேரினொடுவாரிமிசைசெங்கதிரருக்க... ... ... ... ... *
னேரினொடெழுந்தனனெழுந்தவதுமானச் ... ... ... ...*
சாரதர்குலாவவருசையநிகாவையம்... ... ... ... ... *
வீரநெடுவேலுளவிசாகனினிதுற்றான்... ... ... ... ...*

(இ-புரை.)அன்றிராத்திரிநீங்கினபின்செங்கதிருள்ளசூரியன்தேரோடுசமுத்திரத்தினிடத்தில்பிரகாசத்துடனுதயமானான்அவனுதயமானதையொப்பாகப்பூதர்கள்சூழஉயர்வுள்ளமகமேருவையொத்ததேரின்மேல்வீரமுள்ளநெடியவேலேந்தியவிசாகக்கடவுளாகியசுப்பிரமணியசுவாமியானவர்இன்பமுடனாரோகணித்துக்கொண்டார்.-(எ-று) (ரஙக)

மாருதவல்வன்விடுவையபரிசைமேவிச் ... ... ... ... ...*
சீரிலகுவானவர்செழுங்கிரியகன்றே... ... ... ... ... *
வீரமுறுசேனைபுடைமேவுறவிறற்கே... ... ... ... ...*
தாரகிரிகண்டதுதணந்தருளினுனல்... ... ... ... ... *

(இ-புரை.) வாயுதேவனுகியசாரதி செலுத்துகிற தேரின்மேலாரோ கணித்துக்கொண்டு சிறப்புவிளங்கும் செழுமையுள்ள தேவகிரியை நீங்கி வீரம்பொருந்திய சேனையானது புடைசூழ்ந்துவர மகத்துவமுள்ள கேதாரகிரியைத் தரிசித்து அதனைக்கடந்தருளினுர்.(—எ--று) (௫௩)

கருக்கடல்கடப்பவருள்காசிநகர்கண்டு ... ... ... ... *
பருப்பதமெனும்பெயர்பரித்தகிரிகண்டு ... ... ... *
விருப்பமுளவேங்கடவியன்குவடுகண்டு ... ... ... ...*
மருக்குலவுதென்கயிலைவண்சிகரிகண்டு ... ... ... ... *

(இ-புரை) தரிசிப்பவர்கள் ஜெனனசாகரத்தைக் கடக்கும்படி அருள்செய்கின்ற காசியென்னும்க்ஷேத்திரத்தைத்தரிசித்து அதையும்நீங்கிப் பருப்பதமெனப் பெயர்தங்கிய ஸ்ரீ சயிலத்தைத்தரிசித்தும்- விருப்பமுள்ளபெரியவேங்கடகிரியைத் தரிசித்தும்வாசனைமிகுந்த சோலைசூழ்ந்த தென்கயிலாயமென்னுந் திருக்காளத்தியைத்தரிசித்தும்(எ-று.)(௫௩)

ஆலவனமாகியவரும்பதிதெரிந்து ... ... ... ... ...*
ஞாலமுயர்கச்சியெனுநன்னகர்தெரிந்து... ... ... ... *
சீலமுறழற்கிரிதெரிந்துநவநீதக் ... ... ... ... ...*
கோலநகரோடுமுதுகுன்றதுதெரிந்து ... ... ... ... *

(இ-புரை.) திருவாலங்காடுஎன்னும் அருமையான க்ஷேத்திரத்தைத் தரிசித்தும் இவ்வுலகத்தில்மேன்மைபொருந்திய தானகச்சிஎன்கிற நல்ல க்ஷேத்திரத்தைத்தரிசித்தும் சீலம்பொருந்திய அக்கினிமலையாகிய திருவண்ணுமலையைத்தரிசித்தும்அழகுள்ளதிருவெண்ணெய்நல்லூருடன்விருத்தாசலத்தைத்தரிசித்தும்.—(எ-று.) (௫௪)

வல்லியமிடற்பதன்மகிப்பணிதுதிப்ப... ... ... ... *
பல்லியமுழங்கவுமைபார்வைகளிகூர... ... ... ... ...*
அல்லையகண்டமுளவண்ணனடமாடுஞ்... ... ... ... *
செல்லுலவுபொழிற்குலவுதில்லைநகர்கண்டு ... ... ... ...*

(இ-புரை.) பலம்பொருந்திய புலிக்கால்முனிவராகிய வியாக்கிரபாதமுனிவரும் பூமியைத்தாங்குகிற ஆதிசேஷாவதாரமாகிய பதஞ்சலி

முனிவரும்துதிசெய்யவும்பல்லவாத்தியமுழங்கவும்பார்வதிதேவியார்திருக்கண்கள்மகிழவும்இருளையொத்தநீளகண்டமுள்ள நடராசமூர்த்தி ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளுகிறமேகந்தவழும்படியான சோலைசூழ்ந்ததில்லையென்கிறக்ஷேத்திரம்போலத்தரிசித்தும்.—(எ-று.) (மகியென்பது பூமி-மழமுனியென்பவர்புலிக்காலும்புலிக்கையும்பெற்றுவியாக்கிரபாதரென்னும்பெயர்பூண்டதும் - ஆதிசேஷன் பதஞ்சலிமுனிவரானதும் கோயிற்புராணத்திற்கண்டுகொள்க.) (௱௫௫)

சீரிஞெடுமன்னிவளர்சென்னிவளநாட்டு... ... ... ... ...*
வாரிநிகர்காவிரிவடாதுதிசைதன்னி... ... ... ... ... *
லேரிலகுமண்ணிநதியின்கரையடைந்தான் ... ... ... ...*
காரிலகுகண்டனருகண்ணில்வருமண்ணல்... ... ... ... *

(இ-ளை.) கருமைவிளங்குங் கண்டமுள்ள பரமசிவனதுநெற்றிக்கண்ணினிடமாகத் திருவவதாரஞ்செய்தருளிய சுப்பிரமணியசுவாமிசீருடன்நிலையாய் வளருகின்ற வளப்பம் பொருந்திய சோழநாட்டிலுள்ள சமுத்திரம்போல மிகுந்தபிரவாக முடையகாவிரிநதியின் வடக்குத்திசைக்கரையிலிருக்கும் அழகுடன்பிரகாசியாநின்றமண்ணி நதியின்கரையிற்சேர்ந்தார்.(எ-று.)சோழனுக்குச்சென்னியெனவுமொருபெயர்.(௱௫௬)

அந்தவமையந்தனிலருக்கன்மறைவானுன்... ... ... ... *
கந்தனதுபோதமர்கம்மியனைநோக்கி... ... ... ... ...*
யிந்தவிடையொன்றுநகரின்றுபுரிகென்று ... ... ... *
னுந்துமவனப்பொழுதிலோர்நகர்புரிந்தான்... ... ... ...*

(இ-ளை.) அப்போதுசூரியன்மறைவானுன் கந்தசுவாமியானவர் தேவதச்சனுகியவிசுவகர்மாவைநோக்கி இந்தவிடத்தில் ஒருநகரம் உண்டாக்கென்று கட்டளையிட்டருளினர் - சுவாமியினுலேவப்பட்ட அத்தேவதச்சன் அப்பொழுதே ஒருநகரமுண்டாக்கினுன்.—(எ-று.) (௱௫௭)

தாரணியினப்பதிதனக்கமரர்செய்ரு ... ... ... ... ...*
லூரெனவரும்பெயருரைத்தனரதன்க ... ... ... ... *
ணுருமெழில்வேலவனமர்ந்தினிதிருந்தான் ... ... ... ...*
சீருலவுவிண்ணிறைசெயற்கையையிசைப்பாம்... ... ... *

(இ-ளை.)பூமியிலுள்ள அந்தத்தலத்துக்குத் தேவர்கள் திருச்சேய்ஞலூரென அரியதிருப்பெயர்கூறினுர்கள் அதனிடத்தில் சௌந்தரியம்நிறைந்த வேலாயுதக்கடவுள்விருப்பங்கொண்டு இனிதாக வீற்றிருந்தருளினர் - இனிச்சீர்விளங்கும் விண்ணுலகத்திறைவனுகியஇந்திரன்செய்கையைச்சொல்லுகின்றும்.—(எ-று.)சேய்ஞல் ஒருபெயருள்ள சுப்பிர

மணியால் ஏற்படுத்தினதாதலால் மேய்ந்ந லூரெனச் சொல்லப்பட்டது ந கரம்ருக்கரமானதுமொழியிடைப்போலி (௱௫௮)

முன்னமொருவைகலின்முரட்குலிசம்வலோ... ... ... ... *
னின்னலொடுகாழியினிருந்தபொழுதங்கண் ... ... ... *
மன்னுமொருதெய்வதமருங்கணிகள்வைத்தா .. ... ... ...*
னன்னதுகலன்களையளித்ததவன்வந்தே ... ... ... ... *

(இ-புரை.)பலம்பொருந்திய வச்சிராயுதமேந்திய இந்திரன் முன்னமொருநாளில் துன்பத்துடன் சீகாழியிலிருந்தபோது அவ்விடத்திலிருக்குமொருவனதேவதையினிடத்தில ஆபரணங்களைவைத்திருந்தான் அந்தவனதேவதையப்போதில்அங்குவந்து அவ்வணிகளைக்கொடுத்தது.

அண்டர்புகழ்தெய்வதமளித்தவணிதன்னிற் ... ... ... ...*
கொண்டலினிருண்டிடுகுழற்சசியிடும்பூண் ... ... ... *
கண்டவளையுன்னிமிகுகாமமெனும்வெந்நோய் ... ... ...*
கொண்டவன்வருந்தியதுகூறவரிதம்மா ... ... ... ... *

(இ-புரை) தேவர்கள்புகழும் வனதேவதைவந்து கொடுத்த ஆபரணங்களில் நீருண்டமேகம்போற்கறுத்தஅளகபாரத்தையுடையஇந்திராணி அணிந்து கொள்ளும் ஆபரணங்களைப்பார்த்து அவளைநினைத்து மிகுந்தகாமமென்கிற வெப்பமுள்ள நோய்கொண்டு அவன்வருந்தியதைச்சொல்லுதலரிது.—(எ-று.) (௱௬௰)

ஆயதொருவேலைதனிலாதவனெழுந்தான்... ... ... ... *
றூயமுருகக்கடவுள்சோதிவடிவங்க ... ... ... ... ...*
ணேயமொடுசெய்துமிகுபூசனைநிரப்பி ... ... ... ... *
நாயகனளிப்பவொருநற்படையடைத்தான் ... ... ... ...*

(இ-புரை) அஃப்படியிருக்குங்காலத்தில் சூரியனுதயமானான்- நிர்மலராகிய முருகக்கடவுள் அங்கொருசிவலிங்கப்பெருமானை நேயமுடன் ஸ்தாபித்து மிகுந்தபூசைசெய்து பரமசிவன் கொடுத்தருளஒருநல்லஆயுதம் பெற்றுக்கொண்டார்.—(எ-று) (௱௬௧)

வெற்றியணிகஞ்சுலவவீரதமேறி ... ... ... ... *
மற்றிணையிலாதவிடைமாமருதுமேன்மை ... ... ... ...*
யுற்றமயிலாடுதுறையொண்பதியலூர்கண் ... ... ... *
டற்றமில்வளங்கொள்கமலாலயமடைந்தான்... ... ... ...*

(இ-புரை.)வென்றியுள்ள பூதப்படைசூழ்ந்து வரவீறுகின்ற தேரின்மேலேறிக்கொண்டு ஒப்பில்லாத பெருமைபொருந்திய திருவிடைமருதூரும்மேன்மைபொருந்திய மயிலாடுதுறையும் - பிரகாசமுள்

ள திருப்பறியலூரும் தரிசித்துப்பழுதில்லாத வளப்பங்கொண்டகமலா
லயமடைந்தார்.—(எ-று.) மயிலாடுதுறையென்பது மாயூரம்-கமலாலய
(௱௬௨)
ம்- என்பது திருவாரூர்.

அந்தமில்வளங்குலவுமப்பதிதணந்தே .. ... ... ... ...*
வெந்துயர்தருங்கொடியபாலைதனின்மேவத்... ... ... ...*
தந்திமுகவற்கிளவல்சாருதலுமன்ன... ... ... ... ... *
செந்தழல்வனங்குளிர்மைசேர்ந்தது சிறந்தே... ... ... ...*

(இ-புரை.)பானைமுகமுள்ளவிநாயகருக்குத்தம்பியாகியசுப்பிரமணி
யசுவாமியானவர் அழிவிலலாதவளப்பம்பிரகாசித்துக் கொண்டிருக்கும்
அந்தத்திருவாரூரைநீங்கி வெவ்வியதான துயரத்தைகொடுக்குங்கொடி
யபாலை நிலத்திற்சேர்ந்தருளினர். அவ்வாறுசேர்ந்தவளவில்செம்மைநி
றமுள்ள அந்தப்பாலைநிலமானது சிறந்ததாய்க்குளிர்ச்சியடைந்தது.—

பரிந்திடுவளங்கிளர்பரங்கிரியின்மீதே ... ... ... ... *
யிருந்திடுபராசரனிரும்புதல்வர்வந்தே .. ... ... ... ...*
திருந்தடிவணங்கவருள்செய்தவர்களோடு.. ... ... ... *
மருந்துதிகொள்செந்திலினடற்குமரனுற்றான் ... ... ...*

(இ-புரை.) விரும்பத்தக்கவளப்பமானது விளங்கிக்கொண்டிருக்
கும்திருப்பரங்குன்றினிடத்தில்தவஞ்செய்துகொண்டிருக்கின்றவர்களா
கியபெருமைபொருந்திய பராசரமுனிவருடையபுத்திரர்கள்வந்து சுந்
தரமுள்ளதிருவடிகளைவணங்க அவர்களுக்குக் கிருபைசெய்து அவர்க
ளுடன்பராக்கிரமமுள்ள குமாரசுவாமியானவர் அருமையானதுதிகள் (௱௬௪)
பெற்றதிருச்செந்தூரில்சேர்ந்தருளினர்.—(எ-று.)

அருந்திறல்பொருந்தசூரர்கும்பியனையங்கண் ... ... ... ...*
டெரிந்தருளியெஃகமுளசிற்பரனியாமிங் ... ... ... *
கிருந்திடவொராலயமியற்றிடுதியென்ன ... ... ...*
விரிந்தபுகழ்மந்திரம்வியப்புறவிதித்தான். ... ... ... *

(இ-புரை.) அங்குச்சேர்ந்தவுடன் யாவரிடத்தும் காணுதற்கரியவ
ல்லமைபொருந்திய மதவதச்சனைநோக்கி வேலாயுதமுள்ளகுமாரசுவாமி
யானவர்நாமிவ்விடத்தில்வீற்றிருப்பதற்கு ஒருஆலயமுண்டாக்கென்று
கட்டளையிட்டருளினவுடன் - அந்தத்தச்சன்பார்ப்பவர்களெல்லாம் சந்
தோஷிக்கும்படியபரந்தபுகழுள்ள ஒருஆலயம்திருழித்தான்.—(எ-று.)

வாங்கழன்மிடற்புரவிவையமதிகந்தே... ... ... ... ...*
தேங்கமழ்பொதும்பர்செறிசெந்திலகருட்போ. ... ... *

யோங்கமரர்சேனைதொழுவொண்சினகரஞ்சேர்ந் ... ... ...*
தாங்குறுமடங்கலணிபாதனமமர்ந்தான் ... ... ... ... *

(இ-புரை.) தாவிச்செல்லும்படியான கால்களுள்ளபலம் பொருந்திய குதிரைகள்கட்டியதேரைவிட்டுநீங்கிவாசனைபரிமளிக்குஞ்சோலைகள் நெருங்கிய திருச்செந்தூரினிடத்திற்சென்றுமேன்மையுள்ளதேவர்களும் பூதசேனைகளுந்தொழும்படி பிரகாசம்பொருந்திய ஆலயத்திற்சேர்ந்து அவ்விடத்துப்பொருந்திய அழகுள்ளசிங்காசனத்தில் வீற்றிருந்தருளினார்.—(எ-று.) (ளசுசு)

மங்கலதொடங்கணு றுமாமுருகவள்ளல் ... ... ... ...*
புங்கவர்வணங்குறுபுரந்தரனைநோக்கித் ... ... ... ... *
துங்கமுறுநீதியறுசூரன்முதல்வெய்யோ ... ... ... ...*
ரிங்குறவுதித்ததுவுமியாவுமுரையென்றான் ... ... ... *

(இ-புரை.) அநேகவித அலங்காரத்துடன் அங்கு வீற்றிருந்தபெருமைபொருந்திய முருகக்கடவுள் தேவர்கள்வணங்குந் தேவேந்திரனை நோக்கிப்பலம்பொருந்திய நீதியற்றசூரன்முதலாகிய கொடியவர்கள்இவ்விடத்திற்பொருந்தும் படிபிறந்ததுவும்மேலு முள்ள அவர்கள்சரிதத்தையுஞ் சொல்லென்று உரைத்தருளினார்.—(எ-று.) (ளசுஎ)

என்றிடலுமின்னதையிசைத்திடுதியென்றே .. ... ... ...*
வன்றிறல்கொள்பொன்னெடுமடத்திறைவிளம்பச் ... ... *
சென்றுமுருகக்கடவுள்சேவடிவணங்கி. ... .. ... ...*
நின்றவுணர்வந்ததுநிகழ்ந்ததுமுரைப்பான் ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுசுவாமி கட்டளையிட்டவுடன் மிகுந்தவல்லபமுள்ளபிரகஸ்பதியைநோக்கி ஐயா இதனைநீசொல்லுமென்று தேவேந்திரன்சொல்ல அவர்போய் முருகக்கடவுளுடைய செம்மைநிறமுள்ள திருவடிகளைவணங்கிநின்று அவுணர்கள் பிறந்ததையும் அதற்குமேல் நடந்ததையுஞ் சொல்லுகின்றார்.—(எ-று) (ளசுஅ)



உற்பத்திகாண்டம் முற்றிற்று.


காப்பு......................................................க
பாயிரம்.................................................மரு
புராணவரலாறு.................................மஅ
உற்பத்திகாண்டம்.............ளசுமஅ
ஆகிருவிருத்தம் ........உள



உ

வேலுமயிலுந்துணை.

## இரண்டாவது

# அசுரகாண்டம்.



அற்றமறுகாசிபனளித்தவறுபான்மே ... ... ... ... *
லாறுபடுகோடியவுணர்க்கரசனானோன்... ... ... ...*
பெற்றசுரசைப்பெயர்மகட்குயர்மழைக்கோன்... ... ... *
பீடுபெறுமாயவகைபேசுபுதெருட்டி... ... ... ...*
மற்றதனிலன்னமயில்வல்லபமுணர்ந்தே... ... ... ... *
மாயையெனவோர்பெயர்வழங்கினனதற்பி... ... ...*
னற்றிறல்கொணந்திமுன்மொழிந்தமொழியுன்னி ... ... *
நங்கைவருகென்றிவைநவின்றிடுதலுற்றான்... ... ...*

(இ-புரை.) காமவெகுளிமயக்கமென்கிறமுத்திவிக்கினமாகியமுக்குற்றங்களையும்நீக்கியகாசிபரிஷியானவர்பெற்ற அறுபத்தாறுகோடி அவுணர்க்கு அரசனாகிய அசுரேசன்றான்பெற்ற சுரசையென்னும்பெயருள்ளமகளுக்கு மேன்மைபொருந்திய சுக்கிரபகவான் பெருமைதங்கியமாயைவகையைச் சொல்லித்தெரிவித்து அந்தமாயையில் அவளுடையவல்லபத்தையறிந்துமாயையென்றுஒருபெயர்கொடுத்தார் அதன் பின்புமிகுந்தபலமுள்ள நந்திதேவர் முன்னம்சொல்லிய மொழியை நினைத்துமாயையேயிங்குவாவென்றழைத்து ஒருவார்த்தை சொல்லுதலுற்றார்.—(எ-று.) (க)

மங்குல்புரைமாயன்முதல்வானவர்கடம்மால் ... ... ... *
வல்லவுணரெண்ணிலர்மடிந்தனர்கண்மாதோ... ... ...*
விங்குனதருங்குலமுயர்ந்திடநினைந்தே ... . . ... ... *
யின்பமொடுகாசிபனிருந்துழிபொருந்தி ... ... ...*
யங்கவனொடுங்கலவிசெய்தவுணர்தந் ... ... ... ... *
தன்னவர்தவஞ்செயவிடுத்துவருகென்னச் ... ... ...*
செங்கனகமானதொருமேருவடபாலச் ... ... ... ... *
சீர்முனிதவஞ்செயுமிடந்தனிலடைந்தாள் ... ... ...*

(இ-புரை.)மேகத்துக்கொப்பான நிறமுள்ளவிஷ்ணுமுதலாகியதே ர்களால் முன்னேவலிய அவுணர்களிறந்து போனார்கள்ஆதலால் இப்

போது உன்குல முயரும்படியெண்ணி இன்பத்துடன்காசிபரிஷியிருக்கும் இடத்துக்குப்போய் அம்முனிவருடன்கலவிசெய்து அவுணரைப் பெற்று அவர்களைத்தவஞ்செய்யும்படி அனுப்பிவிட்டுவாவென்றுசொல்லஅந்தவார்த்தையைக்கேட்டு மாயையானவள் செம்பொன் மயமாகிய ஒப்பற்ற மகமேருவின் வடபுறத்தில்பெருமைபொருந்திய அம்முனிவரிருக்குமிடத்திற்குச் சென்றாள்.—(எ-று.) (௨)

மன்னியிடுகாசிபனிருக்கையிலடைந்தே... ... ... ... *
வாவியொடுதண்டலையுமண்டபமுமங்கண் ... ... ...*
கன்னிகடிதேபலவளத்துடனியற்றக்... ... ... ... ...*
கண்டனனியாவரிதுகண்டவர்களென்றே ... ... *
யுன்னினனிருந்துழியவன்றனதுநேரோ ... ... ... ...*
யுற்றிடலுமற்றவளுருபமதுகண்டு ... ... ... *
முன்னைவினையாலிடர்செய்காமநதியூடே... ... ... ...*
மூழ்கினனியாரெனினுமுன்னைவினைபோமோ ... *

(இ-புரை.) தவத்திற்பொருந்தியகாசிபரிஷியாச்சிரமத்தில் மாயை சேர்ந்தவுடன் தடாகங்கள்சோலைகள் மண்டபங்கள் என்னுமிவைகளைப் பலவளப்பங்களுடன் உண்டாக்கினாள் காசிபரிஷிபார்த்து இவைகளையுண்டாக்கினவர்கள் ஆரென்று நினைத்துக் கொண்டிருக்கும்போது அவருக்கெதிரில்காணப்பட்டாள் அவளுடையஉருவத்தைக்கண்டு அப்முனிவர்பூர்வவினையினால் இடர்செய்யுங்காமமாகிய நதிக்குள் ஆழ்ந்தவரானார்எத்தன்மையுடையவர்களேயாயினும்முன்னைவினைவிட்டுப்போவதில்லை.எ-று.

ஆயவடன்முன்பணுகியூர்பெயர்வினவி... ... ... ... *
யன்பினொடுகூடியெனையாளநினையென்ன ... ... ...*
மாயவள்புகன்றிடுவளுத்தரகலத்தேன்... ... ... ... *
வண்மையுளகங்கைதனில்வல்லைபடர்கின்றே ... ... *
னீயுனதருந்தவமொழிந்திதுமொழிந்தாய் ... ... ... *
நீதிமுறையல்லவிதுநில்லெனநிகழ்த்திப் ... ... ... *
போயினடொடர்ந்தனன்மறைந்தனள்வருந்திப் ... ... *
பொற்புமுனிதேடுபுபுலம்புபுதிரிந்தான் ... ... ... *

(இ-புரை.) காசிபர்அவளுக்கெதிரிற்போய் அவளூரையும்பெயரையும்வினவி அன்புடன்புணர்ந்துஎன்னையாளும்படி நினையென்றுவேண்டினார்மாயைசொல்லுகிறாள் நான்உத்தரதேசத்திருக்கின்றவள் வளப்பம்பொருந்திய கங்காநதியில்ஸ்நானஞ் செய்யத்துரிதமாகச்செல்லுகின்றே

ன்அப்படியிருக்க உம்முடைய அருந்தவம்நீங்கி யிந்தவார்த்தைசொல்லு கிற இதுநீதிமுறையல்ல நில்லுமென்றுசொல்லி நடந்தவளவில்தவத்தி ருல்பொலிவுள்ள காசிபர் அவள்பின்தொடர்ந்தார்அதைக்கண் டுமாயைமறைந்துவிடவே அவர்தேடிப்புலம்பிக்கொண்டுதிரிந்தார்.—(எ-று) (ச)

தேடிமயல்கொண்டுமுனிவாடுமதுபோதிற் ... ... ... ...*
செம்பரிதிபச்சிமதிசைக்கடலடைந்தா ... ... ... *
னீடிருள்வந்ததெழின்மாயைதனையன்னு... ... ... ...*
னினைந்தறவரற்றுதலுநேர்படவணைந்தாள் ... ... *
கூடியெனையாளெனவிரந்தடியிறைஞ்சக்... ... ... ...*
கூறுவளியான்வடிவுகொண்டபடிகொண்டா .. ... *
லாடல்புரிவேனெனலுமங்கணொருபுத்தே... ... ... ... *
ளங்கமதுகொண்டனனயன்றனதுமைந்தன்... ... ...*

(இ-பொ.) காசிபமுனிவரிவ்வாறுதேடிமனம்வாடும்போதுசூரியன் மேற்குத்திசைக்கடலிற் சேர்ந்தான்சேர்ந்தவளவில் மிகுந்த இருள்வந்து வியாபித்தது அவர்அழகுள்ள மாயையென்பவளை நினைத்து மிகுதியாகப் பிரலாபிக்கும்போது அவர்காணும்படிநேரில்வந்தாள் வந்ததைக்கண்டுஎ ன்னைக்கூடியாட்கொள்ளென்று இரந்துசொல்லிஅவள்பாதத்தில்வணங்கி னர்அதற்குமேல் மாயைசொல்லுகிறாள்நானிப்போது கொண்டிருக்கிற உருவத்தின்படி நீரும்உருவங்கொண்டால் உம்மைக்கூடுவேனென்றுசொ ல்லப் பிரமதேவன்புத்திரராகியகாசிபர் அப்போது ஒருதேவ உருவங் கொண்டார்.—(எ-று.) (ரு)

அங்கவளிசைந்துமுதலானவொருசாமத்... ... ... ... *
தன்பினொடுகூடலுமருந்திறல்கொள்சூரன் ... ... ...*
றுங்கமொடுதிப்பவவரங்கவியர்வின்கண் .. ... ... ... *
டுப்புடையமுப்பதெனுமாயிரவெள்ளத்தோர் .. ...*
பொங்கவுணர்வந்தனரிரண்டுபடுசாமப்... ... ... ... *
போதிலரிமேனிகொடுபுல்லுதலும்வந்தே .. ... ...*
சிங்கமுகனாயிரநெடுந்தலைகளோடுஞ் ... ... ... ... *
சேணிலுறமண்டர்கடிடுக்கிடவுதித்தான் ... ... ...*

(இ-பொ.) அந்த மாயையானவள்சம்மதித்துமுதலாஞ்சாமத்தில் அன்பினொடுசேர்ந்தவளவில் அருமையானவெற்றி பொருந்தியசூரனெ னவன்பராக்கிரமத்துடன்பிறந்தான் அப்போதுஅவர்கள் சரீரத்தினுண் டாகிய வெயர்வினிடத்தில் முப்பதினாயிரம் வெள்ளத்தொகையுள்ளவர்க

னாகியமிகுந்த அவுணர்கள் உதித்தார்கள் இரண்டாஞ்சாமத்தில்மாயைபெ
ண்சிங்கவடிவங்கொள்ளக் காசிபர் ஆண்சிங்க வடிவங்கொண்டு சேர்ந்த
போது உடனேபெரியஆயிரஞ் சிங்கத்தலைகளுடன் சிங்கமுகாசுரனெ
ன்பவன்வானுலகத்திலிருக்கும்தேவர்கள் திடுக்கிடும்படிபிறந்தான்.(எ-று)

அங்கவர்களங்கமிசைபொங்கியவியர்ப்பி... ... ... ... *
மற்றமறுநான்குபதினாயிரவெள்ளத்தோர் ... ... ...*
தங்கியவிறற்றவர்வந்தனர்கண்மும்மைச் ... ... ... *
சாமமதின்மாயையொடிசைவமுனிவோனும் ... ... *
வெங்கரியுருக்கொடுபுணர்ந்துகளிகூர... ... ... ... *
வேழமுகமோடுமுயர்தாருகனுதித்தான் ... ... ... *
துங்கவெழிலின்மேனிமிசைவந்தகசிவின்கண்... ... ... *
டோன்றினர்கணுன் றுபதினாயிரவெள்ளத்தோர்... ... *

(இ-புரை.) அப்போது அவ்விருவர்கள் சரீரத்திலுமுண்டானவியர்
வில் சோர்வில்லாதநாற்பதினாயிரம்வெள்ளத்தொகை கொண்டவர்களா
யப் பலம்பொருந்தியஅவுணர்கள்பிறந்தார்கள் மூன்றாஞ்சாமத்தில் மா
யையென்பவளும் சைவமுனியாகியகாசிபரும் வெவ்வியதான பெண்ணா
னையுருவமும் ஆணானையுருவமுங்கொண்டு கூடிக்களிப் படைந்தார்கள்
அப்போதுயானைமுகத்துடன் பெரியதாருகன்ஜனித்தான் பலமும்அழ
குமுள்ளஅவர்கள் சரீரத்தின்மேல்வந்தவெயர்வினிடத்தில் நாற்பதினாயி
ரம்வெள்ளஅவுணர்கள்தோன்றினார்கள்.—(எ-று) (எ)

மற்றதுபினான்குபடுசாமமதுதன்னில்... ... ... ... ...*
வன்றகருருக்கொடுமகிழ்ச்சியொடுகூட... ... ... *
முற்றுமெழில்பெற்றவசமாமுகியுதித்தாள்... ... ... ...*
முப்பதெனுமாயிரமுரண்டகுவர்வெள்ள... ... ... *
மூற்றதுவியர்ப்பினிலியாளிமுதலாகு... ... ... ... ...*
முந்தியவிலங்கினதுருக்கள்கொடுகூடப்... ... ... *
பொற்றுதிகொளாறுபதினாயிரவெள்ளத்தோர் ... ... ...*
பொருக்கெனவுதித்தனரருக்கனுமுதித்தான் ... ... *

(இ-புரை.) அதன்பின்புநாலாஞ்சாமத்தில் வலிபொருந்தியஆட்டுரு
வங்கொண்டுமகிழ்ச்சியுடன் கூடியபோது நிறைந்தஅழகுபெற்றஆட்டு
முகமுள்ள அசமுகியென்பவள் உண்டானாள் அவர்கள்சரீரத்தில்உண்டா
னவியர்வில்முப்பதினாயிரம் வெள்ள அவுணர்கள்பிறந்தார்கள் பின்னும்
யாளிமுதலாகிய மிருகங்களின் உருவங்கொண்டுகூடினவளவில் துதிக்கு

ம்படியானபொலிவுள்ள வர்களாய் அறுபதினாயிரம் வெள்ள அவுணர்கள் விளைவாகப்பிறந்தார்கள் அப்போது சூரியனும் உதயமாமாகும்.—(எ-று)

அப்பொழுதுதொகையுருவமாயவர்பொருந்த ... ... ...*
செந்தண்மலர்மீதுறுமபன்றனதுடைந்தவர் ... ... *
மெய்ப்படுதனதுருவமேவினனவ்வேலை ... ... ... ...*
வேலைநிகர்சானைபொடுமேவுபெருஞ்சூரன் ... ... *
மூட்படிமுகத்தனொடுதாருகனொடேகித் ... ... ... ...*
தாபமுனிமாயவடிவேணட்பரமிறைஞ்சி ... ... ... *
யெட்பரிசியாமினியியற்றுவதெனச்சீ ... ... ... ...*
ரொட்டிப்பொசிடனிகைநதிசேரலுற்றான் ... ... ... *

(இ-ள்.) அவர்அப்பொழுதுபலவுருவமாயினார்கள் அழகுந் தளிர்ச்சியுமுள்ள தாமரைமலர்மேல் வீற்றிருக்கும் பிரமதேவனுடைய மகத்திரமாகிய காசிபரிஷியோவெனிருந்தப் புகடப நிவருவங்கொண்டார்- அந்தவேளையில சமுத்திரத்தை யொத்தசேனையுடன் பொருந்திய சூரபன்மன் பலமுள்ள சிங்கமுகாசுரனுந் தாருகாசுரனுந் தம்முடன் வரச்சென்று பரிசுத்தமுள்ள காசிபர்மாயையென்னு மிவ்விருவர்களு டைய இரண்டுபாதங்களையும் வணங்கி இனி நாங்கள் எவ்வாறுநடக்கவே ண்டியதென்ன-சீர்பொருந்திய காசிபரிஷி சொல்லலுற்றார். (எ-று)(கூ)

மாதவமெழிற்பெறுநிலனைத்தினுமினித்தால் ... ... ... *
மற்றதுறுமெற்றிடுமைத்தினைதிடைநினைத்த ... ... ...*
தேசதையுமளித்திடுமிடர்ப்பவமறுக்கு ... ... ... ... *
மின்பமுறுநற்கதியுமீயுமிதினமிக்க... ... ... ...*
தோர்திடிலியாதுமிலையாதலினைத்தே ... ... ... ... *
யுள்ளமிசையன்பொடுமுவந்திடுதிரென்மேற ... ... ...*
மேதகுமருந்தவமுயன்றுபுகழ்மேனாண் ... ... ... ... *
மேவியபெருங்கதைவிளம்பிடுதலுற்றான் ... ... ..*

(இ-ள்.) நன்மையுள்ள செய்கைகளிலெல்லாம் மகத்தாகிய தவ மேநன்மையுள்ளது ஆதலால தவஞ்செய்தால மனதினிடத்தில் நினைத்த தைெயலலாம் கொடுக்கும் துன்பதருக்கேதுவான பிறவியையறுக்கும் நித்தியானந்தம் பொருந்துவதான மோக்ஷத்தையுங்கொடுக்கும் சொல் லுமிடத்தில இதைப்பார்க்கிலு மேலானதொன்று மில்லை ஆதலால் அத்த வத்தையே உள்ளத்தினிடத்தில் அன்புகொண்டுசெய்யுங்களென்றுசொல் லி மேன்மைபொருந்திய அருந்தவஞ்செய்து புகழுமேன்மையையும் அ டைந்த ஒருபெரியசரித்திரஞ் சொல்லத்தொடங்கினார்.—(எ-று.) (ய)

கொற்றமுறெழிற்கடகமேவுமறையோனற் ... ... ... *
குச்சகனளித்தருள்கவுச்சிகனெனும்பே ... ... ...*
ருற்றிடுபுகழ்ச்சுதனருந்தவமியற்றற்... ... ... ... ... *
குன்னியொருதுன்னுமலமோடையயலெய்திப் ... ...*
பற்றலர்புரம்பொடிபடுத்தவனையுள்கிப்... ... ... ... *
பற்றுமிகுமுண்டிகள்பகர்ந்திடலிகந்து ... ... ...*
குற்றியினிருந்தனனருந்தவமியற்றக் ... ... ... ... *
கோகனகமின்றழுவுகொண்டலவண்வந்தாம்... ... ...*

(இ-புரை.)வென்றிபொருந்தியஅழகுள்ளகடகம்- என்னும்பதியில் வாசஞ்செய்யுங்குச்சகனென்கிறபிராமணன்ஈன்றருளிய-கவுச்சிகனென்னும் பெயர்பெற்ற புகழுள்ளபுத்திரன் அரியதவஞ்செய்யக் கருதி மலர்கள்பொருந்திய ஒருஓடையினருகிற்சென்று பகைவராகிய அவுணர்களிருந்தமுப்புரங்களை நீறாக்கிய பரமசிவனைத்தியானித்துக்கொண்டு பற்றுமிகுந்த ஆகாரங்கொள்ளுதலை நீங்கி ஸ்தம்பம்போல் அசையாமலிருந்து அருந்தவஞ்செய்து கொண்டிருக்கையில் தாமரைப் பூவிலிருக்குந்திருமகள்தழுவியவிஷ்ணுஅவ்விடத்தில்வந்தார்.—(எ-று.) (மக)

மன்னியதவம்பயிறல்கண்டுவகைகொண்டு... ... ... ... *
மாதவநின்றுபெயர்மாமிருககண்டு ... ... ... ...*
யன்னெனமொழிந்திடவெழுந்துதொழமாயோ ... ... *
னதியருணின்புடையினுகவெனவோதித் ... ... ...*
துன்னுமிமையோரொடுமறைந்தனனதற்பின் ... ... ... *
றாயமுனிதந்தையிடைவந்துதொழுதன்னுன்... ... ...*
பொன்னடிவணங்கலுமெழுந்துநனிபுல்லிப் ... ... ... *
பொற்புறுதவத்திடைபுகுந்ததுரையென்றான் ... ...*

(இ-புரை.) நிலையாகியதவஞ் செய்தலைக்கண்டு சந்தோஷங்கொண்டு மாதவனே யுன்பெயர்பெருமைபொருந்திய மிருகண்டுயெனன்று சொன்னவளவில் அம்முனிவரெழுந்து தொழுதார் - அதுகண்டுவிஷ்ணுவானவர் பரமசிவத்தின் திருவருளுன்னிடத்தில் பொருந்தக்கடவதாக வென்றுசொல்லித் தன்னைச்சூழ்ந்திருக்குந் தேவர்களுடன் மறைந்துபோனார்- அதன்பின்புபரிசுத்தரானகவுச்சிகமுனிவர்பிதாவினிடத்தில்வந்துதொழுது அவருடையபொலிவுள்ள பாதத்தைவணங்குதலும்-எடுத்து இறுகத்தழுவிக்கொண்டு அழகுபொருந்திய தவஞ்செய்த விடத்தில் நடந்ததைச் சொல்லென்றார்.—(எ-று.) (மஉ)

அம்மொழிவழங்கலு நிகழ்ந்தசொலவின்புற் ... ... ... *
றனபொடினியில்லறமடர்ந்திடுதியென்ன ... ... ...*
வெம்மைநிரயந்தருமடந்தையர்துவக்கின் ... ... ... *
வீழ்கிலனெனப்பலவிளம்புதலுமன்னுன் ... ... ...*
செம்மையுறுவீடுபெறுநன்னெறியிதாகுந் ... ... ... *
தீதலவெனப்பலதிறத்தினிலுரைத்தே... ... ... ...*
யிம்மொழிமறுத்தலறையலாணைநமதென்று ... ... ... *
னென்றிடவிசைந்தனனிறைஞ்சினனிசைப்பான் ... ...*

(இ-புரை) பிதா அந்தவார்த்தைசொல்லலும்புத்திரன்தவஞ் செய்த காலத்தில் நடந்ததுகளைச் சொல்லக்கேட்டு இன்பமடைந்து இனியன்புடன்இல்லறத்திலிருக்கக்கடவையென்று குச்சகரிஷியாகியபிதாசொன்னுர்அதைக்கேட்டபுத்திரன்கொடுமையானநரகத்தைத்தருவதானமாதர்கள்பந்தத்தில்விழமாட்டேனென்றுபலவாறுசொல்லுதலும் தந்தையானவர்மாறுபாடில்லாத மோக்ஷம் அடையும் நல்லமார்க்கத்துக்கும் இல்லறம்பூதானதலலவென்று பலவகையாலுஞ் சொல்லி இனியிந்தவார்த்தைக்குமறுத்துச்சொல்லாதே நம் மாணையிதென்றூர் என்றவளவில்புத்திரன்சம்மதித்துப்பிதாவை வணங்கிச்சொல்லுகின்றுன்.—(எ-று.) (௰௫)

மனந்தனின்முனிந்திடன்மொழிந்தநெறிநிற்பன் ... ... ...*
மற்றெனதுரைப்படிமறாதவியல்புள்ள ... ... ...*
கனந்தருபெருந்தனமடந்தையுளவேலக்... ... ... ... *
கன்னிகையைமணம்புரிதல்கண்டிடுவனென்ன ... ... ...*
வனந்தனிலிருந்தவமுழந்தவன்மகிழ்ந்தே... ... ... ... *
யன்னநடையுடையவன்னநடைமாதை ... ... ...*
நனந்தலைபொருந்தியபெரும்புவியினேடி ... ... ... *
நலகுவனுனக்கெனவுநற்சுதனவிற்றும் ... ... ...*

(இ-புரை.) மனதில் கோபங்கொள்ளவேண்டுவதில்லை தேவரீர்சொலிய நெறியிலிருக்கிறேன்-ஆனுல்என்சொற்படிமறுக்காத இயல்புடைதனம் பொருந்திய பெரியதனமுள்ளமாது கிடைப்பாளாகில் அந்தக்கன்னிகையைமணஞ் செய்துகொள்ளச் சம்மதிப்பேனென்று புத்திரன்சொல்ல- வனத்தில பெருந்தவஞ்செய்துள்ள குச்சகமுனிவர்சந்தோஷித்து அத்தன்மையுள்ளகுணம் பொருந்தியவளான அன்னத்தினடையொத்தநடையுள்ள கன்னிகையைப்பாதாள லோகத்துக்குஞ் சுவர்க்கலோகத்திற்கும் மத்தியிற்பொருந்திய பூலோகத்தில் விசாரித்துனக்கு

தருகிறேனென்று சொல்லுதலும் நல்லபுத்திரராகிய கவுச்சிகமுனிவர் சொல்லுகின்றார்.—(எ-று.) (௰௪)

ஐயனையிழந்தவர்களன்னையையிழந்தோ... ... ... ... *
ராதிநவையாயினவகன்றடமாஞர் ... ... ... ...*
வையமிசையுண்டெனிலவானந்திடுவலென்ன ... ... ... *
வல்லையதுசெய்வனெனவண்ணமலம்மேவுந் ... ... ...*
தையன்மிகமன்னிவளர்சென்னிவளநாடு ... ... ... ... *
தன்னிடையநாமமெனத்திகழ்வனத்தின் ... ... ...*
மெய்யிலதுசத்தியனிடத்தினொருகன்னி ... ... ... ... *
மேயதுவிஞவியவணமேவினன்விருப்பால்... ... ...*

(இ-புரை.) பிதாவையிழந்தவர்கள் மாதாவையிழந்தவர்கள் முதலான குற்றம் நீங்கியகன்னிகையாய்ப் பூலோகத்தி லிருந்தால் விவாகஞ் செய்துகொள்வேனென்று கவுச்சிகன் சொல்ல இப்பொழுதே அவ்வண்ணஞ் செய்கிறேனென்று சொல்லி வண்மையுள்ளதிருமால் நீடூழியாயிருக்கும் சோழவளநாட்டினிடத்தில் அநாமயமென்றுவிளங்குகின்ற ஒருவனத்தில் உண்மையே பிரகாசித்துக்கொண்டிருக்கும் உசத்தியமுனிவரிடத்தில் ஒருகன்னிகை யிருப்பதையறிந்து விருப்பத்துடன் அவ்விடத்திற்சென்றார்.—(எ-று.) (௰௫)

அன்பினொடுகுச்சகவிருந்தவனைநேர்கண்... ... ... ... *
.. டசத்தியமகன்றிமுசத்தியன்வணங்கா ... ... ...*
வென்புடையடைந்தபடியென்னபகலென்ன ... ... ... *
வென்றெருமாற்றுனசெழிற்புதலவிசனை ... ...*
யின்பினொடுபெற்றவளையுன்னியிவண்வந்தே ... ... ... *
னென்றிடலுநன்றெனவிசைந்துமுனியோடு ... ...*
நன்குபெறுமவ்விடையிருந்தனளிருந்த ... ... ... ... *
நாளினிகழ்வுற்றதுநவிற்றிடுதுமாதோ ... ... ... ...*

(இ-புரை.) குச்சமுனிவரை அன்புடன்நேரிற்கண்டு அசத்தியமகன்றவுசத்தியமுனிவர் வணங்கிச்சுவாமிகள் என்னிடத்தில் வந்தகாரியமென்ன சொல்லவேண்டுமென்ன-எனக்கொருபுத்திரனிருக்கின்றான் அவனுக்காக உம்முடையசவுந்தரியமுள்ள புத்திரியையன்புடன் மணம்பேசும்படி நினைத்து இங்குவந்தேனென்று சொல்லுதலும் நன்றெனச்சம்மதித்து உசத்தியருடன் நன்மைபொருந்திய அவ்வனத்தில் குச்சமுனிவரிரு

ந்தார் அப்படியிருந்தநாளில் அங்குநடந்ததைச் சொல்லுகிறோம் என் று சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்குச்சொல்லுகிறார். (எ-று.)

வன்றவவுசத்தியன்மகிழ்ந்தமனைமாதா ... ... ... ... ...*
மங்கலைவிடும்பவெழின்மாமகள்விருத்தை... ... ... *
சென்றுமடவாரொடுநறும்புனல்படிந்தே ... ... ... ...*
திரும்புமமையத்தினனிசீறுமதவேழ... ... ... ... *
மொன்றெதிரடைந்திடலுமேவரும்வெருக்கொண் ... ... ...*
டொய்யெனவிரிந்தலருரக்கரிவிருத்தை ... ... ... *
பின்றொடரவோடியொருநீடுபுதன்மூடு ... ... ... ...*
மீடுபெறுகூவலிடை.பெய்வளைவிழுந்தாள் ... ... *

(இ-புரை.) உறுதிபெற்றதவமுள்ள உசத்திய முனிவர் மகிழ்ந்த இல்லறத்திற்குரிய மங்கலையென்னும் பெயருள்ளமாதானவள் அளிப் பஅவள் புத்திரியாகிய பெருமைதங்கிய விருத்தையென்பவள் தோழிக ளுடன் சென்றுவாசனையுள்ளநீரில்ஸ்நானஞ்செய்துதிரும்பிவருகிறசமய த்தில் சீறுகின்றமிகுந்தமதமுள்ள ஒருயானைஎதிர்வரலும் எல்லாரும்ப யங்கொண்டு விரைந்துதனித்தனியே பிரிந்தோடினார்கள் பலம்பொரு ந்திய அந்தயானையானது விருத்தையென்பவர்பின் றொடரவேவளையல ணிந்தகையையுடையவளாகிய அந்தவிருத்தையானவள் ஓடிப்பெரியபுத ர்மூடியபெருமைபெற்ற ஒருகூபவில விழுந்தாள்.—(எ-று.) (௰எ)

விழுந்தனள்பொருந்துயிர்பிரிந்தனள்கிடந்தாள் ... ... *
வேறுளமடந்தையர்விருத்தைதனைநேடி ... ... ...*
யழுந்துதுயரத்தினொடுகண்டிலர்களாகி ... ... ... *
யன்னவடனன்னையொடறைந்திடவரற்றிச் ... ...*
செழுங்கணவனோடுதுபுகன்றிடலுமன்னோன் ... ... ... *
செல்லல்கொடுசென்றுநனிதேடினனெடுத்தங் ... ...*
கொழிந்திடுதலற்றதுயருற்றிடலுமவ்வா... ... ... ... *
றேதமிகுகுச்சகனுணர்ந்தவணடைந்தான் ... ... ...*

(இ-புரை.) அவ்வாறுவிழுந்தவளாகிய விருத்தையானவள் பொருந் திய உயிர்பிரிந்தவளாய்த்தூரவிற் கிடந்தாள் - வேறுஉள்ளதோழிமார் கள் அந்தவிருத்தையைத்தேடிப்பார்த்துக் காணாதவர்களாய்ப் பொருந் தியதுயரத்துடன்சென்று அவள்தாயிடத்திற்சென்றுசொன்னார்கள் அந் தத்தாயழுதுசெழுமையுள்ளதன்கணவனுடன் இந்தச்சேதியைச்சொன் னாள் அவர்துன்பங்கொண்டுமிகுதியாய்த்தேடிக்கண்டெடுத்து நீங்குதலி

ல்லாத துயர மடைந்தார்- இந்தச்சமாசாரத்தைச்சிலர் சொல்லஞானமிகு ந்தகுச்சகமுனிவரறிந்து அந்தஇடத்திற்சேர்ந்தார்.—(எ-று.) (௰அ)

வந்துசிலபுந்திசொலிநாளையுயிரீவன் ... ... ... ... *
மண்டுதயிலத்துடலைவைத்திடுகவென்றே ... ... ...*
யுந்தொருகடத்தணுகியந்தகனையுள்ளத் ... ... ... ... *
துன்னினனருந்தவமுழந்திடலுமன்றே ... ... ...*
மூழந்தவணடைந்தகரியெய்திமுனிதன்னை... ... ... ... *
மொய்ம்பிளேடுபற்றுபுமுரண்கொள்பிடர்மீதே... ...*
சுந்தரமுறக்கடிதுகொண்டுவளையென்னத் ... ... ... *
துண்ணெனநடந்ததுவசுந்தரைதுளங்க ... ... ...*

(இ-புரை.) குச்சகமுனிவர்வந்து உசத்திருக்குத்தேறுதலுண்டாக நீதிகள்சொல்லி இந்தக்கம்னிகைக்கு நாளையதினம் உயிர்கொடுக்கிறேன் அதுவரையிலிவ்வுடலைநிறைந்த எண்ணெய்யில்வைத்திருமென்று சொல்லி அலைகளைவீசுகின்ற ஒருகடாகத்தி னருகிற்சேர்ந்து யமதருமராசனைத்தன்மனதில் தியானித்து அருமையான தவஞ்செய்து கொண்டிருக்கும்போது முன்னேயங்குவந்த யானையானதுவந்து குச்சகமுனியைப் பலத்துடனெடுத்துவலிமைகொண்டபிடரியின்மேல் தனக்குச்சுந்தரமுண்டாகும்படி வைத்துக்கொண்டு விரைவாகப்பார்ப்பவர்கள் பயப்படவும் பூமிநடுங்கவும் மலைபோல்நடந்தது.—(எ-று.) (௰கூ)

தடந்திகழ்விலங்கல்கள்பிலந்தனிலழுந்தத் ... ... ... ...*
தாள்கொடுமிதித்துயர்தருத்திரள்பறித்தெ ... ... *
மடங்கலுநெடுந்தலமடங்கலுநடுங்க ... ... ... ... ...*
வலலை வருமும்மதவரைக்களிறிவ்வாறே ... ... ... *
நடந்ததுவிருந்தவநெடுந்தகைதெரிந்தே ... ... ... ...*
நம்மைபிதெடுத்ததெவனென்றுமெனக்கொண் ... .. *
டிடந்தருதஞதகலினேடினனுணர்ந்தா ... ... ... ...*
னெவ்வகையுணர்ந்ததெனிலுவ்வகையுணர்ந்தான் ... *

(இ-புரை.) பெரியதாகவிளங்குகின்றமலைகள்பிலத்தில்அழுந்தும்படி காலினால்மிதித்தும் உயர்ந்தமரக் கூட்டத்தையெல்லாம்பறித்தும்-சிங்கமும் நெடிய உலகங்களெல்லாமும்நடுங்க விரைவாக வருகின்றதாகியகொலைசெய்யும்யானையானது இவ்வாறு நடந்திடலும் மிகுந்த தவமுள்ளகுச்சகர்அறிந்து இந்தயானைநம்மையெடுத்தகாரணமென்ன அறிவோமென்று மனங்கொண்டு விசாலமாகிய தன்ஞான உணர்ச்சியினால் யோசித்தறிந்தார்- எவ்வகையறிந்தாரென்றாலிவ்வாறறிந்தார்.—(எ-று.)

சத்துறுதடம்பலகளுன்றிடுகலிங்க ... ... ... ... ...*
நாடுதனினீடுபுகழ்நன்னகரமொன்றுண் ... ... ... *
டத்திருநகர்ப்பெயரிலங்கரிபுரஞ்சீ ... ... ... ... ...*
ரப்பதியின்மேவியவருந்துதிகொடேவ... ... ... *
தத்தனெனுநாய்கனுதவுந்தருமதத்தன் ... ... ... ...*
றன்னையருளன்னையொடுதந்தையுமிறப்ப... ... ... *
மெத்துவிழுமத்தினொடிளைத்துறுதினத்து... ... ... ...*
மேவினனவன்புடையொர்வீறிரதவாதி ... ... ... *

(இ-புரா.) சங்குகள்பொருந்தியபலதடாகங்கள்நெருங்கியகலிங்கதேசத்தில் நீடியபுகழுள்ள நல்லநகரமொன்றுண்டு செல்வம்பொருந்திய அந்நகரத்தின் பெயர்பிரகாசிக்கும்அரிபுரமாம்-சீருள்ள அந்நகரத்தில்வாசமாகிய அரியதுதிகொண்ட தேவதத்தனென்கிற ஒருவணிகன்பெற்றதருமதத்தனென்பவன்தன்னைப்பெற்றதாயுந்தந்தையும் இறக்கவிருந்ததுன்பத்துடன் மெலிந்துகொண்டிருக்கிறநாளில் அவனிடத்தில் ஒருரசவாதிவந்தான்.—(எ-று.) (உக)

அருந்தவனெனும்படியடைந்தவனைநேர்கண் .. ... ... *
டன்பொடுவணங்கினனணைந்ததெவனென்னத் ... ...*
திருந்துமொருவிஞ்சையுளதென்றுபலமேன்மை. ... ... *
செப்பியொருபொன்னைவளர்கோடிநிதிசெய்வா ... ...*
மிருந்திடுநிறுத்துபொருடந்திடினிலை ... ... ... ... *
யில்லைநிதிவைக்குமிடமென்னும்வகையின்னே ... ...*
புரிந்திடுதுமென்றிடலுமாடமனைவீடு ... ... ... ... *
பூணிவையகர்ந்தெழில்பொருந்தறமும்விற்றான் ... ...*

(இ-புளா.) காண்பதற்கரியதபசியென்றுநினைக்கும்படிவந்தவனைத் தேவதத்தன்நேரேகண்டு அன்புடன்வணங்கியிங்குச் சுவாமிகள்வந்தகாரணம்யாதோவென்றான் நம்மிடத்தில்ஒருஅதிசயமான வித்தையிருக்கின்றதென்று பலமேன்மைகள்சொல்லி ஒருபொன்னைக் கோடிகோடிப்பொன்னாகச்செய்வோம்ஆதலால் இப்போதுன்னிடத்தி லிருக்கும்உன்பொருளைத்தந்தால் அந்தப்பொருளை வைப்பதற்கு உம் வீட்டிலிடமில்லையென்னும்படியிப்பொழுதே செய்கிறோமென்று ரசவாதிசொன்னான் அந்தவார்த்தையைநம்பித்தேவதத்தனுடைய மேன்மாளிகைவீடுகள்நிலங்கள்ஆபரணங்கள் இவைகளையெல்லாம் விற்றதுமன்றி அழகுபொருந்தியதருமச்சொத்துகளையும்விற்றான்.—(எ-று.) (உஉ)

## அகந்தப்புராணச்சுருக்கப்பொழிப்புரை

அன்னபொருள் கொண்டு ஈரவன் றனையடைந்தே ... ... *
யங்கவன் முன்னைவைத்திடவருங் குகையுளிட்டு ... ... ...*
மன்னுதழறாமமயினோர் தனிதுரட்ப... ... ... ... ... *
மற்றவன் மயங்கநிதிவண் குகைகரந்தே ... .. ...*
பின்னேர் குகையப்படியிருந்தது தன்னைப் ... ... ... *
பிறபெறவைத்துபர் பெரும்புகைகணித்தே... ... ...*
யின்னகையிருங்கனலிலவைத்திடுவென்று ... ... ... *
னென்றிடலுநாய்கனுமெடுத்தழலில்வைத்தான் ... ...*

(இ-புரை.) அந்தப்பொருளைச்சேர்த்துக்கொண்டுதிருட்டுவேஷமுள்ளவனிடத்தில சேர்ந்து அவனெதிரில்வைத்தான்ரசவாதியந்தப்பொன்னை அருமையான ஒருகுகையிலிட்டு நெருட்புட்புகையையவனிகனுக்குநேரோயி குதியாகப்போப்படிஉளதிச்செலுத்திஞன்அந்தப்புகைதன்முகத்திலபட்டவளவில் வணிகன்மயக்கங்கொண்டிருந்தான் அப்போதுரசவாதிப்பானவன்வளப்பமுள்ள குகையையெடுத்துமறைத்துவைத்துக்கொண்டுமறைத்த குகையைப்போலவேயிருக்கில் றம்வொருகுகையைப்பெருமைபெற அவனெதிரிலவைத்து அதிகமாகமேலெழும்பிய புகையைத்தணித்து இந்தக்குகையையிந்தப்பெருந்தீயில்வைத்துவையென்றுன் அவனிவ்வாறு சொன்னவளவில் வணிகனுமவ்வெடுத்துத் தீயில்வைத்தான்.

மூப்பவன்மனத்தைநினைத்துறைநிநீலி ... ... ... ...*
மூன்றொருமைப்புரிபுமுத்தினமகன்று ... ... ... *
லிப்புடையடைந்திடுமென்றவனைவைத்தே ... ... ...*
யேத்தலுநாய்கனுமவ்வெல்லையுமிருந்தே.. ... ... *
யப்படிறனைட்புவிமினேடிதனிகாறு... ... ... ... ...*
தலலவொடுவந்தனனருங்குகையெடுப்பக். ... ... *
கைப்படுதிருங்குகையிருப்புருவமாகக். ... ... ... ...*
கண்டனன்மிகுந்துயர்கலந்தனனிறந்தான். ... ... *

(இ-புரை.) மூன்றுதினம்நம்மைத் தியானஞ்செய்துகொண்டிருநாம்காளிசந்நிதியில ஒருஜெபஞ்செய்து மூன்றுதினம்அகன்றவுடன் இவ்விடத்துக்குவருகமேறு மென்று அவனையங்கேவைத்துப் போய்விட்டான் வணிகன்மூன்றுநாள்வரையிலுமிருந்து அந்தப்பொய்யனைப் பூமியில்மிகுதியாகதம்தடிக்காலுமைபால துன்பம்அடைந்து அரியகுகையையெடுத்துப்பார்த்தான் அவ்வாறுதன்கையிலெடுத்த பெரியகுகையானது இரும்புமயமாயிருப்பக்கண்டு மிகுந்ததுயரம்அடைந்து இறந்துபோனுன்.—(எ-று.) (உ௯)

நற்றருமம்விற்றவொருகுற்றமதுதன்ஞல் ... ... ... ... *
ஞகவுருநண்ணினனெனக்கடிதுணர்ந்தே ... ... ... *
மற்றிவ்வுருவந்தனையகற்றுவனெனுவோர் ... ... ... *
வைகல்புரிதன்றவம்வழங்குதலும்வல்லே ... ... ... *
வெற்றிகொள்களிற்றுருவமற்றமரர்மேனி ... ... ... *
மேவுபுபுகழ்ந்தெழிலின்விண்ணுலகமுற்று ... ... *
னற்றமறுபூசரனுமோனடையிடைமுன்போ ... ... ... *
லருந்தவமுயன்றிடலுமந்தகனடைந்து ... ... ... *

(இ-புரை.) நல்லதருமச்சொத்தினை விக்கிரயஞ்செய்தவொருகுற்றத்தினுல் யானைருபம் பொருந்தினனென்று விரைவில்அறிந்துகொண்டு இந்தஉருவத்தைநீக்குகிறேனென்று ஒருநாள்செய்ததன்தவபலத்தினை அந்தக்கொடுத்தான் - உடனேவெற்றிகொண்டயானைவடிவம்நீங்கித்தேவருபம்பொருந்திக்குச்சகமுனியைப்புகழ்ந்துஅழகுடன்சுவர்க்கலோகத்தைச்சேர்ந்தான்-குற்றமற்றபிராமணனுகிய அந்தக்குச்சகமுனிஓடையினிடத்தில்வந்துமுன்போல்அருந்தவஞ்செய்யஅங்கெயமன்வந்து-எ-று

விருத்தையுயிர்நல்குதலுமன்னவ்வெழுந்தாண் ... ... *
மெய்த்தவன்மகற்கவளைவீறுவ்துவைசெய் ... ... ... *
தருத்திகொள்வடாதுபுலமேகலுமவன்சே ... ... ... *
யன்பினெடுமில்லறமமர்ந்துறையுநாளிற் ... ... ... *
பெருத்திடுவனப்புமிருகண்டெனவோர்பாலற் ... ... *
பெற்றுவடதிக்கிடைபெயர்ந்திடலுமன்னே ... ... *
திருத்தகுமவன்குமரன்முர்க்கலனளித்த .. ... ... ... *
சேயிழைமருத்துவதியைவதுவைசெய்தான் ... ... *

(இ-புரை.)விருத்தையினுடைய உயிரைக்கொடுத்தவளவில் அக்கன்னிகையுயிர்பெற்றெழுந்தாள் அவ்வாறெழுந்தகன்னியைஉண்மையாகியதவமுள்ளகுச்சகமுனிதன்மகனுக்குச்சிறப்புடன்விவாகஞ்செய்வித்துயாவரும்விருப்பமுறுகின்றவடதிசையிற்சென்ருர் - அம்முனியின்புத்திராகியகவுச்சிகர்அன்புடன்இல்லறத்தில்பொருந்திவாழும்நாளில்மிகுந்தசௌந்தரியமுள்ளமிருகண்டனென்னும்ஒருபுத்திரனைப்பெற்றுவடதிசைக்குப்போனுர் பின்புசெல்வம்பொருந்திய கவுச்சிகர்புத்திரர்மூர்க்கலமுனிவரீன்றகன்னிகையாகிய மருத்துவதியை விவாகஞ் செய்துகொண்டார்.—(எ-று.) (உகூ)

மண்டெழில்கொள்காசிநகருற்றரனையுன்னி ... ... ... *
மாதவமுயன்றமலன்மன்னருளினுன்மார்க் ... ... ... *

கண்டனையளித்திடலுமன்னவன்வளர்ந்தே.. ... ... ... *
கண்ணுதலருட்கொடியர்காலனையும்வென்று.. ... ...*
திண்டிறல்படைத்தனனெனச்சொலமறுத்துச்... ... ... *
செல்வமதிகம்மதுபெறச்சிவனைநாடி... ... ... ...*
வண்டவமியற்றிடுதிரொன்றுகடிதேவி ... ... ... ... *
வல்லிதனின்முல்லைநகைமாயவளெழுந்தே.. .. ... ...*

(இ-புரை.) மிருகண்டு மகாரிஷியானவர் மிகுந்த அழகுகொண்டகாசிப்பதியில் அடைந்து விசுவேசுவரரைத்தியானித்துப் பெருமைபெற்றதவஞ்செய்து அந்தநிருமலமூர்த்தியின் அழிவுபடாத திருவருளினால் மார்க்கண்டனென்கிற ஒருபுத்திரனைப்பெற்றார் அந்தப்புத்திரன் வளர்ந்து நெற்றிக்கண்ணுள்ள சுவாமியின் திருவருளைப்பெற்றுஉயர்ந்த எமனையும்வென்று தவத்தினால் மிகுந்தவல்லபம் பெற்றிருந்தானென்றுகாசி பரிஷிசொல்ல மாயையானவள் அந்தவார்த்தையைத்தடுத்துச்சூரனைப்பார்த்துநீங்கள்இவ்வார்த்தையைக்கேட்கவெண்டுவதில்லைமிகுந்தசெல்வம்பெறும்படி-பரமசிவனைத்தியானித்துவண்மைகொண்டதவஞ்செய்யுங்களென்றுசொல்லி விரைவிற்போம்படி அனுப்பிவிட்டுமுல்லையரும்பினையொத்தபற்களுள்ள அம்மாயைஉடனேயெழுந்து.(எ-று.)

ஏருறுமருந்தவவிருத்தியகல்கின்றே ... ... ... ... ...*
னென்றவணடந்திடலுமேகன்முறையோவென் .. ... *
றூரிடர்பொருந்தியவள்பின்படரவன்னை. ... ... ... ...*
ளன்பினொடுமைந்தரையளிப்பதுபொருட்டால்.. ... *
வாரிதிநிலத்திலுனைநண்ணினனியாமேர் ... ... ... ...*
மாயையெனவோதினண்மறைந்திடலுமுள்ளஞ்... ... *
சோர்வுறவருந்தவிதிவந்துசிலபுந்தி ... ... ... ... ...*
சொல்லியகலத்துயர்துறந்தினிதிருந்தான் ... ... *

(இ-புரை.) அழகுள்ள அருமையானமுனிவரே நீரிவ்விடத்திலிரும்நான் போகின்றேனென்றுசொல்லி மாயைநடந்திடலும் காசிபரானவர்மாயையைநோக்கிநீபோய்விடுதல்முறைமையோவென்றுசொல்லிமிகுந்ததுயரங்கொண்டுஅவள்பின்தொடர்ந்தார்-அவள்அன்புடன்புத்திரர்களைப்பெறும்பொருட்டாகச் சமுத்திரஞ்சூழ்ந்த இந்நிலத்தில் உம்மிடத்திற்குவந்தேன் நானோமாயையென்னும் பெயருள்ளவளென்றுசொல்லிமறைந்துவிட்டாள்காசிபமுனிவர்மனஞ்சோர்வுபொருந்தவருந்தமடையும்போதுபிரமதேவன் வந்துபலபலபுத்திகள்சொல்லிப்போகப் பின்பு அம்முனிவர் துயர்நீங்கியினிதாகவிருந்தார்.—(எ-று.) (உ௮)

முன்னெனவடங்குதரெடங்கினன்மடங்கன்... ... ... ...*
முகத்தனுமடற்கரிமுகத்தனுமுகத்தீற் ... ... ... *
றின்னலுறவேழ்கடலுமொன்றுபடுமாபோ... ... ... ...*
லெங்குநிறைதானையுமிலங்குபுடைமேவ... ... ... *
வொன்னலர்நடுங்கவருசூரனொருபாலி.... ... ... ... ...*
னெல்லையினடைந்திடலுமுந்துபுகர்வந்தே ... ... *
யந்நிலைமகத்தொழிலினைத்தெனவினைத்து .. ... ... ...*
மங்கவனறிந்திடவறைந்தனன்மறைந்தான்.. ... ... *

(இ-புரை.)காசிபரிஷிமுன்போல்ப்பஞ்சேந்திரியங்களையுமடக்கித்தவஞ்செய்துகொண்டிருந்தார் - சிங்கமுகாசுரனும்பலம்பொருந்தியயானைமுகமுள்ள தாருகாசுரனும் ஊழிகாலமுடிவில்யாவருந்துன்பமுறவேழுகடலும் ஒன்றுபடுமாறும்போல் எங்குநிறைந்தசேனையும் விளங்குகின்ற தன்பக்கத்தில் சூழ்ந்துவரவும்பகைவராயிருப்பவர்கள்நடுங்கவும் வருகின்றசூரன்ஒருபுறத்தில்விரைவாக அடைந்திடலும் சுக்கிரபகவான் அங்குவந்துசூரனைக்கண்டு அங்கிருந்தபடியே யாகஞ்செய்யுமுறைமையித்தன்மை யானதென்று அதற்குவேண்டியவைகளையெல்லாம் அவன்தெரிந்துகொள்ளும்படிசொல்லிமறைந்துபோனார்.(எ-று.) (௨௧)

பண்டெனவடாதுபுலமேவியசுரேசன்... ... ... ... ...*
பாங்குபுனைமாயைபொருளாங்குறவியற்ற. ... ... *
வண்டர்புகழ்வேள்விபதினாயிரமதாகு... ... ... ... ...*
மாண்டுசெயவாண்டுநமைபாண்டவனடைந்தே... ... *
மண்டருள்செயாதவதுகண்டவுணர்மன்னன் ... ... ...*
வானிடையெழுந்துதசையானவையரிந்து.. ... ... *
குண்டமதிலாயிரமொராண்டுநனிசிந்தத் ... ... ... ...*
குன்றவிலிவந்திலன்மகத்தெரியில்வீழ்ந்தான்.... ... *

(இ-புரை.)பூர்வந்தவஞ்செய்தவர்களிருந்தபழமைபோலவேசூரனவன் வடதிசையிற்சென்றிருந்து அசுரேசனென்பவன்பாங்குசெய்துவளர்த்தமாயையானவள் யாகத்துக்குவேண்டியபொருள்களையெல்லாம் அவ்விடத்திற்பொருந்தியிருக்கும்படிசெய்யத்தேவர்களாற்புகழப்படும்யாகம் பதினாயிரவருஷம் செய்தான் அவ்வாறுசெய்தும் நம்மையாட்கொள்ளும்பரமசிவன் அவ்விடத்திலெழுந்தருளிநிறைந்த கிருபைசெய்யாமலிருப்பதைக்கண்டு அந்தச்சூரன் ஆகாயத்தின்மேல் எழும்பியிருந்துகொண்டுதன்சரீரமாமிசங்களையெல்லாம்அரிந்து ஆயிரம்வருஷம்

ஓமகுண்டத்தில் மிகுதியாகச்சிந்தினன் அப்போதும் பரமசிவனெழுந்தருளிவரவில்லை அதற்குமேல்சூரனுனவன் அந்தஓமாக்கினியில் விழுந்திறந்தான்.—(எ-று-) (௩௰)

தீயிடைமடிந்ததுதெரிந்தரிமுகத்தோன் ... ... ... ...*
சென்னிகளரிந்துமகவன்னிமிசைசிந்தி ... ... ... *
மாய்வுறநினைப்பமறையோனுருவமாகி... ... ... ... ...*
வந்துபரனெந்திடுவதென்னெனலுமன்னோ. ... ... *
ஞயிடைநிகழ்ந்தசொலவீரமுறுசூர ... ... ... ... ...*
னங்குறவெழுப்பிமறையோனுருவகன்று.... ... ... *
காயமிசைபெற்றமிசைமாதொடுவிளங்கக் ... ... ... ...*
கண்டடிபணிந்தவுணர்காவலன்மகிழ்ந்தான் ... ... *

(இ-புரை.) சூரனுனவன்ஓமாக்கினியில்விழுந்து இறந்ததைச்சிங்கமுகாசுரன்அறிந்து தன்சிரசுகளைஅரிந்து யாகத்தீயில் சிந்திமாயும்படி நினைத்தான் அப்போதுபரமசிவன் பிராமணவுருவங் கொண்டுவந்துசிங்கமுகாசுரனைப்பார்த்து நீவருந்துவது யாதுகாரணமென்னவென்றருளலும் அவன் அப்போது நிகழ்ந்ததைச்சொல்ல வீரமுள்ளசூரனுனவன்அங்குவரும்படி எழுப்பிப் பிராமணவுருவம் நீங்கி ஆகாயத்தில் ரிஷபவாகனத்தின்மேல் பார்வதிதேவியாருடன் காடசிதந்தருளிச்செய்யச் சூரன்தரிசித்துச்சுவாமியின்திருவடிகளைவணங்கிமகிழ்ச்சிகொண்டான்.

இன்னருளரன்புகலவனிங்கெமைநினைந்தே ... .. ... ...*
யெண்ணில்பகனற்றவமியற்றினைமனத்தி.... ... ... *
லுன்னியதுகேளெனவுரைத்திடவுரைப்பா ... ... ... ...*
னுந்துபுவிகொண்டபலவண்டமரசாள ... ... ... *
மன்னியழிபாமலுறயாவரையும்வென்றே ... ... ... ...*
வாழ்வுறவெனப்பலவரங்களதிரப்பச். ... ... ... *
கன்னியொருபாலுடையகண்ணுதலவிறைவிக் ... ... ...*
கண்டுதொழுசூரனெடுகட்டுரைசெய்கிற்பான்... ... *

(இ-புரை.) இனிதாகியகிருபையுள்ள பரமசிவன்சூரனைநோக்கி அருளிச்செய்கிறார் நம்மைநினைந்து அளவில்லாதகாலம்நலலதவஞ்செய்தாய் ஆதலால்உன்மனதில்நினைந்ததுகேளென்று திருவாய்மலர்ந்தருளச்சூரன்சொல்லுகின்றான்புவிகளைக்கொண்டபலஅண்டம்அரசாளவும்நிலைபெற்றுஅழியாமலிருக்கவுஞ்எல்லாரையும்வென்றுவாழவுமாகப்பலவரங்களிரந்தான்பார்வதிதேவியாரையிடப்பாகத்திலுடைய பரமசிவன்விறைவித்தம்மைத்தரிசித்துத் தொழுதசூரனுக்குக் கட்டுரைத்தருளுகின்றார்.—

மண்ணதனிலாயிரமதாகிவளர்கோடி ... ... ... ... ...*
மண்டுபுகழண்டமுளமற்றவைதனக்கு ... .. ... *
ளெண்ணிலதுமாயிரவொமொட்டளவைநூறு .. ... ... ...*
டெட்டுகமிருந்தரசியற்றிடுதியென்றே ... ... ... *
தண்ணளியினோடருள்நெஞ்சினுமவிளைந்தே ... ... ...*
சாருமொருதேருமொருசக்கரமுநல்கிப்... ... ... *
பண்ணவர்களஞ்சுமொருசிங்கமுமளித்துப்... ... ... ...*
பன்மையுறுவண்மைகொள்படைக்கலமுநல்கி.... ... *

(இ-புளா.) நிறைந்தபுகழுள்ள ஆயிரங்கோடி அண்டங்களிருக்கின்றன அந்தஅண்டங்களுக்குள் ஆயிரத்தெட்டென்கிற எண்ணிக்கையுள்ள அண்டங்களை நூற்றெட்டுயுகம் நீஆயுளுள்ளவனாய்ப் பூலோகத்திலிருந்து அரசாட்சிசெய்துகொண்டிருமென்று சாந்தமுள்ள கிருபையுடன் அருளிச்செய்து மனவேகத்தைப்பார்க்கிலும் அதிகவேகமாகச் செல்லத்தக்க ஒருதேரும் ஒருசக்கராயுதமுங்கொடுத்துத்தேவர்கள்அஞ்சும்படியான ஒருசிங்கமுங்கொடுத்தருளிப்பின்னும் பலங்கொண்ட பலபலஆயுதங்களுங்கொடுத்தருளி.—(எ-று) (௩௩)

வேறுபதினாயிரமுடன்றழுவுகோடி ... ... ... ... ...*
வெள்ளமுறுதந்திமிகுவெந்திறல்கொடேர்கள்... ... *
பேறுறுபரித்திரள்கடற்றகுவர்சேனை .. ... ... ... ...*
பிஞ்ஞகனளிப்பவதுபின்னரரன்முன்னர்.... ... ... *
சீறரிமுகத்தனொடுதாருகன்வணங்கத்.... ... ... ... ...*
தீரமுறுசூரனெனவீரமதளித்து ... ... ... ... *
வீறுநமதானதொருசத்தியலதும்மை... ... ... ... ...*
வெல்லுமவரியாரெனவிளம்பியகலுற்றான். ... ... *

(இ-புளா.) இவைகளுமல்லாமல் பதினாயிரங்கோடிவெள்ளமென்கிற தொகைபொருந்திய யானைகளும்மிகுந்தயான உறுதிபெற்றதேர்களும் அஞ்சுவிதகதிமுதலானபேறுகள்பொருந்திய குதிரைக்கூட்டமும்பலமுள்ள அவுணச்சேனைக்கடலும் பரமசிவன்கொடுத்தருளினார் அதன்பின்பு சீறுகின்றசிங்கமுகமுள்ளவனும் தாருகனும்சுவாமிக்கெதிரில்வந்து வணங்கினார்கள் அவர்களுக்கும் தீரமுள்ள சூரனுக்குக்கொடுத்ததுபோலவே வீரங்கொடுத்தருளிவீறுகின்ற நம்முடையதான ஒருசத்தியல்லது உங்களைவெல்லுகின்றவர்கள் யாருமில்லையென்றுசொல்லி மறைந்தருளினார்.—(எ-று) (௩௪)

கண்ணுதலகன்றிடவகன்றபடையோடுங் ... ... ... ... *
காசிபனிடத்தவுணர்காவலனடைந்தே ... ... ... *
யுண்ணயமொடும்பணியவங்கவனுரைப்பா ... ... ... ...*
னுங்கள்குருவெள்ளியிடையுற்றிடுதியென்ன ... ... *
வண்ணமுறவன்பதமடைந்துபுகர்நேரே ... ... ... ...*
வந்திடவுவந்தடியில்வந்தனைபுரிந்தா... ... ... *
னண்ணியிடுதேசிகனுமாசிபலபேசி ... ... ... ... ...*
நஞ்சனையசூரனொடுநன்மனைபுகுந்தான் ... ... ... *

(இ-புரை.) பரமசிவன்மறைந்தருளினவுடன் விஸ்தாரமாகிய சேனையுடன் சூரனானவன் காசிபரிடத்திற்சேர்ந்து மனவிருப்பத்துடன் பணிந்தான் அவர் உங்கள்குருவாகிய சுக்கிரனிடத்திற்குப்போங்களென்றுசொல்ல அவர்சொல்லிவிட்டபடியே அழகுபொருந்திய சுக்கிரனுலகத்திற்செல்லும்போது அந்தச்சுக்கிரபகவான் எதிரிலவரக்கண்டு சந்தோஷித்து அவர்பாதத்தில் வந்தனைசெய்தான் அங்குவந்தகுருவாகிய சுக்கிரபகவான் பலவாகஆசீர்வசனஞ்சொல்லிவிஷம்போலக் கொடியவனாகியசூரனை அழைத்துககொண்டுதம்முடைய நலலமாளிகையிற் சேர்ந்தார்.—(எ-று) (௯௫)

மற்றொருபெருந்தவிசளித்ததிலிருத்தி... ... ... ... *
வந்ததெவனென்றிடலுமன்னவுணர்மன்னன் ... ... *
வெற்றிபுரிவேள்வியதியற்றியதுமுக்கண் ... ... ... *
வித்தகனடைந்துபுகழ்மெத்தியவரங்க ... ... ...*
ளற்றிறலளித்ததுமொளித்ததுமதற்பி ... ... ... ... *
னன்குபெறுதந்தையிடைநண்ணியதுமன்னான் ... ...*
சொற்றதுமுரைத்தினியியற்றுநெறியெந்தாய்... ... ... *
சொலகவெனமல்குபுகர்சூரனொடுகூறும் ... ... ...*

(இ-புரை.) சூரனுக்குமேவொருபெரிய ஆசனங்கொடுத்து அதிலிருக்கச்செய்து நீயிங்குவந்ததேதென்று சுக்கிரபகவான்வினவினார் அங்கிருந்தசூரன்தான்வீரயாகஞ்செய்ததும்அங்கேதிரிநேத்திரதாரியாகியபரமசிவனெழுந்தருளிப்புகழ்மிகுந்தவரங்களும் மிகுந்தபராக்கிரமமும் அருளிச்செய்ததும் உடனேமறைந்துவிட்டதும் அதன்பின்புநன்மைபொருந்தியதன்பிதாவினிடத்தில்தான்சென்றதும் அவர்சொல்லியதுஞ் சொல்லிஎம்முடையஐயனே இனி அடியேன்செய்யும் முறைமையாதோ அதனைக்கட்டளையிட்டருளவேண்டுமென விண்ணப்பஞ்செய்ய மகத்துவமிகுந்தசுக்கிரபகவான் சூரனுக்குச்சொல்லுகிறார்.—(எ-று.) (௯௬)

ஆவியெனவொன்றிலையருந்தளையுமித்தை ... ... ... *
யண்ணலுருவங்கடொறுமடங்கடவினத்துண்... ... ...*
மேவியவியோமமெனமேவியழிவின்மூன் ... ... ... *
விண்ணெனவிருப்பன்வினைபுண்ணியமுமயன்று ... ...*
லீவவையென்னபலன்மித்தையதனுனீ ... ... ... ...*
யின்னவறமின்னமறமென்னவுளமுன்னேற் ... ... *
றேவரைவருத்துதி மகத்திறைநுமக்குத் ... ... .. ...*
தெவ்வனவனைச்சிறைசெய்செய்தியிதுசெய்தி ... ... *

(இ-புரை.) உயிரெனவேறேயொன்றுமில்லை அரியபந்தமாகியபாசமென்பதும்பொய்சிவமானது அழகியகடங்கள்தோறும் பொருந்திய ஆகாயம்போல்தோற்றப்படுகிறசரீரங்களுக்குள்ளெங்குமாய்ப்பொருந்தியிருக்கும்உடைந்தால்அதிலிருந்தஆகாயம்ஆகாயமேயாவதும்போல்சரீரங்கள் அழியுங்காலத்தில்சிவமாகவேயிருக்கும் பாபபுண்ணியங்கள் செய்தால் அந்தப்பாபத்துக்குத்தக்க துக்கத்தையும்புண்ணியஞ்சுகத்தையுந்தருமென்றுசொல்லுவதும்பொய்ஆகையால் இன்னதுதருமம்இன்னது பாவம்என்றுமனதில்நினையாதேதேவர்களையேவருத்தப்படுத்துவனெனில்தேவேந்திரன் உங்கள்குலத்துக் கெல்லாம்பகைவன் அவனைச்சிறையில்வை இதுதானுனக்குநான்சொல்லுஞ்செய்தி.—(எ-று.) (௩௭)

கூடரியவாயிரவொரெட்டளவையண்டங் ... ... ... ...*
கூடியவைகண்டுவிறல்கொண்டனைதிரும்பி ... ... *
யீடுசெறிதேவரொடுதாபதர்களிங்குன் ... ... ... ...*
னேவலதியற்றிடவியற்றுபுவிருத்தி.... ... ... ... *
நீட்டியகொலைத்தொழின்முதற்பவமனைத்து ... ... ...*
நிந்தனையெனக்கருதனீபுரிதியென்றே. ... ... ... *
நாடுபுகழ்சூரனுடனிவ்வகைமறைக்கோ ... ... ... ...*
னல்லனவிலக்கியவையல்லனவுரைத்தான்.... ... ... *

(இ-புரை.) எளிதிற்செல்லுதற்கரிய ஆயிரத்தெட்டென்னுந்தொகையுள்ள அண்டங்களுக்கும்போய்அவைகளைக்கண்டுசெயங்கொண்டுதிரும்பிப்பெருமைபொருந்தியதேவர்களும்முனிவர்களும்இங்குஉன்னேவற்பணிசெய்யக்கட்டளையிட்டு அங்கேதானே யிருக்கச்செய்து மிகுந்தகொலைபாதகமுதலாகியபாவங்களெல்லாம் நிந்தனைக்கேதுவானவைகளென்றுகருதாமல் நீசெய்யென்று உலகங்கள்புகழும் சூரனுடன்சுக்கிரபகவானிவ்வகையாக நல்லதுகளைவிலக்கிநல்லவையல்லாதகாரியங்களைச்சொல்லி.—(எ-று.) (௩௮)

அற்றமறுமாயிரவொரெட்டளவையண்டத் ... ... ... ...*
தங்கவனதிந்திடவொரண்டவியல்போதிக்.... ... ... *
கொற்றமுறமேவுகுதியெனப்படைகண்மும்மைக் ... ... ...*
கோடியுறுயோசனைபரப்பிவரவேகி.. ... ... ... *
வெற்றிகொளுருத்திரனலாதநிசையோரை ... ... ... ...*
வென்றிகொடுபாதலமிழிந்தவரைவென்றே ... ... *
நற்றுதிபெறும்படியின்முந்தெனவணைந்து... ... ... ...*
நத்துறுகரத்தனுறுநற்கடலடைந்தான். ... ... ... *

(இ-புரை.) குற்றமில்லாத ஆயிரத்தெட்டென்னும் எண்ணிக்கையுள்ள அண்டங்களில் ஒருஅண்டத்தின் இயல்பினைச்சூரன் அறியும்படி சொல்லி நீயினிச்செயம்பொருந்தச்செல்லென்றார் சூரனவ்விடம்விட்டுப்புறப்பட்டுத் தன்சேனைகள்மூன்றுகோடி யோசனைதூரம் பரப்புள்ளதாகச்சூழ்ந்துவரச்சென்று வெற்றிபொருந்திய ஈசானியமூர்த்தி நீங்கலான மற்றவெழுதிக்குப்பாலரையும் பொருதுசெயங்கொண்டு பாதாளலோகத்திலிழிந்து அவரையும்வென்றுமிகுந்ததுதிகொண்ட பூலோகத்தில்முன்போலஅணைந்து சங்குசக்கரமேந்திய கைகளுள்ளவிஷ்ணு பள்ளிகொண்டிருக்கும் நல்லபாற்கடலில்சேர்ந்தான்.—(எ-று.) (௩௧)

(சூரனிவ்வாறுசேர்ந்தவுடன்)

தற்றவுணரக்கடல்கலக்குதலுமாயன் ... ... ... ... ...*
சாபநவிர்தண்டிவளைசக்கரமெடுத்து . ... ... ... *
வெற்றியுவணத்தின்மிசையேறிநனிசீறி ... ... ... ...*
வீறுகொலைசெய்யவுணவெய்யரொதிர்சென்றே... ... *
கொற்றமுகிலென்னமிகுவாளிகள்சொரிந்தே ... ... ...*
கோளவுணர்சேனைபலகொல்லவதுகண்டே ... ... *
செற்றமொடுதாருகனரிக்கெதிர்புகுந்தே ... ... ... ...*
தீயகணைமாரிபலசிந்தியமர்செய்தான் ... ... ... *

(இ-புரை.) நெருங்கியஅவுணர்கள் அந்தப்பாற்கடலைக்கலக்கினமாத்திரத்தில் விஷ்ணுவானவர் கோதண்டமென்னும்வில்லும்நாந்தகமென்னும்வாளும் கௌமோதகியென்னுந்தண்டமும்பாஞ்சசன்னியமென்னும்சங்கும் சுதரிசனமென்னும்சக்கரமும் எடுத்துக்கொண்டு வெற்றிபொருந்திய கருடன்மேலேறிமிகுதியாகக் கோபித்துக் கொலைத் தொழில் செய்யும் அவுணர்களாகிய கொடியவர்களெதிரிற்சென்று வென்றியுள்ளமேகம்போல் அளவில்லாதபாணங்களைச்சொரிந்துபலருள்ளஅவுண

ச்சேனையில் அநேகம்பேரைக்கொன்றார் அதனைத் தாருகாசுரன் கண்டு கோபத்துடன் விஷ்ணுவுக்கெதிரிற்போய்க் கொடியபாணவருஷங்கள் அனேகமாகப்பொழிந்து போர்செய்தான்.—(எ-று.) (சய)

கண்ணனதுபோதுகணைமாரிகள்சொரிந்தே... ... ... ...*
கையனுறுகின்றசகடத்திணையழிப்ப.. ... ... ... *
வெண்ணுமொருதேரனுகிமாயனுடன்மீது.... ... ... ...*
மேறுவணமீதினுமிராயிரநெடுங்கோ ... ... ... *
றண்ணைவிடுப்பவரவின்பகைவருந்தத்.... ... ... ...*
துங்கநெடுமாலளவிலங்கமதுகொண்டே.... ... ... *
நண்ணியெதிர்போர்புரியவன்னபடிகொள்ளா ... ... ...*
நாலுதினமாவிரெறுநற்சமர்புரிந்தான் ... ... ... *

(இ-புரை.) அப்போது விஷ்ணுவானவர் பாணவருஷம்பொழிந்து வஞ்சகனாகிய தாருகனேறிக் கொண்டிருக்கிற தேரையழித்தார் அவன் உடனே மதிக்கத்தக்கவேறொரு இரதத்திலேறிக்கொண்டு விஷ்ணுவினுடலின்மேலும் அவரேறிக்கொண்டிருக்கிறகருடன்மேலும் நெடியதானஇரண்டாயிரம்பாணங்களைவிரைவிற்பிரயோகித்தவளவில் அவைகள் படம்வசாப்பங்களுக்குப்பகையாகியகருடன்வருத்தமுற்றான் அதுதெரிந்துவல்லபமுள்ளவிஷ்ணுவானவர்மாயையினாலஅநேகமாகியசரீரங்கொண்டுஅவனெதிரிற்சேர்ந்துபோர்செய்தார்அவனும் அவ்வாறேபலசரீரங்கொண்டுநாலுநாள் விஷ்ணுவுடன்மிகுந்தபோர்செய்தான்.—(எ-று) (சக)

அப்பொழுதுமாயனொருகோடிகணைவிட்டே. ... ... ...*
யண்டாபகைவன்றனதுருஞ்சமர்வில்லுநீ. ... ... *
துப்பொடுதுணிப்பவொருதண்டமதுகொண்டு ... ... ...*
தூயபுகழ்மாயனெதிர்சூரிளவலேக. ... ... ... *
மெய்ப்படுபெருங்கணைதெரிந்தரிசொரிந்தான். ... ... ...*
வீறுகதைகொண்டவவிலகியெதிர்செல்லத்... ... *
தப்பிதிகிரிப்படைவிடுத்திடவிரைந்தே.. ... ... ... ...*
தானவன்மிடற்றினிடைதங்கியதுமாதோ... ... ... *

(இ-புரை.) விஷ்ணுவானவர் கொடியபாணம்விட்டுத்தேவர்கள் பகைவனாகிய தாருகனுடைய அருமையானதேரையும் வில்லையும் அவன்பலத்தையுந் துணித்தார் அதுகண்டுசூரன்தப்பி ஒருதண்டாயுதமெடுத்துக்கொண்டு நிர்மலமாகிய புகழ்மேவிய விஷ்ணுவெதிரில சென்றான்- அதைக்கண்டுதன்மையுள்ளவிஷ்ணுவானவர்விலக்கக்கூடாதபாணங்களையே

வினர் - தாருகன்தன்கையிலிருக்குங்கதாயுதத்தால் அந்தப்பாணங்களை விலக்கிக்கொண்டு எதிரிற்செல்ல விஷ்ணுவானவர் பழுதுபடாதசக்கரத்தையேவினர் அதுவிரைந்துசென்றுதாருகன்கண்டத்தினிடத்திற்பொருந்தியது.—(எ-று) (சஉ)

அங்கவன்மிடற்றினிடையாபரணமாகி... ... ... ... ...*
யாழியுறவாழியெனவாசிகளறைந்தே ... ... ... *
பொங்குதிறன்மாயவனகந்தனில்வியந்தே ... ... ... ...*
போகவொருதேரின்மிசைபோரவுணனேறித் ... ... *
தங்கமுறமுன்னெதிருறக்கடிதுபுல்லிச் ... ... ... ...*
சூருளமகிழ்ந்துபுடைதுன்றுபடையோடுஞ் ... ... *
செங்கதிரருக்கன்முதலானவர்பழிச்சத் ... ... ... ...*
தீதறுதுறக்கநகர்சென்றணுகினனால் ... ... ... *

(இ-புரை.) அவனுடைய கழுத்தினிடத்தில் சக்கரமானது ஆபரணம்போலாய்ப் பொருந்தவே மிகுந்தவெற்றியையுடையவிஷ்ணுவானவர் தாருகனைப்பார்த்து நீவாழ்ந்துகொண்டிருக்கக்கடவையென்று ஆசீர்வசனஞ்சொல்லிமனதில்அதிசயப்படடுக்கொண்டுபோய்விட்டார்அதன்பின்பு போர்செய்யுந் தாருகனனவன்ஒருதேரின்மேலேறிக்கொண்டுபலம்பொருந்திய தன்தமையனுகிய சூரனுக்கெதிரிற்சென்றுன் அவன்தம்பியைக் கண்டவுடன் அணைத்துக்கொண்டு மனமகிழ்ந்து தன்னருகில் சூழ்ந்திருக்கும் சேனையுடன் செங்கதிரையுடைய சூரியன்முதலான தேவர்கள்துதிசெய்யப் பழுதில்லாதசுவர்க்கநகரத்திற்சென்றுசேர்ந்தான்.—(எ-று)

அங்கணிதுகண்டுசிலவொற்றர்களுரைப்ப. ... ... ... ...*
வஞ்சியிடர்கொண்டுகுயிலாகிமகவானு ... ... ... *
மங்கையுமகன்றனர்கொடுந்தகுவர்தேடி ... ... ... ...*
மம்மருறவிண்ணவரைவன்மையொடுபற்றி. ... ... *
வெங்கதமொடுங்கடிதடித்தனர்பிணித்து. ... ... ... ...*
வீரமுறுசூரனெதிர்விட்டிடலும்விண்ணோர் ... ...*
பொங்குபுகழாசிமுகமன்சொலவிடுத்துப் ... ... ... *
போகமகலோகமிசைபோயணுகினனால் ... ... ...*

(இ-புரை.) அவ்விடத்திற்சூரன் வருகிறதைச் சிலஒற்றர்கள்கண்டு சொல்லத்தேவேந்திரனும் இந்திராணியும் பயந்து துன்பங்கொண்டு குயிலாகிய பக்ஷிவடிவங்கொண்டு பறந்துபோய்விட்டார்கள்- கொடுமையுள்ள அவுணர்கள் தேடிப்பார்த்துத் தேவர்கள் மயக்கங்கொள்ளவலிவு

டன்பிடித்து மிகுந்தகோபங்கொண்டு ஓயாமலடித்துக்கட்டிவீரம்பொ ருந்தியசூரனுக்கெதிரில்கொண்டுபோய்விட்டார்கள்அந்ததேவர்கள் சூ ரனைநோக்கிஅவன்கீர்த்திகளையெல்லாம்எடுத்துப்பேசிஆசீர்வசனமும்உ பசாரவார்த்தையுஞ்சொல்லினார்கள்அதைக்கேட்டு அவர்களைவிடுத்துவிட் டுப்போகங்கள்நிறைந்துள்ளமகாலோகத்தினிடத்திற்போய்ச்சேர்ந்தான்

அந்தமகலோகமுதலானவுலகெல்லா... ... ... ... ...*
மண்பொடுதெரிந்தவணமர்ந்தவர்வழுத்தக் ... ... *
கொந்தலர்நெடுந்தொடைகொடானவர்கண்மன்னன் ... ...*
கோகனகபீதிலுறைகோனகர நண்ண ... ... ... *
வந்தனனுமிவ்வகையறிந்தெதிரடைந்தே ... ... ... ...*
யாசிகள்புகன்றிடலுமங்கவனைவைத்துச்... ... ... *
செந்திருவிளங்குதிருமார்புடையசெம்மல்... ... ... ...*
சேருமுலகத்தினிடைசேனையொடுமுற்றான் ... ... *

(இ-புரை.) அந்தமகலோகமுதலான உலகங்களையெல்லாம் விருப் பத்துடன்பார்த்து அவ்வுலகங்களிலிருப்பவர்களெல்லாரும் வாழ்த்துத லைக்கண்டு மகிழ்ச்சிகொண்டு அதற்குமேல்கொத்தாகியமலரால் தொடுக் ப்பட்டநீண்டமாலையணிந்திருக்கும்அவுணர்களுக்குஅரசனாகியசூரனை வன்தாமரைப்பூவின்மேல்வீற்றிருக்கும்பிர்ம்மதேவனுலகத்திற்சேர்ந்தா ன்பிர்ம்மதேவன் சூரன்வந்ததையறிந்து எதிர்சென்று ஆசீர்வசனங்கள் சொல்லஅவ்விடத்திலபிர்ம்மதேவனிருக்கும்படி நிறுத்திவிட்டுத்திருமக ள்விளங்கிக்கொண்டிருக்கிறஅழகுள்ளமார்பையுடைய விஷ்ணுவானவர் வீற்றிருக்கும்உலகத்தினிடத்திலநெருங்கியசேனையுடன்போனான்.(எ-று

அவ்விடையின்மாயவனுணர்ந்தெதிர்பொருந்தி... ... ...*
யாசிகளுரைத்திடவருத்தியொடிருத்தி... ... ... *
வெவ்விடையுகைத்தருள்பரம்பொருளிருக்கும்... ... ...*
வீறுலகடைந்தனிகவெள்ளமதிகந்து ... ... ... *
தெவ்வர்புகழ்நந்திவிடவந்திதிறமேனித் ... ... ... ...*
தேவனைவணங்கவருள்செய்தருளியேனை... ... ... *
யெவ்வமறுமண்டவகைகண்டரசுசெய்தே... ... ... ...*
யின்பொடுறைகென்னவிடைகொண்டுபுறமெய்தி ... *

. (இ-புரை.) அவ்விடத்திலிருந்தமாயவன்அறிந்துஎதிரில்வந்து ஆசீ ர்வாதஞ்சொல்ல அதைக்கண்டசூரன் விருப்பத்துடனேவிஷ்ணுவைஅங்

கேஇருக்கவைத்து அவ்விடம்விட்டு நீங்கிப் பகைத்தவர்களுக் குக்கொடிய தானரிஷபவாகனமேறிச்செலுத்துகின்ற பரமசிவன் வீற்றிருக்கும்மே ன்மைபொருந்தியசிவலோகத்திற்குப்போய்த்தன்சேனைகளை நீங்கித்தனி யேசென்றுபகைப்பவர்களும்புகழும்நந்திதேவரைக்கண்டு அவர்சுவாமி சந்நிதிக்குள் போம்படிவிடுக்கச்சென்று அந்நிப்பொழுதில்தோன்றும் செக்கர்வானிறம்போலச் சிவந்ததிருமேனியுள்ள பரமசிவனைவணங்கிஞ ன் அவரவனுக்குக்கிருபைசெய்து குற்றமற்ற அண்டவகைகளையுங்கண் டுஅரசுசெய்து இன்பமுடன்வாழ்ந்து கொண்டிருவென்றுதிருவாய்மல ர்ந்தருளினவுடன்சூரன்விடைபெற்றுக்கொண்டுவெளியில்வந்து-(எ-று.)

துங்கமுறுசேனையொடுகூடியதன்மீதே... ... ... ... *
துன்றுபுகழண்டவகைதோறுமினிதேகிப் ... ... ...*
பொங்கவுணரிற்சிலவரங்குறவிருத்திப் ... ... ... ... *
பொன்னுலகினண்ணவவனன்னையையளித்த... ... ...*
செங்கணசுரர்க்கிறைதன்மேன்மைகளனைத்துந்... ... ... *
தீதில்புகர்சூழ்மொழிதெருட்டுறவிடுத்து... ... ...*
மங்கலினயப்பிறைந்துவந்துதொழலோடு... ... ... ... *
மற்றவனொடும்புவியின்மன்னவணடைந்தான் ... ...*

(இ-புரை.) பலம்பொருந்திய சேனையுடன் சேர்ந்து அதற்குமேல் பொருந்தியபுகழுள்ள அண்டவகைதோறு மின்பமுடன்சென்றுமிகு ந்த அவுணர்களிற்சிலர் அவ்விடங்களிலிருக்கும்படிசெய்து சூரன்தேவ ருலகத்தில்வந்து சேர்ந்தபோது அவன்தாயைபீன்ற செங்கண்ணுள்ள அசுரேசனுனவன் சுக்கிரனிடத்துக்குப் போய்த்தன் மேன்மைகளையெல் லாம்சூரனுக்குச் சொல்லும்படியனுப்பிக் கெடுதலில்லாத சந்தோஷத் துடன்அசுரேசன்சூரனிடத்தில்வந்துதொழச்-சூரனுனவன் அசுரேசன்த ன்னுடன்வரும்படிபூலோகத்திலவந்துசேர்ந்தான்.—(எ-று.) (சஎ)

[வேறு]

இந்தவேலையிந்திரனயனமரர்களிலங்குபாற்கடன்மேய ... *
வுந்திபூத்தவனனைவருங்குழுமியேயோர்ந்துதானவமேனரே... *
வந்துயாழ்த்துனைசொற்றனர்நிற்றலுமற்றவர்தொகைபூடே ...*
யுந்துசீருடைப்பதிஞெருகோடியாமுருத்திரர்தலைக்கண்டான்*

(இ-புரை.) சூரன் பூமியில்வந்திருக்கும் சமையத்தில் தேவேந்திர ன் பிரம்மதேவன்தேவர்கள்-பிரகாசிக்கும் பாற்கடலில் பொருந்திய வி ஷ்ணு என்னுமிவர்களெல்லாரும் ஒன்றுகச்சேர்ந்து தங்களுக்குள் ஆ

லோசனைசெய்து கொண்டுசூரனெதிர்வந்து வாழ்த்துரைசொல்லிநிற்க அவர்கள்கூட்டத்தில் எங்கும்பரவிய சீரினையுடையபதினொருகோடி ருத்திரர்களைக்கண்டான்.—(எ-று.) (சஅ)

துண்டமாமதிகடுத்தவாளெயிற்றடற்சூரனுமசுரேசன் ... ...*
வண்டுலாவருமிதழியந்தொடையினுன்வடிவுளவலியோனாக ... *
கண்டியாவரிங்கிவரெனவவிர்மதிக்கவிகைவானவற்றந்த ... ...*
தண்டுழாய்முடிமுடிப்பவனவன்றனவனெடுசொற்றும் ... *

(இ-பு-ரை.) பெருமைபொருந்திய பிறைமதியையொத்த ஒளியுள்ள கோரதந்தத்தையுடைய சூரனாகிய அவுணராசனானவன் - வண்டுகள்சூழ்ந்து கொண்டிருக்கும்படியான கொன்றைமாலையணிந்த பரமசிவன்வடிவமுள்ளருத்திரர்களைக்கண்டுஇங்கிருக்கிறவர்கள்யாவரென்று வினவினான்- பிரகாசியாநின்ற சந்திரனாகிய குடையினையுடைய மன்மதனையீன்ற குளிர்ச்சிபொருந்திய துளசிமாலையைத்திருமுடியில்முடிப்பவராகிய விஷ்ணுவானவர்சூரனுடன்சொல்லுகிறார்.—(எ-று.) (சக)

முன்னமோர்பகலகந்தையாற்பரமனைமுளரியந்தவிசும்பர் ...*
மன்னு நான்முகனயர்த்தனுமவன்றொழிற்மலகியதிலையற்றூற் *
கன்னிபாகனைமறந்தனனெனவவற்கருதியேபலவைக... ...*
வின்னறீர்தவமியற்றிடவடைந்தருள்புரிந்திலனிறையோனே *

(இ-பு-ரை.) முன்னொருநாள் தாமரைமலராகிய அழகுள்ளஆசனத்தின்மேலிருக்கிற பிரமதேவன்அகந்தைகொண்டு பரமசிவனைமறந்ததினால் சிருஷ்டிதொழில் நடக்கவில்லை அத்தன்மைகண்டு பார்வதிபாகனை மறந்தனனென்று அவனாத்தியானித்துப்பலநாள் இடையூறில்லாததவஞ்செய்யவும் பரமசிவனெழுந்தருளிவந்துதிருவுசெய்யவில்லை.- (எ-று)

மன்னுபற்பகலருந்தவஞ்செயப்பரன்வந்திலனெனமாழ்கி... *
யன்னவாகனனழுதனன்விழியினிரலகையாயெழக்கண்டு.. ...*
துன்னிநின்றுயர்கொண்டவனயர்ந்திடத்தொலைவிலாவுயிர்க்கெல்லா
மன்னைபாகனங்கவனதுகனவில்வந்தினையனவறைகின்றான்.... *

(இ-பு-ரை.) பொருந்தியபலநாளளவாகநாம்அரியதவஞ்செய்தும் பரமசிவனெழுந்தருளவில்லையென்றுசோர்வடைந்து பிர்மதேவன்அழுதான் அப்பொழுது தன்கண்ணில்நின்று பெருகிய நீரானதுபேயுருவமா

அதனைக்கண்டு நிலையான துயரங்கொண்டு சோர்வடைந்திருந்தான் அதனையுணர்ந்து ஒழிவில்லாத உயிர்களுக்கெல்லாந்தாயாகியபார்வதி பாகனை சுவாமியானவர் அவன்கனவிலெழுந்தருளி இவ்விதவார்த்தைகள் சொல்லுகின்றார். ┼ (எ-று.) (௫௧)

இங்குநீயெமைமறத்தலால்விதித்திடுமியல்புனக்கிலதாய... ...*
தங்கணம்பதத்திருப்பவர்தமையுனதகத்தினில்விடுப்பாமென் *
றெங்கணாயகன்கழறலுமெழுந்தினிதிருந்தனனதுபோதிற் ...*
பொங்குசீர்ப்பதினொன்றெனுமுருத்திரர்விதிநுதற்புடைவந்தார்

(இ-புரை.) இப்போதுநீ நம்மைமறந்தமையால்சிருஷ்டிக்குந்தன்மையுனக்கு இல்லாமையாயது ஆயினுமிப்போது நம்பதவியினிடத்திருப்பவர்களை உன்னிடத்தில் வரும்படிஅனுப்புகிறோமென்று நம்முடையநாதன்அருளிச்செய்தவளவில் பிரமதேவன் மயக்கந் தெளிந்தெழுந்து இனிதாகஇருந்தனன் அப்போது பெருமைமிகுந்தபதினொருருத்திரர்கள் அந்தப்பிரமதேவனுடையநெற்றியினிடத்திலுண்டாயினார்கள்.எ-று.

மன்றன்மாமதுக்கமலவான்றவிசின்மேல்வதிந்தநான்முகவேத *
னொன்றுமேவியபதின்மராய்விளங்கியவுருத்திரர்தமைநோக்கி..*
யின்றுநீரிவணடைந்ததென்னெனவெமதிறைவனதருளாலுன்.[ற்றார்
னன்றுறுந்தொழின்முடிப்பதுபொருட்டினணண்ணினமெனச்சொ

(இ-புரை.) வாசனைமிகுந்த தாமரைமலராகிய சிறந்தஆசனத்தில் வாசமாயிருக்கும் நான்குமுகமுள்ள பிரம்மதேவன் பதினொருபேராகவிளங்குகின்ற உருத்திரர்களைப்பார்த்து நீங்களிப்போது இவ்விடத்தில் வந்தகாரணமென்னவென்றுவினாவினவளவில் அவர்கள் எங்களிறைவன் அருளினால்உன்னுடையநன்மைபொருந்தியசிருஷ்டியானது உனக்குநடப்பிக்கும்பொருட்டாகவந்தோமெனச்சொன்னார்கள்.—(எ-று.) (௫௩)

சொற்றவாசகங்கேட்டலுமகிழ்ந்துயிர்த்தொகையுதவுதியொன்ன*
வுற்றசீர்பெறுபதினொருகோடியாமுருத்திரர்தமைநல்கிக்.... *
கொற்றநான்மறையயன்றனக்கவன்றொழில்கொடுத்தகன்றனரன்னார்
மூற்றருந்திறலுருத்திரரிவரொனமொழிந்தனன்முகில்வண்ணன் *

(இ-புரை.) அவர்கள்சொன்னவார்த்தையைக்கேட்டவளவில் பிரமன்மகிழ்ந்து ஆனால்நீங்கள் உயிர்த்தொகைகளைச் சிருஷ்டிசெய்யுங்களென்று சொல்ல உருத்திரர்கள் நிலையாகிய புகழ்பெற்ற பதினொருகோடி

ருத்திரர்களைச்சிருஷ்டித்து வென்றியுள்ள நான்குவேதங்களையு மோதியு ணர்ந்தபிரமதேவனுக்குஅவன் சிருஷ்டித்தொழிலைக்கொடுத்து அவர்கள் சென்றார்கள் அந்தப்பதினொரு உருத்திரர்களுமுன்தந்ததிறலுள்ளஉரு த்திரரிவர்களென்று மேகவண்ணமுடைய விஷ்ணுவானவர் சொன்னார்.

இன்னவாசகங்கேசவனேசமோடிசைத்தலுமிவைகேளாப் ...*
பொன்னுலாம்புகழவுணர்கோனிமையவர்புனைவனைமுகநோக்கி*
நன்னலம்பெறயாமிருந்திடவொருநகரதுபுரிகென்னக்... ...*
கொன்னுலாம்புகலொல்லைகூறிடவவன்குமுறுதென்கடல்சேர்ந்தான்

(இ-புரை.)விஷ்ணுவானவர்இந்தவார்த்தைநேசமுடன்சொல்லக்கேட் டுப் பின்புஅழகுபொருந்தியபுகழுள்ளசூரன்தேவதச்சன்முகநோக்கியி ருந்த நன்மைபெறும்படிநாமிருப்பதற்கு ஒருநகரம்உண்டாக்கென்று சொன்னவுடன்பெருமைபரவிய சுக்கிரன் எல்லையேற்படுத்திச்சொல்லக் கேட்டுக்கொண்டு தேவதச்சன்ஒலிக்காநின்ற தெற்குச்சமுத்திரத்தினிட த்தில்சேர்ந்தான்.—(எ-று.) (௫௫)

ஆங்கதற்கிடையெண்பதினாயிரயோசனையகலத்தோர் ... ...*
தீங்கினற்பதிவளத்தொடுபுரிந்தனன்றிறன்மகேந்திரமென்றோர்*
பாங்குறும்பெயர்நிறுவினன்வடகடற்படர்ந்தனனதின்றோரூர்...*
தூங்குகைக்கரிப்பகைமுகற்காசுரத்தொன்னகர்புரிந்திட்டான் *

(இ-புரை.) அந்தக்கடலினடுவில் எண்பதினாயிரயோசனை அகலத் தையுடையதாய்ப் பழுதில்லாத ஒருநகரம்வளப்பத்துடன் உண்டாக்கிவி ளங்குகிற மகேந்திரமென்று நன்மைபெற்ற பெயர்கொடுத்தான் அதன் பின்பு வடதிசைக்கடலுக்குச்சென்று அதனிடத்தில் தொங்குந்துதிக்கை யுள்ள யானையின்பகையாகிய சிங்கமுகஅசுரனுக்கு ஆசுரமென்னும் ஒ ரு பழையநகரம் உண்டாக்கினான்.—(எ-று.) (௫௬)

மற்றுமுள்ளதெண்டிரைதொறுமிடையிடைவயங்குதீவுகடோறும்
பொற்றொடிக்கரமங்கலதேசிதன்புதல்விதந்திடுசூரன் ... ...*
கொற்றநால்வகைத்தானைகளிருந்திடக்குலவுபன்னகராற்றிக்[கான்
கற்றுணர்ந்தசீர்ப்புனைவர்கோன்கதுமெனக்கருங்கடற்புவிச்சேர்ந்

(இ-புரை.) இன்னுமிருக்கிறதெளிவான அலையுள்ள சமுத்திரங்கள் தோறும் அவைகளின்மத்தியில விளங்கிக்கொண்டிருக்குந்தீவுகள்தோறு ம் பொன்வளையலணிந்தகையையுடைய மங்கலதேசியென்பவள் மகளா கியமாயைபெற்ற சூரபன்மனுடைய வெற்றிபெற்றநால் வகைச்சேனைக

ளுமிருப்பதற்குப் பிரகாசிக்கும்பலநகரங்களுண்டாக்கிச்சாஸ்திரங்கள் கற்றுணர்ந்த சீரினையுடைய தேவதச்சருக்கெல்லாந்தலைவனாகிய விசுவகர்மாவானவன் அவ்விடம்விட்டு நீங்கிவிரைவாகக்கருங்கடல்சூழ்ந்தபூலோகத்தில்வந்துசேர்ந்தான்.-(எ-று.)நால்வகைச்சேனைகளாவன-தேர்-யானை குதிரை - காலாள். (௩எ)

பின்புநாவலந்தீவின்மாயாநகர்பெருங்கரிமுகன்வாழ்தற்... ...*
கன்பினோடுசெய்தவுணனுக்ுரைத்திடவடன்மகேந்திரமெய்திப் *
பொன்புனைந்தநற்றெண்டிரைநீரினுற்புலவராட்டிடவாடி ... *
யின்பமேவதனுன்முடிபுனைந்திருந்தனனவருந்தொழுதேத்த *

(இ-புரை.) அதன்பின்பு நாவலந்தீவில் பெரியயானைமுகமுள்ள தாருகன்வாழ்வதற்காக மாயாபுரியென்கிற ஒருபட்டணம்அன்புடன்செய்து சூரனுக்குச்சொன்னான் - அவன் பலம்பொருந்திய மகேந்திர புரியிற் போய்த்திருமகள் அவதரித்தமைபாலஅலங்கரிக்கப்படுகிற நல்ல திருப்பாற்கடல்நீரினாலதேவர்கள்ஸநானஞ்செய்விக்கஸ்நானஞ்செய்து போய்ச்சிங்காசனத்தில உட்கார்ந்துஎல்லாருந்தொழுது துதிக்கும்படிஇன்பமுள்ளபிரமதேவன்மகுடந்தரிக்கத்தரித்துக் கொண்டிருந்தான்.-(எ-று.) (மாவுலாவிய பாற்கடலென்று பெரியகாந்தச்செய்யுளிற் சொல்லப்பட்டிருப்பதை நோக்கிப்பொன்புனைந்த நற்றெண்டிரையென்பதற்குத் திருமகளைத்தந்தகடலென்றுஉரையெழுதப்பட்டது.) (௩அ)

மாலவன்றனைவிளித்திடும்போதெலாம்வருகெனவிடையீந்து...*
கோலமாமலர்க்கடவுண்மாமுகந்தெரீஇக்குமரர்தம்மொடுநீவந் *
தேலுமங்கமோரைந்துநாடொறுமுரைத்தகுதியெனவோதிச் *
சீலமேவியவருக்கமுனடினையனசெப்புவன்றிறற்சூரன் ... *

(இ-புரை.)பலம்பொருந்தியசூரன் விஷ்ணுவைப்பார்த்து உன்னை நாம் அழைக்கும்போதெல்லாம்நம்மிடத்துக்குவரக்கடவையென்றுசொல்லிஉத்தரவுகொடுத்து அனுப்பிவிட்டு அழகும்பெருமையுமுள்ள தாமரைப்பூவிலவீற்றிருக்கும் பிரம்மதேவன்முகத்தைப்பார்த்து நீயுன்புத்திரர்களுடன்நாள்தோறும்வந்து பொருத்தமாகியபஞ்சாங்கஞ் சொல்லிப் போவென்று உத்தரவுசெய்தனுப்பிப்பரிசுத்தம் பொருந்தியசூரியனைப் பார்த்துஇவ்விதவார்த்தைகளைச்சொல்லுகிறுன்.—(எ-று)(பஞ்சாங்கமாவன-திதி- வாரம்- நக்ஷத்திரம்-யோகம்-கரணம்-என்பவைகளாம்.)(௩௯)

இன்னவாணகர்ப்புறத்துறுபுரிசைமீதேகணிற்கரிதாகும் ...*
பொன்னுலாமணிச்சிகரியுணெறிக்கொடுபுகுந்துவான்மிசையேகி
யின்னறீர்தருமிளங்கதிர்நடத்தியேயிவ்வகைதிரிவாயென் ...*
றன்னபின்னரோயவிர்மதிக்கடவுளுக்கறைகுவனடற்சூரன்... *

(இ-புரை.)ஒளிபொருந்திய இந்தநகரத்தின் புறத்தில் சூழ்ந்திருக்கும் மதிலின்மேற்கடந்துபோ த உனக்கரியகாகுப் ஆகலினால் பொன்னினாற்செய்யப்பட்டு மணிகள்பதித்தகோபுரத்துக்குள் நுழைந்து அதுவேவழியாகக்கொண்டு ஆகாயத்தில்மேற் சென்றுவருத்தம்நீங்கிய இளங்கதிர்களைப்பரப்பிச்சஞ்சரித்துக்கொண்டிருவென்று உத்தரவுசெய்தான்அதன்பின் புபிரகாசிக்கும் சந்திரனாகியதேவனுக்குப் பலம்பொருந்தியசூரன் உத்தாரஞ்செய்கிறான்.—(எ-று.) (௬௰)

வளருகின்றதுங்குறைவதுமறைவதுமறந்துநீநிறைவாகிக்... *
கிளருமிந்நகர்நாடொறும்வருகெனகிளத்தியேயதுபின்னர்...*
முளரிவானவற்றெரிந்துநம்பதியிேனார்முன்னிலங்கவர்பாலுற் *
றுளபணித்திறமியற்றுபுதொடிற்குளிர்ந்துறைகெனவுரைசெய்தான்

(இ-புரை.) நீவளாவதுங்குறைவதும் சிலநாள்மறைவதும் மறந்துவிட்டுஎப்போதும்பூரணமாய்ப்பிரகாசிக்கும்படிஇந்நகரத்தில்நாள்தோறும் வந்துகொண்டிருவென்றுசொல்லி அதன்பின்பு அக்கினிதேவனைப்பார்த்துநம்முடையநகரத்திலிருப்பவர்கள்உன்னை நினைப்பார்களாகில் அவர்களிடத்தில்வந்துஅங்குள்ள தொழிலின்வகைகளைச்செய்துஇதுவுமன்றிஉன்னைத்தொடுவார்களானால்அவர்களுக்குக்குளிர்ந்திருவென்றுத்தாரஞ்செய்தான்.—(எ-று.) (௬௧)

கொற்பகட்டிலுற்றெதிர்ந்தவருளங்குலைகுலைந்திடப்புவிமாந்தர் .
முற்பகட்டிவந்திங்கொடுஞ்சமன்றனைமுகின்மலைமுலைமாயை *
பொற்பகட்டில்வந்துதித்தவன்றெரிந்தரும்பொருகரிபரியாதி..*
நிற்பகட்டியகழற்றகுவர்களுகப்புரிந்திடேனியென்றான் ... *

(இ-புரை.) முலைமலையரும்பினை மலைக்கும்படியானதனத்தையுடையமாயையின்அழகுள்ள வயிற்றினிடமாகவந்து பிறந்தசூரன் அச்சந்தருவதான எருமைக்கடாவின்மேலேறிகொண்டு எதிர்ப்பட்டவர்கள்மனங்குலையத்தக்கதாகப்பூலோகத்திலுள்ள மனிதர்களுக்குஎதிரில உக்கிரமாகக்கண்களைவிழிப்பதும் நெறநெறவென்றுபற்களைக்கடிப்பதும் ஆர்ப்பரிப்பதுமாகவருகிறநமனைப்பார்த்துநீநம்முடையபோர்செய்யும்யானைக

ள்குதிரைகள்முதலாக உன்னைவெருட்டுகின்ற வீரகண்டைகட்டிய அவு ணர்களிறக்கும்படி செய்யாமேதென்றுசொன்னான்.—(எ-று.) (சுஉ)

விரித்திடும்புகழ்ப்பவனனைநோக்கியிவ்வியனகர்மிசைவாழ்வார்.. *
தரித்திகழ்ந்திடுதொடைமுதலாயினதள்ளுதியெனச்சாற்றித்.... *
திருத்திகழ்ந்திடுவருணனைநாவிமுற்சிறந்தனபனிநீரிற்.. ... *
பொருத்தியிந்நகரொங்கணுந்தெளியெனட்புகன்றனன்புகழ்ச்சூரன்

(இ-புரை.) அதன்பின்பு புகழுள்ளசூரனானவன் பரந்தகீர்த்தியுள் ள வாயுதேவனைப்பார்த்து விசாலமுள்ளதாகிய இந்நகரிடத்தில்வாழ்கின் றவர்கள் சூட்டிக்கொண்டுநீக்கிவிடுகின்ற பூமாலைமுதலாயினவைகளைத்த ள்ளி விடக்கடவையென்றுசொலலிச்செல்வத்தினால்விளங்குகின்றவருண னைப்பார்த்துக்கஸ்தூரிமுதலானசிறந்துள்ளவாசனைத் திரவியங்களைப்ப னிநீரிற்கலந்து இந்தப்பட்டணமெங்கும்தெளியென்று சொன்னான்.—

நீணிறக்கடமழைசொரிகருசவுணைடியநாற்பெருங்கோட்டு. ...*
வாணிறக்கரிக்கடவுளைநோக்கிநீவானவர்குழுவோடு ... ... *
மேனைமாதிரத்தலைவர்தங்குழுவொடுமிடிபணிபுரிகென்று... ...*
ஞானமுற்றிடுமிவைமறுத்திடவெரீஇபுரைத்தவாறொழுகுற்றார். *

(இ-புரை.) நீலநிறமுள்ளகபோலமதநீராகிய மழைபொழிகின்றநெடி ய தும்பருத்ததுமான நான்குகொம்பினையுடைய வெண்மைநிறமுள்ளஅ யிராவதமென்னும் ஆனையை யேறிச்செலுத்தும் இந்திரனைப்பார்த்துத் தேவர்கூட்டத்தோடும் மற்றத் திக்குப்பாலகர்களுடனும்வந்து நாமேவுகி ன்றதொழிலைச்செய்யென்றுஉத்தரவுசெய்தான்-ஊனம்பொருந்திய இந் தஏவல்களைமறுப்பதற்குப் பயந்து சூரன்சொன்னபடி நடந்தார்கள்.—

மருமலர்த்தொடைப்பதுமகோமளை முதன்மாதரைமணஞ்செய்தே.
யரிமுகற்கெழில்விபுதையைமணஞ்செய்வித்தானைமாமுகத்தோனுக்.
கிருமைபெற்றசீர்ச்சவுரியைமணஞ்செய்வித்திருவருமிருகோடி *
விரிவுசேர்படைவெள்ளமோடவரவர்பதிபுகவிடுத்தானால. ... *

(இ-புரை.) வாசனைதங்கிய பூமாலையணிந்த பதுமகோமளை முதலா கியமாதர்களைத்தான் விவாகஞ்செய்துகொண்டு சிங்கமுகாசுரனுக்குச் சௌந்தரியமுள்ளவிபுதையென்பவளை விவாகஞ்செய்வித்தும் ஆனைமு கனாகியதாருகாசுரனுக்குப் பெருமைபெற்ற சீருள்ள சவுரியென்பவளை க்கலியாணஞ்செய்வித்தும் அவர்களிருவரும் விரிவுசேர்ந்தஇரண்டுகோ டி சேனைவெள்ளத்துடன்அவரவர்நகரிற்சேரும்படிஅனுப்பினான்(எ-று

(பதுமகோமளையென்பவள் விசுவகர்மாவின் மகள் - மற்ற மனைவியர்கள் தேவர்கள்-அசுரர்கள்-காந்தருவர்-சித்தர்-கின்னரர்-இயக்கர்-கிம்புருடர்-முதலானவர்களுடையபெண்கள்சிங்கமுகன்மனைவி-யமன்மகள்-தாருகன்மனைவி - நிருதியின்மகள்.) (௬௫)

தண்டருந்தொடையிளையவரகன்றபின்றருவரிற்பலர்தம்மை ... *
மண்டுசீருளநாலிருதிசையினும்வானகத்துலகத்து ... ... *
மொண்டிறற்பெறுபாதலவரைப்பினுமொழிந்தபல்லிடந்தோறு *
மெண்டரும்பெருந்தானையோடிருந்திடவிடுத்தனனிருஞ்சூரன் *

(இ-புரை.) குளிர்ச்சிபொருந்திய பூமாலைசூடியதம்பிமார் போனபின்பு அவுணர்களிற்பலபேரைநிறைந்த சீருள்ள அஷ்டதிக்குகளிலும் வானிடத்திருக்கும் சுவர்க்கத்திலும் பிரகாசமும்வெற்றியும்அடைந்தபாதாளலோகத்தினிடத்திலும் இவை நீங்கலாகிய மற்ற இடங்கள்தோறும் பெருமையைத்தருகின்ற பெரியபடையுடனிருக்கும்படி சூரன் அனுப்பினான்.—(எ-று.) (௬௬)

ஏவல்செய்துழறேவரையொருபகலிருங்கடற்பெருமீன்க... ...*
ணீவிர்நாடொறுந்தருதியொன்றுளாதென்று நெடுந்துயர்க்கடன்மூழ்கிப்
பாவவப்பிணிநாடொறும்புரிந்தனர்பதுமகோமளைதன்பாற் ... *
சேவகத்தனிமைந்தன்வந்துதித்தனன்றிசையெலாமிசைவீசு... ...*

(இ-புரை.)சூரன்தான்முன் சொன்னபடி ஏவல்தொழிலைச்செய்துகொண்டுழலுகின்ற தேவர்களை ஒருநாள் பார்த்துஇனிநீங்கள் பெருமைபொருந்திய கடலிலிருக்கும் பெரியமீன்களை நாள்தோறுங்கொண்டுவாருங்களென்று உத்தரவு செய்தான் அந்த உத்தரவைக்கேட்டவளவில் தேவர்கள் மிகுந்த துக்கசாகரத்தில்மூழ்கிப்பாவமாகிய அந்தத்தொழிலை நாள்தோறுஞ்செய்துகொண்டிருந்தார்கள்-இதுஇப்படியிருக்க- சூரனுடையமுதலமனைவியாகிய பதுமகோமளையென்பவள்வயிற்றினிடமாக ஒப்பிலலாதவீரமுள்ளஒருபுத்திரன்தன்கீர்த்தியானது அஷ்டதிக்குமுதலானஎல்லாவிடங்களிலும் பரவும்படிபிறந்தான்.—(எ-று.) (௬௭)

உற்றமைந்தனைமாயவண்மகன்றெரிந்துவகையங்கடன்மூழ்கி... *
வெற்றிசேர்தருமவுணர்தங்கிளைக்கெலாம்வெறுக்கைகண்மிகவீந்தான்
மற்றதற்பினக்குமரனைமடந்தையர்வளங்கொடொட்டிலிலேற்ற... *
வற்றமற்றிடுஞ்சிறப்பொடுமதிற்றுயின்றமருநாளொருநாளில் *

(இ-புரை.) பிறந்தபுத்திரனைமாயைமகனாகியசூரன்பார்த்துச் சந்தோஷமாகிய சமுத்திரத்தில் அழுந்தியென்றிபொருந்தியஅவுணர்களாகியதன்சுற்றத்தாரெல்லாருக்கும் மிகுந்ததிரவியங்கள்கொடுத்தான் அதன்பின்பு அந்தப்புத்திரனைத் தாதியர்கள் குறைவில்லாத சிறப்புடன் தொட்டிலில்வளர்த்திச் சீராட்டக்குழந்தைஅந்தத்தொட்டிலில்நித்திரைசெய்துவருகிறநாள்களில ஒருநாளில்.—(எ-று.) (௬௮)

வானகத்தெழுமிரவிதன்கதிரவன்வடிவினிற்படப்பாய்ந்து ... *
தானவன்றனைப்பிடித்துவந்தணிமணித்தொட்டிலிற்றளைசெய்தே*
யீனமற்றவானவரொடுவிதியடைந்திரப்பவிட்டதனுமேல ... *
பானுகோபனுய்வளர்ந்தொருபகலிலைம்படைகோண்மாலையும்வென்றான்

(இ-புரை.) அந்தப்புத்திரன் தொட்டிலில் நித்திரைசெய்துகொண்டிருக்கும்போது ஆகாயத்திலுதயமாய்வருகிறசூரியனுடைய கிரணம்நுழைவாயிலின்வழியாகவந்து தன்மேனியில்பட்டவளவில் அந்தவழியாக ஆகாயத்திற்பாய்ந்துசூரியனைப்பிடித்துவந்து மணிகளிழைத்ததொட்டிற்காலில்கட்டிவைதது்ப்பழையபடி நித்திரைசெய்து கொண்டிருந்தான் அதையறிந்தபிரமதேவன் தேவர்களுடன் சூரனிடத்தில்வந்து சூரியனைவிடும்படிபிரார்த்தித்தான் அது எனக்குத்தெரியாது என்புத்திரனிடத்திற்கேபோய்அவனைப்பிரார்த்தித்துமீட்டுக்கொண்டுபோவென்றான் பிர்ம்மதேவன் அவ்வாறே அந்தப் புத்திரனிடத்திலவந்துபிரார்த்தித்தான் அவன் எனக்குப்பிர்ம்மாஸ்திரங்கொடுத்தால்சூரியனை அவிழ்த்து விடுகிறேனென்றான்-அப்படியேகொடுத்துச் சூரியனைமீட்டுக்கொண்டுபோனான் இந்தக்காரணத்தினால் அந்தப்புதிரன் பானுகோபனென்கிற பெயர்பெற்றுவளர்ந்துபின்புஒருநாள்பஞ்சாயுதங்களுள்ளவிஷ்ணுவுடன்போர் செய்துவென்றான்.—(எ-று.) (பஞ்சாயுதம்- சங்கு - சக்கரம் - வாள்-கோதண்டம்கதாயுதம்-என்பவைகளாம்.) (௬௯)

பின்னுமக்கினிமுகத்தனேயிரணியன்பெருவச்சிரவாகு ... *
வென்னுமைந்தர்கள்பதுமகோமளைபகட்டிடத்துவந்துதித்தார்க
ளின்னுமற்றுளமனைவியர்தங்கள்பாற்றோன்றினர்தொகைசொல்லின்
மன்னிடும்புகழ்கொண்டமூவாயிரமைந்தர்களெனலாமால ...*

(இ-புரை.) பின்னும்பதுமகோமளை வயிற்றினிடத்திற்கருப்பந்தங்கி அக்கினிமுகன்இரணியன் பெருமையுள்ளவச்சிரவாகு என்னும்புத்திரர்கள்பிறந்தார்கள் பொருந்தியமற்றுமுள்ள மனைவியர்கள்கருப்பத்தினிடமாகவந்துபிறந்தவர்களித்தனைபேரென்றுகணக்குச் சொன்னால்நிலையாகிய புகழ்கொண்ட மூவாயிரம்புத்திரர்க ளென்னலாம்.—(எ-று.)

அரிமுகன்னதிசூரனை நூறுமைந்தர்கடமையளித்திட்டான். ... *
கரிமுகன்றிறல்பெறுமசுரேந்திரக்காவலன்றனையீன்றான் ...*
மருவுமின்னவர்க்கிளையளாமசமுகிவலிதுபோய்த்துருவாசப் *
பெரியவன்றனைப்புணர்ந்துவில்வலனைவாதாவியைப்பெற்றாள்.

(இ-புரை.) சிங்கமுகாசுரன் அதிசூரன்என்பவனையும்பின்னும் நூறுபுத்திரர்களையும்பெற்றான் யானைமுகமுள்ளதாருகாசுரன் பலம்பெற்ற அசுரேந்திரனென்கிற புத்திரனைப்பெற்றான்பொருந்தியசூரன்முதலாகிய அந்தமூன்றுபேருக்கும் இளையவளாகிய அசமுகிஎன்பவள் போய்த்துர்வாசமுனிவரைப் பலாத்காரமாகப்புணர்ந்து வில்வலன்வாதாவியென்னுமிரண்டுபுத்திரர்களைப்பெற்றாள்.—(எ-று) (௭௧)

அன்னமைந்தர்களிருவருந்தவம்புரிந்தயன்றரும்வரந்தன்னாற் ...*
பின்னவன்மறியுருக்கொளமுன்னவன்பெருமுனிவரனாகி ...*
மன்னுமாதவர்க்கமுதொடுகறியெனமறிதனைச்சமைத்தூட்ட *
வின்னல்சேர்ந்திடவவர்குடரருகிழித்திளையவன்வருமாதோ ...*

(இ-புரை.) அந்தப்புத்திரர்களிருவரும் தவஞ்செய்துபிரமதேவன் கொடுத்தவரத்தினால் இளையவன் ஆட்டுருவங் கொண்டிருக்கும்படிசெய்து மூத்தவன்பெரியதவமுள்ள முனிசிரேஷ்டன்போல வடிவங்கொண்டிருந்து அங்குவருகின்றமுனிவர்களுக்கு அன்னத்துடன்கறியாக அந்த ஆட்டினிறைச்சியைச்சமைத்துப் போசனஞ்செய்வித்தால்பின்புடனே யிளையவனாகிய வாதாவி யுயிர்பெற்றுப் புசித்தமுனிவர்களுக்குத் துன்பமுண்டாகும்படி அவர்கள்வயிற்றைக்கிழித்துக்கொண்டு வெளியில வருவான்.—(எ-று) (௭௨)

இன்னபான்மையினளவிலர்க்கிறுதிசெய்திருந்தனரிதுநிற்கப் *
பின்னமோர்பகற்சூரனுமவுணர்கோன்பெருமைகெழுமயிராணி ...*
தன்னைவவ்வியேசிறையிடைமகபதிதனையிடமனமீதி... ... *
லுன்னிமன்னியதானையந்தலைவரிலொருவனோடுரைசெய்வான் *

(இ-புரை.) இப்படிக்கொத்தமோசத்தினால் அளவில்லாதமுனிவர்களுக்கு மரணத்தையுண்டாக்கிக்கொண்டிருந்தார்கள் இதுநிற்க-பின்பு ஒருநாள் அவுணர்களுக்கு அரசனாகியசூரனென்பவன் மிகுந்தசௌந்தரியமுள்ளஐராணியை அபகரித்துக்கொண்டு தேவேந்திரனைச் சிறையிலிடவேண்டுமென்று மனதில்நினைத்துத்தன்னிடத்திலிருக்குஞ் சேனாதிபதிகளிலொருவனுடன்சொல்லுகிறான்.—(எ-று.) (௭௩)

இந்திரற்பிடித்தீண்டுமீண்டிடு ¢ யென்றேவியொன்பதுகோடிப் *
பைந்தொடிக்கரத்தசுவர்கங்குலத்துவெம்பாவையர்தமைக்கூவி *
யந்தமற்றசீர்ச்சசிதனைப்பிடித்திவணடைதிரொன்றவண்டேண்டச் *
சுந்தரந்தருதுறக்கவானுலகினிற்றுன்னினரவரெல்லாம்... ...*

(இ-புரை.) தேவேந்திரனைப்பிடித்துக்கொண்டுஇங்கேதிரும்பிவா வென்றேவி அவுணர்குலத்தில் வந்தவர்களாகிய மாற்றுயர்ந்தபொன்னி னுற்செய்யப்பட்ட வளையல்க ளணிந்தகைகளையுடைய ஒன்பதுகோடி கொடிய அவுணமாதர்களை அழைப்பித்து அளவற்றசீரினையுடையஇந்தி ராணியைப்பிடித்து இங்கேகொண்டுவாருங்களென்று சுவர்க்கலோகத்து க்குஅனுப்பினுன் அவர்களெல்லாரும்சுந்தரம்பொருந்தியசிறப்புள்ள சு வர்க்கலோகத்திற் சேர்ந்தார்கள்.—(எ-று.) (எச)

பொங்குதானையுந்தானையந்தலைவனும்பொற்றொடித்தளிர்ச்செங்கை *
மங்கைமார்களும்வருவனவொற்றர்போய்வானநாயகற்கோத *
வங்கணீதுணர்ந்தருஞ்சசியொடுங்கரந்தவனியினிடைச்சேர்ந்தான்
றங்கவெய்யவர்துருவினர்தெரிந்திலர்சூரன்முன்னுரைசெய்தார். *

(இ-புரை.) மிகுந்தசேனையுஞ் சேனுதிபதியும் பொன்னுலாகிய வ ளையலணிந்த தளிரையொத்தசெங்கையையுடைய அவுணமாதர்களும் வ ருகின்றுரென்கிறசேதியைத் தேவேந்திரனுக்குத்தூதர்போய்ச்சொன் ஞர்கள் தேவேந்திரனிந்தச்சேதியை யறிந்துஅருமையாகிய இந்திராணி யுடன் மறைந்துபூலோகத்தில் வந்துவிட்டான் பலமுள்ளகொடியவர்க ளான அவுணர்கள்அவ்விருவரையுந் தேடிக்காணுமல்சூரனிடத்தில வந்து சொன்னுர்கள்.—(எ-று.) (எரு)

ஈதுசூரறிந்தமரர்கோன்றுணைவியோடிருந்துழியறிந்தெய்தத் *
தீதிலொற்றரைவிடுத்தனனிந்திரன்சேயெனுஞ்சயந்தன்றுன்... *
கோதிலாதவைகுந்தமுற்றிருந்தனன்குறுகியவிவைகேளா. ...*
வேதமற்றதோர்பொன்னுலகடைந்ததிலிருந்தனனரசாற்றி.... *

(இ-புரை.) இதைச்சூரனறிந்துதேவேந்திரன் இந்திராணியுடனிரு க்குமிடத்தைத் தெரிந்துவரும்படி தூதர்களைஅனுப்பினுன் இதுஇப்ப டியிருக்க இதற்குமுன்னே குற்றமில்லாத வைகுந்தத்தில் போயிருந்த இந்திரன்மகனுகியசயந்தனென்பவன்நடந்த இந்தச்சங்கதிகளைக்கேள்வி ப்பட்டுக் குற்றமற்ற பொன்னுலகத்திற்சேர்ந்து தேவர்களுக்கினிமை உ ண்டாகும்படி அரசாட்சிசெய்துகொண்டிருந்தான்.—(எ-று.) (எசு)

மஞ்சுவாகனநாகர்கோன்புகலியாம்வளமூறுநகரெய்தி ... *
யெஞ்சுறாதவோர்நந்தனவனம்புரிந்திறைவனையருச்சித்தே ... *
வஞ்சியோடுறவொற்றர்கணேடியேவருவதையறிந்துள்ளத் *
தஞ்சிமாதொடுங்கழையதாய்ப்பரமனையருச்சனைபுரிந்துற்றான் *

(இ-புரை.) மேகவாகனமுள்ளவனுகிய தேவேந்திரன் புகலியென்றும் ஒருதிருப்பெயருள்ள வளப்பம்பொருந்தியசீகாழியிற்சேர்ந்துகுறைவுபடாத ஒருநந்தனவனம்உண்டாக்கிப் பரமசிவனைப் பூசனைசெய்துகொண்டு இந்திராணியுடனிருக்கும்போது தங்களைத்தேடிக்கொண்டுசூரன்அனுப்பிய தூதர்கள்வருகின்றதையறிந்து மனதில்பயங் கொண்டு தன்மனைவியுடன் தானும்மூங்கிலுருவமாகிச் சுவாமியை அருச்சித்துக்கொண்டிருந்தான்.—(எ-று.) (எஎ)

[வேறு.]

அந்நாளினந்தாதநந்தனவனம்பூவி... ... ... ... ... ...*
லம்பற்றுவாடவிமையோர்.. ... ... ... ... ... *
மன்னனைவிந்திரன்வருந்தாவிருந்திட ... ... ... ... ...*
வணங்கார்புராரியருளா.... ... ... ... ... ... *
னன்னாதன்பெரியவிந்தாசலத்தினிடை. ... ... ... ...*
நண்ணித்தனதுயர்விளுற். ... ... ... ... ... *
றன்னேடுவேறுநிகரில்லென்றுபொன்வரை ... ... ... ...*
தருக்குற்றதென்றுபுகல... ... ... ... ... ... *

(இ-புரை.) தேவேந்திரனப்படியிருக்குநாளில்பழுதுபடாமலிருந்தநந்தனவனமானதுபூமியில்நீரில்லாமையால்வாடுவதைக்கண்டு தேவர்களுக்குஅரசனுகிய இந்திரன்மனம் வருந்திக்கொண் டிருந்தான் இங்கிவனிப்படியிருக்கத்தேவர்கள்பகைவராகியதானவர்புரங்களை நகைத்தெரித்த பரமசிவனுடையதிருவருளால் தவநன்மையினையுடைய நல்லநாரதமுனிவர் பெரியவிந்தமலையினிடத்திற் சென்று விந்தகிரிமேய ஒருவார்த்தைசொல்லுகிறேன் அதென்னவெனில்மகமேருவானதுதன்உயர்ச்சியினுல்தனக்குவேறொன்றுஞ்சமானமில்லையென்று இறுமாப்பு கொண்டிருக்கின்றதென்றுசொன்னர்.—(எ-று.) (எஅ)

விந்தஞ்சினந்துவிதியூர்காறுநீள்வுற ... ... ... ... ...*
விசும்பூடருக்கன்முதலோர். ... ... ... ... ... *
தந்தம்பொருந்துநெறியில்லாதுமேருவிடை ... ... ...*
சல்லாபமோடுமருவு ... ... ... ... ... ... ...*

பொழிப்புரை.

மந்தண்கடத்துமுனிதன்னைப்புகழ்ந்திடலும்... ... ... ...*
மன்னுணர்ந்தருளியே ... ... ... ... ... ... *
யுந்தும்பரன்றனைநினைந்தேதவம்புரிய ... ... ... ... ...*
வுற்றுனுயிர்க்குளுயிரான் ... ... ... ... ... *

(இ-புரை.) அந்தவார்த்தையைக் கேட்டவளவில்விந்தகிரியானது கோபங்கொண்டுபிரமதேவனுலகம்வரையிலும் உயர்ந்திருந்ததுஅதுகண்டுசூரியன் முதலானவர்கள்ஆகாயத்தில் தாங்கள்செல்லும் வழியில்லாமையால்மகமேருவினிடத்திலசந்தோஷித்துடனிருக்கும்அழகுங்குளிர்ச்சியுமுள்ள கும்பத்திலுற்பவித்தவராகிய அகஸ்தியமுனிவரைக்கண்டு பிரார்த்தித்தார்கள் அவரதைத்தெரிந்தருளிமுதன்மையாகிய பரமசிவனைத்தியானித்துக்கொண்டு தவஞ்செய்ய உயிர்களுக்குள் உயிராயிருக்கும் பரம்பொருளானவர் அம்முனிவருக்குத்தரிசனமானுர்.—(எ-று.) (எக)

நிற்கேதுவேண்டுமெனவிந்தத்தைவென்றிட ... ... ... *
நிருத்தாபெருத்தவிறலின்..... ... ... ... ... ...*
றெற்கேயம்வேண்டுமெனவிந்தாசலத்தட.... ... ... ... *
விறுத்தேயிருதமலயக்.. ... ... ... ... ... ...*
கற்கேயிருத்தியெனவோர்பொன்னிநன்னதி. ... ... ... *
கவின்குண்டிகைக்குளுதவத். ... ... ... ... ...*
தெற்கேநடந்தரிமுகன்றம்பிவென்றியொடு ... ... ... *
சேர்மாயவூர்குறுகினுன். ... ... ... ... ... ...*

(இ-புரை.) தரிசனங்கட்டளையிட் டருளியபரமசிவன் அகஸ்த்தியரைநோக்கி உனக்குவேண்டும்வர மென்னவென்றார் தாண்டவஞ்செய்தரும் ஐயனேவிந்தகிரியை வெல்லும்படியான மிகுந்தவல்லபம் அடியேனுக்கின்று பொருந்தவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்சுவாமியானவர் அகஸ்தியரைநோக்கி நீசென்று விந்தகிரியினுடைய கர்வத்தைக்கெடுத்து அங்கிருந்தும்போய்அழிவில்லாதபொதிகைமலைனிடத்தில் வாசமாயிருமென்றுகட்டளையிட்டுக் காவிரியென்னும் ஒருநதியும் அவர்கமண்டலத்திலிருக்கும்படி கொடுத்தருளினுர் அந்தவரம் பெற்றுக்கொண்டஅகஸ்தியர்தென்றிசைநோக்கி நடந்துசிங்கமுகாசுரன் தம்பிவென்றியுடனிருக்கிறமாயாபுரியிற்சேர்ந்தார்.—(எ-று.) (அய)

கேடற்றமுனியங்கண்வருகின்றசெயல்கண்டு ... ... ...*
கிரவுஞ்சனெனுமவுண ... ... ... ... ... *

ணீடுற்றவிமையோர்கண்முனிவோர்கணனிவாட... ... ...*
வெந்நாளுமின்னலபுரிவான்... ... ... ... ... *
கோடுற்றகிரியாகியதனூடுசரியொன்று ... ... ... ...*
கொண்டங்கணண்டவதனுட்... ... ... ... ... *
ஙீடுற்றிடுஞ்சாகரத்தைக்கரங்கொண்ட ... ... ... ...*
பெரியோனடந்தருளினன்... ... ... ... ... *

(இ-புரை.) கெடுதியென்பவைகளில்லாத அகஸ்தியமுனிவர் அவ்விடத்தில்வருகிறசெயலைக்கண்டுமிருந்துள்ள தேவர்களும் முனிவர்களுமிகுதியாகவாடும்படி எந்நாளும் துன்பஞ்செய்கின்றவனாகிய கிரவுஞ்சனென்கிற அவுணன்சிகரங்கள் பொருந்திய மலையுருவமாகி அதனிடத்தில்வழியொன்றுண்டாக்கிக் கொண்டு அவ்விடத்திருந்தான்பெருமைபொருந்திய சமுத்திரத்தைக் கையிலேற்றுக்கொண்ட அகஸ்தியர்அம்மலையின்மேல்நடந்தருளினர்.—(எ-று) (௬௧)

சங்கோலிடுந்தெண்டிரைச்சாகரத்தே ... ... ... ... *
தருக்கோடெழுந்தவிடநேர் ... ... ... ... ...*
வெங்கோபநிருதர்க்குநிருபன்புரிந்திட்ட ... ... ... ... *
வியன்மாயைதன்னையுணரா... ... ... ... ... ...*
ஙங்கோர்குரோசஞ்செல்பொழுதந்தவழிமாழ்கி... ... ... *
ஙயலொன்றுதாணவதன்மீ... ... ... ... ... ...*
தெங்கோனடந்தானடந்திட்டபோதங் ... ... ... ... *
கிறந்திட்டதவ்வதருமே ... ... ... ... ... ...*

(இ-புரை.) சங்குகள்ஒலித்துக்கொண்டிருக்கிற தெளிவுள்ளஅலைகளையுடைய சமுத்திரத்தில்கொடுமையுடனேயுண்டானவிஷத்தையொத்த வெப்பமானகோபமுள்ள அவுணர்க்கிறைவன்செய்திருக்கிற பெரியமாயையினை அகஸ்தியமுனிவர்அறியாதவராய் அந்தமலையின்மேல் ஒருகுரோசதூரம்செல்லும்போது அந்தவழிமாறிப்பக்கத்தில் வேறொருவழிதெரிந்தது அந்தவழியில்நமக்குக்கடவுளாகிய அகஸ்தியமுனிவர்நடந்தார்நடந்தபோதுஅந்தவழியும் அங்கேமறைந்துவிட்டது.-(எ-று.) (௬௨)

வீறொன்றுகும்பமுனிவல்லேதிரிந்துவதி... ... ... ... *
வேறொன்றுகண்டுபடரச்... ... ... ... ... ...*
ஈறங்கிசுற்றவொலிசுற்றவிருள்சுற்றமுகி ... ... ... ... *
றிண்மாரிதூவமுனிவன் ... ... ... ... ... ...*
மாறங்குருவறிவினவுணன்புரிந்திட்ட ... ... ... ... *
மாயந்தெரிந்துவெகுளாப்... ... ... ... ... ...*

பொழிப்புரை.

பேறங்கரங்குலவுகதைகொண்டுகுத்திப் ... ... ... ... *
பெருஞ்சாபமோதுவனரோ ... ... ... ... ...*

(இ-புரை.) இன்பம்பொருந்திய கும்பமுனியாகிய அகஸ்தியமுனிவர் விரைவாகஅந்தவழியைவிட்டுத் திரும்பிவழிவேறென்றுகண்டு சென்றார் அவ்விடத்தில் கொதித்தெழுகிற அக்கினிவந்து சூழ்ந்துகொள்ளவும் அதனுடன்பேரொலிசூழ்ந்துகொள்ளவும் இருள்சூழ்ந்துகொள்ளவும் இவைகளுமன்றி மேகம்வியாபித்து மழைபொழிந்தது இவ்வாறு அவுணன்செய்த மாயங்களை அகஸ்தியர் மாறுபடாத ஞானத்தினால் அறிந்து கோபங்கொண்டு நல்லபேறுள்ள அழகியகையில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் கதையினால் அந்தமலைமேலேகுத்திப்பெரியசாபஞ்சொல்லுகிறார்.—(எ-று) (அங)

நலனுற்றபுலனற்றகொடியோயிவ்வடிவாகி... ... ... ...*
நீர்டோறுநண்ணியதன்மேன்... ... ... ... ... *
மலைபெற்றவுமைபெற்றகுமரேசன்வடிவேலின் ... ... ...*
மடிவாதியென்றவுணர்கோ ... ... ... ... ... *
னலனுற்றழுங்கப்புகன்றேயகன்றே ... ... ... ... ...*
யடற்கொள்விந்தங்குறுகினன்... ... ... ... *
செலவிற்கிடந்துகிரவுஞ்சஞ்செய்வஞ்சஞ் ... ... ... ...*
செயங்கொண்டதிண்டிறலினன் ... ... ... ... *

(இ-புரை.)நன்மைபொருந்திய விவேகங்கெட்டகொடியவனே நீயிந்தமலைரூபமாயெப்போது மிருந்துஅதற்குமேல் மலையரையன்பெற்றஉமையம்மை யீன்றருளிய சுப்பிரமணியசுவாமியின் வடிவேலினால்இறந்துபோகக்கடவையென்று அந்த அவுணன் துன்பங்கொண்டுவருந்தும்படி சாபஞ்சொல்லி யவ்விடம்விட்டுநீங்கி மார்க்கத்தி லிருந்துகொண்டு கிரவுஞ்சஞ்செய்த மாயத்தைச்செயித்த திண்மையானவீரபராக்கிரமமுள்ளமுனிவர்பலங்கொண்டவிந்தகிரியினிடத்திற்சேர்ந்தார்.—(எ-று)

வீறுமவ்வெற்பினொடுதெற்கேகவெற்குவழி.... ... ... ...*
விடுவாயெனப்புகறலு ... ... ... ... ... ... *
மாறுகிவிந்தமதிகழ்ந்தோதவேதபத ... ... ... ... ...*
மட்டுங்கரத்திணையொடாப் ... ... ... ... *
பேறுமதன்றலையழுத்தக்குலைந்தது ... ... ... ... ...*
பிலத்தூடுபோகியதுவெண் ... ... ... ... *

ணீறுடியன்பரொடுவன்பெய்தினார்நிரய ... ... ... ...*
நெறிவீழ்தல்காட்டுநிலைபோல்.. ... ... ... ... *

(இ-புரா.) அவ்வாறு சேர்ந்தமுனிவர் நான்தெற்கேபோகும்படி எனக்குவழிவிடவேண்டுமென்றுமேலேயோங்கியிருக்கிற அந்தவிந்தகிரியுடன்சொன்னார். அந்தமலையானது அவரைப்பார்த்துச்சூரியசந்திரர்களும் நடந்துபோகக் கூடாதவண்ணம் ஆகாயமார்க்கத்தை அடைத்து நிற்கின்றேன்- குறியவடிவுள்ள உனக்குப்பயந்து வழிவிடுகிறேனா, விடுகிறதில்லை யென்று இகழ்ந்துமாறுபட்டதாகச்சொல்லிற்று அவ்வண்ணஞ்சொல்லவே அவர்பிரமதேவனுலகமட்டும் தன்னொருகையைத் தூக்கிப்பெரிதாகிய அதன்உச்சிமேல் வைத்துஅழுத்தினார். அப்படியழுத்தின மாத்திரத்தில் அது தன்னிலைகுலைந்து வெண்மை நிறமுள்ள விபூதியணிந்திருக்கும் பரமசிவனுடைய அடியார்களுடன் பகைகொண்டவர்கள் நரககுழிக்குள் விழுகின்றநிலைமையைக்காட்டு முறைமைபோலப் பாதாளலோகத்துக்குள்ளேஅழுந்திப்போய்விட்டது.—(எ-று.) (௮௫)

தாதார்மலர்க்கைகொடுவெற்பைப்பிலத்தினிடை ... ... ...*
தள்ளிப்படர்ந்தபொழுதின் ... ... .. ... ... *
வாதாவிவில்வலனெனும்பேர்படைத்துமிகு... ... ... ...*
வஞ்சங்குயிற்றுகொடியோர். .. ... ... ... ... *
தீதானதற்றமுனிதன்னைத்தெரிந்துயிர் .. ... ... ... ...*
செகுப்போமெனக்கருதியப்... ... ... ... ... *
போதாடதாயிளவனுறவில்வலன்முனிவர்.. ... ... ...*
போலப்பொலிந்தனனரோ ... ... ... ... ... *

(இ-புரா.) மகரந்தப்பொடி நிறைந்துள்ள செந்தாமரைபோன்ற தன்கையினால் - விந்தகிரியைப்பாதாளத்துக்குள் அழுத்திவிட்டுஅப்புறஞ்செல்லுகின்றபோது வாதாவி வில்வலன் என்கின்றபேர்பெற்று மிகுந்த வஞ்சகஞ்செய்துகொண்டிருக்கிறபாவிகள் குற்றமற்றிருக்கிற அகஸ்தியனைக்கண்டு இவன்பிராணனைக் கொல்வோமென்று நினைத்து அப்போது வாதாவி ஆட்டுருவங்கொண்டிருக்க மூத்தவனாகிய வில்வலன்முனிவர்போல வேடங்கொண்டிருந்தான்.—(எ-று.) (௮௬)

பான ... ... ...*
கோலஞ்சமைந்தகொடியோன் ... ... ... ... *
சென்றத்தவென்றடிபணிந்திற்கொணர்ந்தமுது ... ... ...*
செய்தேகவேண்டுமெனவே.... ... ... ... ... *

பொழிப்புரை.

நன்றறத்தெர்ழிற்புரிவிம்மனமூழ்கிவந்தடிசி.... ... ... ...*
னயமோடுசெய்துதகனாய் ... ... ... ... ... *
பொன்றத்தடிந்துகறியாகச்சிறப்பொடு. ... ... ... ...*
புரிந்தேபடைத்தனனோ.. ... ... ... ... ... *

(இ-புரை.)விந்தகிரியைவென்றஅகஸ்தியமுனிவர்முன்பாகநல்லத வவேடங்கொண்ட கொடியவன்சென்று அவர்பாதத்தை வணங்கி; அய் யனேயென்றுஉபசாரவார்த்தைசொல்லித்தங்கள்ஆச்சிரமத்துக்குஅழை த்துக்கொண்டுவந்து சுவாமிகளிங்கே அமுதுகொண்டு போகவேண்டு மென்று சொன்னான்- நல்லது அமுதுசெய்கிறேமென்று அகஸ்திய முனிவர் ஒத்துக்கொண்டார் வில்வலன்உடனே நீரில்ஸ்நானஞ்செய்து வந்து ருசியர்க்கத்துடன் அன்னஞ்சமைத்து அந்த ஆட்டையிறக்கும்ப டிகொன்று சிறப்புடனே கறியாகச்சமைத்துப் படைத்தான்.—(எ-று)

இன்பானலமுதங்கருந்தாவருந்தவ ... ... ... ... ...*
னிருந்தானிருந்தபொழுதின்... ... ... ... ... *
வன்பாவிவாதாவிவருகென்னமுனிவன்றவ்.... ... ... ...*
வயிறூடெழுந்திளையவே ... ... ... ... ... *
கொன்பாவகட்டிற்கரங்கொண்டிரங்கொண்ட... ... ... *
கொண்டற்களத்தனடிகட்... ... ... ... ... ...*
கன்பானவன்றடவவாதாவிகோதாவி ... ... ... ... *
யழிவுற்றதன்னபொழுதே ... ... ... ... ...*

(இ-புரை.)இனிமைபான.அமுதம் அங்குப்புசித்து அகஸ்தியமுனி வரிருந்தார்அப்படியிருந்தபோதுகொடியபாவியாகிய வில்வலன்வாதா வியேநீவாவென்று கூவினவளவில்அவன் அகஸ்தியமுனிவர் வயிற்றில் உயிர்பெற்றெழுந்து இரைந்தான்;அதையறிந்த மேகநிறங்கொண்ட க ண்டத்தையுடைய பரமசிவன் திருவடிக்குஅன்புள்ள அகஸ்தியமுனிவர் பெருமைமிகுந்ததன் வயிற்றின்மேல்வலக்கரம் வைத்துத்தடவினார்அ ப்பொழுதே வாதாவியின்குற்றம்பொருந்தியஉயிரானது அழிந்தது.

பின்னனதன்றம்பிமடிவானசெயல்கண்டு... ... ... ... *
பெரிதுஞ்சினந்துதகுவன். ... ... ... ... ...*
முன்னாகமதுகொண்டுமுன்னாகவருபோது ... ... ... *
முனியோர்தருப்பையதனைக் ... ... ... ... ...*

கொன்றாரும்விடையாளிபடையாகவிடுபோது ... ... *
கொடியோனுமுடிவாகவே ... ... ... ... ...*
யன்றானிடந்தனையகன்றேநெடுங்கட ... ... ... ... *
லயின்றானடந்தருளினான்.... ... ... ... ... ...*

(இ-புரை.) இளையவனாகியதன்தம்பி யிறந்துபோனசெயலைக்கண்டுவில்வலனானவன்முன்போலஅவுணவுருவங்கொண்டுஅகஸ்தியருக்கெதிராகவரும்போது அந்தமுனிவரானவர் ஒருதருப்பையை யெடுத்துப்பெருமைபொருந்திய ரிஷபவாகனமுள்ள பரமசிவனுடைய அஸ்திரமாகப்பாவித்து விட்டபோது எதிரிலவந்த கொடியவனு; முடிவானான்-பின்புநெடியகடலையுண்டமுனிவர் அவர்களிடத்தைவிட்டுநீங்கி அப்புறம்நடந்தருளினார் —(எ-று.) (௮௯)

முடிவானகொடியோர்கடவமேவுதுருவாக. ... ... ... *
முனிமைந்தரானமுறையாற் ... ... ... ... ...*
படியோர்கள்புகழ்கும்பமுனிபின்புமுனிவோர்கள்.... ... *
படிவங்கள்கொண்டுதொடரா ... ... ... ... ...*
விடிபோலிரைப்பவுயர்கொங்குக்கணித்தா ... ... ... *
விருந்தோரிலிங்கமதனி ... ... ... ... ... ...*
லடியார்மனத்தனையருச்சனைபுரிந்தங்க .... ... ... ... *
கன்றானவர்க்கொல்பவமே... ... ... ... ... ..*

(இ-புரை.) இறந்துபோனகொடியவர்கள் தூர்வாசமுனிவருடையபுத்திரர்களான முறையால் பூலோகத்தார் தொழுகின்ற அகஸ்திய முனிவர்பின் அவர்களும்முனிவர்கள்வடிவங்கொண்டுதொடர்ந்து இடிபோல் ஆரவாரித்தார்கள் அகஸ்தியர்கொங்குதேசத்தின்சமீபத்திற்போயிருந்து ஒருசிவலிங்கந்தாபித்து அதனிடமாக அடியார்களிருதயதாமரைமலரில் வீற்றிருக்கும்பரமசிவனை அருச்சித்துஅந்தஇருவரையுங்கொன்றதினால்நேரிட்டபாவத்தைஅங்கேநீக்கிக்கொண்டார்.—(எ-று.) (௯௰)

கொங்குப்பொழிற்குலவுகொங்கிற்பெருந்தவர்கள். ... ...*
கோமானிருந்தருளுநாண் ... ... ... ... ... *
மங்குற்களத்தனடிசிந்திக்குநாரதன் ... ... ... ... ...*
வயற்றாழிநண்ணவதனிற் ... ... ... ... ... *
றங்குற்றவிண்ணிறைதெரிந்தேயெழுந்துமுனி ... ... ...*
தாண்மீதிறைஞ்சவினிதே ... ... ... ... ... *
யிங்குற்றிருந்தனைகொலென்னவுனதின்னருளி ... ... ...*
னின்போடிருந்தனனென ... ... ... ... ... *

# கந்தப்புராணச்சுருக்கம்,

## பொழிப்புரை.

(இ-புரை.) வாசனைபொருந்திய சோலைகள்சூழ்ந்தகொங்குநாட்டில் பெருந்தவர்கள் கோமானாகிய அகஸ்தியமுனிவரிருந்தருளுநாளில் மேகம்போற்கறுத்திருக்கும் கண்டத்தையுடையபரமசிவனது திருவடியைச்சிந்திக்கும் நாரதமுனிவர் வயல்சூழ்ந்தசீகாழியில்சேர்ந்தார்- அந்த க்ஷேத்திரத்தில் தங்கியிருக்கிற தேவேந்திரன் அவர்வந்ததையறிந்துஎழுந்தெதிர்சென்று அம்முனிவர்பாதத்தினிடத்தில் பணிந்தான்அவர்இந்திரனே நீயிவ்விடத்தில்இனிதாகவிருக்கிறையாவென்று க்ஷேமம்விசாரித்தார் சுவாமிகளேதேவர்கிருபையினால் இனிதுடனிருக்கிறேனென்றுசொல்லி.

ஒப்பானதற்றபொழிலப்பானதற்றுலர்வ... ... ... ... *
தோதக்கடத்துமுனிபால் ... ... ... ... ... ...*
வைப்பானவாறுவரின்மெய்ப்பாகிநந்தன... ... ... ... *
வனந்தான்வளர்ந்திடுமெனச். ... ... ... ... ...*
செப்பாயுபாயமெனமெய்ப்பாணியைந்துடைய. ... ... *
சிரோனையர்ச்சியெனவே ... ... ... ... ... ...*
பொய்ப்பாசமற்றமுனியுரைசெய்பவவ்வகை ... ... ... *
புரிந்தான்விசும்புபுரிவான்... ... ... ... ... ...*

(இ-புரை.)ஒப்பானதில்லாதநந்தனவனம்நீரில்லாமலஉலர்வதைத்தேவேந்திரன்சொன்னான் அதைக்கேட்டநாரதர் தேவேந்திரனேகேள் அகஸ்தியமுனிவரிடத்திலிருப்பதாகிய காவிரிநதிவருமானால் உண்மையான பரமசிவனைக்குறித்துவைத்த இந்தநந்தவனமானது வளருமென்றுசொன்னார் ஆனால் அந்தநதியிங்குவருவதற்குத் தக்க உபாயமுந் தேவர்தான் சொல்லவேண்டுமென்றான்- திருமேனியின்கண் ஐந்துதிருக்கரமுள்ளவிநாயகமூர்த்தியைப் பூசைசெய்யென்று பொய்யானபாசம்நீங்கியநாரதமுனிவர்சொன்னார் அந்தவார்த்தையைக்கேட்ட தேவேந்திரன் முனிவர் சொன்னபடியேவிநாயகமூர்த்தியைப்பிரதிஷ்டைசெய்துபூசித்தான்.---

அக்காலைவேழமுகன்வந்தேதுவேண்டுமென .. ... ... *
வந்தணகடத்துமுனிபான்... ... ... ... ... ...*
மிக்கானகுண்டிகைவனத்தைக்கவிழ்த்தருள ... ... ... *
வேண்டுங்கணேசவெனவே... ... ... ... ... ...*
மைக்காகமேனிகொடுசென்றுந்துகுண்டிகையை ... ... *
மண்ணிற்கவிழ்க்கவதனிற்... ... ... ... ... ...*
புக்காசிலாதிலகுதண்பொன்னிநன்னதி ... ... ... ... *
புறம்போகியோடியதரோ... ... ... ... ... ...*

(இ-புரை.) அப்போது யானைமுகவிநாயகக்கடவுள் எழுந்தருளி வந்து உனக்குவேண்டியவரமென்னவென்றார் கணேசமூர்த்தியே அழகுங்குளிர்ச்சியுமுள்ளகும்போற்பவராகிய அகஸ்தியமுனிவருடையமேன்மையுள்ளதான கமண்டலத்திருக்கும்நீரினைக்கவிழ்த்தருளவேண்டுஞ்சுவாமியென்றுவிண்ணப்பஞ்செய்தவளவில் விநாயகர்கிருபைகூர்ந்துகருங்காக்கைவடிவங்கொண்டுசென்று அந்தக்கமண்டலத்தைப் பூமியில்கவிழ்த்துவிட்டார் அதற்குள்குற்றமில்லாமல் விளங்கிக்கொண்டிருந்த குளிர்ச்சியுள்ள காவிரியென்னும் நல்லநதியானது புறத்திற்சென்றோடிப் பரந்தது.—(எ-று) (௯௩)

அவ்வேலையோர்சிறுவனைட்போலவத்திமுக ... ... ... *
வத்தன்றிரிந்தருளலு... ... ... ... ... ... ...*
மைவேலைதன்னையொருகையூடடக்குமுனி. ... ... ... *
வன்றான்வெகுண்டுதொடரா ... ... ... ... ...*
மெய்வேதனைப்படவிளைப்பத்தனுதுருவ... ... ... ... *
மேவிப்பயந்தமுனிவற் ... ... ... ... ... ...*
குய்வேதரும்பலவரந்தானளித்தவ ... ... ... ... ... *
னொளித்தான்மிகுத்தவொளியான் ... ... ... ...*

(இ-புரை.) அப்பொழுதுயானைமுகக்கடவுளாகிய விநாயகர்ஒரு சிறுவனைப் போலவடிவங்கொண்டருளியங்கேயுலாவிக் கொண்டிருந்தருளக்கருமை நிறமுள்ளசமுத்திரத்தை ஒருகைக்குள் அடக்கிய அகஸ்தியமுனிவர் கோபங்கொண்டுதொடர்ந்துசிறுபிள்ளையாயிருப்பவரைப்பிடிக்கப்போம்பொழுது அவர்முனிவர்கைக்ககப்படாமல் எட்டவெட்டப்போனதால்முனிவர்இவரைத்துரத்திக்கொண்டோடிச்சரீரம்வருந்தும்படி யிளைப்படைந்தார் அதைக்கண்டுவிநாயகமூர்த்திதிருவுளமிரங்கித் தம்மைக்கண்டுபயந்தஅகஸ்தியமுனிவருக்குச் சோதிசுரூபதரிசனந்தந்துஉய்யத்தகும்பலவரமுங்கொடுத்தருளிமறைந்தார்.—(எ-று.) (௯௪)

துதியார்கடத்துமுனிகொங்கைத்தணந்துமிகு ... ... ...*
துங்கம்பொருந்துதிருமால் ... ... ... ... ... *
பதியாயிருந்ததொருகுற்றாலமுற்றளவில் ... ... ... ...*
பாவங்கொள்பாகவதருட் ... ... ... ... ... *
கொதியாவிகழ்ந்திடலுமவர்போலுருக்கொடரி ... ... ...*
கோயிற்புகுந்தரிதனைப் ... ... ... ... ... *
புதிதாயிலிங்கவடிவாகப்புரிந்துபொதி ... ... ... ...*
யத்திற்பொருந்தினனரோ ... ... ... ... ... *

(இ-புரை.) யாவருந்துதிசெய்யுந் தகுதியுள்ள அகஸ்தியமுனிவர் கொங்குநாட்டைநீங்கி யிருந்தமகத்துவமுள்ளதாய் விஷ்ணுவின்பதிகளிலொன்றாயிருந்த திருக்குற்றாலத்திற்சென்றார்- அங்கிருந்தபாவிகளாகியவைஷ்ணவர்கள்அகஸ்தியருடையசைவசமயத்திருக்கோலத்தைக்கண்டுமனங்கொதித்துஉள்ளேநீவரத்தகாதென்று இகழ்ச்சிசெய்தார்கள்அகஸ்தியமுனிவரவர்களுடன் யாதொன்றும்பேசாமல்கோவிலைவிட்டுத்திரும்பிச்சிலதூரஞ்சென்று இவர்கள்மமதையைக் கெடுக்கவேண்டுமென்றுட்கொண்டு வைஷ்ணவவேஷமுள்ளவராய்த்திரும்பிவந்து விஷ்ணுவாலயத்துக்குட்சென்றார் அவர்களிவர்முன்னையவொன்று தெரியாமல் உண்மையானபாகவதரொன்றேநம்பி ஆலயத்துக்குள் உபசாரத்துடன் அழைத்துக்கொண்டுபோனார்கள் அவர்களைப்பார்த்து நம்முடையகையினால் சுவாமிக்குத் திருமஞ்சனஞ்செய்யவேண்டுமென்றுசொல்லி அதற்குவேண்டியபொருள்களை அவர்களைக்கொண்டேயழைப்பித்துத்திருமஞ்சனஞ்செய்கிறவர்போலப்பெருமாள்முடியில் கையைவைத்துஅழுத்திஅந்தப்பெருமாளைப்புதிதான இலிங்கவடிவாகச்செய்துவிட்டுப்பொதிகைமலையிற்சேர்ந்தார்.—(எ-று.) (௬௫)

[வேறு.]

இதுநிற்கமுனமைங்கரப்பிள்ளைதள்ளு. ... ... ... ... *
மெழில்கொண்டநதிவந்திருங்காழிதன்னிற்... ... ...*
பொதுளூற்றுமெலிகின்றநவநந்தனத்திற்.. ... ... ... *
புகுதத்தலைழப்பவரனைப்பூசைசெய்தே ... ... ...*
துதியுற்றமகவானிருக்கத்திருக்கச்... ... ... ... ... *
சூரன்றனலேவருந்தமரர்சில்லோர் ... ... ... ...*
கதிருற்றகனகத்துறக்கந்துறந்தே ... ... ... ... ... *
காழிப்புறத்திற்கலந்தார்கண்டமன்றே... ... ... *

(இ-புரை.)இந்தச்சரித்திரத்தைவிட்டு மேலேநடந்த காவிரிசரித்திரஞ்சொல்லுகிறார்முன்னம்விநாயகரால்கவிழ்க்கப்பட்டகாவிரிநதிவந்து பெருமைபொருந்திய சீகாழியில் நெருக்கங்கொண்டுவாடியிருக்கிறநந்தனவனத்தில் பாய்ந்ததினால் அந்தநந்தனவனந் தழைந்தது அதைத்தேவேந்திரன்கண்டு பரமசிவனைப்பூசித்துக் கொண்டிருந்தான் தேவர்களிற் சிலபேர்சூரனாலே மெலிவடைந்து ஒளிபொருந்திய பொன்மயமாகியசுவர்க்கலோகத்தைவிட்டுநீங்கிச்சீகாழிப்பதியிற்சேர்ந்தார்கள்.(எ-று.)

ஆண்டுற்றதவளக்கனிற்றண்ணலைக்கண் ... ... ... ...*
டவனம்பொனடிமீதினடைவிற்பணிந்தே ... ... *
யீண்டுற்றிருந்தாய்பிரிந்தெம்மையாமங் ... ... ... ...*
கிகல்கொண்டுவருசூரனிடுமேவலெல்லா ... ... ... *
மூண்டுற்றதுயரிற்புரிந்தேமெலிந்தே ... ... ... ...*
முடியாதினிச்செய்யமுடியாதெமையா ... ... *
மாண்டுற்றவிறல்கொண்டசூர்கெட்டியாமுய்ய ... ... ...*
வகையொன்றுபுரிகென்னமகவண்ணல்புகலும் ... *

(இ-புரை.) அவ்விடத்திலிருக்கின்ற வெண்மைநிறமுள்ளயானையையுடையதேவேந்திரனைக்கண்டு அவனது அழகுடன் பொலிவுற்றபாதத்திடத்தில் பணிந்து எங்களைவிட்டுப்பிரிந்து நீயிங்கிருக்கின்றாய் நாங்களவ்விடத்தில் பகைகொண்டுவருகிற சூரன்உத்தரவுசெய்யும் ஏவலையெல்லாம் பொருந்துந்துயரத்துடன்செய்து மெலிந்தோம் அதுஇனிச்செய்யமுடியாதுஇனிச்செய்யமுடியாது எங்களிறைவனே மாட்சிமைப்பட்டவெற்றிகொண்டசூரன்கெட்டுநாங்கள்பிழைக்கும்படிஒருவகைசெய்யவேண்டுமென்றார்கள் அதைக்கேட்டதேவேந்திரன் சொல்லுகின்றான்.

துன்றேர்வளைச்செங்கையெழின்மாயைநல்குஞ் ... ... ...*
சூர்மாமகந்தான்றொடங்குற்றவன்றே... ... ... ... *
யின்றேயிழந்தோமிரும்பொன்னினன்னா... ... ... ... *
டென்றேநுமக்கங்கிசைத்தேனுயர்ந்த... ... ... ...*
குன்றேயெனுங்கொங்கையுமைபங்கனல்குங் ... ... ... *
குறைவற்றுவளர்வெற்றிகூடுற்றுநம்மை ... ... ...*
வென்றேபதங்கொண்டுபன்னாளுமன்னோன்... ... ... *
மிடலோடுபடிமீதுமிகுமேவல்கொண்டான் ... ... *

(இ-புரை.)அழகுபொருந்திய வளையலணிந்த செங்கையும் சௌந்தரியமுமுள்ளமாயையானவள்பெற்றசூரன்யாகஞ்செய்யத் தொடங்கினகாலத்தே உங்களைநோக்கி யின்றோடே நம்முடையபொன்னாட்டையிழந்தோமெனஅன்றேசொன்னேன்மலையென்றுசொல்லத்தக்கபூரிப்புள்ளதிருத்தனபாரமுடையபார்வதிபாகனுகிய சுவாமியருளிச்செய்தகுறைவற்றுவளர்கின்றவெற்றியைக்கூடிநம்மைச்செயித்துச்சுவர்கத்தையும்அபகரித்துக்கொண்டுபலநாளும் அவன்பராக்கிரமத்துடன் பூலோகத்தினிடத்தில் நம்மைமிகுந்த ஏவல்கொண்டான்.—(எ-று.) (கூ௪)

பொழிப்புரை.

மிடல்கொண்டநஞ்சென்னவெஞ்சூரனுனு... ... ... ... *
மீனஞ்சுமந்தேமெலிந்தோமதல்லா ... ... ... ...*
விடர்கொண்டபுன்செய்கையாவும்புரிந்தே... ... ... ... *
மிவையன்றியயிராணியெனுநாமமேவு ... ... ... *
மடமங்கைதனைவவ்வியெனையுஞ்சிறைக்கண்... ... ... ...*
வைப்பானினைந்துந்துவானத்துவஞ்சன்... .. ... *
படையுந்தவிவ்வாறுணர்ந்தேகரந்தே... ... ... ... ...*
படரோடுமாதோடுபதியைத்தணந்தேன் ... ... ... *

(இ-புரை.) பலங்கொண்டவிஷம்போன்ற கொடியசூரனால் நாம்மீன்சுமந்துகொண்டுவந்து போட்டுமெலிந்தோம் மற்றஇழிவானதொழிலெல்லாஞ்செய்தோம் இதுவுமல்லாமல் இராணியென்றும்பர்பொருந்தியமடமாதை அபகரித்துக்கொண்டு என்னையுஞ்சிறையில்வைக்கநினைந்து அந்தவஞ்சகன் நம்முலகத்துக்குப் படைகளைச்செலுத்தினன் அதையறிந்துஇவ்வாறுமறைந்துஇந்திராணியுடன் பதியைவிட்டுநீங்கினேன்.(எ-று

முந்தேபொருந்துற்றதீதன்றிபீம்நார் . ... ... ... ...*
முரண்மேவுவகைமேவின்முடியாதெலக்கொண் ... *
டிந்தேதபுரைந்திட்டமுகமங்கையோடு... ... ... ... ...*
மிடர்கொண்டநுமைவிட்டிரும்பூதலத்தே ... ... *
வந்தேகரந்தேவதிந்தேநுதற்கண்... ... ... ... ... ...*
மந்தாகினிச்சென்னிமன்னன்பதத்திற் ... ... ... *
செந்தேனறும்போதுதூவிப்பணிந்தே... ... ... ... ...*
சீர்பெற்றிடும்பூசைசெய்தேயிருந்தேன்... ... ... *

(இ-புரை.)முன்னமேபொருந்தியபொல்லாங்குமல்லாமல் பின்னுமொரு வன்மைபொருந்தியவகைநேரிட்டால்நம்மால் சகிக்கமுடியாதென்றுகருதித்துன்பங்கொண்டஉங்களைவிட்டுப்பிரிந்து சந்திரனையொத்தமுகமுள்ள இந்திராணியுடன்பூலோகத்தில்வந்துமறைந்திருந்துகொண்டுநெற்றிக்கண்ணினையும்கங்கையணிந்ததிருமுடியினையுமுடையபரமசிவன்திருவடியில்செந்தேனொடும்பசனைதங்கியமலர்களால் அருச்சித்துப்பணிந்துசீர்பெற்ற பூசைசெய்துகொண்டிருக்கின்றேன்.—(எ-று.)(ா)

துன்பந்தருந்தானவக்கையர்சொல்லுந்... ... ... ... ...*
தொழில்செய்துநம்மேன்மைதொலைவுற்றதினிநா ... *
மின்கொண்டவெள்ளிக்குவட்டின்கண்மேவி... ... ... ...*
மேவார்புரஞ்செற்றவிமலர்க்குரைத்தெம் ... ... *

புன்கண்டணந்துய்யவம்மின்களென்னப் ... ... ... ...*
பொன்னுடர்மண்ணேமகிழ்ந்தார்புகழ்ந்தா ... ... *
ரின்பங்கொளிமையோரையிறையிங்கணுறுமென்... ... ...*
றெழின்மேவுமபிராணியிடைமேவினுனல் ... ... *

(இ-புரை.) துன்பத்தைத்தருகின்ற அவுணராகியபொய்யர்கள்சொல்லும் ஏவலைச்செய்து நம்முடைய மேம்பாடெல்லாம் தொலைந்துபோய்விட்டது- இனிநாம் ஒளிகொண்ட வெள்ளிமலையாகிய கயிலைமலையிற்சென்று தேவர்களுக்குப் பகையானவர்களுடைய திரிபுரங்களை நகைத்தெரித்த பரமசிவனிடத்தில் விண்ணப்பஞ்செய்து நம்முடைய துன்பங்களை நீங்கியுப்பலாம் நீங்களும் வாருங்கள்போவோமென்று இந்திரன் சொன்னான் அதைக்கேட்ட தேவர்கள் மகிழ்ந்து புகழ்ந்தார்கள் பின்பு இன்பங்கொண்ட அந்தத்தேவர்களை நீங்களிங்கே சற்றுநேரமிருங்களென்றுசொல்லிச் சௌந்தரியம்பொருந்திய இந்திராணி யிடத்திற் சென்றான்.—(எ-று.) (மண்ணே-அசைச்சொல்.) (௱௧)

சீர்கொண்டவயிராணிகண்டாள்பணிந்தாள்... ... ... ...*
சேர்வுற்றதென்னிங்கொரொண்ணத்தொடென்ன ... *
வார்கொண்டமுலைமங்கையிடரும்பரொடுவிண் ... ... ...*
மதிகங்கைநதிதங்குமௌலிப்பிரான்வா ... ... ... *
ழேர்கொண்டகயிலைக்கிரிக்கேகுகின்றே... ... ... ... ...*
னிதுகூறவந்தேனெனுவங்கிசைப்பச் ... ... ... *
சூர்கொண்டுமண்மேல்விழுந்தாளயர்ந்தாள்... ... ... ...*
சுரர்மன்னனதுகண்டுதுண்ணெனன்றெடுத்தான்... ... *

(இ-புரை.) சீர்கொண்ட ஐராணியானவள்தேவேந்திரன்வந்ததைக்கண்டுபணிந்துஎன்பிராணநாயகனேயாமேதாஒருஎண்ணத்துடனிங்குவந்தகாரணமென்னவென்றுகேட்கக்கச்சணிந்தகனமுள்ளநாயகியே துன்பங்கொண்டுவந்ததேவருடன் ஆகாயத்துவருகின்றசந்திரன்கங்கைநதிபொருந்தியசடாமகுடத்தையுடைய பரமசிவன் வீற்றிருக்கும் அழகுகொண்டகைலைமலைக்குச்செல்லுகிறேன் ஆதலாலுனக்குச் சொல்லவந்தேனென்றான் அதுகேட்டு இந்திராணி துன்பங்கொண்டுமண்மேல்விழுந்து மூர்ச்சையானாள் தேவேந்திரன்கண்டுநடுங்கி அவளையெடுத்தான்.(எ-று.)(௱௨)

தன்னுருவிற்கொண்டுதெளிவிப்பவங்கண் ... ... ... *
டளர்துன்புசிறிதேதணந்தென்னைவிட்டிப் ... ... ...*

பொழிப்புரை.

பொன்னூரின்மன்னீபிரிந்தாலெனைத்தான்.. ... ... ... *
புரப்பாரியாராவிபோமல்லதுய்யே ... ... ... ...*
னுன்றோடுவருவேனெனுநிற்பவைய.. ... ... ... ... *
னுனையிங்களிப்பானுளத்தஞ்சலென்ன... ... ... ...*
வன்னிடத்திற்சிறப்பெண்ணையென்று ... ... ... ... *
ளதுகேளெனுவின்னதவளோடுரைப்பான் ... ... ...*

(இ-புரை.) அவ்வாறெடுத்த தேவேந்திரன் தன்தொடைமேல் வைத்துக்கொண்டுமூர்ச்சைதெளியும்படிசீதளஉபசாரஞ்செய்தான் அப்போது இந்திராணிமெலிகின்றதுன்பஞ்சிறிதுநீங்கி என்னைப்பொன்னுலகில்விட்டுநீர்பிரிந்துபோய்விட்டால்பாதுகாப்பவர்கள்யாவர்பிராணனீங்கிவிடுவேனேயல்லதுபிழைத்திரேன் ஆதலால்உன்னுடனே நானும்வருகிறேனென்றுசொல்லிநின்றாள் அதைக்கண்டதேவேந்திரன் இந்திராணியை நோக்கி அரிகரபுத்திரனுகியசாத்தாஎன்பவர் உன்னைப்பாதுகாப்பர் பயப்பட வேண்டாமென்று சொல்ல அவரிடத்தில் அப்படிக்கொத்துமகத்துவமென்னவென்றாள்- நாயகியேஅதுகேளென்று இத்தன்மையுள்ளசரித்திரத்தையவளுடனே சொல்லுகிறான்.—(எ-று.) (௱௩)

அல்லோடுநிகர்கண்டனருளின்றிமுன்னு ... ... ... ...*
ளரியாதியிமையோர்களடன்மேவுமவுணர்.. ... ... *
கல்லோலமேவுஞ்செழுங்கீரமாரக். ... ... ... ... ...*
கடலைக்கடைந்திட்டகாலத்திலைலம் ... ... ... ... *
பல்லோருமிடருற்றிறப்பப்பிறப்பப்... .... ... ... ...*
பயங்கொண்டிரிந்தேபரன்சேர்குவட்டுற்... ... ... *
றெல்லாருமுக்கட்கருங்கண்டனைக்கண் ... ... ... ...*
டெழில்கொண்டதுதிசெய்யவிருநஞ்சயின்றான்.. ... *

(இ-புரை.) இருளையொத்த காளகண்டமூர்த்தியின்திருவருள்பெற்றுக்கொள்ளாமல் விஷ்ணுமுதலான தேவர்களும் பலம்பொருந்திய அவுணர்களும் முன்னாளில் கல்லென்கிற வோசைபொருந்திய செழுமையுள்ள பால்நிறைந்த அந்தக்கடலைக் கடைந்தகாலத்தில் அதினிடத்தில் எல்லாருந்துன்பம்பொருந்தியிறக்கும்படி ஆலாலவிஷம் உண்டாயது அதைக்கண்டு பயங்கொண்டு அவ்விடத்தைவிட்டுப் பிரிந்தோடிக் கயிலாசகிரியிற்சேர்ந்துஒளிநிறைந்த திரிநேத்திரமுங்காளகண்டமுமுடையபரமசிவனைத்தரிசித்து நன்மைபொருந்தியஸ்தோத்திரஞ்செய்தார்கள் சுவாமிஅவர்களைப்பார்த்துப்பயப்படாதிர்களென்று அபயங்கொடுத்து

க்கடலினுண்டாகிவந்தபெருமைமிகுந்த விஷத்தையுள்ளங்கையிலேற்று
ட்கொண்டுதேவர்களைக்காத்தருளினார்.(எ-று.)(இருநஞ்சுஎன்பதற்கு- இ
ருவகைநஞ்செனப்பொருள் கூறினும் அமையும்- இருவகை நஞ்சாவது
வாசுகியென்னும்நாகங்கக்கியவிஷமொன்று-கடல்கக்கியவிஷமொன்று-
ஆகவிரண்டெனக்கொள்.)

[தக்ஷகாண்டம்.]

ஊன்றுபேதுறலெய்தியேயாற்றவெய்துயிர்த்துத்.... ...*
தோன்றும்வெஞ்சினங்கொண்டுமெய்பதைத்துநாத்துடிப்ப
ஆன்றவாயிரம்வாய்தொறுமாலகாலத்தைக்...... ... ... *
கான்றதத்துணையளக்கருமுமிழ்ந்ததுகடுவே.. ... ... ...*

(என்னுமிச்செய்யுளானும்அடுத்தசெய்யுளில்-கடுந்தீ· நூற்றுக்
கோடியிற்பரந்தத்வ்விடமெலாநொய்தில் ஏன்றதினானுமுணர்க. காரண
ம்-ஈண்டுநோக்கிறபெருகும்.) (௱௪)

கன்மாதிடங்கொண்டகங்காளனின்னும்.... ... ... ... ...*
கடைமின்களமுதங்கணெழுமென்றுகழற ... ... *
முன்மானவேகிக்கடைந்தார்களும்பன் . ... ... ... ...*
முகத்தானைவழிபாடுமுன்னஞ்செய்திலார் ... ... *
பொன்மேருமத்தங்குலைந்தேகடற்குட்... ... ... ... ...*
புகுந்திட்டதவனைப்புகழ்ந்தாதரிப்ப ... ... ... *
மின்மாகநீள்வெற்பெழுந்திட்டதெழலு ... ... ... ...*
மிகுமின்படைந்தேமிடைந்தேகடைந்தார் ... ... *

(இ-புரா.)மலைமகளையிடப்பாகத்திற்கொண்டருளிய கங்காளமூர்
த்தியாகியபரமசிவன்தேவர்களைநோக்கிநீங்களின்னமுஞ் சமுத்திரத்தை
க்கடையுங்கள்கடைந்தால் அதனிடத்தில்அமிர்தம்உண்டாமென்றுதிருவா
ய்மலர்ந்தருளினார்அதைக்கேட்டதேவர்கள் அந்தக்கடலினிடத்திற்சென்
று யானைமுகவிநாயகனை ஆரம்பத்தில்பூசனைசெய்யாமல்முன்போலக்க
டைந்தார்கள் ஆதலால் அந்தப்பொன்மலையாகிய மத்தானது அங்குச்சுழ
ன்று சமுத்திரத்துக்குள் ஆழ்ந்துவிட்டது அதற்குமேல் விநாயகனைப்பூ
சித்துத்துதிசெய்தவளவில் மின்னுமேகங்கள்தவழும் ஆகாயத்தையளா
வுவதாகியஅம்மலையானதுமேலெழுந்ததுஎழுந்த உடன்மிகுந்தஇன்பம
டைந்துசமுத்திரத்தைக்கடைந்தார்கள்.(எ-று.)(மின்-ஆகுபெயர்.)(௱௫)

கடைகின்றபொழுதின்பவமுதங்கணெழலும்... ... ... ...*
கண்டண்டர்இன்பானவக்கையர்சூழா ... ... ... *

பொழிப்புரை.

வடைகின்றவமுதிங்கெமக்கேயெமக்கென் ... ... ... ...*
றடலோடுபொரமுன்னவப்போதிலப்போர் ... ... *
கெடவுன்னியெழின்மேவுமுருமாயனொருமோ ... ... ...*
கினியாகிவந்தின்னகேண்மின்களென்னா.... ... ... *
மிடைகின்றதிரைவேலையமுதோவியானோ ... ... ... ...*
வேண்டுற்றதிவணென்னவெய்யோரிசைப்பார் ... ... *

(இ-புரை.) சமுத்திரத்தைக்கடைந்தபோது அதனிடத்தில் இன்பமுள்ள அமிர்தகடமெழுந்தது அதைக்கண்டு தேவர்களும்பலம்பொருந்திய அவுணவஞ்சகர்களும் சூழ்ந்துகொண்டு இவ்விடத்திலுண்டான அமிர்தமானது எங்களுக்கெங்களுக்கென்று போர்செய்ய எத்தனித்தார்கள் அப்போது அவர்கள்செய்யக்கருதிய போர்கெடும்படிநினைத்து அழகுபொருந்தியதிருவுருவமுள்ள விஷ்ணுவானவர் ஒருமோகினிரூபங்கொண்டுவந்து இந்தவார்த்தையைக்கேளுங்கள் அலைகள்நெருங்கியகடலிலுண்டானஅமிர்தம்வேண்டுமோ நான்வேண்டுமோ வென்றார் அவுணர்கள்சொல்லுகின்றார்கள்.—(எ-று.) (௱௬)

எங்கட்குநீயென்றுரைத்தார்விரைத்தா... ... ... ... ...*
ரிமையோர்களமுதெங்களிடமாகவென்றார் ... ... *
சங்குற்றகையானைவெய்யோர்கள்கொண்டோர் ... ... ...*
சார்நண்ணவென்மேனிதழுவற்குவல்லா ... ... ... *
ரிங்குற்றுளார்தம்மிலாரென்னவப்போ ... ... ... ...*
தியானென்றியானென்றிரும்போர்புரிந்தே.. ... ... *
மங்குற்றொழிந்தார்களவர்தம்மிலிருவோர் ... ... ... ...*
வானோருளவர்போலவடிவுற்றடைந்தார் ... ... ... *

(இ-புரை.) அவுணர்கள்எங்களுக்கு நீவேண்டுமென்றார்கள் வாசனைபொருந்தியபூமாலையணிந்த தேவர்கள் அமிர்தம் எங்களிடமாகவேண்டுமென்றார்கள்- சங்கமேந்திய கையையுடைய விஷ்ணுதங்களிஷ்டப்படியொத்துக்கொண்டதைநோக்கி அவுணர்கள் அவரைக்கூட்டிக்கொண்டொருபுறத்திற்போனார்கள்அப்போதவர்களைநோக்கிஎன்மேனியைத்தழுவுதற்குஇங்கிருக்கிறஉங்களில்யார்வல்லவரென்றுவிஷ்ணுவினவினார்- அவ்வாறுவினவவேஅவுணர்கள்நான்வல்லவன்நான்வல்லவனென்றுபெரும்போர்புரிந்துஎல்லாரும்இறந்தொழிந்தார்கள்அவர்களுக்குள்ளிருவர்தேவர்கள்கூட்டத்தில்அவர்களைப்போல்வடிவங்கொண்டுசேர்ந்திருந்தார்கள்.—

விண்ணோர்கணாநண்ணிபமுதங்களிப்ப ... ... ... ...*
வெய்யோர்கள்கடி துண்ணவ துகண்டுவிறல்சேர்.. ... *
தண்ணோவின்மதிசெய்பகதிர்கண்டரிக்குத் ... ... ... ...*
தங்கண்கொடொத்தத்தடச்சட்டுவங்கொண் ... ... *
டுண்ணோவமுடிதள்ளியமு துண்டநீரா... ... ... ... ...*
லுயர்கோளினிலைநல்கவுவர்நாகமாகி.. ... ... ... *
விண்ணோடுசசிதன்னையென்றாழைமுன்சொல் ... ... ...*
வெஞ்சத்திரனல்வானமீதேமறைப்பார் ... ... ... *

(இ-புரை.) விஷ்ணுவானவர் தேவரிடத்திற்சென்று அவர்களுக்கு அமிர்தம்பங்கிடும்போது அங்கிருந்தகொடியவர்களும்விளாவாகவாங்கி யுண்டார்கள் அதைக்குளிர்ச்சிநீங்காதசந்திரனுஞ் சூரியனுங்கண்டுவிஷ்ணுவுக்குத்தங்கள்பார்வையைக்கொண்டு காட்டியிவ்விருவரும் அவுணர்களென்றுதெரிவிக்கத்தெரிந்துகொண்டுவிஷ்ணுவானவர்தன்கையிலிருக்கும் பெரிய சட்டுவத்தினல் அவர்கள்மனம்வருந்தும்படி முடிகளைத்தள்ளி அமிர்தமுண்டதன்மையினல் அவர்களுக்குமேன்மையுள்ள நவகிரகபதவியுங்கொடுத்தார்அவர்கள்சர்ப்பவடிவமாகி விஷ்ணுவுக்குமுன் சொன்னவெஞ்சத்தினல் ஆகாயத்திற் செல்லுகின்ற சந்திரனையும் சூரியனையும் அந்தஆகாயத்தில் மறைக்கின்றார்கள்.—(எ-று.) (இதுதான்சந்திரகிரணமென்றும் சூரியகிரணமென்றுஞ் சொல்லப்படுகின்றது. அவ்விருவரும் உண்டஅமிர்தம் கழுத்தினிடத்தில் வருமுன்னமே துண்டித்தமையால் அதுகள் இறவாத்தன்மையைநோக்கி யினி இந்தத்தலைகள் தேவரிடத்திற் போய்ச்சேர்ந்திருக்குமாதலால் ஆகாயத்தில்தானேயிருக்கும்படி செய்யவேண்டுமென்றுகருதிப்பரமசிவத்தின் அருள்பெற்றுக் கொண்டுகிரகநிலைதந்தார் அவர்கள் செம்பாம்புங்கரும்பாம்புமாகி முன் தங்களுக்கிருந்தராகு கேதுவென்னும் பெயர்களையே பெற்றார்கள்.)

அறைகின்றவிவைநிற்கவமுதம்பகிர்ந்தே ... ... ... ...*
யணிமாதுருக்கொண்டவடன்மாயனுறலுங் ... ... *
கறைதுன்றுகண்டத்தனவன்முன்னர்வந்தே... ... ... ...*
கலவித்தொழிற்செய்தல்கருதுற்றழைப்ப ... ... *
முறையன்றெனுமாயனிசையாதுநிற்ப.. ... ... ... ...*
முரனோடவற்பற்றமுன்னிச்செல்போதி... ... ... *
னறைமன்றுதுளவண்ணலோடத்தொடர்ந்தே ... ... ...*
நம்பன்பிடித்தோரிடத்தெய்தினுல் ... ... ... *

(இ-புரை.) சொல்லிவந்தவிஞநிற்க தேவர்களுக்கு அமிர்தம் பங்கிட்டுக்கொடுத்து அழகுள்ளமோகினிப் பெண்ணுருவங்கொண்ட வல்லபமுள்ள விஷ்ணுவானவர் அந்தப்பாற்கடலினொருபுறத்தி லிருந்தார்விஷந்தங்கிய கண்டத்தையுடைய பரமசிவன் அந்தவிஷ்ணுவும் இச்சிக்கும்படியான மிகுந்தசௌந்தரியமுள்ள திருமேனிகொண்டுவிஷ்ணுவுக்கெதிரில்சென்று அவர்தம்மைக்கண்டு மோகித்ததைத் திருவுளத்திலறிந்துகொண்டு கலவித்தொழில் செய்வதுகருதி அழைத்தார்விஷ்ணு இது முறைமையன்றென்றுசம்மதியாமலிருப்ப நமக்குரிய நால்வகைச்சத்திகளில் நீயுமொருசத்தியாதலால் புணர்வதுமுறைமையென்றுவலிதிற்புணர்தற்குஅவரைப்பற்றக்கருதிச்செல்லும்போதுவாசனைபொருந்தியதுளசிமாலையணிந்த விஷ்ணுவானவர் ஓடினார்பரமசிவன்தொடர்ந்து பற்றியோரிடத்திற்சேர்ந்தார்.(எ-று) (விஷ்ணுவானவர்முறைமையல்லவென்றபோது சுவாமியானவர்நாம்தாராவனத்துக்குப்போனகாலத்தில்பெண்ணுருவங்கொண்டுவந்தனை-நீசத்தியென்பதற்குஇன்னமொருதிஷ்டாந்தஞ்சொல்லுகிறோம் அதென்னவெனில்முன்பிரமனிறந்துபோனகாலத்தில் சிருஷ்டிதொழில் நடப்பதன்பொருட்டு உன்னைப்புணர்ந்தோம் அப்போதுநீதாயாகிப்பிரமன் உன்நாபியினிடமாகவந்தான் இந்தக்காரணத்தைப்பற்றியும்நீசத்தியேயாம்ஆதலால்உன்னைப்புணர்வதுமுறைமையென்றுசாலம்என்கிறமரத்தினிழலில்-புணர்ந்த-அக்காலத்தில் கண்டகிநதியுண்டானதாகவும்அதில்தோன்றும்சாலக்கிரமம் என்பதற்கு அந்தவிருக்ஷத்தின்பெயரேமூலகாரணமாயிருக்கின்றதாகவும்பெரியகாந்தத்திற்சொல்லப்படுகின்றது.—(எ-று) (௱௬)

எங்கோனுமாலும்புணர்ந்தார்க[illegible]போ ... ... ... ...*
தெழிலோடுதித்தானிருங்கொற்றவையன். ... ... *
சங்கோவெனுங்கந்தரத்தையலவனுன்... ... ... ... ...*
றனையாள்வனென்றச்சயத்தோனைமுன்ன ... ... *
வங்கோர்கணத்தெய்தமனையாளையனையா ... ... ... ...*
னரணுகவைத்துந்துதிரணுகரோடும் ... ... *
பொங்கோதவேலைக்கடுக்கொண்டகண்டப் ... ... ... ...*
புனிதன்பொருப்பிற்பொருக்கென்றடைந்தான் ... *

(இ-புரை.)நம்பிறைவனும் மாயவனும் புணர்ந்தார்கள் அப்போதுஅழகுடன் மிகுந்தவென்றியுள்ள அரிகரபுத்திரன் உற்பத்தியானன் சங்கமோவென்றுகருதத்தக்ககண்டத்தையுடையமாதேஅவனுன்னைப்பா

துகாப்பனென்று சொல்லி அவ்வரிகரபுத்திரனைத் தேவேந்திரன் தன்ம னதில் நினைத்தான் அத்தேவன் க்ஷணப்பொழுதுக்குள் வரக்கண்டு தன் மனைவியை அந்த அரிகரபுத்திரன்காவலில் ஒப்பித்துப் பின்பு வந்திருக் கின்ற தேவகூட்டத்துடன் ஓங்கிமேலெழுகின்ற அலைகளுள்ள சமுத்திர த்திலுண்டாகிய விஷத்தை அடக்கிவைத்துக்கொண்டிருக்குங்கண்டத்தை யுடையபரமசிவனது கைலாசமலையில்விரைவாகச்சென்றான்.—(எ-று.)

இன்பானகயிலாயசைலத்தடைந்தே ... ... ... ... ...*
யெம்மானியோகத்திருக்குந்திறத்தா ... ... ... *
லன்பாகவேகாணவில்லாதுபண்ணு... ... ... ... ...*
ளருணந்திதலைவாசலிற்காக்குநாளில் ... ... ... *
வன்பாவவடிவானயமாமுகத்தாள் ... ... ... ... ...*
வளர்துன்முகங்கொண்டமடமாதுடேனும் ... ... *
பொன்பாவுசசிநற்றவஞ்செய்திருந்த... ... ... ... ...*
புகழ்மேவுகாழிப்பொழிற்பாலடைந்தாள் ... ... *

(இ-புரை.) இன்பமிசைந்துள்ளதானகயிலாயகிரியிற்சேர்ந்து நம் மிறைவன் யோகத்திலிருக்குந் தன்மையால் அன்புடன் தரிசிப்பதற்கில் லாமல அருளுள்ள நந்திதேவர் வீற்றிருக்குந்தலைவாசலிற் காத்துக்கொ ண்டிருக்குங்காலத்தில் வலியபாவரூபமாகிய அசமுகியானவள் தன்னிட த்திலிருக்குந் துன்முகியென்னும் பேர்கொண்டவளுடன் அழகுமி குந்த இந்திராணி நலதவஞ்செய்துகொண்டிருக்கும் சீகாழியிலுள்ள சோலையினிடத்துச்சேர்ந்தாள்.—(எ-று.) (௱௰௨)

மாணுனவெழில்கொண்டவிளையோனைநாடி... ... ... ...*
வலிசேபுணர்ந்தேகுமறியாமுகத்தாள் .... ... ... *
சேணுனபொழிலூடிசசியைத்தெரிந்தே ... ... ... ...*
திறல்கொண்டசூரோடுசேர்தற்கழைப்ப... ... ... *
பூணார்பெருங்கொங்கைமடவாண்மறுத்தே ... ... ... ...*
புகனீதியலவீதுபோவென்றிசைப்ப ... ... ... *
வேணுனவலியோடுவலிதேபிடித்தே ... ... ... ... ...*
யிடரோடுமவளோலமிடவேபடர்ந்தாள் ... ... ... *

(இ-புரை.) மாட்சிமைபெற்றதானஅழகுள்ள விடபுருஷர்களைத் தேடிக்கண்டு அவர்கள்சம்மதியாவிட்டாலும்பலாத்காரமாகப்புணர்ந்து திரிந்துகொண்டிருக்கிற அசமுகியானவள் ஆகாயவளாவில் உயர்ந்திரு க்குஞ்சோலைக்குள்ளே இந்திராணியிருப்பதைக்கண்டு பராக்கிரமங்கொ

ண்டசூரனுடன் சேர்ந்திருக்கும்படி அழைத்தாள் ஆபரணங்கள்பொரு ந்துகின்ற பெரியதனமுள்ள இந்திராணியானவள் அவள்சொல்லைத்தடுத்து நீசொல்லுமிந்த வார்த்தைநீதியல்ல போபோவென்றுசொல்ல அசமுகியானவள் மிகுத்துள்ளதான தன்பலத்துடன் வலிதினில் இந்திராணிகையைப்பிடித்துக்கொண்டுஅவள்துன்பத்துடன்கோவென்று அழுது முறையிடும்படி இழுத்துக்கொண்டுபோனாள்.-(எ-று.) (மறி-ஆடு.)

பாகுற்றமொழிதன்னையசமாமுகத்தாள்.. ... ... ... ...*
பற்றிப்படர்ந்திடலுமைபன்றனளாய் ... ... ... *
வாகுற்றசசியைப்புரந்திட்டவீர... ... ... ... ... ...*
மாகாளர்போகாதுநில்லென்றுசொல்லிக்... ... ... *
காகத்தைநேரானவாகத்தினண்முன் ... ... ... ... ...*
கடிதேகவவளுங்கறுத்தேதிரும்பி ... ... ... ... *
வாகைப்புயங்கொண்டவீரன்றனேமோ... ... ... ... ...*
வலியோடுமொருசூலவைவேல்விடுத்தாள் ... ... ... *

(இ-புரை.)பாகுபோல்மதுரமான வசனமுள்ள இந்திராணியை அசமுகியிவ்வாறுபிடித்துக்கொண்டு போம்போது அரிகரபுத்திரனுடைய ஏவல் ஆளாய்ச்சௌந்தரியம்பொருந்திய இந்திராணியைப்பாதுகாத்துக்கொண்டிருந்த வீரமாகாளரானவர் தெரிந்து போகாதேபோகாதேயென்று சொலலிக்கொண்டு காகம்போன்றதான கருமைநிறங்கொண்ட சரீரமுள்ள - அசமுகியெதிரில் - விரைவாகச்செல்ல - அவள் கண்டு கோபங்கொண்டு திரும்பி வெற்றிபொருந்திய புயமுள்ள வீரமாகாளருக்கு நேராகப்பலத்துடன் கூர்மைபொருந்திய ஒருசூலாயுதத்தைச் சுழற்றிவிட்டாள்.—(எ-று.) (௱௰௩)

வன்புற்றசூலத்தைவாள்கொண்டுவீரன் ... ... ... ...*
வலிமையாடுமிருதுண்டமருவத்துணிப்ப .... ... ... *
மூன்புற்றவறிவற்றமறிவத்திரத்தாண் ... ... ... ... ...*
முரணுற்றிந்துன்முகத்தாள்கரத்திற் ... ... ... *
கொன்பெற்றசூலங்கொண்டயிராணிதனையக் ... ... ...*
கொடியாளெனடுங்கைக்கொடுத்தேயெதிர்ந்தே... ... *
பின்புற்றமார்பூடுதைக்கச்செலுத்த ... ... ... ... ...*
வெழில்கொண்டவாள்கொண்டெறிந்தேதுணித்தான்.... *

(இ-புரை.) அவள்விட்டபலமுள்ள சூலாயுதத்தை வீரமாகாளரானவர் பலத்துடன் வாளாயுதத்தினால் இரண்டுதுண்டமாய் விழும்படி துணி

த்துவீழ்ந்தினவளவில் எதிரிலேற்ற அறிவுகெட்ட அசமுகியானவள் பலம்பொருந்திய துன்முகிகையிலிருக்குங்கொடியதானசூலத்தைத்தான் வாங்கிக்கொண்டு இந்திராணியை அந்தக்கொடியவள் கையில்கொடுத்து எதிர்ந்து வீரமாகாளருடைய அழகுபொருந்திய மார்புக்குள்ளே தைக்கும்படி செலுத்தினாள்—அந்தச்சூலத்தையும் வீரமாகாளர் அழகுபொருந்திய வாளாயுதத்தினாலேவெட்டித் துணித்தார்.—(எ-று) (௱௰௪)

உந்துற்றவொருசூலமிருதுண்டமாக... ... ... ... ...*
வொருவாதவொருவெற்புரத்தோடுகொண்டே... ... *
மைந்துற்றவீரன்றனேவிடுப்ப ... ... ... ... ...*
வலிகொண்டவாள்கொண்டுவருகின்றகுன்றஞ் ... ... *
சிந்துற்றுவீழத்தடிந்திட்டபோதிற்.... ... ... ... ...*
சீர்கொண்டவாளுஞ்சிதைந்திட்டதம்மா ... ... ... *
முந்துற்றவயிராணிதன்னைப்பிடித்தே.... ... ... ... ...*
முன்போனடந்தாண்முரண்கொண்டவெய்யாள்.. ... *

(இ-புரை.)மறுபடிதான்விட்டசூலமும் இருதுண்டமாகவே நீங்காதபலமுள்ள அந்தக்கொடியவள் அழிக்கப்பட்டுநீங்காதஒருமலையைப்பலத்தினாலெடுத்துப்பலமுள்ள வீரமாகாளருக்குநேராகவிட்டாள்அவரதைக்கண்டு வலிகொண்டவாளாயுதத்தினால் வருகின்றமலையானது துண்டமாய் விழும்படி வெட்டினபோது சீர்கொண்டவாளும்ஒடிந்துபோயது அதற்குமேல் அவள்தான்முன்பிடித்துக்கொண்டிருந்த இந்திராணியைப்பின்னுந்தானேபிடித்துக்கொண்டுமுன்போலநடந்தாள்.--(எ-று.)(௱௰௫)

அப்போதுமாகாளர்கடிதேகியவட ... ... ... ... ...*
ணணியுற்றவளகத்தையடலோடுபற்றித் .... ... ... *
துப்போடுமுடைவாள்பிடித்தோர்கரத்தைத்... ... ... ...*
துண்டம்படுத்தித்துலங்குற்றமாதை.. ... ... ... *
மெய்ப்போடுவிடுவித்திடத்துன்முகத்தாள்.... ... ... ...*
வீறுங்கரத்தொன்றுவீழத்துணித்துச் .... ... ... *
செப்போடுநிகர்கொங்கையவண்மண்ணில்வீழச் ... ... ...*
சீர்கொண்டதாள்கொண்டுதிறலோனுதைத்தான். ... *

(இ-புரை.) அவளவ்வாறுபோகும்போது வீரமாகாளர் விரைவாகச்சென்று அவளுடைய அழகுள்ளகொண்டையை உறுதியாகப்பிடித்துக்கொண்டு பலத்துடன்உடைவாளையுருவிப்பற்றி அவளுடைய ஒருகையைவெட்டித் துண்டமாக்கி விளங்குகின்ற இந்திராணியைமேனிகுலையாவண்ணம் விடுவித்துப்பின்னும் அடல்கொண்டதுன்முகியைநோக்கித்

ன் பாகுபோல மதுரமுள்ள மொழியுடையதாயே நீயிங்கேமுன்போலஇருமென்றுசொல்லிப்போனார் இந்திராணியானவள் முன்போலப் பரிவுடனிருந்தாள்.—(எ-று.) (௱௰௮)

மேவுற்றவிதுதன்னையருணாரதன்போய் ... ... ... ... *
வெள்ளிப்பொருப்பில்விருப்போடுவிண்ணோர் ... ...*
தேவுற்றுழிச்சென்றுரைப்பக்கலங்கிச் ... ... ... ... *
சேணுற்றவிமையோர்கடிநாளோடொழிக் ... ... ...*
காவுற்றடாபாளனைக்கண்டுபுல்லிச்... ... ... ... ... *
கவின்மாதினொடுமேருவரையிற்கலந்தான் ... ... ...*
பாவுற்றபடமோடுசாமற்றமடவார் ... ... ... ... ... *
பதம்கசனரசானுநகரிற்படர்ந்தார் ... ... ... ...*

(இ-பொ.) இங்கேநடந்தசங்கதியெல்லாம் அருளுள்ளநாரதமுனிவர் அறிந்துபோய் வெள்ளியங்கிரியிலதேவர்களுடன்விருப்பங்கொண்டிருக்குந்தேவேந்திரனிடத்திற்சொன்னார் அதைக்கேட்டஇந்திரன்மனங்கலங்கிவிண்ணுலகத்திருப்பவர்களோடுந்தவாகூட்டத்துடங்கி காழியிலிருக்குஞ்சோலையிலவந்துசேர்ந்து வீரமாகாளனைக்கண்டு தழுவிக்கொண்டு உபசாரவார்த்தைசொல்லி அதன்பின்பு சௌந்தரியமுள்ள இந்திராணியுடன் மகமேருகிரியில்அடைந்தான் முன்புரைபெறுபட்டஅசமுகியுந் துன்முகியுமிகுந்த துயரத்துடன் பாதகஅரசனுறைகிய சூரன்பட்டணத்திற்போய்ச்சேர்ந்தார்கள்.—(எ-று.) (௱௰௯)

அங்குற்றபேர்கண்டுமறிமாமுகத்தா ... ... ... ... ...*
ளணியுற்றகரமாரறுகதார்களென்றே ... ... ... *
பொங்குற்றபலவானவெண்ணங்களெண்ணப் ... ... ...*
பொற்பற்றகூருற்றபொற்கோயிலுட்போய்த் ... ... *
தங்குற்றவவையிற்புரண்டேபுலம்பித்... ... ... ... ...*
தகாபோலவதனந்தரித்தாளரற்றக் ... ... ... ... *
கொங்குற்றமாலைப்புயச்சூர்தெரிந்த ... ... ... ...*
கூறூர்கரத்தைக்குறைத்தார்களென்றான் ... ... ... *

(இ-பொ.) அந்தநகரத்திலிருக்கும் அவுணர்களெல்லாருங் கண்டு அசமுகியின்அழகுள்ளகையை எவர்களறுத்தார்களோ என்று மிகுந்த பலவெண்ணங்கொண்டு பசிக்கொண்டார்கள்- அசமுகியானவள் அழகுள்ள சூரனிருக்கிற பொற்கோயிலுக்குட்போய்அவன் அரசுசெய்யுஞ்சபையிற்சேர்ந்து கீழேவிழுந்துபுரண்டுஅழுதாள் அப்படி யழுவதை வாச

னைபொருந்திய பூமாலையணிந்த புசமுள்ளசூரன்பார்த்து உன்கைகளை அறுத்தவர்கள்யார் அவர்களைச்சொல்லென்றான்.—(எ-று.)(தசர்-ஆடு.)

ஆடானமுகமுற்றகொடியாளுரைப்பா ... ... ... ... ...*
எயிராணிபுவியூடமர்ந்தாளுனக்கென் ... ... ... *
நீடாகவேபற்றிவருபோதுமகவா ... ... ... ... ...*
னேவற்புரிந்தேயிருந்திட்டவொருவன் ... ... ... *
பாடாகவெம்பாணிகொய்தானெனச்சூர் ... ... ... ...*
பயமுற்றமுகிலூர்திபணிசெய்யுமவனோ... ... ... *
நாடாமலிவர்கைத்தலத்தைத்துணிப்பா... ... ... ... ...*
னன்றென்றுவிண்ணோர்நடுங்கச்சினந்தான் ... ... *

(இ-புரை.) ஆட்டுமுகமுள்ள கொடியவள் சொல்லுகிறாள் அயிராணி பூமிலோகத்தி லிடத்தி லிருப்பதைக் கண்டு உனக்காவாளென்று வலியுடனுன் பற்றிக்கொண்டு வரும்போது அங்கேதேவேந்திரன் ஏவல் செய்துகொண்டிருந்த ஒருவன் கண்டுவந்து எங்கள்பெரியகைகளைக்குறைத்தானென்றாள்- அதைகேட்ட சூரன் நமக்குப்பயந்திருக்கிறமேகவாகனனாகிய இந்திரனேவலசெய்துகொண்டிருக்கிறவனோ என்னையுங்குறித்துப்பாராமல் இவர்கள்கையைத்துணிப்பவன்- நன்றாயிருக்கின்றது நன்றாயிருகின்றதென்று தேவர்களெல்லாரும் நடுங்கும்படிகோபங்கொண்டான்.—(எ-று.) (௱௨௧)

அப்போதுமகனாகியபானுகோப ... ... ... ... ...*
னடலோடெழுந்தேயவன்றாள்பணிந்தே... ... ... *
மெய்ப்பானமகவானையயிராணிதன்னை... ... ... ... ...*
விண்ணோரையெல்லாம்விரைந்தேபிடித்திங் .... ... *
கிட்போதிலிவண்மீள்வன்விடுகென்னவன்றே ... ... ...*
னேவத்தனுதானவிற்பாலடைந்தான்.. ... ... ... *
மைப்பாவுகடுவன்னசூரொற்றரோடு .... ... ... ... ...*
மலர்மேவதனைக்கொண்டுவம்மின்களென்றான் .... ... *

(இ-புரை.) சூரனிவ்வாறுகோபங்கொண்டபோது அவன்மகனாகியபானுகோபன்வீறுப்புடனெழுந்துசூரன்பாதத்திற்பணிந்து விரைவுடன்நான்போய்ப்புகழ்கொண்டவனுனஇந்திரனையும்இந்திராணியையும் தேவர்களெல்லாரையும் பிடித்துக்கொண்டு இப்போதேயிவ்விடத்துக்குத் திரும்பிவருகிறேன் உத்தரவுகொடுவென்றுசொல்லச் சூரன்அப்படியேபோவென்றான் அந்த உத்தரவுபெற்றுக்கொண்டு பானுகோபன்

ன்வீட்டினிடத்திற்சென்றான் அதற்குமேல்கருமைநிறமுள்ள சூரனவ
ன்ஒற்றர்களைநோக்கித் தாமரைமலர்மேலிருக்கும் பிரமதேவனை யிங்கே
கொண்டுவாருங்களென்றான்.—(எ-று) (௱௨௨)

[வேறு.]

என்றிடவயனைநாடியேகியேகொடுவந்துய்ப்பத் ... ... ...*
துன்றுசீரிவர்தங்கையைத்தொன்மைபோற்புரிதியென்றான்... *
மன்றல்சேர்வனசமேலோன்மற்றிவர்கரங்கள்வல்லே ... ...*
நன்றுறவளர்கவென்றுநவின்றிடவளர்ந்தவன்றே ... ... *

(இ-புரை.) சூரனிவ்வாறு சொல்லியவுடன் ஒற்றர்கள்சென்றுபி
ரமதேவனைக்கண்டு அழைத்துக்கொண்டுவந்துவிட்டார்கள் அந்தப்பிரம
தேவனைப்பார்த்துச்சீர்பொருந்தியஇவர்களிரண்டுபேர்கைகளையும்மு
ன்போலிருக்கும்படிசெய்யென்னச்சொன்னவளவில்வாசனைசேர்ந்ததா
மரைமலரின்மேலிருக்கும் பிரமதேவன் இவ்விருவர்கைகளும் விரைவில்
அழகுபொருந்தும்படி வளரக்கடவதுகளென்று சொல்லினவளவில் வ
ளர்ந்ததுகள்.—(எ-று.) (௱௨௩)

அங்கதுசூரன்காணூஉவயன்றனைமகிழ்ந்தேயூரிற்... ... ...*
றங்கையையிருப்பச்செய்துதடங்கொடுங்கோன்முகத்தினுளைச் ... *
செங்கதிர்ப்பகைவனோடுசென்றிடவிடுத்துப்பின்னர் ... ...*
பொங்குசீரொற்றர்தம்மோடினையனபுகலலுற்றான் ... ... *

(இ-புரை.) அதனைச்சூரன்கண்டுபிரமதேவனைப்பார்த்துச்சந்தோ
ஷித்துத்தன்தங்கையாகிய அசமுகியைப்பார்த்து இனிநீயெங்கும்போக
வேண்டுவதில்லைநம்முடைய ஊரிலேதானேயிருவென்று உத்தரவுசெய்
துபெரியதுன்முகமுள்ளவளைப்பார்த்து நீபானுகோபனுடன்போவெ
ன்று உத்தரவுகொடுத்துப்பின்னுஞ்சீர்மிகுந்தஒற்றருடன் இவ்விதவார்த்
தைகள்சொல்லுகிறான்,—(எ-று.) (௱௨௪)

வெற்றிகொளருக்கனாதிவிண்ணகந்தன்னினுளுஞ்... ... ...*
சுற்றியேதிரிவோர்தம்மைத்துண்ணெனக்கொணர்திரென்ன *
மற்றவர்கொடுவந்துய்ப்பமறிமுகிகரமோர்வீர ... ... *
னிற்றிடத்தடிதமேனுக்கியிருந்ததென்னியம்புமென்றான்... ...*

(இ-புரை.) வென்றிகொண்டிருக்கும் சூரியன்முதலாக நாள்தோ
றும்ஆகாயத்தினிடத்தில் சுழுன்றுதிரிகின்றவர்களையெல்லாம்இப்பொழு
தேகொண்டுவாருங்களென்று சொன்னான் அவர்கள் சூரன்சொன்னபடி

பொழிப்புரை.

யேசூரியன்முதலானவர்களையெல்லாங் கொண்டுவந்துசேர்த்தார்கள் அவர்களைநோக்கி அசமுகியையொருவீரன் அறும்படிவெட்டினபோது நீங்கள்பார்த்துக்கொண்டிருந்ததென்னசொல்லுங்களென்றான்.(எ-று)

என்றிடலுமனையர்சொல்வாரெங்களைப்பரத்தின்மீது ... ... *
சென்றதீதறிவேமென்னச்சீறியேசிறையிற்சேர்த்தித் ... ...*
துன்றியகாவலுடைமைத்துண்ணெனக்கொணர்திரென்ன ... *
வன்றிறற்றூதரேகிமற்றவர்க்கொடுவந்துய்த்தார் ... ... ...*

(இ-புரை.) சூரனிவ்வாறுவினவினபோது அவர்கள்சொல்லுகிறார்கள்எங்கள்பார்வைஆகாயத்தின்வழியேசெல்லுதலினாலேஇந்தக்காரியம் எங்களுக்குத் தெரியாதென்றார்கள் அவர்களிப்படிசொல்லவே கோபங்கொண்டு அவர்களைச்சிறைச்சாலையிற்போடும்படி சொல்லிமறுபடிஒற்றர்களைநோக்கிச்சஞ்சரித்துக்கொண்டிருக்கும் காற்றுகளைச் சீக்கிரமாகக்கொண்டுவாருங்களென்று சொல்லுதலும் உடனேவலியதூதர்கள்சென்று வாயுதேவர்களைப்பற்றிக்கொண்டுவந்துவிட்டார்கள்.—(எ-று) (௱௨௬)

தானவனவரைச்சீறித்தகர்முகிதனதுகையை ... ... ... *
யீனமிலொருவன்வாளாலெறிதலைக்கண்டிருந்தீரென்றே ... ...*
யூனமார்சிறையிற்சேர்த்தியொற்றரைத்தரணிகாக்கு... ... *
மானவர்தம்மைக்கொண்டுவம்மினென்றுரைத்தானன்றே ...*

(இ-புரை.) சூரன் அவர்களைநோக்கிக் கோபித்துஅசமுகியைப் பங்கமில்லாத ஒருவன்வாளினாலெவெட்டினதைப்பார்த்துக்கொண்டிருந்தீர்களல்லவாவென்றுசொல்லி ஊனைப்பொருந்திய சிறையிற்போடும்படிசெய்து அதன்பின்பு தூதர்களைநோக்கிப் பூலோகத்தில்அரசாட்சிசெய்கிற அரசர்களைக்கொண்டுவாருங்களென்றான்.—(எ-று.) (௱௨௭)

எண்டவிரவரையுட்பவெங்கைதன்செங்கைதுண்டங் ... *
கண்டனனொருவனீவிர்காத்தவாநன்றென்றேருத் ... ...*
துண்டமாமதனத்தாளைத்தோளினைத்துணிப்பித்தின்ன ... *
தண்டமங்கியற்றிச்சூரன்றவிசினுமெழுந்தானன்றே ... ...*

(இ-புரை.) சென்றதூதர்கள்எண்ணிக்கையில்லாதஅந்தமன்னவர்களையெல்லாங்கொண்டுவந்துவிட்டார்கள் அவர்களைநோக்கிஎன்தங்கையின்கையை ஒருவன் துண்டமாக்கினான் அப்போது நீங்கள்காத்தவாறு நன்றாயிருக்கின்றதென்றுசொல்லி அவர்கள்மூக்கினையும்- கால்களையும்- தோள்க

ளையும் அறுக்கும்படி உத்தரவுகொடுத்து இவ்வாறுதெண்டனைசெய்வித்து அதற்குமேல்சூரன்சிங்காசனத்தைவிட்டெழுந்தான்.(எ-று) (௱௨௮)

எழுந்துதன்மருங்குநின்றவிளையளைவிடுத்துச்செந்தேன் ... *
பொழிந்திடுகமலத்தோனைப்போகெனச்சிறையாந்துன்பத் ...*
தழுந்துவானவரைவிட்டிங்கருளெனவிரப்பவிட்டுச்... ... *
செழுந்துதியனையவொல்லாஞ்செய்திடப்பணித்தான்றீயோன்... *

(இ-புரை.) சூரன்சிங்காசனத்தைவிட்டெழுந்து தன்னருகிலிருக்கின்றதங்கையையவளிடத்துக்கு அனுப்பிவிட்டுத்தேன்பொழிகின்றதாமரைப்பூவிலிருக்கும் பிரமதேவனைநோக்கி நீபோவென்றான்பிரமதேவன் சூரனைநோக்கிச்சிறையாகிய துன்பத்தில் அழுந்தியிருக்கிறதேவர்களை விட்டுவிடவேண்டுமென்று இரந்துகேட்டுக்கொண்டதினல்மேலப்படியே சிறைவிடுவித்து அன்றுமுதல்நாள்தோறும்வந்து துதிசெய்யும்படி கொடியவனாகிய அந்தச்சூரன்கட்டளையிட்டான்.—(எ-று.) (௱௨௯)

அன்னதுபின்னர்மைந்தரமைச்சர்கண்முனிவரானோர் ... *
துன்னுறுபடைஞர்க்கெல்லாஞ்சூர்விடைகொடுத்தப்போனு...*
னின்னதுநிற்கமுன்னமெழுந்துதன்மனையிற்சென்ற... ... *
கொன்னுறுபானுகோபன்செயலினைக்கூறலுற்றாம் ... ...*

(இ-புரை.) அதன்பின்புசூரனானவன்-புத்திரர்கள் மந்திரிகள்-முனிவர்-அவ்விடத்திலிருக்கும்சேனதிபதிகளென்னும் இவர்களுக்கெல்லாம்விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தன்மனைக்குப்போனான் இது நிற்க முன்னமெழுந்து தன்மனையிற் போனவனாகிய பகைவர்கள் அஞ்சத்தக்கபானுகோபனுடைய செய்கையினிச்சொல்லத் தொடங்கினேம்.—(எ-று.)

நீடுபல்படைகள்சூழநெடியதோர்இரதமேறிக்... ... ... ...*
கூடுதுன்முகத்தாள்காட்டகுறைவிலசீர்ப்புகலிமேவித் ... *
தேடினன்மகவான்மாதைத்தெரிந்திலம்புவனியாண்டு ... ...*
நாடினன்காணனாகிநாகமேற்சென்றானம்மே ... ... ... *

(இ-புரை.) பெரியதாகிய ஒருதேரின்மேலேறிக்கொண்டு மிகுந்தபலமுடையபடைஞர்களும் சூழ்ந்துவரச்சென்று தன்னுடன்வருகிறதுன்முகி காட்டக்குறைவில்லாதசீகாழியிலேசார்ந்து இந்திரன்மனைவியாகிய இந்திராணியைத்தேடிக்காணமையாலஅவ்விடம்விட்டுநீங்கிப்பூமியெங்குந்தேடினன் அங்குங்காணமலதேவலோகத்திற்சென்றான்.—(எ-று.) (௱௩௧)

பொழிப்புரை.

சண்டவெங்கிரணப்புத்தேடனைச்சிறைபிணித்ததீயோ ... ...*
னண்டியதண்டர்காணுவருந்துயர்பொருந்திமேயங்கி ... ... *
மண்டுசீர்ச்சயந்தன்முன்போய்மற்றிதையுரைத்தலோடுங்... ...*
கொண்டலூர்குரிசின்மைந்தன்கொண்டனனுளத்திவ்வாறே ... *

(இ-புரை.) வேகமாகச்செல்லும் சூரியனைச்சிறையில்வைத்தபாவி வருகிறதைத்தேவர்கள்பார்த்து அருந்துயர்பொருந்திமேயங்கிச் சீர்பொருந்திய சயந்தன்முன்போயிந்தச்சேதியைச் சொன்னவுடன்மேகவாகனனுனஇந்திரன்மகன்இவ்வாறுஉள்ளத்திலெண்ணங்கொண்டான்.--(எ-று)

தந்தையுமில்லைபெற்றதாயிலைகுரவனுன ... ... ... ...*
வெந்தையுமில்லைசெய்வதென்னெனவிதயத்துன்னி .... ... *
முந்தையின்விதியையாரோமுடித்திடவல்லாரீண்டு ... ... ...*
வந்ததுவருகவென்னுவானவரோடும்போனுன் ... ... ... *

(இ-புரை.) இவ்விடத்தில் தகப்பனுமில்லை பெற்றதாயுமில்லை குருவாகியஎன்னையனுமில்லை இப்போதுநான் செய்வதென்னென்று இருதயத்திலெண்ணிப்பழையவினையையாவர்தாம் ஒழிக்கவல்லவர் ஆகையால் இப்போதுவரக்கடவதுவரக்கடவதேயென்று சொல்லித்தேவர்களோடும்புறப்பட்டுப்போனுன்.—(எ-று.) (௱௩௩)

வெள்ளைவாரணத்தின்மீதேவிண்ணரசாளுமன்னனல் ... ...*
பிள்ளைவானவர்கள்சூழப்பெருஞ்செருப்புரிவானெண்ணிக்.... *
கொள்ளையாமவுணர்நேரேகுறுகலுமவுணர்தாமு ... ... ...*
மெள்ளில்சீரிமையோர்தாமுமெதிர்ந்தமரியற்றினுரால். ... *

(இ-புரை.) விண்ணுலகத்தில் அரசாளும் இந்திரன்மகனுகியசயந்தனைவன் சண்டைசெய்யநினைத்துத் தேவர்கள் சூழ்ந்துவரும்படி வெள்ளையானையின்மேலேறிக்கொண்டுபோய்க் கூட்டமாயிராநின்றஅவுணர்கள் எதிரில்சேர்ந்தான் அப்படிசேர்ந்தவுடன் அவுணர்களும் இகழ்வில்லாத தேவர்களும் எதிர்த்துயுத்தஞ்செய்தார்கள்.—(எ-று.) (௱௩௪)

மண்டிருதிறத்திேருரும்வன்சமர்புரிந்தகாலை ... ... ...*
யண்டர்களுடைந்தேயோடவவுணர்கடொடர்ந்துபற்றிப் ... *
புண்டருகயிற்றாலன்னார்புயம்பிணித்தகலவீது ... ... ...*
கண்டனன்வெகுண்டான்வெள்ளைக்கயந்தனிற்சயந்தனென்பான்..

(இ-புரை.) இப்படியெதிர்த்துக்கொண்ட இருதிறத்தாரும்வலிதா னயுத்தஞ் செய்யும்போது தேவர்கள்தோற்றோடினதால் அவுணர்கள்பி ன்தொடர்ந்துபற்றிஅவர்களுடையபுயங்களைப்புண்செய்யத்தக்கயிற்றி னாற்கட்டி யிழுத்துக்கொண்டுபோனார்கள் இதை வெள்ளையானையின்மே லிருக்குஞ்சயந்தன்பார்த்துக்கோபங்கொண்டான்.—(எ-று.) (௱௩௫)

கைத்தனுவளைத்துத்தீயகணையெனுமழைபொழிந்து ... *
பத்தின்மேற்றொண்ணூறாற்றபடைவெள்ளம்விள்ளச்சிந்தி ...*
மெத்தியதலைவர்தம்மைவென்றிகொண்டிடச்சூர்மைந்த... ... *
னத்தொழில்கண்டுநேர்வந்தடுசரமாரிதூர்த்தான் ... ... ...*

(இ-புரை.)தன்கையிலிருக்கும்வில்லைவளைத்துக் கொடிதானபாணவ ருஷிம்பொழிந்து நூறுவெள்ளம்அவுணச்சேனை ஓடும்படி செய்து மே ன்மைபொருந்திய படைத்தலைவர்களையும் வென்றிகொண்டான் இவ்வா றுசயந்தன் செய்தசண்டையைப் பானுகோபன் கண்டுஅவனெதிரேஎதிர் த்துக்கொண்டு ஏவிஞல்பழுதுபடாமலஎதிரிகளைக்கொல்லத்தக்கபாணவ ருஷிம் பொழிந்தான்.—(எ-று.) (௱௩௬)

இந்திரகுமரன்காணாவெண்ணில்கோறுரந்துநீக்கி ... ... ...*
வந்தவன்விசிகமாரிவிடவிடவதனைமாற்றி ... ... ... *
யந்தமில்வன்மைகொண்டவாயிரங்கணைகள்சிந்திச... ... ...*
சிந்தினனவுணனேந்துஞ்சிலைப்பெருநாணிதன்னை ... ... *

(இ-புரை.) மேற்படிஇந்திரன்மகன்பார்த்து அளவில்லாத அம்புகளை விஅவன்விட்டபாணங்களை நீக்கிமறுபடிபானுகோபன்மேலும் மேலும் பாணங்களைவஅவைகளுக்குஞ்சரியானபாணங்கள்விட்டு நீக்கி- அதற்கு மேல் அளவில்லாத பலங்கொண்டஆயிரப்பாணங்களைவிட்டுபானுகோப ன்வந்திக்கொண்டிருக்கிறவில்லின் நாணியைஅறுத்தான்.-(எ-று.)(௱௩௭)

நல்லதோர்நாணிபோகநாணியோர்நாணிவிற்கொண் ... ...*
டொல்லையாயிரங்கோல்சிந்திபுரந்திகழ்சயந்தன்மீதே ... *
வல்லையிலழுத்தவன்றன்வாளியாயிரநேர்தூண்டிச் ... ... *
சில்லியந்தேருமாவுஞ்சிதைத்தனன்தேவர்துள்ள ... ... *

(இ-புரை.) நல்லதாகிய நாணியறவேபானுகோபன் வெட்கங்கொ ண்டு வேறேயொரு நாணிவிலலில்லேற்றிக்கொண்டு விரைவில் ஆயிரங்

பொழிப்புரை.

கணைகள்விட்டுப் பலம்பொருந்தியசயந்தன்மேல் துரிதமாகச்சென்று தைக்கும்படிசெய்தவளவில்சயந்தனென்பவன்றேரோ ஆயிரங்கணைகளைவிட்டு அவனுடையஉருளை பொருந்தியதேருங்குதிரைகளும் இறக்கும்படி கொன்றான்அதைக்கண்டுதேவர்கள்துள்ளினார்கள்.—(எ-று.) (௱௩௮)

மற்றொருதேரில்வாவிவஞ்சகன்சிலையைக்கோட்டி.... ... ...*
யற்றமில்சரங்கடாநூறாயிரங்கோடிதூண்டி. ... ... ... *
வெற்றிசேர்மகவான்மைந்தன்மெய்யெலாமழுத்தநொந்து... *
சற்றுமங்கறிவிலாதுதந்திமேற்சயந்தன்வீழ்ந்தான் ... ... *

(இ-புரை.) பானுகோபன் வேறேயொருதேரிலேறிக்கொண்டுவில்லைவளைத்துஅழிவுபடாத நூறாயிரங்கோடி பாணங்கள் வெற்றிபொருந்திய இந்திரன் மகனாகிய சயந்தனுடைய சரீரமெல்லாந் தைக்கும்படி யேவினான் அதனால் அந்தச்சயந்தன்வருந்திக் கொஞ்சமுந்தெளிவில்லாமல்யானையின்மேல்மூர்ச்சையாய்விழுந்தான்.—(எ-று.) (௱௩௯)

வீறியமகவான்மைந்தன்வீழ்தலும்வெள்ளைத்தந்தி ... ...*
சீறியொன்னலன்றேர்ப்பாய்ந்துசிதைத்தவனுரத்தின்மீதே ...*
கோறுநாற்கோட்டினாலுங்குத்தலுங்கோடுநாலும் ... ... ...*
வேறுவேறொடிந்துவலமேன்மறிந்துவிழுந்தவன்றே ... ... *

(இ-புரை.) மேன்மைபொருந்திய சயந்தன்வீழ்ந்த மாத்திரத்தில் அவனேறிக்கொண்டிருந்த வெள்ளையானையானது கோபித்துப் பானுகோபன்தேரில் பாய்ந்து அவன் மார்பினிடத்தில் கொல்லத்தக்க நான்கு கொம்பினாலுங் குத்தினவளவில்அந்தநான்கு கொம்புகளும் வேறுவேறாயொடிந்துவிழவாகப்பூமியின்மேல்விழுந்தனவகள். (எ-று.)(௱௪௰)

கையுடைத்தவளமேருக்கவுளிடைப்பாணிகொண்டு ... ...*
வெய்யவனடிப்பநொந்துவீழ்ந்ததுசயந்தன்றன்னைச் ... *
சையமேயனையமொய்ம்பிற்றானவர்சுற்றிப்பற்றி ... ... ...*
மையல்சேர்கயிற்றாற்கட்டிவானவரோடுஞ்சேர்த்தார்... ... *

(இ-புரை.) துதிக்கையையுடையமலையையொத்தவெள்ளையானையின்கவுளினிடத்தில பானுகோபனெனவன் தன்கையினால் அடித்தான்அது வருந்திவீழ்ந்தது அவுணர்கள்சயந்தனைச்சுற்றிக்கொண்டுமலையையொ

த்ததோளைப்பிடித்து மயக்கத்தைத்தருவதாகிய கயிற்றினாற்கட்டிமுன்கட்டிக்கொண்டுபோன தேவர்களுடன்சேர்த்தார்கள்.—(எ-று.) (௱௪௧)

அங்கதுபின்னரன்னவாடகத்துலகத்துற்ற... ... ... ...*
மங்கையர்தம்மையேனைவானவர்தம்மையெல்லாம் ... ... *
பொங்குசூரவுணர்பற்றிப்புயங்களைக்கயிற்றால்வீக்கித் ... ...*
துங்கவாணகரைத்தீயாற்சுட்டனர்தூளியாக .. ... ... *

(இ-புரை.) அதன்பின்பு அந்தப்பொன்னுலகத்திலிருக்கும்தேவஸ்திரீகளைப்பிடித்துக்கொண்டு மற்றுமிருந்த தேவர்களையெல்லாம் பிடித்து அவர்கள்புசங்களைக்கயிற்றினாற்கட்டிப் பரிசுத்தமுள்ளஅந்தப்பொன்னுலகத்தைஅவுணர்கள்சாம்பலாகும்படிகொளுத்திவிட்டார்கள்.(எ-)

இன்னதுநிகழ்ந்தபின்னரிரவியைத்தளைந்தவெய்யோன் ... *
றன்னுளமகிழ்ச்சியோடுந்தானவத்தானையோடு ... ... ...*
மன்னியபுவியின்மேவிமகேந்திரமூதூருற்றுக் ... ... *
கொன்னுறுதந்தைமேவுகோயிலுடம்பாயினுற்றான் ... ... ...*

(இ-புரை.) இத்தன்மையானகாரியம்நடந்தபின்பு சூரியனைச்சிறையிலிட்டவெய்யவனாகியபானுகோபன்தன்னுள்ளமகிழ்ச்சியுடனும் அவுணச்சேனையுடனும் நிலையாகியபூலோகத்திலவந்துமகேந்திரப்பட்டணத்திற்சேர்ந்துபெருமைபொருந்திய தன்தகப்பனிருக்கிற அரண்மனைக்குள்போனான்.—(எ-று.) (௱௪௩)

தந்தையைவணங்கிநின்றுசசியெனுமடந்தையோடு ... ... *
மிந்திரன்றனையுங்காமனைமேனையவானோர்தம்மை... ... ...*
யுந்துசீர்ச்சயந்தன்றன்னையொல்லைகொண்டுற்றேனெனாச்... *
செந்தழற்கீந்தேனென்னத்திருமகற்றழுவிக்கொண்டான் ...*

(இ-புரை.) தகப்பனைவணங்கிநின்று இந்திராணியையும்இந்திரனையுங்காமனைன் மற்றத்தேவர்களையுமேன்மையான சீருள்ளசயந்தனையும்விரைவாகப்பிடித்துக் கட்டிக்கொண்டுவந்தேன்சுவர்க்கத்தைநெருப்பிட்டுக்கொளுத்திவிட்டேனென்றுசொல்லச் சூரனனவன்சந்தோஷித்துத்தன் மூத்தமகனைத்தழுவிக்கொண்டான்.—(எ-று.) (௱௪௪)

புல்லியேதங்கைகாணப்போந்திடுசயந்தனாதி ... ... ... *
யெல்லவர்தமக்குந்தண்டமியற்றுவித்தவனையெல்லாம் ... ...*

## பொழிப்புரை.

வல்லிசேர்சிறைசேர்வித்துமைந்தனைமனையிற்போகென் ... *
றொல்லையில்விடுத்துச்சூரனுறையுளிற்சென்றானன்றே ... ...*

(இ-புரை.) சூரனானவன்தன்மகனைத்தழுவிக்கொண்டபின்புதங்கையைஅழைப்பித்து அவள்பார்க்கும்படி வந்திருக்கிற சயந்தன் முதலானவர்களுக்கெல்லாம் தண்டனைசெய்வித்து அதற்குமேல் அவர்களுடைய கால்களுக்குவிலங்குபோட்டுச் சிறையில்சேர்ப்பித்து மகனைப்பார்த்து இனிநீவிரைவாக உன்மனைக்குப்போவென்று உத்தரவுகொடுத்துவிட்டுத் தன் அரண்மனையில்போனான்.—(எ-று.) (௱௪௫)

ஆலமுங்காலவேலுமடுங்கொடுங்கணையும்வாளு... ... ... *
நீலமுமானுமானுநெடுவிழியரம்பைமாதர்... ... ... ...*
சாலவுங்கொடியரானதகுவர்தம்பணிகளாற்றிச்... ... ... *
சீலமுந்தவமுமில்லாத்தீயர்தநகரிலுற்றார் ... ... ... ...*

(இ-புரை.) விஷமும் யமன்போன்றவேலும்பகைவரைக் கொல்லத்தக்ககொடியபாணமும்- வாளாயுதமும்- நீலமலரும்-மானும்-ஒப்பான நெடியகண்களை யுடைய ரம்பாஸ்திரீகள் மிகவுங்கொடியவர்களானஅவுணர்களிட்ட வேலைகளைச்செய்துகொண்டு ஆசாரமுந் தவமுமில்லாத அந்தகொடியவர்கள் பட்டணத்திலிருந்தார்கள்.—(எ-று.) (௱௪௬)

இன்னவைநிற்கமுன்னமிரணியவுலகந்தன்னிற்... ... ... *
கன்னவில்குலவுத்திண்டோட்கதிர்ப்பகைபுடைப்பவீழ்ந்த ...*
மன்னெடுங்கரிவெண்காட்டுவரதனையருச்சித்தேத்திப்... ... *
பொன்னுறுகோடுநாலும்பொருந்தியாங்கிருந்ததன்றே.... ...*

(இ-புரை.) இந்தச்சரித்திரங்களிந்தமட்டில் நிறுத்திவிட்டுமேலே சொல்லுகிறார்- பொன்னுலகத்தில் மலைபோலச்சொல்லத்தக்க குவிவாகிய புசங்களையுடைய சூரியன் பகைவன்முன்னே அடித்ததினால்விழுந்த நிலைபெற்றபெரிய அயிராவதமானது திருவெண்காடென்னுந் தலத்திற் சென்றுபரமசிவனைப்பூசித்துத்துதிசெய்து அழகுள்ள நாலுதந்தங்களும்முன்போலப்பெற்றுக்கொண்டு அங்கிருந்தது.—(எ-று.) (௱௪௭)

கதிர்த்திடரின்மூழ்கியிந்திரன்றவஞ்செய்கின்ற.. ... ... *
தாதியதாகவாதிவருமுகனுதித்ததீரு ... ... ... ... ...*

வோதிபவடைவிேறடுமொளிதருவியாழப்புத்தேள்.... ... *
கோதிலாவமரர்போற்றுங்குமரவேண்முன்னஞ்சொன்னுன்.....*

(இ-புரை.) தேவேந்திரனுனவன் தன்மகன்முதலியதேவர்கள்சிறை யில்போடப்பட்டதையறிந்து தவஞ்செய்கின்றது ஆதியாகமுதல்வனுகி யசுப்பிரமணியக்கடவுள் திருவவதாரஞ்செய்ததீறுகச் சொல்லுகின்ற அ டைவுடன் விளக்கமுள்ள பிரகஸ்பதிபகவான் குற்றமில்லாததேவர்கள் போற்றுங்குமாரசுவாமிக்குச்சொன்னுர்.—(எ-று.) (இவ்வாறு உற்பத்தி யானசூரபன்மன் முதலானஅவுணர்களால்தேவேந்திரன் துன்பப்பட்டுப் பரமசிவனைக்குறித்துத்தவஞ்செய்தான் சுவாமிகிருபைகூர்ந்து ஆறுமு கக்கடவுளை அனுக்கிரகஞ்செய்தாரென்கிறவரையில் சொன்னதாகையா ல் தேவேந்திரன் தவஞ்செய்ததுமுதலாகப் பிரகஸ்பதிபகவான் சொ ன்னுரென்றுகூறப்பட்டது.) (௱சஅ)



அசுரகாண்டம்முற்றிற்று.

ஆ-காண்டம்-உஇ-திருவிருத்தம்-௩சஅ.





உ

வேலுமயிலுந்துணை.

# மூன்றாவது,

# மகேந்திரகாண்டம்.



சொன்னவையனைத்துங்கேட்டுத்துலங்கியவருளினீரா ... ...*
லொன்னலன்றனதுமாட்டோரொற்றனைவிடுப்பாமென்றே... *
மன்னியபுகழ்ச்சிவீரவாகுவையருளானோக்கி ... ... ...*
யென்னையாளுடையசெவ்வேளினையனவிளம்பலுற்றான் ... *

(இ-புரை.)பிரகஸ்பதிசொன்னதையெல்லாம் திருவுள்ளத்தில்கொண்டு என்னையாட்கொண்ட சுப்பிரமணியசுவாமியானவர் விளங்குகின்ற அருளின்தன்மைபால்பகைவனாகிய சூரனிடத்துக்கு ஒருதூதனை அனுப்புவோமென்று நிலையாகியபுகழுள்ள வீரவாகுதேவனைக்கிருபையுடன் பார்த்து இந்தவாசகங்கள்சொல்லுகின்றார்.—(எ-று.) (க)

நாட்டியபுகழ்ச்சூர்முன்போய்நாகர்தஞ்சிறையைநீக்கி... ...*
வாட்டமிலறத்தில்வாழ்திமறுத்தியேல்வந்துநாளை ... ... *
வீட்டுவதாமென்றோதிமீள்கெனவீரவீரன் ... ... ...*
றாட்டுணைபணிந்துவேலோன்றனைவிடைகொண்டுபோனான்... *

(இ-புரை.) புகழைநிலைநிறுத்திய சூரன்முன்போய்த் தேவர்கள்சிறையைவிட்டுவாட்டமில்லாததருமத்துடன்வாழ்ந்துகொண்டிருஇந்தவார்த்தையைத்தடுப்பையாகில் நாளையதினம் முருகக்கடவுள்வந்து உன்னைக்கொல்லுவாரென்று சொல்லித்திரும்பிவாவென்று கட்டளையிட்டருளினார், வீரவாகுதேவர் அந்தக்கட்டளையைப்பெற்றுக்கொண்டு வேலாயுதக்கடவுளுடைய உபயதிருவடிகளையும் பணிந்து விடைபெற்றுச்சென்றார்.—(எ-று.) (உ)

பெற்றசீர்க்குலிசவேலோன்பின்புபோயும்பரோடுஞ் ... ...*
செற்றவெஞ்சூரனூரிற்சிறையிடைச்சயந்தனென்போ.. ...*
னுற்றன[illegible]ன்பாலெய்தியுளத்தனையுவந்துதேற்றிக் ...
கொற்றவன்செயலைப்பின்னர்க்குயிற்றுதல்வேண்டுமென்றான் ... *

(இ-பொ.) சீர்பெற்றவச்சிராயுதமுள்ளதேவேந்திரன்வீரவாகுதேவர்முன்போய்க்கோபமுள்ளகொடியசூரன்ஊரிடதேவர்களுடன் என்புத்திரனாகிய சயந்தனென்பவன் சிறைபட்டிருக்கிறான் தேவர்போம்போதே அவனிடத்துக்குப்போய்க்கண்டு அவன்மனதுக்குச்சந்தோஷித்துடன் தேறுதலுண்டாகும்படிசெய்துபின்புவெற்றிபொருந்தியஉமதுசெய்கையைச்செய்யவேண்டுமென்றான்.—(எ-று.) (௩)

அங்கதற்கிசைவுகொண்டேயவன்றனைநிறுவிவீரம் ... ... *
பொங்குதம்பியர்கடம்மைப்பூதமன்னரைநிறுத்தித்... ... ...*
துங்கவெண்டிலாசேராழித்தூயதண்கரையில்மேவி... ... *
மங்குறுதுயர்ந்தகந்தமாதனகுவடுசேர்ந்தான்... ... ... *

(இ-பொ.) அந்தவார்த்தைக்குச்சம்மதித்துத் தேவேந்திரனைஅவ்விடத்திலநிறுத்திவிட்டு வீரமிகுந்தகப்புடைய தம்பிமார்களையும் பூதராசாக்களையும் நிறுத்திவிட்டுப்பலமுள்ளவெண்மைநிறங்கொண்ட அலைகளையுடைய சமுத்திரத்தின் தண்ணிய கரையிற்சேர்ந்து அழிவில்லாமலுயர்ந்தகந்தமாதனமலைக்குஅருகில்போனார். —(எ-று.) (௪)

அங்கதன்மீதிலேறியவுணனூர்க்கடைவாய்நீட்சி... ... ... *
தங்குமோர்வடிவங்கொள்ளத்தடவரைபொருதுதாழ்ந்து ...*
பொங்குசீர்ப்பிலத்தினூடுபோயதெவ்வுலகுஞ்சூரன் ... ... *
றுங்கவானகருங்கண்டான்சுடர்விடுவடிவாள்வீரன்... ... ...*

(இ-பொ.) அந்தமலையின்மேலேறிச் சூரனுடைய ஊரிலிருக்குங்கோபுரநீளமெவ்வளவோ அவ்வளவுஉயரமானதிருவுருவங்கொண்டார் அவரைஅந்தப்பெரியமலையானது தாங்கமாட்டாமல தாழ்ந்து சீர்மிகுந்தபாதாளத்துக்குள்போயது அவ்வடிவங்கொண்ட ஒளிவிடுகின்றவடிவாளேந்திய வீரவாகுதேவர் எல்லாவுலகத்தையும் சூரனுடையபலமுள்ள சிறந்தபட்டணத்தையுங்கண்டார்.—(எ-று.) (௫)

அண்டர்சூழ்குமரவேளையன்புடன்றொழுதுபோற்றித்...... *
துண்டவெண்பிறையான்மைந்தன்றொல்லுருவமைந்துசூராங் ...*
கண்டகனூனாடிக்ககனமாநெறியூடேகிப். ... ... ... *
பண்டுபோலெழுதியென்னவெழுந்ததுபடிந்தகுன்றம்.... ...*

(இ-பொ.) தேவர்கள்சூழும்படி வீற்றிரா நின்றகுமாரசுவாமியை அன்புடன்தொழுது தோத்திரஞ்செய்து வெண்மைநிறமுள்ள துண்டமாகிய பிறையணிந்தசடாமகுடமுள்ள பரமசிவனுடையபுத்திரனை வீ

பொழிப்புரை.

ரவாகுதேவர் அப்போது கொண்டபெரியஉருவமாறி முன்னிருந்தபடி யே உருவம் அமைந்து சூரனாகிய கண்டகனானை நாடிப் பெரிய ஆகாயமாகி ய வழியினிடமாகச்சென்று அந்தக்கந்தமாதனக்கிரியைநோக்கிநீபழைய படி மேலேயோங்கியிருக்கக்கடவையென்று உத்தரவு செய்தார் அப்படி யுத்தரவுசெய்தமாத்திரத்தில் அழுந்தியிருந்தமலைமேலெழுந்தது.(எ-று.

சென்றிடுவீரன்சூரன்றிருநகர்வடாதுபாங்கர் ... ... ... *
வன்றிறல்படைத்தயாளிமாமுகத்தவுணன்போற்றும். ... ...*
வென்றிகொளிலங்கையானவியனகர்க்கணியனானு ... ... *
ணன்றவன்சூரற்காணவனிகமோடகன்றனன்மீற ... ... ...*

(இ-புரை.) ஆகாயமார்க்கமாகச்செல்லுகின்ற வீரவாகுதேவர் சூரனுடைய சிறப்புள்ளபட்டணத்துவடபுறத்தில யாளிமுகமுள்ள அவுணனால்பாதுகாக்கப்படுவதாகியவெற்றிபொருந்திய இலங்கையென்கிறபெரியபட்டணத்துக்குச் சமீபித்தவரானார் அப்போது அந்த ஆளிமுகன்சூரனைக்காணச்சேனையுடன்போயிருந்தான்.—(எ-று.) (எ)

அங்கவன்றனதுமைந்தனாயிரவெள்ளமான...... ... ... *
துங்கவெம்படையினோடுந்துலங்கதிவீரனென்போன் ... ...*
றங்கினன்வடாதுவாசறன்னிடைமன்னிவீர... ... ... .... *
சிங்கனைஞ்ஞூறுவெள்ளஞ்சேனையோடிருந்தான்மாதோ... ...*

(இ-புரை.) அந்த ஆளிமுகனுடையமகனாகிய அதிவீரனென்னும் அவுணனானவன் பலமுள்ள ஆயிரம் வெள்ளஞ்சேனையுடன் அந்தப் பட்டணத்திலிருந்தான். வடக்குவாயிலினிடத்திலவீரசிங்கனென்பவன் ஐஞ்ஞூறுவெள்ளஞ்சேனையுடனிருந்தான்.—(எ-று.) (அ)

கண்டனன்வீரவாகுககனமேல்வருதல்சீற்றங் ... ... ...*
கொண்டனனெமதுகாப்பிற்குறுகினனிவன்றனாவி... ... *
யுண்டிடுவேனென்றெண்ணியுரந்தருமடங்கற்பேரோன்... ...*
மண்டியபடையினோடுமாகமேல்வளைந்துகொண்டான் ... *

(இ-புரை.) வீரவாகுதேவர் ஆகாயமார்க்கமாக வருவதைக்கண்டு கோபங்கொண்டு என்னுடைய காவலில்வருகின்ற இவனுடையஉயிரைஉண்டுவிடுகிறேனென்றெண்ணிப்பலம்பொருந்திய வீரசிங்கனானவன்நெருங்கியசேனையுடன்சென்று ஆகாயத்தின்மேல்வளைந்துகொண்டான்.

உற்றசீர்வீரவாகுவுறைகழித்தொளிர்வாள்கொண்டு ... ...*
செற்றவெங்கரிகளூடுசீயமொன்றடைந்தவாபோற் ... ... *
றற்றிவந்தெதிர்ந்துபோர்செய்தண்டமுந்தலைவன்றானு... ...*
மற்றிடக்கடிதுலாவியறுத்தனன்செறுத்துமன்னோ ... ... *

(இ-பொ.) சீர்பொருந்திய வீரவாகுதேவர் உறைகழித்துநீக்கிய ஒளியுள்ள வாளாயுதத்தினால் பகைகொண்ட வெவ்வியயானைக்கூட்டத்துக்குள்ஒருசிங்கம் அடைந்ததுபோலச்சென்று நெருங்கிவந்துபோர்செய்கின்றசேனையும் அதன்தலைவனும் அற்றுவிழக் கடிதுலாவியறுத்தனர்

மின்றுலாந்தனிவாள்கொண்டுவீறிவந்தெதிர்ந்துசூழ்ந்த ...*
மன்னிலாவெயிற்றுப்பேழ்வாய்வன்மைச்சேரவுணற்செற்ற ... *
பொன்னுலாமலங்கற்றிண்டோட்பொருவிலாவீரவீரன்... ...*
கொன்னுலாமிலங்கையென்னுங்குன்றின்மேற்குப்புற்றானால்... *

(இ-பொ.) வீறுப்படைவந்தெதிர்ந்துசூழ்ந்தஉறுதியாகியநிலவொளிபொருந்தியபல்களோடுபெரியவாயும்வலியுமுடைய அவுணர்களை ஒளிபொருந்திய ஒப்பற்றவாளாயுதத்தினாலேகொன்றபொன்னிறமுள்ளமாலையணிந்த திணிவுள்ளபுயங்களையுடைய ஒப்பில்லாத வீரவாகுதேவர்பெருமைபொருந்தியஇலங்கையென்கிறமலையின்மேல்குதித்தார்.—(எ-று.)

[வேறு.]

குப்புற்றிடுதலுமதுநன்புடையுறு ... ... ... ... ...*
கொடுவல்லரக்கர்களொடுதாழா ... ... ... ... ... *
வுப்புற்றிடுகடல்புகவேயவணுறை ...... ... ... ... ...*
யொருவாவிருவிறலதிவீரன்... ... ... ... ... *
றுப்புற்றிடுபடையொடுவந்தடலொடு... ... ... ... ...*
சூழத்தனதொருசுடர்வாள்கொண் ... ... ... ... *
டப்புக்கடலெனவுதிரம்பெருகிட... ... ... ... ... ...*
வட்டானவர்தமைபடல்வீரன்... ... ... ... ... *

(இ-பொ.) வீரவாகுதேவர்குதித்தமாத்திரத்தில் அதனிடத்திலிருக்கும் கொடியஅவுணர்களுடன் அம்மலையானதுதாழ்ந்து உப்புக்கடலுக்குள்ளழுந்திடவே அங்கிருக்கும் நீங்காதமிகுபலமுள்ள அதிவீரன் பலம்பொருந்திய சேனையுந்தானுமாக வந்து வீரத்துடன் எதிர்த்துக்கொண்

பொழிப்புரை.

டான் அதைக்கண்டவெற்றியுள்ள வீரவாகுதேவர் நீர் மிகுந்தகடல்போல் உதிரவெள்ளம்பெருகும்படி அவர்களைக்கொன்றார்—.(எ-று.) (௰௨)

போராவிறன்மலைகடன்மேலெழும்வகை ... ... ... ...*
பின்விண்ணிடையினெழுந்தேகிச் ... ... ... ... *
சீரார்சூரர்பகைநகரத்திடைவட .. ... ... ... ... ...*
திசைவாய்தலினுறவதிகோர ... ... . ... ... *
வீராதிபனவனாறாயிரமெனும் ... ... ... ... ... ...*
வெள்ளப்படையொடுமுறவேகண் .. ... ... ... *
டோரார்கரிமுகனிளையோனிளையவ ... ... ... ... ...*
னிவ்வாறுரையது செய்வானால். .. ... ... ... ... *

(இ-புரை.) நீங்காதபலமுள்ள ஒருமலையான துசமுத்திரத்தின்மே லெழும்வகைபோலப்பின்பு ஆகாயத்தினிடத்தி லெழுந்து சென்றுசீர் பொருந்தியதேவர்பகைவனாகியசூரனது நகரத்தின்வடதிசைவாயிலிற்சே ர்ந்தார் அவ்விடத்தில் அதிகோரமுள்ள வீராதிபன்என்பவன் நூறாயிரம் வெள்ளச்சேனையுட னிருக்கக்கண்டு அழகுநிறைந்த ஆனைமுகவிநாயகரு டைய தம்பிக்குத்தம்பியாகிய வீரவாகுதேவரிவ்வாறு தமக்குட்சொல்லிக் கொள்ளுகிறார்.—(எ-று.) (௰௩)

வற்றாதாறுகடலெனவிங்கவுணர்கண் ... ... ... ... ...*
மருவுற்றனர்மிகவாய்த்தற்பா ... .. ... ... ... *
லுற்றாலவர்பொரவருவாரவர்தமை ... ... ... ... ...*
யொழியப்பொருதிடினொழியாதே ... ... ... *
செற்றார்வருகுவரவர்தங்களையடல் ... ... ... ... ...*
செய்தற்கரிதது செய்தாலுஞ்... ... ... ... ... *
சுற்றாநிறைவுறுதிறல்வெம்படையொடு ... ... ... ...*
சூரன்சமர்செயவருவானால் ... ... .. ... ... *

(இ-புரை.) வற்றாமலிருக்குங்கடல்போல மிகுந்த அவுணர்களிந்த வாயிலினிடத்திலிருக்கிறார்கள் நாமிந்தவழியேபோனால் அவர்கள்சண் டைசெய்யவருவார்கள் அவர்களெல்லாரும் ஒழியும்படிபோர் செய்தால் அவுணர்களாகியபகைவர்கள் ஒழியாமல்மேலும்மேலும்வருவார்கள் அவர் களைக்கொல்வது அருமை அல்லவென்று கொன்றாலும் சூழ்ந்து நிறைந்த பலமுள்ள கொடியசேனையுடன் சூரன்யுத்தஞ்செய்யவருவான்.-(எ-று.)

ஆதிக்குகனவனழியப்பொருதிட ...... ... ... ... ...*
லல்லாதெவரடவல்லாரென் ... ... ... ... ... *

றேதிக்குணதிசைவாய்தற்றனில்வள ... ... .. ... ...*
ருரமேவியபுயனுறுபோதில்... ... ... ... ... *
மேதிக்கணனெனுமாதிக்கதனிடை .. ... ... ... ... ...*
வீரத்தினகரன்வடதிக்கா... ... ... ... ... ... *
ரோதப்படைநிகரனிகஞ்சுலவ. ... ... ... ... ... ...*
விருந்தாரிருவர்தெரிந்தானே... ... ... ... ... *

(இ-புரை.) ஆதியாகியசுப்பிரமணியக்கடவுள்அவனழியும்படிபொருதுவதல்லது மற்ற எவர்கள்கொல்லவல்லவரொன்று சொல்லிக்கொண்டு மிகுந்தபலமுள்ளவீரவாகுதேவர் கிழக்குவாயிலில்செல்லும்போது அந்தப்பெரியதிக்கினிடத்தில் மேதிக்கண்ணனென்பவனும் வீரதினகரனென்பவனுமாகிய இவ்விருவரும்வடக்குக்கோபுரவாயிலில் ஆயுதமேந்திய சேனைசூழஇருந்தார்கள்அவர்களை வீரவாகுதேவர்கண்டார.(எ-று.)(௰௫)

போராவிறலுறுவீராதிபனது ... ... ... ... ... ..*
பின்றென்றிசைவழிபெயர்போதிற். ... ... ... *
சூராலவனதுநகர்மேல்வெளிமிசை ... ... ... ... ...*
தோய்வோனமர்புரிதொழில்வல்லோ ... ... ... *
னோராயிரமுகமீராயிரமெனு ... ... ... ... ... ...*
மொண்கைக்கசமுகவசுரன்றான் ... ... ... ... *
பாராவிவனுயிருண்பேனெனவெதிர் ... ... ... ... ...*
படவந்தனனிதுபயில்கின்றான்... ... ... ... ... *

(இ-புரை.) ஒழியாதவெற்றிபொருந்தியவீரர்களுக்கெல்லாந்தலைவராகியவீரவாகுதேவர்அதன்பின் தெற்குத்திசைக்கோபுரவாயிலில்செல்லும்போது சூரனுடைய நகரத்துக்குமேலே அந்தரத்திலிருப்பவனாகிய போர்செய்யும் வல்லபமுள்ள ஆயிரமுகமும் இரண்டாயிரங் கைகளுமுள்ளகசமுகாசுரன்கண்டு இவனுயிரையுண்டுவிடுகிறேனென்றுஎதிர்த்துவந்து இதுசெய்கின்றான்.—(எ-று) (௰௬)

வீறுமொருகிரிபறியாமிடலொடு... ... ... ... ... ...*
விடவேவளர்புயமிசைபட்டே... ... ... ... ... *
நீறுயதுதசநூறுமலைவிட ... ...... ... ... ... ...*
நிமலன்றிருவுருநிலைமேவி ... ... ... ... ... *
வேறுயளவறுதுகளாயினகதிர் ... ... ... ... ... ...*
மிகுவேலிறையவனிளையோனுட் ... ... ... ... *
சீறுமிளிரொளிவாள்கொண்டவனெதிர்... ... ... ... ...*
சென்றனடுதிறல்குன்றுதான்... ... ... ... ... *

(இ-புரை.) பெரியதாகியஒருமலையைப்பறித்துப்பலத்துடனெறிந்தான் அதுவீரவாகுதேவருடைய பூரிக்கும்புசத்திற்பட்டுத்தூளாய்விட்டது அதற்குமேலாயிரமலைகள்பறித்தெறிந்தான் அவைகள்வீரவாகுதேவருடைய திருமேனியிடத்திற்பட்டுவேறுவேறுயளவற்றதூளாயின. அதுகண்டுஒளிமிகுந்தவேலாயுதமேந்தியசுப்பிரமணியசுவாமியின்தம்பியாகியவீரவாகுதேவர்மனதிற்கோபங்கொண்டு பிரகாசிக்குமொளியுள்ள வாளாயுதத்தைக்கையிலேந்திக்கொண்டு அவுணனைக் கொல்லுந்திறங்குன்றுமல அவனெதிர்சென்றார்.—(எ-று.) (௱௭)

வாள்கொண்டடுநெடுவாள்கொண்டவன்முக .. .. .. ...*
வண்கைத்திரளினைவலிமேவுந் .. .. ... .... .. *
தோள்கொண்டிடுமிறைதடியக்குகன்விடு ... ... ... ...*
தூதன்றனையிருகசநூறு .. .. ... ... ... ... *
நீள்கொண்டிடுகரமேநெடுவிடவுட... ... ... ... ...*
னேசுற்றிடவவைநிலமீதே ... ... ... ... *
வீழ்கொண்டிடும்வகைவாள்கொண்டடலொடு ... ... ...*
வெட்டாவழிவுசெய்திட்டானால...... ... ... ... *

(இ புரை.) பலம்பொருந்தியதோள்கொண்ட வீரவாகுதேவர் ஒளிபொருந்திய வாளாயுதத்தினால் அவனுடைய முகங்களிற்பொருந்திய வலியஆயிரந்துதிக்கைகளையும்வெட்டினார்அவன் சுப்பிரமணியக்கடவுள் அனுப்பிய தூதராகிய வீரவாகுதேவரைநீட்சிபொருந்தியதன் இரண்டாயிரங்கைகளாலும்பலத்துடன்வளைத்துப்பிடித்தான்அந்தஇரண்டாயிரங்கைகளும்பூமியின்மேல்விழும்படி வீரவாகுதேவர் வாளாயுதத்தினால்பலமாகவெட்டியழித்தார —(எ-று.) (௱௮)

துன்றுங்கரநிரைதரைமேலவிழவமர் ... ... ... ...*
தோளான்முயறலுநீளாகத் ... ... ... ... *
தொன்றும்படியொருசரணலவனை ... ... ... ...*
யுதைத்தேகடிதில்வதைத்தேமுற் ... ... ... *
பொன்றும்படிசமனுரமீதுரமொடு ... ... ... ...*
புவிபூநிதைபுரிபுனிதன்போற் ... ... ... *
கொன்றுன்னியவிறல்மொய்ம்பன்மகிழ்வது... ... ...*
கொண்டானமரர்கள்கொண்டாட ... ... ... *

(இ-புரை.) வரிசையாகப்பொருந்திய தன்கைகள்தரைமேல்விழுந்தமாத்திரத்தில் அவுணனானவன்தோள்களால்யுத்தஞ்செய்ய எத்தனித்த

ன் அவனைக்கண்டு பெருமைபொருந்திய வெற்றியுள்ள வீரவாகுதேவர் அ திகாலத்திலேபூலோகத்தினிடத்திலயடைகருமராஜனிறக்கப்படி அவன்மா ர்பின்மேலுரத்துடன் உதைதகரு ரியகாலசங்காரமூர்த்திபோல் கசமு கனது பெரியமார்பிலபடிம்படி தம்முடைய ஒருபாதத்தினுல உதைத்து விரைவிற்கொன்று மகிழ்ச்சியடைந்தார் தேவர்களெல்லாரும் வீரவாகு தேவனைக்கொண்டாடினுர்கள்.—(எ-று.) (௰௯)

[வேறு.]

அன்னவனையட்டபினரிந்நகரின்வாய்தலெலலா ... ... ... *
மவுணர்சேனை... ... ... ... .. ... ... ...*
துன்னியகாதலினுலேவேற்றுருக்கொண்டேகுதலே ... ... *
துணிபாமென்றே.... ... ... ... ... ... ... *
மன்னுமணுவுருவாகிகீழ்த்திசைக்கோபரத்திருந்தூர் ...... *
வளங்களேக்கி.... ... ... ... ... ... ... ...*
மின்னுபுகழ்மகேந்திரமாஞ்சூரூருட்போயினன்சீர் ... ... *
வீரவாகு... ... ... ... ... ... ... ... ...*

(இ-புரை.) அவனைக்கொன்றபின்புசீருள்ளவீரவாகுதேவர்(யோசி ப்பது) இந்த நகரத்தின் கோபரவாயில்கள் தோறும்- அவுணர்சேனைக ள்காவலாயிருக்கிறுர்கள் ஆகையினுல - வேற்றுருவங்கொண்டுசெலலு தலே நிச்சயிக்கத்தகதென்று பொருந்திய அணுஉருவமாகிகீழ்த்திசை க்கோபுரவாயிலின்மேலேறியிருந்துகொண்டு ஊாவளங்களை யெலலா ம்பார்த்துப் புகழ்விளங்கு மகேந்திரமென்று பெயருள்ள சூரன்பட்ட ணத்திற்சென்றுர்.—(எ-று.) (௨௰)

பங்கமுளகொடுஞ்சூர்க்குமுதன்மைந்தனுனதொரு ... ...*
பானுகோபன் ... ... ... ... ... ... ... *
துங்கமுளவக்கினிமாமுகத்தோனேயிரணியனுந் ... ... ...*
துலங்குபேரோ ... ... ... ... ... ... ... *
னங்கடல்வச்சிரவாகுமற்றுமூவாயிரவர்... ... ... ... ...*
தமதின்மேனுக்கி ... ... ... ... ... ... ... ... *
வெங்குணமந்திரிதருமகோபன்மனைச்சிகரமிசை... ... ...*
மேமலினுல்... ... ... ... ... ... ... ... *

(இ-புரை.) பழுதுள்ள கொடியசூரனுக்கு மூத்தமகனுகியபானு கோபன் பலமுள்ளபெரிய அக்கினிமுகன் இரணியனென்று விளங்கு

பொழிப்புரை.

ன்றபெயருள்ளவன்வெற்றிபொருந்தியவச்சிரவாகுமூவாயிரம்பேர்என்னுமிவர்கள் வீரர்களையெல்லாம் பார்த்துக்கொண்டுபோய்ப் பொல்லாதகுணமுள்ளமந்திரியாகியதருமகோபன்சிகரத்தின்மேல்போயிருந்தார்.

சாற்றியவிங்கிது நிற்கக்கறையுறுவெஞ்சிறையினிடைச் ... ...*
சயந்தனென்போ... ... ... ... ... ... ... *
னேற்றமுளவமரரொடுமவுணர்புரிசிறையதனு ... ... ...*
விடரின்மூழ்கி ... ... ... ... .. ... ... *
யாற்றமெலிந்தரனை நினைந்தேத்தியயர்ந்திடவறிந்தங் ... ...*
கருண்மீக்கொண்டு. ... ... .. .. ... ... *
சீற்றமுறுமேற்றடக்கைக்குமரனவன்கனவினிடைச் ... ...*
சென்றானன்றே ... ... ... ... ... ... ... *

(இ-புரை.) சொல்லியவிது நிற்க-குற்றம்பொருந்திய பொல்லாதசிறையினிடத்தில் சயந்தனென்பவனும்மேன்மையுள்ளதேவர்களும்அவுணர்கள்செய்யுங்காவலினால் துன்பத்திலஅழுந்தி மிகவுமெலிந்து பரமசிவனை நினைந்து தோத்திரஞ்செய்து சோபப்படுவதை யறிந்து போரில் கோபம்பொருந்தும் வேலாயுதமேந்திய பெரியதிருக் கரமுள்ளகுமாரசுவாமியானவர் மிகுந்தகிருபைகொண்டு சயந்தன் கனவிலெழுந்தருளினார்.—(எ-று.) (௫௨)

சிந்தைமகிழ்வோடுதொழுதையநீயாரொனவே ... ... ...*
திகழுமீசன். ... ... ... ... ... ... ... *
மந்தருளுமைந்தனியாந்தன்குறைநின்குறைபுகன்றான் ... ...*
றுதையான ... ... ... ... ... ... ... ... *
விந்திரன்வந்தமைவேண்டத்தாருகனைக்கதிர்வேல்கொண் ...*
டெறிந்துசாடிச் ... ... ... ... ... ... ... *
செந்திநகர்வந்ததனிலிருந்தனமிந்திரனயன்மா ... ... ...*
றேவர்சூழ ... ... ... ... ... ... ... ... *

(இ-புரை.) மனமகிழ்ச்சியோடு தொழுது ஐயனே நீயாரென்றுவிண்ணப்பஞ்செய்தான் பரமசிவன்தந்தருளியபுத்திரர்நாம் உன்பிதாவாகியஇந்திரன்வந்துதன் குறையினையும்உன்குறையினையுஞ்சொல்லி வேண்டினமையால்நாம்பூலோகத்திலெய்திஒளியுள்ளவேலாயுதத்தைவிட்டெறிந்து தாருகனைக்கொன்று அவ்விடம்விட்டு நீங்கிஇந்திரன் பிரமதேவன்விஷ்ணுமுதலானதேவர்கள்சூழச்செந்திநகரில்வந்திருக்கின்றனம்.(எ-று.)

வீரவாகென்னுமொருதூதுவனையிங்குவர ... ... ... *
விடுத்துவீரச்... ... ... ... ... ... ... ...*
சூரனுமவுணன்மகனொருவனொடுபலவவுணர்... ... ... *
தொலையச்சாடிச் ... ... ... ... ... ... ... *
சீருலாநகரழித்துவரட்புரிந்துநாளையிவண் ... ... ... *
சேர்ந்துசூர்முற்... ... ... ... ... ... ...*
போருலாமவுணரொலாமைந்திருவைகலின்மாளப் ... ... *
புரிதுமாதோ... ... ... ... ... ... ... ... *

(இ-பு‌ளை.) வீரவாகுஎன்னும் நாமமுடையதூதனொருவனையிவ்வி டத்துக்குவரும்படிவிடுத்து வீரம்பொருந்திய சூரனுகிய அவுணன்பிள் ளைகளில் ஒருவனையும்பலஅவுணர்களையும் உயிர்தொலையக்கொன்று சீர் பொருந்தியமகேந்திரபுரியை அழித்துவரும்படி செய்து நாளையதினம் நாம்வந்து சூரன்முதலாகியமற்ற அவுணர்களையும் பத்துநாளைக்குள் மா ளும்படிசெய்கிறேம்.—(எ-று.) (உச)

பின்புனதுதிருத்தருதுமென்னவவன்றனக்குரைத்துப் ... *
பெயர்ந்துமோகத் ... ... ... ... ... ... ...*
துன்பினுடனுறுமமரர்கனவினிடைமனமகிழத் ... ... *
தோன்றித்தோன்றி ... ... ... ... ... ... ... *
யன்பினொடுசயந்தனுக்குப்புகன்றதுபோற்புகன்றுபுகன் ... *
றகன்றுபோக ... ... ... ... ... ... ... ...*
வின்பமுறுகனவினைவிட்டெழுந்துதுயர்பொருந்தாம ... *
லிருந்தாரன்றே ... ... ... ... ... ... ...*

(இ-புரை.) பின்புஉன்னுடையசெல்வத்தைத்தருகிறேமென்றுஅவ னுக்குஅருளிச்செய்து நீங்கித்துன்பத்திஞல் மயங்கியிருக்கிறதேவர்கள் கனவிலும் அவர்கள்மகிழும்படி ஒவ்வொருவருக்குத்தனித்தனி தரிசனமா கி அன்புடன் சயந்தனுக்குச் சொன்னதுபோலச்சொல்லி அவ்விடம் வி ட்டகன்று எழுந்தருளினர் அவர்கள்இன்பமுள்ள கனவினைவிட்டெழுந் து துயர்பொருந்தாம லிருந்தார்கள்.—(எ-று.) (உரு)

[வேறு.]

கொன்பாவுதிறல்கொண்டகுமரேசனமரர் ... ... ... ...*
முன்பாகவந்தேகுமுறையிங்குரைத்தா ... ... ... ... *
பின்பானபுகழ்கொண்டவெழில்வீரவாகு ... ... ... ...*
பொன்பாவுநகருடுபுரிசெய்கைசொல்வாம் ... ... ... *

பொழிப்புரை.

(இ-புரை.) பெருமைபரந்தவெற்றிகொண்ட குமாரசுவாமியான வர்தேவர்கள்முன்பாகவந்தமுறைமையினையிந்தமட்டிற்சொன்னோம் இன்பமாகும்புகழ்கொண்ட அழகுள்ள வீரவாகுதேவர் பொன்பரவியமகேந்திரபுரிக்குள்செய்கிறமுறைமையையினிச்சொல்லுகிறோம்.(எ-று.)

தண்டாதவிறல்கொண்டுதருமங்கொல்கொடியோன். ... ...*
விண்டாவுசிகரத்தின்மிசைநின்றிழிந்தே ... ... ... ... *
யெண்டானவர்கள்சூழவிமையோர்கள்சிறைசேர் ... ... ...*
கண்டார்கள்பயமேவுகளமீதடைந்தான் ... ... ... ... *

(இ-புரை.) நீங்காதபலங்கொண்டு தருமத்தைக்கெடுக்குங்கொடியவனை தருமகோபனுடைய ஆகாயத்தையளாவுகின்றமாளிகையின்சிகரத்தைவிட்டிழிந்துஎண்ணுந்தொகையுள்ள அவுணர்கள்சூழத்தேவர்கள்சிறைசேர்ந்தகண்டவர்கள் பயங்கொள்ளும் சிறைச்சாலையின்மேற் சேர்ந்தார்.—(எ-று) (உஎ)

அங்காருமசுரேசரதிமோகமாகச்... ... ... ... ... ...*
சிங்காரவேண்மந்திரத்தைச்செபித்தே ... ... ... ... *
மங்காதவமரேசன்மகனோடிமையோர் .... ... ... ...*
தங்காவிருந்திட்டதலமுற்றிருந்தான் ... ... ... ... *

(இ-புரை.) அங்கிருக்கும் அவுணத்தலைவர்களெல்லாரும் மிகவும் மோகமாய்மயங்கும்படிசிங்காரமுள்ளசுப்பிரமணியர் மந்திரத்தைச்செபித்துக் கெடாதஇந்திரன்மகனும் தேவர்களுந்தங்கியிருக்குஞ் சிறைச்சாலையிற்போயிருந்தார்.—(எ-று.) (உஅ)

தண்டாதவிறல்கொண்டதலைவன்றன்மேனி ... ... ... ...*
கண்டான்விருப்போடுகரமுந்துசிரமேற் ... ... ... *
கொண்டான்வரத்தென்கொல்கூறென்றுரைத்தா ... ... ...*
னண்டார்கள்சிறையூடழுந்துஞ்சயந்தன்... ... ... ... *

(இ-புரை.) பகைவர்கள்சிறையிலிருக்குஞ் சயந்தன் நீங்காதவெற்றிகொண்ட வீரவாகுதேவர் திருமேனியைக்கண்டு விருப்பத்துடன்தன் கைகளைப்பிரதானஅங்கமாகிய சிரசின்மேல்வைத்துக்கொண்டு தொழுது இங்கே வந்தகாரணமென்னசொல்லும் ஐயனேயென்றான்.—(எ-று.)

கால்கொண்டவிஞ்சைகொண்டகழல்வீரவாகு... ... ... ...*
வேல்கொண்டமுருகேசன்விடுதூதனீரிப் ... ... ... *

பால்கொண்டசிறைவிண்டுபதமெய்தவேவெங் ... ... ...*
கோல்கொண்டசூர்முன்புகூறற்கடைந்தேன் ... ... ... *

(இ-புரை.) புகழ்கொண்ட வீரகண்டையணிந்த காலுள்ள வீரவாகுதேவர்சயந்தனைநோக்கிநான்வேல்கொண்டசுப்பிரமணியசுவாமியேவிய தூதன்நீங்களிவ்விடத்திற்பொருந்தியசிறையைநீங்கி யுங்கள்பதவியை அடையும்பொருட்டுக் கொடுங்கோல்கொண்ட சூரனுக்குநீதிசொல்லவந்தேன்.—(எ-று.) கொடுங்கோல்-என்பது-அநீதி (௩௰)

இப்பான்மைகேளாதிடும்போனிருக்கிற் ... ... ... ...*
றப்பாமலிவண்வந்துதசநாள்கடப்பிற் ... ... ... ... *
றுப்பாருமவுணர்த்தொலைத்தும்பதத்தே ... ... ... ...*
மெய்ப்பாகவைப்பான்விறற்கொண்டவேலோன். ... ... *

(இ-புரை.) இடும்பையுள்ளசூரன் இந்தநீதியைக்கேளாமலிருந்தால்வெற்றிகொண்டவேலாயுதக்கடவுள் தப்பாமலிங்கேவந்து பத்துநாளைக்குள்பலம்பொருந்திய அவுணர்களைத்தொலைத்து உங்களையுங்கள்பதவியில்உண்மையாகவேவைப்பார்—(எ-று.) (௩௧)

[வேறு.]

என்றுபற்பல நன்றுபு கன்றிட ... ... ... ... ... *
வேதிலாதசயந்தனுமண்டருந் ... ... ... ... ...*
துன்றுகைக்கமலங்கள்குவித்துநின்...... ... ... ... *
றூயசெய்கை தொடங்குதியையவென்... ... ... ... *
றொன்றுமன்பொடுரைத்திடவங்கண்விட் ... ... ... *
டொல்லையேகியோ ராயிரயோசனைப் ... ... ...*
பொன்திகழ்ந்திடு சூரவைமண்டபம் ... ... ... ... *
போகிமுன்னுளபொன்னுருவெய்தினன் ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுபல பல நன்மைகள் சொல்ல குற்றமில்லாதசயந்தனும்தேவர்களும்பொருந்திய தங்கள்கைத்தாமரைமலரைக்குவித்துத் தொழுது ஐயனே பரிசுத்தமுள்ள உன்காரியத்தைச் செய்யென்றுபொருந்திய அன்புடன் சொன்னார்கள் வீரவாகுதேவர் அவ்விடம்விட்டு விரைவாக அப்புறம்போய் ஒருயோசனைதூரம் விஸ்தாரமுள்ளதாய்ப்பொன்னாற்செய்யப்பட்டுவிளங்குகின்றசூரனுடைய சபாமண்டபத்திற்சேர்ந்துமுன்தமக்குள்ள அழகியரூபங்கொண்டார்.—(எ-று.) (௩௨)

எய்தியாயிர யோசனைநீளமு ... *
மெள்ளிடம்புரை யெள்ளிடையின்றியே ... *
வெய்யதானவர் சூழ்தரவீறிலா ... *
வீறுலாவுவளங்கள் விளங்குறத் ... *
தூய்யமாலையிலங்கியமார்பகச் ... *
சூர்மடங்கல் சுமந்திடுமாதனச் ... *
சையமீதுறல் கண்டனனண்டர்சூழ் ... *
சண்முகற்கி னிதாகியதம்பியே ... *

(இ-புரை.)தேவர்கள்சூழ்ந்திருக்கும்படிவீற்றிராநின்றசண்முகமூர்த்திதம்பியாகிய வீரவாகுதேவர் இவ்வாறுமுன்வடிவங்கொண்டுஆயிரம் யோசனைநிகளவளாயிலும் ஒரு எள்ளினளவையொத்தவெற்றிடமில்லாமல்கொடியஅவுணர்கள்சூழ்ந்திருக்கவும்பெருமைமிகுந்த வளங்கள்விளங்கவும்பரிசுத்தமுள்ளதானபூமாலைதொங்கி யசைந்துகொண்டிருக்கும் மார்பினையுடைய சூரனுனவன் சிங்கங்களாற்சுமகைகப்பட்டுப் பொன்மலைபோலிருக்கும் ஆசனத்தின்மேலிருப்பதைக்கண்டார்.—(எ-று.) (௩௩)

கண்டுதிண்டிறல் கொண்டிடுதோளுடைக் ... *
காளைசூரன்கடுந்திறற்சீயமேல் ... *
கொண்டவாதனமீதிலிருந்திடக் ... *
கொற்றவேலவ னேற்றெனவோதியான் ... *
மண்டலத்திடை நின்றிடநீதெனு ... *
வள்ளறன்னைமனக்கணினேத்தலு ... *
மொண்டிறற்குகன் மண்டருளாலரோ ... *
வொராரித்தவிசவ்விடையுற்றதே ... *

(இ-புரை.) மிகுந்தபலங்கொண்ட புசங்களுள்ள வீரவாகுதேவர் சூரனுனவன் வேகமும்பலமுமுடைய சிங்கங்கள் தாங்கப்பட்டிருக்கிற ஆசனத்தின்மே லுட்கார்ந்துகொண்டிருக்க நான் வெற்றி பொருந்திய வேலாயுதக்கடவுள் தூதனென்றுசொல்லிப்பூமியினிடத்தில்நிற்பதுபழுதென்று எண்ணிச்சுப்பிரமணியக்கடவுளைத்தமதுமனதில்நினைத்தமாத்திரத்தில் பிரகாசமுள்ளதாகியவெற்றிபொருந்தியசுப்பிரமணியக்கடவுளுடைய பூரணமானகிருபையினுல் ஒருசிங்காசனம் அங்குவந்து பொருந்திற்று.—(எ-று.)அடியார்கள்வேண்டியவரங்களைக் கொடுத்தருள் கின்றவராதலால் வள்ளலென்றுகூறினர். (௩௪)

வந்துமன்னவன்முன்னரிருந்திட ... ... ... ... ... *
வாகைகொண்டிடு வாகுமகிழ்ச்சியோ ... ... ... *
டெந்தையாகிய கந்தனளித்ததீ... ... ... ... ... ... *
தென்றுசென்றதி னெய்தியகாலையின் ... ... ... *
வெந்திறற்பெறு சூரிதுகண்டுநீள் ... ... ... ... ... *
வித்தைசெய்பவனென்றுவெகுண்டுரைத்... ... ... *
துந்துசீருள வீரனையாரைநீ ... ... ... ... ... ...*
யோதுவாயென வோதுதன்மேயினான் ... ... ... *

(இ-பு.) சிங்காசனம்வந்து சூரனெதிரிலிருந்தது அதனைவெற்றிகொண்டவீரவாகுதேவர் மகிழ்ச்சியுடன்கண்டிது எம்மையனாகிய கந்தசுவாமி அருளிச்செய்ததென்று மதித்துக்கொண்டுசென்று அந்தச்சிங்காதனத்தின்மேலுட்கார்ந்தபோது வெவ்வி தானபலம்பொருந்திய சூரனிதனைக்கண்டு இவன்பெரியமாயவித்தைசெய்கிறவனென்று நினைத்துக்கொண்டு கோபித்துச்சிலவார்த்தைகள்சொல்லி மேன்மையான சீருள்ள வீரவாகுதேவரைநோக்கி நீயார்சொல்லென்னச் சொல்லுதலைத்தொடங்கினார்.—(எ-று.) (௩௫)

தேவர்தங்களிடுக்கணகற்றவே... ... ... ... ... ... ... *
செந்திின்மேவியிருந்திடுகந்தவே... ... ... ... ...*
ளோவிலாவருடன்னுடனென்னையே... ... ... ... ... *
யுன்னைமேவியுரங்கிளரண்டரைப் ... ... ... ...*
பாவமார்சிறைவிட்டிடவெண்ணுதி... ... ... ... ... *
பாரினீதிபயின்றரசாளுதி... ... ... ... ... ...*
யாவதீதுமறுத்திடின்மாள்வையென் ... ... ... ... *
றன்பினோடுமறைந்திடவேவினான் ... ... ... ... *

(இ-பு.) தேவர்களுடையதுன்பத்தை நீக்கும்பொருட்டுத் திருச் செந்தூரில்வந்து வீற்றிருக்கும் சுப்பிரமணியசுவாமியானவர் நீங்காத அருளுடன்என்னைநோக்கியுன்னிடத்தில்சேர்ந்து பலமிகுந்த தேவர்களைப்பாவத்துக் கேதுவானசிறைவிடும் படிநினைத்துஇவ்வுலகத்தில் நீதிசெலுத்தி அரசாட்சிசெய் அவ்வாறன்றி இந்தக்காரியத்தைமறுத்தால் நீ யிறந்துவிடுவாயென்று அன்புடன் சொல்லும்படி அனுப்பினார்.—(எ-று)

என்றுகூறமிகுந்தசினத்தினே... ... ... ... ... ... *
டிறில்சூரனெனும்பெயர்பெற்றுளோன் ... ... *

பொழிப்புரை.

* டன்றவாணகையின்னுமுளைத்திடா ... ... ... ... ... *
மைந்தனேவிங்கெனக்கிதுசெப்புவா ... ... ... *
னன்றுநன்றிதும்பேதையனாதலா... ... ... ... ... ... *
னச்சுறுமொழிநச்சிவந்தோதினை ... ... ... ... *
யின்றுநின்னுயிர்தந்தனனேகுதி... ... ... ... ... ...*
யென்றியம்பலுமேந்தலியம்புவான் ... ... ... *

(இ-புரை.) வீரவாகுதேவர் இவ்வாறுசொல்லவே இறுதியில்லாதசூரனென்கிறபெயர்பெற்றுள்ளவன் மிகுந்தகோபத்துடன் ஒளிபொருந்தியபற்கள் இன்னுமுளைத்திடாதபாலகனே எனக்கிந்தப்புத்திசொல்லுகிறவன் இதுமிகவும்நன்று மிகவும்நன்று நீ அறிவீனனாதலால் விரும்பாதவார்த்தையை விரும்பிக்கேட்டுக்கொண்டு இங்கேவந்துசொல்லினை இப்போதுன் பிராணனையுனக்குநான் கொடுத்தேன் பிழைத்துப்போவென்றுசொல்லவே வீரவாகுதேவர்சொல்லுகின்றார்.—(எ-று.) (௩எ)

ஆதியாகப்பரம்பரனாகிய... ... ... ... ... ... ... *
வாறுமாமுகவண்ணலைப்பாலனென் ... ... ... *
றோதினையவன்மேன்மைகள்கேளென... .. ... ... ... *
வொப்பின்மேன்மையுரைத்திடவெய்யசூர் ... ... *
காதியங்கவன்மேன்மைகள்பின்னருங் ... ... ... ... *
கட்டுரைக்குதியென்றயலுன்றிய ... ... ... ... *
தாதுலாவுதொடைப்புயவாயிரந் ... ... ... ... ... *
தானவர்க்கிதுசாற்றுதன்மெயினான் ... ... ... *

(இ-புரை.) யாவைக்குமுதற்காரணமும் பரப்பிரமமு மாகிய ஆறுமுகக்கடவுளைப் பாலகனென்றுசொல்லினை அந்தக்கடவுளுடையமேன்மையைக்கேளென்று ஒப்பில்லாத அவருடையமேன்மைகளைச்சொன்னார் கொடுமையுள்ளசூரனானவன் அவர்சொன்னதைமறுத்து அந்தப்பாலகனுடையமேன்மைகளை மறுபடியும் என்னெதிரில் சொல்லுகிறையாவென்றுதன்னயலி லிருக்கிற மகரந்தம் பரவுகின்ற மாலையணிந்த புசமுள்ள ஆயிரம் அவுணர்களைநோக்கி யிந்தவார்த்தை சொல்லத்தொடங்கினான்.—(எ-று.) (௩அ)

ஒற்றனாகியடைந்தவிவன்றனை ... ... ... ... ... *
யூறுசெய்திடல்வீறலவாதலாற்... ... ... ... ......*

* டன்ற-என்னுமிடைச்சொல் தேற்றத்தின்கண்வந்தது

பற்றுமின்சிறையூடுபடுத்துமின் ... ... ... ... ... ... ... *
னென்றுபாவிபகர்ந்திடவாயிரந் ... ... ... ... *
துற்றதானவர்பற்றிடுவானயல் ... ... ... ... ... ... *
சூழவீரன்றுலங்கொருகையினு ... ... ... ... *
லுற்றவொன்னலர்சென்னிபிடித்துமண் ... ... ... ... *
மீதடித்திடவொல்லையிறந்தனர் ... ... ... ... *

(இ-புரை.) தூதனுகிவந்த இவனைக்கொல்லுதல் பெருமையன்று ஆதலால் இவனைப்பிடித்துக்கொண்டுபோய்ச் சிறைச்சாலையிற்போடுங்க ளென்றுபாவியாகியசூரன்சொன்னவுடன்நெருங்கியிருந்த அந்த ஆயிர ம்அவுணர்களும்அவரைப்பற்றும்படிஅருகில்வந்துசூழ்ந்தார்கள் வரவே வீரவாகுதேவர்பிரகாசிக்கும் தம்முடைய ஒருகையினுல்தன்னரு கில்வந் தபகைவராகிய அந்தஆயிரம் அவுணர்களுடையதலைகளையும் பிடித்துத் தூக்கிப்பூமியினிடத்தில் அடித்தார் அவர்கள் அப்போதேயிறந்தார்கள்.

எந்தைவேலுக்கினியினையாகுதி ... ... ... ... ... ... *
யீதுதிண்ணமிருந்திடுபோவனென் ... ... ... *
றுந்துசீருளவீரனகன்றிட ... ... ... ... ... ... ... *
வுற்றவாதனமொல்லையெழுந்துநீ ... ... ... ... *
ளந்தரத்தின்மறைந்துபடர்ந்ததா ... ... ... ... ... *
லந்தவேலையருந்திறல்கொண்டசூர் ... ... ... ... *
வெந்திறற்புனையுஞ்சததமாமுக ... ... ... ... ... ... *
வீரனேடுவிளம்புதன்மேயினுன் ... ... ... ... ... *

(இ-புரை.) அதன்பின்பு சூரன்முகத்தைப்பார்த்து எங்களிறைவ ன்வேலுக்கு இனியினையாவை இதுநிச்சயமானவார்த்தை நீயிருநான்போ கிறேனென்றுசொல்லி மேன்மையுள்ள சீர்பொருந்திய வீரவாகுதேவர் போய்விட்டார் அங்கிருந்தசிங்காதனமும் விரைவுடனெழுந்து பெரிய ஆகாயத்தில் மறைந்து போய்விட்டது அப்போது அரிய வெற்றிகொ ண்டசூரன் வெவ்விதானபலங்கொண்ட சததமுகன்என்னும் அவுணனுட ன்சொல்லுகிறுன்.—(எ-று.) (௬௰)

ஆதிமைந்தன்விடுத்திடுதூதனிங் ... ... ... ... ... *
காயிரத்தவையட்டகல்கின்றனன் ... ... ... ... ... *
காதுமன்னவுனுக்கெதிர்கிட்டிநீ ... ... ... ... ... *
கட்டிவாவென்றுகையனிசைத்தலு ... ... ... ... *

பொழிப்புரை.

நீதிகொன்றவிலக்கர்களோடுபோய் ... ... ... ... *
நில்லுநில்லெனவொல்லையியம்பியே ... ... ... ... *
போதும்வீரன்வெரிந்புடைகிட்டலும் ... ... ... ... *
பொங்குகோபம்புரிந்துதிரும்பினன்... ... ... ...*

(இ-புரை.) சிவனுடையபுத்திரன் ஏவிய தூதனுனவன் இங்கேவந்து ஆயிரம்பேரைக்கொன்றுவிட்டுப்போகின்றான் அப்படிக்கொத்தஅவனுக்குஎதிரில் நீபோய்த் தடுத்துப் பிடித்துக் கட்டிக்கொண்டு வாவென்றுவஞ்சகனுகியசூரன்சொல்லியவளவில் அந்தச்சதமுகனுனவன் நீதியையழித்தவர்களாகிய லக்ஷம் அவுணர்களுடன் விரைவினிற்சென்று நில்லுநில்லெனச்சொல்லிக்கொண்டு-செல்லுகின்றவீரவாகுதேவர் முதுகின்புறஞ்சமீபித்தவளவில்அவர்மிகுந்தகோபங்கொண்டுதிரும்பினுர்.எ-று.

செற்றமோடுதிரும்பியவீரனோர் ... ... ... ... ... *
சென்றிலக்கர்திருந்துகரங்களிற்... ... ... ... ...*
பற்றுபல்படைவிட்டிடமொய்ம்பன்மேற்... ... ... ... *
பட்டுநுண்டுகள்பட்டனவண்ணலங் ... ... ... ...*
குற்றருளிகையொன்றுபறித்துநே... ... ... ... ... *
ரொன்னலார்மிசையுந்தவிரைந்துபோ ... ... ......*
யற்றமற்றவிலக்கர்கலக்கமோ ... ... ... ... ... ... *
டாவிவிட்டிடவட்டதுகெட்டதே ... ... ... ... *

(இ-புரை.) கோபத்துடன்திரும்பிய வீரவாகுதேவருக்கெதிரில் சென்று லக்ஷம் அவுணர்களும்பழகித்தீர்மானமாகிய தங்கள்கைகளிற்பற்றிக்கொண்டிருக்கும்பலஆயுதங்களையும்விட்டேவிஞர்கள்அவைகள்வீரவாகுதேவர்மேல்பட்டு நுண்மையாகியதூள்களாய் விழுந்தது அப்போது வீரவாகுதேவர் அங்கிருந்த ஒருமண்டபத்தை அடியோடேயெடுத்துநேராக அந்தப்பகைவர்மேலெறிந்தார் அது விரைந்துசென்று சோர்வில்லாத அந்தலக்ஷம்பேர்களும்மனங்கலங்கி உயிர்போம்படிகொன்று அந்தமண்டபமும்நொறுங்கிவிட்டது.—(எ-று.) (சஉ)

நூறுகொண்டபெருந்தலைகொண்டவ ... ... ... ... *
னூபுரத்திடைவந்தவர்மைந்தருள் ... ... ... ...*
வீறுகொண்டவன்மீமிசைபல்படை... ... ... ... ... *
வீசவீரன்விளங்கொர்சிகரியை... ... ... ... ...*
மாறுகொண்டுபறித்துவிடுத்திட... ... ... ... *
வல்லையாயிரவாளிகவேவியே ... ... ... ...*

நீறுகண்டொருநூறுசரங் டா... ... ... ... ... *
னேரிலான்மிசைநீசனெய்தானரோ ... ... ... ...*

(இ-புரை.) பெரியநூறு தலையுள்ள சதமுகனென்னும் அவுணன் பார்வதிதேவியாருடைய பாதச்சிலம்பினின்று முதிர்ந்த நவரத்தினங்களினிடமாகத்தோன்றியஒன்பதுமாதர்களிடத்தினின்றும்உற்பவித்தவீரர்களுக்குள்பெருமைகொண்டவராகியவீரவாகுதேவர்மேல்பலபடை வீசினன் அவர்பகைகொண்டு விளங்குகின்றஒருகோபுரத்தை யெடுத்துவிட்டார் அவன்அதிகவிரைவுடன் ஆயிரம்பாணங்கள்விட்டு அந்தக்கோபுரத்தைப் பொடியாக்கிப் பின்னும் அந்தநீசனானவன் நிகரில்லாத வீரவாகுதேவர்மேல் நூறுஅம்புகளைப் பிரயோகஞ் செய்தான்.-(எ-று.) (சஙு)

விட்டவாளிகள்பட்டிடமொய்ம்பினன் ... ... ... ... *
வெய்யன்முன்னர்விரைந்துபடர்ந்துகைப் ... ... ...*
பட்டவில்லைப்பறித்துமுறித்திட ... ... ... ... ... *
பாவிநூறுகரங்கொடுபற்றலு ... ... ... ... ...*
மட்டில்வீரப்புயங்கொடுதள்ளியே... ... ... ... ... *
மார்பகத்தைமிதித்தொருதாளினு... ... ... ... ...*
லொட்டலன்றனிநூறுசிரத்தையு ... ... ... ... ... *
மொல்லைதள்ளியுயிர்கவர்ந்தானரோ ... ... ... ...*

(இ-புரை.) சதமுகனென்னும் அவுணன்விட்டபாணங்கள் தம்முடையசரீரத்தில் பட்டமாத்திரத்தில் வீரவாகுதேவரானவர் அந்தக்கொடியனெதிரில் விரைவாகச்சென்று அவன்கையிலிருக்கும் வில்லைப்பறித்து முறித்துவிட்டபர் அந்தப்பாவியானவன் தன்னுடைய நூறுகைகளால் சேர்த்துப் பிடித்தான் வீரவாகு தேவரானவர் அளவில்லாதவீரமுள்ள தம்முடையகையினாலடித்துத்தள்ளி மார்பின்மேலேறிமிதித்து ஒருகாலினால் அந்தப்பகைவனுடைய ஒப்பற்றநூறுதலைகளையும் விரைவுடன்தள்ளி அவன் உயிரைவாங்கினார்.—(எ-று.) (சச)

[வேறு.]

அட்டதுபின்ன ரரும்புகழ்வீரம் ... ... ... ... ... *
பட்டபுயங்கள் படைத்துளவள்ள... ... ... ... ... ...*
றுட்டர்வெருண்டு தொலைந்திடவங்கோர் ... ... ... ... *
நெட்டுருவுங்கொடு நின்றனனன்றே ... ... ... ... ...*

பொழிப்புரை.

(இ-ரை.) அவனைக்கொன்றபின்பு அரியபுகழும்வீரமும்பொருந்தியபுயங்களையுடைய வீரவாகுதேவரானவர் துஷ்டர்களாகிய அவுணர்கள்கண்டுபயந்து ஓடும்படி அங்கே ஒருபெரியவடிவங்கொண்டு நின்றார்.—(எ-று.) (௪௫)

தேவர்வணங்கு திறற்புயவீரன்... ... ... ... ... ... *
பூவடிவங்கொடு பூமிசைநிற்ப ... ... ... ... ... *
மேவியவைம்பது வெள்ளமதாகுங் ... ... ... ... ... *
காவலரன்னது கண்டுவெகுண்டார் ... ... ... ... ...*

(இ-ரை.) தேவர்கள்வணங்குகின்றபலம் பொருந்தியபுசங்களுள்ள வீரவாகுதேவர்பொலிவாகிய திருமேனிகொண்டுநின்றார் அவரப்படியிருப்பதை ஐம்பதுவெள்ளமாகப்பொருந்தியகாவல் வீரர்கள்கண்டு கோபங்கொண்டார்கள்.—(எ-று.) (௪௬)

வந்துவிரைந்து வளைந்துசினந்தே... ... ... ... ... ... *
பந்திபொருந்து படைக்கலமுந்துக ... ... ... ... ... *
கந்தன்விடுத்திடு காளைகறுத்தே ... ... ... ... ... ...*
யிந்தவியற்கை யியற்றுதலுற்றான் ... ... ... ... ...*

(இ-ரை.) அவ்வாறுகண்டவர்கள் விரைவாகவந்து கோபித்துவளைந்துகொண்டு பந்திபந்தியான ஆயுதங்களை எறிந்தவளவில் சுப்பிரமணியரால் அனுப்பப்பட்ட வீரவாகுதேவர் கோபித்து இந்தச்செய்கை செய்யத்தொடங்கினார்.—(எ-று) (௪௭)

அடித்துமுதைத்து மரற்றவெறிந்தும் ... ... ... ...*
பிடித்துடலங்கள் பிசைந்துபிழிந்தும்... ... ... ... *
வெடிக்குரலைம்பது வெள்ளமும்விள்ள ... ... ... ...*
முடித்தனன்மொய்ம்புள மொய்ம்புளவீரன் ... ... ... *

(இ-ரை.) பலம்பொருந்தியதோள்களுள்ள வீரவாகுதேவர் அடித்தும் உதைத்தும் அவர்கள் அழும்படிஎறிந்தும்உடல்களைப்பிடித்துப்பிசைந்துபிழிந்தும்இடிபோலக்கெர்ச்சிக்கும்குரலோசையையுடையஐம்பதுவெள்ளமான அவுணர்களையுமுடித்தார்.—(எ-று.) (௪௮)

அட்டவித்தற்பின ரங்கொருவேரந்... ... ... ... ...*
தொட்டறம்விட்டிடு சூரவைமன்றம்... ... ... ... ... *

பட்டிடவிட்டுழி பட்டதுபண்ணை ... ... ... ... ... ...*
லெட்டருமன்ற மிடிந்ததுமன்னே ... ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறு கொன்றபின்பு அங்கிருக்கும் ஒருவேரத்தை அடியோடேயெடுத்துத் தருமநெறியைவிட்டிருக்குஞ் சூரனுடைய சபையானது அழியும்படி எறிந்தார் எறிந்தபோது போயந்தச்சபையின்மேல் விழுந்ததுவிழுந்தவளவில் பார்வையினலெட்டகூடாத அந்தச்சபையானது இடிந்தது.—(எ-று.) (௪௯)

தீயவர்பண்ணை செறிந்திடுமன்ற ..... .. ... ... ... *
மாய்வதுகண்டு வயம்பெறுசூர ... ... ... ... ... ...*
னாயிரமொய்ம்புள வாயிரர்கம்மைத்... ... ... ... ... *
தூயவனோடமர் துன்றவிடுத்தான ... ... ... ... ...*

(இ-புரை.) பொல்லாதவர்களாகிய அவுணர்கூட்டம் நெருங்கியிருக்குமண்டபம் இடிந்ததைக்கண்டு வெற்றிபெற்றசூரனானவன் ஆயிரம்புயங்களுள்ள ஆயிரம் அவுணர்களை வீரவாகுதேவருடன் போர்செய்யும்படி அனுப்பினான்.—(எ-று.) (௫௰)

உந்திடுமாயிர வொட்டலர்கிட்ட... ... ... ... ... *
வந்திடுமுன்னர் வயம்புனைவாகு .. .. ... ... ... ...*
சுந்தரமேவிய சூரனதூரை... ... .. ... ... ... *
யந்தரமாகவழித்திடலுற்றான் ... ... ... ... ... ...*

(இ-புரை.) சூரனால் அனுப்பப்பட்ட ஆயிரம்பகைவர்களும் சேரவருதற்குமுன் வெற்றிபொருந்திய வீரவாகுதேவர் அலங்காரமுள்ளதாகிய சூரன் ஊரை வெளியாகும்படி அழிக்கத்தொடங்கினார்.—(எ-று.)

மண்டபகோபுரம் வாரியெறிந்தும்... ... ... ... ... *
விண்டுமதிற்றிரள் வீழவுதைத்தும் ... ... ... ... ...*
வண்டுறுதண்டலை வலலைபிடுங்கி... ... ... ... ... *
யெண்டிசையின்கணு மேகவெறிந்தும்... ... ... ... ...*

(இ-புரை.) மண்டபங்களையுங் கோபுரங்களையும் வாரியெறிந்து மதிலானவைகள் இடிந்துவிழும்படி யுதைத்தும் வண்டுகள்பொருந்தியசோலைகளைச் சீக்கிரமாகப் பிடுங்கி அஷ்டதிசைகளினும்போய்விழும்படியெறிந்தும்.—(எ-று.) (௫௨)

பொழிப்புரை.

அங்கிவையாதி யனேகவிதத்தாற் .. ... ... ... ... ...*
பொங்குவளங்கொள் புரத்தினையழித்தே ... ... ... ... *
துங்கவிறற்பெறு தூயவனிற்ப... ... ... ... ... ...*
வெங்குணவாயிர வீரர்தெரிந்தார்... ... ... ... ... *

(இ-பொ.) அவ்விடத்தில் இவைமுதலாக அநேகவிதத்தால் மிகுந்தவளப்பங்கொண்ட சூரனூரை அழித்துப்பெருமைபொருந்திய வெற்றியுள்ள வீரவாகுதேவர் நிற்கும்போது கெட்டகுணமுள்ள ஆயிரம்வீரர்களும்பார்த்தார்கள். —(எ-று.) (௫௩)

தீங்கினர்கண்டு சினந்துவளைந்தே ... ... ... ... ...*
பாங்குறுமெண்ணில படைக்கலமுய்ப்ப... ... ... ... *
வோங்குமராமர மொன்றுபறித்தே ... ... ... ... ...*
யாங்கவர்தம்மை யடித்துமுடித்தான் ... ... .. ... *

(இ-பொ.) பொல்லாங்குள்ள அவுணர்கள் கண்டுகோபித்து வளைந்து போருக்குரிமைபெற்றிருக்கும் அளவில்லாதஆயுதங்களை யெறிந்தார்கள். வீரவாகுதேவர் உயர்ந்த ஒருபெரியமராமரத்தைப் பறித்துக்கொண்டு அதனாலவர்களையடித்து முடித்தார். -(எ-று.) (௫௪)

பாதகராயிரர் பட்டதுகண்டே ... ... ... ... ... *
தூதுவரோடிபு சூரனொடோத... ... ... ... ... ... *
காதியிருப்பவோர் காதலனான ... ... ... ... ... *
மாதிறல்வச்சிர வாகுவெழுந்தான் ... ... ... ... ...*

(இ-பொ.) பாதகர்களாகிய அந்த ஆயிரம்பேரும் இறந்ததைக் கண்டு தூதர்களோடிச் சூரனுடன் சொன்னார்கள் அதைக்கேட்டு அவன் கோபங்கொண்டிருக்கும்போது அவனுடைய ஒருபுத்திரனை மிகுந்த பலமுள்ள வச்சிரவாகு என்பவன் எழுந்தான்.—(எ-று.) (௫௫)

பற்றுறுதந்தை பதங்கள்பணிந்தே ... ... ... ... ...*
வொற்றனைவென்றிவணுற்றிடுகின்றேன் ... ... ... ... *
மற்றெனையேவுதி வல்லையிலென்ன ... ... ... ... ...*
வற்றமில்சூரன் விடுத்தனனன்றே ... ... ... ... ... *

(இ-பொ.) ஆசைமிகுந்த தன்தகப்பனுடைய பாதங்களைப் பணிந்து தூதனைவென்று இங்கேவருகின்றேன்- இப்போதேயென்னை அனுப்

பென்று சொன்னவளவில்- சோர்வில்லாத சூரனுனவன் உத்தரவுகொடுத் து அனுப்பினான்.—(எ-று.) (௬௬)

தந்தையிருந்திடுசங்கமகன்றே ... ... ... ... ... ...*
யுந்தியதன்மனையூடுபுகுந்தே... ... ... ... ... ... *
யந்தமிலாதவடற்படைகொண்டே ... .. ... .. ...*
சிந்தைமகிழ்ந்தொருதேர்மிசையுற்றான்... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறு உத்தரவுபெற்றுக்கொண்டு வச்சிரவாகுதன்த கப்பனிருக்குஞ் சபையைவிட்டுநீங்கி உயர்வாகியதன் வீட்டுக்குள்போய் முடிவுபெறாதபலம்பொருந்திய ஆயுதங்களெடுத்துக்கொண்டு மனமகிழ்ந்து ஒருதேரின்மேலேறினான்.—(எ-று.) (௬௭)

[வேறு.]

தேரைஞ்ஞூறுவெள்ளமதாகுந்திறல்யானை ... ... ... ... *
யோரைஞ்ஞூறுவெள்ளமதாகுமுயர்மாக்க ... ... ... *
ளீரைஞ்ஞூறுவெள்ளமதாகுமெழிஞன்கு... ... ... ... *
பேரைஞ்ஞூறுவெள்ளமதாகும்பிறசேனை ... ... ... *

(இ-புரை.) ஐந்நூறுவெள்ளம் தேர்கள் ஐந்நூறு வெள்ளம் பலம்பொருந்தியயானைகள் ஆயிரம் வெள்ளம் உயர்ந்தகுதிரைகள் இரண்டாயிரம்வெள்ளம் அழகுள்ளகாலாள்கள்.—(எ-று.) (௬௮)

இவ்வாறுகுஞ்சேனைகளோடங்கிருமைப்போர் ... ... ... *
செய்வானுன்னித்தன்னிகராம்வச்சிரவாகு ... ... ... ...*
மைவ்வாழ்கண்டத்தண்டர்பிரானார்மகனேவுஞ் ... ... ... *
செவ்வான்மேனித்தூயவனேரோசென்றானல் ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுகூடிய சேனைகளுடன் அவ்விடத்திற்சென்று பெரும் போர்செய்யநினைத்துத்தனக்குத்தானே யொப்பாகியவச்சிரவாகுகருமைநிறம் பொருந்தியகண்டத்தையுடையதேவர்பெருமானாகியபரமசிவன் புத்திரராகிய சுப்பிரமணியக்கடவுளே வியசெவ்வானம் போன்றதிருமேனியுள்ள பரிசுத்தமுள்ளவீரவாகுதேவரெதிர் சென்றான்-எ-று.

செற்றாராகுந்தானவர்ஞானத்திறலோனைச் ... ... ... ... *
சுற்றாநின்றுபடைக்கலமுந்தத்துகளில்லோன்... ... ... *

பொழிப்புரை.

குற்றுநின்றுமுதைத்துமெறிந்துங்கோபத்தோ ... ... ...*
டெற்றிநின்றுங்கொன்றனனம்மாவிறைதன்னில் ... ... *

(இ-புரை.) பகைவராகியஅவுணர்கள் ஞானசொரூபராகியவீரவாகுதேவரைச் சூழ்ந்துகொண்டு ஆயுதங்களேவினுர்கள் குற்றமில்லாதவீரவாகுதேவர் அவர்களைக்குற்றியும்உதைத்தும் எடுத்தெறிந்தும் கோபத்துடன்அடித்தும் க்ஷணப்பொழுதிற்கொன்றார்.—(எ-று.) (சுய)

[வேறு.]

வேறுமனேகவிதத்தாற்... ... ... ... ... ... ... *
சீறியெதிர்ந்திடுசேனை ... ... ... ... ... ... ...*
யூறுபொருந்திடவூழிச்... ... ... ... ... ... ... *
சூறைபுரிந்துதொலைத்தான் ... ... ... ... ... ...*

(இபு-ரை.) இவ்வாறுகொன்றது மல்லாமல் இன்னம்வேறுவிதத்தினுல் கோபித்தெதிர்ந்தசேனைகள் அழியும்படி ஊழிகாலத்திலுண்டாகும்சூறைக்காற்றினைப்போல் மோதித்தொலைத்தார்.—(எ-று.) (சுக)

அங்கணிறந்தவரல்லால் ... ... ... ... ... ... ... *
வெங்கணமாகியவெய்யோர்... ... ... ... ... ... *
தங்கண்மனங்கடளர்ந்தே... ... ... ... ... ... ... *
யெங்கணுமாகியிரிந்தார் ... ... ... ... ... ... *

(இ-புரை.) அவ்விடத்திலிறந்தவர்கள்போக உயிரோடிருந்தபொல்லாதகூட்டமாகிய அவுணர்கள் மனந்தளர்ந்து யெவ்விடத்திலுமாக ஓடிப்போனுர்கள்.—(எ-று.) (சுஉ)

மாதிறல்வச்சிரவாகு ... ... ... ... ... ... ... *
வீதுதெரிந்தடலேந்தன் ... ... ... ... ... ... *
மீதுறவாயிரவெங்கோ... ... ... ... ... ... ... *
தூதையெனச்செலவுய்த்தான் ... ... ... ... ... ... *

(இ-புரை.) மிகுந்தபலமுள்ள வச்சிரவாகு இதைத்தெரிந்துபலம்பொருந்திய பெருமையிற்சிறந்தவராகிய வீரவாகுதேவர்மேல் பொருந்தத்தக்கதாகக்குரூரமாகிய ஆயிரம்பாணங்களைக் காற்றுசெல்வதுபோற்செல்லும்படி ஏவினுன்.—(எ-று.) (சுங)

வந்தசரங்களைவல்லே... ... ... ... ... ... ... ...*
யுந்துகரங்கொடொடித்தே ... ... ... ... ... ... *
சிந்தினனின்றுழிதீயோ ... ... ... ... ... ... *
னிந்தவியற்கையியற்றும் ... ... ... ... ... ... *

(இ-புரை.) தமக்குநேராகவந்தபாணங்களை அதிகவிரைவுடன் தம்மு டைய உயர்வாகியகையினலொடித்து எறிந்துவிட்டுநின்றபோது அந்த க்கொடியவன் இவ்வாறுசெய்கிறன்.—(எ-று.) (௬௪)

வெம்பதினுயிரவெய்ய ... ... ... ... ... ... ...*
வம்புவிடக்குகனன்பார் ... ... ... ... ... ... *
தம்பியெழுக்கொடுதாக்கி... ... ... ... ... ... ...*
மொய்ம்பொடுசிந்தமுறித்தான் ... ... ... ... ... *

(இ-புரை.) பின்னும் அவன் அதிககூர்மையானபதினுயிரம் பாண ங்கள் பிரயோகஞ்செய்தான் சுப்பிரமணியசுவாமியினுடைய திருவருள் பூரணமாகப்பெற்றிருக்கும் தம்பியாகிய வீரவாகுதேவரானவர் தெரிந் து ஒரு எழுத்தடியெடுத்துக்கொண்டுபலமாகஅடித்துச்சிந்திப்போகு ம்படிஅவைகளையெல்லாம்நொறுக்கினர்.—(எ-று.) (௬௫)

[வேறு.]

முறித்தபின்னையிருமெய்ச்சிர வச்சிரமொய்ம்புள்ளோன் ... *
மறித்துமரும்பதினுயிரவாளிமனத்தூடே ... ... ... *
கறுத்துவிடுத்துமிகுத்தவெழுத்துகள்கண்டேபின் ... ...*
றெறித்தனனேந்தெனுமாயிரவாளிகள்செய்யோன்மேல் ... *

(இ-புரை.) வீரவாகுதேவர் தான்விட்டபாணங்களை முறித்தபின்பு உத்தமாங்கமாகிய பத்துத்தலைகளுள்ளவச்சிரவாகு மனதில்கோபங்கொ ண்டுமறுபடியும் அருமையான பதினுயிரம் பாணங்கள்விட்டு வீரவாகு தேவர்கையிலிருந்த எழுத்தடியைத்தூளாக்கிப் பின்னும் ஐயாயிரம்பா ணங்களெடுத்து வீரவாகுதேவர்மேலேவினன்.—(எ-று.) (௬௬)

பட்டுழியோரிறைநொந்துவிரைந்துபடர்ந்தன்று ... ... *
னெட்டிரதத்தையுதைத்திடவேறொருதேர்மே ... ... ...*
லொட்டலனுற்றதியவ்விரதத்தைமொண்கையர ... ... *
லெட்டியெடுத்துவிசும்பிடைபோகவெறிந்தானல்... ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) அவன்விட்டபாணங்கள் தம்முடையசரீரத்தின்மேல்ப ட்டபோது வீரவாகுதேவர் ஒருக்ஷணப்பொழுதுவருந்தி யுடனேசென் று அவனுடையபெரியதேரை உதைத்து அழித்தார் பகைவனாகியவச்சிர வாகுவேறே ஒரு பெரியதேரின்மேலேறினபோது அந்தத்தேரையும் ஒ ளிபொருந்திய தம்முடைய கையாலெட்டியெடுத்து ஆகாயத்தில்போகு ம்படியெறிந்தார்.—(எ-று.) (௬௭)

தேரொடுவானிலிலக்கமியோசனைசென்றேபின் ... ... ... *
பாரில்விழுந்தொளிர்வாளதுகொண்டுபகைத்தோர்தம் ... ...*
மாருயிருண்டிடுவீரனைநேரவவன்றானுஞ் ... ... ... *
சீரியவாள்கொடெறிந்துசிரங்கள்சிதைத்தானால் ... ... ...*

(இ-புரை.) வச்சிரவாகுதேருடன் லக்ஷம்யோசனை தூரமேலேபோ ய்ப் பின்பு பூமியில்விழுந்து பிரகாசியாநின்ற வாளையுருவிக்கொண்டுப கைத்தவர்களுடைய அரிய உயிரைக்கொல்லுகின்ற வீரவாகுதேவனையெ திர்த்தான் உடனே அவர்தம்முடையசிறப்புள்ளவாளினால் வச்சிரவாகுவி னுடைய பத்துத்தலைகளையும் அறுத்துத்தள்ளினார்.—(எ-று.) (௬௮)

அங்கவனாருயிர்கொன்றவணின்றுழியாகாய ... ... ... *
வெங்கதிரோனுமறைந்தனன்மாலையுமேவிற்றாற் ... ... ...*
சங்கரன்மாமகனட்பதியெல்லைதணந்தேபின் ... ... ... *
மங்குல்விசும்புவழிக்கொடிலங்கையில்வந்தானே ... ... *

(இ-புரை.) வச்சிரவாகுவினுடைய அரிய உயிரைக்கொன்று வீர வாகுதேவர் நிற்கும்போது ஆகாயத்தில்செல்லுகின்ற வெப்பமுள்ள சூ ரியனுமறைந்தான் மாலைப்பொழுதும்வியாபித்தது அதற்குமேல் பரம சிவனுடைய பெருமைபொருந்திய புத்திரராகியவீரவாகுதேவர் அந்த மகேந்திர நகரத்தைநீங்கிப்பின்பு மேகந்தவழும்படியான ஆகாயமார்க் கமாகச்சென்று அந்தநகரத்துக்கு அருகாகவடபக்கத்திலிருக்கும் இலங் கையிற்சேர்ந்தார்.—(எ-று.) (௬௯)

சமுத்திரம் அல்லது ஆறு இவைகளின்மத்தியிலிருக்கிறதிட்டுக்கு இலங் கையென்றுபெயர்.

அண்டர்வெருண்டிடுமாளிமுகத்தவனப்போதிற் ... ... *
கண்டனனின்றவருண்மகனாவிகளுத்தேமுன்... ... ... ...*

னாண்டவனிங்கிவனுமெனவோதவுருத்தேகி ... ... ... *
மண்டுதிறற்பெறுசேனைகளோடிவ்வளைந்தானால் ... ... ... *

(இ-புரை.) தேவர்களும் அஞ்சும்படியான ஆளிமுகன் வீரவாகு தேவரைப் பார்த்தபோது அங்கிருந்தவர்கள் - முன்னே கோபங்கொண்டு உன்மகனுயிரையுண்டவன் இவனுகுமென்று சொன்னார்கள் - அதைக்கேட்டுக்கோபித்துச்சென்றுமிகுந்தபலம்பொருந்தியதன்னுடையசேனைகளுடன் வீரவாகு தேவரைவளைந்துகொண்டான்.—(எ-று.) (எ௰)

வீரரில்வீரன்வெகுண்டுறைவாளுருவிச்சென்றே... ... ... *
யாரவுணப்படைமுற்றுமுலாவியடும்போதிற்... ... ... *
பாரமுறுமுயிரவாளிமுகங்கள்படைத்துள்ளா... ... ... ... *
னேருறவேகியடித்தனனுயிரநீள்கையால்... ... ... ... *

(இ-புரை.) வீரரில் வீரராகிய வீரவாகுதேவர்கோபித்து உறையிலிருந்தவாளையுருவிக்கொண்டு நிறைந்துவந்திருக்கிற அவுணப்படைகளையெல்லாம் உலாவிஉலாவிக்கொல்லும்போது சுமைபோலப்பருத்திருக்கும் ஆயிரம்பாளிமுகமுள்ளவன் அவருக்கெதிரில்சென்று தன்னுடையநீண்டஆயிரங்கையினால் அடித்தான்.—(எ-று.) (எக)

அடித்தகரங்களையங்கொருபாணிகொடட்போதிற்... ... ... *
பிடித்தவனுந்துகரங்கள்சிரங்கள்பெயர்ந்தோடித் ... ... *
துடித்திடவாள்கொடுவீசியடற்புனைதோள்வீரன் ... ... ... *
வடித்தனிவேலனமர்ந்திடுசெந்திலில்வந்தானே... ... ... *

(இ-புரை.) அடித்தகைகளைஅப்போதேபலமுடையதமதுஒருகையினால்சேரப்பிடித்துக்கொண்டுஅவனுடையநீண்டகைகளும்தலைகளும்நீங்கியோடித்துடிக்கும்படிவாளால்வீசிப்பலங்கொண்டதோள்களுள்ளவீரவாகுதேவர் ஒப்பற்றகூர்மையுள்ள வேலையுடைய சுப்பிரமணியசுவாமியானவர்வீற்றிராநின்றதிருச்செந்தூரில்வந்துசேர்ந்தார்.—(எ-று.)(எ௨)

கந்தனிருந்திடுகோயில்புகுந்துகளிப்போடு... ... ... ... *
மந்தமிலன்பொடுமுன்புவணங்கியணித்தாய்நின் ... ... *
றுந்தியசூரனதெண்ணமுமேனையவுங்கூறி... ... ... ... *
யிந்திரனேடிசயந்தனிருப்புமிசைத்துற்றான் ... ... ... *

(இ-புரை.) சுப்பிரமணியசுவாமி வீற்றிராநின்றகோயிலுக்குள் களிப்புடன்போய் முடிவில்லாத அன்புடன் சுவாமி சந்நிதியில்வணங்கிச்

சமீபமாகநின்று உயர்வுள்ளசூரனுடைய எண்ணமும் தாம் அவனுடன் சொன்னதுகளையுஞ் சொல்லிப் பின்பு இந்திரனைக்கண்டுசயந்தனிருக்கு ம்நிலைமையுஞ்சொன்னார்.—(எ-று.) (௭௩)

மற்றிதுநின்றிடவச்சிரவாகுமடிந்தானென் ... ... ... ... *
ஞற்றர்கள்சொற்றுழிவெற்றிகொள்சூரெனவுற்றுள்ளோன்... *
சற்றலவீறிடர்கொண்டொருமந்திரிதானேது... ... ... *
மற்றமில்புந்தியினாலிடர்சிந்தியமர்ந்தானால்... ... ... ...*

(இ-புரை.) இதுவரையிற்சொல்லிவந்த சரித்திரம்நிற்க வச்சிரவாகு இறந்தானென்று தூதர்கள்சொன்னபோது சூரனென்று சொல்லப்பட்டிருப்பவன்கொஞ்சமல்லமிகுந்த துன்பங்கொண்டு ஒருமந்திரிசொல்லியசோர்வில்லாதபுத்தியினால் துன்பம்நீங்கியிருந்தான்.—(எ-று.) ()

அங்கதுபோதினிலப்புறவண்டமதிற்சேருஞ் ... ... ... *
செங்மலத்தயனைக்கொணர்வித்தடல்சேர்சூரன் ..... ... ...*
மங்கியதன்பதிமுன்பினிலங்கவகுப்பித்தே ... ... ... *
துங்கவிரிஞ்சனகன்றிடவன்பொடுசொற்றானால்... ... ...*

(இ-புரை.) அப்போதில்பலம்பொருந்திய சூரன் அப்புற அண்டத்தில் செந்தாமரைமலர்ப்பீடத்தில் வீற்றிருக்கும் பிரமதேவனை அழைப்பித்து அவனைக்கொண்டு அழிந்துபோனதன்னுடையநகரம்முன்புபோலப் பிரகாசித்துக்கொண்டிருக்கும்படிச் செய்வித்துப் பின்பு பரிசுத்தமுள்ளபிரமதேவனைப் போகும்படிசொன்னான்.—(எ-று.) (௭௫)

அன்னதுகாலையின்முன்னர்விடுத்தவடற்றூதர் ... ... ...*
மன்னியசெந்திலிலவந்தரன்மைந்தன்மருங்குள்ள ... ... *
கொன்னுறும்சேனைவினாவியகன்றுகொடுஞ்சூரன் ... ... ...*
றன்னையடைந்துபதங்கள்பணிந்திதனைச்சொல்வார் ... ......*

(இ-புரை.) முன்னே அனுப்பப்பட்டபலம்பொருந்தியதூதர்கள் நிலைபெற்றதாகிய திருச்செந்தூரில் சேர்ந்துபரமசிவனுடையபுத்திரராகிய சுப்பிரமணியக்கடவுள் அருகிலிருக்கும் அச்சந்தருவதாகப் பொருந்தியசேனையின்தொகையிவ்வளவென்றுவினாவிஅறிந்துகொண்டுசென்று சூரனிடத்தில்சேர்ந்து அவன்பாதங்களைப்பணிந்து இந்தவார்த்தைசொல்லுகின்றார்கள்.—(எ-று.) (௭௬)

அற்றபுகற்றவிராயிரவெள்ளமடற்பூதர் ... ... ... ...*
மற்றவர்மன்னவர் நூறுடனெண்மர்வரைத்திண்டோட் ... ... *
கொற்றவிலக்கமொடொன்பதுவீரர்சூழத்தோடும் ... ... ...*
வெற்றிதருங்கதிர்வேலவன்ஞாலமிசைச்சேர்ந்தான் ... ... *

(இ-புரை.) சோர்வில்லாக பலம்பொருந்திய பூதர்கள் இரண்டாயிரம்வெள்ளம் அவர்களுக்கு இராஜாக்களாயிருப்பவர்கள் நூற்றெட்டுப்பேர் மலைபோலக் குவிந்துயர்ந்து பலம்பொருந்திய புஜங்களுள்ளவீரர்கள்லக்ஷத்தொன்பதுபேர் என்கிற இந்தக்கூட்டத்துடன்செயந்தரத்தக்க ஒளிபொருந்திய வேலாயுதமுடைய சுப்பிரமணியர் பூலோகத்தில் வந்தார்.—(எ-று.) (எஎ)

அங்குருதாருகனெண்கிரவுஞ்சவடற்குன்ற ... ... ... *
மங்குறவெவ்வகமெறிந்துயர்செந்திலில்வந்தோரொற் ... ...*
றிங்குவிடுப்பவிலங்கையழித்திவணெய்துற்றே .. ... ... *
பங்கமில்யாளிமுகன்றலைகொண்டுபடர்ந்தானல் ... ... ...*

(இபுரை.) அவ்விடத்திலிருக்கும் தாருகனும் ஒளியும் பலமுமுள்ளகிரவுஞ்சகிரியும் அழியும்படிவேலாயுதத்தையேவிஅவ்விடம்விட்டுத்திருச்செந்தூரில்வந்து ஒருதூதனையிவ்விடத்துக்கு அனுப்பினார் அந்தத்தூதன் இலங்கையை அழித்து இங்கேவந்துசேர்ந்துமறுபடிதிரும்பிப்போம்போது பழுதில்லாத யாளிமுகன் தலையையுருட்டிப் போய்விட்டான்.—(எ-று.) (எஅ)

தெண்டிரைவாவிநம்மாநகரூடுறெறற்கந்தன் ... ... ...*
மண்டணிகத்தொடுவந்தமர்செய்யமனந்தன்னிற் ... ... ... *
கொண்டனனின்னதுமெய்ப்பெனவெய்யகொடுஞ்சூர ... ...*
ஞெண்டிறல்சேர்தமராக்கொணர்வித்துரைசெய்கின்றான் ... *

(இ-புரை.) பலம்பொருந்தியசுப்பிரமணியர் சூழ்ந்திருக்குஞ் சேனையுடன் சமுத்திரத்தைத்தாண்டி நம்முடையநகருக்குள்வந்துபோர்செய்யும்படிமனதில் எண்ணங்கொண்டிருக்கிறார் இதுமெய்யான சேதியென்றுசொன்னார்கள்அதைக்கேட்டுப்பொல்லாதசூரன்மந்திராலோசனைசெய்வதற்காக எங்கும்விளங்குவதாகிய பலமுள்ளதன்சுற்றத்தாரை அழைப்பித்துச்சொல்லுகின்றான்.—(எ-று.) (எகூ)

**அரசருக்குச் சுற்றத்தாரா யிருப்பவர்கள் மந்திரிகள் படைத்தலைவர்பந்துகள் முதலாகியசிலர்.**

[வேறு.]

வானோர்தமைச்சிறையில்வைத்தசெயல்வானோ... ... ... *
ரானோர்தமக்கிறைவனுதியுடனேதக் ... ... ... ... ...*
கோனோர்விறற்பெறுகுமாரனையளித்தெம் ... ... ... *
மேனேவுசெய்திடவிடுத்தருளினுனல்... ... ... ... ...*

(இ-புரை.) தேவர்களைச்சிறையில்வைத்தசெய்கையைத்தேவேந்திரன் பரமசிவனிடத்திற்சென்று முறையிட்டான் அந்த இறைவன் ஒருபுத்திரனை அளித்து நம்முடைய எதிரில்வந்து யுத்தஞ்செய்யும்படி விடுத்தருளினார்.—(எ-று.) (அய)

இன்பாரரன்சுதனிராயிரவெள்ளஞ்சே ... ... ... ... *
ரன்பானபூதருமலக்கணிலிலக்கத் ... ... ... ... ...*
தொன்பானெனப்படுமுரங்கொளிளையோருந்... ... ... *
தன்பால்வரக்கடிதுதாரணியில்வந்தான்... ... ... ... ...*

(இ-புரை.) இன்பம்நிறைந்தபரமசிவன் புத்திரன் இரண்டாயிரம் வெள்ளமாகச்சேர்ந்த அன்புள்ளபூதர்களும் துன்பமில்லாதபலம்பொருந்திய லக்ஷத்தொன்பது தம்பிமார்களும் தன்புடைசூழ்ந்துவரக்கடிதினிற் பூலோகத்தில்வந்தான்.—(எ-று.) (அக)

வீறுனதாருகனைவெற்பொடுதடிந்தே ... ... ... ... *
மாறுதசெந்தினகர்வந்ததிலிருந்தே ... ... ... ... ...*
யாறூர்முடிப்பரனளித்தகுகனம்பா... ... ... ... ... *
லூறுனதற்றிடுமொரொற்றனைவிடுத்தான் ... ... ... ...*

(இ-புரை.) நதிபொருந்திய திருமுடியையுடைய பரமசிவன்பெற்ற சுப்பிரமணியன் பூலோகத்தில்வந்து பெருமைபொருந்திய தாருகனையுங்கிரவுஞ்சகிரியையுங்கொன்று மாறுபடாத திருச்செந்தூரில்வந்து அதிலிருந்துகொண்டு நம்மிடத்துக்கு ஒருவராலும் அழிவுபடாத ஒருதூதனை அனுப்பினான்.—(எ-று.) (அஉ)

அன்னனிலங்கையையழித்திவணடைந்தென்... ... ... ...*
முன்னுவிருந்தெனைமுனிந்தேயிகழ்ந்தே... ... ... ... *
கொன்னுறுமென்புதல்வர்த்தேயிளஞ்சேய்... ... ... ...*
தன்னுவிகொண்டுறுசயத்தினெடுசென்றான் ... ... ... *

(இ-புரை.) அந்தத்தூதன் இவ்விடத்தில்வந்து இலங்கையையழித்து என்னெதிரிலிருந்துகொண்டு என்னைக்கோபித்தும் இகழ்ந்தும்பெ சிப்பெருமைபொருந்திய என்னுடையநகரத்தையும்அழித்து என்னிளையகுமாரனாகிய வச்சிரவாகுவின் உயிரையும்வாங்கிக்கொண்டுமிருந்தவென்றியுடன்சென்றான்.—(எ-று). (அ௩)

நந்தம்பெரும்பதியினுளையரனல்கு ... ... ... ... ...*
மைந்தன்செருப்புரியவந்திடுவனென்றே... ... ... ... *
மூந்துந்துதூதுவர்மொழிந்தனர்களென்று... ... .... ...*
வுந்துஞ்செருச்செயவுசாவினனிசாவில் ... ... ... ... *

(இ-புரை.) சிவன்பெற்றபுத்திரன் நாளையதினஞ்சண்டைசெய்ய நம்முடையபெரியநகரத்துக்கு வருவானென்று முன் அனுப்பியதூதர்கள்வந்துசொல்லினார்களென்று மந்திரிகள்முதலானவர்களுக்குச் சொல்லி ஆயுதங்களையெவ்வப்படி போர்செய்வதைக்குறித்து அவர்களுடன் ஆலோசித்தான் இந்தஆலோசனை இராத்திரிகாலத்தில்என்றுணர்க. (எ-று.)

அப்போதுபற்பலரனேகவிதமோதக் ... ... ... ... ...*
கைப்போதமைத்தரிகலந்ததவிசின்கண் ... ... ... ... *
டுப்போடிருந்ததொருசூரன்முகநேரோ ... ... ... ...*
மெய்ப்போடுசிங்கமுகவீரனிதுசொல்வான் ... ... ... *

(இ-புரை.) சூரனிவ்வாறுஆலோசனைசெய்யும்போதுஅநேகம்பேர் தங்கள் தங்கள் மனதுக்குத்தோன்றினதைப்பலபலவிதமாகச்சொன்னார்கள் சிங்கமுகாசுரன் அவர்களையெல்லாம் பொறுங்களென்றுகையமைத்துச்சிங்கங்களாற்சுமக்கப்பட்ட ஆசனத்தின் மேல்மேன்மையுடனிருக்குஞ்சூரன்முகத்தைநேரோபார்த்து உண்மையாக இந்தவார்த்தைசொல்லுகிறான்.—(எ-று.) (அ௪)

விரைத்தார்மிடைந்திடுவியன்புயவமைச்ச ... ... ... *
ரிரைத்தாடலெய்திடுமிலங்கனிகமன்னர்... ... ... ... ...*
வரைத்தாசின்மைந்தர்கடமக்கியலும்வன்மை ... ... ... *
யுரைத்தாரோர்புந்தியுமுரைத்திலருனக்கே... ... ... ...*

(இ-புரை.) வாசனைபொருந்தியபூமாலைதங்கியிருக்கும் பெரியபுயங்களுள்ள மந்திரிகளும் ஆரவாரித்துக்கொண்டு போர்செய்யும் வில்க்கமுள்ளசேனைக்காவலர்களும் ஆகிய இவர்களும்பழுதில்லாதபுத்திரர்களு

ம் தங்களுக்குப்பொருந்திய பராக்கிரமங்களைவரைந்து சொல்லுவார்களே யல்லது உனக்கொருபுத்தியுஞ்சொல்லினார்களிலர்.—(எ-று.) (அசு)
வரைந்து-எனற்பாலது-விகாரவகையால் வரைத்து என நின்றது.

கொன்னார்புகழ்க்குலவுகொற்றவர்செவிக்கே ... ... ... *
மின்னாரழற்கணைவிடுப்பதுகடுப்ப ... ... ... ... ...*
வென்னாளுநன்னிலைமையென்னுமதுகன்னைச் ... ... ... *
சொன்னாரமைச்சர்களெனும்பெயர்கொடுயோர்... ... ...*

(இ-புரை.) பெருமை நிறைந்த புகழ் விளங்கும் அரசர்செவிகளுக்கு ஒளிபொருந்திய அக்கினிமயமாகிய பாணங்களை நுழைப்பதுக் கொப்பாக எப்போதும் நல்லநிலைமையான வார்த்தைகளைச்சொன்னவர்களே மந்திரிகளென்று சொல்லும்பெயருள்ள தூயோராவர்.—(எ-று.) நன்மையைச்சொல்லுமிடத்து - அரசன்காதுக்குப் பாணத்தை நுழைப்பதுபோலிருப்பதென்னையெனின் அரசன் - ஒருகாலத்தில்நீதிக்குமாறானசெய்கையைக்கருதுவனாயின்அப்போது மந்திரிசொல்லும் நீதியான வார்த்தை அவ்வரசன்காதுக்குக் கொடுமையா யிருக்குமென்றுணர்க.

வாலுற்றதண்புனல்வயங்கியபயம்பின்... ... ... ... ...*
பாலுற்றுலாமயிலைபற்றுமிகுமுண்டி ... ... ... ... *
போலுற்றநுண்பொருள்புரிந்துபடுமாபோன் ... ... ...*
மேலுற்றிடுஞ்செயல்விழைவுகிலையந்தோ... ... ... ... *

(இ-புரை.) பரிசுத்தம்பொருந்திக்குளிர்ச்சியுள்ள நீரானதுபிரகாசித்துக்கொண்டிருக்கும் பள்ளத்தினிடத்தில்பொருந்திச்சஞ்சரிக்கிறமீனானதுதானுண்ணும் இரைமேல்தூண்டிலிற்பொருந்திய ஒரு அற்பமான பொருளைவிரும்பியிறந்துவிடுவதுபோல (நீஇழிவானசெய்கையைவிரும்பி,அதிலின்பமுள்ளவனதேயன்றி)மேல்வருஞ் செய்கையை விரும்புகின்றாயில்லை.—(எ-று.) (அஅ)

நந்தாவளங்குலவுநாகவுலகோரை ... ... ... ... ... *
முந்தானகாலமதின்மொய்ம்புடனலைத்தோர்... ... ... ...*
சிந்தாகுலத்திடுடுசிந்தினர்களல்லா ... ... ... ... *
துய்ந்தாரொருத்தரையுரைப்பவிவணுண்டோ ... ... ...*

(இ-புரை.) கெடாதவளம் விளங்குகின்ற தேவலோகத்தோரை முன்காலத்தில்தங்கள்பலத்தினால் அலையச்செய்தவர்கள்மனக்கவலையுடன் அ

ழிந்தார்களேயல்லது பிழைத்தவர்கள் ஒருவரைச்சொல்ல இங்குண்டோ.

மீனஞ்சுமந்துபுகழ்விண்ணவர்களெல்லா ... ... ... ...*
மீனம்பொருந்திடவியற்றினைமகத்தின் ... ... ... ... *
கோனந்தண்மாநகர்குலைந்திடமுனிந்தா ... ... ... ...*
யூனந்தருஞ்சிறையிலும்பர்களைவைத்தாய் ... ... ... *

(இ-பு-ரை.) புகழுள்ள தேவர்களெல்லாரும் மீன்சுமந்து இழிவு பொருந்தச்செய்தனை மகவானென்கிற பெயருள்ளதேவேந்திரனுடைய அழகுங்குளிர்ச்சியுமுள்ளதாகியநகரம் அழியும்படிகோபித்தனை இதுவு மன்றித்தேவர்களையூனம்பொருந்தியசிறையிலவைத்தனை.—எ-று.கூ௰.

நந்தாவளங்குலவுநாகர்சிறையின்னு ... ... ... ... ...*
மந்தோவிடுத்திலையதற்குவடிவேலோன் ... ... ... ... *
வந்தானமர்ச்செயவரங்கடருநாளின் ... ... ... ... ...*
* முந்தானுயர்த்தவன்மொழிந்ததுமறந்தாய் ... ... ... *

(இ-பு-ரை.) அழியாதவளப்பம்பிரகாசிக்கும் தேவலோகத்திலிருப் பவர்கள் சிறையைஐயோ இன்னமும்விடாமலிருக்கின்றனை அந்தச்சிறை யைவிடுவிக்கும்பொருட்டுச் சுப்பிரமணிய சுவாமியானவர் யுத்தஞ்செய் யவந்திருக்கிறார் நீயோரிஷபக்கொடியையுடையபரமசிவன் ஆதியில்வர ங்கொடுத்தருளியபோது சொல்லியதிருவாக்கினைமறந்துவிட்டாய்.எ-று

இக்காலநூறிரெடுமெட்டுகமிருந்தெம் ... ... ... ...*
மெய்க்காசில்சத்தியில்விளிந்திடுதிரொன்று ... ... ... *
னக்காலமுற்றதிவணப்படியிலன்றோ... ... ... ... ...*
மிக்கானதாருகனைவென்றதுயர்வேலே ... ... ... ... *

(இ-பு-ரை.) இந்தக்காலத்தில்நீ நூற்றெட்டுயுகம்வாழ்ந்துகொண்டி ருந்து அதற்குமேல்குற்றமில்லாத நம்முடையதிருமேனி சுரூபமாகிய சத்தியினாலே இறந்துவிடுவீர்களென் றருளிச்செய்தார் இப்போதுஅந் தக்காலம் சம்பவித்திருக்கின்றது அந்தமுறைமையினாலல்லவாமேன்மை யுள்ள அந்தச் சத்திரூபமாகிய வேலானது பலமிகுந்த தாருகனை வென் றது.—(எ-று). (கூ௨)

மின்னுலாவேதியனைமெய்க்குரவர்தம்மைப் ... ... ... *
பொன்னுடைாப்பொறைபொருந்துமுனிவோரை ... ...*

* மூந்தானுயர்த்தவன்-என்பது-மூந்து-ஆன்-உயர்த்தவனெனப்பதம் பிரிக்கப்படும்.

பொழிப்புரை.

மன்னுயிருர்தமைவருத்தியவரன்றோ ... ... ... ... *
வெந்நாளும்வெந்நரகிலெய்தியுழல்வாரோ ... ... ... ...*

(இ-ரை.) மன்னவனே மின்னற் கொடிபோலச் சரீரகாந்தியுள்ள மாதர்களையும் பிராமணர்களையும் மெய்மையாகிய தாய் தந்தையரையும் தேவர்களையும் சாந்தகுணமுள்ள முனிவர்களையும் சிறுவர்களையும் வருத்தினவர்களல்லவா எந்நாளுங் கொடிய நரகத்தில் விழுந்து உழலுகிறவர்கள்.—(எ-று.) (௬௩)

ஈண்டாகையான்முருகனோடமரியற்ற ... ... ... ... ...*
வேண்டாவிண்ணோர்கள்சிறைவிட்டிடுவையாயின் ... ... *
பூண்டாசறுங்கயிலைவெற்பினிடைநாகம் ... ... ... ...*
பூண்டான்மகன்கடிதும்போயிடுவனன்றே ... ... ... ...*

(இ-புரை.) ஆகையினால் இப்போது சுப்பிரமணிய சுவாமியுடன் போர்செய்யவேண்டாம் சுவர்க்கலோகதேவர்கள் சிறையை நீக்கிவிடுவையானால் குற்றமற்றகயிலாயகிரியினிடத்தில் சர்ப்பாபரணராகிய பரமசிவனுடைய புத்திரரான சுப்பிரமணிய சுவாமியானவர் இப்போதே போய்விடுவார்.—(எ-று.) (௬௪)

இன்பானவிப்படியியற்றுகிலையாகிற் ... ... ... ... *
கொன்பாவுமம்பிகைகுமாரனமையெல்லாந் ... ... ... ...*
துன்பாகவேல்கொடுதொலைத்திடுவனென்றே .. ... ... *
மின்பாவுசிங்கமுகவீரனுரைசெய்தான் ... ... ... ...*

(இ-புரை.) உன்னிடத்தி லெனக்கிருக்கும்நேயத்தினால் சொன்ன இந்தவார்த்தையின்படி செய்யாமலிருப்பையாகில் பெருமைபொருந்திய பார்வதிகுமாரராகிய சுப்பிரமணியசுவாமியானவர் துன்பமுண்டாகும்படி நம்மையெல்லாம் வேலாயுதத்தினால் கொன்றுவிடுவாரென்று ஒளிபரந்தசிங்கமுகாசுரன்சொன்னான்.—(எ-று.) (௬௫)

என்றீதுசிங்கமுகனின்புறவிசைப்ப ... ... ... ... *
நன்றீதுநன்றெனநகைத்துநனிசீறித் ... ... ... ... ...*
தன்றீதிலாதசொற்குதம்பிமுகநேரோ ... ... ... ... *
யொன்றீதுசூர்முதலுரைத்திடுதலுற்றான் ... ... ... ...*

(இ-புரை.) இந்தவார்த்தையை யிவ்வாறுசிங்கமுகாசுரன் இன்பம் பொருந்தச் சொன்னான் அதைக்கேட்டசூரன் இதுமிகவும் நன்று மிகவு ம்நன்றுஎனச்சொல்லிநகைத்து அதிகமாகக்கோபித்துக் குற்றமில்லாதவ னுப் ஒப்பற்றதன்தம்பிமுகத்தைநேராகப்பாாத்து முதல்வனாகிய அந்த சூரனிம்மொழிசொல்லுகிறான்.—(எ-று.) (௬௬)

[வேறு,]

இந்திரன்றனக்கும்பூதர்கடமக்கு ... ... ... ... ... *
மிளஞ்சிறுபாலனுடிமையவர்தமக்கு... ... ... ...*
முந்துநீநெஞ்சிலஞ்சினைபோலு ... ... ... ... ... *
முமைபொருபாகனுமொப்பிலாக்கடவு .. ... ...*
ணந்தனிச்சத்திவெல்லுமென்றதுவு... ... ... ... ... *
நாண்முடிவிழைத்ததுநான்முன்புகேளேன்... ... ...*
புந்தியிற்புதிதொன்றுன்னிமெயயுரைத்தாய்... ... ... ... *
பொய்மொழிசொல்லவும்வல்லையாயினையால... ... ...*

(இ-புரை.) தேவேந்திரனுக்கும் பூதாளுக்கும் இளமையாகியசி றுபிள்ளைக்கும் தேவர்களுக்கும் மேன்மைபொருந்திய நீ மனதில்பயம் அடைந்தனை பார்வதிபாகனுகிய ஒப்பிலாத பரமசிவன் நம்முடைய நிகரில்லாதசத்திவெல்லுமென் றுசொன்னதுவும்இவ்வளவுகாலம்இருப்பீர் களென்றுகாலம் நிருமித்துச்சொன்னதும்நான்முன்புகேட்டதில்லைஉன் மனதில்புதிதாக ஒன்றைநினைத்துக்கொண்டு இப்போதுசொல்லினையிவ் வாறுபொய்வார்த்தைசொல்லவும் வல்லவனுயினை.—(எ-று.) (௬௭)

அப்படியுரைத்தானேனுமக்கடவு ... ... ... ... ...*
ளளித்திடுவரமெவரழித்திடவல்லார்... ... ... ... *
மெய்ப்புறுசத்தியழித்திடுமென்னில் ... .. ... ... ...*
வேறதோசத்தியும்விமலனுமதனு ... ... ... ... *
லிப்பெருவரங்கள்கொடுத்தவனழியா... ... ... ... ...*
னெண்ணிலுளமராயான்சிறைசெயக்கண் ... ... *
டொப்பின்மான்முதலோரஞ்சியேயிருந்தா ... ... ...*
ரொருசிறுபாலனேவொழித்திடவல்லான் .. ... ... *

(இ-புரை.) அவ்வாறுபரமசிவன் சொல்லியிருந்தாலும் அவர்அரு ளிச்செய்தவரத்தை அழிக்கவல்லவர்கள்யாவர்உண்மைத்தன்மையுள்ளசத்

பொழிப்புரை.

தியானது அழிக்குமென்றால் சத்தியுஞ் சிவனும்வேறோ ஆகையால் இந்தவ் பெரியவரங்கள் அனுக்கிரகித்தவர் மறுபடி அழிக்கமாட்டார் அளவில்லாதநாள்தேவர்களை நான்சிறைசெய்துவைத்திருப்பதைக்கண்டுங்கேட்பில்லாதவிஷ்ணுமுதலானவர்கள்பயந்திருந்தார்கள் அப்படியிருக்க இப்போது இந்த ஒருபாலனோ அந்தவரங்களையொழிக்கவல்லவன்.—எ-று.

என்னவேகுகனைப்பாலனென்றெண்ணி ... ... ... ... *
யிகழ்ந்துதன்னுயிரையிழந்திடுகின்ற... ... ... ...*
முன்னவனிசைப்பப்பின்னவன்பின்னு... ... ... ... *
முனியலையொன்றினமொழிவனென்றுரைப்பான்... ...*
பொன்னுலகமரர்தமைச்சிறைபடுத்திப்... ... ... ... *
புவியினினீதிபுரிந்திடாவதனைத்... ... ... ... ...*
தன்னிகரானசங்கரனறிந்துன் ... ... ... ... ... *
றன்னைவந்தடுவான்றன்னுளநினைந்தான்... ... ... ...*

(இ-புரை.) சுப்பிரமணியசுவாமியை சிறுவனென்றுகருதியிகழ்ந்து பேசித்தன்னுயிரை யிழப்பவனாகிய தன்தமையன் இவ்வாறு சொல்லப்பின்னும் அவன்தம்பிசூரனைநோக்கி நீ கோபங்கொள்ளாதே இன்னமும் ஒருவார்த்தைசொல்லுகிறேனென்று சொல்லுகிறான் நீபொன்னுலகத்துத்தேவர்களைச் சிறைப்படுத்திப் பூலோகத்தில் நீதியுடன்அரசாட்சிசெய்யாததைத்தமக்குத்தாமேயொப்பாகிய பரமசிவனறிந்து தாம்வந்து உன்னைக்கொல்லத் தம்முடையதிருவுள்ளத்தில்நினைந்தருளினார்.—எ-று.

இன்னநீர்வரங்கள்கொடுத்தயாமழிப்ப ... ... ... ... *
தியல்பலவாதலாலிருமையேயடைத்து... ... ... ...*
மன்னியேயிருந்தசூரனைப்பிறர்க்கும்... ... ... ... ... *
வதைப்பரிதெனவேமனத்திடைநினைந்து ... ... *
பொன்னுறுதனதாமுருவமாமொருசீர்ப்... ... ... ... *
புதல்வனுற்புகழுறப்பொருக்கெனமுடிக்கத் ... ...*
தன்னுதல்விழியாலாறுமாமுகத்தோர் ... ... ... *
தனிப்பெருங்குமரனைத்தந்தனன்பரனே ... ... ...*

(இ-புரை.) துன்பம்நீங்கிய வரங்கள்கொடுத்த நாமழிப்பது நன்மையல்ல ஆகையால் பெருமையையடைந்து அழிவில்லாமலிருந்தசூரனைப் பிறர்க்கும்கொல்வதரிதென்று திருவுள்ளத்திலிடத்தில்நினைத்து அ

ழகுபொருந்தியதம்முடையசுரூபமாகியசீருள்ள ஒருபுத்திரனால்வினைவினில் முடிக்கத்தம்முடையநெற்றிக்கண்ணிடமாகப்பெருமைபொருந்தியஅறுமுகங்களுடன்ஒப்பற்றபெரியஒருபுத்திரனை அருளிச்செய்தார்.

அற்றமி லுருவமாகுவன்ருவ ... ... ... ... ... ... *
மாகுவனருவுருவகன்ற .. ... ... ... ... ...*
பெற்றியுமாவன்மறைகளுந்தெரியாப் ... ... ... ... *
பெரியவன்பெரியர்க்கும்பெரியான் ... ... ... ...*
முற்றிடும்பொருள்களனைத்துமாயலவாய்த்... ... ... ... *
தோன்றியதனிப்பெருந்தொன்றல் ... ... ... ...*
மற்றவன்றனை நீபாலனென்றறைந்தாய் ... ... ... ... *
வல்லையிங்கவனான்மாளுதிமாதோ... ... ... ... ...*

(இ-புரை.) குற்றமில்லாத அருவுமாவன் உருவுமாவன் அருவமும் உருவமும்நீங்கியதன்மையுமாகுவன் வேதங்களுங்கண்டுதெளியாதபெரியவன்பெரியோர்களுக்கும் பெரியன்நிறைந்துள்ள பொருள்களெல்லாமுமாய் அல்லவாய்க்காணப்படுகிறகடவுளாயவன்அப்படிக்கொத்தவனைப் பாலகனென்று நீ சொல்லினை ஆகையால்சீக்கிரத்தில் அவனாலிங்கேமாண்டிடுவை.—(எ-று.) (௱௧)

ஆதலானீயுநின்பெருங்கிளையு ... ... . ... ... ...*
மன்புறுவளத்தோடமர்ந்திடவேண்டிற் ... ... ... *
றீதிலாவமரர் சிறையினைவிடுத்தல் ... ... ... ... ...*
செய்யெனவெய்யவன்சிந்தைமேற்சினமுற் ... ... *
றூதையாலலைப்புண்டங்கியாற்சூடுண்... ... ... ... ...*
டுயர்சரவணத்தலைப்புண்டபாலனையோ ... ... ... *
சோதியென்றுரைத்தாய்பேதையென்றிகழ்ந்து... ... ... *
சொல்லினான்வெவ்வுரைச்சூரனாமவுணன்... ... ... *

(இ-புரை.) ஆதலால்நீயும் உன்பெருஞ்சுற்றத்தாரும் அன்புபொருந்திய செல்வத்துடன்வாழ்ந்துகொண்டிருக்க விரும்புவையாகில்பொல்லாங்கில்லாத தேவர்கள்சிறையை விடுத்திடுதியென்றுசொன்னான் அதைக்கேட்ட கொடுஞ்சொல்லுள்ளசூரனாகிய அவுணன்மனதினிடத்தில் கோபம்பொருந்திக்காற்றினால் அலைப்புண்டு தீயினாற்சூடுண்டு உயர்ந்தசரவணமென்கிற ஒருவகை நாணலினிடத்தில் அலைந்துகொண்டிருந்தபாலகனையோ சோதியென்றுசொல்லினை அறிவில்லாதவனேயென்று இகழ்ந்துசொல்லினான்.—(எ-று.) (௱௨)

பொழிப்புரை.

முற்றுணர்சிங்கமுகத்தினனன்மை ... ... ... ... ...*
மொழிந்ததற்கிழிந்தோன்முனிந்துரைத்திட லுஞ் ... *
சற்றுநம்மொழியுட்கொண்டிலனந்தோ... ... ... ... ...*
தலையினில்விதியையார்தவிர்த்திடவல்லார்... ... ... *
மற்றிவன்மடிதறிண்ணமாமதன்முன் ... ... ... ... ...*
மடிதலேநன்றெனமனத்திடைநினைந்துச்... ... ... *
சிற்றறிவுடையேஞ்சொற்றனபொறுத்தி ... ... ... ...*
சேரலார்தமைப்படச்செல்குவனென்றான்... ... ... *

(இ-ள்.) முழுவதுமுணர்ந்த சிங்கமுகாசுரன் இவ்வாறு நன்மை சொல்லியதற்கு இழிவுள்ளவனாகிய சூரன்கோபித்துச்சொல்லவே இன்னம் நம்முடையவார்த்தையைச்சிறிதும் உட்கொள்ளாதவனாயிருக்கிறான் அய்யோ முற்காலமேயுண்டாயிருக்கிறஊழ்வினையை ஆர்தவிர்க்கவல்லவர்கள் ஒருவருமில்லையே ஆதலாலிவனிறந்துபோவது நிச்சயமே அதன் முன் நாம் இறந்துபோவது நமக்குக்கடமையென மனதினிடத்தில் நினைத்து அற்ப அறிவுடைய நான் சொல்லியசொற்களைப் பொறுத்துக்கொள் நான்பகைவரைக்கொல்வதற்குப்போகிறேனென்றான்.—(எ-று.)(௱௩)

என்றுவன்றிறல்கொண்மடங்கன்மாமுகத்தோ ... ... ...*
னின்புறவிசைப்பவிருந்திறற்சூர ... ... ... ... *
னன்றுநன்றெனவேமகிழ்ந்தவன்றன்னை ... ... ... ...*
நயமொடுபுல்லிப்புகழ்ந்துநின்னகர்போ ... ... *
யொன்றுதிகுகனீண்டடைந்திடில்விளிப்ப... ... ... ...*
னெல்லைமேவுதியென்றுவப்புடன்விடுப்பச் ... ... *
சென்றுதன்புரம்புக்கமர்ந்தனனவருஞ் ... ... ... ...*
செலவுளத்துறையுட்சேர்ந்துசூரிருந்தான் ... ... *

(இ-ள்.) மிகுந்தபலமுள்ள பெரியசிங்கமுகன் இவ்வாறு இன்ப முறச்சொல்லவே பெருமைபொருந்திய பராக்கிரமமுள்ளசூரனானவன் இப்போதுசொன்னது நன்று நன்றென மகிழ்ச்சியடைந்து சிங்கமுக னைவிருப்பத்துடன் தழுவிக்கொண்டுபுகழ்ந்து உன்னகரத்திற் போய்ச் சேர் சுப்பிரமணியன் இவ்விடத்திற்குவந்தால் உன்னையழைப்பிக்கிறேன் அப்போது நீவிரைவில்வாவென்று சந்தோஷத்துடன்சொல்லி உத்தரவு கொடுத்தான் சிங்கமுகாசுரன் தன்னகரத்திற்போயிருந்தான் அதன்பின் புசூரனானவன் அங்கிருந்த எல்லாரும்செல்லும்படி உத்தரவுகொடுத்து த்தன்அறையுட்சேர்ந்திருந்தான்.—(எ-று.) (௱௪)

இன்னவாறவுணர்தொழுங்கழற்கொடுஞ்சூ ... ... ... ...*
ரெழிலிவந்தெழிலினோடினிதுகண்படுக்கும் ... ... *
பொன்னுலாம்புரிசைமகேந்திரபுரியிற் ... ... ... ...*
புரிந்துவீற்றிருந்ததுபுகன்றனமன்றே .. ... ... *
மன்னுமாலயன்முன்னிமையவர்வணங்க ... ... ... ...*
மடங்கலந்தவிசின்மேல்வனசமாளிகைமே ... ... *
லன்னம்வாழ்கழனிச்செந்தின்மாநகர்வா ... ... ... ...*
ழறுமுகத்திறைசெயலறிவுறவறைவாம் ... ... ... *

(இ-ள்.) இவ்வாறு அவுணர்கள்வணங்குங்கால்களையுள்ள கொடிய சூரனானவன்மேகங்கள்வந்து அழகுடன் இனிதாகநித்திரைசெய்யும்படி உயரமுள்ளபொன்மயமாகிய மதில்சூழ்ந்தமகேந்திரநகரத்தில் விருப்பங்கொண்டுவீற்றிருந்ததைச்சொன்னோம் இனித்தாமரைப்பூவாகியமாளிகையினிடத்தில்அன்னங்கள்வாழ்கின்றவயல்கள்சூழ்ந்ததிருச்செந்தூரில் நிலைபெற்றவிஷ்ணுபிரமன்முதலாகியதேவர்கள்பணியும்படி அழகுள்ள சிங்காசனத்தின்மேல்வீற்றிராநின்ற ஆறுமுகக கடவுளுடைய செய்கையைச்சொல்லுகின்றாம்.—(எ-று.) (௯௫)

மகேந்திரகாண்டமுற்றிற்று.

ஆககாண்டம்-௩-க்கு-திருவிருத்தம்-௬௱௯௰.





உ

வேலுமயிலுந்துணை.

## நான்காவது.

# யுத்தகாண்டம்.



முதல்நாள்பானுகோபன்யுத்தம்.

மின்னிகர்சடிலத்தவிர்மதிமுடித்த ... ... ... ... ... *
வித்தகன்மத்தகவிழிவிழித்தாங்குப் ... ... ... *
பொன்னுறுமருணத்தடமலர்மிடைந்த ... ... ... ... *
பொதும்பர்சூழுதயவான்பொருப்பினும்பர் ... ... *

னுன்னுசெங்கிரணத்திரவிவந்தெழலுந்... ... ... ... *
தோகையோர்மருங்குடைத்தோன்றன்முன்றோன்று ... *
கன்னல்விற்றடக்கைக்கடவுண்மாண்டதுபோற் ... ... *
கதுமெனவழிந்ததுகாரிருட்கங்குல்... ... ... ...*

(இ-புரை.) மின்னலையொத்த சடையினிடத்தில் பிரகாசிக்கும் சந்திரனைமுடித்த பரமசிவனது நெற்றிக்கண்ணைத் திறந்ததுபோல அழகு பொருந்திய செம்மைநிறமுள்ள பெரியமலர்கள் நிறைந்துள்ளசோலை சூழ்ந்தசிறப்புள்ள உதயகிரிமேல் பொருந்திய செங்கிரணத்தையுடைய சூரியன் உதயமானவுடன் பார்வதிதேவியாரையிடப்பாகத்திலுள்ளபரமசிவன் எதிரில் எதிர்த்தகரும்புவில்லையேந்திய பெரியகையையுடைய மன்மதனிறந்ததுபோலக் கருமைநிறமுள்ள இருளாகிய இராத்திரிப்பொழுதுவிரைவாகநீங்கிவிட்டது.—(எ-று.) (க)

இவ்வகையுலகிற்றுணங்குறலகல ... ... ... ... ... ...*
விரவியாமொருவன்வந்திருவிசும்பெழலு... ... ... *
மொய்வளரவுணப்பேரிருண்மடிய ... ... ... ... ...*
முருகனும்பரிதியுமரனொடுமெழுந்து ... ... ... *
செவ்வொளிக்கனகத்தேரின்மேற்புகுந்து ... ... ... ...*
சேனையோர்வானுளோர்செறிந்துசூழ்ந்தேத்தப் ... *
பௌவநீர்கடந்துசூரன்மூதூரிற் ... ... ... ... ...*
பாங்குறுவடதிசைப்பாலடைந்தனனே ... ... ... *

(இ-புரை.) இவ்வகையாக உலகத்தில் சூழ்ந்திருக்கும் இருள்நீங்கும்படி சூரியன்வந்துபெரிய ஆகாயத்தில் எழுந்தமாத்திரல்நிறைந்து மிகுந்திராநின்ற அவுணர்கூட்டமாகியபெரிய இருளானதுமடிந்தும்போம்படி சுப்பிரமணியக்கடவுளாகிய சூரியனும்பலத்துடனெழுந்து செவ்விதான ஒளியுள்ளபொன்னாலாகிய தேரின்மேல் ஆரோகணித்துக்கொண்டு படைகளாயுள்ளவர்களும் தேவர்களும் நெருங்கிச்சூழ்ந்து துதிசெய்துகொண்டுவர நீர்மிகுந்துள்ள சமுத்திரத்தைக்கடந்து சூரனுடையபழமையான நகரினருகிற்பொருந்தியவடபுறத்திற்சேர்ந்தார்.—(எ-று.) (உ)

*பாசறையென்பது பகைவர்மேற் போர்செய்யச் சென்றவர்க ளிருக்குமிடம்.

அந்தண்விசும்பத்திமையவர்புனைவ ... ... ... *
ஞ்துமொருகமுடையன்னைதன்னருளாற் ... ... *

கொங்கலிருங்காமருங்குசூழ்மே... ... ... ... ... ...*
கூடமாம்பெயருடைக்கோநகர்குயிற்றச் ... ... ... *
சங்கரன்மதலைகொடிநெடுந்தடந்தேர்... ... ... ... ...*
தணந்துசீர்மந்திரத்தணைந்ததுதன்னிற் ... ... ... *
பொங்கெழின்மடங்கற்சேகரத்திடையே ... ... ... ...*
பொருந்தியவணைமேற்பொருந்திவீற்றிருந்தான் ... *

(இ-பு.) அவ்வாறுசேர்ந்தபோதில்தேவதச்சனுனவன்பெருமை பொருந்திய ஆறுதிருமுகங்களுள்ள சுப்பிரமணியசுவாமியின்கட்டளையினுல் வாசனைபரந்தபெரியசோலைகள் புறத்தில்சூழ்ந்திருக்கும் படியான ஏமகூடமென்கிறபெயருள்ள சிறந்தநகரமொன்று உண்டாக்கினவளவில்சிவகுமாரனுகிய முருகக்கடவுள் கொடிகட்டியநெடியதாய்ப்பெருமைபொருந்திய தேனைவிட்டிழிந்து சீர்பொருந்திய ஆலயத்துக்குள்ளெழுந்தருளி அவ்வாலயத்தில்மிகுந்த அழகுள்ளசிங்கங்களின் முடிகளினிடத்திற்பொருந்திய ஆசனத்தின்மேல்பொருந்திவீற்றிருந்தார்.எ-று.

[வேறு.]

வீறுகொண்டதானையோடுமேன்மைகொண்டவேலவ ... ...*
னீறில்பாசறைத்தலத்திலிந்தவாறிருப்பவீ ... ... ... *
தூறிலாதசூரன்முன்னருற்றுநாரதன்சொலச் ... ... ...*
சீறியின்னதொற்றோடுசெற்றமோடுசொற்றனன் ... ... *

(இ-பு.) பெருமைபொருந்திய சேனைகளுடன் மேன்மைகொண்டவேலாயுதக்கடவுள் அழிவில்லாத பாசறையினிடத்தில் இந்தவாறிருப்பஇந்தச்சேதியைப்பழுதில்லாதசூரன்முன்சென்றுநாரதமுனிவர்சொன்னர் அவன்சீறி உரத்தசத்தத்துடன் தூதர்களை நோக்கிச் சொல்லுகின்றனன்.—(எ-று.) (௪)

வாரிமன்னவற்பிடித்துவாருமென்னவேகியே ... ... ... *
கோரமோடுபற்றிமுற்கொணர்ந்திடச்சினந்துநீ ... ... ...*
வீரமோடுமாறுகொண்டுவீறுகொண்டதெவ்வனைச் ... ... *
சேரவிங்குவிட்டதென்னைசெப்புகென்றுசெப்பினுன் ... ...*

(இ-பு.) தூதர்களைநோக்கிச்சமுத்திரராசனைப் பிடித்துவாருங்களென்றுசொல்ல அவர்கள் அவ்வாறேயவனைக்கொடுமையுடன்பிடித்துக்கொண்டுவந்துசூரன்முன்விட்டார்கள் அவனைநோக்கிக்கோபித்துவீரத்

துடன்பகைகொண்டு பெருமையுள்ளசத்துருக்களை நீ இவ்விடத்தில் சேரும்படிவிட்டதென்னசொல்லென்றுசொன்னான்.—(எ-று.) (௫)

அந்த வேலைவேலைமன்னனமரரோடுகுமரவே... ... ... ...*
னுந்துவானிலேகினனுயர்ந்தூதரென்கணே ... ... ... *
வந்திடக்கலங்கினேன்மலங்கினேன்வருந்தினேன் ... ... ..*
பந்திகொண்டதூதர்தம்பாட்டினுக்கமைந்திலேன் ... ... *

(இ-புரை.) சூரன் அவ்வாறுகேட்டபோது சமுத்திரராசன்தேவர்களும் குமாரசுவாமியானவரும் உயர்வாகிய ஆகாயமார்க்கமாகச்சென்றார்கள் உயர்ந்ததூதர்கள் என்னிடத்தில்நடந்துவந்ததினால் நான்மனங்கலங்கி வருந்தினேன் அதுவுமன்றிவரிசைகொண்ட அவர்களுடையவரிசைகொண்டகால் பாட்டினளவுக்கும் போதாமையானேன்.—(எ-று.) (௬)

ஏழையேன்றடுப்பதெங்ஙனென்றுகூறிநின்றிடத்... ... ...*
தாழ்விலாதவொற்றர்வந்துசண்முககுமாரவேள் ... ... *
வாழுநம்பெரும்பதிக்குவடதிசைக்கணெய்தினான்... ... ...*
சூழ்பதாதியோடுமென்றுசொல்லவீதுசொல்லினான்... ... *

(இ-புரை.) அப்படிக்கொத்தவர்களை எளியவனாகிய நான் தடுப்பதெவ்வாறென்றுசொல்லி நிற்குந்தருணத்தில தாழ்வில்லாததூதர்கள்வந்து ஆறுமுகமுள்ளகுமாரவேளானவர் வாழ்கின்றநம்முடையபெரிய நகரத்துக்குவடபுறம் சேனைகளுடன்வந்திருக்கிறாரென்று சொன்னார்கள்அதற்குச்சூரன்சொல்லுகிறான்.—(எ-று.) (௭)

இரவியைத்தளைந்துளானையிங்கழைத்திரென்னலும்... ... ...*
பரவியேகிப்போற்றிச்சொற்றபானுகோபனைத்தரச் ... ... *
சிரமொராறுந்தன்மைந்தனோடுசேனையோரைவென்றுநீ ... *
விரைவிலிங்குவருதியென்றுவிடைகொடுப்பவேகினான்... ... *

(இ-புரை.) சூரியனைத்தொட்டிலின்காலிற் கட்டினவனாகிய பானுகோபனையிவ்விடத்துக்கு அழைத்துக்கொண்டு வாருங்களென்று சூரன் சொல்லத் தூதர்கள்துதிசெய்துசென்று சூரனாற்சொல்லப்பட்ட பானுகோபனை அழைத்துக்கொண்டுவந்தார்கள் அப்படி வந்தவனைப் பார்த்து நீ ஐந்துமுடிகளுள்ள பரமசிவன் மகனையும் அவன்சேனையாயிருப்பவர்களையும் வென்றுசீக்கிரமாக இங்கேவாவென்று உத்தரவுகொடுத்தவளவில் பானுகோபன் அந்த உத்தரவைப்பெற்றுக்கொண்டுசென்றான்.

ஆங்குதன்மனைக்கணுற்றடற்படைக்கலங்கள்கொண் ... ... *
டேங்குறுதரானைவெள்ளமிருபதானவாயிரம் ... ... ...*
பாங்கினோடுபாங்கினிற்பாதந்நிரைந்துசூழவே... .. ... *
தீங்கிலாதவிசயனாதியனிகமன்னர்சேரவே ... ... ... ...*

(இ-புரை.) அவ்விடத்திலிருந்துதன்வீட்டுக்குப்போய்ப்பலம்பொருந்திய ஆயுதக்கூட்டங்களையெடுத்துக்கொண்டு எக்கங்கொள்ளாத இருபதினாயிரம்வெள்ளஞ்சேனைகள் உரிமையுடன்தன்பக்கத்தில்பாந்து ஆரவாரித்துச்சூழ்ந்துவரவும் தீங்கில்லாதவிசயனென்பவன்முதலாகியபடைத்தலைவர்கள்சேர்ந்துவரவும். —(எ-று.) (௬)

ஆயுதக்கூட்டமென்பது பல ஆயுதங்களெனக்கொள்க.

கந்துகங்கண்முப்பதானவாயிரங்கலந்ததோர் ... ... ... *
சுந்தரஞ்செறிந்திலங்குதுய்யவையமேறியே... ... ... ...*
வெந்திறற்பெருஞ்சமர்க்குமேவுகின்றவாறுகண் ... ... *
டுந்துநாரதன்குகன்கழலைவந்துசொல்லினான்... ... *

(இ-புரை.) முப்பதினாயிரங்குதிரைகள் பூட்டிச் சுந்தரம்பொருந்திப்பிரகாசியாநின்றபரிசுத்தமுள்ளஒருதேரின்மேலேறிக்கொண்டுகொடியதானபெரும்போர்செய்யப் பானுகோபன் புறப்படுகிறதைக்கண்டு மேன்மைபொருந்திய நாரதமுனிவர்விரைவாகச் சுப்பிரமணியரிடத்திற் சென்றுசொல்லினர்.—(எ-று.) (௰)

எந்தையானகந்தவேளிலங்குவீரவாகுவாஞ் ... ... ... ...*
சுந்தரன்றனைத்தெரிந்துசூரனிவ்விடத்தியாம் ... ... ... *
வந்தவாறுணர்ந்துதன்மகன்றனைப்பதாதியோ ... ... ...*
டுந்தவேலைநம்மொடேசெருத்தொடங்கவேவினான் ... ... *

(இ-புரை.) எம்மையாளுனைசுப்பிரமணியசுவாமியானவர்பிரகாசியாநின்றவீரவாகுதேவராகியசுந்தரனைநோக்கிநாமிங்குவந்த முறைமையைச் சூரன் அறிந்துதன்மகனாகிய பானுகோபனைச் சேனையுடன்சென்று நம்முடன்போர்செய்ய இப்போது ஏவினான்.—(எ-று.) (௰௧)

சேனையானதுன்றவின்றுசென்றுவென்றியொன்றிநீ ... ... *
யூனமின்றிவருதியென்றுவப்பினோடுரைத்தனு ... ... *
மானனங்களாறுகொண்டவண்ணலைத்தணந்துபோய்... ... ...*
து[illegible]லங்கொள்படைகள்கொண்டுதுய்யவையமேறினான்... ...*

(இ-புரை.) சேனைகள் நெருங்கிவரச் சென்று இப்போதுவெற்றி கொண்டு நீ பழுதில்லாமல்வாவென்று சந்தோஷத்துடன் உத்தரவுகொடுத்தருளினவளவில் வீரவாகுதேவர் ஆறுதிருமுகங்களுள்ள சுப்பிரமணியனை நீங்கிப்பகைவருடல்மாமிசத்திற்பொருந்துவதான நன்மைபொருந்திய ஆயுதங்களெடுத்துக்கொண்டு பரிசுத்தமுள்ள இரதத்தின்மேலாரோகணித்துக் கொண்டார்.—(எ-று.) (௰௨)

சுந்தரங்கொளெண்மருந் துலக்கமாமிலக்கரும் ... ... ...*
வெந்திறற்கொள்பத் துநூறுவெள்ளமானபூதருந் ... ... *
தந்திரங்கொள்சுப்பிராதிதானைமன்னருங்குழீஇ ... ... ...*
வந்துசூழவேகினன்மகிழ்ச்சிவீரவாகுவே ... ... ... ... *

(இ-புரை.) மகிழ்ச்சியுள்ள வீரவாகுதேவரானவர் சௌந்தரியமுள்ள எட்டுவீரர்களும் பிரகாசமுள்ளலக்ஷம்வீரர்களும் வெவ்விதானபலங்கொண்ட ஆயிரம்வெள்ளம்பூதர்களும் சுப்பிரன்முதலாகியசேனைமன்னவரும் கூட்டமாய்வந்துசூழும்படிசென்றார்.—(எ-று.) (௰௩)

தலைமைகொண்டபாசறைத்தலத்தினைத்தணந்துபோய் ... ...*
நிலைமைகொண்டசூரனூரினீண்மதிற்புறத்துறத் ... ... ... *
தொலைவில்பூதருஞ்சினங்கொள்சூரன்மைந்தனனிகமும் ... *
பலபடைக்கலஞ்சொரிந்தெதிர்ந்துபோர்பயின்றவே ... *

(இ-புரை.) முதன்மைகொண்டதாகிய பாசறையிடத்தைவிட்டுநீங்கிப்போய் அழிவில்லாமையையுடைய சூரன்நகரத்தின் நீட்சியுள்ளமதிலின்புறத்திற்சேர்ந்தவுடன் தோற்குந்தன்மையில்லாதபூதர்களும் கோபங்கொண்டசூரன்மகன்சேனையும்பல ஆயுதங்களையேவி எதிர்த்துப்போர் செய்தார்கள்.—(எ-று.) (௰௪)

தெண்டிரைக்குநேரெனத்திரண்டிரண்டுசேனையு ... ... *
மண்டியோதைசெய்துநின்றடுஞ்செருப்புரிந்திடச் ... ...*
சண்டமுற்றவவுணருஞ்சலந்தரித்தபூதரு ... ... ... ... *
மண்டுசோரிவாரிநேரமட்டிலார்கள்பட்டனர் ... ... ...*

(இ-புரை.) இரண்டுசேனையும்தெளிவுள்ள அலையையுடையசமுத்திரத்துக்கு ஒப்பென்றுசொல்லும்படி கூடிநெருங்கி ஆரவாரித்துநின்று கொல்லும்போர்செய்யும்போது கொடுமைபொருந்திய அவுணர்களும் சினங்கொண்டபூதர்களும் நிறைந்த உதிரம்சமுத்திரத்துக்கொப்பாகப்

பெருகும்படி அளவில்லாதபேர்களிறந்தார்கள்.—(எ-று.) (௰௫)

மேனலங்கொள்பூதர்தாம்வெகுண்டுசென்றுமேவலா ... ...*
ரானையோடுமானைதன்னையாளியோடுமாளியைச் ... ... ... *
சேனையானதேரினோடுதேரைவாரிமோதலு ... ... ... ...*
மூனமுற்றவவுணர்தாமுடைந்துவாடியோடினர் ... ... *

(இ-புரை.) மேன்மையான நன்மைபொருந்திய பூதர்கள் கோபித்துச்சென்றுபகைவராகிய அவுணர்சேனையிலுள்ள ஆனைகளைக்கூட்டங்கூட்டமாகவாரி அவைகளால்மற்ற ஆனைகளைமோதினதாலும் வீரர்களைவாரி அவர்களால்மற்ற வீரர்களைமோதினதாலும் தேர்களைவாரி அவைகளால் மற்றத்தேர்களைமோதினதாலும் பழுதுபொருந்திய அவுணர்கள்தோற்றுமனம்வாடியோடினார்கள்.—(எ-று.) (௰௬)

அற்றவேலையவுணர்தம்படையிலனலியென்னுமன்னவன் ... ...*
செற்றமோடுவந்தெதிர்ந்துதீதிலாதபூதர்மேல் ... ... ... *
வெற்றிகொண்டகணைகள்சிந்தவெந்திறற்கொள்பூதரு ... ...*
டுற்றசிங்கன்முனிவினோடுமொல்லைசென்றெதிர்ந்தனன் ... *

(இ-புரை.) அவ்வாறுதோற்றோடும்போது அவுணர்களில் அனலியென்கிறபடைத்தலைவன் கோபத்துடன் வந்தெதிர்ந்துபொல்லாங்கென்பதில்லாதபூதர்கள்மேல் செயங்கொண்டபாணங்கள்சிந்தினான் வெவ்விதானபலங்கொண்ட பூதர்களில்சேனைமன்னவனாகப்பொருந்திய சிங்கனென்பவன்கோபத்துடன் விரைவாகச்சென்றெதிர்ந்தனன்.—(எ-று.) (௰௭)

மிண்டுகொண்டவனலிதேரில்விரவிநின்றபுரவியைத் ... ...*
தண்டுகொண்டுமோதலுந்தளர்ந்திறப்பவெய்யவன் ... ... *
கண்டுகோல்சொரிந்திடக்கனன்றவன்றன்வையமுற் ... ...*
றண்டலன்கைவிற்பறித்தடற்கொள்சிங்கன்வீசினான்... ... *

(இ-புரை.) பலங்கொண்ட அனலியென்பவனிரதத்தில்கட்டப்பட்டிருக்கும்குதிரைகளைத் தண்டாயுதத்தினால்மோதவே அவைகள்தளர்ந்திறந்தன அதைக்கொடியனாகிய அனலிகண்டுபாணங்களையேவினவளவில் பலமுள்ள சிங்கன்மனங்கோபித்து அவன்தேரிற்பாய்ந்து அந்தப்பகைவன்கையில்வில்லைப்பறித்து எறிந்துவிட்டான்.—(எ-று.) (௰௮)

அற்றமற்றசிங்கன்மீதிலனலிதண்டிஸ்மோதலும் ... ... ...*
வெற்றிகொண்டசிங்கனங்கண்வெய்யன்மார்படித்தவற் ... *
பற்றிநின்றுசுற்றிநற்படித்தலத்தடித்திடத் ... ... ... ...*
தற்றுகின்றவவுணருடசண்டனீதுகண்டனன் ... ... ... *

(இ-புரை.) மெலிவில்லாதசிங்கன்மேல் அனலியென்னுடவுணன்தண்டாயுதத்தினுல்மோதினன் மோதவே வெற்றிகொண்டசிங்கன் அவுணப்படையினிடத்திலிருக்கும்கொடியவனுகிய அனலிமார்பில்அடித்து அவனைப்பிடித்துநின்று சுழற்றிநன்மையுள்ள பூமியினிடத்தில் அடித்தான் அப்போது தாவுகின்ற அவுணருக்குள் சண்டனென்பவன் இதனைப்பார்த்தான்.—(எ-று.) (யகூ)

கண்டசண்டனடேவனென்றுகழறும்வேலைசிங்கனவ்... ... ...*
வண்டலன்றன்வையமுற்றவன்றடம்புயத்தின்மே ... ... *
லொண்டிறற்கொள்கதையின்மோதவவனுமுந்துசிங்கன்மேற் *
றண்டின்மோதவிருவருந்தளர்ச்சியெய்திவீழ்ந்தனர் ... ...*

(இபுரை.) பார்த்தசண்டனுனவன் சிங்கனென்பவனைநோக்கி உன்னைநானிப்போதுகொல்லுகிறேனென்று சொல்லும்போது சிங்கனுனவன் அந்தப்பகைவனுடைய தேரிற்பாய்ந்து அவனுடையபெரிய புசத்தின்மேல் ஒளியும்பலமுங்கொண்டதன் கதையினுல்மோதினன் அவனும் மேன்மைபொருந்திய சிங்கன்மேல தண்டாயுதத்தினுல் மோதினன் இவ்வாறுமோதி அவ்விருவரும்மூர்ச்சையடைந்து வீழ்ந்தார்கள்.—(எ-று.)

மற்றிவ்வேலையவுணர்தம்மின்மாயனேடுபூதரிற் ... ... ...*
செற்றமுற்றநீலனுனசீலனங்கெதிர்ந்துநீ ... ... ... *
ளுற்றதண்டமுந்தமாயனுந்துமார்பில்வந்துபட் ... ... ...*
டிற்றுளானெனக்கலங்கியிந்தவாறியற்றுவான் ... ... ... *

(இ-புரை.) இவ்வாறு இவ்விருவர்களும்விழுந்தபோது அவுணர்களுக்குள் மாயனென்பவனுடன் பூதர்களுக்குள் கோபம்பொருந்திய நீலனென்கிறபெயருள்ள சீலனுனவன் நீட்சிபொருந்தியதண்டாயுதமொன்றெறிந்தான் அதுமாயனென்னும் அவுணனுடையமுன்னுயர்ந்திருக்குமார்பில்வந்துபட்டவுடன் அம்மாயன் இறந்துபோனனென்று சொல்லும்படிக்கலங்கி இந்தவாறுசெய்கிறான்.—(எ-று.) (சீலன் என்பது நல்லறிவு நல்லொழுக்கமுள்ளவன். (உ௧)

நீலன்மீதுசூலமொன்றுநீசன்விட்டிடப்படச் ... ... ...*
சாலவேவருந்திநின்றுதக்கமாயன்மூன்புபோய்க் ... ... *
கோலமார்பின்மீதுபாணிகொண்டுமோதியண்டர்தங் ... ...*
காலனைப்பிடித்தவன்களத்தினிற்கறித்தனன் ... ... ... *

(இ-புரை.) நீசனாகியமாயன்நீலன்மேல் ஒருசூலாயுதமெடுத்தெறிந்தான் அதுவந்துபடவே நீலன்மிகவும்வருந்தி கொஞ்சம்பொழுது நின்றுபோர்செய்யத்தக்கவனாகிய மாயன் எதிரில்போய் அவனுடைய அழகுள்ளமார்பின்மேல் தன்கையினால்மோதித் தேவர்களுக்குக் காலன்போலிருக்கும் அந்தமாயனைப்பிடித்து அவன்கழுத்திற்கடித்தான்.-எ-று.(௨௨)

கண்டமீதுவிண்டிடககடித்திரத்தமுண்டுயிர் ... ... ... *
கொண்டபோதுசண்டனேடுகோதில்சிங்கனங்கெழுந் ... ...*
தொண்டிறற்கொடண்டுகொண்டுருத்தெழுந்துசிங்கனவ் ... *
வண்டலன்கவுட்கரத்தடித்தனன்முடித்தனன்... .. ... ...*

(இ-புரை.) அவன்கழுத்தானது மேலேதிறக்கும்படிகடித்து உதிரத்தைக்குடித்துப்பிராணனைவாங்கினான் அப்பொழுதுமுன்விழுந்தசண்டனும்குற்றமில்லாதசிங்கனும்அங்கெழுந்துசிங்கன் ஒளியும்பலமுமுள்ள தண்டமொன்றெடுத்துக்கொண்டு கோபித்தெதிர்ந்து அந்தப்பகைவனுடையகன்னத்தில்தன்கையினாலடித்துக்கொன்றான்.—(எ-று.) (௨௩)

அன்னகாலையவுணர்தம்மிலசமுகத்தனனுகவே ... ... ...*
மன்னுகின்றபூதர்தம்மின்மதுவெதிர்க்கவஞ்சகன் ... ... *
மின்னுனைச்சரங்கள்சிந்தவெய்யன்வையமீதுபோ ... ...*
யொன்னலன்கலங்கவேலையோதைபோலொலித்தனன் ... *

(இ-புரை.) அப்போது அவுணர்களுக்குள் அசமுகனென்பவன் எதிர்ந்தவளவில் பொருந்தியபூதருக்குள்மதுவென்பவன் அந்த அசமுகத்தனையெதிர்க்கவே அந்தவஞ்சகனாகிய அசமுகன்ஒளியுள்ளதாய்க்கூர்மைகொண்டபாணங்களையேவினான்மதுவானவன் அவன்தேர்மேல்பாய்ந்து அந்தப்பகைவன் கலங்கும்படி சமுத்திரகோஷம்போலக்கெற்சித்தான்..—(எ-று.) (அசமுகன்ஆட்டுமுகமுள்ளவன் (௨௪)

ஆர்த்தபோதிலசமுகத்தனயர்வதாகவன்னதைப் ... ... ...*
பார்த்துவீரனல்லையுய்ந்துபோகெனப்பகர்ந்துநீள்... ... *

பொழிப்புரை.

சீர்த்திகொண்டமண்ணிடைத்திரும்பவல்லை நில்லென ... ...*
வார்த்தைபேசிவந்தெதிர்ந்துமறிமுகத்தனிதுசெய்வான் ... *

(இ-புரை.) மது என்பவன்கெற்சித்தபோது அசமுகன் மூர்ச்சையானான் அதைப்பார்த்து மதுவானவனீவீரனல்லை இம்மட்டில்பிழைத்துப்போவென்றுசொல்லி மிகுந்தபுகழ்கொண்ட பூமியில்திரும்பிவிட்டான் அசமுகன்தெளிந்து மதுவென்பவனைப்பார்த்து நீவல்லவனே ஓடிப்போகாதே நில்லென்று சிலவார்த்தைகள்பேசி வந்தெதிர்ந்து இதுசெய்கின்றான்.—(எ-று.) (உரு)

மையிலாதபூதன்மீதுவன்சரம்பொழிந்திடக்... ... ... ...*
கையினால்விலக்கல்செய்துகையன்முன்புசென்றவன்... ... *
கொய்யுளைச்சகட்டினைக்கொதித்தெடுத்துவேலையிற் ... ...*
றுய்யன்வீசவையமீதுதுண்ணெனக்குதித்தனன் ... ... *

(இ-புரை.) குற்றமில்லாதபூதனாகிய மதுவென்பவன்மேல்ஈனனாகிய அசமுகன்வலிவுள்ளவைகளாகிய பாணங்களையேவினான் மதுவென்பவன்மனங்கொதித்துத்தன்கையினால் அந்தப்பாணங்களைவிலக்கிக்கொண்டெதிரில்சென்றுகுதிரைகள்கட்டிய அவன்தேரையெடுத்துப்பரிசுத்தனாகியமதுவென்பவன் சமுத்திரத்தில்வீசினவளவில் அசமுகன்விரைவாகப்பூமியின்மேல்குதித்தான்.—(எ-று.) (உசு)

குதித்துவந்துபூதன்முன்புகூடிமற்றொழிற்செயப் ... ...*
பதத்தினாலுரத்தொடம்பரத்தின்மீதெறிந்திடக்... ... ... *
கதித்தபூவின்மேவியேகளங்கமற்றமதுவின்மேற்... ... ...*
கொதித்துமாயையான்மறைந்துகொடியநேமிவிட்டனன் ... *

(இ-புரை.) குதித்துவந்துபூதனுக்கு எதிரில்கூடி மல்யுத்தஞ்செய்தான் பூதன்பலத்துடன்காலினால்தூக்கி ஆகாயத்திலெறிந்தான் அவன்சிறந்துள்ளபூமியில்வந்துகோபங்கொண்டு மாயையினால்மறைந்துகளங்கமற்ற மதுவின்மேல்கொடியசக்கரத்தை யேவினான்.—(எ-று.) (உஎ)

தந்திரங்கொண்மதுவின்மீதுதகர்முகத்தன்விட்டிடும் ... ...*
வெந்திறற்கொடிகிரிதான்விரைந்துசென்றுபூதனங் ... ... *
குந்துகின்றபடையிலாமலுறுதலிற்றிரும்பியே ... ... ...*
வந்துதீயன்முடிதடிந்துமாலிடத்தடைந்ததே ... ... ... *

(இ-புரை.) சேனைகளையுடையமதுவின்மேல் அசமுகத்தன் விட்ட வெவ்விதானபலங்கொண்டசக்கரமானது அதிவேகமாகச்சென்று அங்கிருக்கும் மதுவானவன்கையில் ஏவுகின்ற ஆயுதமில்லாமலிருந்தமையால் அதுதிரும்பிச்சென்று அந்தக்கொடியன்சிரத்தை யறுத்துவிஷ்ணுவினிடத்திற்சேர்ந்தது.—(எ-று.) (௨௮)

மதுபடைத்தலைவனுதலால் தந்திரங்கொள்ளென்றார் தகர் ஆடு - கொய்யுளைகத்தரித்தகழுத்துமயிர்.

ஆயகாலையவுணர்மன்னரனிகமோடுமெனுகலா ... ... ... *
மேலயபூதருடையவேயிலக்கர்மேவுதண்டகன்... ... ... ...*
போயெதிர்ந்துபல்லவம்பொழிந்தழிப்பவீதெலாந்... ... *
தீயசூரன்மாமகன்றெரிந்தெதிர்ந்துவந்தனன்... ... ... ...*

(இ-புரை.) இவ்வாறாகியகாலத்தில் அவுணராசர்கள்சேனையுடன் எதிரிற்சென்றமையால்அங்குப்பொருந்தியபூதர்கள்தோற்றோடினார்கள்லக்ஷம்வீரர்களிலொருவனாகிய தண்டகனென்பவன் போயெதிர்த்துப்பாணவருஷங்கள்பொழிந்து அவுணர்களையழித்தான் இதையெல்லாம்கொடியனாகியசூரன்மகனறிந்து எதிர்த்துவந்தான்.—(எ-று.) (௨௯)

வந்தெதிர்ந்தகுறளினோர்மடிந்துடைந்திடச்சாஞ் ... ... *
சிந்திமுந்திவந்திடச்சினத்தினோடுமுக்கிர ... ... ... ...*
னுந்துசூரன்மைந்தன்முன்னருற்றவன்றனுதுதே ... ... *
ரந்தரத்தின்மீதுபோகவங்கெடுத்தெறிந்தனன் ... ... ...*

(இ-புரை.) வந்தெதிர்த்தபூதர்களில் சிலரிறக்கவுஞ்சிலர்தோற்றோடிப்போகவும்பாணங்களைப்பிரயோகஞ்செய்துமுன்னிட்டுச்சென்றான் அதைக்கண்ட உக்கிரனென்னும் பூதத்தலைவன் கோபத்துடன் மேன்மைபொருந்திய சூரன்மகனுக்கெதிரிற்சென்று அவனுடையதேர் ஆகாயத்தின்மேற்போகும்படி அங்கு எடுத்தெறிந்தான்.—(எ-று.) (௩௰)

நண்ணுதேரினோடுபானுநாடுமட்டுமேகியே... ... ... ...*
மண்ணின்மேல்விழுந்துசென்றுவன்றிறற்கொளுக்கிரன் ... *
றிண்ணமுற்றவங்கமீதுசெங்கையாலடித்துநீள் ... ... ...*
விண்ணின்மீதெடுத்தெறிந்துவேறுதேரிலேறினான் ... ... *

(இ-புரை.) தானிருந்ததேருடன் சூரியமண்டலமட்டுஞ்சென்று பூமியின்மேல்வந்துவிழுந்து சென்றுவலியபலங்கொண்ட உக்கிரனுடை

யபலம்பொருந்திய சரீரத்தின்மேல் தன்கையாலடித்து அவனை நீண்ட ஆகாயத்தின்மேலெடுத்தெறிந்துவிட்டுவேறுதேர்மேலேறினான். —(எ-று.)

காசிலேழுலோகமுங்கடந்துபின்னருக்கிரன் ... ... ... *
வீசுசீர்கொள்படியின்மேல்விழுந்தனன்கிடந்தன ... ... ...*
னேசிலாததண்டிநீடிரும்பிருகியேனையோர் ... ... ... *
பூசலானவெந்தொழிற்புரிந்துடைந்துபோயினர்... ... ...*

(இ-புரை.) குற்றமில்லாத மேலேழுலோகமுங்கடந்து சென்றுபின்பு பரந்தசீர்கொண்ட பூமியின்மேல்விழுந்து மூர்ச்சையாய்க் கிடந்தான் குற்றமில்லாததண்டியும் மிகுந்தபெருமையுள்ளபிருகியும் மற்றுமுள்ளவர்களும் கொடியபோர்த் தொழில்செய்துதோற்றோடினார்கள்.

ஈதுகண்டிலக்கர்வந்தெதிர்ந்துகோல்சொரிந்தவன் ... ... *
றீதுகொண்டதேரினைச்சிதைப்பவேறுதேரின்மே... ... ...*
லூதைபோலவாவிநின்றுறுஞ்சரங்கள்கோடிவிட் ... ... *
டேதமற்றவீரர்வில்லிலக்கமுந்துணித்தனன் ... ... ...*

(இ-புரை.) இதனைக்கண்டுலக்ஷம்வீரர்களும் வந்தெதிர்ந்து பாணப்பிரயோகஞ்செய்து பானுகோபனது தீங்குகொண்டதேரை அழித்தார்கள். அவன்காற்றினைப்போல்வேகமாகவே ஒருதேரின்மேலேறிக்கொண்டுநின்றுபொருந்தியகோடிபாணங்கள்விட்டுத்துன்பமற்றஅந்தவீரர்களுடையலக்ஷம்விற்களையுந்துணித்தான்.—(எ-று.) (௯௩)

விற்றுணித்தளப்பில்வாளிவீரர்மேலழுத்தலு ... ... ... *
மற்றுநேரிலாவிலக்கர்வாடியஞ்சியோடினு ... ... ...*
ருற்றவிச்செயற்றெரிந்துரங்கொள்வீரகோளரி ... ... *
செற்றமோடுமெற்றனைந்ததீயன்முன்புவந்தனன்... ... ...*

(இ-புரை.) இவ்வாறுவிற்களைத்துணித்துப்பின்னும்அளவில்லாதவாளிகளைவீரர்மேல் அழுத்தினான் அந்தப்பாணங்கள்வந்து பட்டமாத்திரத்தில் ஒப்பில்லாதவீரர்கள்வாடிப் பயந்தோடினார்கள் பலங்கொண்டவீரசிங்கன்கோபத்துடன் சூரியனைத்தொட்டிவிற்கட்டியபானுகோபன் எதிரில்சென்றான்.—(எ-று.) (௯௪)

வந்தளப்பில்கோல்சொரிந்துவஞ்சன்விட்டகோலெலாஞ்சிந்தியாயிரஞ்சரஞ்செலுத்திவெய்யன்மார்பையங்... ... ...*

குந்துசாளரம்படுத்தவுள்ளநொந்துமாயவன் ... ... ... *
வெந்திறற்படைக்கலத்தைவீரன்மீதுவீசினான் ... ... ...*

(இ-புரை.) வந்தவீரகோளரிஅளவில்லாதகணைகள்விட்டுவஞ்சனாகிய பானுகோபன்விட்டபாணங்களையெல்லாம்அறுத்துமேலும்ஆயிரம்பாணங்கள்விட்டுப்பானுகோபன்மார்பினைப்பெரியசாளரத்துவாரம்போலத்துளைசெய்தான் அதனால்பானுகோபன் மனம்வருந்திப் பலம்பொருந்திய நாராயணாஸ்திரம்விட்டான்.— (எ-று.) (௩௰)

(கோளரியென்பது சிங்கம்.)

வீசலுற்றபடைவிரைந்துமேனியுடபொருந்தலு ... ... ...*
மாசிலாதவீரனுண்மயங்கியேவிழுந்தன... ... ... ... *
னேசில்வீரபானுவந்தெதிர்ந்துவெய்யன்வையமுற் ... ...*
றோசைநாணிவிற்பறித்தொடித்தெறிந்தவெல்லையின்... ... *

(இ-புரை.) பானுகோபனால் வீசப்பட்டபடையானது விரைவாக வந்துதன்மேனியுள்பொருந்திய வளவில் குற்றமில்லாத வீர கோளரிமனமயங்கிவீழ்ந்தான் அதைக்கண்டு ஒருவராலும்பழிக்கப்படாத வீரமார்த்தாண்டன்வந்து எதிர்ந்து பானுகோபன்தேரில்பாய்ந்து அவனுடைய ஓசைபொருந்தியநாண்பூட்டியவில்லையொடித்தெறிந்தபோது.எ-று.

தூயவீரனாகமீதுசோரிநீர்குதித்திட... ... ... ... ...*
மாயவஞ்சன்வாளினான்மனஞ்சினந்துகுத்தலுந் ... ... ... *
தீயன்மீதணிந்தவச்சிரக்கவசமற்றிட ... ... ... ... ...*
வோய்வில்வீரபானுவுமுரத்துவாள்செலுத்தினான் ... ... *

(இ-புரை.) பரிசுத்தமுள்ள வீரபானுவின்மார்பின்மேல் உதிரப்பிரவாகம்பெருகும்படி மாயவஞ்சனாகிய பானுகோபன்மனதிற் கோபித்து வாளாயுதத்தினாற்குத்தினான் அவனவ்வாறுகுத்தவே சோர்தலில்லாத வீரபானுவுந்தன்கைவாளினால் கொடியனாகிய பானுகோபன் மார்பிலதரித்தவச்சிரக்கவசம் அற்றுவிழும்படி பலத்துடன்குத்தினான்.--(எ-று.)

சூரன்மைந்தனுட்சினந்துதூயனெற்றிகுத்தலும் ... ... *
வீரபானுவீழவேவெருண்டுவீரராந்தகன் ... ... ... ...*
கோரமோடுவந்தெதிர்ந்துகோல்களாயிரங்கடேய் ... ... *
வாரமோடுமவுணனிட்டமவுலியங்கறுத்தனன்,... ... ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) சூரன்மகன்மனங்கோபித்துப் பரிசுத்தமுள்ளவனாகிய வீரபானுவின்நெற்றியில்குத்தினவளவில் அந்த வீரன்விழுந்துவிட்டான் வீரராந்தகன் அதனைக்கண்டுகோபித்துக் கோரமோடுவந்தெதிர்ந்து ஆயிரம்பாணங்களேவி ஆசையுடன்பானுகோபன்தரித்துக்கொண்டிருக்கும் மகுடத்தையறுத்தான்.—(எ-று.) (௩அ)

வேதன்முன்கொடுத்தவேலைவெய்யன்விட்டிடப்படப் ... *
போதநொந்தயர்ந்தனன்பொருந்துமற்றையைவருந் ... ...*
தீதினோடுநீங்கனுஞ்செருப்புரிந்துடைந்திடக்... ... ... *
காதல்வீரவாகுவீதுகண்டுசென்றெதிர்ந்தனன் ... ... ...*

(இ-புரை.) பிரமதேவன்தனக்குமுன்கொடுத்தவேலைப்பானுகோபன்விட்டான்அதுவந்துபடவேவீரமார்த்தாண்டனம் மிகவும்நொந்துமூர்ச்சையானான்மற்றைஅஞ்சுபேரும்வந்துபொல்லாதவனாகியபானுகோபனுடன்விற்போர்புரிந்துதோற்றுப்போய்விட்டார்கள் கண்டவர்கள் ஆசைகொள்ளத்தக்கவீரவாகுதேவரிதைக்கண்டுசென்றெதிர்த்தார்.—(எ-று.)

வீரபானு வீரமார்த்தாண்டன் என்னுமிருபேர்கொண்ட வீரனொருவனே பானு என்பதும் மார்த்தாண்டன் என்பதும் சூரியனுக்குப்பெயர்

தீதில்வீரவாகுவைத்தெரிந்தெதிர்ந்துதீயவன் ... ... ...*
வேதனல்லமாலுமல்லவேலினானுமல்லையோர்... ... ... *
தூதனீயென்னோடுபோர்தொடங்கவல்லைகொல்லென ... ...*
மாதிறற்பரித்துயர்ந்தவாகுவீதுகூறுவான் ... ... ... *

(இ-புரை.) குற்றமற்ற வீரவாகுதேவனைக்கண்டு பானுகோபன்மனமெரிந்து நீ பிரமனுமல்லை விஷ்ணுவுமல்லை வேலாயுதனுமல்லை ஒரு தூதன் இப்படிக்கொத்த நீ யென்னுடன்போர்செய்யவல்லவனோவென்றுசொல்ல மிகுந்தபலந்தாங்கியுயர்ந்த வீரவாகுதேவ ரிதனைச்சொல்லுகிறார்.—(-எ-று.) (௪௰)

வீரம்வீரர்சிறிதுமேவிளம்புவார்கொலோவெனச் ... ... *
சூரன்மைந்தன்முனிவுகொண்டுசோனைமாரிமானவெவ் ... ...*
கோரவாளிதூவலுங்குவட்டைவென்றமொய்ம்பனு ... ... *
மேருவாளிகணைசொரிந்திருஞ்செருப்புரிந்தனன் ... ... *

(இ-புரை.) வீரராயிருப்பவர்கள் தங்கள்வீரத்தைச்சிறிதாயினும் எடுத்துச்சொல்லுவார்களோ சொல்லார்கள் என்றார் அதைக்கேட்ட பானுகோபன் கோபங்கொண்டு சோனைமழையை யொப்பாகக் கொடிய பாணங்களைவிடுவன் மலையைவென்ற புசமுள்ள வீரவாகுதேவரும் அழகுபொருந்தியபாணங்களைவிப் பெரும்போர்செய்தார்.—(எ-று.) ()

மண்ணின்மேலாடுமெட்டதானமாதிரத்திலோடுநீர் ... ... ...*
விண்ணின்மேலாடுநீலம்வேலைமீதிலோடுநேமியின் ... ... ... *
கண்ணின்மேலோடுமண்டமுன்புகடிதின்மேலோடுமீளுமா ... ... ...*
லெண்ணிலாதவன்மைகொண்டவிருவர்தேருமிரதமே... ... *

(இ-புரை.) இவ்வாறு யுத்தஞ்செய்யும்போது அளவில்லாத பலங்கொண்ட இவ்விருவரும் ஏறிக்கொண்டிருக்கிற இரதங்கள் பூலோகமெங்குமோடும் அஷ்டதிக்குகளிலுமோடும் நீண்ட ஆகாயத்திலோடும் நீலநிறமுள்ளசமுத்திரத்திலோடும் சக்கரவாளகிரியினிடத்திலோடும் அண்டங்களுக்குமேல்வினாவாகவோடும் மறுபடிதிரும்பிவரும்.– (எ-று.) (சஉ)

சூரன்மைந்தன்விடுசரங்கடுப்பவன்றடுத்திடும் ... ... ...*
வீரவாகுவிடுசரங்கள்வெய்யவன்றடுத்திடு ... ... ... *
மாருமஞ்சவிந்தவாறருஞ்சரம்பொழிந்துநீ... ... ... ...*
டீரமேவுமிருவருஞ்செருப்புரிந்துலாவினார்... ... ... *

(இ-புரை.) பானுகோபன்விடுகிறபாணங்களை வீரவாகுதேவர் தடுத்துவிடுவார் வீரவாகுதேவர் விடுகிறபாணங்களைப் பானுகோபன் தடுத்துவிடுவான் யாவரும்பயப்படும்படியிந்தவாறு அரியபாணங்களைவிட்டு மிகுந்ததீரம்பொருந்திய இருவரும்போர்செய்துலாவினார்கள்.-(எ-று.)

வெந்திறற்கொள்வீரன்விட்டவிசிகமாரிசிந்திவன்... ... ...*
கந்தவாகைவாகுவின்கரத்துவில்லைவல்லையங் ... ... ... *
கந்தமற்றசூரன்மைந்தனுயிரஞ்சரங்களாற் ... ... ... ...*
சிந்தவேதுணிப்பவீரனிந்தவாறுசெய்குவான் ... ... ... *

(இ-புரை.) வெவ்விதானபலங்கொண்ட வீரவாகுதேவர்விட்டபாணவிருஷ்டிகளை அறுத்துத்தள்ளி அதற்குமேல்தனக்கு இறுதியில்லாதசூரன்மகன் ஆயிரம்பாணங்கள்விட்டுக்கட்டுத்தறிபோன்றவைகளாய்வெற்றியுள்ளபுசங்களையுடைய வீரவாகுதேவர்கைவில்லை யங்குத்துணியும்படி அறுத்தான் அதற்குமேல்வீரவாகுதேவரிவ்வாறுசெய்கின்றார்.(எ-று.)

பொழிப்புரை.

பின்னுமோர்நெடுந்தனுப்பிடித்தோராயிரஞ்சரந் ... ... *
துன்னவேவிடுத்தவன் றுலங்குவிற் றுணித்தபோ ... ... *
தன்னவெய்யன்வேறுவிற்கொடாயிரஞ்சரங்கடாம் ... ...*
மன்னிரும்புகழ்ச்சிவீரவாகுமேல்விடுத்தனன்... ... ... *

(இ-புரை.) வீரவாகுதேவர்பின்னுமொருபெரியவில்லையெடுத்து ஆயிரம்பாணம்பொருந்தவிட்டு அவனுடையபிரகாசிக்கும் வில்லையறுத்தபோது அந்தப்பானுகோபன் வேறேவில்லையெடுத்து ஆயிரம்பாணங்கள் நிலைபாகியபெருமையுள்ள வீரவாகுதேவர்மேல்பிரயோகித்தான்.()

விட்டபோதுவீரவாகுவெஞ்சரங்கமேழினு... ... ... ...*
லொட்டலன்றன்மௌலிதள்ளியாலைபத்துநூறுகோ ... *
ளொட்டுவெய்யனரணமுந்துணித்திடத்துலங்கிய ... ... ...*
மட்டில்சீர்கொள்பரிதிகண்டுமன்னுமோகைகொண்டனன் ... *

(இ-புரை.)பானுகோபனிவ்வாறுஆயிரம்பாணங்கள்விட்டபோது வீரவாகுதேவர்வெவ்விதானஎழுபாணங்களினலஅந்தப்பகைவனுடைய மகுடத்தைத்தள்ளிஉடனேவிரைவாகஆயிரம்பாணங்களைவிட்டானுகோபனுடையகவசத்தையுந்துணிக்கார் அதைவிளங்குகின்ற அளவில்லாதபெருமையுள்ளசூரியன்கண்டுமிகுந்தசந்தோஷமடைந்தான்.-(எ-று.) (௬௬)

கோரமானவாயிரங்கொடும்பெருஞ்சரங்கடாம் ... ... ...*
வீரவாகுநெற்றிமீதுவெய்யன்மைந்தனெய்யவே ... ... *
சோரியுண்டழுந்திடத்துலங்குசெங்கரத்தினு ... ... ...*
லீருடம்பினைப்பறித்தெறிந்துவீரனிதுசெய்வான் ... ... *

(இ-புரை.) சூரன்மகன்கோரமாகிய ஆயிரம்பெரும்பாணங்கள்வீரவாகுதேவர்நெற்றியில்தைக்கும்படியேவினன் அந்தப்பாணங்கள்உதிரத்தை யுண்டுகொண்டு நெற்றிக்குள் அழுந்தவே அவர்தம்முடைய ஒளியின் செய்யும்கையினல் பகைவனைப்பிளக்கத்தக்க பாணங்களைப்பறித்து எல்லுந்துவிட்டு இதுசெய்கிறார்.—(எ-று.) (௬௭)

சித்திரங்கொள்பானுவைச்செயிர்த்தவீறுசேவகன்... ... ...*
வத்திரத்திலாயிரம்வயங்கொண்மார்பிலாயிர ... ... ... *
மெத்துதோளிலாயிரம்விறற்கரத்திலாயிர ... ... ...*
மத்திரங்களெல்லைசென்றழுந்துறத்துரந்தனன்.. ... ... *

(இ-பொ.) காந்திகொண்ட சூரியனைக்கோபித்த பானுகோபனுடைய முகத்திலாயிரமும் வெற்றிகொண்டமார்பில் ஆயிரமும் உயர்ந்த தோளிலாயிரமும் பலம்பொருந்திய கைகளிலாயிரமுமாகப்பாணங்கள் விரைவிற்சென்று அழுந்தும்படிபிரயோகஞ்செய்தார்.--(எ-று.)(௪௮)

கந்தனெந்தையிளவல்விட்டகடியவாளிகொடியவன் ... ... *
வெந்திறற்கொளங்கமெங்கும்விரவியங்கழுந்தலால் ... ... *
வந்துவந்துசோரிமூடவாடிநொந்துகந்துகப் ... ... ... *
பந்திகொண்டதேரின்மீதுபானுகோபனின்றனன் ... ... *

(இ-பொ.) எம்மையாளுகிய கந்தசுவாமியினுடையதம்பியானவரேவிய கடுமையுள்ளபாணங்கள் பானுகோபனுடைய வெவ்வியபலங்கொண்டசரீரமெங்கும்பொருந்தி அழுந்தினதால் உதிரமானது வந்துவந்து உடலெங்குமூடவேவாடிநொந்து குதிரைவரிசைகொண்ட தேரின்மேல சோபத்துடனின்றான்.--(எ-று.) (௪௯)

அன்னபோதிலீதுகண்டவன்றனதுசேனையோர் ... ... ... *
மன்னுவீரவாகுமேல்புவந்தெதிர்ந்துபோர்செயத் ... ... *
துன்னுவிற்கொள்வாளிகொண்டுசுற்றம்சேனைமுற்றவுஞ்... ... *
சின்னபின்னமாகவேசெறுத்துநின்றுறுத்தனன்... ... ... *

(இ-பொ.) அப்படியவன்சோபமாய் நின்றபோது இதனைக்கண்ட அவனுடையசேனையாயிருப்பவர்கள் நிலைபெற்ற வீரவாகுதேவருக்கெதிரில்வந்து எதிர்த்துப்போர்செய்தார்கள் அவர்கோபித்து பொருந்திய வில்லில் பூட்டியபாணங்களால் நெருங்கியசேனைமுழுவதுஞ் சின்னபின்னமாக அறுத்தார்.--(எ-று.) (௫௰)

பின்புமுன்புடைந்திறந்தபெருகுபூதரியாவருந் ... ... ... *
துன்பிலாவிலக்கருந்துலக்கமானவெண்மருந் ... ... ... *
மின்பமாமகிழ்ச்சியோடுமீடிநேடுகூடியே... ... ... ... *
மண்பெரும்புகழ்ச்சிவீரவாகுவின்கணேகினார் .. .. ... *

(இ-பொ.) இதன்பின்பு முன்இறந்தமிகுதியான பூதர்கள்யாவரும் துன்பமில்லாத லக்ஷம்வீரர்களும் விளக்கமாகிய எண்மவீரர்களும் இன்பமான மிகுந்த மகிழ்ச்சியினோடும் பலத்தினோடுங்கூடிப்பொருந்தியபெரும்புகழ்ச்சியுள்ளவீரவாகுதேவரிடத்திற்சென்றுசேர்ந்தார்கள்.(எ-று.)

துற்றசோபமற்றபின்னர்சூரன்மைந்தன்வீரனேர் ... ... ...*
செற்றமோடெதிர்ந்துநூறுநூறுகோல்செலுத்தியே ... *
வெற்றிமொய்ம்பனேறுகின்றவீறுதேனைநூறலு ... ... ...*
மற்றுமோர்சகட்டிலவீரவாகுவல்லைவாவினன் ... ... ... *

(இ-புரை.) பானுகோபனானவன் பொருந்தியசோபம் நீங்கின பின்பு வீரவாகுதேவருக்கெதிரில கோபத்துடனெதிர்ந்து பதினாயிரம்பாணங்கள்விட்டு வெற்றியுள்ள வீரவாகுதேவரேறிக்கொண்டிருக்கும்பெரியதேரைநொறுக்கினவளவில வீரவாகுதேவர்விரைவாகவேறொருதேரிலேறிக்கொண்டார்.—(எ-று.) (ருஉ)

வாவிநூறுநூறுகோலிவ்வஞ்சகன்கைவில்லுடன் ... ... ...*
மேவுகின்றதேரழிப்பவேறுமோர்தேரிலேறிவெய் ... ... ... *
பாவிமற்றுமோர்சனுப்பரித்திராயிரஞ்சரந் ... ... ...*
தூவிவீரனாகமீதுமேதாயவங்கழுத்தினன்... ... ... ... *

(இ-புரை.) வேறுதேரிலேறிக்கொண்டு பதினாயிரம் பாணம்விட்டுப்பானுகோபனுடையவில்லையும் அவனிருந்ததேரையும் அழித்தார்கொடியபாவியானவன் வேறொரு தேரிலேறி வேறொரு வில்லும் பிடித்துக்கொண்டு இரண்டாயிரம்பாணமேவி வீரவாகுதேவர்சரீரத்தின்மேல்படும்படி அழுத்தினன்.—(எ-று.) (ருங)

ஆகமீதுபகழிவந்தழுந்தவீரவாகுவுஞ் ... ... .. ...*
சோகமங்குணர்ந்திரோழுதுங்கவாளிதூவியே ... ... ... *
மாகர்தெய்வன்விலலொடித்துவாளியாயிரங்கடா ... ... ...*
மேகவிட்டுவெய்யனேறுமிரதமுங்கெடுத்தனன் ... ... *

(இ-புரை.) தம்முடையசரீரத்தின்மேல்பாணங்கள் அழுந்தினமாத்திரத்தில் வீரவாகுதேவரும் சோபமென்பதைக்கொஞ்சம் அறிந்து உடனேதெளிந்து பலம்பொருந்தியபதினாறு பாணங்களேவி தேவர்களுக்குப்பகைவனாகியபானுகோபன் வில்லை யொடித்துப்பின்னும் ஆயிரம் பாணங்களேவி யவனிரதத்தையும் அழித்தார்.—(எ-று.) (ருச)

**மற்றுநூறுவாளிகொண்டுமார்பைவாயில்செய்யவோர் ... ...*
வெற்றிவையம்வெய்யனேறவீரவீரன்விசிகமங் ... ... *

குற்றவாயிரந்துரந்துரந்திறந்தநெறியினூற் ... ... ...*
றூற்றிடுஞ்சிலிமுகங்கொடேணியங்கறுத்தனன் ... ... ... *

(இ-புரை.) மறுபடியும் நூறுபாணங்களால் அவன்மார்பைவழியாகச்செய்ய அந்தக்கொடியவன் வெற்றிபொருந்தியவேவெரருதேரிமேலிருந் வீரவாகுதேவர்பொருந்திய ஆயிரப்பாணங்களேவி முன்மார்புதிறந்தவழியால் பாணங்கள் நெருங்கிக்கொண்டிருக்கும் அம்புறாத்தோணியை அறுத்தார்.—(எ-று.) (௫௫)

இந்தவாறுகண்டுவில்லினிவனைவெல்வதரிதெனூ ... ... ...*
முந்துபானுவைத்தளைந்தமொய்ம்பன்வீரன்மொய்ம்புசே... *
ரந்தவீரனுதியானவாருமோகமாகவே ... ... ... ...*
வெந்திறற்கொண்மோகமானவேல்விடுத்துநின்றனன்... ... *

(இ-புரை.) முன்னேசூரியனைத் தொட்டிலிற்கட்டிய பானுகோபன் இந்தமுறைமையைக்கண்டு இவனைவில்லினால் வெல்லுதலரிதென்று வீரம்பொருந்திய புசங்களுள்ள வீரவாகுதேவர் முதலாகிய எல்லாரும் மோகமாகும்படி வெவ்வியபலங்கொண்ட மோகவேலாயுதத்தை யேவினான்.—(எ-று.) (௫௬)

வந்தவந்தவேலினான்மயங்கிவீறுபூதரு... ... ... ... ...*
முந்துசீரிலக்கரும்முரண்பொருந்துமெண்மருங் ... ... *
கந்தனவுதூதனுந்தளர்துகநிற்ற லு ... ... ... ...*
மந்தமற்றகணைகள்சிந்தியவருருத்தொளைத்தனன் . ... ... *

(இ-புரை.) பானுகோபன்விடவந்த அந்தவேலினால் மயங்கி வீறுகொண்டபூதர்களும் முதன்மையாகியசீருள்ள லக்ஷவீரர்களும் பலம்பொருந்திய எட்டுவீரர்களுஞ்சுப்பிரமணியர் ஏவியதூதராகிய வீரவாகுதேவருந்தளர்ந்து தறிபோலநின்றார்கள் அதைக்கண்ட அவன் அளவில்லாதபாணங்கள்விட்டு அவர்களுருவத்தைத்துளைத்தான். -(எ-று).(௫௭)

ஆயகாலைமுருகனீதறிந்தமோகவேல்விடுத் ... ... ... ...*
தியமோகவேலழிப்பவேருலாவுவீரமோ . ... ... , ... *
டோய்வில்வென்றிமொய்ம்பனங்குளந்தெளிந்துதானவன் ...*
சேயின்மீதிலாதிவேல்செலுத்துமாறெடுத்தனன் . ... ... *

(இ-புரை.) அவனப்படிதுளைத்தபோது முருகக்கடவுளிதனையறிந்து அமோகவேல்விடுத்து பொருந்திய மோகவேலை யழித்தார் அழகு

பொருந்தியவீரர்களுடன் ஒப்வில்லாதவெற்றியுள்ள வீரவாகுதேவர் உள்ளந்தெளிந்து சூரன்மகன்மேல் சிவனுடையவேலைவிடுப்பதற்கு எடுத்தார்.—(எ-று.) (௫அ)

கண்ணுதற்பரன்படைக்கலந்தொடுக்கின்மாய்வுறப் ... ...*
பண்ணுமந்தவுந்தவேலைப்ரித்துவந்திலேனெனு ... ... *
வெண்ணிமாயமாயொளித்திருக்கைவெய்யனேகலும் ... ...*
விண்ணினின்றகன்றருக்கன்மேல்கடற்படிந்தனன் ... ... *

(இ-புரை.) நெற்றிக்கண்ணுள்ளபரமசிவன் சூலத்தையேவினால் இறக்கும்படிசெய்யும் நான் உந்துகின்ற அந்தவேல் எடுத்துக்கொண்டுவரவில்லையென்று கருதி மாயமாய்ப்பானுகோபன் தன்னிருப்பிடம்போய்ச்சேர்ந்தான் அப்போது ஆகாயத்தைவிட்டுச் சூரியன் மேற்குச்சமுத்திரத்தில்சேர்ந்தான்.—(எ-று.) (௫௯)

நண்ணலன்கரந்துபோனசெய்கைதன்னைநாடியே ... ... *
திண்ணமுற்றதண்டமோடுதிண்டிறற்புயத்திறேன் ... ...*
றண்ணெனதிரும்பியேதுலங்குவெற்பெறிந்தவேற் ... *
பண்ணவன்றன்முன்பணிந்துபாசறைக்கண்மேவினன் ... ...*

(இ-புரை.) பகைவனாகிய பானுகோபன் மறைந்துபோன செய்கை அறிந்துபலம்பொருந்தியசேனையுடன் திண்ணியபலங்கொண்ட புசமுள்ள வீரவாகுதேவர் விரைவாகத்திரும்பிவிளங்குகின்ற கிரவுஞ்சகிரியைப்பிளந்தவேலாயுதமுள்ள சுப்பிரமணியர்சந்நிதியில்சென்றுபணிந்துபாசறையினிடத்திற்பொருந்தியிருந்தார்,—(எ-று.) (௬௰)

[வேறு.]

இந்தவாறிவணின்றிடவிரவியம்பகைஞன் ... ... .. ...*
புந்திதன்னிடையளவிலாப்பெருந்துயர்பொருந்த ... ... *
நொந்திருந்தனனிவையெலாமொற்றர்போய்நுவல ... ...*
வந்தவேலையிலறிந்தனன்சூரனுமவுணன் ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுவீரவாகுதேவரிருந்தார் பானுகோபனுள்ளத்தினிடத்தில் அளவில்லாதபெருந்துன்பம் பொருந்தும்படிநொந்திருந்தான் இந்தச்சமாச்சாரங்களை யெல்லாந்தூதர் போய்ச்சொன்னார்கள் அப்போது சூரபன்மனனவுன் அறிந்தான்.—(எ-று.) (௬௧)

அறிந்ததானவனானையான்படையொடுமணுகிச் ... ... ... *
செறிந்தசேனையும்பெருங்கிரவுஞ்சமாஞ்சிலம்பை... ... ...*
யெறிந்தவேற்படைக்குமரனுஞ்சமரில்வந்தெதிர்ந்து... ... *
மறிந்திடும்படிபொருவனென்றுன்னியேயவணிருந்தான் ... ...*

(இ-புரா.) அறிந்தசூரனானவன் நாளையதினம் நான் சேனையுடன் சென்றுபொருந்திய பூதப்படையும் பெரியகிரவுஞ்சமலையைப் பிளந்தவேற்படையுள்ள குமரனும்போரில்வந்து இறக்கும்படியுத்தஞ்செய்கிறேனென்றெண்ணிக்கொண்டிருந்தான்.—(எ-று.) (௬௨)

வண்டுலாவரும்வண்டுழாய்மிலைச்சியமௌலித் ... ... ...*
திண்டிறற்பெறுமரியுரத்திலங்கியதிருப்போ ... ... ... *
லெண்டவிர்ந்தவெண்சீகரச்சாகரத்தினை.போ... ... ... ...*
சண்டவெங்கதிர்பரப்பிவந்தெழுந்தனன்றபனன் ... ... *

(இ-புரா.) வண்டுகள் உலாவுகின்றவளப்பம்பொருந்திய துளசிமாலைசூடிய கிரீடமணிந்த மிகுந்தபலம்பெற்ற விஷ்ணுவின் மார்பினிடத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் மகாலக்ஷ்மிபோல அளவிறந்த நீர்த்துளிகளுள்ள சமுத்திரத்தினிடத்தில் சூரியன் வெவ்விய கிரணங்களைப் பரப்பிவந்துதயமானான்.—(எ-று.) (௬௩)

கருமைநிறமுள்ள கடலிலெழுந்தசூரியன் திருமால்மார்பிலிருக்கும் திருமகள்போலிருக்கின்றனென்க.

கந்தமாமலர்ப்பொதும்பர்சூழ்கமலைமாநகர்வா ... ... ...*
ழெந்தைஞானசம்பந்ததேசிகன்றனைபெதிர்ந்தார ... ... *
பந்தவாணவப்படலம்விண்டிரிந்திடும்படிபோ ... ... ...*
லந்தரம்புவிமறைத்தபேரிருளகன்றதுவே ... ... ... *

(இ-புரா.) வாசனைதங்கிவண்டுகளாற்சூழப்பட்ட மலர்களையுடைய சோலைசூழ்ந்த திருவாரூரில் வீற்றிராநின்ற எம்மையனுகிய திருஞான சம்பந்தகுருவைத் தரிசித்தவர்கள் பந்தமாகிய ஆணவக்கூட்டம்பிரிந்து நீங்குவதுபோல ஆகாசத்தையும் பூமியையும் மறைத்தபேரிருள் நீங்கியது.—(எ-று.) (௬௪)

முதல்நாள் யுத்தம் முற்றிற்று.

---

## இரண்டாநாள்சூரன்யுத்தம்.



அன்னகாலையிலிலக்கவெள்ளம்படைபனுகத் ... ... ... *
துன்னுசீரசுரேந்திரனுடனதிசூர ... ... ... ...*
னென்னநின்றிடுதம்பியாமைந்தராமிருவர் ... ... ... *
மன்னிடும்படைத்தலைவராயிரதமேலவரவே ... ... ... ...*

(இ-புரை.) அப்போதுலக்ஷம்வெள்ளஞ் சேனைசூழ்ந்துவரத் தன் தம்பிமார்புத்திரர்களாகிய சீர்பொருந்திய அசுரேந்திர னென்பவனும் அதிசூர னென்பவனுமாகிய இருவரும்பொருந்திய படைத்தலைவர்களா யித்தேரின்மேலவரவும். (எ-று.) (சுரு)

சீர்புரிந்திடுமொருபெருந் தேரின்மேற்றிறற்சூ ... ... ... *
ரூர்பிரிந்துபோர்புரிந்திடவருவதலகண்டோடிக ... ... ...*
கூர்புரிந்திடுகுலிசவேற்கரத்திறைன்கூற ... ... ... ... *
வேர்புரிந்திடுகுமரவேளறிந்தனனிதனை... ... ... ... ...*

(இ-புரை.) அலங்காரஞ் செய்திராநின்ற ஒருபெரியதேரிலேறிக் கொண்டு பலம்பொருந்தியசூரனானவன் நகரம்விட்டுப்புறப்பட்டுப்போர் செய்யவருவதைக்கண்டு கூர்பொருந்திய வச்சிராயுதமேந்தியகையையுடைய தேவேந்திரன் சென்றுசொல்ல இந்தச்சேதியை அழகுள்ளகுமாரசுவாமியறிந்தார்.—(எ-று.) (சுசு)

அறிந்துமாருதசசாரதியியற்றுதேரனுகிச் ... ... ... *
சிறந்தசீருளவிளையவீரதமேற்செலலப் ... ... ... ...*
புறந்தராதவீராயிரவெள்ளமாம்பூதர் ... ... ... ... *
செறிந்துசூழ்ந்திடத்தானவன்படைக்கெதிர்சேர்ந்தான்... ...*

(இ-புரை.) அறிந்துவாயுதேவனாகிய சாரதி அலங்கரித்துக்கொண்டுவந்த இரதத்தின்மேலாரோகணித்துக்கொண்டு சிறந்தசீருள்ளதம்பிமார்களும் இரதத்தின்மேல்வரவும் போர்முகத்தில் முதுகுகாட்டியோடாத இரண்டாயிரம்வெள்ளம் பூதர்களுஞ்சூழ்ந்துவரவும் சூரன்படைக்கெதிரில்சேர்ந்தார்.—(எ-று.) (சு௭)

சேர்ந்தக்காலையிற்பூதருமவுணருஞ்சினங்கொண் ... ... *
டார்ந்தப்பலபடைக்கலஞ்சொரிந்துநின்றார்த்து ... ... *

நேர்ந்துகிட்டியங்கிருஞ்செருப்புரிந்தனர்நெடுஞ்சீர் ... ...*
சேர்ந்தசாரதரின்னணமின்னர்செய்தனரோ... ... ... ... *

(இ-புரை.) சேர்ந்தபோது பூதர்களும் அவுணர்களுங்கோபங்கொண்டு நிறைந்த பல ஆயுதங்களையெறிந்து நின்று ஆரவாரித்து எதிரிட்டுக்கிட்டிப் பெரும்போர்புரிந்தார்கள் மிகுந்தசீர்பொருந்திய பூதர்கள்பின்பு இவ்வாறுசெய்தார்கள்.—(எ-று.) (௬அ)

ஆயிரம்பெருந்தேரிணைக்கரங்களாலள்ளி ... ... ... ...*
யாயிரங்கரிகெட்டிடமோதுவரதற்பி ... ... ... ... *
னாயிரங்கரிபாணிகொண்டெற்றிமெய்யடற்பத் ... ... ...*
தாயிரம்பரியழிவுறப்புரிகுவரடலால ... ... ... ... *

(இ-புரை.) பூதர்கள்தங்கள் பலத்தினால் ஆயிரம்பெரியதேர்களைக் கைகளாலெடுத்து ஆயிரம்யானைகளிறக்கும்படிமோதுவார்கள் அதன்பின்பு ஆயிரம்யானைகளைக் கைகளாலடித்துக்கொன்று அந்தயானைப் பிணங்களால் வன்மைபொருந்திய பதினாயிரங்குதிரைகள் அழியும்படிசெய்வார்கள்.—(எ-று.) (௬௯)

கோடிவெம்பரிபாணிகொண்டாயிரங்குலவுங் ... ... ... *
கோடியாகியவவுணரையடித்துயிர்குடித்தார ... .. ...*
வாடுறுவிறற்றகுவரும்பூதரைவளைவுற் ... ... ... ... *
றீடுசேர்ந்திடுபற்பலபடையினுலிறுத்தார் ... ... ... ...*

(இ-புரை.) கொடுமையான கோடிகுதிரைகளால் விளங்குகின்றஆயிரங்கோடி அவுணர்களையடித்துயிர் குடித்தார்கள் கெடுதலில்லாத பலமுள்ள அவுணர்களும் பூதர்களைவளைந்துகொண்டு பலம்பொருந்திய பலபல ஆயுதங்களால்கொன்றார்கள்.—(எ-று.) (எ௰)

வீறிவந்திடுதானவரானவர்வெகுண்டு ... ... ... ... ...*
சீறுசாரதருடல்பதைபதைத்திடச்சிதைத்த ... ... ... *
லீறிலாவிறற்பூதமன்னவர்தெரிந்தெதிர்போய் ... . ... ...*
மாறுறும்படிதானவர்தானையைவதைத்தார் ... ... ... *

(இ-புரை.) வீறிவந்த அவுணர்கள்கோபித்துச் சீறுகின்ற பூதர்களுடையசரீரங்கள் பதைபதைக்கும்படிகொல்லுதலை இறுதியில்லாதவெற்றியுடைய பூதராசர்கள்பார்த்து எதிரில்சென்று திரும்பியோடும்படிஅவுணர்சேனைகளைக்கொன்றார்கள்.—(எ-று.) (௭௧)

பொழிப்புரை.

பிணங்கள்சோரிவெற்பாறுபோன்மேவுறப்பெருஞ்சீர்க் ... *
கணங்கடானவர்கணங்களையடுதிறங்காணூஉ... ... ... ...*
விணங்குசீரதிசூரன்வந்தாறுமுகனிருதாள்... ... ... ... *
வணங்குபூதர்மேற்பொழிந்தனன்பகழியாமாரி ... ... ...*

(இ-பொ.) பிணங்கள்மலைகள்போலவும் உதிரம்நதிகள்போலவும் பொருந்தும்படி மிகுந்தசீருள்ள பூதங்கள் அவுணர்கூட்டத்தைக்கொல்லுந்தன்மையைப்பார்த்துச் சீர்பொருந்திய அதிசூரன்வந்து ஆறுமுகக்கடவுளுடைய இரண்டுதிருவடிகளையும் வணங்கும்பூதர்கள்மேல் பாணவருஷம்பொழிந்தான். - (எ-று.) (எ௨)

அந்தவேலையிற்பூதரிலுக்கிரனணுகித் ... ... ... ... ...*
தந்திமாமுகன்முன்னவன்சுதன்மிசைத்தண்டோன் ... ... *
றுந்தவுந்துமகைதயதிசூரனதுரத்து... ... ... ... ...*
வந்துசாலிகைசிந்தியதவுணர்கண்மயங்க... ... ... ... *

(இ-பொ.) அப்போதுபூதரில் உக்கிரனென்பவன் வந்து யானைமுகத்தாருகனுக்கு முன்பிறந்த சிங்கமுகன்மகனாகிய அதிசூரன்மேல் ஒருதண்டாயுதமேவினான் அவ்வாறு ஏவிய அந்ததண்டானது வந்து அவுணர்கள்மயங்கும்படி அந்த அதிசூரனுடையமார்பில் அணிந்திருக்குங் கவசத்தையறுத்தது. - (எ-று.) (எ௩)

மூடுசாலிகைசிந்தலுஞ்சிந்தையுண்முனிந்து ... ... ... *
பாடிலுக்கிரன்மீது நூறாயிரம்பகழி ... .. ... ... ...*
கூடவிட்டுழிக்குருதிநீரொழுந்ததுகொதித்தோ... ... ... *
ரீடுவெற்புவிட்டவுணர்கோன்சேரினையிறுத்தான் ... ... ...*

(இ-பொ.) தன்மார்பைமறைத்திருந்தகவசம் அறுந்தமாத்திரத்தில்மனதிற் கோபங்கொண்டு அழிவில்லாத உக்கிரன்மேலே லக்ஷம்பாணங்கள் சேரும்படிபிரயோகஞ்செய்தபோது உதிரப்பிரவாகம்பெருகிற்று அவன்மனங்கொதித்துப்பலப்பொருந்திய ஓர்மலையைவிட்டு அவுணர்க்கிறைவனாகிய அதிசூரன்சேரியையழித்தான். - (எ-று.) (எச)

மற்றொர்வையமேற்பாய்தலுமுக்கிரவலியோன் ... ... ...*
செற்றமோடுதேர்ப்பரிகளையுதைத்திடத்தீயோன் ... ... *
றற்றுதூறுகோல்விடுத்தலுநெடியகைத்தடியா ... ... ...*
லிற்றிடும்படிவிலக்கவேதிரமேயினனே... ... ... ... *

(இ-புரை.) அவன்வேறொருதேரிலேறினவளவில் உக்கிரனென்றும் வல்லவன்கோபத்துடன் அதிகூரன்தேரிற்கட்டிய குதிரைகளையுந்தக்கவே அவன்நெருங்கிய நூறுபாணங்கள்விட்டான் உக்கிரனவன் நீண்ட தன்கைத்தண்டினால் அவைகள்முறியும்படி விலக்கி அந்தசமயத்தில் அவனும்வேறுதேரிலேறினன்.—(எ-று.) (௭௫)

[வேறு.]

ஏறிநின்றவதிகூரனுக்கிரனை ... ... ... ... ... ... *
யீறுசெய்வனெனவெண்ணியே ... ... ... ... ... *
சீறனற்படையரும்புனற்படை ... ... ... ... ... *
திறற்சமன்றனதுதிண்படை ... ... ... ... ... *
வீறுகின்றதொருகாலினுந்துபடை ... ... ... ... ... *
மின்படைத்தவிதிதன்படை ... ... ... ... ... *
மாறனென்படைவிட்டுப்பிடித்துடல் ... ... ... ... *
வருந்துறாமையருந்தினான் ... .. ... ... ... *

(இ-புரை.) வேறுதேரிலிருந்த அதிகூரனவன் இந்த உக்கிரனைக் கொல்லுகிறேனெனக்கருதிச்சீறுகின்ற ஆக்கினேயாஸ்திரம் அரியவாருணாஸ்திரப்பலம்பொருந்திய வெற்றிகொண்ட யமாஸ்திரம் மேன்மைபொருந்தியதாய்ச் செலுத்தும்படியான வாயுவியாஸ்திரம் ஒளிபொருந்திய பிர்ம்மாஸ்திரம் பிரகாசம்பொருந்திய நாராயணாஸ்திரம் என்னும் இந்ததேவாஸ்திரங்களை யேவினவளவில உக்கிரன் அவைகளைப் பிடித்து உடல்வருந்தாமல்விழுங்கினான்.—(எ-று.) (௭௬)

விட்டவிட்டபடைமுற்றுமுற்றுதிறல் ... ... ... ... ... *
மிக்கவுக்கிரன்விழுங்கலுந் ... ... ... ... ... *
துட்டனாவதிகூரனுநெடும்படை ... ... ... ... ... ... *
தொட்டிடப்பரனையுக்கிர ... ... ... ... ... *
னிட்டமோடுதொழுதஞ்செழுத்தினை ... ... ... ... ... *
யியம்பிநின்றிடலுமெந்தைதன் ... ... ... ... *
நெட்டிரும்படைதிரும்பிமுக்கணுடை ... ... ... ... *
நின்மலன்புடையடைந்ததால், ... ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறு அவன்பாணங்கள்விடுந்தோறும் அவைகளை எல்லாம்வல்லபத்திலுமிகுந்தஉக்கிரனவன்விழுங்கினவளவில் துஷ்டனாகிய அதிகூரன்சிவாஸ்திரம் பிரயோகஞ்செய்தான் உக்கிரன்பரமசிவனை

அன்புடன்தொழுது பஞ்சாக்ஷரத்தைச் சொல்லிக்கொண் டிருந்தான் எம் இறைவனது நீண்டபெருமையுள்ள அஸ்திரமான துதிரும்பித்திரிநேத்திரங்களுள்ள அவ்விறைவனிடத்திற்போய்ச்சேர்ந்தது.—(எ-று.)(௭௭)

ஈதுகண்டரிமுகத்தன்மாமக... ... ... ... ... ... ... *
னிலங்குதேரினுமிறங்கியே... ... ... ... ... ...*
கோதுசெய்யுமொருதண்டுகொண்டுமிகு... ... ... ... *
கூளிமன்னனெதிர்கூடிவண் ... ... ... ... ...*
போதுகொண்டதொடைகொண்டதோண்மிசை ... ... *
புடைப்பவக்கதைபறித்தவன் ... ... ... ... ...*
றீதுகொண்டவரமீதடித்ததுழி... ... ... ... ... ... *
றிறந்ததொலலுயிரகற்றனன்... ... ... ... ...*

(இ-புரை.) இதனைக்கண்டு சிங்கமுகன்மகன் பிரகாசியாநின்ற தேரைவிட்டிறங்கிப் பொல்லாங்குசெய்வதாகிய ஒருதண்டமெடுத்துகொண்டுமிகுந்தபூதர்களுக்கரசனாகிய உக்கிரனெதிரில்கூடிவளமைகொண்டமாலைசூடிய அவன்தோளின்மேல அடித்தான் உக்கிரன் அந்தக்கதாயுதத்தைப்பிடுங்கிக்கொண்டுதீங்குள்ள அவுணன்மார்பினிடத்தில்அடித்தபோது அவன்சிறந்தபழமையான உயிர்நீங்கினன்.—(எ-று.) (௭௮)

இன்னவாறதுதெரிந்துநெஞ்சக ... ... ... ... ... *
மெரிந்துதானவர்களிந்திரன் ... ... ... ... ...*
மன்னுபூதர்கள்பதைத்துமாளும்வகை ... ... ... ... *
வாளிசிந்தியெதிர்வந்தபோ ... ... ... ... ...*
தின்னலற்றதுறண்மன்னரிற்கனக ... ... ... ... ... *
னென்னுமன்னவனெதிர்ந்துநின் ... ... ... ...*
றன்னவஞ்சனொடுபோர்புரிந்திடவு... ... ... ... ... *
மாயிரங்கணைவிடுத்தனன்... ... ... ... ... ...*

(இ-புரை.) அதிசூரனிறந்த முறைமையை அறிந்த அசுரேந்திரன் மனங்கொதித்து அவ்விடத்திற்பொருந்திய பூதர்கள்பதைத்துமாளும்படிப் பாணப்பிரயோகஞ் செய்துகொண்டு எதிரில்வந்தபோது துன்பம் நீங்கிய பூதராசர்களில் கனகனென்பவன் எதிர்ந்துநின்று அந்தவஞ்சகனுடன்போர்செய்ய அவன் ஆயிரம்பாணங்களைவிளுன்.-(எ-று.) (௭௯)

மெத்துமத்திரமுருத்தனிற்பட... ... ... ... ... ...*
மெலிந்தனன்கடிதுவீறுமுன் ... ... ... ... *

மத்தமன்னன்பவனெதிர்ந்துபோர்புரிய... ... ... ... ...*
வஞ்சனெண்ணில்பலவாளிதூஉ ... ... ... ... *
யெய்த்திடும்படியிழைப்பமத்தனெதி... ... ... ... ...*
ரெய்திவெய்யசமர்செய்திடப்... ... ... ... ... *
பத்துநூறுகணைசிந்திமத்தனு ... ... ... ... ... ...*
மயர்ந்திடக்கடிதுபண்ணினான் ... ... ... ... *

(இ-புரை.) மேன்மையுள்ளபாணங்கள்வந்து அவன் உருவத்திற்ப ட்டுச் சோபமடைந்து மறுபடி தெளிவதற்குமுன் பூசமன்னரில் உன்ம த்தனென்பவ னெதிர்த்துபோர்செய்ய அசுரேந்திரன் அளவில்லாத ப லபாணங்களேவி அவனிளைக்கும்படிசெய்தான்-மத்தனென்பவன் அதை க்கண்டு அவுணனெதிரில்சென்றுவெவ்விதானபோர்செய்கையில்அசுரே ந்திரன் ஆயிரம்பாணங்களேவி அந்தமத்தனுடவிரைவாகமூர்ச்சிக்கும்ப டிசெய்தான்.—(எ-று.) (அ௰)

வீறுசிங்கனதுபின்புமுன்பணுகி ... ... ... ... ...*
வெஞ்செருப்புரியவஞ்சக ... ... ... ... ... *
னூறுவெங்கணைவிடுப்பவன்னவனு ... ... .. ... ...*
நொந்துநின்றிடலுமுந்துசீ... ... ... ... ... *
ரோறுசாரதர்கண்மன்னர்பின்னுள ... ... ... ... ...*
ரியாவரும்பொருதிளைத்திடச்... ... ... ... ... *
சீறிவந்தனனிலக்கர்தம்மினுயர் ... ... ... ... ... ...*
திண்டிறற்குலவுதண்டகன் ... ... ... ... ... *

(இ புரை.) அதன்பின்பு மேன்மைபொருந்திய சிங்கனென்பவன் அசுரேந்திரனெதிரிற்சென்றுகொடிதானபோர்செய்யக்கண்டுவஞ்சகனா கிய அசுரேந்திரன் நூறுபாணங்களேவினான் அதனால்சிங்கனும்வருந்திநி ன்றமுன் முதன்மையானசீர்பொருந்திய பூதராசர்களாயிருப்பவர்கள்எல் லார்தளும்எதிர்த்துப்போர்செய்து இளைத்தார்கள் அதைக்கண்டலக்ஷம் வீரர்களில் மிகுந்தபலமுள்ள தண்டகனென்பவன் சீறிக்கொண்டு வந் தான்.—(எ-று.) (அக)

தாருகன்றன்மகன்வத்திரத்தினுயர்... ... ... ... ... *
தண்டகன்கணைகளாயிரம்... ... ... ... ... ...*
வீரமோடுவிடநொந்துதந்திதரு ... ... ... ... ...*
வெய்யனெண்கணைகளெய்யவே... ... ... ... ...*

பொழிப்புரை.

சீருலாறுகல்படப்பெருந்துயர் ... ... ... ... ... *
செறிந்திடக்கடிதுசோமுகன் ... ... ... ... ...*
கோரமோடணுகியாயிரங்கணைகள் ... ... ... ... ... *
கொண்டுதேரழிவுகண்டனன் ... ... ... ... ...*

(இ-பொ.) தாருகாசுரனுடைய மகனாகிய அசுரேந்திரன் முகத்தினிடத்தில்தண்டகன் ஆயிரம்பாணங்கள்வீரமுடனேவிடயானைமுகமுள்ளதாருகன்பெற்றவெய்ய அதிசூரன்வருந்தி யெட்டுப்பாணங்களேவினான் அவைகள்தண்டகனது சீர்பொருந்தியநெற்றியில் தைக்கவே அவன்மிகுந்ததுயரங்கொண்டிருந்தான் அதைக்கண்டசோமுகன்கோரமுடன்விரைவிற்சென்று ஆயிரம்பாணங்களால் அவன்தேர் அழிவாகும்படிசெய்தான்.—(எ-று.) (௮௨)

தேரழிந்திடலுமானைமாமதலை ... ... ... ... ... ...*
சீறிவேறிரதமேறியே ... ... ... ... ... ... *
வீரமோடுவருசோமுகன்றன்மிசை ... ... ... ... ...*
வென்றியோர்படைவிடுப்பவங் ... ... ... ... *
கேருலாவுமவனுந்தளர்ந்தன ... ... ... ... ... ...*
னிலங்குசீர்விசயன்வந்துநீ ... ... ... ... ... *
டாருகன்றன்மகன்வில்லைவல்லைகணை ... ... ... ... ...*
யாயிரங்கொடுதடிந்தனன் ... ... ... ... ... *

(இ-பொ.) தேரழிந்தவளவில் ஆனைமுகனுடையபெரியமகன்சீறி வேறொருதேரின்மேலேறி வீரமுடன்வருகின்றசோமுகன்மேல் வெற்றியுள்ள ஒருபாணமேவினான் அப்போது அழகுபொருந்திய சோமுகனுந்தளர்ச்சியடைந்தான் அதைக்கண்டு பிரகாசியாநின்ற சீருள்ளவிசயனென்பவன்வந்து தாருகனுடைய மகன்பிடித்தநெடியவில்லை ஆயிரம்பாணங்களால் விரைவிலே அறுத்தான்.—(எ-று.) (௮௩)

கொண்டவில்லழியவந்தெதிர்ந்துபொரு... ... ... ... *
கொற்றவீரன்விறல்பற்றலன் ... ... ... ... ...*
கண்டுதண்டதுவிடப்படத்தளர் ... ... ... ... ... *
கலக்கமுற்றனனிலக்கரி ... ... ... ... ... ...*
லண்டுமேனையரடைந்துவிற்சமர் ... ... ... ... ... *
புரிந்துடைந்திடலுமாசிலா ... ... ... ... ...*
மண்டுவீரமுளகந்தனுக்கிளவல் ... ... ... ... ... *
வந்துவெய்யனொடெதிர்ந்தனன் ... ... ... ...*

(இ-புரை.) தான் வைத்துக்கொண்டிருந்த வில்லானது அழியவே பகைவனாகிய அசுரேந்திரன் வெற்றியுள்ளவிசயனென்னும் வீரனுடையபராக்கிரமத்தைக்கண்டு ஒருதண்டாயுதமேவினான் அதுபட்டமாத்திரத்தில் அவ்வீரனுஞ்சோர்ந்து கலக்கங்கொண்டான் அதைக்கண்டு லக்ஷம் வீரரில்பொருந்திய மற்றவேர்களு மிவ்வாறுவந்து விற்சண்டைசெய்து தோற்றார்கள் அதற்குமேல் கந்தசுவாமிக்குத் தம்பியாகிய மிகுந்த வீரமுள்ள குற்றமில்லாத வீரவாகுதேவர்வந்து அசுரேந்திரனுட னெதிர்த்தார்.—(எ-று.) (அச)

கைத்தனுத்தனைவளைத்துமெத்திய ... ... ... ... ...*
கடுஞ்சரஞ்சிதறிவெய்யவன் ... ... ... ... ... *
மைத்தனுத்தனைமறைப்பவன்னவனு ... ... ... ... ...*
மன்னுமாயிரநல்வாளிதான் ... ... ... ... ... *
சுத்தன்மீதுபடவிட்டொரேழுகணை ... ... ... ... ...*
தொட்டுவிற்றடியவிற்கொளாப் ... ... ... ... *
பத்துநூறுகணைசிந்திவெய்யனுறு ... ... ... ... ...*
தேனாவில்லொடுபடுத்தனன்... ... ... ... ... *

(இ-புரை.) வீரவாகுதேவர் தன்கைவில்லைவளைத்துத்தவறுபடாத கொடியபாணங்களையேவி வெய்யனுடையகருமைநிறமுள்ள சரீரத்தை மறைத்தார் அவனும்நன்மைபொருந்திய ஆயிரம்பாணங்கள் வீரவாகுதேவர்மேற்படும்படி யேவிப்பின்னும் ஏழுபாணம்விட்டு அவர்வில்லையறுத்தான் அவர்வேறொருவில்லெடுத்து ஆயிரம்பாணங்கள்விட்டு அவன்தேனாயும் வில்லையும் அழித்தார்.—(எ-று.) (அரு)

வேறுதேரவுணனேறிவிற்கொடுபா... ... ... ... ... *
வீரவாகுவுறுதேரினை ... ... ... ... ... ...*
நூறுகோலதனினூறுகாலதனி... ... ... ... ... *
னூபுரத்துவருசேவகன் ... ... ... ... ... ...*
மாறிலாவிறல்கொள்பாவிதேரினிடை ... ... ... ... *
வாவிமேவுதிறல்வாளினற்... ... ... ... ... ...*
பேறதாமொருகரந்துணித்துழி ... ... ... ... ... *
பிடித்ததண்டுகொடடித்தனன் ... ... ... ... ...*

(இ-புரை.) அசுரேந்திரன் வேறொருதேரிலேறிக்கொண்டு வில்லொன்றுமேந்தி நூறுபாணங்களால் வீரவாகுதேவ ரேறிக்கொண்டிருக்கும் தேரினை அழித்தபோது பார்வதிதேவியார் பாதச்சிலம்பிலிருந் துதிர்த்

த மாணிக்கரத்தினத்திலுண்டாகிய மாணிக்கவல்லிபெற்ற வீரவாகுதேவர் மாறுதலில்லாத பலம்பொருந்திய பாவியாகிய அசுரேந்திரன் தேரில் பாய்ந்து வெற்றிபொருந்திய வாளாயுதத்தினால் பேறுகிய அவனுடைய ஒருகையை வெட்டினபோது அவன்மற்றொருகையிற்பிடித்ததண்டாயுதத்தினால் வீரவாகுதேவனையடித்தான்.—(எ-று.) (அசு)

ஊறில்வீரனவுணன்சிரத்திடை... ... ... ... ... ...*
யுதைத்துமீளுதலுமொன்னலன் ... ... ... ... *
சீறிவாள்கொடுதொடர்ந்துவந்துழி ... ... ... ... ...*
திரும்பியங்கவனைவாளினு ... ... ... ... ... *
னூறினானவுணரஞ்சியோடினர் ... ... ... ... ... ...*
நுவன்றிடற்கரியசீரினால்... ... ... ... ... ... *
வீறுசூரனிதுகண்டுபூதர்குழு ... ... ... ... ... ...*
மீதுவெம்மையொடுமேவினான் ... ... ... ... *

(இ-புரை.) பழுதில்லாதவீரவாகுதேவர் அசுரேந்திரன்தலையினிடத்திலுதைத்துத் திரும்பிவிட்டார் அந்தப்பகைவன் சீறி வாளேந்திக்கொண்டு பின்தொடர்ந்துவந்தபோது திரும்பி அவனைத்தம்முடைய வாளாயுதத்தினால்வெட்டினார் அவுணர்கள்கண்டுபயந்து ஓடினார்கள் சொல்லுதற்கரிய சீரினால்மேன்மைமதங்கிய சூரனிதனைக்கண்டு பூதர்கூட்டத்தின்மேல் வெப்பத்துடன் எதிர்ந்தான்.—(எ-று.) (அஎ)

முந்திவந்துயர்தனுக்குனித்தனன் ... ... ... ... ...*
முழங்குநாணொலிவழங்கலுஞ் ... ... ... ... *
சிந்தினார்சிலரிரிந்துளார்சிலர் ... ... ... ... ... ...*
திகைத்துளார்சிலர்செகத்தின்மே ... ... ... ... *
லிந்தவாறுமிகுபூதர்நொந்தனர்க... ... ... ... ... ...*
ளியாண்டுபத்துடனிரண்டுதா... ... ... ... ... *
னந்தநாணொலியொழிந்ததில்லையெனி... ... ... ... ...*
லாரவன்றன்விறல்கூறுவார் ... ... ... ... ... *

(இ-புரை.) சூரன் பூதர்களுக்கெதிரில்வந்து உயர்த்தவில்லில்வளைத்து முழங்கும் நாணொலியுண்டாக்கினான் அந்தவோசையினால் சிலபூதர்களிறந்தார்கள் சிலபூதர்களோடினார்கள் சிலபூதர்கள் அந்தப்பூமியினிடத்தில்திகைத்துநின்றார்கள் இந்தவாறு அநேகம்பூதர்கள் வருந்தினார்கள் (இவர்கள்செய்கை யிப்படியிருக்க.)

அந்தநாளேனைசயானது பன்னிரண்டுவருஷவனாயில் நீங்காமலிருந்தது இப்படியிருக்குமானுல் அவனுடையபராக்கிரமத்தை அளவிட்டுச்சொ ல்லத்தக்கவர்கள்யாவர் ஒருவருமில்லை.—(எ-று.) (அஅ)

இன்னசெய்கைதனைமன்னுசாரத ... ... ... ... ...*
விராசர்கண்டவணெதிர்ந்தபோ ... ... ... ... *
தன்னவஞ்சனொருபத்துநூறுதொட ... ... ... ... ...*
ராயிரந்தழுவுகோடியா... ... ... ... ... ... *
யின்னல்வெங்கணைபொழிந்தபோதவ... ... ... ... ...*
ரழிந்தபோதுநலிலக்கராம் ... ... .. ... ... *
வெந்நிடாதவிறல்வீரர்வந்தனுங் ... ... ... ... ...*
வெந்திறற்கணைகள்சிந்தினர் ... ... ... ... ... *

(இ-புரை.) இந்தச்செய்கையை அழிவில்லாத பூதராசர்கள்கண்டு அங் கெதிர்ந்தபோது அந்தவஞ்சகன்பத்து லக்ஷங்கோடி கொடியபாணங்கள் சொரிந்தபோது அவர்களெல்லாரும் இறந்தனர்கள் அப்போது முதுகு காட்டியோடிடாத லக்ஷம் வீரர்களும்வந்தெதிர்ந்து கொடியபலமுள் ள பாணங்களைவினர்கள்.—(எ-று.) (அகூ)

ஆடல்கொண்டவருரக்கரத்தனு ... ... ... ... ... *
வனைத்தையுங்கணைகளாயிரங் ... ... ... ... ...*
கோடிசிந்தியவைசிந்தியத்தொகைகொள் ... ... ... *
கோல்விடுத்தவர்கடேரெலாம்... ... ... ... ...*
பாடுறும்படிபுரிந்திலக்கமொடு ... ... ... ... ... *
பத்துநூறுசெறிபல்லவ... ... ... ... ... ...*
மீடிளேடுதவிவீரர்மேனிக... ... ... ... ... ... *
ளிளைத்திடும்படிதுளைத்தனன் ... ... ... ... ...*

(இ-புரை.) வெற்றிகொண்ட அவர்கள்கையிலிருக்கும் பலம்பொ ருந்திய விற்களையெல்லாம் ஆயிரம்பாணங்களைவி யறுத்துப்பின்னும் அத்தொகைகொண்ட பாணங்கள்விட்டு அவர்கள்தேர்கள் அழியும்படி செய்து யின்னும் லக்ஷத்தோராயிரமென்னுந் தொகைபொருந்திய பா ணங்கள் பலத்துடன்விட்டு அந்தவீரர்கள்மேனிக ளிளைக்கும்படி துளை த்தான்.—(எ-று. (கூ௰)

[illegible]கண்டுதிறலெண்மர்தங்களி... ... ... ... ...*
லிருந்திறற்பெறுதிவாகரன் ... ... ... ... ... *

பொழிப்புரை.

நீதிலாதகணைசிந்திவந்திடலு …… … … … … …*
நூறு நூறுகணைசிந்தியே … … … … … *
யோதுவீரனதுவிற்றுணித்தவ … … … … … …*
னுரம்பிளந்துழிவிழுந்தனன்… … … … … *
கோதிலாவிறலரக்கன்வந்தவுணர்… … … … … …*
கோவின்முன்புகணைதூவினன் … … … … *

(இ-புரை.) இதனைக்கண்டுபலப்பொருந்திய எட்டுவீரர்களிலேமிகு ந்த பராக்கிரமம்பெற்ற வீரமார்த்தாண்டனென்பவன் பழுதுபடுதலில் லாத பாணங்களைப்பிரயோகஞ்செய்துகொண்டுவந்தான் சூரனவன்ப தினாயிரம் பாணங்களேவிச்சொல்லுகின்ற வீரமார்த்தாண்டனுடையவி ல்லைத்துணித்து அவன்மார்பையும்பிளந்தபோது பூமியில் விழுந்துவி ட்டான் அதைப்பார்த்துக் குற்றமில்லாதவலியுள்ள வீரராக்ஷதன் அவுண ராசனுக்கெதிரில்வந்து பாணந்தளேவினன்.—(எ-று.) (கக)

தூவியங்கதனில்வென்றியின்றிமிட … … … … …*
றுன்றுவாளிநெடுசூரர்கோன்… … … … … *
மேவுதேரனுகிவில்லைவெட்டவவன் … … … … …*
வில்லொடிந்ததிலைவல்லையே … … … … … *
யோவிலாதகதிர்வாளொடிந்தத … … … … …*
லுந்தரக்கனையோர்தாளினற் … … … … … *
பாவியண்டமிசைசெல்லவுந்தலும் … … … … …*
விழுந்தனன்கடிதுபாரின்மேல் … … … … *

(இ-புரை.) இவ்வாறுகணைகளேவி அவைகளால்வென்றியில்லாமலி னால் வீரர்களுக்குள் மேன்மைபொருந்தியவனாகிய சூரனுடையதேரில் பலம்பொருந்திய வாளாயுதத்துடன்பாய்ந்து அவன்வில்லை வெட்டினன் அந்தவெட்டினால் சூரன்வில்லொடிந்ததில்லை வெட்டினபோதே ஒளிநீங் கிலாதவாளாயுதம் ஒடிந்தது பின்பு பராக்கிரமத்தில் மேன்மைபொருந் திய வீரராக்ஷதனைச் சூரனைவன்தன்காலினல் அண்டத்தின்மேல் செல் லும்படி எறிந்தவளவில் அவன்மேலேபோய் விரைவுடன் பூமியில் விழு ந்தான்.—(எ-று.) (கஉ)

வீழுமன்னதைவெகுண்டுகண்டுமிகு … … … … … *
வெற்றிபெற்றிடுமகேந்திரன் … … … … …*

சூழ்விலாவிறல்கொள்சூரன்முன்புபல ... ... ... ... *
சாயகஞ்சிதறவெய்யவன் ... ... ... ... ... ...*
சூழநூறுகணைதூயனங்கமிசை ... ... ... ... ... *
தோயவிட்டுழிவிழுந்தனன் ... ... ... ... ... ...*
வாழ்வுகொண்டபுகழ்வீரதீரனெதிர் ... ... ... ... ... *
வந்துபல்கணைகள்சிந்தினான் ... ... ... ... ...*

(இ-புரை.) வீரராக்ஷதன்விழுந்ததை மிகுந்தசெயம் பெற்றுள்ள வீரமகேந்திரன் கண்டுகோபித்துத் தாழ்வில்லாத சூரனெதிரில்வந்து பல அம்புகளையேவினான் அவன்கூட்டமாகிய நூறுபாணங்கள்வீரமகேந்திரன்சரீரத்தினிடத்தில் அழுந்தும்படி விட்டபோது மூர்ச்சையாய்விழுந்தான் அதைக்கண்டுவாழ்வுகொண்ட புகழுள்ளவீரதீரன் சூரனுக்கெதிரில்வந்து பல அம்புகளையேவினான்.—(எ-று.) (௬௩)

ஈடுசேரவருவீரதீரன்மிசை ... ... ... ... .. ...*
யேழிரண்டுவுணனேழுகோல் ... ... ... ... ... *
கூடவிட்டுழிவிழுந்தனன்கடிது ... ... ... ... ...*
கொற்றமுற்றிடும்மகேசனு ... ... ... ... ... *
நீடுசூரனெதிர்வந்தெதிர்ந்தொரு ... ... ... ... ...*
நெடும்படைக்கலம்விடுப்பவே ... ... ... ... *
மீடுகொண்டவுரமீதுபட்டுமிகு ... ... ... ... ... ...*
தூளிபட்டதுபிறங்குவேல் ... ... ... ... ... *

(இ-புரை.) பெருமைசேரும்படிவந்தவீரதீரன்மேல்படும்படி சூரன் பதினாலுபாணம்விடடபோது அந்தவீரன் உடனேமூர்ச்சையாய் விழுந்தான் அதனைநோக்கிவெற்றிபொருந்தியவீரமகேசனும் நீடியசூரனெதிர் வந்தெதிர்த்து ஒருபெரியவேலையெறிந்தான் பிரகாசியாநின்ற அந்தவேலானது சூரனுடைய பலம்பொருந்திய மார்பில்பட்டு மிகுந்த தூளியாய்விட்டது.—(எ-று.) (௬௪)

வந்துபட்டகதிர்வேலழிந்திடலு ... ... ... ... ... *
மன்னுதானவர்கண்மன்னவ ... ... ... ... ... ...*
னுந்துகின்றகணையேழுவிட்டிட ... ... ... ... ... *
வுரம்பொருந்தியமகேசனீள் ... ... ... ... ...*
சுந்தரம்புரிந்திடுபுயங்கலந்துடல் ... ... ... ... ... *
களைப்பமொய்ம்பதுதளைப்பவே ... ... ... ...*

சிந்தைநொந்தனனிகழ்ந்தவிச்செயலை ... ... ... ... *
வீரகோளரிதெரிந்தனன் ... ... ... ... ... ...*

(இ-புரை.) தன்மார்பில்வந்துபட்ட ஒளிபொருந்தியவேல் அழிந்தமாத்திரத்தில்பொருந்திய அவுணர்களுக்கு அரசனாகிய சூரனானவன் செலுத்தத்தக்க எழுபாணங்கள் பிரயோகஞ்செய்ய அவைபலம்பொருந்திய வீரமகேசனுடைய நீண்டகட்டுத்தறியையொத்தபுசத்திற்பட்டுஅவன்களைத்து விழும்படி அந்தப்புசத்தைத்துளைத்த மாத்திரத்தில்வீரமகேசன் மனம்நொந்துமயங்கினான் இவ்வாறுநடந்த இச்செய்கையை வீரகோளரிகண்டனன்.—(எ-று.) (௯௫)

கண்டிதண்டாபுகழ்வீரகேசரி... ... ... ... ... ... *
கடுஞ்சரஞ்சிதறிவந்துபின்... ... ... ... ... ...*
பண்டலன்றனதுவையமுற்றுர ... ... ... ... ... *
மடிக்கவேகரம்வெடிக்கவே ... ... ... ... ...*
மண்டுசூரனொருகையினாலிவனை ... ... ... ... ... *
மாலுறுங்கடலில்வெஞ்சினங் ... ... ... ... ...*
கொண்டெறிந்திடவிழுந்துபின்னரு ... ... ... ... *
மெழுந்துசேனையொடுகூடினான் ... ... ... ...*

(இ-புரை.) தேவர்கள்புகழும் வீரகேசரி இதனைக்கண்டு கடுமையானபாணங்களை யேவிக்கொண்டுவந்துபின்பு பகைவனாகிய சூரன்தேரிற்பாய்ந்து அவன்மார்பிலடிக்கவே இவன்கைவெடித்தது எதிரிட்டிருக்குஞ் சூரன்கோபங்கொண்டு இவனை ஒருகையினால் எடுத்து விஷ்ணுபள்ளிகொண்டிருக்குந்திருப்பாற்கடலில்விழும்படிவிட்டெறிந்தான் அந்தவீரன்விழுந்துமறுபடியும் எழுந்துசேனையுடன்சேர்ந்தான்.(எ-று.)(௯௬)

(கேசரியென்பது-சிங்கம்.) மாலுறுங்கடல் என்பதற்குப் பெருமைபொருந்தியகடலெனினுமமையும்.

மால்படைத்தவிறலிந்திரன்குறுகி ... ... ... ... ... *
வன்சமன்படைவிடுத்தலும் ... ... ... ... ...*
பால்படைத்தமொழிமாயைமைந்தன்மிசை ... ... ... *
பட்டுமட்டிறுகளாகவெங்... ... ... ... ... ...*
கோல்படைத்தவனூறுயிரங்குலவு ... ... ... ... ... *
கோடிவெங்கணைகடுவேலுங்... ... ... ... ... ...*

கால்படைத்த்விசைபோலமேவிய ... ... ... ... ... *
கலந்துளைத்திடவிளைத்தனன் ... ... ... ... ...*

(இ-புரை.) பெருமைபடைத்த பலமுள்ள வீரபுரந்தரன்வந்து யமாஸ்திரம்பிரயோகித்தான் அதுபால்போன்ற வசனமுள்ள மாயைமகனாகிய சூரன்மேல்பட்டு அளவில்லாத தூளியாய்விட்டது அதைக்கண்டு கொடுங்கோல்பெற்ற சூரனானவன் கொடுமையுடன் விளங்குகின்ற நூறாயிரங்கோடி பாணங்கள்விட்டான் அவைகள் வாயுவினிடத்தில் பொருந்திய வேகம்போலச்சென்று மார்பைத்துளைக்க அவனும் மூர்ச்சையாய் விழுந்தான்.—(எ-று.) (௬௭)

(கொடுங்கோலென்பது - அநீதி.)

மன்னுவெற்றிபுனையந்தகன்கடிது .. ... ... ... ... *
வந்துபல்கணைகள்சிந்தவு... ... ... ... ... ...*
மன்னவன்கணைவிலக்கிவெந்தறுவ ... ... ... ... ... *
னாயிரங்கணைகளாலவன் ... ... ... ... ... ...*
மின்னுதேரினொடுவிற்றுணித்துமரு ... ... ... ... *
மம்பிளந்திடவிழுந்தனன் ... ... ... ... ... ...*
வெந்நிடாதவிறல்கொண்டவண்டர்புகழ் ... ... ... ... *
வீரவாகுவிதுகண்டனன்... ... ... ... ... ...*

(இ-புரை.) நிலைபெற்றவெற்றிகொண்ட வீரராந்தகன் விரைவாக வந்து பலகணைகளையேவினான் கொடிய அவுணனாகியசூரன் அந்தவலிய பாணங்களைவிலக்கி ஆயிரம்பாணங்களாலவனுடைய விளங்குந்தேரினையும்வில்லையும் அறுத்து மார்பையுந்துளைக்க அவ்வீரன் மூர்ச்சையாய் விழுந்தான் அப்படிவிழவேமுதுகுகாட்டாதவராய்த் தேவர்களால்புகழப்பட்ட வீரவாகுதேவர் இதனைப்பார்த்தார்.—(எ-று.) (௬௮)

கனத்ததேரினொடுவந்தெதிர்ப்பவரு ... ... ... ... *
கண்டுமாயைதருகண்டகன்... ... ... ... ... ...*
மனத்திலொற்றனெனவுன்னியின்னமுமென் ... ... ... *
முன்னரொற்றனெனவந்தியே ... ... ... ... ...*
லனத்தமெய்நிலைதனுப்பிடிக்கிலுன ... ... ... ... *
தாவிகொண்டிடுவனென்னவே ... ... ... ... ...*
சினத்தபாவிமகனாவிகொண்டதிற ... ... ... ... ... *
லாளனின்னமொழிசெப்புவான்... ... ... ... ...*

(இ-புரை.) வீரவாகுதேவ ரிவ்வாறு பெரியதேருடன்வந்து எதிர்ந்தபோது மாயையானவள்பெற்ற கண்டகன்மனதில் தூதனிவனென எண்ணி இப்போதும் என்னெதிரில் தூதனுகவருவையானல் இறக்கமாட்டாய்வில்லைப்பிடித்தால் உன்னுடையபிராணனைக்கொண்டு விடுவேனென்னவேகோபித்த அந்தப்பாவி மகனுயிரையுண்ட வெற்றியுள்ள வீரவாகுதேவரிந்தவார்த்தைசொல்லுகின்றார்.—(எ-று.) (கூகூ)

உற்றதூதனுமமைச்சுமாகுவ ... ... ... ... ... ... *
ஊரங்கொடெவ்வர்மிசைசெல்குவன் ... ... ... ...*
வெற்றிவேலுடைய கந்தனெந்தையருள் ... ... ... ... *
வேறுமுள்ளபணிசெய்குவன் ... ... ... ... ...*
முற்றும்வல்லவனியானமர்ப்புரிதி ... ... ... ... ... *
யென்னவொன்னலன்முனிந்துநீள் ... ... ... ...*
கொற்றவாளிகளொராயிரங்குலவு ... ... ... ... ... *
கோடிவீரனெதிர்தூவினன் ... ... ... ... ...*

(இ-புரை.) தூதனுவன்மந்திரியுமாவன் பலங்கொண்டபகைவர்மேற் செல்லுவன் வெற்றிவேலுடைய கந்தசுவாமியாகிய எம்மையன் அருளிச்செய்யும் மற்றுமுள்ள ஏவலுஞ்செய்வேன் மேலும் எல்லாமும்வல்லவன் நீ சண்டைசெய்யென்றார் அந்தப்பகைவன்கோபித்து மிகுந்த வெற்றிபெற்றுவிளங்கும் ஆயிரங்கோடியபாணங்கள் வீரவாகுதேவருக்கெதிரில் ஏவினன்.—(எ-று.) (ா)

வீரவாகுவுமளப்பில்வெங்கணை ... ... ... ... ... ... *
விடுத்துவெய்யன்விடுவெய்யகோல் ... ... ... ...*
சேரநூறியொருநூறுகோனுதல் ... ... ... ... ... ... *
செறித்திடக்கணைசிதைந்திட ... ... ... ... ...*
மூரிசேரவுணனெட்டுவெங்கணைகண் ... ... ... ... *
மொய்ம்பன்மொய்ம்பிடையழுத்தலுஞ் ... ... ...*
சோரியுண்டபிடர்தன்னையன்னவை... ... ... ... ... *
துளைத்தவும்பர்கடுளங்கவே... ... ... ... ... ...*

(இ-புரை.) வீரவாகுதேவரும் அளவில்லாதவெய்யபாணங்கள் விட்டுச் சூரன்விட்டபாணங்களையொருங்குடன் அறுத்துப்பின்னும் நூறுபாணம் அவனெற்றியிற்படும்படியேவினர் அவைகள்சென்றுபட்டு மு

நிந்ததுகள்பலம்பொருந்திய அந்தச்சூரன் எட்டுப்பாணங்கள்விட்டுவீ ரவாகுதேவர்தோள்களில் அழுத்தினன் அந்தப் பாணங்கள் உதிரத்தையு ண்டு தேவர்கள்நடுங்கும்படிபிடரியைத்துளைத்துக்கொண்டுபோயது()

வென்றிகொண்டபுயவண்ணல்பின்னரிபல ... ... ... ...*
வெய்யகோலவுணனுலவையமேற் ... ... ... ... *
றுன்றியொன்றுபலபாகரைக்கடிச் ... ... ... ... ...*
சோரிகண்டிடவழுத்தலக்கண ... .. ... ... ... *
டன்றுகாசிபனளித்ததானவனெ(ல)... ... ... ... ... ...*
னைம்பதொண்கணைபின்மிமாய்ம்பினு(ல) ... ... ... *
னின்றதேரதனைநூறவெறுபொரு ... ... ... ... ...*
நீடுசேரின்மிசைகடிமுமன் ... ... ... ... ... *

(இ-பொ.) செயங்கொண்டிருக்கும்புயமுள்ள வீரவாகுதேவர் பி ன்பு சூரனுடையதேரின்மேற் பொருந்தியிருக்கும் பலசாரதிகளுடைய சரீரங்களினிடத்தில் உதிரம்பெருகத்தக்கதாகப் பலபாணங்கள்விட்டு அ ழுத்தினதைக்கண்டு முன்னாள் காசிபனால்பெறப்பட்டசூரனானவன்பிரகா சமுள்ள ஐம்பதுபாணங்களால் வீரவாகுதேவரேறிக்கொண்டிருக்கும் தேரினைநொறுக்கினவளவில் அவர் வேறொருதேரின்மேலேறினர்.(எ-று.)

கூடிவாயுவொடுதேயுவின்படை .. ... ... ... ... ...*
கொடுஞ்சமன்கணைநெடும்படை ... ... ... ... *
யீடுசேர்வருணன்வாடுறுநிருதி ... ... ... ... ... ...*
யிந்திரன்படையிலங்குதிங்க ... ... ... ... ... *
ளூடுவேதனொடுமாதவன்படை ... ... ... ... ... ...*
தொடுத்துமொய்ம்பினனலிடுத்திடப் ... ... ... *
பாடில்சூரன்மிசைவந்துவந்தனைகள் ... ... ... ... ...*
பட்டுமட்டிலுகள்பாடவே ... ... ... ... ... *

(இ-பொ.) அவ்வாறுஎதிர்க்கொண்டு வாயுவினஸ்திரம் தேயுவின ஸ்திரம் கொடியயமன் அஸ்திரம் சூரியனஸ்திரம் பலம்பொருந்திய வருணனஸ்திரம்வாடுதல்பொருந்தாத நிருதிபாணம் இந்திரன்பாணம் விளங்குகின்ற சீர்பொருந்தியபிரமாஸ்திரம் நாராயணாஸ்திரம் என்னு மிவைகளை வீரவாகுதேவர்வில்லில்வைத்து ஏவினர் அவைகள் கெடுதலில் லாதசூரன்மேல்வந்துவந்துபட்டு அளவில்லாததுகளாயதுகள் (௩௩)

பொழிப்புரை.

மட்டிலாவுதொடையண்ணலங்கதுபின்... ... ... ... ...*
மங்கைபங்குடையவள்ளற ... ... ... ... ... *
னெட்டிருப்படைவிடுப்பவன்னபடை... ... ... ... ...*
நேரிலாவிறல்கொள்சூரனும் ... ... ... ... .... *
விட்டுமொய்ம்பொடுவிலக்கியாறிரெடு ... ... ... ...*
வீறுமொன்பதுவிறற்சரந் ... ... ... ... ... *
தொட்டுவீரனதுகைத்தலச்சிலை ... ... ... ... ... ...*
துணித்தனன்றகுவர்துள்ளவே... ... ... ... ... *

(இ-புரை.) தேனெழுகும்பூமாலையணிந்த வீரவாகுதேவர் அதன் பின்பு இடப்பாகத்தில் பார்வதிதேவியாரையுடைய பரமசிவனதுநெடியதாய்ப் பெருமைபொருந்திய சிவாஸ்திரம்விடுக்க ஒப்பில்லாதபலங்கொண்டுள்ள சூரனும்பலத்துடன் சிவாஸ்திரம்விட்டு;அதனைவிலக்கி மேன்மைபொருந்திய பலங்கொண்ட பதினைந்துபாணங்களைவிட்டு வீரவாகுதேவர் கையினிடத்திலிருக்கும் வில்லை அவுணர்கள் துள்ளும்படி அறுத்தான்.—(எ-று.) (௱௪)

மூண்டகோபமொடுமொய்ம்பணங்கொரு ... ... ... *
மூரன்கொள்வேலினைவிடுத்தலு... ... ... ... ...*
மாண்டுசூரன்மிசைபட்டுவல்லையி ... ... ... ... ... *
லழிந்துபோகுதலுமன்னவன் ... ... ... ... ...*
பூண்டவன்மையொருதண்டமுந்தவது ... ... ... ... *
வந்துமார்பிடைபுகுந்திட... ... ... ... ... ...*
வீண்டசோரியொடுநீண்டதேரின்மிசை ... ... ... ... *
வீரவீரனும்விழுந்தனன் ... ... ... ... ... ...*

(இ-புரை.) அதிகரித்தகோபத்துடன் வீரவாகுதேவர் அப்போது பலமுள்ள ஒருவேலாயுதத்தையேவினர் அது எதிரிலிருக்கும் சூரன்மேல்பட்டுவிரைவுடன் அழிந்துபோயது சூரனவன்பலம்பூண்ட ஒருதண்டாயுதமெடுத்தெறிந்தான் அதுவந்து தம்முடையமார்பில் பட்டவளவில் வீரவாகுதேவரும் உதிரம்பெருகும்படி பெரியதேரின்மேல் மூர்ச்சையாய்விழுந்தார்.—(எ-று.) (௱௫)

செய்கையின்னதுதெரிந்துதேரினெடு ... ... ... ... *
சீருறுஞ்சரவணப்பெயர்ப்... ... ... ... ... ...*

பொய்கைதன்னிடைவளர்ந்தநங்கடவுள் ... ... ... ... *
போயெதிர்ந்திடவழுத்தினர்க் ... ... ... ... ...*
குய்கைதந்தருள்குமாரவேள்வடிவ... ... ... ... ... *
முற்றும்நோக்கியிருசெற்றமாய் ... ... ... ... ...*
நைகைகொண்டதொழில்கொண்டவஞ்சனிது ... ... ... *
நம்பிரானொடுவிளம்புவான்... ... ... ... ... ...*

(இ-ள்.) வீரவாகுதேவர் விழுந்தசெய்கை சீர்பொருந்தியசரவணமென்னும் பெயருள்ளதடாகத்தில் வளர்ந்தருளிய நம்முடையகடவுளாகியசுப்பிரமணியசுவாமியானவர் அறிந்துசூரனுக்கெதிரிற்சென்றெதிர்ந்தவளவில் தம்மைத்துதிப்பவர்க்குப்பிழைக்குந்தன்மை அருளிச்செய்யுங்குமாரசுவாமியினுடையதிருமேனிமுழுவதும்நோக்கியிருந்தகோபமாய் வருத்துந்தொழிலைக்கொண்ட சூரன்நம்முடையபெருமானாகிய சுப்பிரமணியருடனிந்தவார்த்தைசொல்லுகிறான்.—(எ-று.) (௭௬)

உன்றனோடுவருசேனையானவை ... ... ... ... ... ... ...*
யொழிந்துபோயினருவர்க்கெலாம்... ... ... ... *
வென்றிகொண்டவிறையாகிவந்தவனும் ... ... ... ...*
வெந்துயர்க்கொடுவிழுந்தன... ... ... ... ... *
னின்றிளங்குமரனானநீகொலம ... ... ... ... ...*
ரொன்றெனோடேபுரியவல்லைநின் ... ... ... ... ... *
வன்றிறற்றனையழிப்பனின்றொரு... ... ... ... ... ...*
கணத்திலென்றனன்மறந்திறான் ... ... ... ... *

(இ-ள்.) உன்னுடன்வந்த சேனையானவர்களெல்லாம் ஒழிந்துபோனார்கள் அவர்களுக்கெல்லாம் செயங்கொண்டபடைத்தலைவனாய்வந்தவனும் மிகுந்த துயரங்கொண்டு விழுந்தான் இளங்குமாரனாகியநீயோ எதிர்த்து நின்றென்னுடன் சண்டைசெய்யவல்லவன் உன்வலிய திறத்தையிப்போதொரு க்ஷணப்பொழுதில் அழித்துவிடுகிறேனென்று பாவமுள்ள சூரன்சொன்னான்.—(எ-று.) (௭௭)

வஞ்சனீதுசொலவேளுரைப்பனிள ... ... ... ... ...*
மைந்தனென்றெமையிகழ்த்தனை ... ... ... ... *
நஞ்சுலாவியகளத்தனெற்றிவிழி... ... ... ... ... ...*
நண்ணுகின்றபொறியொன்றுகாண்... ... ... ... *

பொழிப்புரை.

விஞ்சுகின்றவுலகங்கெடுப்பது ... ... ... ... ... ...*
விவேகமற்றவொருபேதைநீ... ... ... ... ... *
யஞ்சுறுததிறல்வீரர்பாலர்பெரி... ... ... ... ... ...*
யோர்களென்றுமதியார்கள்காண் ... ... ... ... *

(இ-புரை.) சூரனிவ்வார்த்தைசொல்லச் சுப்பிரமணியசுவாமி சொல்லுகிறார் இளங்குமாரனென்றெம்மைமதித்தனை விஷம்பொருந்திய கண்டத்தையுடைய பரமசிவனது நெற்றிக்கண்ணிலுண்டாகின்ற ஒருதீப்பொறியானது உலகங்களையெல்லாம் அழித்துவிடுகின்றது விவேகமற்ற மூடனுகையா லிவ்வாறுமதித்தாய் போருக்கஞ்சுதல்பொருந்தாதசுத்தவீரர்களாயிருப்பவர்கள் யுத்தமுகத்தில் இவர்கள்பாலரென்றும் இவர்கள் பெரியோர்களென்றுமதியார்கள்.—(எ-று.) (௱அ)

யாவரோனுமமர்செய்யவந்திடி ... ... ... ... ... ...*
லெதிர்ந்துபோர்புரிவரிங்கினிச் ... ... ... ... *
சேவகத்தொடுபெருத்தநின்வலி... ... ... ... ... ...*
சிறுத்தநம்பெரியதிண்மையா... ... ... ... ... *
லோவறும்படிகெடுப்பமென்றிட ... ... ... ... ...*
வுருத்தளப்பிலகணைபொழிந்தனன் ... ... ... ... *
றூவவேலவனுமெண்ணிலவெங்கணை ... ... ... ... ...*
தொடுத்துவிட்டவைதடுத்தனன் ... ... ... ... *

(இ-புரை.) எவர்களேயாகுலும் போர்செய்யவந்தால் எதிர்ந்து போர்செய்வார்கள் இங்கிப்போது வீரத்துடன்பெருத்த உன்பலத்தைச் சிறிய நம்முடையபெரியபலத்தினால் நீங்கும்படிகெடுக்கிறோமென்னப் புகைவனுகிய சூரன்கோபித்து அளவில்லாத பாணங்கள்விட அவன்விட்ட பாணங்களையெல்லாம் தடுத்தார்.—(எ-று.) (௱க)

தடுத்துவேன்முருகனைழியவன்பெணை ... ... ... ... ...*
தானவன்றனதுதோளின்மேல்... ... ... ... ... *
விடுத்தபோதுகணைபட்டொடிந்துவிழ ... ... ... ...*
வேறுமாயிரம்விறற்சரந்... ... ... ... ... *
தொடுத்தவன்சிலைதுணிப்பவஞ்சவொரு ... ... ... ...*
துங்கவேல்விடவுமேழொடேழ் ... ... ... .. *
வடித்தவெங்கணையிலந்தவேலையுற ... ... ... ...*
வந்தவேலையெதிர்சிந்தினன் ... ... ... ... ... *

(இ-பு.) அவன்விட்டபாணங்களைத் தடுத்ததுமல்லாமல் வேலா யுதமேந்திய முருகக்கடவுள் பதினாலுபாணங்கள்சூரன்புசத்தின்மேல்ப டும்படிவிட்டபோது அந்தப்பாணங்களவன்புசத்தில்பட்டு ஒடிந்துவி ழுந்ததுகள் சுவாமியானவர்மறுபடியும்பலமுள்ள ஆயிரம்பாணங்களை வி அவன்வில்லையறுத்தார்சூரனானவன்பலமுள்ளஒருவேலையேவினான்அ து நேரில்பொருந்தவந்தபோது கூர்மையுள்ள பதினாலு பாணங்களால் அந்தவேலை அறுத்துத்தள்ளினார்.—(எ-று.) (௩௰)

வீறுகின்றதொருவில்லெடுத்தவுணன் ... ... ... ... ...*
வேலன்விட்டபலகோடியெலா ... ... ... ... ... *
நூறியேழ்கணைபுயத்திலெய்யவவை ... ... ... ... ...*
நுண்டுகட்படலும்வேலவன் ... ... ... ... ... *
சீறியையிருசரத்தவன்சிலை... ... ... ... ... ...*
சிதைத்தொராயிரநல்வாளியா... ... ... ... ... *
லேறுதேரழிய நூறிவேறுமவ ... ... ... ... ... ...*
னேறுதேர்களறவெய்தனன் ... ... ... ... ... *

(இ-பு.) சூரன்பெருமைகொண்டிருக்கும் வேறொருவில்லெடு த்துவேலாயுதக்கடவுள்விட்டபாணங்களையெல்லாம் அழித்துப்பின்னும் ஏழுபாணந்தொடுத்துச்சுவாமியினுடையதிருப்புசங்களில்அழுந்தும்ப டியேவினான் அவைகள்வந்துபட்டு நுண்மையாகியதூளாய்விட்டன வே லாயுதக்கடவுள்கோபித்துப்பத்துப்பாணங்களால் அவன்கைவில்லை அறு த்து மேலும் கூர்மையுள்ள ஆயிரம்பாணங்களால அவனேறிக்கொண்டி ருக்கும்தேரானது அழியும்படிநொறுக்கி இளைவுபாலலாமல் அவனேறும் படி அயலிலிருக்குஞ்சேமத்தேர்களையும் அழித்தார்.—(எ-று.) (௩௰௧)

வண்மைகொண்டசிலைவையமற்றிடலும் ... ... ... ... *
வையமுற்றவுணர்மன்னவன்... ... ... ... ... ...*
திண்மைகொண்டதொருமுத்தலைப்படை... ... ... ... *
செலுத்தவீரிருசரங்கள்விட் ... .. ... ... ...*
டுண்மைகொண்டகுகனன்னதைக்கடி ... ... ... *
துருத்தறுத்துமிகுகோல்கடேய்த்... ... ... ... ...*
தண்மைகொண்டதொழில்கொண்டவற்புனை ... ... ... *
மதாணியான்வைதடிந்தனன் ... ... ... ... ...*

(இ-பு.) பெருமைகொண்ட தன் வில்லும்தேரும் அழியவே அ வுணராசனாகிய சூரன் பூமியின்மேல்நின்று பலங்கொண்டதாகிய ஒருசூ

பொழிப்புரை.

லாயுதத்தையேவினான் அதை மெய்ம்மைகொண்ட சுப்பிரமணியக்கடவுள் கோபித்துக்கடிதினில் நாலுபாணங்கள்விட்டு அறுத்து அப்போதுஞ் சாந்தமாகிய தன்மையைத் திருவுளத்தில்கொண்டு அவன் அணிந்துகொண்டிருந்த பெரும்பதக்கமுதலாகிய ஆபரணங்களையெல்லாம்அறுத்துத்தள்ளினார்.—(எ-று.) (௱௰௨)

ஈதுகண்டவுணராருமங்கணுகி ... ... ... ... ... ...*
யெந்தைகந்தனைவளைந்துநின் ... ... ... ... ... *
றேதுபோர்புரியவாழிவேலன்விட ... ... ... ... ...*
வுற்றசேனையவைமுற்றவுங் ... ... ... ... ... *
கோதுறும்படிகெடுத்துமற்றது ... ... ... ... ...*
குமாரவேள்கையுறவெய்யசூர் .. ... ... ... ... *
வேதன்மால்படைவிடுப்பவேலவை ... ... ... ... ...*
விழுங்கவாதிபடைவிட்டனன் ... ... ... ... ... *

(இ-புரை.) இதனைக்கண்டு அவுணர்களெல்லாரும் அங்கேவந்து எம்மையனாகிய கந்தசுவாமியைவளைந்துநின்று சொலத்தக்க போர்செய்தார்கள் வேலாயுதக்கடவுளானவர் தம்முடைய திருக்கரத்திலிருக்கும் சக்கராயுதத்தையெவினார் அந்த ஆயுதமானது அங்குவளைந்து கொண்ட அவுணர்களெல்லாருந் தீங்குறும்படி அழித்து அதுமறுபடிகுமாரசுவாமி திருக்கரத்தில்வந்துசேர்ந்தது அதனைக்கொடியசூரன்கண்டு பிரம்மாஸ்திரத்தையும் நாராயணாஸ்திரத்தையும் ஏவினான் அவைகளைச் சுவாமியினுடையவேலாயுதஞ்சென்று விழுங்கிவிட்டது அதன்பின்புசூரன் சிவாஸ்திரம்விட்டான்.—(எ-று.) (௱௰௩)

விட்டவெம்படைகுமாரவேளொரு ... ... ... ... ...*
விறற்கரங்கொடுபிடித்தவன் ... ... ... ... ... *
கெட்டிடாதவகைபுந்திசிற்சில ... ... ... ... ... ...*
ளைத்தவங்கதைமதித்திலன் ... ... ... ... ... *
மட்டில்சேனையொடுபின்புசேர்துமென ... ... ... ...*
மாயமாகிமனையேகலும் ... ... ... ... ... ... *
பட்டசோகமொடயர்ந்தயாவரு ... ... ... ... ... ...*
மெழுந்துவேலனயல்பாவினார் ... ... ... ... *

(இ-புரை.) சூரன்விட்ட சிவாஸ்திரத்தைக் குமாரசுவாமியானவர் பலம்பொருந்திய ஒருதிருக்கரத்தினாற் பிடித்துக்கொண்டு அவன்கெட்

இப்போகாமலிருக்கும்படி சிலசில புத்திகள்சொன்னூர் அந்தப்புத்தியை யவன்மதிக்காமல் அளவில்லாதசேனையுடன் பின்புவருவோமென்றுபோய் மாய்த் தன் மாளிகைக்குப்போய்விட்டான் உண்டாகியசோகத்துடன் மூர்ச்சையாயிருந்த வீரர்முதலாகிய பூதர்கள்யாவரும் எழுந்து வேலாயுதக்கடவுள் அருகில்வந்துகூடினூர்கள்.—(எ-று.) (ரயச)

மற்றிவ்வேலைமிகுபூதர்சூர்நகர் ... ... ... ... ... *
வடாதுவாசறணிலேகியங் ... ... ... ... ... ...*
குற்றிருந்தவதிசூரனைப்படை... ... ... ... ... ... *
யொடுங்கெடுத்தெயிலுடைத்துவிண் ... ... ... ...*
டுற்றிருந்ததொருகோபுரங்கடிது ... ... ... ... ... *
தொட்டுவேலையிடையிட்டவூர் ... ... ... ... ...*
சற்றழித்தனர்திரும்பினூர்கடிது ... ... ... ... ... *
சண்முகத்தனயல்கூடினூர்... ... ... ... ... ...*

(இ-புரை.) இவ்வாறுவந்துசேர்ந்தபோது மிகுந்தபூதர்கள் சூரன் பட்டணத்தின் வடக்குவாயிலிற்சென்று அவ்விடத்தில்காவலாயிருந்த அதிசூரனென்பவனையும் அவனுடையசேனையையுங்கொன்று மதிலையிடித்து ஆகாயத்தையளாவியிருந்ததாகியஒருகோபுரத்தைவிரைவில் அடியுடன்தோண்டியெடுத்துச்சமுத்திரத்திலெறிந்து அந்தப்பட்டணத்தைக்கொஞ்சம்அழித்துஅங்கிருந்துஉடனேதிரும்பி ஆறுமுகக்கடவுளிடத்தில்வந்து சேர்ந்தார்கள்.—(எ-று.) (ரயரு)

வெந்திறற்கொண்மிகுசாரதக்குழுவும் .. ... ... ... *
வீரரும்புடையின்மேவவே... ... ... ... ... ...*
யெந்தைகந்தனுயர்பாசறைப்பதியி... ... ... ... ... *
லேகிமந்திரமதெய்தியே ... ... ... ... ... ...*
சிந்துரப்பகைசுமந்துநீடொளி ... ... ... ... ... *
திருந்திடுந்தவிசிருந்தன ... ... ... ... ... ... ...*
னந்தரம்படியிருண்டிடும்படி ... ... ... ... ... *
யருக்கன்மேல்கடலடைந்தனன்... ... ... ... ...*

(இ-புரை.) வெவ்விதானபலங்கொண்ட பூதர்கூட்டமும் வீரர்களும் தமதுபுறத்திற்சூழ்ந்துவரும்படி எம்மையருளிய கந்தசுவாமியானவர் உயர்ந்தபாசறையாகிய எமகூடமென்னும் பதியிலேசென்று திருக்கோவிலிற்சேர்ந்து யானைகளுக்குப்பகையாகிய சிங்கங்கள்சுமந்துகொ

பொழிப்புரை.

ண்டிருக்கும் ஆதனத்தின்மேல்வீற்றிருந்தார் அப்போது ஆகாயமும்பூமியும் இருண்டிடும்படி சூரியன்மேற்றுச்சமுத்திரத்திற்சேர்ந்தான்.எ-று.

(பாசறை என்பதனையிந்தக்காண்டம் நாலாவதுபாடலிற்கண்டுகொள்க.)

நலந்திருந்துமருணக்கதிர்க்கடவு ... ... ... ... ...*
நாயகன்கடிதுவந்தெனைக் ... ... ... ... ... *
கலந்திருந்தவனகன்றுபோனசெயல் ... ... ... ... ...*
கண்டுநீதிமுறைகொண்டிடா ... ... ... ... ... *
துலம்புரைந்தபுயவிந்துவென்னையுற ... ... ... ... ...*
வுன்னிவந்தனனெனாநினைந் ... ... ... ... ... *
திலங்குமம்பரமடந்தைநக்கெனு ... ... ... ... ... ...*
மெழுந்ததாரகையினங்களே ... ... ... ... ... *

(இ-புரை.) நன்மைதிருந்திய சிவந்தகதிர்களையுடைய சூரியன்கடிதினில்வந்து என்னைக்கலந்திருந்து அவனகன்றுபோன செய்கையைக் கண்டிருந்தும் நீதிமுறைமையை யுள்ளத்திற்கொள்ளாமல் திரண்டகல்லையொத்த புசமுள்ளசந்திரனனவன் என்னைச்சேரவேண்டுமென்று நினைந்துவந்தானென்று கருதிப் பிரகாசியாநின்ற ஆகாயமாகிய மாதானவள் நகைசெய்ததுபோல நக்ஷத்திரக்கூட்ட மெழுந்தது.—(எ-று.) (ராஎ)

ஓடியுற்றசெயலொற்றர்சொற்றிட ... ... ... ... ...*
வுணர்ந்துபானுவைமுனிந்துளா ... ... ... ... *
னீடுதந்தையிடைவந்துமுற்பக ... ... ... ... ... ...*
னிகழ்ந்தவச்செயனிகழ்த்தியின் ... ... ... ... *
றீடுகொண்டவரைநாளைவென்றிடுவ ... ... ... ... ...*
னென்னவன்னவன்விடுப்பநீண் ... ... ... ... *
மாடமாளிகைகொள்வீடடைந்ததனில் ... ... ... ... ...*
வைகிலவைகறையெழுந்தனன் ... ... ... ... ... *

(இ-புரை.) தூதர்களோடிநடந்தசேதிகளைச்சொல்லஅறிந்துசூரியனைக்கோபித்தவனாகிய பானுகோபனனவன் நீடியதகப்பனிடத்தில்வந்து முற்பகல்நடந்த அந்தச்செய்தியைச்சொல்லி இன்றுசெயங்கொண்டவர்களை நாளையதினம்வெல்லுகிறேனென்றுசொன்னான் அவ்வாறேசெய்யென்று சூரனுத்தரவு கொடுத்தனுப்பினன் அந்த உத்தரவுபெற்றுக்

கொண்டு பானுகோபனவன் றன்னுடையமேன்மாளிகை பொருந்திய வீட்டிற்சேர்ந்து அதிலவ்விராத்திரி தங்கியிருந்து விடியற்காலத்திலெழுந்தான்.—(எ-று.) (௩௰௮)

இரண்டாநாள் யுத்த முற்றியது.

---

உ

மூன்றாநாள் பானுகோபன் யுத்தம்.



எழுந்துமாயைதனைமுன்னமுன்னனுகி ... ... ... ...*
யேதுவேண்டுமெனமேவாதலு .. ... ... ... ... *
மிழிந்தவன்புதல்வன்முன்னமென்றுடம... ... ... ...*
ரெய்தியென்றவனையின்றுநா... ... .. ... ... *
னழித்திடும்பரிசுவெல்லவோர்படை ... ... ... ... ...*
யளித்தியென்றிடலுமாரமே... ... ... ... *
மொழிந்தமாயையொருமாயவெப்படை ... ... ... ...*
கொடுத்துவிண்ணவழிக்கடைபோயினாள் ... ... ... *

(இ-ள்.) எழுந்துமாயையைப்பினைத் தியானித்தான் அவளவன்முன் வந்து உனக்குவேண்டியதென்னவென்று சொல்ல இழிவானவனாகிய சூரன்மகன் முன்னமென்னுடன் போர்செய்துவென்றவன் அழிந்திடும்படி இன்றுநானவனைவெல்ல எனக்கொருபடைகொடுக்கவேண்டுமென்றான் அவனிடத்திலிருந்த ஆசையுள்ள மாயையானவள் ஒருமாயப்படைகொடுத்து ஆகாயமார்க்கமாய்ப்போய்விட்டாள்.—(எ-று.) (௩௰௧)

அன்னவஞ்சனதுபின்னர்பின்னுள... ... ... ... ... *
வடற்படைக்குலமெடுத்துநீண் ... ... ... ... ...*
மின்னுதேரனுகியைம்பதாயிரமென் ... ... ... ... *
வெள்ளமானபடைசூழவே... ... ... ... ... ...*
மன்னுமப்பதிமதிற்புறத்தணுகி ... ... ... ... ... *
மாவின்மாமுகமோராயிரந்... ... ... ... ... ...*

துன்னுதூதன்வதனந்தெரிந்தினைய ... ... ... ... *
வாசகங்கடிதுசொல்லுவான் ... ... ... ... ...*

(இ-புரை.) அந்தவஞ்சகன் அசன்பின்பு வில்லுமற்றுமுள்ள ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு பிரகாசியாநின்ற தேரிலேறிக்கொண்டுஐம்பதாயிரம்வெள்ளமான அவணப்படை சூழ்ந்துவர நிலைபெற்றஅந்தப் பட்டணத்தின் மதிற்புறத்தில்வந்து ஆயிரங்குதிரை முகம்பொருந்திய தூதன் முகத்தைப்பார்த்துக்கடிதாக இந்தவார்த்தைசொல்லுகிறான். ()

வீரவாகுவெதிர்சென்றியாளிவண் ... ... ... ... ...*
விரைந்தடைந்ததுவிளம்பிமே... ... ... ... ... *
போரியற்றவவன்வந்திடும்படி .. ... ... ... ... ...*
புகன்றுமீள்கெனவகன்றுபோய்ச்... ... ... ... *
சீருலாவிவளர்பாசறைப்பதி ... ... ... ... ... ...*
செறிந்துவீரனையறிந்துகண் ... ... ... ... ... *
டீரமற்றிடுமனத்துவெய்யவ ... ... ... ... ... ...*
னிசைத்தவாசகமிசைத்தனன்... ... ... ... ... *

(இ-புரை.) நீவீரவாகுவுக்கெதிரில் விரைவுடன்போய் நானிங்கேவந்ததைச்சொல்லிப்போர்செய்யஅவனைவருப்படிசொல்லிப்வாவென்றான்அந்தத்தூதன்சீர்பொருந்திவளர்கின்றபாசறைப்பதியினிடத்திற்போய்வீரவாகுதேவனா யறிந்துகொண்டு பகையற்றமனமுள்ள கொடியபானுகோபன் சொன்னவார்த்தையைச்சொலில்லும்(—எ-று.) (௱உக)

இயம்புபோதுகதிரைத்தளைந்தவனை... ... ... ... ... *
யின்றுகொல்லவருவேனெனுப் ... ... ... ... ...*
பயம்பொருந்துவகைதூதமேறுடிவை ... ... ... ... *
பகர்ந்துவிட்டிளையரோடுநீள் ... ... ... ... ...*
வயம்பொருந்துகுமரேசன்முன்பணுகி ... ... ... ... *
வந்தனைத்தொழில்புரிந்துபின் ... ... ... ... ...*
னயம்பொருந்துவிடைகொண்டுசென்றுகவி ... ... ... *
னண்ணுதேரின்மிசைநண்ணினன் ... ... ... ...*

(இ-புரை.) தூதன்சொன்னபோது பானுகோபனையின்றுகொல்ம் நான்வருகிறேனென்று பயம்பொருந்தும்படி தூதனேடிந்தமொழிகள்சொல்லியனுப்பிவிட்டு மிகுந்தவெற்றிபொருந்திய குமாரசுவாமியி

னிடத்துத் தம்பியருடன்போய் வந்தனைவழிபாடுகள்செய்து பின்புவிருப்பமுள்ள விடைபெற்றுக்கொண்டுசென்று அழகுபொருந்தியதேரின் மேலாரோகணித்தார்.—(எ-று.) (௱உஉ)

கொன்னுறுந்தனது சேனையோடணிகொள் ... ... ... *
கோதிலபாசறை பகன்றுபோய்... ... ... ... ...*
பன்னரும்புகழ்கொடெவ்வனிநீடு... ... ... ... ... *
பறந்தலைக்களமடைந்திட ... ... ... ... ... .. *
மின்னலற்றமிகுபூதர்தானவ .. ... ... ... ... .... *
ரெதிர்ந்துவெஞ்சமரியற்றினர் ... ... ... ... ...*
மன்னுபூதரொடுவெய்யதானவர்கள் .. ... .. ... ... *
வலலைசிற்சிலர்மடிந்தனர்... .. ... ... ... ...*

(இ-புரை.) பெருமைபொருந்திய தன்சேனையுடன் அலங்காரமுள்ளதாய்க் குற்றமற்றபாசறையைவிட்டுநீங்கிப்போய்ச் சொல்லுதற்கரிய புகழ்கொண்ட பகைவருடைய பானுகோபனிருக்கும் போர்க்களத்திற்சேர்ந்தார் அவ்வாறுசேர்ந்தவுடன் துன்பம்நீங்கிய மிகுந்தபூதர்களும் அவுணர்களும் எதிர்ந்துகொடுமையான சண்டைசெய்தார்கள் இவ்வாறுசண்டைசெய்யும்போது எதிர்ந்திருக்கிறபூதர்களிலும்கொடிய அவுணர்களிலும் விரைவாகவேசிலர் இறந்தார்கள்.—(எ-று.) (௱உ௩)

தானவத்தலைவராரும்வீரமுற ... ... ... ... ... ...*
சாரதத்தலைவர்யாவரு ... .. ... ... ... ... *
மீனமற்றிடுமிலக்கரொணமரு ... ... ... ... ... ...*
மெதிர்ந்துவெஞ்சமரியற்றவே .. ... ... ... *
யூனமுற்றவரிறக்கவெறுபகைவ ... .. ... ... ... ...*
னுந்துதேரினெய்ந்திட ... ... ... ... ... *
மானமுற்றதிறன்மொய்ம்பனுங்கடிது... ... ... ...*
வந்துதேரினெதிர்ந்தனன்... ... ... ... ... *

(இ-புரை.) அவுணத்தலைவரெல்லாரும் வீரம்பொருந்திப் பூதத்தலைவர்களெல்லாரும் பங்கமில்லாத லக்ஷதசெட்டுவீரர்களும் எதிர்ந்து பெரும்போர்செய்யும்போது அவுணத்தலைவர்களிறந்ததைக் கண்டு பாகோபன் மேன்மைபொருந்திய தேருடன்வந்தெதிர்ந்ததைக் கண்டபெருமைபொருந்திய வீரவாகுதேவரும் விரைவில்தேருடன்வந்து எதிர்ந்தார்.—(எ-று.) (௱உ௪)

பொழிப்புரை.

அற்றமேவலைதனி லுற்றவில்லினை ... ... ... ... ... ...*
வளைத்திலங்குபிறையாசுகம் ... ... ... ... ... *
வெற்றிமேகமெனநாசர்தெவ்வன்விட... ... ... ... ...*
வீறுகொண்டதொருவில்லினை ... ... ... ... *
மற்றுநேரில்குமரன்பதத்தினை ... ... ... ... ... ...*
வணங்குவீரனும்வணங்கியே .. ... ... ... .. *
ஏற்றிடும்பிறைநெடுஞ்சரம்பல ... ... ... ... ... ...*
தொடுத்துநேருறவிடுத்தனன் ... ... ... ... ... *

(இ-புரை.) தேவர்கள் பகைவனாகிய பானுகோபன் அப்போது தன்கையிலிருக்கும்வில்லைவளைத்துப்பிரகாசியாநின்ற அர்த்தசந்திரபாணங்களை வெற்றியுள்ள மேகமழைபொழிவதுபோலப் பிரயோகஞ்செய்தான் ஒப்பில்லாதகுமாரசுவாமியின் திருவடிகளைவணங்குகின்ற வீரவாகுதேவரும் மேன்மைகொண்டதாகிய ஒருவில்லையெடுத்துவளைத்துக்கூர்மைபொருந்தியநெடிய அர்த்தசந்திரபாணங்கள் அநேகமாகத்தொடுத்து அவன்விட்டபாணங்களுக்குநேராகவிட்டார். —(எ-று.) (௱௨௫)

காரிமேலுவனவிண்ணின்மேலுவன ... ... ... ... ... ..*
அஞ்சமேறுடரிகளுந்துவா ... ... .. ... ... ... *
ஊரிமேலுவனபாரிமேலுவன ... ... ... ... ... ...*
வுந்துசீகரமுலாவமுந் ... ... ... ... ... ... *
நீரின்மேலுவனவெற்பின்மேலுவன ... ... ... ... ... ...*
நீள்வுகொண்டபுகழண்டமுன் ... ... ... ... ... *
சீரிமேலுவனதூயவன்றனொடு ... ... ... ... ... ...*
தீயவன்றனதுசெய்யசேர் ... ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுயுத்தஞ்செய்யும்போது வீரவாகுதேவருடையதேரும் பானுகோபன்தேரும் மேகமண்டலத்திற்செல்லும் ஆகாயத்திற்செல்லும் பிரமலோகத்திற்செல்லும் விஷ்ணுலோகத்திற்செல்லும் பூமியின்மேற்செல்லும் எறிகின்றதுளிகள்பொருந்திய சமுத்திரங்களிற்செல்லும் மலைகளிற்செல்லும் மிகுந்தபுகழுள்ள அண்டங்களினிடத்தில் சீருடனேசெல்லும்.—(எ-று.) (௱௨௬)

ஐயமொத்தவவர்வையமிந்தவகை ... ... ... ... ...*
சாரிவட்டமுலாவலும் ... ... ... ... ... ... *

வெய்யனுமிரநெடுஞ்சரஞ்சிதறி ... ... ... ... ... ...*
வீரன்மார்பிடையழுந்திடத் ... ... ... ... ... *
துய்யனுமிரமெனும்பெருங்கணை ... ... ... ... ...*
ஏவிவென்றிபுனைசூர்மகன் ... ... .. ... ... *
செய்யதேரினைநூறவேறுமொரு ... ... ... ... ...*
தேரின்மீமிசைசெறிந்தனன் .. ... ... ... ... *

(இ-பொ.) மகமேருவையொத்த அவ்விராவணனுடைய இரதங்களிற்றவைகை இடசாரி வலசாரியாகச் சுழன்றுலாவும்போது பானுகோபன்றெடிய ஆயிரம் பாணங்கள்விட்டு வீரவாகுதேவர் மார்பின்மேல் அழுந்தினான்; வீரவாகுதேவர் ஆயிரம்பாணங்களேவி வென்றியுள்ள சூரன்மகனுடைய தேரினை அழித்தவளவில் அவன்வேறொருதேரின்மேலேறினான்.(எ-று.) (௩௨௭)

செறிந்துவில்லினைவளைத்துமுன்னருமை... ... ... .* *
செம்மலுக்கிளையசேவகன்... ... ... ... ... ...*
முறிந்திடாதகணையாயிரங்கொடவன் ... ... ... ... *
மொய்ப்பரந்துளைபடுத்தலும் ... .. ... ... ...*
பிறிந்திடாதவிறலும்பர்வேலனொடு .. ... ... ... ... *
பெருந்திறற்புனைதிருந்தலன் ... ... .. ... ...*
மறிந்திடப்பரிவெல்வனென்றவுணன் ...., ... ... .*. *
வாருணப்படைவிடுத்தனன்... ... ... ... ... ...*

(இ-பொ.) அவன்தேரிலேறி வில்லைவளைக்குமுன் பார்வதிபுத்திரராகிய சுப்பிரமணியசுவாமிகள் சகோதரராகிய வீரவாகுதேவர் முறிவுபடாத ஆயிரம்பாணங்களால் அவன்தோளையும் மார்பையுந்துளைபடுத்தினார்; அப்படி துளைபடுத்தவே பானுகோபன் பிறிந்திடாதபலமுள்ள தேவாஸ்திரங்களால பலம்பொருந்திய இந்தப்பகைவனைவெல்லக்கூடும்படி வெல்லுவேனென்று எண்ணிப் பானுகோபன் வாருணாஸ்திரம் விட்டான்.—(எ-று.) (வேல் என்பது ஆயுதப்பொதுவுக்குப்பெயர்) (௩௨௮)

மேயுமப்படையைவீரனங்கிபடை ... ... .. ... ...*
விட்டழித்திடலுமொட்டலன்... .. ... ... ... *
வாயுவின்படைவிடுப்பமொய்ம்பனொரு ... ... ... ...*
மாசுணப்படைவிடுப்பவே ... ... ... ... ... *
போயுரத்துவருவாயுவின்படையை ... ... ... ... ...*
யண்டிவஞ்சனெதிர்போதலு ... ... ... ... ... *

மாயனூர்திபடைதீயனுந்தவெதிர் ... ... ... ... ...*
வுந்தவெம்படைமுதறிந்ததே ... ... ... ... ... *

(இ-புரை.) பொருந்திய அந்தவாருணாஸ்திரத்தைவீரவாகுதேவர் ஆக்கினேயாஸ்திரம்விட்டழித்தார்பானுகோபன்வாயுவியாஸ்திரம்விட்டான் வீரவாகுதேவர்நாகாஸ்திரம்விட்டார் அதுபோய் உரத்துவருகின்ற வாயுவியாஸ்திரத்தையுண்டுவிட்டு அவனுக்கெதிரில்சென்றது அதுகண்டு விஷ்ணுவின்வாகனமாகிய காருடாஸ்திரம்விட்டான் அதினால் எதிரில்வந்தவாயுவியாஸ்திரம் அழிந்துபோய்விட்டது.—(எ-று.) (௱௨௧)

உந்துநந்திபடைபின்புமொய்ம்பன்விட... ... ... ... *
லூதைபோலதுவிரைந்துபோய்... ... ... ... ...*
வந்தகாருடநெடும்படைத்திறலை ... ... ... ... ... *
வல்லைசிந்துதலும்வஞ்சக ... ... . ... ... ...*
னந்தகன்படைவிடுப்பவங்கதையு ... ... ... ... ... *
மட்டதொட்டலனயன்படை ... ... ... ... ...*
வெந்திறற்கொளவிடுப்பநந்திபடை... ... ... ... ... *
முன்புவந்ததுவிளிந்ததே ... ... ... ... ... ...*

(இ-புரை.) அதன்பின்பு மேன்மைபொருந்திய நந்தியாஸ்திரம் வீரவாகுதேவர்விட்டார் அதுபிரசண்ட மாருதம்போல் விரைவாகச்சென்று எதிரில்வந்த காருடநெடும்படையின் வன்மையைக் கடிதிற்கெடுத்து பின்பு பானுகோபன் யமாஸ்திரம் பிரயோகித்தான் நந்தியாஸ்திரம் அந்தயமாஸ்திரத்தையும் அழித்துவிட்டது பானுகோபன்மிகுந்த வெற்றிகொள்ளும்படி பிர்ம்மாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்தான் அந்த அஸ்திரமும் நந்தி அஸ்திரத்துக்கு எதிரில்வந்து அழிந்து விட்டது.—(எ-று.) (௱௨௨)

மிக்கவெற்பகைவன்மாயவன்படை ... ... ... ... ...*
விடுப்பநந்திபடைமுன்புவந் ... ... ... ... ... *
தக்கணம்பொரலுமாடன்மொய்ம்புடைய... ... ... ... *
வண்ணலங்கதுதெரிந்துபின் ... ... ... ... ...*
றக்கன்வேள்வியையழித்தவன்படை... ... ... ... ... *
விடுப்பமால்படைதகர்ந்திட ... ... ... ...*
[illegible]படையெடுத்துவெந்தழுவ... ... ... ... *
[illegible]ண்ணலார்வெருவவிட்டனரே ... ... ... ...*

(இ-புலா.) சூரியனுக்கு மிகுந்தபகைவனாகிய பானுகோபன் அதன்பின்பு நாராயணாஸ்திரந் தொடுத்துவிட்டான் அது அப்பொழு தேவந்து நந்திபஸ்திரத்துடன்போராடுகையில் வெற்றிபொருந்தியபு சமுள்ள வீரவாகுதேவர் அதனைக்கண்டு பின்பு தக்கன்யாகத்தை யழித்த வீரபத்திரன்படையையேவினர் அதைக்கண்டுநாராயணாஸ்திரம் ஒளித்துவிட்டது அதைக்கண்டபானுகோபன் பகைவர்கள் அஞ்சும்படிசிவாஸ்திரம் எடுத்துப்பிரயோகஞ்செய்தான்.—(எ-று.) (தகுவன் என்பது அவுணன் என்பதாம்.) (௩௩௧)

மூரண்டரும்புயனுநம்பன்வெம்படையை ... ... ... ...*
மொய்ம்பினோடுவிடவங்கெதிர்ந் ... ... ... ... *
திரண்டுவெம்படையுநீள்பெருஞ்சம ... ... ... ... ...*
ரியற்றிவிட்டவனைமெய்தம்வ ... ... .. ... ... *
திரண்டகற்றிணைபுனைந்ததோளுடைய... ... ... ... ...*
தீயசூரனருடையவ .. ... ... ... ... ... ... *
னரண்டருந்தனதுமாயையாலிலகு ... ... ... ... ...*
மம்பரத்திடையொளித்தனன்... ... ... ... ... *

(இ-புலா.) திண்மைகொண்டவீரவாகுதேவரும் சிவாஸ்திரந்தொடுத்து அதற்குசெய்யவேண்டிய உபசாரங்களெல்லாஞ்செய்து பிரயோகஞ்செய்தார் அந்தவிடத்தில் அவ்விரண்டுபடையும் பெரும்போர்செய்துவிட்டவர்களிடத்திற்சேர்ந்தது திரண்டகட்டுத்தறியையொத்தபுசங்களையுடைய கொடியசூரன்பெற்ற கொடியவனான பானுகோபன் என்பவன் தனக்குக்காவலாகிய மாயையினால் பிரகாசிக்கும் ஆகாயத்தில் ஒளித்தான்.—(எ-று.) (௩௩௨)

ஆயபோதுகதிரோன்மறைந்தன ... ... ... ... ... *
னருந்திறற்குலவுதானவன்... ... ... ... ... ...*
மாயைதன்படைவிடுப்பவள்ளன்முத ... ... ... *
லானசேனையைவளைந்துமா ... ... ... ..., ...*
லேயவேகடிதுகட்டியேபினி ... ... ... ... ... *
தாயநீர்க்கடலிலிட்டிடத் ... ... ... ... ... ... ...*
தீயரிற்பெரியதீயனங்கது ... ... ... ... ... ... *
தெரிந்துநெஞ்சகமகிழ்ந்தனன்,... ... ... ... ...*

(இ-புலா.) அப்போது சூரியன்மறைந்தான் அருமையான பலமுள்ள பானுகோபனானவன் மாயைமுன்கொடுத்த மாயாஸ்திரத்தை ஆகா

பொழிப்புரை.

யத்திலிருந்தபடி பிரயோகஞ்செய்தான் அதுவந்து வீரவாகுதேவர்முதலான சேனையோர்களையெல்லாம் வினாவிலவர்கள் துமயக்கமுண்டாகும்படி கட்டிக்கொண்டுசென்று இனிமையாகயநீருள்ளடலுக்குளிட்டது பாவிகளுக்குள் அதிகபாவியாகிய பானுகோபன் அதையறிந்து மனமகிழ்ச்சியடைந்தான்.—(எ-று.) (௱௩௩)

மகிழ்ந்துதாதையுறுகோயினண்ணியவன்... ... ... ... *
வண்ணவொண்கழல்வணங்கியே... ... ... ... ...*
நிகழ்ந்தவாறுதனையோதவன்னவ ... ... ... ... ... *
னிறைந்தவார்வமதுறைந்திடப் ... ... ... ... ...*
புகழ்ந்துமைந்தனையவன்றனதுமனை ... ... ... ... *
புக்கிருந்திடவிடுத்தனன்... ... ... ... ... ... ...*
விகழ்ந்திடாமனெறிகொணாரதன்குமர ... ... ... ... *
வேண்முனுற்றிவையிசைத்தனன்... ... ... ... ...*

(இ-புரை.) பானுகோபனிவ்வாறு மகிழ்ச்சியடைந்து தன்பிதாவிருக்கிறகோயிலிற்போய் அந்தப்பிதாவின் அழகியொளியுமுள்ள பாதங்களைவணங்கிப்போர்க்களத்தில்நடந்ததைச்சொன்னான் நிறைந்தஆசையானது பொருந்தமகனைப்புகழ்ந்து அவன்வீட்டிற்போயிருக்கும்படி உத்தரவுகொடுத்தனுப்பினான் இங்கிவ்வாறிருக்க இகழ்ச்சியடையாத தவநெறிகொண்ட நாரதமுனியானவர் குமாரசுவாமியின் சந்நிதியிற்சென்று இந்தச்சேதிகளைச்சொன்னார்.—(எ-று.) (௱௩௪)

அற்றவேலையினிலாறுமாமுக ... ... ... ... ... ... *
னடற்கொள்வேல்விடவனக்கர்வாய் ... ... ... ...*
வெற்றிவேல்கடிதினுற்றுமாயையைய... ... ... ... ... *
விலக்கியேகவடல்வீரனுந்... ... ... ... ... ... ...*
துற்றயாவருமெழுந்துவந்தணிகொள் ... ... ... ... *
சூரனூரையதிர்கண்டபின்... ... ... ... ... ...*
கொற்றமேவுகுடமோசனுக்கிளைய ... ... ... ... ... *
காளையின்னமொழிகூறுவான் ... ... ... ... ...*

(இ-புரை.) அதைத் திருவுளத்திற்கொண்டருளியபோது ஆறுமுகச்சுவாமியானவர் பலங்கொண்ட வேலாயுதத்தைவிட அந்தவெற்றிவேலானதுகடிதில் சமுத்திரத்தினிடத்திற்சென்றுமாயையைநீக்கிச் சுவா

மியினிடத்திற்போய்ச்சேர்ந்தது அந்தச்சமூத்திரத்தில் விழுந்திருந்தவீ ரவாகுதேவரும் மற்றுமுள்ளவர்களு மயக்கந்தெளிந்தெழுந்துவந்து அழகுகொண்டசூரன் பட்டணத்தையெதிரிற்கண்டபின்பு வெற்றிபொருந்திய சுப்பிரமணியசுவாமிக்கு இளையவராகிய வீரவாகுதேவ ரிந்தவார்த்தைசொல்லுகிருர்.—(எ-று.) (௩௩௫)

சரந்துமாயைகொடுவென்றுசென்றதொரு ... ... ... ...*
கள்வனைத்தலையறுத்தலா .. ... ... ... ... ... *
துரந்தருங்குமரவேண்முனேகில... ... ... ... ... ...*
னுரைத்தவீதுமுடியாதெனி... ... ... ... ... *
விருந்திடேனனதுவில்லுநானுமெரி .. ... ... ... ...*
யெய்துவேனெனவியம்பியே .. ... ... ... ... *
விரிந்தசேனையொடுசூரனூரண... ... ... ... ... ...*
மேலைவாசலிடைமேவினன் ... ... ... ... ... *

(இ-புரை.) ஆகாயத்தில்மறைந்துநின்று மாயையினால்வென்று ஓடிப்போனதிருடனைத் தலையறுத்தல்லது நமக்குவல்லபமுண்டாகும்படி யனுக்கிரகஞ்செய்யும் சுப்பிரமணியசுவாமியின் சந்நிதியில் செல்லேன் இப்போது நான்சொல்லியது நிறைவேருவிட்டால் என்னுயிர்வைத்துக் கொண்டிரேன் என்வில்லும் நானும் தீயிலவிழுவேனென்று சொல்லிப் பரந்தசேனையுடன் சூரன்பட்டணத்தின்மேல் புறத்துமதில்வாயிலினிடத்திற்சேர்ந்தார்.—(எ-று.) (௩௩௬)

அங்கிருந்தபுலிமாமுகன்பொரு ... ... ... ... ... *
தழிந்திடக்கனலின்வாயுவின் ... ... ... ... ...*
றுங்கவெம்படைசெலுத்திவாணகர் .. ... ... ... ... *
தொலைப்பவும்பலாயலைப்பவன்... ... ... ... ...*
மங்குலேழையும்விடுப்பவங்கவைகள் ... ... ... ... *
வந்துமாமழைசொரிந்துநீள் ... ... ... ... ...*
வெங்கனற்றனையழிப்பவன்னசெயல் ... ... ... ... *
வீரவாகுவெதிர்கண்டனன்... ... ... ... ... ...*

(இ-புரை.) அவ்விடத்திலிருந்தபுலிமுகன் என்னும் அவுணன்சண்டைசெய்து அழிந்தான் அதற்குமேல் வீரவாகுதேவர் ஆக்கினேயாஸ்திரம் பலமுள்ளவாயுவியாஸ்திரம் என்னுமிவைகளைவிட்டு ஒளிபொருந்திய அந்தநகரழியும்படி செய்தார் தேவர்களைவருத்து கின்றவனை

சூரன் அதையறிந்து அந்தத்தீயை அவிக்கும்படி சப்த்தமேகங்களையும் ஏவினான் அவைகள்சென்று மிகுந்தமழைபொழிந்து அதிகவெப்பமுள்ளதீயை அவிக்க வீரவாகுதேவர் அந்தச் செய்கையை யெதிரிற் கண்டார்.—(எ-று.) (௱௩௭)

மூன்றாநாள் பகல்யுத்த மூற்றியது.

---



௳

மூன்றாநா ளிராத்திரி இரணியன் யுத்தம்.



[வேறு.]

கண்டான்வெகுண்டான்வடவைப்படைவிட்டகாலை ... ... *
விண்டானிறைந்தபுயனீர்தனையுண்ணவீழ்ந்து ... ... ...*
தண்டாமுகிற்கள்கடலோடியவீருதன்னை... ... ... ... *
யண்டார்புகழுந்திறற்றூதர்சூரோடறைந்தார்... ... ... ...*

(இ-புரை.) வீரவாகுதேவர் அதைக்கண்டுகோபங்கொண்டு வடவாமுகாக்கினியஸ்திரம் பிரயோகஞ்செய்தபோது அந்த அஸ்திரஞ்சென்று ஆகாயத்தில்நிறைந்திருக்குமேகங்களி னீரையெல்லாம்உண்டுவிடவே நீங்காதஅம்மேகங்கள்விழுந்துகடலிலோடிவிட்டனபகைவர்கள்புகழத்தக்கதூதர்கள்சென்று இந்தச்சேதியைச்சூரனுக்குச்சொன்னார்கள்.—()

அப்போதுசீறியமர்க்கேகுவனென்னவங்கண் ... ... ...*
டெப்போடிலங்குமறையாயிரமோர்ந்ததூயன் ... ... ... *
மெய்ப்பானசூரன்மகனுடகனென்னுமேலோ ... ... ...*
னிப்போதுகேளென்றவன்றாள்பணிந்தீதிசைப்பான் ... *

(இ-புரை.) சூரன் அதைக்கேட்டபோது கோபங்கொண்டு நானே யுத்தஞ்செய்யப் போகிறேனென்றான் அவ்விடத்திலிருந்த அநேகமாக வேதங்களுணர்ந்த தூயவனும் உண்மைநெறியுள்ளவனும்பராக்கிரமமு

ளவனுமாய் விளங்கிக்கொண்டிருக்கும் இரணியனென்கிறபெயருள்ள மேன்மையாகிய சூரன்மகன் பிதாவின்பாதத்தைப்பணிந்து இப்போது நான்சொல்லுகிற வார்த்தையைக்கேளுமென்று இதனைச்சொல்லுகிறான்.

வில்லார்கனகத்திருநாடதினுற்றவிண்ணோர்... ... ... ...*
பல்லோர்தமையாஞ்சிறைசெய்ததுவீறுபாவ ... ... ... *
மல்லாதுநன்றிபடுமோவவர்தம்மைவென்ற ... ... ... ...*
தெல்லார்நயநப்பெருமான்வரமன்றியாதே ... ... ... *

(இ-புணா.) ஒளிபொருந்திய தாய்ச்செல்வமுள்ள பொன்னுலகத்திலிருக்கும் தேவர்கள்பலரை நாம் சிறையில்வைத்தது மிகுந்தபாவமேயல்லது தருமமென்றுசொல்லப்படுமோ அவர்களை நாஞ்செயித்ததுசோமசூரியாக்கினிகளாகிய திரிநேத்திரங்களுள்ள பரமசிவனருளிச்செய்தவரத்தினாலன்றி வேறேயாதினால் வென்றோம்.—(எ-று.) (௱௪௰)

ஏறூற்றதேவனொடுமாறுகொண்டார்களெல்லா ... ... ... *
மூறுற்றிறந்தாரிருந்தார்தமையோதவுண்டோ ... ... ...*
மாறற்றசெல்வமளித்தோன்மகன்மேவினமாறு .. ... ... *
மாறற்றவனைப்பணியாதமர்செய்யலாமோ ... ... ... ...*

(இ-புணா.) ரிஷபவாகனத்தையுடைய பரமசிவனுடன் பகைத்தவர்களெல்லாரும் இடையூறுபொருந்தி யிறந்தார்களேயல்லது உயிரோடிருந்தவர்களுண்டென்றுசொல்ல உண்டோ மாறுபடுதலில்லாத செல்வம் நமக்கு அருளிச்செய்த கர்த்தாவினுடைய புத்திரரோவந்திருக்கிறார் அப்படியிருக்க மாறுபாடாகிய முறைமையைவிட்டு அந்தப்புத்திரரைப் பணியாமல் போர்செய்யலாமோ.—(எ-று.) (௱௪௧)

மன்னுகுகனம்பிழையாலமர்செய்யவந்தான்... ... ... ...*
பொன்னாட்டமரர்சிறைவிட்டவன்முன்புபோந்தங் ... ... *
கென்னாயகனேகொடியோம்பிழையெண்ணலென்றே ... ...*
சொன்னாலறுமாமுகன்மீண்டிடுமென்றுசொற்றான்... ... *

(இ-புணா.) மன்னவனே நம்முடையகுற்றத்தினாலே சுப்பிரமணியர் போர்செய்யவந்தார் ஆதலால் தேவர்கள்சிறையைநீக்கிவிட்டு அவருக்கெதிரில்சென்று அங்குநின்று எங்களிறைவனேகொடியேங்கள் பிழை

யைத் திருவுள்ளத்திற்கொள்ளவேண்டா வென்று விண்ணப்பஞ்செய்தால் ஆறுமுகக்கடவுள் கயிலாயத்துக்கு எழுந்தருளி விடுவாரொன்றுசொன்னான்.—(எ-று.) (௱௬௨)

ஈங்கிதுபாலனுரைசெய்திடும்போதிடும்போன்... ... ... *
றீங்கானகோபமுடனேசிலவார்த்தைசெப்ப ... ... ... ...*
வாங்காதன்மைந்தனறிமேயன்பிழையெண்ணலண்டார்... ... *
நீங்காவிறப்பவமர்செய்குவனென்றுநின்றான்... ... ... ...*

(இ-புரை.) இந்தவார்த்தையைத் தன்மகன் சொன்னபோது இடும்பானதுணமுள்ள சூரனானவன் பொல்லாததாகியகோபத்துடன் சிலவார்த்தைகள்சொன்னான் அப்படிசொல்லவே அன்புள்ள புத்திரனாகிய இரணியன் அவனைநோக்கி ஐயனேசிறியேன் பிழையை யுன் மனதிற்கொள்ளவேண்டாம் இப்போதேபோய்வந்திருக்கிற பகைவர்களெல்லாருந்தப்பிப் போகாமலிறக்கும்படி போர்செய்கிறேனென்று சொல்லி நின்றான்—(எ-று.) (௱௬௩)

இன்பாகிவெய்யோனவையான்றனையேவவேகிக்... ... ... *
கொன்பாவுதன்னிலனுகிப்படையானகொண்டு ... ... ...*
மின்பாவுநாலாயிரவெள்ளவெஞ்சேனைமேவப்... ... ... *
பொன்பாவுபூதருறுசெம்புலமுன்புபோனான் ... ... ...*

(இ-புரை.) அந்தவார்த்தையைக்கேட்டுச் சூரனானவன் சந்தோஷங்கொண்டு அவனுக்கு உத்தரவுகொடுத்தனுப்பச் சென்றுபுகழ்பரந்ததன் வீட்டிற்சேர்ந்துவில்முதலாகிய ஆயுதங்களெடுத்துக்கொண்டுஒளிபரந்தநாலாயிரம்வெள்ளம் அவுணச்சேனைகள்கூடவர அழகுபரந்த பூதர்களிருக்கிற போர்க்களத்திற்போனான்.—(எ-று.) (௱௬௪)

[வேறு.]

முச்சிரமுள்ளவன்வச்சிரமுள்ளவன் ... ... ... ... ...*
மொய்ம்பினன்முமபினன்முரனுறுமிரணிய ... ... *
னச்சமில்சேனைவெள்ளத்தைநாற்றிக்கினு ... ... ... ...*
மாயிரமாயிரமாகவேயேகவிட் ... ... ... ... *
டெச்சமிலுகுடதிசைச்சேனையோடேகினு ... ... ... ...*
னீடுசேர்வீரனுநால்வகைத்திக்கினு... ... ... *

மெச்சுதன்றானையைப்பொரவிடுத்தவுணர்கோன் ... ... ...*
மேவுறுந்திக்கிலேமேவினன்றானுமே...... ... ... *

(இ-ள்.) மூன்றுசிரசுள்ளவனும் வச்சிரவாகு என்கிறபெயருள்ளவனுக்கு மூத்தவனுமாகிய இரணியனானவன் பயங்கொள்ளுதலில்லாத தன்சேனைவெள்ளத்தை நாலுதிக்கிலும்ஆயிரம்ஆயிரமாகவர் துவளைந்துகொள்ளும்படி அனுப்பித்தான்மேற்றிசைப்புறத்திற்சேனையுடன்வந்தான்இவ்வாறு அவுணர்கள்வருகிறவகையைஅறிந்துவீரவாகுந்தவரும்யாவரும்புகழத்தக்கதம்முடையசேனையைநாலுதிக்குகளிலும் வளைந்துகொண்டுபோர்செய்யும்படி அனுப்பிஇரணியனிருக்குந்திசையில்தாமும்சென்றார்.—(எ-று.) (௱௪௫)

சாரதத்தானையுந்தானவத்தானையுந் ... ... ... ... ... *
தங்களிற்போர்செயச்சண்முகற்கிளையவன் ... ... ...*
தீரமுற்றிரணியன்றன்னொடும்வந்தவெஞ்... ... ... ... *
சேனையிற்பல்லவச்சேனையைச்சிந்தியே ... ... ...*
கோரமுற்றம்புகளுந்தருவர்கொளுபிரங் ... ... ... ... *
கோலவிழ்த்தாயிரங்கோடியாலநீடிய... ... ... ...*
பாரிடச்சேனையைப்பாரிடத்தேயடப் ... ... ... ... *
பாங்குறும்பூதர்தாமேங்கியேயோடினார் ... ... ...*

(இ-ள்.) பூதச்சேனையும் அவுணச்சேனையும் தாங்களேயெதிர்த்துப்போர்செய்யும்போது சண்முகக்கடவுளுக்கிளைய வீரவாகுதேவர்தீரம்பொருந்திய இரணியனுடன்வந்தசேனையைப் பாணவருஷம் பொழிந்து கொடுமைகொண்டவராய்க் கொல்லும்போது அவுணருக்கிறைவனாகிய இரணியன் ஆயிரம்பாணங்கள்விட்டு ஆயிரங்கோடியாய்ப் பரந்திருக்கும் பூதச்சேனைகள் பூமியிலேவிழும்படிகொல்லுதலினால் அங்கிருந்த பூதர்களெல்லாரும் பயந்தோடினார்கள்.—(எ-று.) (௱௪௬)

சாரதற்கிறையவனிலனும்பேரினன்... ... ... ... ... *
றானவன்முன்புபோய்த்தானவன்மேவிய ... ... ...*
தேரொடுத்தம்பரத்தெறியவேதேரொடுஞ்... ... ... ... *
சென்றுமீண்டிடுதலுஞ்சிலனுநீலனு ... ... ... ...*
தேருறச்சினமொடேமாகமேல்வேகமாய் .. ... ... ... *
நில்லுநில்லென்றுபோய்நீசன்மாமைந்தனைப் .. ... ...*

பொழிப்புரை.

பாரமெய்த்தாளினாலுருளவேயுதையவே... ... ... ... *
பாரின்மேல்வீழ்த்தலும்பாய்ந்தனன்மேனிமேல் ... ...*

(இ-புரை.) நீலனென்கிற பூதராசனானவன் எதிரிற்போய் இரணியனேறிக்கொண்டிருக்கிற தேரையெடுத்து ஆகாயத்தில் விட்டெறிந்தான் அவன்தேரோடுசென்று விழும்போது சீலமுள்ள நீலன் கோபத்துடன் அவனுக்கெதிரிலநில்லு நில்லென்றுவிரைவாக ஆகாயத்தின்மேற் சென்று அவ்விரணியனைத்தம்உறுப்பாகியபெரியகாலினால் உருளும்படியுதைத்தவளவில் இரணியன் அங்கிருந்தபடியே பூமியின்மேல்விழுந்தான்அவ்வாறுவிழுந்த உடலின்மேல்நீலன்பாய்ந்தான்.—(எ-று.) (௱௪௭)

தன்பதத்தாலவன்றனைமிதித்திடுதலுந்... ... ... ... ...*
தாழ்ந்திடும்வில்லினன்வீழ்ந்திடுஞ்சோரியன் ... ... *
துன்புடைத்தாகியோர்மேனிதன்போலவே ... ... ... ...*
துஞ்சுறுவிஞ்சையாற்றோன்றுவித்திடலு ... ... *
நன்புகழ்ப்பூதனுங்கண்டதைச்சாடவே... ... ... ... ...*
நனிதொடர்ந்திருபதநலியவேமெலியவே... ... ... *
மன்புகழ்த்தேர்மிசைத்துயரகன்றேறினன்... ... ... ...*
வாளிபூதன்மிசைவஞ்சனுஞ்சிந்தினான் ... ... ... *

(இ-புரை.) நல்லபுகழுள்ள நீலனானவன் தன்காலினால் உதைத்தவளவில் இரணியனானவன் பலங்குறைந்து உதிரம்பெருகும்படி துன்பங்கொண்டவனாகி மாருதமாயையினால் தன்னுருவம்போல வேறொரு உருவங்காணும்படி தோற்றுவித்தான் அதைநீலன்கண்டு இரணியனென்றேநினைத்துக் கொல்லும்படி அந்த உருவம் சென்றவிடமெங்கும் விடாமல்தொடர்ந்து தன் இரண்டுகால்களும் வருந்தி மெலிவடைந்தான் இந்தச்சமையத்தில் இரணியனானவன் மூர்ச்சைதெளிந்தெழுந்து புகழ்பெற்றதேர்மேலேறிக்கொண்டு நீலன்மேல்பாணங்களையேவினான் (௱௪௮)

மண்டுதீவாளிதான்வந்துபட்டிடுதலும்... ... ... ... ...*
வாடிவெம்பூதனுமண்ணின்மேனின்றிடக்... ... ... *
கண்டனன்வீரனற்றேரொடுங்குறுகியே ... ... ... ...*
கையன்மாயத்தினைக்கையினிற்கவினுறக்... ... ... *
கொண்டதோர்ஞானவேலாலழித்திடுதலுங் ... ... ... ...*
கொடியன்றோராயிரங்கால்விடுத்திடவிளைந் ... ... *

தொண்டிறற்புயமுடைக்காளைதன்மார்பகத்... ... ... ...*
துந்துகோல்வந்துபட்டொல்லை தூளூற்றதே ... ... *

(இ-புரை.) எதிரில்வந்த அக்கினிமயமாகிய அந்தப்பாணங்கள்பட்டவளவில் நீலனானவன் மேசாபமாய்ப் பூமியின்மேல்வாடிநின்றான் அதைக்கண்டவீரவாகுதேவர்தேருடன்சென்றெதிர்ந்து அழகுபொருந்தக்கையிற்கொண்டதாயொப்பற்ற ஞானவேலினால் அந்தநீசன்மாயத்தையழிக்கவே அவனிவர்மேல் ஆயிரம்பாணங்களைவிஞன் அவ்வாறு அவன்விட்ட பாணங்கள் விரைவாகவந்து பலமும்பொலிவுமுள்ள புசங்களையுடைய வீரவாகுதேவர் மார்பிற்பட்டவுடனே பொடிப் பொடியாய் நொறுங்கி விட்டன.—(எ-று.) (௯௪௪)

மாணுறுந்திறலுடைக்காளைபின்பாயிர ... ... ... ... *
வன்சரஞ்சிந்தியேமன்னவன்பின்னுறுந் ... ... ...*
தூணியுந்தூணிசேர்வாளியும்வாளிமேசர் ... ... ... ... *
தூவிலுந்தூவிலார் துங்கவன்றேரையு... ... ... ...*
நானுறும்படிகெடுத்தவனுரம்பம்றாளை... ... ... ... *
நண்ணவேசெய்துபின்னண்ணலனண்ணிய... ... ...*
சேணிருந்தேரொலாநூறுநூறம்பினற் ... ... ... ... *
றேவர்கொண்டாடவேசிந்திநின்றானரோ ... ... ...*

(இ-புரை.) மாட்சிமைபொருந்திய பலமுள்ளவீரவாகுதேவர் பின்பு ஆயிரம்பாணங்களைவி அவன்முதுகிற்கட்டியிருக்கும் பாணப்புட்டிலையும் மற்றுமுள்ளபுட்டில்களுடன் அதிற்பொருந்தியபாணங்களையும் நல்லவில்லையும்பரிசுத்தமுள்ள பாணங்கள்வைத்தேவும்படியான பலமுள்ளதேரையும் இரணியன்வெட்கம்பொருந்தச்செய்து பின்பு அந்தப் பகைவன் ஏறத்தொடங்குகிறதேர்களையெல்லாம் நூறு நூறுபாணங்களினால் தேவர்கள்புகழும்படி அழித்து நின்றார்.—(எ-று.) (௯௪௫)

இச்செயற்கண்டுபின்னெண்ணலானெண்ணுவா ... ... *
னீங்கியான்முடிகுவனெந்தையுமுடிகுவ ... ... ...*
னிச்சயம்பிறர்களுமுடிகுவர்முடிவரோ ... ... ... ... *
னீள்கடன்செய்யவோர்நிருதரிங்கிலையா ... ... ...*
லச்செயற்புரியநானுறுவனென்றுன்னியே ... ... ... *
யருவமாய்மீனமாயாழியுட்போயினான்... ... ... ...*

பச்சிமத்திசைதனக்கெதிர்படுந்திசைதனிற் ... ... ... *
பானுவந்தானிருட்பந்தியைச்சிந்தியே... ... ... ...*

(இ-புரை.) பகைவனாகிய இரணியனிந்தச்செய்கையைக்கண்டு பின்பு என்னுகின்றான் இவ்விடத்தில் நானிறந்துபோவேன் எங்கள்பிதாவுமிற ந்துவிடுவான்மற்றுமுள்ள எல்லாரும் இறந்துவிடுவார்கள் இது நிச்சயம் எல்லாருமிறப்பார்களானல் தொன்றுதொட்டுவருகிற உத்தர கிரியைசெ ய்வதற்கு அவுணர்கள்யாவருமில்லை ஆகையால் அந்த உத்தரகிரியைசெ ய்வதற்கு நானிருக்கவேண்டுமென்றுகருதி அங்கே அருவமாய்மறைந்து மீனுருவங்கொண்டு சமுத்திரத்துக்குள் போய்விட்டான் இப்படியிருக் க மேற்குத்திசைக்கு எதிராகப்பொருந்திய திசையாகியகிழக்கில் இருட் கூட்டத்தைக்கெடுத்துச் சூரியனுதயமானன்.—(எ-று.) (௱௫௧)

ஆனவிச்செயலினையொற்றர்கண்டேகியே ... ... ... *
யடலுடைச்சூரன்முன்பனுகியங்கறையவே... ... ...*
யீனமுற்றிடுகொடுஞ்சூரன்மாலைமைந்தனங்... ... ... ... *
கெரிமுகன்கடிதுவந்தெனைவிடுத்திடுதியா ... ... ...*
னூனமுற்றழிவுறத்தெவ்வனைச்சிறியிங் ... .. ... ... *
கொல்லைவந்திடுவனென்றுரைசெயாநின்றிட.... ... ...*
மானமுற்றிடுவிறற்புதல்வபோய்வென்றுபின் ... ... ... *
வருதியென்றேகுதிஞன்மன்னர்தம்மன்னவன்... ... ...*

(இ-புரை.) இவனிப்படி மறைந்துபோனசேதியைத் தூதர்கள் க ண்டுசென்று பலம்பொருந்திய சூரனுக்கெதிரிற்சேர்ந்துசொன்னர்கள் அவ்வாறுசொல்லவே ஈனம்பொருந்தியகொடியசூரனுடையபெருமை யுள்ளமகனாகிய அக்கினிமுகனென்பவன் அங்கேவிரைவில்வந்துஎன்னை யனுப்புநான்போய் ஊனப்பட்டழியும்படி பகைவனைக்கோபித்துமறு படியிங்கு விரைவில்வந்து சேருகிறேனென்று சொல்லிநின்றான் அரச ர்களுக்கெல்லாம் அரசனாயிருக்கும்சூரனானவன் அந்தவார்த்தையைக்கே ட்டுப் பெருமைபொருந்தி வெற்றியுள்ளபுத்திரனே அப்படியேநீபோ ய்ச் செயம்பெற்றுப் பின்பு வாவென்று சொல்லி உத்தரவு கொடுத் தான்.—(எ-று.) (௱௫௨)

மூன்றுநாளிராத்திரி யுத்த முற்றியது.

---



உ

முருகன் துணை.

# நாலாநாள் அக்கினிமுகன் யுத்தம்.



என்றுசொற்றிடுதலும்புறமதிற்கடிதுவந் ... ... ... *
தேருலாவும்பெருந்தேரின்மீதேறியே... ... ... ...*
துன்றிமொய்த்திடுமடற்சேனையோரெண்ணிலார் ... ... *
சூழவந்தேகியேதூயவெம்பூதர்சேர் ... ... ... ...*
வென்றியுற்றிடுநெடுஞ்செம்புலத்தணுகலும் ... ... ... *
வீறுசாரதர்களும்விறலுலாநிருதரு ... ... ... ...*
நின்றுபற்பலபடைக்கலமெறிந்தெதிருறு ... ... ... *
நீடுவெஞ்சமரமாநிலைமைசெய்தாரரோ ... ... ...*

(இ-பு.) இவ்வாறுசூரன்சொன்னவளவில் அக்கினிமுகன் விரைவாகமதிற்புறத்தில்வந்து அழகுபொருந்திய பெரியதேரின்மேலேறி நிறைந்தபலமுள்ள சேனையோர் அளவில்லாதபேர் சூழ்ந்துவரச் சென்று பரிசுத்தமுள்ள வெவ்வியபூதர்கள்நிறைந்திருக்கும் பெரியபோர்க்களத்தில் சேர்ந்தவளவில் மேன்மைபொருந்தியபூதரும்வெற்றிபொருந்திய அவுணர்களும் பல ஆயுதங்களையெறிந்து எதிர்த்துநின்று யுத்தமாகிய நிலைமைசெய்தார்கள்.—(எ-று.) (௱௫௩)

அந்தவேலையில்விறல்வியர்வில்வந்துதயமா ... ... ... *
மரியசீர்வீரர்போயவுணர்தஞ்சேனையிற் ... ... ...*
பந்திகொண்டிடுநெடுஞ்சாயகஞ்சிந்தியே ... ... ... *
பாடுகண்டிடுதலும்பதகரங்கோடியூர்... ... ... ...*
நிந்தைதீர்மேகனேசோமனேயாதியா ... ... ... ... *
நிருதமன்னவர்செருப்பொருதவவ்வாறுகண் ... ...*
டுந்துசீரொண்மரிற்றிறலுடைச்சதமக ... ... ... ... *
னெல்லைசென்றெய்தினன்னலார்தங்கணேர் ... ...*

(இ-பு.) அவர்கள் அவ்வாறு போர்செய்யும்போது வியர்வில்வந்து பிறந்தபலம்பொருந்திய அருமையாகியசீருள்ள லக்ஷவீரர்களும்போய் அவுணச்சேனையில்வரிசைகொண்ட நெடியபாணங்கள் சிந்தி அழிவுசெய்யப் பாதகராகிய அவுணர்கள் எதிர்நிற்கமாட்டாமலோடுகை

பொழிப்புரை.

யில் நிந்தையில்லாதமேகன் சோமன் என்பவர்கள் முதலாகிய அவுணப்படைத்தலைவர்கள்வந்து போர்செய்யுமுறைமையைக்கண்டு மேன்மைபொருந்தியசீருள்ள எட்டுவீரர்களிலொருவனாகிய பலமுடையவீரபுரந்தரன் விரைவாக அந்தப்பகைவரெதிரிலசென்றுநேர்ந்தான்.--(எ-று)

போர்புரிந்தெதிர்பொருந்திநிந்தண்டகனையும் ... ... *
புயலினன்றன்னையும்பொன்றுறப்புரிதலு ... ... ...*
மேர்புரிந்திடுமுரத்தேனையோரொடு ... ... ... ... *
ொரிமுகனிதுதெரிந்தெரிமுகனாகியே... ... ... ...*
கூர்புரிந்திடுநெடுங்கணைசொரிந்தடலொடுங் .. ... ... *
கொள்ளைவெம்பூதரைக்கொன்றுநேர்நின்றிடச் ... ...*
சீர்புரிந்திடுதிறற்சதமகன்கண்டனன் ... ... ... ... *
சீறற்மேல்கொண்டனன்சிலைகுனித்தானரோ... ... ...*

(இ-புரை.) எதிர்த்தவீரபுரந்தரன்போர்செய்து எதிரில்பொருந்திய சோமனையும் மேகனையும் இறக்கும்படி செய்யவே அழகுபொருந்தியபலமுள்ளமற்ற அவுணர்களெல்லாருமோடினார்கள்அக்கினிமுகனிதனைக்கண்டு கொதிப்புள்ள முகத்தனுப்க் கூர்மை பொருந்திய பாணங்களேவிப் பராக்கிரமத்துடன் அநேகம்பூதரைத் தன்னெதிரில்கொலைசெய்துகொண்டிருக்கும்போது சீர்பொருந்திய பலமுள்ள வீரபுரந்தரன் கண்டு அவன்மேல்கோபங்கொண்டு வில்லைவளைத்தான்.(எ-று.) (௱௫௫)

வெய்யனுக்கெதிரணைந்துசரம்பொழிதலும்... ... ... *
விறலுடைத்தகுவனுமிகுசரஞ்சிதறியே ... ... ...*
சையமொத்திடுபுயத்திறலுடைச்சதமகன் ... ... ... *
றனுவையுந்தேரையுஞ்சாபவண்டூணியும் ... ... ...*
வையகம்புகழவேநூறியோர்நூறுகோன்... ... ... ... *
மார்பிடைச்சிந்தலும்வன்மைபோய்நிற்பவீ ... ...*
தொய்யெனக்கண்டவன்றுணைவராமெழுவரு ... ... ... *
மொல்லைசென்றெய்தினரொன்னலான்முன்னரோ... ...*

(இ-புரை.) வில்லைவளைத்த வீரபுரந்தரன் அக்கினிமுகனுக் கேதிரில் அணைந்து கொல்லத்தக்க பாணங்களை மழைபோற் பொழிந்தான் வெற்றியுள்ள அக்கினிமுகனும் மிகுந்தபாணங்களேவி மலையொத்தபுசபலமுள்ள வீரபுரந்தரனுடைய வில்லையும் தேரையும் வில்லுக்குரியதா

கிய பாணப்புட்டிலையும் இவ்வுலகத்தார்புகழும்படி அழித்து அதற்கு மேல்நூறுபாணம் வீரபுரந்தரன்மார்பினிடத்தில் அழுந்தும்படியேவி ஞன் அதுகள்வந்துபட்டவளவில் அவ்வீரன்பலங்குன்றிமூர்ச்சையாஞ ன் இதனைக்கண்ட அவன்சகோதரர்கள் ஏழுபேரும் அந்தப்பகைவ னெ திரில் விரைவிற்சென்றெதிர்த்தார்கள்.—(எ-று.) (ாருசு)

சிலைவளைத்தளவிலாக்கணைதனைச்சொரிதலுந்... ... ... ...*
திறலுடைத்தருவனுஞ்சிலசரத்தினையவர்... ... ... *
மலையினைப்பொருபுயத்தெய்யவேயவரவன்... ... ... ...*
மாமுகத்தாயிரமார்பிலத்தொகைபுயந் ... ... ... *
தலையிடத்தாயிரங்கையிடத்தாயிரஞ் ... ... ... ... ...*
சாயகந்தொட்டவன்றேரையுந்தடிதலும்... ... ... *
கொலையுடைக்கொடியனேர்தேரின்மீதேறினன் ... ... ...*
கோல்விடுத்ததனையுங்கூறுசெய்தாரரோ... ... ... *

(இ-புரை.) வந்த ஏழுவீரர்களும் வில்லைவளைத்து அளவில்லாதக ணைகள் சொரிந்தவளவில் பலமுடைய அக்கினிமுகனும்மலையையொத்த அவர்கள்புயத்தில் படும்படி சிலபாணங்களையேவிஞன் அவர்கள் அவன் பெரியமுகத்தில் ஆயிரம்பாணங்களும் மார்பினிடத்தில்ஆயிரம்பாணங் களும்புசத்தினிடத்தில் ஆயிரப்பாணங்களும்கைகளினிடத்தில் ஆயிரம் பாணங்களும் தைக்கும்படி விட்டு அவன்தேரையும் அழித்தார்கள் கொ லைத்தொழிலையுடைய அந்தக்கொடியன்வேறொருதேரிலேறின வளவில் வீரர்கள்பாணங்கள்விட்டு அதையும் அழித்தார்கள்.—(எ-று.) (ாருஎ)

தேரழித்தவனுடற்றுளைபடுத்திடலுமோர் ... ... ... *
தேரின்மீதேறியசிவனருட்படையினைச் ... ... ...*
சீருடைத்தருவர்மேனெழுமேல்விடுதலுந்... ... ... *
தீநெடும்படையெனச்சிந்தைமீதெண்ணியே ... ...*
வீரமுற்றிடுபுனற்படைவிடச்சோதிவேல் ... ... ... *
விரைவினுண்டணுகியேழ்வீரரைக்கொன்றதால் ... ...*
வாரியிற்பொலிதரும்பூதரானவரொலர்ம் ... ... ... ... *
வாய்புடைத்தலறிஞர்வாடிஞரோடிஞர் ... ... ...*

(இ-புரை.) தேரையழித்து அக்கினிமுகன் உடலையுந் துளையாக்கி ஞர்கள் அவன்வேறொரு தேரின்மேலேறிக்கொண்டு சிவாஸ்திரத்தை

பொழிப்புரை.

அந்த எழுபேர்மேலும்விட்டான் அவர்களிது ஆக்கினேயாஸ்திரமென்று மனதினிடத்திலெண்ணி வீரம்பொருந்திய வாருணாஸ்திரத்தையே விடுூர்கள் அந்தச்சிவாஸ்திரமானது விரைவாகச்சென்றுவாருணாஸ்திரத்தையும் உண்டுவிட்டு அப்புறஞ்சென்று அந்த எழுபேரையுங் கொல்லவே சமுத்திரம்போல் அதிகமாயிருக்கும் பூதர்களெல்லாரும் வாயில் அடித்துக்கொண்டு அழுதுவாடியோடினூர்கள்.—(எ-று.) (௱௫௮)

ஈதெலாங்கண்டனன்பூதரைக்கையமைத் ... ... ... ...*
திங்குநீரஞ்சன்மினென்னவங்கோதியே ... ... ... *
யாதிகண்டனில்வருங்குமரனுக்கிளையவ ... ... ... ...*
னனன்முகக்கொடியன்முன்பணுகவெயிருவருஞ் ... *
சோதிவெங்கணைகடூயமர்புரிந்தார்கள்பின் ... ... ... ...*
சூர்மகன்பரன்மகன்றூயமுண்டத்திடைத்... ... ... *
தீதுறுங்கணைகளோராயிரந்தொடுதலுஞ் ... ... ... ...*
செய்யவன்சீறியிச்செய்கைபின்செய்குவான் ... ... *

(இ-புரை.) பரமசிவனுடைய நெற்றிக்கண்ணினிடமாகத் திருவவதாரஞ்செய்த குமாரசுவாமிக் கிளையவராகியவீரவாகுதேவர் இவைகளைக்கண்டுபூதர்களைக் கையமைத்து நீங்கள்பயங் கொள்ள வேண்டியதில்லையென்றுசொல்லி அக்கினிமுகனுகிய கொடியவனுக்கெதிரிற் சென்ருர் அவ்விருவர்களும் சோதியுள்ள பாணங்களையேவிப் போர்செய்தார்கள் பின்பு சூரன்மகனுகிய அக்கினிமுகன் பரமசிவன்புத்திரராகிய வீரவாகுதேவருடைய பரிசுத்தமானநெற்றியினிடத்தில் கொடுமைபொருந்திய ஆயிரம்பாணங்கள்விட்டான் பின்பு வீரவாகுதேவர் சீறியிவ்வாறுசெய்கின்ருர்.—(எ-று.) (௱௫௯)

ஆயிரங்கணைகடூயவுணர்கோனிரதமு ... ... ... ... *
மங்கையிற்சாபமுமழிவுசெய்திடுதலும் ... ... ...*
வேயுறுந்தோளுடைப்பதுமைதன்பாலகன்...... ... ... *
வேறுதேரேறியோர்வீறுதண்டுந்தவச்... ... ... ...*
சேயிருந்திறலுடைக்கதையையோர்கணையினுற் ... ... *
சிதைவுசெய்திடுதலுஞ்சிலைபிடித்தவுணர்கோன்... ...*
வாயுவின்படைசமன்படைகதிர்ப்படைவிட... ... ... *
மற்றவப்படைவிடஇமாற்றினன்வீரனே .... ... ...*

(இ-ள்.) ஆயிரம்பாணங்களேவி அக்கினிமுகன்றேரையுங் கையிலிருக்கும்வில்லையும் அழித்தார் மூங்கிலையொத்ததோளையுடைய பிரமகோமளை மகனாகிய அக்கினிமுகன் வேறொருதேரிலேறி ஒருபெரிய தண்டாயுதத்தையெறிந்தான் சிவகுமாரனான வீரவாகுதேவர் மிகுந்தபலமுள்ள அந்தக்கதாயுதத்தை ஒருபாணத்தினால் அறுத்துத் தள்ளினார் அதற்குமேல் அக்கினிமுகன் வேறொருவில்லைப் பிடித்து வாயுவியாஸ்திரம் யமாஸ்திரம் சூரியாஸ்திரம் இவைகளையேவினான் வீரவாகுதேவரும் அந்தந்தப்பாணங்களையேவி மாற்றினார்.—(எ-று.) (௩௬௰)

ஆனைதன்பின்னவன்பின்னவன்பின்னரு ... ... ... ...*
மனன்முகத்தவனுரத்தம்புநூறுப்பபவே... ... ... *
யீனமற்றிடுமணித்தேரின்மீதேவிழுந் ... ... ... ... ...*
தெருவைநீர்பெருகவங்கொரிமுகன்றுயுருநீஇத் ... *
தான்முனம்வழிபடுந்தன்னகர்க்காளியைத் ... ... ... ...*
தன்னகத்துன்னலுந்தானையோடெய்தினாள் ... ... *
மானமுற்றிடுதிறற்றெவ்வனைக்கொல்லுவன்... ... ... ...*
மைந்தவஞ்சேலெனாவந்தனள்பூதர்மேல்... ... ... *

(இ-ள்.) ஆனைமுகமுள்ள விநாயகர்தம்பியாகிய சுப்பிரமணியருக்கு இளையவராகிய வீரவாகுதேவர் அவன்விட்ட தேவாஸ்திரங்களையெல்லா மாற்றினவுடன் பின்னும் அக்கினிமுகன்மார்பில நூறுபாணங்களேவினார் அவைகள்பட்டவுடன் அவன்பழுதிலலாத ரத்னங்கள்பதித்ததேரின்மேல்விழுந்து உதிரம்பெருகத்துன்பம் அடைந்து தான்முன்னம் ஆராதித்துக்கொண்டிருக்கிற தன்னகர்க்காளியைமனதில் நினைத்தவளவில் அவள்சேனைகளுடன் வந்து மைந்தனே பெருமைபொருந்தியபலமுள்ள உன்பகைவனைக் கொல்லுகிறேன் நீ அஞ்சாதேயென்று சொல்லிப் பூதர்கள்மேல்சேன்றாள்.—(எ-று.) (௩௬௧)

துங்கவெம்பூதர்மேற்சூலமொன்றுந்தவச் ... ... ... ...*
சூலமங்காலமேபோலவந்திடுதலுஞ் ... ... ... ... *
சங்கரன்மாமகன்பின்னவன்சிறியேழ் ... ... ... ... ...*
சாயகங்கொண்டதைத்தடிதலுஞ்சண்டிகை ... ... *
வெங்கொடுஞ்சினமொடேபின்புமோர்சூலவேல் ... ... ...*
விடுதலுமாயிரம்வெஞ்சரந்தூண்டியே ... ... ... *

யங்கதுதன்னையுமங்குவித்திடுதலு ... ... ... ... ...*
மண்ணல்சேர்தேரின்மீதார்த்துவந்தெய்தினள்... ... *

(இ-புரை.) வந்தகாளியானவள் பலம்பொருந்தியகொடிய பூதர்கள்மேல் ஒருசூலாயுதமெவினள் அது பூதர்களுக்குநேராக ஆலகாலவிஷம்போல்வரவே சிவகுமாரனுக்கிளைய வீரவாகுதேவர்கோபித்து ஏழுபாணங்களினால் அதையும் அறுத்துத்தள்ளினார் அதைக்கண்டகாளியானவள்கொடிதானகோபத்துடன் பின்னுமொருசூலாயுதத்தை விட்டாள் ஆயிரம்பாணங்களைஏவி அந்தச்சூலத்தையும்கெடுத்தார் அதனைக்கண்டகாளியானவள் வீரவாகுதேவரிருக்குந்தேரின்மேல் ஆரவாரித்துக்கொண்டு பாய்ந்தாள்.—(எ-று.) (ஈசுஉ)

பாங்குறுங்காளிபெண்கையுமோர்கையினாற்... ... ... ...*
பற்றியேமார்பகத்தெற்றியேநிற்றலு ... ... ... *
மேங்கியேசோகமாயெருவைநீர்விழவிழுந்... ... ... ...*
திடரகன்றிடவெழுந்தேத்தினள்வாழ்த்தினு ... ... *
ளாங்குநின்றிலள்விரைந்தேகினளீதுகண் ... ... ... ...*
டங்கிமாமுகனெழுந்தடல்பெறுஞ்சிலைபிடித் ... ... *
தோங்குநூறம்பினுன்மொய்ம்பினன்றேரறுத் ... ... ...*
தூதியமாயதென்றூதினன்சங்கமே... ... ... ... *

(இ-புரை.) அழகுபொருந்திய காளியினுடைய எட்டுக்கைகளையும் தன்னொருகையினால் சேர்த்துப்பிடித்துக்கொண்டு மற்றொருகையினால் அவள்மார்பில்மோதிநின்றார் அவ்வாறுமோதவே காளியானவள் ஏக்கங்கொண்டு உதிரம்பெருக மூர்ச்சையாய்விழுந்துபின்பு அந்தத்துன்பம்நீங்க எழுந்து வீரவாகுதேவரைத்துதிசெய்துவாழ்த்தி அங்கிராமல் அதிசீக்கிரமாகப்போய்விட்டாள் அக்கினிமுகனிதைக்கண்டெழுந்து பலம்பொருந்திய வில்லைப்பிடித்துப்பெரிய நூறுபாணங்களினால் வீரவாகுதேவர் தேரையழித்துச் செயமுண்டாயதென்று சங்கநாதஞ் செய்தான்.—(எ-று.) (ஈசுங)

தீதிலாவீரனீரேழுகோல்கொண்டுபின் ... ... ... ...*
றீமுகத்தீயவன்சிலையறுத்திடவவன்... ... ... ... *
வேதனர்படைதனைக்கடவலுந்திறலினன் ... ... ... ...*
வீரபத்திரன்படைவிடுதலுங்கடிதுபோய்ப் ... ... *

போதனார்படைதனைச்சிந்திவெந்தழன்முகன் ... ... ...*
பொன்றவேமுடிகளைந்தண்ணல்கைப்புக்கதா... ... *
லாதரச்சுரரொலாமொய்ம்பன்மேன்மலர்சொரிந் ... ... ...*
தாடினருவகையாலவசமேயாயினர் ... ... ... *

(இ-புரை.) தீமையில்லாதவீரவாகுதேவர் பின்புபதினாலுபாணங்களால் அக்கினிமுகனாகிய கொடியவனுடைய வில்லையறுத்தார் அவன்பிர்மாஸ்திரம் எவினான் இவர்வீரபத்திராஸ்திரமேவினார் அந்த அஸ்திரம்விரைவாகப்போய்ப் பிர்மாஸ்திரத்தைக்கெடுத்து அக்கினிமுகனிறக்கும்படி அவன்தலையையறுத்துத்தள்ளி வீரவாகுதேவர்கையில்வந்து சேர்ந்தது அதைக்கண்ட அன்புள்ளதேவரெல்லாரும் வீரவாகுதேவர்மேல் பூமாரிபொழிந்துசந்தோஷத்தினால் கூத்தாடிப்பரவசமானார்கள்.(எ-று)

(அண்ணல் என்பது பெருமையிற்சிறந்தவன்.)

வன்னிசேர்மாமுகன்பட்டதைக்கண்டவன் ... ... ... *
மட்டிலாச்சேனையோர்மானமும்வீரமுந் ... ... ...*
துன்னவந்தெய்தியேபல்படைக்கலமெலாந் ... ... ... *
தூவிவெம்போர்செயத்தூயவன்சீறியே ... ... ...*
மன்னிடும்புயலெனக்கணைசொரிந்திடுதலும் ... ... ... *
வாடினரோடினர்மாண்டுளாராயினா ... ... ... ...*
ரன்னதன்பின்னரொண்பூதருமெழுவரல... ... ... ... *
லாததம்பியருமங்கருகுவந்தெய்தினார்... ... ... ...*

(இ-புரை.) அக்கினிமுகனிறந்ததைக்கண்டு அளவில்லாத அவனுடையசேனையோர் மானமும் வீரமும்பொருந்த வீரவாகுதேவனையெதிர்த்துப் பலவகையாகிய ஆயுதங்களையேவிப் பெரும்போர்செய்தார்கள் வீரவாகுதேவர்கோபித்து நீருண்டு சூல்பொருந்திய மேகம்போல பாணங்களைச்சொரிந்தார் அதனால்சில அவுணர்கள்வாட்டங்கொண்டோடினார்கள் சில அவுணர்கள் இறந்துபோனார்கள் அதன்பின்புநன்மையுள்ளபூதர்களும் எழுதம்பியர்நீங்கலாகமற்றத்தம்பிமார்களும் அந்தவீரவாகுதேவர்சமீபத்தில்வந்துசேர்ந்தார்கள்.—(எ-று.) (௱௪௫)

அன்னபோதெழுவராந்துணைவரைக்கண்டிலான்... ... ...*
யாவதானார்கொலோவாவிபோனார்கொலோ ... ... *

வென்னவேயுக்கிரன்கனன்முகன்படையினு... ... ... ...*
லெழுவரும்பொன்றினுரென்றுகூறிடுதலு ... ... *
மின்னுயிர்த்துணைவராமவர்கிடந்துழியடைந் ... ... ...*
திருகணீர்சொரியவங்கெதிர்விழுந்தலறிடு ... ... *
னன்னயத்தம்பிமீர்தம்பிமீரென்றன... ... ... ... ...*
னனிபுலம்புறறனனுடருந்திறலினன் ... ... ... *

(இ-புரை.) அவ்வாறு எழுபேர் நீங்கலாக மற்றவர்களெல்லாரும்வந்தபோது அந்த ஏழுதம்பிமார்களைக்காணமல எவ்வாறுணர்களோ உயிர்மாண்டார்களோ என்றுவினவும்போது அக்கினிமுகன் அஸ்திரத்தினல் அந்த ஏழுபேரும் இறந்தார்களென்று உக்கிரனென்னும் பூதத்தலைவன் சொன்னன் அந்தவார்த்தையைக்கேட்ட வீரவாகுதேவர் இனிய உயிர் போன்ற தம்பிமார்களாகிய ஏழுபேரும் விழுந்திருக்கிற இடத்திற்சென்றுபார்த்துத்தன்னிரண்டுகண்களிலும் நீர்சொரிய அங்கேயவர்களுக்கெதிராகவிழுந்து அழுது என்னிடத்தில்மிகுந்த அன்புள்ள தம்பிமார்களே தம்பிமார்களேயென்றுசொல்லிமிகவும்புலம்பினர்.--(எ-று.) (௱௬௬)

[வேறு.]

இன்னபான்மையிற்றுயருழந்தறுமுகனிளையோன்பின் ... *
மன்னிருந்திறற்றுணைவரையெழுப்புவான்மனங்கொண்டு ...*
பின்னுறுங்கணைத்தூணியினொருகணைபிடிங்காவங் ... ... *
கன்னதின்றலையுகிரினலெழுதுவானடலோடும் ... ... ...*

(இ-புரை.) இவ்விதமாகத்துயரங்கொண்டு வீரவாகுதேவர்பின்பு பெருமைபொருந்திய பலமுள்ள தம்பிமார்களை யெழுப்ப மனங்கொண்டுபின்புறத்திற்கட்டப்பட்டிருக்கும் அம்பறாத்தூணியிலிருந்து ஒரு பாணம் எடுத்து அதன்முனையில் வீரத்துடன் தன் நகத்தினலெழுதுகின்றார்.—(எ-று.) (௱௬௭)

வெற்றிவேலுடைக்குமரனுக்கிளையவன்விடுத்திட்டே ... ...*
னுற்றவந்தகன்காண கவென்றம்பியருயிர்கொண்டாய் ... *
நற்றிறங்கொலோவிடுமதிகடிதெனநனிதீட்டிச் ... ... ...*
செற்றமோடுதன்சிலையிடைப்பூட்டியேசெலவுய்த்தான் ... *

(இ-புரை.) வெற்றிவேலுடைய குமாரசுவாமிக்கு இளையவனாகிய நான் இதனையனுப்பினேன் தென்திசையிற்பொருந்தியயமனே நீகாண்

பாயாகஎன்தம்பியர் உயிரைக்கிரகித்துக்கொண்டனே இது உனக்குநல்ல திறமாகும்மோசீக்கிரமாக அனுப்பிவிடு என்றுகோபத்துடன்மிகுதியாக எழுதி அந்தக்கணையைத் தன்விலலிற்பூட்டிச்செல்லவிட்டார்.(எ-று.)()

மாற்றருங்கடலேழையுங்கடந்துபோய்வயமேவுங் ... ... *
கூற்றஞ்முன்னரோவீழ்ந்தலுந்தெரிந்தனன்குறித்துள்ளத்... ...*
தாற்றவஞ்சினன்றேடினன்கயிலையினடைந்திட்டான்... ... *
வீற்றிருந்தனரவ்விடையெழுவராய்விறலோரும் ... ... ...*

(இ-புரை.) அந்தக்கணையானது மாற்றுதற்கரியதாகிய ஏழுசமுத்திரத்தையுங்கடந்துசென்று வெற்றிபொருந்திய கூற்றுவன்முன்னேவிழுந்தது ... பார்த்து ... மி ... யாட்டையந்து தன்னுல ... மலைநந்தேடிப்பார்த்து அங்கிலை ... கயிலையங்கிரியிற்சென்றுபார்க்கும்போது அந்த எழுவீரர்களும் அவ்விடத்தில வீற்றிருந்தார்கள்.—(எ-று.) (ாசுக)

பூண்டபோரிடையிறந்தவெங்கணமெலாம்புடைசூழ... ... *
வாண்டிருந்தனரந்தகன்றொழுதனன்டங்கேவி ... ... ...*
நீண்டதோளிறைக்கேடினன்வழ்மெனதிறமிலாத ... ... *
வீண்டுதானையோடெழுவருமடர்க்களத்திடைவந்தார் ... ...*

(இ-புரை.) நேரிட்டபோர்முகத்திலிறந்த பூதர்களெல்லாரும் புடைசூழ்ந்திருக்கக் கயிலாயத்திருந்த அந்த எழுவீரர்களையுங் கூற்றுவன்பணிந்துதொழுது பலம்பொருந்திய நீண்டதோளையுடைய வீரவாகுதேவர் உங்களைத்தேடிக்கொண்டுமென்னக்கு எழுதியனுப்பிவிருமொன்று பாணம் வந்தசேதியைச்சொல்லி நீங்கள்யாருங்கள்ளென்று சொன்னவளவில் அந்த வீரர்கள்மிகுந்தசேனையுடன் போர்க்களத்தில்வந்தார்கள்.-(எ--று.) ()

இலங்குதத்தமதுருவினிற்புகுந்தனரொழுந்தேபி ... ... *
னலங்கொள்வீரனைவணங்கலுமனையவனயமோடு... ... ...*
மலங்கன்மார்புறத்தழுவினன்மகிழ்ந்தனனதுபோதின் ... *
விலங்குறுவிறலந்தகன்வந்தனன்விறலோன்முன் ... ... ...*

(இ-புரை.) பிரகாசியாநின்ற தங்கள் தங்கள் உருவத்திற்சேர்ந்தெழுந்து பின்பு நன்மைகொண்ட வீரவாகுதேவரை வணங்கினார்கள் அவர்

பொழிப்புரை.

விருப்பத்துடன்வெற்றிமாலையணிந்திருக்கும் தமதுமார்பிற்பொருந்தத்தழுவிக்கொண்டுமகிழ்ச்சியடைந்தார்அப்போது நீங்காதபலமுள்ளகூற்றுவன் வீரவாகுதேவருக்கெதிரில்வந்தான்.—(எ-று.) (௱எக)

(விறலோன் என்பது வெற்றியையுடையவனென்பதாம்.)

தொழுதுவீர நீயென்றனைமுனிந்தனை துணையோரைப் ... *
பழுதுசெய்வனோவவர்பெருங்கயிலையிற்படர்ந்தாரென் ...*
றெழுதுவாசகங்கண்டபினியற்றிய தழிலோன்முன்... ... *
மொழுதுமோதினன் முனியலென்றிறைஞ்சினன்முரட்காலன்... ...*

(இ-புரை.) கூற்றுவன் வீரவாகுதேவரைத்தொழுது வீரனேநீயென்னைக்கோபித்தனை உன்சகோதரருக்கு நான்தீங்குசெய்வனோ அவர்கள் பெரியகயிலாயகிரியிற் சேர்ந் திருந்தார்களென்றுசொல்லி அவரெழுதியவாசகத்தைப்பார்த்துப் பின்புதான்செய்தகாரியங்களையெல்லாம் அழகுள்ள வீரவாகுதேவர் எதிரிற்சொல்லி என்னைக்கோபிக்காதே யென்று பலம்பொருந்திய கூற்றுவன்சொல்லினன்.—(எ-று.) (௱எஉ)

ஈதெலாந்திறலொற்றர்கண்டேகியேயிருஞ்சூரன் ... ... *
பாதம்வந்தனைபுரிந்தனரெரிமுகன்பட்டானெனன்... ... ...*
றோதினரவனரற்றினன்புலம்பினனுறுபோதிற்... ... ... *
காதன்மைந்தர்மூவாயிரர்வந்தனர்கடியோன்முன் ... ...*

(இ-புரை.) இதையெல்லாங்கண்டு பலமுள்ளதூதர்கள் ஓடிப்பெருமைபொருந்திய சூரன்பாதத்தில் வந்தனைசெய்து அக்கினிமுகனிறந்தானென்று சொல்லினார்கள் அவன் அழுது புலம்பிக்கொண்டிருக்கும்போது ஆசையுள்ளமூவாயிரராகிய பிள்ளைகள் அந்தக்கொடியவன்முன் வந்தார்கள்.—எ-று.) (௱எங)

அக்கினிமுகன் போர் முற்றியது.





௨

வேலுமயிலுந்துணை

# மூவாயிரம்பிள்ளைகள்வதை



வந்துதந்தைவெந்துயரறச்சிலமொழிவகுத்தோதி ... ...*
வெந்திறற்சமர்க்கேகுதும்யாமெனவிடைகொண்டு ... ... *
பந்திகொண்டதேரேறியங்களவிலாப்படைசூழ ... ... ...*
வுந்துவீரனும்படைஞருமுறுகளத்துற்றூரால்... ... ... *

(இ-புரை.) மூவாயிரம் பிள்ளைகளும்வந்து தங்கள்தகப்பனுக்குத்துக்கம்நீங்கும்படிசிலவார்த்தைகள் பகுத்துச்சொல்லி நாங்கள்கொடிதானவெற்றியுள்ள போருக்குச் செல்லுகிறோமென்று சொல்லி உத்தரவுபெற்றுக்கொண்டு குதிரைவரிசைபூட்டப்பட்டதேரின்மேலேறிக்கொண்டு அளவில்லாத சேனைகள்சூழும்படி மேன்மைபொருந்திய வீரவாகுதேவரும் படைஞர்களும்பொருந்தியபோர்க்களத்திற்சென்றுசேர்ந்தார்கள்.—(எ-று.) (௱௭௪)

மாயமேசெயுமவுணரும்பூதருமலைவாகி ... ... ... ...*
யோய்வில்பற்பலபடைக்கலஞ்சொரிந்தமருறும்போதிற் ... *
றீயர்சேனையும்பூதர்தஞ்சேனையுஞ்சிலமாளப் ... ... ...*
போயெதிர்ந்தனர்கடிதுமூவாயிரம்புகழ்வீரர்... ... ... *

(இ-புரை.) மாயஞ்செய்யும் அவுணர்களும் பூதர்களும் எதிரிட்டு ஒப்வில்லாத பலபல ஆயுதங்களையேவிப் போர்செய்யும்போது அவுணர்சேனைகளிலும் பூதர்சேனைகளிலும் சிலர்மாண்டார்கள் புகழுள்ள மூவாயிரம் பிள்ளைகளும் அதைக்கண்டு விரைவிற்சென்று எதிர்ந்தார்கள்.—(எ-று.) (௱௭௫)

கதிர்கொள்வாளிதூய்ப்பூதரையடுதலுங்கணமன்ன ... ...*
ரெதிர்புகுந்தமரிழைத்திடவவரிவரொழின்மெய்யிற் ... ... *
பதிவுறும்படிகணைவிடவிடரொடும்படிநின்று ... ... ...*
ரதிர்தருங்கழலிலக்கரிலாயிரரதுகண்டார்... ... ... ... *

(இ-புரை.) அவர்கள் ஒளிகொண்ட அம்புகளேவிப் பூதரைக்கொல்லும்போது பூதராசர்கள் எதிரிற்சென்றுபோர்செய்தார்கள் அப்போ

து மூவாயிரர்கள் பூதமன்னர்களுடைய அழகுள்ளசரீரத்தில் அழுந்து ம்படி கணைமேயவினார்கள் அந்தப்பாணங்கள் வந்து படவே பூதமன்னர் சோபத்துடன்பூமியில்நின்றார்கள் அப்படிநிற்பதை ஒலிக்காநின்றவீர கண்டையணிந்த லக்ஷம்வீரர்களில் ஆயிரம்வீரர்கள்கண்டார்கள்.-எ-று.

கண்டுவீரனைத்தொழுதனர்விடைகொடுபடிதேகி ... ... *
யெண்டரும்புகழ்விசயனேயாதியாயிரவீரர்... ... ... ...*
மண்டுமேகான்மழைசொரிதலுமவருமம்மழைதாவ ... ... *
வண்டிருந்திறலிருவகைக்கணையுநேர்ந்தமர்செய்த ... ...*

(இ-புரை.) அவ்வாறுகண்டு வீரவாகுதேவரைப்பணிந்துவிடைபெற்றுக்கொண்டு விரைவிற்சென்று யாவரும்மதிக்கத்தகப்புகழுள்ள விசயனாதியாகிய அந்த ஆயிரம் வீரர்களும் நெருங்கியபாணவருஷம்பொழியும்போது மூவாயிரம் பிள்ளைகளும் அவ்வாறேபாணவருஷம் பொழிந்தார்கள்பலம்பொருந்திய இந்த இருவகைப்பாணங்களுமெதிர்த்துகொண்டுதங்களில்போர்செய்தன.—(எ-று.) (ாஎஎ)

(பாணங்கள்போர் செய்தலாவது வீரர்கள்பாணங்களை அவுணர்கள்பாணங்கள் துண்டிப்பதும் அவுணர்கள்பாணங்களை வீரர்கள்பாணம் துண்டிப்பதுமாம்.)

ஆயகாலைமூவாயிரராயிரத்தவர்சேனைச் ... ... ... ...*
சாயகங்கொடுசிதைத்தலுந்தூயவர்சரந்துண்டித் ... ... *
தீயர்தேர்களுந்தனுவையுந்துணித்தனர்தேர்புக்கார் ... ...*
மாயவந்தவர்சிறியேயசிலாவனையுய்த்தார்... ... ... ... *

(இ-புரை.) பாணங்கள் அவ்வாறுபோர்செய்யும்போது மூவாயிரம்பேராகிய அவுணர்கள் ஆயிரம் வீரர்கள் தேர்களையும் பாணங்களால் அழித்தார்கள் இவ்வாறு தங்கள்தேர்களை யழிக்கவே பரிசுத்தர்களாகிய இந்தவீரர்களும் பாணங்களேவிக் கொடியவர்களாகிய அந்தமூவாயிரம்பேர் தேர்களையும் வில்லுகளையும் அழித்துவேறேதேரிலேறிக்கொண்டார்கள் அதற்குமேல் இறக்கும்படிவந்தமூவாயிரம் அவுணர்களும் தங்கள்கையில் வில்லில்லாமையால் அளவில்லாத மலைகளைப் பெயர்த்துக் கொண்டு வீரர்கள்மேலெறிந்தார்கள்.—(எ-று.) (ாஎஅ)

வீறுவெற்பெலாங்கணையினாற்சிதறியேவிறற்கோறாய்ச் ...*
சீறிவெய்யர்மெய்துளைத்திடவவுணரிற்சிலரின்றே ... ... *

றோறுதேரொடுத்துவரிமேலெறிந்திடவெழில்வீரர்... ... ...*
மாறில்பூமிசைப்பாய்ந்தனர்பின்னரும்வந்துற்றூர் ... ... *

(இ-புரை.) இவ்வாறு அவுணர்களெறிந்தபெரியமலைகளையெல்லா ம்வீரர்கள் அம்புகளால்நொறுக்கிவிட்டுக் கோபாவேசமுள்ளவர்களாய்ப் பின்னும் உறுதியான பாணங்களையேவிக் கொடியர்களாகிய அவுணர் கள்சரீரங்களைத்துளைத்தார்கள் இப்படி துளைத்தபோது மூவாயிரம் அவு ணர்களில்சிலபேர் இவர்களேறிக்கொண்டிருக்கிற தேர்களையெடுத்துச் சமுத்திரத்தின்மேலெறிந்தார்கள் சமுத்திரத்தில்விழுவதற்குமுன் அழ குள்ளவீரர்கள் மாறுதலில்லாதபூமியின்மேல்பாய்ந்து அங்கிருந்துவந் துபின்னும் அமர்செய்யத்தொடங்கினூர்கள்.—(எ-று.) (ாஎகூ)

செற்றவெங்கணைசொரிதலுமவுணரிற்சிலரின்னே ... ... *
ருற்றகைச்சிலைபறித்தொடித்திடவவருரமீதே ... ... ...*
யெற்றினூரவர்தாமுமங்கெற்றினூரிகலகூடி ... ... ... *
மற்றெழிற்றனைப்புரிந்தனரிருவகைவலியோரும்... ... ...*

(இ-புரை.) கோபமுள்ளகொடியபாணங்களை மழைபோற்பொ ழியும்போது மூவாயிரம் அவுணர்களிற் சிலபேர் இவர்கள்கையிலிருக்கு ம் விற்களைப்பிடுங்கியொடித்தார்கள் விலகொடியவேவீரர்கள் அவு ணர்கள்மார்பில்கையினுல் அறைந்தார்கள் அவர்களும் இவர்கள்மார்பில் அறைந்தார்கள் இவ்வாறாக அவ்விருவகை வன்மையொருமல்ல யுத்தஞ் செய்தார்கள்.—(எ-று.) (ாஅ௰)

ஈதுசெய்தலும்விசயனேயன்றிமற்றேல்லோரும் ... ... *
போதநொந்தனரவுணருக்குடைந்தனர்புறந்தந்தார் ... ... ...*
தாதுலாந்தொடைவிசயனுட்சீறிப்பேசரஞ்சிந்தித் ... ... *
தீதுலாவுசூர்மைந்தரைத்துணித்தனன்சிதைத்திட்டான் ... ...*

(இ-புரை.) இவ்வாறுமல்யுத்தஞ்செய்யும்போது விசயனென்னும் ஒருவீரன்தவிர மற்றத் தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதுவீர ர்களும்மிகவும்வருந்தி அவுணர்களுக்குத்தோற்று முதுகுகாட்டியோ டிப்போனூர்கள் அதைக்கண்டு மகரந்தம்பொருந்திய பூமாலையணிந்த விசயனென்னும் வீரன்மனங்கொதித்துப் பாணங்களைவித்தீமையுள்ள சூரன்பிள்ளைகளாகிய மூவாயிரவர்களிற் சிலர் கரங்களையுஞ் சிலர் கால்க

பொழிப்புரை.

ளையுஞ் சிலர் மார்புகளையும் சிலர் தோள்களையும்சிலர்தலைகளையும் அறு த்துக்கொன்றான்.—(எ-று.) (ரஅக)

(இவ்வாறு பலதிறஞ்செய்தான்.)

இறந்தபேர்களுந் துணிந்துளபேர்களுமெழுந்தேபின் ... *
மறந்தருஞ்செருப்புரிந்திடவியந்தனன்மனநொந்தே ... ...*
சிறந்தவேலினைநினைத்தலுங்ககனமேற்செவ்வேள்வந்... ... *
துறைந்துநின்றுதன்றொடுவிசயனுக்குரைசெய்வான் ...*

(இ-புரை.) இவ்வாறுவிசயன்பாணம்விடுந்தோறும் இறந்தபேர்களுங் கைமுதலாகிய உறுப்புகள் துணிந்தபேர்களும் பழையபடியெழுந்து வீரம்பொருந்திய போர்செய்வதைக்கண்டு ஆச்சரியங்கொண்டு மனம்வருந்திச் சிறந்தவேலாயுதக்கடவுளைத் தியானித்தான் ஆகாயத்தில் வேலாயுதக்கடவு ளெழுந்தருளிநின்று தந்திருவடியைத் தொழுகின்ற விசயனுக்குத்திருவாய்மலர்ந்தருளுகின்றார்.—(எ-று.) (ரஅஉ)

மாய்ந்தவஞ்சகராறுவதுமெழுவதுமலரோனீழ ... ... ...*
வீர்ந்தநல்வரமவரினிக்கெடவிதையெறிகென்றே ... ... *
காய்ந்தவெஞ்சினக்காரிவேலருளினன்கரந்திட்டா... ... ...*
ராய்ந்துணர்ந்தனனிதனையுன்மத்தனுமசுரேசன் ... ... *

(இ-புரை.) இறந்த மூவாயிரவர் பிழைத்துவந்து போர்செய்து மறுபடியிறந்து பின்னும் எழுந்துவருவது ஆதியில்பிரமதேவன் கொடுத்தநல்வரமாகும் இனிஅவர்கள்கெடும்படி இதனையேவுகென்று கண் சிவத்தல்முதலான குறிப்புடையதாகிய கோபமுள்ள வயிரவாஸ்திரம் கொடுத்துமறைந்தருளினார் இதனை உன்மத்தனாகிய அசுரேசன் ஆய்ந்த றிந்தான்.—(எ-று.) (ரஅங)

(ஆயுதங்களுக்குக் கோபமாவது தவறாமல்கொல்லத்தக்க கொடுமையா னகூர்மையுடையதுகளாயிருத்தல்.)

மிக்கமாயவன்படையினைவிடுத்தலும்விசயன்று ... ... *
னக்கணந்தனிற்காரிதன்படைவிடவதுபோந்து ... ... ...*
புக்கமாயவன்படைபழித்தவுணர்கோன்புகழ்மைந்தர் ... *
தக்கமூவாயிரரையுங்கொன்றதுசயமாக ... ... ...*

(இ-பொ.) இவ்வாறுதெரிந்த உன்மத்தனாகிய அகரோசன்மிக்க பலமுள்ள தான மாயாஸ்திரத்தை யேவ அதைக்கண்ட விசயன் உடனே வயிரவாஸ்திரத்தையேவினான் அந்தவயிரவாஸ்திரமானது சென்று எதிரிலவந்தமாயாஸ்திரத்தையழித்துச்சூரனுடையபுகழுள்ளபுத்திரர்களென்று சொல்லத்தக்க மூவாயிரப்பேரையும் வென்றியாகும்படி கொன்றது.—(எ-று.) (ளஅச)

மும்மையாயிரப்புதல்வர்கண்முடிந்ததைமுரணொற்றர் ... ✻
மம்மரோடுகண்டோடினர்சூரன்முன்மருவுறீ ... ... ...✻
தம்மவோதனுமரற்றினன்பலம்பினனதுபோதின் . ... ... ✻
வெம்மைகொண்டசெங்கதிரவனடைந்தனன்மேல்வேலை... ...✻

(இ-பொ.) மூவாயிரம்பிள்ளைகளும்இறந்ததைப்பலம்பொருந்திய தூதர்கள்கண்டுமனமயங்கி அறிவிலாவாகச்சென்று சூரனிடத்திற்சேர்ந்து இந்தச்செய்தியைக் கேளென்று சொல்ல சூரன் தன் பிள்ளைகளிறந்ததைக்கேள்விப்பட்டு அழுதுபுலம்பினான் அப்போது வெப்பங்கொண்டசெங்கதிருள்ள சூரியன்மேற்குக்கடலில்விழுந்தான். (ளஅரு)

எண்டரும்புகழ்மதுரையேகதிர்விசும்பிருண்மேவுங் ... ...✻
கொண்டலிடண்டரண்டரோதாரகைக்குலமெல்லா ... ✻
மண்டர்நாயகரடியரோசெக்கரேயழறிங்கட் ... ... ...✻
டுண்டம்வாதில்வேகாதெழுமேடெனத்துலங்கிற்றே ... ... ✻

(இ-பொ.) யாவருக்கும் மதிக்கத்தக்க புகழுள்ள மதுரையே ஒளிநிறைந்த ஆகாயம் இருளானதே நிறைந்திருக்கும் அமணர்களாகிய குண்டர்கள்-நக்ஷத்திரக்கூட்டமெல்லாம் தேவநாயகனுடைய அடியார்கள் - செவ்வானமேமூட்டிய தீ — இவ்வாறிருக்க பிறையானது வாதில்வேகாமலிருந்த ஏடுபோலப் பிரகாசித்தது.—(எ-று.) இது - மதுரையில் சமணர்களுக்கு எதிரில் - பாண்டியனுடைய உத்தரவினால் மூட்டியதீயில் திருநள்ளாற் றுப்பதிக ஏடிட்டு வேகாமலிருக்கக்கண்டெடுத்த சரித்திரம். (ளஅசு)

மூவாயிரவர் யுத்த முற்றியது.

---



உ

வேலுமயிலுந் துணை.

# நாலாநாளிராத்திரி தருமகோபன் யுத்தம்.



இன்னபான்மையிற்சங்கலவந்திடுதலு மிருஞ்சூரன் ... ...*
றன்னைவந்தடைந்தறப்பகைபந்திசிறகிலசாற்றி .. ... ... *
யொன்னலார்தமதுயிர்குடித்தொலைவிண்டுறுவேனென் ...*
றன்னவன்றனைவிடைகொடுபுறந்தனிலடைந்திட்டான் ... *

(இ-புரை.) இத்தன்மையாக இராத்திரிவந்தவுடன் தர்மகோபனென்பவன் சூரனிடத்துக்குவந்து சிலபுத்திகள் சொல்லி நான்பகைவர்களுடைய உயிர்குடித்துச்சீக்கிரமாக வந்துசேருகிறேனென்றுசொல்லி அவனிடத்தில உத்தரவும்பெற்றுக்கொண்டு புறத்தில்வந்தான்.—(எ-று.) ()

புண்டரீகமாமாதிரப்போதகப்பிடர்க்கீகை ... ... ... *
யண்டரஞ்சுறவெண்ணிலாப்பெருப்படையயல்சூழ ... ...*
மண்டிருந்திறற்பூதர்சூழ்புறந்தலைவந்திட்டான்... ... ... *
சண்டமுற்றிடவுணரும்பூதருஞ்சமர்செய்தார் ... ... ...*

(இ-புரை.) புண்டரீகமென்னும் பெயருள்ள பெரிய திக்குயானையின்பிடரியின்மேலேறிக்கொண்டுபகைவர்கள்பயப்படும்படி அளவில்லாதபெரும்படை அருகில்சூழ்ந்துவர மிகுந்தபலமுள்ள பூதர்கள் நெருங்கிச்சூழ்ந்திருக்கும் போர்க்களத்தில்வந்துசேர்ந்தான் அவ்வாறுவந்தவுடன்வேகம்பொருந்திய அவுணர்களும் பூதர்களும் எதிர்த்துப் போர் செய்தார்கள்.—(எ-று.) (௱அஅ)

(புண்டரீகமென்பது - தென்கீழ்த்திசையானை.)

இருதிறத்தருமெண்ணிலாப்படையெறிந்திகல்கொண்டு ... *
பொருதிறஞ்செயவவுணரிலமைச்சரும்புகழ்வேர்வில் ... ...*
வருதிறத்தருமெதிர்ந்தனர்சமர்த்தொழின்மருவுற்றார் ... *
திருமிகுத்திடுமவுணரும்பூதருஞ்சிலர்மாண்டார் ... ... ...*

(இ-புரை.) இருவகைப் படைஞரும் பகைகொண்டு அளவில்லாத ஆயுதங்களெறிந்து போர்செய்தார்கள் இவர்களிவ்வாறு போர்செய்யும் போது அவுணர்களில் மந்திரிகளாயிருப்பவர்களும் வெயர்வில்வந்த

புகழுள்ளலக்ஷம்வீரர்களுமெதிர்ந்துபோர்செய்தார்கள்இப்படியுத்தம் நடக்கும்போது செல்வமிகுந்த அவுணர்களும் பூதர்களுஞ் சிலா மாண்டார்கள்.—(எ-று.) (ரஅக)

இலக்கவீரரும்வன்மைபோய்நொந்தனரிதுகண்டு... ... ...*
விலக்கரும்புகழ்வீரமார்த்தாண்டனும்விறலோன்சென் ... *
றலக்கணுற்றிடக்கணைசொரிந்நமைச்சனாயடனேகித் ... ...*
தலக்கணின்றிமிந்தானவமொத்தனர்சமர்செய்தார் ... ... *

(இ-பொ.) அவுண மந்திரிகளால் லக்ஷம் வீரர்களும் பலமிழந்து வருந்தினார்கள் இதனைக்கண்டு வீரமார்த்தாண்டனென்னும் வீரன்சென்று துன்பம்பொருந்தும்படி பாணங்களைவீசி மந்திரிகளைக்கொன்றது பார்த்து அந்தப்போர்க்களத்திலிருக்கும் அவுணர்களெதிர்த்துப் போர் செய்தார்கள்.—(எ-று.) (ரகூ0)

ஓங்குபூதர்கள்பலமலைவிடுதலுமுடைந்தார்க ... ... ...*
ளடங்குலாவியவறப்பகைகண்டிதுசினமேவித் ... ... ... *
தாங்கிரும்புகழ்பூதர்மீதளவிலாச்சரஞ்சிந்த... ... ... ...*
வாங்குமேனிமேற்படுதலுமெலிந்தனரடனீங்கி... ... ... *

(இ-பொ.) இவ்வாறு அவுணர்களெதிர்ந்துபோர்செய்யும்போது ஓங்கியபூதர்கள் அநேகமாகிய மலைகளைப் பறிதெறியவே அவுணர்கள் தோற்றோடினார்கள் தீமைபொருந்திய தருமகோபனிதனைக்கண்டு கோபமுள்ளவனாய் மிகுந்தபுகழ்பெற்றுள்ள பூதர்கள்மேல் அளவில்லாத அம்புகளைவிடுத்தான் அவைகள்வந்து தங்கள்சரீரத்தில்பட்டவளவில் பூதர்கள்பலமிழந்து வருந்தினார்கள்.—(எ-று.) (ரகூக)

காலிற்கொன்றிடுமருப்பினாற்கொன்றிடுங்கவின்மேவும் ... *
வாலிற்கொன்றிடுங்கரத்தினாற்கொன்றிடும்வயப்பூதக் ... ...*
கோலச்சேனையையிவ்வகைகொடியவன்கொடுவேழுஞ் ... *
சாலக்கோறலுஞ்சாரதரோடினர்தனைமீதே... ... ... ...*

(இ-பொ.) இப்படி யுத்தம்நடக்கும்போது தர்மகோபனேறிக் கொண்டிருக்கும் புண்டரீகமென்கிறயானையானது எதிர்த்துச்சிலபூதர்களைக்கால்களினாற்கொல்லும் சிலதைத்தந்தங்களாற்கொல்லும்சிலபூதர்

பொழிப்புரை.

களை அழகுபொருந்திய வாலினாற்கொல்லும் சிலபூதர்களைத் துதிக்கையினாற்கொல்லும் அழகும் வெற்றியுமுள்ள பூதச்சேனையையிவ்வாறு மிகுதியாகக்கொல்லும்போது இருந்தபூதர்கள்தோற்றுப் பூமியினிடத்தில்கண்ட இடமெங்கு மோடினார்கள்.—(எ-று.) (௱௬௨)

கண்டுவென்றிசேர்கதிரவன்கடிதுபல்கணைசிந்திப் ... ... *
புண்டரீகமீதழுத்தலுமபர்ந்ததுபொலிசீற்றத் ... ... ...*
தண்டர்மாற்றலன்சீறிமப நூறுகோலவைமேவிக் ... ... *
கொண்டசோரிநீரொழுந்திடவழுத்தினன்குளமீது... ... ...*

(இ-புரை.) இவ்வண்ணமாக ஆனைகொல்லுவதையும் பூதர்களோடுவதையும் வெற்றிபொருந்திய வீரமார்த்தாண்டன்கண்டு விரைவாகப் பாணங்கள் புண்டரீகமென்னும் அந்தயானையின்மேல் அழுந்தும்படி யேவினவளவில அதுமூர்ச்சையடைந்தது மிகுந்தகோபமுள்ளதேவர் பகைவனாகிய தர்மகோபன் இதனைப்பார்த்துச சீறி வீரமார்த்தாண்டனெற்றியில்தைத்து உதிரம்பெருகும்படி நூறுபாணங்களேவினான்.()

உதிரமோடுதன்றேருறத்தியவனொருவேலை ... ... ... *
யெதிர்விடுத்தலும்வீரமாபுரந்தரனெனப்போனாற்... ... ...*
கதிர்நெடுங்கணைவிடுத்ததைதடுத்துவெங்கணைமாரி ... ... *
துதிபொருந்தியவவுணன்மேற்பொழிந்தனன்சுரர்போற்ற ...*

(இ-புரை.) வீரமார்த்தாண்டன் நெற்றியிலிருந்து உதிரமொழுகும்படி தன்தேரின்மேலிருக்கும்போது தருமகோபனானவன்பின்னும் ஒருவேலாயுதத்தை யேவினான் அதைக்கண்ட பெருமையுள்ள வீரபுரந்தரனென்பவன் ஒளியுள்ள நாலு பாணங்களேவி அந்தவேலாயுதத்தைத்தடுத்துப் பின்னும் அனேகமாகிய பாணவருஷங்களைத் தேவர்கள் போற்றும்படி துதிபொருந்திய தருமகோபன்மேல் பொழிந்தான். ()

தருமகோபனேவாலவைவிலக்கியோர்தண்டுந்த ... ... *
மருமமீததுவந்துபட்டிடுதலுமயக்குற்றான்... ... ... ...*
கருமமீதுகண்டடல்பெறுந்தோளினன்கடிதேக ... ... *
வருமவன்றன்மேற்பொழிந்தனனிழிந்தவன்மழைவாளி... ...*

(இ-புரை.) தருமகோபனானவன் தன்னுடையபாணங்களினால் அந்தப் பாணங்களைவிலக்கி ஒருதண்டாயுதத்தை யெறிந்தான் அதுவந்து தன்மார்பின்மேல பட்டவளவில வீரபுரந்தரன் மூர்ச்சையானான் இந்தச்செய்தியை வீரவாகுதேவர்கண்டு விரைவாகத் தன் னெதிரில் வரும் போது நீசனாகியதருமகோபன் அந்தவீரவாகுதேவர்மேல் பாணவருஷம் பொழிந்தான்.—(எ-று.) (௱௬௫)

விட்டவாளிபட்டொடிந்திடவீரனோர்விறல்வேலை .. ... ...*
யொட்டலன்றன்மேல்விடுத்திடச்செல்றவனுரத்தூடே ... *
பட்டுவெந்திடைப்பறிதலுமுளம்பதைபதைப்புற்று ... ...*
மட்டில்சோரியோடிருந்தனன்கரிமிசைமயலாகி ... ... *

(இ-புரை.) தருமகோபன்விட்ட பாணங்கள் தன்மேல்பட்டு ஒடிந்தபோது வீரவாகுதேவர் வெற்றியுள்ள ஒருவேலாயுதத்தை அந்தப் பகைவன்மேலெறிந்தார் அதுபோய்அந்தப்பகைவன்மார்பினிடத்தில்பட்டுருவி முதுகின்வழியாகச் சென்றவளவில் தருமகோபன் மனம்பதைபதைத்து அளவிலலாத உதிரம்பெருகும்படி மூர்ச்சையாய்ப் புண்டரீகமென்னும் யானைமேல்விழுந்து கிடந்தான்.—(எ-று.) (௱௬௬)

அந்தவேலையிலவன்கரிமனஞ்சினந்தடன்மேவுந் ... ... ...*
தந்திமாமுகற்கிளையவற்கிளையவன்றடந்தேரை ... ... ... *
யுந்துநாற்பெருங்கோட்டினாற்றாக்கியேயுயர்பாகன் ... ...*
சிந்துறும்படிபுடைத்ததுகரத்தினாற்றிறலோடும் ... ... *

(இ-புரை.) தருமகோபன் மூர்ச்சையாய்விழுந்திருக்கும் போது அவனுடையயானையானது மனதிற்கோபங்கொண்டு யானைமுகவிநாயகருக்கிளைய சுப்பிரமணியசுவாமி தம்பியாகிய வீரவாகுதேவருடைய பெரியதேரை மேன்மைபொருந்திய நாலுதந்தங்களினாலும் தாக்கி உயர்ச்சியுள்ளபாகனிறக்கும்படி துதிக்கையினால் வன்மையுடன் அடித்தது.()

ஆனகாலையில்வேறுதேரேறியேயடல்வீரன் ... ... ... *
கானமாமலைக்கரிக்கரம்பிடித்தனன்கவுண்மோதி ... ... ...*
யீனமுற்றிடவப்புறத்துலகிடையெறியப்போய்த் ... ... *
தானவர்க்குளந்துணுக்குறவிழுந்ததுதனாமீது ... ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) யானையிப்படிசெய்தபோது பலம்பொருந்திய வீர வாகுதேவர் வேறொருதேரின்மேலேறிக்கொண்டு வனஞ் சூழ்ந்த பெரியமலை போன்ற அந்தயானையின் துதிக்கையைப்பிடித்துக்கொண்டு அதன்கன்னத்தில் ஓரறைகொடுத்துப்பங்கப்படும்படி அப்புறத்துலகில் எறியவே அந்தயானையானது மேலுலகவளைக்கும் போய் அவுணர்கள் மனம்நடுங்கும்படி மறுபடிபூமியிலவிழுந்தது.—(எ-று.) (ஈகூஅ)

விழுந்துமண்மிசைத்துன்பொடுகிடத்தலும்விறல்வெய்யோ...*
னெழுந்துதண்டமொன்றுந்தினனன்னதையெழில்வீரன்... *
செழுந்தனிச்சுடர்வாளினாற்சிதைப்பவச்சிரமுய்த்தா ... ...*
னழுந்துசீருளவச்சிரங்குறுகியதடலோன்முன்... ... ... *

(இ-புரை.) அவ்வாறுவிழுந்துமண்ணின்மேல்துன்பமுடன்மூர்ச்சையாயிருக்கும்போது பலமுள்ள தருமகோபனெழுந்து ஒருதண்டாயுதமெறிந்தான் அந்தத்தண்டாயுதத்தை அழகுள்ள வீரவாகுதேவர்செழுமையும் பிரகாசமுமுள்ளதாயொப்பற்றிருக்கும்வாளாயுதத்தினால்வெட்டித்தள்ளினார் தருமகோபன்மறுபடியும்வச்சிராயுதமேவினான் உறுதியான சீருள்ள அந்த வச்சிராயுதமானது வீரவாகுதேவருக் கெதிரில் சென்றது.—(எ-று.) (ஈகூகூ)

வந்தவச்சிரம்பாணியிற்பிடித்துவஞ்சகன்மீதே... ... ... *
யுந்தவங்கதுபடுதலும்பதைபதைத்துடன்வீழச்... ... ...*
சுந்தரங்கொழுதாளினாலுதைத்திடத்துகடரு ... ... ... *
மந்தரத்தரையலைத்தவனிறந்தனனவர்துள்ள... ... ... ...*

(இ-புரை.) வந்தவச்சிராயுதத்தை வீரவாகுதேவர்தம்முடையகையினாற் பிடித்துக்கொண்டு அதனைத் தருமகோபன்மேலே யெறிந்தார் அதுவந்துபட்டமாத்திரத்தில் அவன்பதைபதைத்து வீழ்ந்தான் அப்படிவிழுந்தவனை அழகுபொருந்திய தம்முடைய காலினாலுதைத்தமாத்திரத்தில் தேவர்களை வருத்தியதர்மகோபன் அந்தத்தேவர்கள் சந்தோஷித்தினால் துள்ளியாடும்படி இறந்தான்.—(எ-று.) (உா)

ஈதுகண்டவன்றண்டமங்கோடியதிடர்மூழ்கிப் ... ... ...*
பூதலத்துறுவெங்கரியெழுந்துபின்புகழ்ந்தேத்தி ... ... *

மேதகுந்திறல்வீரனைவிடைகொடுவிறல்சேர்தன் ... ... ...*
மாதிரந்தனிற்படர்ந்தது பூதர்கண்மகிழ்ந்தார்த்தார் ... ... *

(இ-புரை.) தருமகோபனிறந்தவிதனைக்கண்டு அவன்சேனையாகிய அவுணர்கள் துன்பத்து எழுந்திப் போர்க்களத்தைவிட் டோடினார்கள் முன்னம் பூமியில் மூர்ச்சையாய்விழுந்துகிடந்த யானையானது பின்பு எழுந்துமேன்மைபொருந்திய பலமுள்ள வீரவாகுதேவனைப்புகழ்ந்து துதிசெய்து விடைபெற்றுக்கொண்டு வெற்றிபொருந்திய தன்திசையி னிற்சென்றது இதுகளையெல்லாங்கண்ட பூதர்கள்மகிழ்ச்சிகொண்டு ஆரவாரித்தார்கள்.—(எ-று.) (உ௱க)

செற்றமேவியவறப்பகைமடிந்தவச்செயறன்னை... ... ... *
யொற்றர்நோக்கினர்வாடினரோடினருரைசெய்ய... ... ...*
வற்றமாந்துயர்ப்பரவையுளழுந்தினனறிவின்றி ... ... *
யுற்றபாவைபோலிருந்தனனவுணரிலுரமிக்கான் ... ... ...*

(இ-புரை.) கோபம்பொருந்திய தருமகோபன் இறந்த அச்செய்தியைத்தூதர்கள்பார்த்து வாட்டங்கொண்டு ஓடிப்போய்ச்சொன்னார்கள் அதைக்கேள்விப்பட்ட அவுணர்களில்பலமிகுந்தவனாகியசூரன்சோர்வாகித் துக்கசாகரத்துள் அழுந்தி யறிவின்றிப் பொருந்திய பிரதமைபோலிருந்தான்.—(எ-று.) (உ௱உ)

தருமகோபன் யுத்த முற்றியது.

—



௳

முருகன் துணை.

# ஐந்தாநாள் பானுகோபன் யுத்தம்.



இருந்தகாலையிலிறையவன்கறையடியிருந்தோலாற் ... ...*
பரிந்துமத்தகங்காறுமெய்மறைந்திடும்படிபோர்த்துத் ... *
திருந்துசெஞ்சடைகாட்டிநின்றிடுவதோர்திறம்போலக்... ...*
கருந்தண்வேலையிற்செங்கதிருதித்தனன்கதிர்வீசி ... ... *

பொழிப்புரை.

(இ-புரை.) சூரனிவ்விதமாகத் துயரங்கொண் டிருக்கும் போது பரமசிவன் விருப்பங்கொண்டு யானையினது பெரியதோலினால் நெற்றி யனையில் திருமேனிமறையும்படி போர்த்துக்கொண்டு நிருத்தமாகிய செஞ்சடை முடியைமட்டுங்காட்டிக்கொண்டிருக்குந் தன்மைபோலக்க ருமைநிறமுங் குளிர்ச்சியுமுள்ள சமுத்திரத்தினிடத்திலசூரியன்கிரணங் களைப்பரப்பிக்கொண்டு உதயமாயினான்.—(எ-று.) (உ௱௩)

அற்றைவேலையிற்காசிபனுதவியவசுரேச... ... ... ... *
னிற்றுளானெனத்துயருழந்தயர்வுறுமியனோக்கி... ... ...*
வெற்றிபூதையுஞ்சிந்தையும்பிற்படவிரைந்தோடி ... ... *
யெற்றனைந்தவற்பணிந்தனரொற்றர்தாமெழுந்தார்பின்... ...*

(இ-புரை.) அப்படி சூரியனுதயமானகாலத்திற் காசிபரிஷி யீன் ற சூரனானவன் இறந்தும்போனானென்று சொல்லும்படித் துயரம் அனு பவித்து மெலியுந்தன்மையைப் பெருமைபொருந்திய தூதர்கள்பார்த் து வெற்றியுள்ள வாயுவேகமும் மனோவேகமும் பின்னிட அதிக வாக வோடிப்பானுகோபனைப் பணிந்து பின்பு எழுந்து நின்றார்கள்.-- ()

சிறந்தவீரரைமாயையாற்கட்டிமூன்றிரைவேலை ... ... ...*
யுறைந்திடும்படியெறிந்தபினிகழ்ந்தனவுரைசெய்ய... ... *
வறந்தவிர்ந்தவன்றவிர்ந்திடாப்பெருந்துயரதின்மூழ்கி... ...*
யிறந்ததேயினிநம்பெருவாழ்க்கையென்றெழுந்திட்டான்... *

(இ-புரை.) சிறப்புள்ள வீரர்களைமுன் மாயையாற்கட்டி அலையி னையுடைய சமுத்திரத்தில் விழுந்துகிடக்கும்படி யெறிந்தபின்பு நடந் த சேதிகளைச்சொன்னார்கள் தருமத்தைநீங்கின பானுகோபன் நீங்காத பெருந்துயரத்தில் அழுந்திநம்முடையபெருவாழ்வு இனியிறந்துபோ மென்று சொல்லிக்கொண் டெழுந்தான்.—(எ-று.) (உ௱௫)

எழுந்துதந்தைதன்கோயிலுட்புகுந்தவனிருதாண்முன் ... *
விழுந்துநின்றுவேற்குமரனைத்தூதனைமிகவேநா... ... ...*
மழிந்துபோவதேயன்றிவென்றிடுவதிங்கரிதண்ட ... ... *
லொழிந்திடச்சிறைவிடுப்பதேநன்றெனவுரைசெய்ய ... ...*

(இ-புரை.) பானுகோபனிப்படி சொல்லிக்கொண்டெழுந்துதன் பிதாவின் கோயிலுட்போய் அவனுடைய இரண்டுபாதங்களுக்கு முன்

பணிந்துநின்று நாம் அழிந்துபோவதேயன்றி வேலாயுதமுள்ள சுப்பிரமணியரையும் தூதனாகவந்த வீரவாகுவையும் இங்குவெல்லுவ தருமை ஆதலால் தேவர்கள்போய்விடும்படி சிறைவிட்டுவிடுகிறதே நன்மையென்று சொன்னான்.—(எ-று.) (உ௱சுசு)

மஞ்சநெஞ்சகத்தஞ்சினைபோலுநின்மனையேகித் ... ... ...*
துஞ்சிவைகுதியென்னயானுரைத்ததைத்துகடீர ... ... *
நெஞ்சுகொண்டிலன்வெகுளிகொண்டானெனநினைவாகி ...*
வஞ்சனேன்பிழைபொறுத்தியென்றுரைத்தனன்மகிழ்வாக ... *

(இ-புரை.) பானுகோபன்சொன்னதைக்கேட்டுச் சூரன்சொல்லுகிறான் மைந்தனேமனதிற்பயந்தனை ஆதலால உன்வீட்டுக்குப்போய் நீ தூங்கிக்கொண்டிருவென்றான் அந்தவார்த்தையைக்கேட்ட பானுகோபன் நாம் சொன்னதைக்குற்றந்திரமனதில் ஏற்றுக்கொள்ளாதவனாய்க் கோபத்தைக் கொண்டானென நினைந்து அததனே வஞ்சனாகிய சிறியேன் பிழையைப்பொறுத்துக்கொள்ளென்று அவனுக்கு மகிழ்ச்சியுண்டாகும்படிசொன்னான்.—(எ-று.) (உ௱எ)

அறைந்துபோர்க்கவன்றனைவிடைகொண்டவனகன்றேபின் ...*
குறைந்திடாப்பெருந்தேர்மிசையேறினன்குழுவாகி... ... *
நிறைந்தவெண்ணிலாச்சேனைகள்சூழ்தரநெடுங்கூளிப் ... ...*
பறந்தலைக்களஞ்சென்றனனிரவிதன்பகையானோன் ... ... *

(இ-புரை.) இவ்வாறுபானுகோபன் தன்தகப்பனுக்கு மகிழ்ச்சியுண்டாகும்படிசொல்லி யுத்தஞ்செய்யப்போவதற்கு அவனிடத்திலுத்தரவுபெற்றுக்கொண்டு அவ்விடம்விட்டுநீங்கியபின்பு அழிவுபடாதபெரியதேர்மேலேறிக்கொண்டு கூட்டமாய்நிறைந்த அளவில்லாத சேனைகள் சூழ்ந்துவரும்படிசென்று மிகுந்த பூதகணங்களிருக்கும் போர்க்களத்திற் சேர்ந்தான்.—(எ-று.) (உ௱அ)

[வேறு.]

அந்தவேலையிற்பூதவீரரு ... ... ... ... ... ... *
மவுணவீரருமடலினோடெதிர்த்... ... ... ... ...*
துந்துபோர்செயத்தூசியாகிமுன்... ... ... ... ...* *
புற்றபூதரங்குடைவாதயினர் ... ... ... ... ...*

## பொழிப்புரை.

வந்துபின்புறும்பூதர்தானவர்... ... ... ... ... ... *
மாறுமாறுமாறுனபோர்செயச்... ... ... ... ...*
சுந்தரந்தருஞ்சூரன்மாமகன்... ... ... ... ... ... *
றூவினன்கணைதூயபூதர்மேல் ... ... ... ... ...*

(இ-புரை.) பானுகோபன்போர்க்களத்தில்வந்தபோது பூதவீரர்களும் அவுணவீரர்களும் பலத்துடனெதிர்த்து ஆயுதங்களையேவும்படியான போர்செய்யும்போது தூசிப்படையாய் முன்னின்ற பூதர்கள் தோற்று அவ்விடம்விட்டோடினார்கள் அப்போதுபின்வந்திருக்கிற பூதர்கள் அவுணர்கள்போர்செய்வதைவிட்டு ஓடும்படி மொதுவதானபோர் செய்தார்கள் அதைக்கண்டு சுந்தரம்பொருந்திய சூரனுடையமூத்தமகனான பானுகோபன்பரிசுத்தரான பூதர்கள்மேல் பாணங்கள் பொழிந்தான்.—(எ-று.) (உ௱க)

வாளிபட்டிடப்பூதராயினோர் ... ... ... ... ... ...*
வாடியோடினார்மங்கைபாலகன் ... ... ... ... *
றாளினன்புறுந்திறல்கொண்மொய்ம்பினன்... ... ... ...*
றானைப்பெருந்தானையானதைத் ... ... ... ... *
தூளியாகவெங்கணைபொழிந்திடச் ... ... ... ... ...*
சூரன்மாமகன்றாயன்முன்புபோய்க்... ... ... ... *
கோளிருங்கரச்சிலைவளைத்தனன்... ... ... ... ... ...*
கோரவாயிரங்கோல்விடுத்தனன் ... ... ... ... *

(இ-புரை.)இவ்வாறுபானுகோபன்விடுகிறபாணங்கள்வந்துபடுவதினால்பூதர்கள்வாட்டங்கொண்டு ஓடினார்கள்சுப்பிரமணியசுவாமிதிருவடிகளில் அன்புவைத்திருக்கும் வீரவாகுதேவர் அவுணப்பெருஞ்சேனையானது தூளியாய்ப்பறக்கும்படிவெவ்விதானபாணங்களையேவினார் அதைக்கண்ட பானுகோபன் வீரவாகுதேவருக்கு எதிரிற்சென்று பலம்பொருந்திய பெரியகைவில்லைவளைத்துக் கொடுமையுள்ளவைகளான ஆயிரம் பாணங்களேவினான்.—(எ-று.) (உ௱உ)

ஆயிரஞ்சரமகலமூழ்கிவெந் ... ... ... ... ... ...*
நகலவேயகலாதமொய்ம்பினன் ... ... ... ... *
தீயதுன்பமோடாயிரஞ்சரந் ... ... ... ... ... ...*
தீயன்மொய்ம்பிடைச்செலவிடுத்தனு ... ... ... *

நோயுழந்துபின்பண்ணல்வில்லையோர்... ... ... ... ...*
நூறுகோலினூறிநிற்கவோர் ... ... ... ... *
மாய்விலவேலினைத்தீயனெற்றியுண் ... ... ... ... ...*
மன்னவுய்த்தனன்வாகைவாகினான் ... ... ... ... *

(இ-பொ.) இந்த ஆயிரம்பாணங்களும் தம்முடையமார்பில பட்டுருவிமுழுகின்வழிசெலலவே இளைக்காதபலமுள்ள வீரவாகுதேவர்தீயதாகிய துன்பம் அடைந்து பானுகோபன் புசங்களில ஆயிரம்பாணங்கள் தைத்துருகும்படியேவினார் அவன்வருத்தங்கொண்டுபின்பு வீரவாகுதேவர்வில்லை நூறுபாணங்களினால் அறுத்துநின்றான் தம்முடையவில் அறுபடவே வீரவாகுதேவர் ஒருவராலுமாயாதவேலெடுத்துப் பானுகோபனெற்றியில் பொருந்தும்படிவிட்டார்.—(எ-று.) (உளயக)

பெருகுசோரிநீர்மிகவெழுந்திடப் ... ... ... ... ...*
பெருகுதுன்பமாய்ப்பின்றெளிந்தனன் ... ... ... *
முருகுகொண்டிடுந்தொடையல்வீரனோர் ... ... ... ...*
மூரிவெஞ்சிலைமுரணொடும்பிடித் ... ... ... ... *
தருகுநின்றிடுந்தருவரஞ்சவே ... ... ... ... ... ...*
யனிலமன்படையங்கியின்படை ... ... ... ... *
கருகுமெய்யுடைக்கொடியனேர்விடக் ... ... ... ...*
கடியனும்மவைகடவிமாற்றினான் ... ... ... ... *

(இ-பொ.) பெருகுகின்ற உதிரவெள்ளமானது அதிகமாக ஒழுகும்படி அந்தவேல்பட்டமாத்திரத்தில் பானுகோபன்மிகுந்த துன்பங்கொண்டு மூர்ச்சையாய்நின்று பின்புடனேதெளிந்தான் வாசனைபொருந்திய மாலையணிந்த வீரவாகுதேவர் பலம்பொருந்தியவேலொருவில்வீரத்துடன்பிடித்து அருகிலிருக்கும் அவுணர்களஞ்சும்படி வாயுவியாஸ்திரம் ஆக்கினேயாஸ்திரம் கறுத்த சரீரமுடைய பானுகோபனுக்கெதிரில் விட்டார் அவனும் அதற்குச்சரியானபாணங்களேவி அந்தப்பாணங்களை மாற்றினான்.—(எ-று.) (உளயஉ)

மாற்றிவஞ்சகன்கதிரவன்படை ... ... ... ... ... ...*
மலரினன்படைமால்பெரும்படை ... ... ... ... *
சீற்றமாகியேவிடலுமன்னவை ... ... ... ... ... ...*
செலுத்திவீரனுந்தடுத்துநின்றிட ... ... ... ... *

வாற்றல்கொண்டிடுந்தனதுமாயையா... ... ... ... ...*
லரியதேரினுடம்பரத்தினிற்... ... ... ... ... *
ளேற்றிடாதொளித்திறுதிமாரிபோற் ... ... ... ... ..*
றூவினன்சரந்தூயவீரன்மேல ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுமாற்றிப் பானுகோபன் கோபத்துடன் ஆதித்தியாஸ்திரம் பிர்ம்மாஸ்திரம் நாராயணஸ்திரம் பிரயோகஞ்செய்தான்வீரவாகுதேவரும் அவ்விதப்பாணங்களைவி அவன்விட்டபாணங்களையெலலாந்தடுத்துநின்றார் அதற்குமேல பானுகோபனனவன் பலம்பொருந்திய தன் மாயையினுலை அரியதேருடன்தெரியாமல் ஆகாயத்திலொளித்துநின்று ஊழிமுடிவில்வந்து பெய்யும்மேகம்போலப் பாணவருஷிங்களைத்தூயவரான வீரவாகுதேவர்மேற்பொழிந்தான்.—(எ-று.) ()

கள்ளவஞ்சகன்முன்புபின்புமாய்க்... ... ... ... ... *
கணைசொரிந்திடக்காமர்மெய்யெலாம் .. ... ... ...*
வெள்ளமானசெங்குருதியோடவே... ... ... ... ... *
வீரவாகுவும்வெகுளிகொண்டுபின் ... ... ... ...*
றள்ளரும்புகழ்ப்போதகப்படை ... ... ... ... ... *
தனைவிடுத்தலுந்தகுவன்மாயமங்... ... ... ... ...*
கெள்ளியாவருநகைசெயும்படி ... ... ... ... ... *
யிரியவிண்ணிடைத்தெரியநின்றனன் ... ... ... ...*

(இ-புரை.) திருட்டுவஞ்சகனுகிய பானுகோபன் முன்பக்கமும் பின்பக்கமுமாய்த்தைக்கும்படிகணைகளைவினதால் அழகுபொருந்திய தம்முடைய சரீரமுழுவதும் உதிரப்பிரவாகமோடவே வீரவாகுதேவர் கோபங்கொண்டுபின்புநீக்குதற்கரியபுகழுள்ள ஞானஸ்திரத்தைப்பிரயோகஞ்செய்தார் அதனைவிட்டமாத்திரத்தில் மாயாஸ்திரம்நீங்கிப்போகவே யாவரும் இகழ்ச்சிசெய்து நகைக்கும்படி ஆகாயத்தில்தெரிய நின்றான்.—(எ-று.) (உாயச)

மற்றவன்றனைக்கண்டுசீறியே ... ... ... ... ... ...*
வஞ்சகாவினியெங்கணேகுதி... ... ... ... ... *
நிற்றிநிற்றியென்றம்பரத்தின்மே ... ... ... ... ...*
னெடியதேரொடுங்கடிதிலெய்தியே... ... ... ... *

கற்றுணைப்புயன்கொண்டலாமெனக் ... ... ... ... ... ...*
கணைசொரிந்திடக்கண்டுமண்டுகோ... ... ... ... *
வெற்றனைந்தசூர்மைந்தனுந்தவங் ... ... ... ... ...*
கிந்தவாறும்பாரியற்றினரோ ... ... ... ... *

(இ-புரை.) அந்தப் பானுகோபனைக்கண்டு கோபித்துவஞ்சகனே யினியெங்கேபோவாய் நில்லு நில்லென்றுசொல்லி விரைவாகத்தம்மு டையதேருடன் ஆகாயத்திற்சென்று பிரட்சியானகல்தூணையொத்தபுய முள்ள வீரவாகுதேவர் மேகம்பொழிவதுபோலப் பாணவருஷம் பொ ழிந் ததைக்கண்ட சூரன்மகனாகிய பானுகோபனும் நெருங்கிய பாணங் களையேவி இவ்வாறு இருவரும்ஆகாயத்தில்போர்செய்தார்கள்(௨௲௰௫)

கிட்டவந்திடுஞ்சேணிலேகுறுங் ... ... ... ... ... ...*
கிளருமொன்றையங்கொன்றுசென்றுநேர் ... ... *
முட்டுமெட்டதாமாதிரத்தினு ... ... ... ... ... ...*
மூரிவானினுமூடுகியேகுறு ... ... ... ... ... *
மிட்டமானதேரிருமைவீரரு ... ... ... ... ... ...*
மிகழுவார்செருப்புகழுவார்சரந் ... ... ... ... *
தொட்டுவால்விறற்சங்கமூதுவார்... ... ... ... ... ...*
சூளியம்புவார்சூழுவாரரோ ... ... ... ... ... *

(இ-புரை.) இந்த இரண்டு வீரர்களும்விருப்பத்துடனேறிக்கொ ண்டிருக்குமிரண்டுதேர்களும்ஒன்றுடனொன்றுகிட்டிவரும்மறுபடிவெ குதூரத்தில்போய்விடும்விளங்குகின்ற ஒன்றை மற்றொன்றுநேராகமுட் டும் அஷ்டதிக்குகளிலும்பலம்பொருந்திய ஆகாயத்தினிடத்திலும்மூடுகி ச்செல்லும் ஒருவனையொருவரிகழ்வார்கள்தாங்கள்செய்யும்சண்டையை ப்புகழ்வார்கள் பாணங்களையேவிவிட்டு வெண்மைநிறமுள்ள செயசங்க மூதுவார்கள் இவையுமன்றிச் சபதங்கூறுவார்கள் இடசாரிவலசாரியாகச் சூழ்வார்கள்.—(எ-று.) (௨௲௰௬)

வரையிலோடுமாமுகிலிலோடுமேல் ... ... ... ... ...*
வானமோடுநீர்வளமுலாவுதெண் ... ... ... ... *
டிரையிலோடுமூதண்டமோடுமெண் ... ... ... ... ...*
டிசையிலோடுமத்திசைகள்சூழுமித் ... ... ... *

தரையிலோடுநீள்புலத்திலோடுமத் ... ... ... ... ...*
தானவர்க்கெலாமரசனாகிய ... ... ... ... ... *
வினையுலாந்தொடைப்பானுகோபனும் ... ... ... ...*
வீரவாகுவும்விடுசரங்களே ... ... ... ... ... *

(இ-புரை.) அவுணர்களுக்கெல்லாம் அரசனாகிய வாசனை பரந்த மாலையணிந்த அந்தப் பானுகோபனும் வீரவாகுதேவரும் விடுகின்ற பாணங்கள் மலைகள்மேலோடும் பெரியமேக மண்டலத்திலோடும் மேலாகயத்திலோடும் நீர்வளம்பொருந்தித்தெளிவான அலையுள்ள சமுத்திரங்களிலோடும் பழமையான அண்டங்களிலோடும் அஷ்டதிசைகளிலுமோடும் அந்தத்திசைகள்சூழ்ந்த பூமியிலோடும்பெரியபாதாளத்திலோடும்.—(எ-று.) (உ௱யஎ)

பாங்குகொண்டுநூறுபிரந்தொகைப் ... ... .. ... *
பல்லவங்களாற்பலமெய்புரிந் ... ... ... ... ...*
தோங்குசூர்மகன்வீரனேறுமே ... ... ... ... ... *
தொழிவுசெய்யவோராயிரஞ்சரத் ... ... ... ...*
தாங்குவெய்யவன்றேரைவீரனு ... ... ... ... ... *
மழிவுசெய்யவில்லமர்புரிந்துபின் ... ... ... ...*
நீங்கில்வாள்பிடித்திருமைவீரருஞ் ... ... ... ... ... *
சென்றெதிர்ந்துநேர்நின்றுபோர்செய்தார்... ... ...*

(இ-புரை.) இவ்வாறுபோர்செய்யும்போது ஓங்கியசூரன்மகனானவன் அழகுகொண்ட லக்ஷம்பாணங்களால் வீரவாகுதேவர் ஏறிக்கொண்டிருக்குந்தேரைப்பலதுண்டுகளாயொன்றுக்கு முதவாதவண்ணம் அழித்தான் வீரவாகுதேவரும் ஆயிரம்பாணங்களால் அப்பொழுதே பானுகோபன்தேரையும் அழிவுசெய்தார் இவ்வாறிவ்விருவர்களும் விற்போர்புரிந்து அதற்குமேல் பழுதில்லாத வாளாயுதம் பற்றிக்கொண்டுசென்றெதிர்ந்து நேர்நின்று போர்செய்தார்கள்.—(எ-று.) (உ௱யஅ)

மன்னிடும்புகழ்ச்சூரன்மாமகன்... ... ... ... ... ...*
வள்ளன்மாமகன்வாள்விலக்கியே ... ... ... ... *
கொன்னுறுந்திருத்தோளில்வெட்டிடக் ... ... ... ...*
குருதிவீழ்தரக்குமரவேள்புத ... ... ... ... ... *

மூன்னிவீரனிற்றலைமைபெற்றுளா ... ... ... ... ...*
தென்னவன்வலத்தோளையொல்லையின் ... ... ... *
மின்றுவன்னதாய்மின்றுவாளினால் ... ... ... ... ...*
வீழ்வுறும்படிவெட்டினனரோ ... ... ... ... *

(இ-புரை.) பொருந்தியபுகழுள்ள சூரன்மகனானவன் தன்னைவெட்டவருகிற பரமசிவன்புத்திரராகிய வீரவாகுதேவர் வாளாயுதத்தைவிலக்கி அவருடையபெருமைபொருந்திய தோளில்வெட்டினவளவில் வீரவாகுதேவர் தோளினின்றும் உதிரம்பெருகிற்று வீரர்களுக்கெல்லாம் வீரராகிய அந்தவீரவாகுதேவர் சுப்பிரமணியசுவாமியினுடைய திருவடியைத்தியானித்துக்கொண்டு அந்தப்பகைவன் வலத்தோளை மின்னலையொப்பானதாய் விழும்படி ஒளிபொருந்திய வாளினால் விரைவாகவெட்டினார்.—(எ-று.) (உாயகூ)

சீருலாவுதன்வலத்துணைத்தலஞ் ... ... ... ... ... ...*
சிதைவதாகவேதீயன்மாமக ... ... ... ... ... *
னேருலாவுறுமிடத்துணைத்தலத் ... ... ... ... ... ...*
திலகுவாள்பிடித்தெதிரவீரனுங் ... ... ... ... *
கோரவாளினல்வாமபாணியைக் ... ... ... ... ... ...*
குறைவுசெய்தவன்கொடுமையுன்னவே ... ... ... *
சூரன்மாமகன்றலையைவிண்ணுளார் ... ... ... ... ...*
துள்ளியாடவேதள்ளினனரோ ... ... ... ... *

(இ-புரை.) சீர்பொருந்திய தன்வலத்தோளானது வெட்டுண்டுபோகவே சூரன்மகனானவன் அழகுபொருந்திய இடத்தோளினால்பிரகாசியாநின்றவாளாயுதம் பிடித்துக்கொண்டு எதிர்த்தான் அதைக்கண்டு வீரவாகுதேவர்தம்முடையகோரவாளினால் அவனுடைய இடத்தோளையும் வெட்டிப்பின்னும் அவன்கொடுமையை நினைக்கவேயினியிவனைவைக்கலாகாதென்று தேவர்கள் துள்ளிக்கூத்தாடும்படி சூரன்மகன்தலையை வெட்டித்தள்ளினார்.—(எ-று.) (உஉய)

[வேறு.]

மான்மகன்மகன்மகன்மகன்மடிந்திட ... ... ... ... *
லான்மகபதிமுதலமரர்துள்ளினர் ... ... ... ... ...*
வேன்மகிபனைநினைவீரவாகுவுந் ... ... ... ... ... *
தான்மனமகிழ்ந்தனன்சபதமுற்றியே... ... ... ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) விஷ்ணுவினுடைய புத்திரன் பிரமதேவன் அவன் புத்திரன் காசிபரிஷி அவர்மகன் சூரன் அவன்மகனாகிய பானுகோபன் இறந்ததினால் தேவேந்திரன்முதலாகிய தேவர்கள் சந்தோஷித்துடன் குதித்துக்கூத்தாடினார்கள் வேலாயுதமேந்திய சுப்பிரமணியசுவாமியைத்தியானித்துக்கொண்டிருக்கிற வீரவாகுதேவர் தாம்கொண்டசபதத்தை நிறைவேற்றி மனமகிழ்ந்தார்.—(எ-று.) (உஉக)

உற்றசீர்முடியறவொளிகொள்பானுவின் ... ... ... ...*
பற்றலன்மடிதலும்பாரின்மேவியே ... ... ... ... *
சுற்றியபடையெலாஞ்சூழவேலன்முன் ... ... ... ...*
வெற்றியோடணைந்தனன்வீரவாகுவே ... ... ... ... *

(இ-புரை.) சீர்பொருந்திய தலையறுந்து ஒளிகொண்ட சூரியன் பகைவனாகிய பானுகோபன் இறந்துபோனவளவில்வீரவாகுதேவரானவர் ஆகாயத்தைவிட்டுப்பூமியில்வந்துஅங்குச்சூழ்ந்திருந்தபூதப்படையெல்லாம் தம்மைச் சூழ்ந்துவரும்படி சென்றுசெயத்துடன் சுப்பிரமணிய சுவாமி சந்நிதானத்திற்சேர்ந்தார்.—(எ-று.) (உஉஉ)

இன்புறுமுருகனையிறைஞ்சிநிற்றலுந் ... ... ... ... ...*
துன்பொடுவருந்திநீசூரன்மைந்தனைக் ... ... ... ... *
கொன்புனைபுயத்திறேய்கொன்றுவந்தனை ... ... ... ...*
யன்பொடுவேண்டியதறைதியென்றனன் ... ... ... ... *

(இ-புரை.) நித்தியானந்தராகிய சுப்பிரமணியசுவாமியைப்பணிந்துநின்றார் சுவாமியானவர் அவரைநோக்கிப் பெருமைபொருந்திய புயமுள்ள வீரவாகுவே நீ மிகுந்தவருத்தம் அடைந்துசூரன்மகனைக்கொன்றுவந்தனை அன்புடன் வேண்டியவரங் கேளென்றார்.—(எ-று.) (உஉங)

என்றிவைகுமரவேளிசைப்பக்கேட்டலு ... ... ... ...*
முன்றனையலதியானேர்செயற்கையு ... ... ... ... *
மின்றுசெய்ததுசிறிதில்லைபாயினு ... ... ... ... ...*
மொன்றொருவரந்தனையுதவவேண்டுமால் ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறு சுப்பிரமணியசுவாமி திருவாய்மலர்ந்தருளியதைக்கேட்டு ஐயனே உன்னையன்றி அடியேனின்று செய்த செய்கை

கொஞ்சமுமில்லையாகிலும் ஒருவரம் அருளிச்செய்யவேண்டும்.-(எ-று.)

அண்டர்பொய்வாழ்வையுமயன்பொய்வாழ்வையும் ... ...*
விண்டுவின்வாழ்வையும்வெஃகிலேனியான் ... ... ... *
றண்டைகளணிந்தநின்சரணத்தன்பையே ... ... ... ...*
கொண்டிடவேண்டுவனென்றுகூறினான் ... ... ... ... *

(இ-பு॰ா.) தேவர்கள்பொய்வாழ்வையும் பிரமதேவனுடையபொய்வாழ்வையும் விஷ்ணுவின்பொய்வாழ்வையும் அடியேன்விரும்புகின்றிலேன் தேவருடைய தண்டைகளணிந்த திருவடிகளிற்பொருந்திய அன்பினையேகொண்டிருக்க விருப்புகின்றே னென்றார்.—(எ-று.) (உஉரு)

என்றுதியளித்தனனென்றுவேலவன் ... ... ... ... ... *
றுன்றியபுகழுடைத்துணைவர்தம்மொடு ... ... ... ...*
வென்றிகொளிருக்கையில்வீரவாகுவைச் ... ... ... ... *
சென்றிடவிடுப்பவவ்விருக்கைசேர்ந்தனன் ... ... ... ...*

(இ-பு॰ா.) இவ்வாறு வீரவாகுதேவர் விண்ணப்பம்பண்ணிக்கொண்டவளவில் சுப்பிரமணியசுவாமியானவர் அவ்வாறே அருளிச்செய்தோமென்று திருவாய்மலர்ந்தருளி நீங்காதபுகழுள்ள தம்பிமாருடன் வென்றிபொருந்திய இருக்கையில்சேரும்படி விடைகொடுத்தருளினார் வீரவாகுதேவர் அவ்விடைபெற்றுக்கொண்டு தம்மிருப்பிடஞ் சேர்ந்தார்.()

பானுவின்மாற்றலன்பதைத்துவீழ்ந்துயிர் ... ... ... *
போனதைநாடியேபோர்ந்தங்கொற்றர்தாந் ... ... ...*
தானவன்றனக்கிதுசாற்றக்கேசரி ... ... ... ... ... *
மேனிமிர்தவிசினும்வீழ்ந்தரற்றினான் ... ... ... ...*

(இ-பு॰ா.) சூரியன்பகைவனாகிய பானுகோபன் பதைத்துவீழ்ந்து உயிர்போனதைத் தூதர்கள்கண்டு சென்றுசூரனுக்கிந்தச்செய்தியைச்சொன்னார்கள் அதைக்கேட்டவளவில் சூரனானவன் சிங்கத்தின்மேலிருக்கும் ஆசனத்திலிருந்துவிழுந்து அழுதான்.—(எ-று.) (உஉஎ)

அன்னதோர்காலையிலமர்க்களத்திடைச் ... ... ... ... ...*
சின்னதமாகியசேயைத்தானவர் ... ... ... ... ... *

பொழிப்புரை.

முன்னமேயொருவெரமுகில்புரைந்திடு... ... ... ... ...*
வன்னமேயானவன்வருந்தன்மேயினன் ... ... ... ... *

(இ-புரை.) சூரன் அவ்வாறு அழும்போது போர்க்களத்தினிடத்தில் சின்னமாய்விழுந்த அவன்மகனைத் தூதர்கள் தன்முன்னங் கொண்டுவரக்கண்டு மேகத்தையொத்த நிறமுள்ள சூரன்வருந்துதலைப் பொருந்தினன்.—(எ-று.) (உஉ அ)

சிரத்தினைக்கரத்தினைத்திருந்துமார்பினைப் ... ... ... ...*
பொருத்திநிம்பார்த்திடும்புரனுஞ்சோர்வுறு ... ... ... *
மருத்திகொள்வாய்புடைத்தலறுமன்றவன் ... ... ... ...*
பரித்திடுந்துயரையார்பகரவல்லரோ... ... ... ... ... *

(இ-புரை.) தலையையுங் கைகளையுந் திருந்தும்மார்பினையுஞ்சேர்த்துப்பார்ப்பன் புரனுவன் சோர்வினையடைவான் மூத்தமிட்டுக்கொள்ள ஆசைகொண்ட வாயில அடித்துக்கொண்டு அழுவான் இவ்வாறு அன்றையதினம் சூரன்கொண்ட துயரத்தை யார்சொல்ல வல்லவர்.—(எ-று.) ()

மற்றிதைப்பதுமகோமளையென்பாளறிந்... ... ... ... *
திற்றிடுமைந்தன்முன்பெய்திமேல்விழுந் ... ... ... ...*
தற்றமிறன்பொருமாற்றினுணகர் ... ... ... ... ... *
முற்றினுமழுகுரன்முதிர்ந்ததந்தநாள் ... ... .. ...*

(இ-புரை.) அந்தச்சேதியைப் பதுமகோமளையென்னுந்தாயானவள் அறிந்து உறுப்புகள்வெவ்வேறாய் இற்றுவிழுந்திருக்கிறமகனிடத்தில்வந்து மேல்விழுந்துகுறைவில்லாததுன்பமுடன் அழுதாள் அந்தநகரமுழுவதும் அந்தநாளில அழுகுரல் மிகுந்தது.—(எ-று.) (உகூ0)

பானுகோபன் யுத்த முற்றியது.





உ

வேலுமயிலுந்துணை.

# ஆறுநாள் சிங்கமுகாசூரன் யுத்தம்.



தீயவனன்னபின்சிலனைநோக்கியே ... ... ... ... ...*
மாயநம்பகைஞரைமடிவுசெய்தபின் ... ... ... ... *
சேயினையொருமகஞ்செய்தெழுப்புவன் ... ... ... ...*
காயமிங்கொருபுடைகாத்திரென்றனன் ... ... ... ... *

(இ-புரை.) அதற்பின்பு சிலனைநோக்கி இறக்கும்படி நம்முடைய பகைவரைக்கொன்று பின்பு ஒருயாகஞ்செய்து என்பிள்ளையையெழுப் புகிறேன் இந்த உடலை ஒரு இடத்தில வைத்துக்கொண் டிருங்களெ ன்றான்.—(எ-று.) (உ௩௧)

ஓங்கியவிதுபுகன்றுற்றவொற்றரைத் ... ... ... ... ...*
தீங்கினரேகியேசென்னியாயிரந்... ... ... ... ... *
தாங்கியவெம்பியைத்தருதியென்னலு... ... ... ... ...*
மாங்கவர்வடதிசையளக்கர்மேவினர் ... ... ... ... *

(இ-புரை.) மேன்மைபொருந்திய இந்தவார்த்தைசொல்லிச் சூர னவன் அங்கிருக்குந்தூதரைநோக்கி ஆயிரஞ்சிரசுள்ள என்தம்பியை அழைத்துக்கொண்டு வாருங்களென்று உத்தரஞ்செய்த மாத்திரத்தில் அந்தத்தூதர்கள் வடக்குசமுத்திரத்தைச்சேர்ந்தார்கள்.(எ-று )(உ௩உ)

ஓவிலாவதனிடையுயர்ந்தவிண்ணுளார் ... ... ... ...*
பூவினர்புகழ்தருபுரத்துடகோயில்போய் ... ... ... *
மேவினர்திகழ்ந்தனவிளம்பினருனைக்... ... ... ... ...*
கூவினன்சூரனக்கூறினரோ ... ... ... ... ... *

(இ-புரை.) நீங்குதலில்லாத அந்தச்சமுத்திரத்தின்மத்தியில் உயர் ந்ததேவர்களும் பூலோகத்தாரும் புகழ்கின்ற மாயாபுரத்துள் ளிருக்கும் அரண்மனையைப்போய்ச்சேர்ந்து சிங்கமுகாசுரனைக் கண்டு இதுவரையி ல் நடந்ததுகளைச்சொல்லி யதுவுமல்லாமல் சூரபத்மா உன்னை அழைத் துக்கொண்டு வரச்சொன்னானென்றார்கள்.—(எ-று.) (உ௩௩)

பொழிப்புரை.

என்றலுமரிமுகனெழுந்துசேனையோ ... ... ... ... *
டொன்றுசீர்மகேந்திரமணுகியும்பரை ... ... ... ...*
வென்றவனடியிசைவீழ்ந்தெழுந்துநீ ... ... ... ... *
யென்றனைக்கூவியதென்னையென்னவே ... ... ... ...*

(இ-புரை.) தூதர்களிவ்வாறுசொன்னவுடன் சிங்கமுகாசுரனெழுந்து தன்சேனைகளுடன் சீர்பொருந்திய மகேந்திரபுரத்திற் சேர்ந்து தேவர்களைவென்றவனாகிய சூரனுடையபாதத்தினிடத்தில் பணிந்தெழுந்து நீயென்னை அழைத்தகாரியமென்னவென்றான்.—(எ-று.) (உருச)

முந்துறநிகழ்ந்தனமுறையிற்கூறியே ... ... ... ... *
கந்தனுமுருகவேள்கருதிப்போர்செய ... ... ... ... ...*
வந்தனனவனைநீவல்லைமேயகிவென் ... ... ... ... ... *
றுந்துசீர்படைத்திவனுறுதியென்றனன் ... ... ... ...*

(இ-புரை.) முன்னேநடந்தகாரியங்களை முறைமையாகச்சொல்லி சுப்பிரமணியன் நம்மைக்கொல்லவேண்டுமென்று எண்ணிப் போர்செய்யவந்திருக்கிறான் ஆதலால் நீசீக்கிரமாகச்சென்றுபோர்செய்துவென்று நல்லபுகழ்பெற்றுக்கொண்டு இங்கேவந்துசேரென்றான்..-(எ-று.) ()

தானவன்விடுத்தலுந்தனதின்மேவியூன் ... ... ... ...*
போனகமுண்டுதேர்புகுந்திலக்கமாஞ் ... ... ... ... *
சேனைவெள்ளப்படைசேரவேகினும் ... ... ... ... ...*
வானவரிதுதெரீஇவாடியோடினார் ... ... ... ... ... *

(இ-புரை.) சூரனிவ்வாறுசொல்லி உத்தரவுகொடுத்தவளவில் சிங்கமுகாசுரன் தன்னுடையமாளிகையிற்சேர்ந்து இறைச்சிமுதலிய ஆகாரமுண்டு தேரிலேறிக்கொண்டு லக்ஷம்வெள்ளப் படைஞர்சூழ்ந்துவரும்படிசென்றான் தேவர்களிதைப்பார்த்துப்பயந்து ஓடினார்கள்.--(எ-று.)

எங்கணுயகனெதிரிறைஞ்சிநின்றரோ ... ... ... ... *
துங்கமாரரிமுகன்சூரன்பின்னவ... ... ... ... ... ...*
னங்கவன்றனிலும்வீறுற்றல்பெற்றவ ... ... ... ... *
னிங்கமர்புரிந்திடவெய்தினனென ... ... ... ... ...*

(இ-புரை.) எங்கள்நாதனாகிய சுப்பிரமணியசுவாமி சந்நிதியில் பணிந்துநின்றுபலம்பொருந்திய சிங்கமுகமுள்ளவனாகியவிவன் சூரன்தம்பி அவனைப்பார்க்கிலுமிகுந்த பராக்கிரமமுள்ளவன் இங்கேயுத்தஞ்செய்யவருகிறானென்று விண்ணப்பஞ்செய்தார்கள்.—(எ-று.) (உ௱எ)

இன்னதையறிந்துபோர்க்கெழநினைத்தலு ... ... ... ...*
மன்னதையறிந்துசென்றுடன்மொய்ம்பினன் ... ... ... *
பன்னிருபுயத்தனைப்பணிந்தெழுந்துநா ... ... ... ...*
னென்னலன்றனையழித்துறுகின்றேனென ... ... ... *

(இ-புரை.) சுப்பிரமணியசுவாமியானவர் சிங்கமுகன் வருவதை அறிந்துபோர்செய்யும்படி சொல்லநினைத்தருளினார் வென்றிபொருந்தியபுகழுள்ள வீரவாகுதேவர் அதையறிந்துசென்று பணிந்தெழுந்து அந்தப்பகைவனை அடியேன்கொன்றுவருகிறேனென்று விண்ணப்பஞ்செய்தார்.—(எ-று.) (உ௱அ)

அன்பொடுவிடுத்தலுமகன்றகன்றிடாக்... ... ... ... ...*
கொன்புனைபடைக்கலங்கொண்டுதேரின்மீ ... ... ... *
தின்புடனேறியேயெழிலகொண்மொய்ம்பினன் ... ... ...*
றன்பெரும்படையொடுந்தகுவர்ச்சேர்ந்தனன்... ... ... *

(இ-புரை.) சுப்பிரமணியசுவாமி அன்புடன் உத்தரஞ்செய் தருளினவுடன் அவ்விடம்விட்டுநீங்கி நீங்காதபெருமைபொருந்திய ஆயுதங்களெடுத்துக்கொண்டு தேரின்மேல் இன்பமுடனேறி அழகுபொருந்தியவீரவாகுதேவர் தம்முடையமிகுந்தசேனையுடன் அவுணர்களிருக்கும் போர்க்களத்தைச்சேர்ந்தார்.—(எ-று.) (உ௱கூ)

ஆயிரமியோசனையானமெய்யுடைச் ... ... ... ...*
சீயமாமுகத்தவன்சேனையானதும் ... ... ... ... *
போயெதிர்மலைந்திடும்பூதர்சேனையு ... ... ... ...*
மாயிடையெதிர்ந்துநின்றமர்புரிந்ததால்... ... ... *

(இ-புரை.) ஆயிரம்யோசனையளவுள்ளதாகிய சரீரமுடையசிங்கமென்னு மிருகமுகத்தினனது சேனையும் எதிரிற்சென்றபூதர்சேனையும்போர்க்களத்திலெதிர்த்துநின்று யுத்தஞ்செய்தன.—(எ-று.) (உ௪0)

திண்டிறற்படைக்கலஞ்சிதறிப்போர்செய ... ... ... ...*
வண்டியவீரருமவுணவீரரு ... ... ... ... ... ... *
மண்டனிற்சிலர்சிலாமாயத்தானவர் ... ... ... ... ...*
தண்டமன்னவரொதிர்சார்ந்துபோர்செய்தார் ... ... ... *

(இ-புரை.) மிகுந்தபலமுள்ள பலவிதமாகிய ஆயுதங்களைவெறிந்து நெருங்கியபூதர்களும் அவுணவீரர்களும் போர்செய்யும் போது மண்ணினிடத்தில் சிலர்மாய்ந்தார்கள் அவுணப்படைத் தலைவர்களெதிர் சென்று போர்செய்தார்கள்.—(எ-று.) (உசுக)

[வேறு.]

அன்னகாலையிற்பூதர்களுடைய ... ... ... ... ... ...*
வடற்கொள்பூதரிற்சிங்கனென்பொருவன் ... ... *
றன்னெடுங்கையிற்றண்டிலவுணர் ... ... ... ... ...*
தலைகள்சிந்திடச்சாடிபோகுதலு ... ... ... ... *
முன்னர்நின்றிடுமவுணர்கடம்மின் ... ... ... ... ...*
முரண்கொளுந்தசமுகனெனுங்கொடியோன்... ... *
பொன்னெடுஞ்சிலைபிடித்துவந்தெதிர்ந்து... .. ... ...*
புங்கவம்பலசிங்கன்மேற்பொழிந்தான் ... ... ... *

(இ-புரை.) அப்படி யுத்தஞ்செய்யும்போது பூதர்கள்தோற்றோடினார்கள் அதைக்கண்டு பலம்பொருந்திய அந்தப்பூதர்களுக்குள் சிங்கனென்னும் ஒருவன் தன்னுடையபெரியகையிலிருக்குந் தண்டாயுதத்தினால் அவுணர்கள்தலைகள்சிதறும்படி அடித்துக்கொண்டுசெல்லும்போது எதிரிலிருக்கும் அவுணர்களுக்குள் பலங்கொண்டதசமுகனென்னும் மொருகொடியவன் அழகுள்ள பெரியவில்லைப் பிடித்துவந் தெதிர்த்து சிங்கன்மேல் சிலபாணங்களைவிஞன்.—(எ-று.) (உசுஉ)

வீறிவந் திடுங்கணையெலாங்கதையால்... ... ... ... ...*
விறற்கணத்திறைவிலக்கலுங்கொடியோன் ... ... *
சீறியோர்பெருங்கதையினைவிடுப்பச் .. ... ... ... ...*
சிங்கன்மார்பகஞ்செறிந்தொடிந்திடலு ... ... ... *
மாறிலாவொருமழுப்படைவிடுப்பவரங்கொள் ... ... ...*
சாரதன்மற்றதைக்கதையா ... ... ... ... ... *

னூறுசெய்திடக்குந்தமொன்றெறிந்தா... ... ... ... ...*
னுந்துமாழியொன்றுந்தினுனிவனும் ... ... ... *

(இ-புரை.) மேலிட்டுவருகின்ற அப்புகளையெல்லாம் பராக்கிரம முள்ள பூதப்படைத்தலைவனுகிய சிங்கன் தன்கையிலிருக்குந்தண்டாயுதத்தினுல் விலக்கிவிட்டான் அவுணப்படைத்தலைவனுகிய கொடியவன்கோபித்து ஒருபெரியகதையை விட்டெறிந்தான் அதுவந்து சிங்கன்மார்பிற்பட்டு ஒடிந்தது அதற்குமேல் அந்த அவுணன் ஒருமழுவாயுதத்தை விட்டெறிந்தான் சுப்பிரமணியசுவாமியின் அனுக்கிரகம்பெற்ற பூதனுகிய சிங்கன் தன் கையினுலடித்து அந்த மழுவாயுதத்தை யொடித்தான் அவன்பின்னுமொரு கைவேலையெறிந்தான் இவன் அதற்கெதிரில் ஒரு சக்கரமெறிந்தான்.—(எ-று.) (உசங)

(மழுவென்பது - கோடாலி.)

குந்தவேலினையாழிபோயழிப்பக்... ... ... ... ... ...*
கொடியனேர்கதைகுறிப்பொடுவிடுத்தா... ... ... *
னுந்துசிங்கனதுரத்தின்வந்தழுந்த ... ... ... ... ...*
வுதிரமேலவிழுந்தோடவங்கோடி... ... ... ... *
வெந்திறற்றசமுகனுரத்தடிப்ப .. ... ... ... ... ...*
விழுந்துவெய்யவன்வீந்திடவதுகண் ... ... ... *
டந்தமற்றிடுந்தருவர்களெவரு ... ... ... ... ... ...*
மமர்புரிந்திடவடலொடுமடைந்தார் ... ... ... *

(இ-புரை.) அவுணன் எறிந்தகைவேலைச் சிங்கன் எறிந்தசக்கரம்போயழித்துவிடவே அந்தக்கொடியவன் ஒருகதையைக்குறிப்புடன் விடுத்தான் அதுமேன்மைபொருந்திய சிங்கன்மார்பிற்பட்டவளவில் உதிரமேவிட்டுப் பெருகுதலுடன்பாய்ந்து கொடுமையான பலமுள்ளதசமுகன் மார்பில் அடித்தான் அந்த அடிபட்டமாத்திரத்தில அவுணன் விழுந்திறந்தான் அதுகண்டு அளவற்ற அவுணர்களெல்லாரும் வீரத்துடன்போர் செய்ய எதிர்ந்தார்.—(எ-று.) (உசச)

அன்னகாலையிலிலரக்கர்தங்குழுவி ... ... ... ... ...*
லாற்றல்பெற்றுளவனகனுமொருவன் ... ... ... *
மன்னுதானவர்தானைமுன்பணுகி... ... ... ... ... ...*
வாளிகொண்டவர்மாளவேயழிப்பத்... ... ... ... *

பொழிப்புரை.

துன்னுதானவரோடினரவரிற் ... ... ... ... ... ...*
றுன்மூகத்தினன்றண்ணெனவெதிர்ந்து... ... ... *
கொன்னுறும்படிபலபலவடிவங் ... ... ... ... ...*
கொண்டுபூதர்முன்கொடுஞ்செருப்புரிந்தான்... ... *

(இ-புரை.) அவ்விதமாக அவுணர்களெதிர்ந்தபோது லக்ஷம்வீரர் கூட்டத்தில் பலம்பெற்றுள்ள அனகனுகிய ஒருவீரன் எதிர்த்திருக்கிற அவுணச்சேனைக்கெதிரில் சேர்ந்து பாணங்களையேவி அவர்கள்மாளும் படி அழித்தான் அப்படி அழிக்கும்போது அவுணர்களில் துன்மூகனென்பவன் பூதர்களெல்லாம்நடுங்கும்படி பல பல வடிவங்கொண்டு பூதருக்கெதிரிலகொடுமையானபோர்செய்தான்.—(எ-று.) (உசரு)

ஆயகாலையில்வாகையங்கதிரோ ... ... ... ... ... *
னதுதெரிந்தனனறிவெனும்படையால் ... ... ...*
மாயமானதையழித்தலுந்தனித்து ... ... ... ... ... *
வஞ்சனுயிரவாளிகள்விடுப்ப ... ... ... ... ...*
வாயிரங்கணைவிடுத்தவைதடுத்தங் ... ... ... ... ... *
கவனுடம்பினிலழுந்திடவளவில்... ... ... ... ...*
சாயகந்தொடவிழுந்தயர்ந்தருவாய்த் ... ... ... ... *
தருவனோடினன்சாரதர்மகிழ ... ... ... ... ...*

(இ-புரை.) துன்முகனிப்படி மாயமாய்ப்போர்செய்யும்போது வெற்றியுள்ள வீரமார்த்தாண்டன் அவனுடைய மாயத்தையறிந்து தன் ஞானஸ்திரத்தினால் அந்தமாயத்தையழித்தான் பின்பு துன்முகன்தனித்துநின்று ஆயிரம்பாணங்களேவினுன் வீரமார்த்தாண்டனும் ஆயிரம் பாணங்களேவிஅவன்விட்டபாணங்களைத்தடுத்துப்பின்னும்துன்முகன் சரீரத்தில் அழுந்தும்படி அளவிலலாதபாணங்களையேவினுன் அந்தப் பாணங்கள்வந்து பட்டமாத்திரத்தில் அவன் பூமியில்விழுந்து மூர்ச்சையாகி யுடனே தெளிந்தெழுந்து அவுணனுனவன் பூதர்களெல்லாரு மகிழும்படி அருவமாயோடிப்போனுன்.—(எ-று.) (உசசு)

அந்தவேலையிலிந்தவாறறிந்தா... ... ... ... ... ... *
னரிமுகத்தினனெரிமுகமானுன்... ... ... ... ...*
வந்தெதிர்ந்தனனெதிர்தலும்பூதர்... ... ... ... ... *
மரக்குலங்களும்வரைகளும்விடுப்ப ... .. ... ...*

முந்துமன்னவனுசியிலுயிர்ப்பான்... ... ... ... ... *
முரிந்துபோயினமுனிந்துவெம்பூதர்... ... ... ...*
மந்தரங்களுமரங்களும்பிறவு... ... ... ... ... ... *
மாசர்தெவ்வன்மேலவலியொடுவிடுத்தார் ... .. ...*

(இ-புரை.) அவனோடிப்போனபோது சிங்கமுகாசுரனிந்த முறைமையையறிந்து எரிகின்ற முகமுள்ளவனாகி வந்தெதிர்ந்தான் அவனெதிர்ந்தபோது பூதர்கள்மரக்கூட்டமும் மலைக்கூட்டமும் விட்டெறிந்தார்கள் அவைகளெல்லாம் யுத்தத்திலுமுந்திய அவனுடைய நாசியினிடத்துண்டாகும் சுவாசத்தினால் அழிந்துபோய்விட்டன அதைக்கண்ட பூதர்கள்கோபங்கொண்டு போய்மலைகளையும் விருக்ஷங்களையும் பல பல ஆயுதங்களையும் தேவர்கள்பகைவனுன சிங்கமுகாசுரன்மேல் வீரத்துடன் விட்டெறிந்தார்கள்.—(எ-று.) (உசஎ)

விட்டவின்னவைமாகமேனிறைந்து... ... ... ... ... *
வேகமோடுபோய்விறலரிமுகனு... ... ... ... ...*
மொட்டலன்றன்மேற்பட்டனபடலு ... ... ... ... *
மூறுசெய்திலவுடைந்திலவிழுந்த ... ... ... ...*
வட்டிடும்படிசுரியினந்தனிலோ ... ... ... ... ... *
ரரிபுகுந்தெனவடற்கணக்குழுவின் ... ... ... ...*
வட்டமானதன்றேரினுமிறங்கி... ... ... ... ... ... *
வந்துபுக்கனன்மாயைதன்புதல்வன் ... ... ... ...*

(இ-புரை.) பூதர்கள்விட்டெறிந்த இவைகளெல்லாம் ஆகாயத்தின்மேல்நிறைந்து வேகத்துடன்சென்று பராக்கிரமமுள்ள சிங்கமுகாசுரனாகியபகைவன்மேற்பட்டன அவ்வாறுபட்டும் அவனுக்கொருதீங்குஞ்செய்ததுமில்லை அவன்மேற்பட்டதினால் அவைகள் ஒடிந்ததுமில்லை விட்டபடியே பூமியில்விழுந்துவிட்டன அதற்குமேல் மாயைமகனாகிய சிங்கமுகாசுரன்வட்டமாகிய தன்தேரிலிருந்திறங்கி யானைக்கூட்டத்தில் ஒருசிங்கம் நுழைந்ததுபோலவீரமுள்ள பூதக்கூட்டத்தில் வந்துபுகுந்து. ()

பற்றினன்சிலபூதர்கடம்மைப்... ... ... ... ... ... *
பதைத்திடும்படிபாரவண்டத்தி... ... ... ... ...*
லெற்றினன்சிலபூதர்கடம்மை... ... ... ... ... ... *
யெயிறுதுன்றிய்விடிக்குரல்வாயிற் ... ... ... ...*

பொழிப்புரை.

குற்றினன்சிலபூதர்கடம்மைக்... ... ... ... ...
குறைத்தனன்சிலபூதர்கடம்மைச்... ... ... ...
சுற்றினன்சிலபூதர்கடம்மைத்... ... ... ... ... ... *
துவைத்தனன்சிலபூதர்கடம்மை... ... ... ... ...*

(இ-புரை.) சிலபூதர்களைப் பிடித்துப் பிடித்துப் பிசைந்துவிட்டான் சிலபூதர்களைப்பதைக்கும்படிபெரிய அண்டமுகட்டில் அடித்தான்சிலபூதர்களைப்பற்கள்நெருங்கியஇடிபோன்றகெற்சனையுள்ளவாயினிடத்திற் குற்றினன் சிலபூதர்களைக்கொன்றான் சிலபூதர்களைக்கால்களைப் பிடித்துத்தூக்கிச் சுழற்றினான் சிலபூதர்களைத் தன் கால்களால் மிதித்தான்.—(எ-று.) (உசகூ)

வேதனூரினிற்சிலவரைவீசும்... ... ... ... ... ... *
விரிகடற்களிற்சிலவரைவீசு ... ... ... ... ...*
மாதிரங்களிற்சிலவரைவீசு ... ... ... ... ... ... *
மறலியூரினிற்சிலவரைவீசு... ... ... ... ... ...*
மீதுபோலமேயமர்பலவியற்ற ... ... ... ... ... *
வெருவைநீர்விரிந்திருங்கடற்புகுதப் ... ... ... ...*
பூதலந்தனிற்பூதர்கள்பல்லோர் ... ... ... ... ... *
பொன்றினரவன்புகுந்தனன்றேர்மேல்... ... ... ...*

(இ-புரை.) பிரமதேவனுலகத்தில் சிலபூதரையெறிவான் பரந்தகடல்களில சிலபூதரையெறிவான் திக்குகளில் சில பூதரையெறிவான் கூற்றுவனூரில்சிலபூதர்களையெறிவான் இதுபோலப் பலபலவாறாகச்செய்தபோது உதிரப்பிரவாகம்பெருகிப் பெரியகடலிற்சேரும்படி அநேகம்பூதர்கள் அந்தப்போர்க்களத்திலிறந்தார்கள் அதற்குமேல் அவன்தேரின்மேலேறினான்.—(எ-று.) (உருய)

ஈதுகண்டனன்பூதர்மன்னவரி... ... ... ... ... ... *
லெரிகொள்கண்ணினானெதிரணைந்தவுணன்... ... ...*
மீதுதண்டமொன்றெறிந்திடவதுபோய்... ... ... ... *
வெய்யன்வையமேன்மேவுசீர்வலவன் ... ... ... ...*
றீதுகொண்டிடுசிரந்தனைக்களையச்... ... ... ... ... *
சிங்கமாமுகன்சீறியேயொருதண்... ... ... ... ...*
டாதிமாமகன்பூதமன்னவன்மே ... ... ... ... ... *
லழுந்தவிட்டுழியயர்ந்துநின்றனனே... ... ... ...*

(இ-புரை.) பூதராசர்களில் அக்கினிக்கண்ணனென்பவன் அதனைக்கண்டு சிங்கமுகனுக்கெதிரிற்சென்று அவன் மேலொரு தண்டாயுதமெறிந்தான் அந்தத்தண்டாயுதம்போய்ச்சிங்கமுகன்தேரின்மேலிருக்குஞ்சிருள சாரதியினுடைய நீண்மைகொண்டதலையையுடைத்தது அதனைக்கண்டு சிங்கமுகன்கோபித்து ஒருதண்டாயுதமெடுத்து சிவகுமாரனாகிய சுப்பிரமணியர்சேனையாகிய பூதர்களுக்கு அரசனாயிருக்கிற அக்கினிக்கண்ணன்மேற்படும்படி எறிந்தபோது அதுபட்டு அக்கினிக்கண்ணன் மூர்ச்சையாய்விழுந்தான்.—(எ-று.) (உருக)

தேரின்மீதொருபாகனை நிறுவிச் ... ... ... ... ... *
சிங்கமாமுகன்சீறிவந்தணுகப் ... ... ... ... ...*
பாரிலோர்புகழ்சுமாலியென்பவனோர் ... ... ... ... *
பருப்பதந்தனைப்பறித்துநேர்விடுப்பச் ... ... ...*
சீருலாவுதன்கரத்தினாற்பிடித்துத் ... ... ... ... ... *
தீதில்பூதன்மேற்றிரும்பவிட்டிடலும்... ... ... ...*
வீரமுற்றிடுசுமாலிதன்னுரத்தில் ... ... ... ... ... *
விரைந்துபட்டிடமெலிந்தனன்விழுந்தான் ... ... ...*

(இ-புரை.) அதன்பின்பு சிங்கமுகன்தேர்மேல் வேறொரு சாரதியையேற்றிக்கொண்டு கோபங்கொண்டு வந்தெதிர்த்தான் பூலோகத்தார்புகழத்தக்க சுமாலியென்பவன் ஒருமலையைப்பறித்து அவனுக்கெதிரிலெறிந்தான்சிங்கன்சீர்பொருந்தியதன்கையினாற்பிடித்துச்சுமாலியென்பவன்மேல் திரும்பவிட்டெறிந்தான் அதுபோய் வீரம்பொருந்தியசுமாலியினுடையமார்பிற்படவே அவன்வருந்தி விழுந்துவிட்டான்.(எ-று.)

அனையகாலையிற்றண்டியென்றொருவ ... ... ... ... *
னவுணன்வையமூற்றவன்றனதுரத்திற் ... ... ...*
கனமுறுங்கரக்கதையினாலடிப்பக் ... ... ... ... ... *
கதையொடிந்ததுகரங்கொடுபுடைத்தான் ... ... ...*
றனதுதாளினாலவுணனங்கிவனைத் ... ... ... ... ... *
தள்ளவீழ்ந்துபின்றண்டிவிண்ணெழுந்து ... ... ...*
சினமதாயவன்றோளின்மேற்பாய்ந்து ... ... ... ... *
செய்யதாளினாற்றிறலொடுந்துவைத்தான் ... ... ...*

(இ-புரை.) சுமாலியென்பவன் விழுந்தபோது தண்டியென்னும் ஒரு பூதராசன் சிங்கமுகன்தேரிற்பாய்ந்து அவன்மார்பில்கனம்பொரு

பொழிப்புரை.

ந்திய தன்கைக்கதையினால் அடித்தபோது அந்தக்கதை யொடிந்தது மறுபடிகையினாலடித்தான் சிங்கமுகன் தன்காலினால் அந்தத்தண்டியெ ன்பவனை யுதைத்துத் தள்ளினான் அவன் பின்பு ஆகாயத்திலெழுந்து தாவிக்கோபத்துடன்சிங்கமுகன் தோளின்மேற்பாய்ந்து தன்பாதத்தினால் பலத்துடன்மாற்றிமாற்றிமிதித்தான்.—(எ-று.) (௨௫௩)

செறிந்ததோள்களிற்கரத்தினிற்சிரத்திற்... ... ... ... *
சென்றுசென்றுவன்றிறலொடுந்துவைப்ப ... ... ...*
வறிந்திலானந்தயரிமுகத்தவுண ... ... ... ... ... *
னாகமீதிலோரீகொலென்றெண்ணிச் ... ... ... ...*
சொறிந்துகையினாற்றுடைப்பநொந்திரிந்தான் ... ... *
றுலக்கவெனமருமிலகருமெதிர்ந்தெண் ... ... ...*
ணிறந்தவாளிகள்சொரிந்திடப்படிமே ... ... ... ... *
விழிந்துவந்தன னிழிதொழிலயின்றோன்... ... ...*

(இ-பு.) கண்[illegible] பன்பவனிவ்வாறு சிங்கமுகனுடைய தோள்களிலும் கைகளிலும் தலை[illegible]ம் சென்றுசென்று பலத்துடன் மிதிக்கும்போது சிங்கமுகாசுர[illegible]வுண[illegible] அதையறியாமல்நம்முடைய சீரத்தில் யாதோ ஒரு ஈவர[illegible]கடிக்கிற தென்றெண்ணித் தன்கையினாற் சொறிந்து துடைத்தான் தண்டி[illegible]பவன் அவ்வளவில்வருத்தம் அடைந்து ஓடிப்போனான் அதற[illegible]விளககமுள்ள எட்டுவீரர்களும்லக்ஷம் வீரர்களும் எதிர்ந்து அள[illegible]றந்[illegible] பாண ங்களையெய்யும்போது பாவமான செய்கையயின்றுள்ள சிங்கமுகன்தேரைவிட்டுப் பூமியின்மேலிழிந்து வந்தான்.—(எ-று.) (௨௫௪)

எடுத்தெறிந்தனன்சிலவர்தந்தேரை ... ... ... ... ...*
யிலங்குமொன்றினோடொன்றுதாக்குறவே ... ... *
யடித்தல்செய்தனன்சிலவர்தந்தேரை... ... ... ... ...*
யங்கையாற்சிலதேர்தனையள்ளி ... ... ... ... *
யொடித்தனன்சிலதேர்களையுதைத்தா.. ... ... ... ...*
னுளைத்தவிப்படியமேநகமங்கியற்றப் ... ... ... *
படித்தலம்புகழ்வீரர்களிரிந்தார் ... ... ... ... ...*
. பரிந்தும்தரிலப்பதகனேறினனே... ... ... ... *

(இ-புரை.) சிலபேர்தேர்களை யெடுத்தெறிந்தான் சிலர்தேர்களில் பிரகாசியாநின்ற ஒருதேருடன் மற்றொருதேரைமோதும்படி அடித்தா

ன் சிலர்தேர்களை அழகியகையால் எடுத்துமுறித்தான் சிலர்தேர்களையு தைத்தான் இவ்வாறு அங்குபலவாறுசெய்யும்போது பூமியிலுள்ளவரீபு கழும்வீரர்கள்போர்க்களம்விட் டோடிப்போனார்கள் அதற்குமேல்அந் தப்பாதகன்பரிவுடன்தேரிலேறினன்.—(எ-று.) (உருரு)

[வேறு.]

காரிலகுபூதரொடுதம்பியருடைந் . . சயப்ப ண்டான் ... ...*
வீரமுருகற்கிளையநாதனு . மி . ரில் வெ . ண்டான் ... ... *
கோரமொடிருந்ததொருகைச்சிலை . . க னிவுகொண்டா ...*
னோரிறையின்மூன்கணைசொரிந்தவுணர் . லையுயிருண்டான் *

(இ-பு.) மேகம்போலப் பிரகாசியா . . . தர் . ருந்தம்பிமா ர்களுந்தோற்றோடிய செய்கையைக் கண்டு வீ . மு . . வீ . . குதேவர் மனதினிடத்தில் கோபமுள்ளவராய் கோரமுடனி . க . மொரு கையில் லைவளைத்து ஒருக்ஷணப்பெ ழுதுக்கு . . . வருஷம் பொழிந்து அவுணச்சேனைகளுயிரையுண்டான்.—(எ-று.) (உருசு)

கரங்களையறுப்பனபதங்களையறுப்பனகவின்சேரு... ... ...*
புரங்களையறுப்பனபுயங்களையறுப்பன . ரக்கந் ... ... *
தரங்களையறுப்பனகலன்களையறுப்பனசயஞ்சேர்... ... ...*
வரங்களைமிகப்புனையும்வாளின்மொ . . . . . ரொளி ... *

(இ-பு.) அவுணர்களுடையகைகளையறுக்கும் கால்களையறுக்கு ம் அழகுசேர்ந்தமார்புகளையறுக் . ம்புசங்களையறுக் . ம்பலமுள்ள கழு த்துகளையறுக்கும் ஆபரணங்களை யறுக . ம்சயம் . . . . தக்க வரங்களை மிகுதியாகப்பெற்றிருக்கும் வாள்வீரமுள்ளவிரவாகுதேவர் விடுகின்ற பாணங்கள்.—(எ-று.) (உருஎ)

மாறவுணர்சேனைபலதூளிபடவாளிகொடுவள்ளல் ... ... *
சீறியமர்செய்தலுமரிப்பெருமுகன்றனதுசேயோர் ... ...*
நூறெனுமிலக்கமுடையாரவரொதிர்ந்தனர்நுதிக்கோல் ... *
வீறுமுகிலாமெனவிடக்கணைகள்வீரனும்விடுத்தான் ... ...*

(இ-பு.) பகைகொண்ட அவுணர்சேனை பலதூளிபடும்படி பா ணங்களால் வீரவாகுதேவர்கோபித்துப்போர்செய்யும்போது நூறென்

கிற தொகையுள்ளவர்களான சிங்கமுகாசுரன் பிள்ளைகளெதிர்த்து கூர்மையுள்ள பாணங்களை மேன்மைபொருந்திய மேகம்போலச் சொரிந்தார்கள் வீரவாகுதேவரும் அவர்கள் விடுவதற்குச் சரியாகப் பாணங்களேவினார்.—(எ-று.) (உருஅ)

விடுத்தவைதடுத்தவரெடுத்தசிலைதேரைமிகுவெங்கோ ... ...*
ளொடுத்தவனழித்திடமனத்திடைசினத்தவர்கடோவாள்... ... *
பிடித்தமரியற்றுறவிளிக்கநவிரப்படைபிடித்தே... ... ...*
படித்தலமதிப்பொடுகுதித்தவர்தமக்கெதிர்படர்ந்தான் ... *

(இ-புரை.) வீரவாகுதேவரிவ்வாறு பாணங்களேவி அந்த நூறுபேரும்விட்ட பாணங்களையெல்லாம் தடுத்துவிட்டுப் பின்னுங் கொடுமையுள்ளபாணங்கள் அநந்தமாகவிடுத்து அவர்கள் எடுத்த வில்லுகளையுந் தேர்களையும் அழித்தார் அவர்கள்மனதிற்கோபங்கொண்டு பகைவரைச் சிந்தத்தக்கவாளாயுதமேந்திக்கொண்டுபோர்செய்யஅழைத்தார்கள்அப்படி அவர்கள் அழைத்தபோது வீரவாகுதேவரும் வாளாயுதமேந்திக்கொண்டு மதிப்புடன்தேரைவிட்டுப் பூமியிற்குதித்து அவர்களுக்கெதிரிற்சென்றார்.—(எ-று.) (உருகூ)

வாளதுபிடித்துவருமண்ணலெதிர்வந்தனர்வளைந்தார் ... ...*
தோளிடையுரத்திடைகரத்திடையெறிந்தனர்கடோயோன் ... *
கோளுருவிலூறிலதுகண்டனர்பிடித்தனர்கொதித்தே ... ...*
யாளரிமுகன்குமரர்சிந்திவிழவாள்விசிறியட்டான் ... ... *

(இ-புரை.) வாளாயுதமேந்திக்கொண்டு வருகின்ற வீரவாகுதேவருக்கெதிரில்வந்து வளைந்துகொண்டு அவருடையதோள்களினிடத்திலும் மார்புகளினிடத்திலும் கைகளினிடத்திலும் வெட்டினார்கள் அவ்வாறு வெட்டினபோது பரிசுத்தராகிய வீரவாகுதேவருடைய பலம்பொருந்திய சரீரத்தில்கொஞ்சமுங் காயம்படாம லிருப்பதைக்கண்டு நூறும்பரு மொன்றாகவந்து சேர்த்துப்பிடித்தார்கள் வீரவாகுதேவர்கோபங்கொண்டு சிங்கமுகன்பிள்ளைகள் அறுந்துவிழும்படி வாளாயுதத்தைவீசிக்கொன்றார்.—(எ-று.) (உசுய)

அங்குலவுமைம்பதுடனைம்பதெனுமைந்தர்தமையட்டே ... *
துங்கமுறுவீரர்கடனிற்றலைமைபெற்றதொருதூயோன் ...*

பொங்குமிமையோர்புகழவையமுமுவையமிசைபுக்கான் ... *
சிங்கனிதுகண்டுளம்வெகுண்ட-னுகிமொய்ம்பனொடுசெப்பும் *

(இ-புரை.) அவ்விடத்திற்போர்செய்த நூறுபிள்ளைகளையுங் கொன்று பலம்பொருந்திய வீரர்களுக்குள் ஒப்பிலலாதமுதன்மைபெற்றவராகிய வீரவாகுதேவர் மனப்பொங்கமுள்ளதேவர்கள்புகழ்ந்து கொண்டாட அந்தப் பூமியினிடத்திலிருக்கிற தன்தேர்மேல் ஏறிக்கொண்டார் சிங்கமுகனிதனைக்கண்டு மனதிற்கோபங்கொண்டுவந்து வீரவாகுதேவருடனிந்தமொழிசொல்லுகிறான்.—(எ-று.) (உகூக)

ஊனமில்குமாரனலையெண்மர்களிலோவலதிலக்க ... ... ...*
மானவரிலோவலதெம்மூரினிடைதூதுவருவானே ... ... *
வானவிவர்தங்களிலியாரொனலும்வீரமுறுமண்ணல் ... ...*
வானவர்குலத்தினையலைத்தகொடியோனொடுவகுப்பான் ... *

(இ-புரை.) குற்றமில்லாத சுப்பிரமணியனல்லை எட்டுவீரர்களிலோ அல்லது லட்சம்பேர்களாகிய வீரர்களிலோ அல்லது எங்கள்பட்டணத்தினிடத்தில் தூதுவந்தவனோ சொல்லுகின்ற இவர்களில் நீயாரொன்றான் அந்தவார்த்தையைக்கேட்ட வீரம்பொருந்திய வீரவாகுதேவர் தேவர் குலத்தைவருத்திய கொடியவனுகிய சிங்கமுகனுடன் சொல்லுகிறார்.—(எ-று.) (உகூஉ)

ஆதியருளுங்குமரநாயகனடிக்கடிமையானேன் ... ... ...*
றாதனெனவந்துமதுநற்பதியைமுற்பகலொலைத்தே... ... *
னீதமறுமும்மையடநின்றனியானெனநிகழ்த்திக் ... ...*
கோதறுதனுதுபெயரோதினன்மிகுத்தவிறல்கொண்டான்... *

(இ-புரை.) மிகுந்தபராக்கிரமங்கொண்ட வீரவாகுதேவர் சிங்கமுகனைநோக்கி நான் பரமசிவனருளிய குமாரசுவாமியின் திருவடிக்கு அடிமையானவன் முன்னாளிலதூதனுகவந்து உங்கள்நல்லபட்டணத்தையழித்தேன் நீதியற்ற உங்களைக்கொல்ல இப்போது சித்தமாயிருக்கிறேனென்றுசொல்லிக் குற்றமற்றதம்முடையபெயரைச்சொன்னார்.(எ-று.)

என்றிடலுமுன்றனையுனக்கிறைதனைக்கடிதிறைக்குள் ... ...*
வென்றிடுவனென்றிடவெகுண்டுபதினெண்கணைவிடுத்தான் *

பொழிப்புரை.

சென்றவனுரத்திடைசெறிந்ததுமுறிந்ததொருதெண்டந் ...*
துன்றரிமுகத்தன்விடநாலுகணைகொண்டது துணித்தான் ... *

(இ-புரை.) வீரவாகுதேவரிவ்வாறுசொல்லியபோது சிங்கமுகன் அவனைநோக்கியுன்னையும் உனக்கு இறைவனாயிருக்கிற சுப்பிரமணியனையும் ஒரு நொடிப்பொழுதுக்குள் விரைவாகவெல்லுகிறேன் பாரென்று சிங்கமுகன்சொன்னவளவில வீரவாகுதேவர் கோபமுள்ளவராய்ப் பதினெட்டுபாணங்களேவினார் அவைகள்சென்று அவன்மார்பிற்பட்டுமுறிந்துபோயின அதற்குமேல் சிங்கமுகன் ஒருதண்டாயுதம் விட்டெறிந்தான் அதனைநாலுபாணங்களால வீரவாகுதேவர் அறுத்துத் தள்ளினார்.

[வேறு.]

தீதில்வீரனாயிரஞ்சரத்தினைப்பகைத்தவன் ... ... ... *
சிரத்தினிற்செலுத்தவேசெறிந்தொடிந்துபோயதா ...*
லேதமானசிங்கனங்கொர்சூலமேவல்விடுப்பவே ... ... ... *
யிராயிரஞ்சிலீமுகங்களிளையவீரனெய்யவச் ... ...*
சோதிகொண்டசூலமச்சரத்தைநூறிவந்திடத் ... ... ... *
தூயவீரன்வாள்கொடேதுணித்தனன்றுணித்தபின் ...*
பாதிதன்படைக்கலத்தையவுணன்மீதிலேவினா... ... ... *
னவனுமன்னதேவினானமர்ப்புரிந்ததிருமையும் ... ...*

(இ-புரை.) அந்தத்தண்டாயுதத்தையறுத்தபின்பு குற்றமில்லாதவீரவாகுதேவர் ஆயிரம்பாணங்களைச் சிங்கமுகன் தலைகளிற்படும்படியேவினார் அவைகள் பட்டொடிந்துபோயின அப்போது தீமையுள்ள சிங்கமுகன் ஒரு சூலாயுதமேவினான் அதைத்தடுக்கும்படி இவரிரண்டாயிரம்பாணங்களேவினார் பிரகாசமுள்ள அந்தச்சூலமானது இவர்விட்டபாணங்களையெல்லா முறித்துக்கொண்டுவரும்போது வீரவாகுதேவர் வாளாயுதத்தால் சூலத்தைவெட்டித்தள்ளினார் வெட்டித்தள்ளினவுடன்பின்னும் சிவாஸ்திரத்தை சிங்கமுகன்மேலேவினார் அவனுஞ்சிவாஸ்திரம் ஏவினான் அவ்விரண்டுந்தமக்குள்போராடியது.—(எ-று.) (௨௯௫)

வீறுகின்றபடைகள்பின்புவிட்டுளாரைமேவவே ... ... ...*
வீரவாகுநெஞ்சமேல்வியந்துபத்தின்மீதினா... ... *
லேறுகின்றகணைகடேவியரிமுகத்தனிரதம்ம ... ... ... ...*
லிலகுபாகன்முடியறுப்பவிருமைகொண்டதண்டமோன்*

றூறிலாதசிங்கனுந்தவுந்துடமார்பில்வந்துபட்... ... ... ...*
டொல்லைதூள்பொருந்தவேயொராயிரஞ்சரங்களைச் *
சூறையென்னவிட்டுவெய்யனேறும்தேரைநூறவே... ... ...*
தூயபூதர்கண்டுசென்றுசுற்றிஞர்களவுணனை ... ... *

(இ-புரை.) மேன்மைபொருந்திய அந்தப்பாணங்களிவ்வாறுபோர் செய்துபின்புவிட்டவர்களிடப்போய்ச் சேர்ந்தவளவில வீரவாகுதேவர் மனதினிடத்தில் அற்புதமடைந்து பதினாலுபாணங்களைவிச் சிங்கமுக ன்தேர்மேல் விளங்கிக்கொண்டிருக்கும் சாரதியினுடையதலையையறுத் தார் அதைக்கண்டு இடையூறில்லாத சிங்கமுகன்பெருமைகொண்டஒரு தண்டாயுதம் எடுத்தெறிந்தான் அதுவந்துபுகழுள்ள வீரவாகுதேவரு டைய மார்பிற்பட்டு விரைவாகத்தூளாய்விட்டது அதற்குமேல் வீரவா குதேவர் சூறைக்காற்றுப்போல ஆயிரம்பாணங்களைவி சிங்கமுகனேறி க்கொண்டிருக்கிற தேரையழித்தார் பரிசுத்தமுள்ளபூதர்கண்டு சென்று அவுணனாகிய சிங்கமுகனைச்சூழ்ந்துகொண்டார்கள்.—(எ-று.) (உ௬௬)

அந்தவேலைசீறிவெய்யன்வேறுதேரின்மேலறியே ... ... ...*
யாயிரந்தனுப்பிடித்தருஞ்சரம்பொழிந்துநேர் ... *
வந்தெதிர்ந்தபூதரைப்பிணம்படுத்தியெங்கணும் ... ... ...*
வாளியான்மறைப்பவீரன்வாளியாலறுத்தவன் ... ... *
சிந்துகோலிலக்கிறிற்பவாயிரத்திரட்டிகோ ... ... ... ...*
நீயன்விட்டுவள்ளறன்றிருத்தனுத்தனைத்துணித் ... ... *
துந்துவீரன்விற்பிடிக்குமுன்னர்நூறுகோடிகோ ... ...*
லூரத்தழுத்தவீறுசோரியுததிபோலெழுந்ததே ... *

(இ-புரை.) அப்போது சிங்கமுகன்கோபித்துவேறொருதேரிலே றிக்கொண்டு ஆயிரம்விற்களைக் கைகளிற்பிடித்து அருமையாகியபாண வருஷிப்பொழிந்து தனக்குநேரில்வந்தெதிர்ந்த பூதர்களைப்பிணமாக்கி யெவ்விடத்தையும் பாணங்களால்மறைத்தான் வீரவாகுதேவர்தம்முடை யபாணங்களால் அவன்விட்டபாணங்களையெல்லாம்அறுத்துவிலக்கிநின் றூர்அதற்குமேல் சிங்கமுகனிரண்டாயிரம் பாணங்களைவி வீரவாகுதே வர்சிறந்தவில்லினைத்துணித்து மேன்மைபொருந்திய வீரவாகுதேவர்ம றுபடியொருவில்லெடுக்குமுன் நூறுகோடிபாணம் அவர்மார்பில்அழு த்தினான் அவைகள்பட்டவுடன் உதிரமானதுநதிப்பிரவாகம்போலப்பெ ருக்கெடுத்தது.—(எ-று.) (உ௬எ)

பொழிப்புரை.

வெய்யசூர்தனுதுதம்பிவெம்பிவிட்டகோலெல்லாம்... ... ...*
வேலவன்றனுதுதம்பிவிற்சரத்தறுத்தவன் ... ... *
செய்யதேனையாயிரஞ்சரத்திஞலழிக்கவே ... ... ... ...*
சிங்கமாமுகத்தன்வேறுந்தரின்மீதிலேறிஞன் ... ... *
கையனுந்துகையிலுற்றபத்துநூறுவில்லையுங் ... ... ...*
கந்தனன்பனெண்ணிலாதகணைசொரிந்தழித்திட ... *
வையமுற்றவானமுற்றசாரதக்குழாங்களும் ... ... ... ...*
வானவக்குழாங்களுமகிழ்ந்தொலித்துநின்றவே... ... *

(இ-புரை.) கொடுமைச்செய்கையுள்ள சூரன்தம்பியானவன்கோபாவேசமுள்ளவனுய் விட்ட பாணங்களையெல்லாம் வேலாயுதக் கடவுளுடையதம்பியானவர் தம்முடைய வில்லில்வைத்துத்தொடுத்த பாணங்களால் அறுத்து அவன்செய்விதானசேனை ஆயிரம்பாணங்களால் அறுத்தவளவில் அந்தச்சிங்கமுகன் வேறுதேரிலேறிஞன் கந்தசுவாமிபத்தராகியவீரவாகுதேவர் அளவில்லாதகணைகளையேவி அவன் ஆயிரங்கைகளிலும்பிடித்த ஆயிரம்விற்களையும் அழித்தார் அதனைக்கண்டு இவ்வுலகத்திற்பொருந்திய பூதக்கூட்டங்களும் ஆகாயத்திலிருக்குந் தேவகூட்டங்களும் மகிழ்ச்சியடைந்து ஆரவாரித்துநின்றார்கள்.—(எ-று.) (உகஅ)

மற்றிவ்வேலைவெகுளிகொண்டுசிங்கமாமுகத்திஞேன் ... ...*
மாயமானபாசம்வீசமாசிலாதபூதரைக் ... ... ... *
கொற்றமுற்றவெண்மரைத்துலக்கமாமிலக்கரைக்... ... ...*
கோளுறும்புயத்தனைக்கொதித்துவந்துகட்டியே ... *
வெற்றிகொண்டுவிண்ணெழுந்துதண்ணெனப்படர்ந்துபால் *
வேலைதன்னிலுதையமான வெற்பிலிட்டிருந்ததா ... ...*
லுற்றதேவரீதுகண்டுவாடிஞர்களோடிஞ ... ... ... ... *
ருலவைசென்றுமுருகனேடுரைப்பவங்கெழுந்தனன் ...*

(இ-புரை.) வீரவாகுதேவர் தன்கைவிற்களையழித்தபோது சிங்கமுகன்கோபங்கொண்டு மாயாபாசம் எடுத்துவீசிஞன் அதுகொதித்துவந்து குற்றமில்லாதபூதர்களையும் வெற்றிபொருந்திய எட்டு வீரர்களையும்விளக்கமுள்ளலக்ஷம்வீரர்களையும்பராக்கிரமம்பொருந்தியபுயமுள்ள வீரவாகுதேவரையும் கட்டிசெயங்கொண்டு ஆகாயத்திலெழுந்துவிரைவிற் படர்ந்து பாற்கடலிலுண்டாகிய உதயகிரியி லிட்டிருந்தது

ஆகாயத்திலிருந்த தேவர்களிதனைக்கண்டு மனம்வாடியோடிப் போனார்கள் வாயுதேவன்போய்ச் சுப்பிரமணியசுவாமியுடன் சொன்னவளவில்சிங்காசனம்விட் டெழுந்தருளினார்.—(எ-று.) (உ௬௬)

மிக்கதேரின்மீதிமேலறிவீறுபூதராயிர... ... ... ... ...*
வெள்ளமும்பரந்துசூழவிண்ணுளாரர்புகழ்ந்திடத் ... *
தக்கபல்லியந்தழங்கமன்னுசின்னமூதிடத் ... ... ... ...*
தானவன்றனாதுமுன்புசண்முகத்தனணுகவே ... ... *
மைக்கருங்கடற்புரைந்தவவுணர்சேனைவெள்ளமும்... ... ...*
வள்ளலோடுவந்தபூதமன்னர்சேனைவெள்ளமு ... ... *
மக்கணம்படைக்கலஞ்சொரிந்துபோர்புரிந்தபோ ... ...*
தவுணர்மாயவீறுபூதரவருமாய்வதாயினார் ... ... *

(இ-பொ.) பெரிய இரதத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டு வீறுகின்ற ஆயிரம்வெள்ளம் பூதர்களும்பரவிச்சூழ்ந்துவரவும்தேவர்கள் புகழ்ச்சிசெய்யவும் தகுதியான பல வாத்தியங்களொலிக்கவும் இவைகளுடன்பொருந்திய சின்னமென்கிறவாத்தியமூதவும் அவுணனாகியசிங்கமுகனுக்கெதிரில் சண்முகக்கடவுள் சேர்ந்தருளினபோது கருமை நிறமுள்ளகடலையொத்த அவுணர்சேனைவெள்ளமும் சண்முகக்கடவுளுடன் வந்த பூதமன்னர்சேனைவெள்ளமும் அப்பொழுதே ஆயுதங்களையே விட்டுபோர்செய்தபோது அவுணர்களிலுஞ்சிலரிறந்தார்கள் பூதர்களிலுமவ்வாறேமடிந்தார்கள்.—(எ-று.) (உ௬எ)

[வேறு.]

இப்பான்மைகண்டவரிமாமுகத்த .. ... ... ... ... *
னிகல்கொண்டபூதர் குழுவைக் .. ... ... ... ...*
கைப்போதுகொண்டுமிகவாரியின்று ... ... ... .. *
கடிதுண்பனென்றுகருதி... ... ... ... ... ...*
மெய்ப்பானவண்டமுடிவைச்சிரங்கள் ... ... ... ... *
விறலோடுசென்றுதொடவே ... ... ... ... ...*
துப்போடுமங்கணொருமேனிகொண்டு ... ... ... *
சூரருஞ்சவீறுபுரிவான் ... ... ... ... ... ...*

(இ-பொ.) இத்தன்மையைக்கண்ட சிங்கமுகன் பகைகொண்டபூதர்கூட்டத்தை இப்போது மிகுதியாகக் கைகளால்வாரி விரைவாக வுண்

றுவேனென்றுகருதிப்பெருமைபொருந்திய அண்டமுகட்டைத்தன் தலைகள் அண்மையுடன் சென்றுதொடும்படி பலத்துடனொருபெரிய வடிவங்கொண்டுதேவர்கள் அஞ்சும்படியிதுசெய்கின்றான்.--(எ-று.)(உஎக)

கல்லாமனத்தனிருபத்துநூறு ... ... ... ... ... ...*
கரமுஞ்செலுத்திவிறல்சேர் ... ... ... ... ... *
சல்லாபமோடுருகமேவுவந்த ... ... ... ... ... ...*
தசநூறுவெள்ளவனிக... ... ... ... ... ... *
மெல்லாமடட்டினிடைசேரவாரி... ... ... ... ... ...*
யினிதாய்விழுங்கவெழிலசே... ... ... ... ... *
ரல்லார்களத்தனையாளநல்கு... ... ... ... ... ...*
மமலன்றனித்தருளினன்... ... ... ... ... ... *

(இ-புரை.) கல்லைப்போலிருக்கும்மனமுள்ள சிங்கமுகன்தன்னிரண்டாயிரங் கைகளையுஞ்செலுத்தி வெற்றிபொருந்தியசல்லாபத்துடன் சுப்பிரமணியர்படையில் மூழ்கிவந்த ஆயிரம்வெள்ளப் பூதச்சேனைகளையெல்லாம் வாரித் தன்வயிற்றிற்சேரும்படி யினிதாக உண்டான் அப்போது அழகுபொருந்திய கருமைநிறங்கொண்ட காளகண்டமுடைய பரமசிவன் நம்மையாட்கொள்ள அருளிச்செய்த நிர்மலரான சுப்பிரமணியசுவாமிதனிமையாய் நின்றருளினார்.—(எ-று.) (உஎஉ)

இவ்வேலைதன்னின்மிகுமொற்றரோடி ... ... ... ... ...*
யிறையானசூரனுடனே .. ... ... ... ... ... *
செவ்வேநிகழ்ந்தசொலவேமகிழ்ந்து ... ... ... ...*
சிகரத்தினுச்சியிசைபோ ... ... ... ... ... *
யவ்வேலைதம்பிசமர்கண்டிருப்ப .. ... ... ... ...*
வவனேவல்கொண்டுதிறல்சேர் ... ... ... ... *
மைவேலையென்னமிகுசேனையின்னு ... ... ... ... ...*
மருவிற்றுயுத்தகளமே... ... ... ... ... ... *

(இ-புரை.) இந்த இப்படியிருக்கும்போது மிகுந்த தூதர்கள்சென்று அவுணராசனுடனே நடந்தசெய்தியைச்செவ்வையாகச்சொன்னார்கள் அதைக்கேட்டு மகிழ்ச்சிகொண்டு கோபுரத்தின் உச்சியிலேறி அப்போது தன் தம்பிசெய்வதைப்பார்த்துக்கொண்டிருந்தான் அவன்

உத்தாரம் பெற்றுக்கொண்டு பின்னுங் கருங்கடல்போல் மிகுந்தசேனை போர்க்களத்தில்வந்தது.—(எ-று.) (உஎ௩)

சடானசிங்கனெதிராகவீறு... ... ... ... ... ... ...*
மெழிலாசவேலனனுகக்... ... ... ... ... *
கூடாநிறைந்தவவுணப்பதாதி ... ... ... ... ... ...*
குகன்முன்பணைந்துபடைதாய் ... ... ... ... *
வாடாவிறற்கொண்முருகேசன்வில்லின் ... ... ... ..*
வலியானநாணிமிசையால் ... ... ... ... ... *
வீடாவழிந்தததுகண்டுதீயன் ... ... ... ... ... ...*
விறலோடுவந்துமொழிவான் ... .. ... ... ... *

(இ-புரை.) பலம்பொருந்தினவனான சிங்கமுகன் எதிரே அழகு மிகுந்த சுப்பிரமணியசுவாமி பெருந்தருளியபோ... நிறைந்த அவு ணச்சேனையோர் சுப்பிரமணியசுவாமிக்கெதிரில் ... ஆயுதங்களை விட்டெதிர்ந்தார்கள் அவ்வாறு எதிர்ந்தவர்கள் சுவாமி... வலிமைமிகுந்த வில்லிற் கட்டியிருக்கும்வன்மையுள்ள நாணினுடைய ஓசையால் ... இறந்தார்கள் அது கண்டு சிங்கமுகன் வீரத்துடன்வந்துசொல்லுகிறான்.—(எ-று.)(உஎச)

பொன்னுடரெங்கள்பகையாதல்கண்டு ... ... ... ... *
புலவோனாயின்னல்புரிவோ ... ... ... ... ...*
மன்னாரிலல்லபகையல்லவென்கொ ... ... ... ... *
லமர்செய்யவந்தவகையென் ... ... ... ... ...*
றென்னினிசைப்பவெளியானைமொய்ப்ப ... ... .. *
ருறுகண்குயிற்றிலவனைப் ... ... ... ... ... ...*
புன்னுளுறாதியரசாள்வமன்ன... .. ... ... ... ... *
பரிசாலடைந்தனமரோ ... ... ... ... ... ...*

(இ-புரை.) பொன்னுலகத்திலிருக்குந் தேவர்கள் எங்களுக்குப்ப கைவரா யிருத்தலைக்கண்டு அந்தத்தேவர்களுக்குத் துன்பஞ் செய்கின் றோம் நீ அவர்களிலொருவனல்லை பகைவனுமல்லை அப்படியிருக்க நீ போர்செய்யவந்தவகை யென்னென்று அந்தப் பகைவன் சொல்ல ... ... ... துன்பஞ்செய்வார்களாகில் அவர்களைநாம் அழித்து ... தானிலும் நீதிசெய்வோம் அத்தன்மையால் போர்செய்யவந்தோம்.—(எ-று.)

பொழிப்புரை.

என்றீதுரைப்பவலியாளனீபு ... ... ... ... ... ...*
மெளியார்களெங்களினமு ... ... ... ... ... *
நன்றீதுவல்லையமர்செய்தியென்ன ... ... ... ... ...*
நலமார்குமாரனொருகோன் ... ... ... ... ... *
முன்றீயவன்றன்மருமத்தழுந்த... ... ... ... ... ...*
முதுகிற்பறிந்ததனால .. ... ... ... ... ... *
வன்றீநிகர்த்தவொடியோனுடம்பின் ... ... ... ... ...*
மலிசோரிவந்ததவணே... .. ... ... ... ... *

(இ-புரை.) எளியவர்களைக்காப்பது எங்கள்கடமையென்று சுப்பிரமணிய சுவாமி சொன்னவளவில் நீயேபராக்கிரமசாலி எங்களினமோபல ஹீனர்களிது நல்லவார்த்தையே அது நிற்க நீபலசாலியானதால்போர் செய் சும்மாவிருக்க வேண்டுவ தென்னென்று சிங்கமுகன் சொல்ல நன்மைபொருந்திய சுப்பிரமணியசுவாமியானவர் அவன்மார்பில் அழுந்தும்படியொரு பாணமேவினார் அது செல்று பட்டு முதுகின்வழியேபறிந்துபோயிற்று அவ்வாறுபறிந்துபோயினதால வலியபதீயையொத்தசிங்கமுகனுடம்பில்மிகுந்த உதிரமானது அந்தவழியிற் பெருக்கெடுத்து ஒழுகிற்று.—(எ-று.) (உஎசு)

உள்ளுற்றபூதரதுபோதில்வேல... ... ... ... ... ...*
னொருகோறுளைந்தவழியான்... ... ... ... ... *
மெள்ளத்தலத்திணிழியச்சினந்து... ... ... ... ... ...*
வெளியைக்கரங்கொடடையாக்... ... ... ... ... *
கள்ளுற்றதொங்கன்முருகேசன்மீது ... ... ... ... ...*
கதையொன்றுதைப்பவமலன்... ... ... ... ... *
வள்ளுற்றநாலுகணைசிந்தவேகி ... ... ... ... ... ...*
வருதண்டைநூறியவைபோய்... ... ... ... ... *

(இ-புரை.) சிங்கமுகன் வயிற்றுக்குள் பொருந்திய பூதர்கள் அப்போதில் சுப்பிரமணியசுவாமி யேவியபாணம்பட்டுருவித் துளைத்தவழியால் பூமியினிடத்தில்மெள்ளென இழிந்தார்கள் அதனைச் சிங்கமுகன் கண்டுகோபித்துத் தன் கையினால் அந்தவெளியை யடைத்துக்கொண்டு தேன்பொருந்திய பூமாலையணிந்த சுப்பிரமணியசுவாமிமேல் ஒருகதாயுதத்தையெறிந்தான் சுவாமிபார்த்துக் கூர்மைபொருந்திய நாலுபாண

மேவினார் அவைபோய்ச்சிங்கமுகனெறியவருகில் நகதாயுதத்தைப்பொ டியாக்கினதுமல்லாமல் அவைகள்போய்.—(எ-று.) (உஎஎ)

மங்காதசிங்கனுதல்சென்றெழுப்ப ... ... ... ... ...*
மயலோடுவெய்யனுறவே ... ... ... ... ... *
சிங்காரமேவுமவன்முன்படைத்த... ... ... ... ...*
திறல்கொண்டபாணிநெகிழ ... ... ... ... ... *
வெங்காயமிஞ்சியுறுகின்றபூதர் ... ... ... ... ... ...*
விறல்வாளிபட்டவெளியா ... ... ... ... ... *
லங்காயவேலைகடிதேயிறங்கி ... ... ... ... ... ...*
யமலன்றன்முன்பணுகினார் ... ... ... ... ... *

(இ-புரை.) யாவராலுமழியாத சிங்கமுகனதுநெற்றியில்தைத்து ருவினவளவில் அந்தக்கொடியவன் சற்றுநேரம்மூர்ச்சை யடைந்திருந் தான் அப்படியிருக்கும்போது சிங்காரமுள்ள அவன்முன்னம் அடைத் தபலங்கொண்ட கைநெகிழ்ந்தபோது அவன்சரீரத்துக்குள் வராமலிரு ந்த பூதர்கள்வெற்றிபொருந்திய சுப்பிரமணியக்கடவுள் பாணம்பட்ட வெளியினால் அப்போதுடனேயிறங்கிச் சுவாமிக்கெதிரில்வந்தார்கள்.()

அப்போதுதன்னினுதயச்சிலம்பி ... ... ... ... ...*
லருள்கொண்டவேலனொருகோ ... ... ... ... *
றப்போடுகைப்பவதுசென்றுவீரர் ... ... ... ... ...*
தொகையைத்தனுதுமிசையே... ... ... ... ... *
மெய்ப்போடுகொண்டுகடிதேதிரும்பி... ... ... ... ...*
விறல்வேலன்முன்புவிடவே ... ... ... ... ... *
மைப்பாவுகண்டன்மகனங்கவர்க்கு ... ... ... ... ...*
மகிழ்வாகவோதினனரோ...... ... ... ... ... *

(இ-புரை.) பூதர்கள்வந்தபோது அருள்நிறைந்த சுப்பிரமணியக் கடவுள் உதயகிரியினிடத்தில ஒருபாணம்பலத்துடன்செலுத்தினார் அந் தபாணமானதுபோய் வீரர்கள்தொகையை மெய்ப்புடன்தன்மேல் தா ங்கிக்கொண்டு விரைவாகத்திரும்பி வெற்றியுள்ள சுப்பிரமணியக்கடவு ளிடத்தில் விட்டவளவில் கருமைநிறம்பரந்த கண்டமுள்ள பரமசிவனு டைய புத்திரராகிய சுவாமியானவர் அவர்களுக்கு மகிழ்ச்சியுண்டாகும் படி இனியவார்த்தை சொல்லியருளினார்.—(எ-று.) (உஎகூ)

பொழிப்புரை.

அக்காலைதன்னிலிதுகண்டுசீறி ... ... ... .. ... ...*
யரிமாமுகத்தனனிக ... ... ... .. ... ... *
மிக்காரிலாதகுமரேசன்முன்பு ... ... .. ... ... ...*
விரைவோடுவந்துவளைய .. ... ... ... .. ... *
நக்கானளப்பில்கணைமாரிதூவி ... .. ... ... ... ...*
நலியத்துலைப்பவிடரிற் .. ... ... ... ... ... *
புக்காண்மையின்றிபுறுகின்றவெய்ய ... ... ... .. ...*
னிதுகண்டமூன்றுபுரிவான் ... ... ... ... ... *

(இ-புரை.) பூதர்களிவ்வாறுவெளியில்வந்தபோது இதனைக்கண்டு சிங்கமுகன்சேனையோர்சிறித்தமக்குமேலானவொருவருமில்லாத சுப்பிரமணியசுவாமியின் முன்புவந்து வளைந்துகொண்டவளவில சுப்பிரமணியசுவாமிகண்டு நகைத்து அளவில்லாதபாணங்களேவி அந்த அவுணர்களிறக்கும்படி துலைக்கும்போது இடருள் அழுந்தி வீரத்தனமில்லாமலிருக்கின்ற சிங்கமுகன்கண்டுகோபித்து இதுசெய்கின்றான்.—(எ-று.)

நூறானபத்துநெடுவிற்பிடித்து ... ... ... ... ... *
நுதிவாளிசிந்திமுருகன் ... ... ... .. ... ...*
சீறாவிடுத்தகணையைத்தடிந்து .. ... ... ... ... ... *
திறல்கொண்டசிங்கமுகவன் ... ... ... ... ...*
மாறாகவேலனிரதத்திலுற்ற ... .. ... ... ... ... *
வலவன்றன்மார்பினிடையே ... ... ... ... ..*
வீறாயிரங்கொள்கணைசிந்தநொந்து .. ... ... ... ... *
மெலிவாயிருந்தபொழுதின் ... ... ... ... ...*

(இ-புரை.) ஆயிரமாகியபெரியவில்லுகளைப் பிடித்துக்கொண்டு கூர்மையுள்ளபாணங்களேவி சுப்பிரமணியசுவாமியானவரேவியபாணங்களைக்கண்டித்துப்பலங்கொண்ட சிங்கமுகன் சுவாமிவிட்டபாணங்களுக்குமாறாக அவர்தேரிலிருக்கிற சாரதிமார்பினிடத்திற் பெருமைகொண்ட ஆயிரம்பாணங்களேவினான் அவைகள்வந்துபட்டதினால சாரதியானவன்வருந்திச்சோபமாயிருக்கும்போது.—(எ-று.) (உஅக)

ஐயன்சினந்துகணைநூறுசிந்தி ... ... ... ... ... ...
யரிமாமுகங்கொளவுணன் ... ... ... ... ...

வையங்கெடுப்பநிலநின்றளப்பில்... ... ... ... ... ...*
வடிவாளிவெய்யன்விடவே ... ... ... ... ... *
கையன்றனுக்கடமையாயிரங்கொள் ... ... ... ... ...*
கணையாலொடிப்பவவுணன் ... ... ... ... ... *
மெய்யன்றன்மீதிலொருசூலமுந்த ... ... ... ... ...*
விறல்வேலனீதுபுரிவான் ... ... ... ... ... *

(இ-பொ.) சுப்பிரமணியரானவர்கோபித்து நூறுபாணங்களைவிச்சிங்கமுகனுகிய அவுணனுடையதேரினையழித்தார்பின்பு அவன் பூமியில்நின்றுகொண்டு அளவில்லாத வடித்தபாணங்களைப்போர் செய்ய சுவாமியானவர் அதனைப்பார்த்து ஆயிரம்பாணங்களைவிச் சிங்கமுகன் விற்களையொடித்தவளவில் அவன்சுவாமிமேல் ஒரு சூலமேவினன் அதுவரும்போது வென்றியுள்ள சுப்பிரமணியசுவாமியானவரின்னதுசெய்கின்றார்

ஈரேழுதானகணைசிந்திமுந்தி ... ... ... ... ... ... *
யெதிர்சூலநூறியபின்கா ... ... ... ... ... ...*
லோராயிரத்தையவனேர்விடுப்ப ... ... ... ... ... *
வுரமேவுசிங்கமுகவன் ... ... ... ... ... ..*
சீரானகையிலொருதண்டுகொண்டு .. ... ... ... ... *
சிதறப்புடைத்துவரவுப் ... ... ... ... ... ...*
போரார்காத்தையெழுவாளிகொண்டு ... ... ... ... *
புனிதன்றடிந்தருளினன் ... ... ... .. ... ...*

(இ-பொ.) பதினான்குபாணங்களைவி எதிரில்வருகின்ற சூலத்தையழித்துப்பின்னும் ஆயிரப்பாணங்களை அவனெதிரில்விடுத்தவளவில்பலம்பொருந்திய அந்தச்சிங்கமுகன் சீருள்ளதான தன்கையில் ஒருதண்டமெடுத்துக்கொண்டு சுவாமிவிட்ட பாணங்களெல்லாஞ் சிதறிப்போம்படி தட்டிக்கொண்டுவரும்போது நிற்மலமூர்த்தியாகிய சுப்பிரமணிய சுவாமியானவர் ஏழுபாணங்களினால் தண்டமெடுத்துக்கொண்டுபோர்செய்யவருகின்ற அந்தக்கையினை அறுத்துத்தள்ளினர்.—(எ-று.) (உ௯௬)

மெய்ப்பாணிபின்புமெழுவெய்யன்மையம் ... ... ... *
விழுதண்டெடுத்துவிடலுந் ... ... ... ... ...*
துப்பாயிரங்கொள்கணைகொண்டுதண்டு... ... ... ... *
துண்செய்துவேலனுறவே... ... ... ... ... ...*

பொழிப்புரை.

கைப்பாசமுந்தவிறைபத்துநூறு ... ... ... ... ... *
கணைகொண்டழிக்கவதனுன்... ... ... ... ... ...*
மெய்ப்பாவியாறுமுகனைப்பிடிக்க ... ... ... ... ... *
வலியோடுவந்தனனரோ ... ... ... ... ... ...*

(இ-புரை.) அற்றுந்ததன்கைமறுபடி முளைக்கவே சிங்கமுகன்பூமி யில்விழுந்துகிடந்த தண்டாயுதத்தையெடுத்துவிட்டான் சுப்பிரமணிய சுவாமியானவர் பலமுள்ள ஆயிரம்பாணங்களினுல அவன்விட்டதண்டா யுதத்தைத் துண்டமாக்கிநிற்றபோது சிங்கமுகன்கைப்பாசத்தையேவி னுன் அந்தப்பாசத்தையும் ஆயிரம்பாணங்களால் அறுத்துத் தள்ளினுர் அதனைக்கண்டுகறுத்தபாவியானவன் சுப்பிரமணிய சுவாமியைப்பிடிக்க வன்மையுடன்வந்தான்.—(எ-று.) (உஅ௬௪)

ஆறுமுகத்தனதுகண்டுவந்த .. .. ... ... ... ... *
வவுணன்கரஞ்சிரமெலா ... ... ... ... ... ...*
மூறுகிவீழவிருபத்துநூறொ... ... ... ... ... ... *
டொருபத்துநூறுகணையைச் ... ... ... ... ...*
சீறுவிடுப்பவவைபின்பெழுந்து ... ... ... ... ... *
செறிவாகவெய்யன்வெகுளா ... ... ... ... ...*
மாறுகவெண்ணில்வரையைப்பிடுங்கி .. ... ... ... ... *
வலியோடுவீசுதலுமே ... ... ... ... ... ...*

(இ-புரை.) சுவாமியானவர் அவன்வருவதைக்கண்டு அவுணனுடை ய கைகள் தலைகள் யாவும் அறுந்துவிழும்படி சீறி மூவாயிரம்பாணங் களேவினுர் பின்னும் அவைகளெல்லாம் உண்டாகிமுன்போலவேயிருந் தன அதற்குமேல சிங்கமுகன்கோபித்து அளவில்லாத மலைகளைப்பிடுங் கி மாறுவலியுடனெறிந்தான்.—(எ-று.) (உஅ௬ரு)

வரையற்றுவந்தவரையற்றுவீழ ... ... ... ... ... ...*
வலியற்றிடாதமுருகன்... ... ... ... ... ... *
புரையற்றவாளிமிகவேபொழிந்து ... ... ... ... ...*
புகழ்மேவுகின்றவவுண... ... ... ... ... ... *
னிரையுற்றசென்னியுரமுற்றகைக ... ... ... ... ...*
ணிலமுற்றிடத்தடியவே... ... ... ... ... ... *
விரைவுற்றுமண்ணில்விழுமுன்புபின்பு ... ... ... ...*
விறலோடெழுந்தவவையே ... ... ... ... ...*

(இ-புரை.) அளவற்றுவந்தமலைகள் அற்றுவிழும்படி பலம் அற்றிடாத சுப்பிரமணியக்கடவுள் குற்றமற்றபாணங்கள் வேகமாகவிட்டுப் புகழ்தங்கிய சிங்கமுகனுடைய வரிசையாகப் பொருந்திய ஆயிரந் தலைகளும் பலம்பொருந்திய கைகளும் பூமியில்விழும்படி அறுத்தவளவில் அவைகள்விரைவாகமண்ணில் விழுமுன் பின்பு வேறேகைகளுந்தலைகளும் பலத்துடனெழுந்தன.—(எ-று.) (உ௯௬)

சிங்காரமேவுகரமுஞ்சிரங்கள் ... ... ... ... ... ...*
சிதறித்திரும்பமுளையா... ... ... ... ... ... *
துங்காரமோதவிருபாணியோடு... ... ... ... ... ...*
மொருசென்னியோடுமெதிர்வந் ... ... ... ... *
திங்காரொனக்குநிகரொன்றொர்குன்ற ... ... ... ... ...*
மிகலிப்பறித்துவிடவே... ... ... ... .. ... *
கங்காளன்மைந்தனொருவாளிகொண்டு... .. ... *
கடிதேதுணித்தருளினான் ... ... ... ... ... *

(இ-புரை.) சிங்காரம்பொருந்திய கைகளுந் தலைகளும் அறுந்து மறுபடிமுளையாதவண்ணம் உங்கார ஓசை செய்தருளினார் அவைகள் முளையாமல் அந்தமட்டில்நிற்கவே அதற்குமேல்சிங்கமு[illegible] இரண்டுகைகளுடனும் ஒரு சிரசுடனுஞ்சுவாமிகளிடத்தில்வந்து இங்[illegible] சமமானவர்கள் யாரொன்று பகைத்து ஒ[illegible] பறித்து [illegible] பரமசிவனுடையபுத்திரர் ஒருபாணம்விட்டு [illegible] பழித்தருளினார்.—(எ-று.) (உ௯எ)

மால்விட்டவும்பர்சிறைவிட்டிடாது... ... ... ... ... *
மறமுற்றசூரனிளையோன்... ... ... ... ... ...*
வேல்விட்டுவென்றிகொளுமாறுமன்றி ... ... ... ... *
விடுகின்றதொன்றைவிறல்சேர் ... ... ... ... ...*
கோல்விட்டழிக்குமிதுவேயலாது ... ... ... ... ... *
குமராபயின்றிலைகொலென் ... ... ... ... ...*
மூலத்தைபொத்தவொருதண்டுதன்னை ... ... ... ... *
யட்டேலோடுவிட்டபொழுதின் ... ... ... ... ...*

(இ-புரை.) மயக்கம் நீங்கி யிருப்பவர்களாகிய தேவர்சிறையைவிடாமல் வீரத்தையேகொண்டிருக்கும் சூரனுக் கிளையவனாகிய சிங்கமுக

பொழிப்புரை.

ன் சுவாமியைநோக்கிகுமரனே நீ வேலாயுதத்தைவிட்டுவெற்றிகொள்ளு முறைமையும் இதுவுமன்றி நான்விடுகின்ற ஒரு ஆயுதத்தை வலிபொருந்திய பாணம்விட்டழிக்கு முறைமையுமேயன்றிவேறொன்றுங்கற்றதில்லேயோவென்றுசொல்லி விஷத்தையொத்த ஒருதண்டாயுதத்தைப் பலத்துடன்விட்டபோது.—(எ-று.) (உ௮௮)

வீறுனதண்டுவருசெய்கைகண்டு ... ... ... ... ... *
விறல்கொண்டகந்தன்வெகுளா... ... ... ... ...*
மாறுனவஞ்சனுயிருண்டுவல்லே ... ... ... ... ... ...*
வருகென்றுகையின்மருவு ... ... ... ... ... *
மூறுனதற்றகுலிசந்தொடுப்ப ... ... ... ... ... ...*
வுரமேறிசென்றுகதையை ... ... ... ... ... *
நீறுகநூறியரிமாமுகத்த ... ... ... ... ... ... ...*
னெடுமார்பினுற்றததுவே ... ... ... ... ... *

(இ-பொ.) பெரியதண்டாயுதம் வருவதைக்கண்டு வீரம்பொருந்திய சுப்பிரமணியசுவாமியானவர் கோபித்துப்பகைவளர்கியஇந்தவஞ்சகனுடைய உயிரையுண்டு சீக்கிரத்திலவாவென்றுதம்முடைய ஒருதிருக்கரத்திற்பொருந்திய பழுதில்லாத வச்சிராயுதத்தையேவினர் அதுபலத்துடன்சென்று அத்தாயுதத்தைப்பொடியாகும்படிஅழித்துச்சிங்கமுகன்பெரியமார்பிற்பட்டது.—(எ-று.) (உ௮௯)

மார்பிற்பொருந்திமுதுகிற்பறிந்து ... ... ... ... ...*
வலிம்பாடுசெல்லவவுணன் ... ... ... ... ... *
சோரிப்பெருக்கினுடனேவிழுந்து ... ... ... ... ...*
துயரத்திரேடுமடியக்... ... ... ... ... ... *
கூர்பெற்றிலங்குகுலிசம்படர்ந்து ... ... ... ... ...*
குளிர்வானதிக்குண்முழுகிக் ... ... ... ... ... *
கார்பெற்றகண்டனருண்மைந்தனுந்து .. ... ... ... ...*
கரமீதுவந்ததிறையின்... ... ... ... ... ... *

(இ-பொ.) அந்தவச்சிராயுதம் சிங்கமுகன்மார்பிற்பொருந்திமுதுகின்வழியிற்பறிந்துவலியுடன்சென்றவளவில் அந்தச்சிங்கமுகன் உதிரப்பெருக்குடன் விழுந்து துயரங்கொண்டுமடிந்தான் கூர்பெற்றுவிள

ங்குகின்ற அந்தவச்சிராயுதமானது சென்று குளிர்ச்சிபொருந்திய ஆகாசகெங்கையில்முழுகி ஒருக்ஷணப்பொழுதில் காளகண்ட மூர்த்தியாகிய பரமசிவனருளிய புத்திரருடைய மேன்மைபொருந்திய திருக்கரத்தில் வந்திருந்தது.—(எ-று.) (௨௯௰)

நாகத்திலும்பர்மலர்மாரிதூவி ... ... ... ... ... ...*
நனிபாடியாடிமகிழ ... ... ... ... ... ... *
வாகைக்குமாரனிளையோர்கடாமு... ... ... ... ... ...*
மலிகின்றபூதர்குழுவு ... ... ... ... ... ... *
மோகைக்குண்மூழ்கியயலேபொருந்த ... ... ... ...*
வுயர்பாசறைக்கணுகினு... ... ... ... ... ... *
ஞகுற்றவேலையிதுகண்டவொற்ற... ... ... ... ... ...*
ரசுரேசனோடிதறைவார்... ... ... ... ... ... *

(இ-புனா.) ஆகாயத்திலிருந்து தேவர்கள் புட்பவருடம்பொழிந்து மிகுதியாகப் பாடி யாடி மகிழும்படி வெற்றிபெற்ற சுப்பிரமணியக்கடவுளானவர் தம்பிமார்களும் நெருங்கியிருக்கிற பூதர்கூட்டமும் சந்தோஷக்கடலுள்மூழ்கிப் பக்கத்திலசூழ்ந்துவரும்படி சென்றுமேன்மைபொருந்திய பாசறையிற்சேர்ந்தார் இவ்வாறுனம்பாது இதைக்கண்ட தூதர்கள்போய்ச் சூரனுடனிந்தவார்த்தையைச் சொலலுகின்றார்கள்.—(எ-று.) (௨௯௧)

உன்தம்பியானவரிமாமுகத்த ... ... ... ... ... ...*
னுயிர்போய்மடிந்தனனெனுக் ... ... ... ... *
குன்றம்புரைந்தசிகரத்திருந்த ... ... ... ... ... ...*
கொடியோனிலத்தின்மிசையே ... ... ... ... *
துன்றும்புனற்கொண்முகில்போல்விழுந்து... ... ... ...*
துயரக்கடற்குண்முழுகி... ... ... ... ... ... *
மின்றங்கெயிற்றுவிறல்வாய்திறந்து ... ... ... ... ...*
மிகவேபுலம்பியழுதான் ... ... ... ... ... *

(இ-புனா.) உன்தம்பியாகிய சிங்கமுகாசுரன் உயிர்போயிறந்தானென்றுசொன்னவளவில் மலையையொத்தகோபுரத்திலிருந்த சூரனானவன் பொருந்திய நீருண்ணுகின்றமேகம்போல விழுந்து துக்கசாகரத்திலாழ்ந்து ஒளிபொருந்திய பற்களுள்ளதாய் வன்மைபெற்றவாயைத்திறந்து மிகுதியாகப்புலம்பியழுதான்.—(எ-று.) (௨௯௨)



சிங்கமுகன் யுத்த முற்றியது.





உ

வேலுமயிலுந்துணை.

# எழாநாள் சூரபதுமன் யுத்தம்.



[வேறு.]

ஓங்குதுயர்நீங்கியொருகோடியெனுமாயிரமு ... ... ...*
　　றூற்றர்களையொல்லைவிளியாத் ... ... ... ... *
தீங்ககலுமாயிரவோரெட்டளவையண்டமுறு ... ... ...*
　　சேனைகளனைத்தும்வரவே ... ... ... ... ... *
யாங்குறவணைந்துபுகல்வீரெனவிரைந்தவர்க... ... ... ...*
　　ளண்டமுளவண்டியகறைய ... ... ... ... ... *
வாங்கருமிருந்திறல்கொடானவர்கடானைபல... ... ... ...*
　　வந்தவுயரண்டவழியால்... ... ... ... ... ... *

(இ-புரை.) சூரனானவன்மிகுந்த துயரம்நீங்கி ஆயிரங்கோடியென்றுபொருந்திய தூதர்களைவிரைவில் அழைத்து தீமைநீங்கிய ஆயிரத்தெட்டென்கிற தொகையுள்ள அண்டங்களிலிருக்கிற சேனைகளெல்லாம் வரும்படி அங்கேபொருந்தச் சேர்ந்துசொல்லுங்களென்று உத்தரவு கொடுத்தான் அந்த உத்தரவுபெற்றுக்கொண்ட தூதர்கள்விரைந்து சென்று அண்டங்களிற்சேர்ந்து சொன்னவளவில் நீக்குதற்கரிய பலங்கொண்ட அவுணச்சேனைகள்பலவாக உயர்ந்த அண்டத்தின்வழியால்வந்தன.

வேதனெடுமாதவனுறும்பதிநிறைந்தன ... ... ... ... *
　　விசும்பிடைநிறைந்தனவெழிற் ... ... ... ... ...*
பூதலநிறைந்தனபெருந்திசைநிறைந்தன... ... ... ... *
　　புகழ்க்கடனிறைந்தனநெடும் ... ... ... ... ...*
பாதலநிறைந்தனவியாவையுநிறைந்தன ... ... ... ... *
　　பரந்துவருதூசியணிக ... ... ... ... ...*
மாதரவினூறுபெறுகோடியுறியோசனையிவ் ... ... ... *
　　வண்டமுநிறைந்தவிறையின் ... ... ... ... ...*

(இ-புரை.) அண்டங்களிலிருந்து பரந்துவருகின்ற தூசிப்படையானது பிரமதேவனுலகத்திலும் விஷ்ணுவினுடையஉலகத்திலும் அழ

குள்ள பூலோகத்திலும் நிறைந்தன பெருந்திசைகளில் நிறைந்தன புகழ் பெற்றகடல்களில் நிறைந்தன அவ்வாறு நொடிப்பொழுதில் எல்லா இடங்களிலும் நிறைந்தன இதுவுமன்றி நூறுகோடியோசனை தூரமுள்ள இவ்வண்டத்திலும் நிறைந்தன.—(எ-று.) (உ௧௪)

இன்னபடி தானவர்கடானையுறவொற்றர்க... ... ... ... *
ளிருந்திறல்பொருந்துமவுணன் ... ... ... ...*
பொன்னடிபணிந்திவையுரைத்திடவிருப்பொடு ... ... *
பொருக்கெனவிருக்கையிடைபோய் ... ... ... ...*
மன்னுபுனலாடியினிதாமடிசிலுண்டுதிரு... ... ... ... *
நீறுநுதல்வல்லையிலணிந் ... ... ... ... ... ...*
தின்னலகலுங்களபமின்னுகலனுனவை ... ... ... ... *
யிதம்பெறவணிந்தனனரோ ... .. ... ... ...*

(இ-புரை.) இந்தப்படி அவுணச்சேனைவந்தவளவில் தூதர்கள் மிகுந்த பராக்கிரமம்பொருந்திய சூரனுடையபொலிவுள்ள பாதத்திற்பணிந்து இந்தச்செய்திகளைச்சொன்னார்கள்சூரன்அதைக்கேட்டுவிருப்பத்துடன் விரைவாகத்தன்னுடைய இருப்பிடத்திற்சென்று எப்போதும் நிலைபெற்றிருப்பதாகிய நீரிலஸ்நானஞ்செய்து உடனேவிபூதியுந் தரித்துக்கொண்டு இன்பமான களபச்சாந்தும் பிரகாசியாநின்ற ஆபரணங்களும் இன்பம்பெற அணிந்தான்.—(எ-று.) (உ௧௫)

ஆளிகளிலக்கெழுபதாயிரமரும்பரிக ... ... ... ... *
ளன்னதொகையன்னதொகையே ... ... ... ...*
கூளிகளிழுத்திடுமிழுக்கிலிரதத்தின்மிசை... ... ... ... *
கொற்றமொடணைந்தவுணர்கோன் ... ... ... ...*
வாளிலகெயிற்றவுணர்சேனைபுடைசூழ்தர... ... ... ... *
மறந்தருபறந்தலைதனிற் ... ... ... ... ... ...*
காளியொடுவாதுநடமாடிமகளேடைமர் ... ... ... ... *
கலந்திடவணைந்தபொழுதின் ... ... ... ... ...*

(இ-புரை.) விளங்குகின்ற எழுபதினாயிரஞ் சிங்கங்களும் எழுபதினாயிரம் அருங்குதிரைகளும் எழுபதினாயிரம் பூதர்களும் இழுக்கும்படியான குற்றமில்லாத தேர்மேல் சூரன்வெற்றியுடன் ஏறிக்கொண்டு வாள்போலப்பிரகாசிக்கும் பற்களையுடைய அவுணர்சேனைபுறத்திற்சூழ்

பொழிப்புரை.

ந்துவரும்படிசென்று வீரம்பொருந்திய யுத்தகளத்தில் காளியுடன்வா த்துநடமாடிய பரமசிவனுடையபுத்திரராகிய சுப்பிரமணியருடன்போர் செய்வதற்குச்சேர்ந்தபொழுதில்.—(எ-று.) (உகூசு)

செங்கமலவேதனுடனுந் துமரிகந்தனது... ... ... ... *
செம்பதமிறைஞ்சியவுண... ... ... ... ... ... ...*
னிங்கமர்புரிந்திடவணைந்தனனெனக்குக... ... ... ... *
னெழுந்தனில்சாரதிவிடும்... ... ... ... ... ...*
பொங்கணிகொடேரணுகிவீரரொடுசாரதர் ... ... ... *
புகழ்ந்தயல்பொருந்திவரவே ... ... ... ... ...*
தங்கவுணர்சேனையெதிர்செல்லமிகுபூதரொடு ... ... ... *
தானவர்மலைந்துபொருதார் ... ... ... ... ...*

(இ-புரை.) பிரமதேவனும் மேன்மையுள்ள விஷ்ணுவும்சுப்பிரம ணியசுவாமியினுடையசெய்யதிருவடிகளைவணங்கிச் சூரனிப்போது யுத்தஞ்செய்ய வந்தானென்று விண்ணப்பஞ்செய்தார்கள் சுவாமியானவர் உடனேயெழுந்து வாயுதேவனாகிய சாரதிசெலுத்துவதாய் மிகுந்த அல ங்காரம்பொருந்திய இரதத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டு லக்ஷத் தொன்பது வீரர்களும் பூதர்களும்புகழ்ந்துகொண்டு அருகில்சூழ்ந்து வரும்படி எதிர்த்துவந்திருக்கிற அவுணச்சேனைக்கெதிரிற்சென்ற பொ ழுது மிகுந்தபூதர்களும் அவுணர்களும்நேர்ந்துபோர்செய்தார்கள்.()

வீறிவருதானவர்களாலிலகுபூதர்கள் ... ... ... ... ...*
விளிந்திடவிலக்கமுடனெட் ... ... ... ... ... *
டேறுதனிவீரர்களடைந்துடையமொய்ம்புறு ... ... ...*
மிரும்புயனெதிர்ந்துகணைதூய்ச் ... ... ... ... *
சிறியவரிற்சிலைநூறியபழியாவது... ... ... ... ...*
தெரிந்துமுருகன்புடைவரக்... ... ... ... ... *
கூறியிடுமிந்தவகைகண்டருளிவெஞ்சிலை ... ... ...*
குனித்தனனநித்தமணையான் ... ... ... ... ... *

(இ-புரை.) வீறிவருகின்ற அவுணர்களால் பிரகாசிக்கும் பூதர்கள் அநேகரிறந்தார்கள் அதைக்கண்டு லக்ஷத்தெட்டு வீரர்களும் சென்று போர்செய்து தோற்றார்கள் அவர்களுந்தோற்றோடினதைக்கண்டு விள க்கமுற்றபராக்கிரமமுள்ள வீரவாகுதேவர் அவுணர்களுக்கெதிரிற்போ

ய்ச்சிறிதவர்களிற்சிலபேரைக்கொன்றார் அவ்வாறுகொல்லுவதினாலவுணப்படையழியாமலிருப்பதை வீரவாகுதேவர் அறிந்து சுப்பிரமணியரிடத்தில்வந்து விண்ணப்பஞ்செய்தார் நித்தராகிய சுப்பிரமணியசுவாமியானவர் வீரவாகுதேவர் சொன்னதை யறிந்து வெவ்விதானவில்லை வளைத்தார்.—(எ-று.) (உ௯அ)

மன்னுதனுவிற்கணையளப்பிலதொடுத்தருளி... ... ... ...*
வானமொடுவையகமுமாய்த் ... ... ... ... ... *
துன்னுமவுணப்படைபிணக்குவைபடும்படி... ... ... ...*
துலங்குமுருகன்புரியவே ... ... ... ... ... *
யன்னசெயல்கண்டுமிகவண்டகடகத்தின்மிசை ... ... ...*
யப்புறமிருந்தவனிக ... ... ... ... ... ... *
முன்னெனவணைந்துகுமரேசனைவளைந்திட ... ... ... ...*
மூரட்குமரனீதுமொழிவான்... ... ... ... ... *

(இ-பொ.) அவ்வாறுவளைத்தவில்லில் விளங்குகின்றமுருகக்கடவுள் அளவில்லாதபாணங்கள் தொடுத்தருளி ஆகாயமுதல் பூமிவரையில் நிறைந்திருக்கும் அவுணச்சேனைகள் பிணக்கூட்டமாகும்படி செய் தருளவே அந்தச்செய்கையைக்கண்டு அண்டகடாகத்தின்மேல்அப்புறமிருந்த அவுணச்சேனைகள் மிகுதியாகவந்து முன்போலவே சுப்பிரமணியசுவாமியைச்சூழ்ந்துகொண்டபோது வீரம்பொருந்திய அந்தக்கடவுள் இந்தவார்த்தைசொல்லுகின்றார்.—(எ-று.) (உ௯௯)

மையவுணர்சேனையிடைதேரினைவிடுத்தியென... ... ... *
மாருதியிதேடுறையவே ... ... ... ... ... ...*
லையயவிதுநன்றெனநிலத்தினில்விசும்பினி ... ... ... *
லளக்கரில்விடுப்பமுருகன் .. ... ... ... ... ...*
பெய்புமுகிலென்னமிகுவாளிகள்சொரிந்தருள் ... ... *
பிரிந்தவவுணப்படையெலா ... ... ... ... ...*
மொய்யெனவிறந்துதிரமோடுபிணமாயிட ... ... ... *
வுலாவியமர்செய்தருளினன் ... ... ... ... ...*

(இ-பொ.) கருமைநிறமுள்ள அவுணச்சேனையினடுவில்தேரினைச் செலுத்தென்று வாயுதேவனுக்கு உத்தரவுசெய்தருளினார் அவன் கர்த்தனே யிதுநன்மையென்று பூமியினிடத்திலும் ஆகாயத்தினிடத்திலும்

பொழிப்புரை.

சமுத்திரத்திலுமாகவிடுத்தான் அவன் அவ்வாறுசெலுத்தும்போதுசுப்பிரமணியக்கடவுளானவர் மழைபொழிகின்றமேகம்போல் மிகுந்த பாணவருஷம் பொழிந்து இரக்கமில்லாத அவுணப்படைகளெல்லாம் விணவாக இறந்து உதிரப்பிரவாகம் ஓடும்படி பிணங்களாகத்தக்கதாக உலாவிப்போர்செய்தருளினார்.—(எ-று.) (௩௱)

சீகரமுலாவுமெழுசாகரமுமாகமொடு... ... ... ... ...*
தேவர்கணிறைந்தவுலகுஞ் ... ... ... ... ... *
சூகரநிறத்தவுணர்சேனைபிணமாகநனி... ... ... ... ...*
துன்றவெழுகின்றகுருதி... ... ... ... ... ... *
வேகமுடனேழ்பிலமுமண்டலமுமெண்டிசையும்... ... ...*
விண்ணகமுநண்ணிநிறைய ... ... ... ... ... *
வாகைமுருகன்றகுவர்சேனைவருமண்டவழி ... ... ... ...*
வாளிகொடடைத்தருளினான் ... ... ... ... ... *

(இ-புரை.) நீர்த்துளிகள்சிதறுகின்ற எழுசமுத்திரங்களிலும் ஆகாயத்திலும்தேவர்களிருக்கும்உலகத்திலும்பன்றிநிறமுள்ள அவுணர்சேனைகள் மிகுந்தபிணங்களாய்விழுந்துகிடக்க அவர்களுடல்களிலிருந்தெழுகின்ற உதிரமானதுவேகமுடன்பெருகியோடி ஏழுபிலங்களிலும்பூலோகமுழுவதும்அஷ்டதிக்குகளிலும்ஆகாயத்திலுமாகப்பொருந்திநிறைந்தபோது வெற்றிகொண்ட சுப்பிரமணியக்கடவுள் அவுணச்சேனைகள் வருகின்ற அண்டத்தின்வழியைப் பாணங்களினால அடைத்தருளினா.-()

பாலனமொழிக்கௌரிபாலனதுபின்புதழல .. ... ... ..*
பன்னிருகணும்பொலியவே ... ... ... ... ... *
மாலனுருதானவர்பிணத்தினிடைகண்ணுறலும் ... ... ...*
வாரிதிகர்சோரியதெலாஞ் ... ... ... ... ... *
சூலவும்வறந்ததுநிறைந்திடுபிணக்குவை ... ... ... ...*
தணந்துபொடியாகியதுசீர்... ... ... ... ... *
மாலயனுமிந்திரனுமும்பர்களும்வேலனை ... ... ... ...*
வழுத்தினர்மகிழ்ச்சியுறவே ... ... ... ... ... *

(இ-புரை.) பாலினையொத்த வசனமுள்ள பார்வதியார்குமாரர் அதன்பின்புதம்முடைய பன்னிரண்டுகண்களிலும் அக்கினி பிரகாசிக்கும்படி மயக்கம்பொருந்திய அவுணர் பிணக்கூட்டத்தின்மேல் பார்வைசெலுத்

தினவளவில் சமுத்திரத்தையொத்த உதிரமெல்லாம் மிகவும் வறண்டது நிறைந்த பிணக்குவையோ வெனில் சாம்பலா யொழிந்து போயிற்று அதைக்கண்டசீருள்ள விஷ்ணுவும்பிரமதேவனும் தேவேந்திரனும் தேவர்களும் மகிழ்ச்சிமிகுதியினால் வேலாயுதக்கடவுளைத்தோத்திரஞ் செய்தார்கள்.—(எ-று.) (௩௱௨)

எம்பரமனின்னனபுரிந்தது தெரிந்துள ... ... ... ... *
மெரிந்திடவிலாந்தவுணர்கோ ... ... ... ... ...*
னம்பகமிராறுடையநம்பனெதிர்தேரினொடு ... ... ... *
மாலமெனவந்தனுகலுங் ... ... ... ... ... ...*
கும்பமதயானையுரிகொண்டவனளித்தருள் ... ... ... ... *
குமாரனுமெதிர்ந்தருளினு ... ... ... ... ... ...*
னும்பர்கள்பெருஞ்சிறைவிடாதுயிர்விடுப்பவ ... ... ... *
னுருத்திவையுரைத்திடுவனால் ... ... ... ... ...*

(இ-புரை.) நம்முடைய பரமனிவ்வாறான காரியங்கள்செய்ததைச் சூரன் அறிந்துமனமெரியும்படி பன்னிரண்டுதிருக்கண்களுள்ள சுப்பிரமணியசுவாமிக்கெதிரில் ஆலகாலவிஷம் வருவதுபோலத் தேருடன் விரைந்துவந்தெதிர்ந்தவளவில் மதகுமுள்ள மதயானையின்தோலைப்போர்த்தருளியபரமசிவன் அளித்தருளியகுமாரசுவாமியும் எதிர்ந்தருளினார் சுவாமி யெதிர்ந்தபோது தேவர்கள்பெருஞ்சிறையைவிடாமல் தன்னுயிரைவிடுப்பவனாகிய சூரன்கோபத்துடனிந்தவார்த்தைசொல்லுகிறான்.

இன்புறுபரன்றருவரத்தியல்பிலெப்பொழுது ... ... .. *
மிப்படியிருப்பனழிவே ... ... ... ... ... ...*
னென்பணிபுரிந்துழலுமும்பர்மொழிமெய்ம்மையென ... *
வெண்ணியமருக்கணுகினு .. ... ... ... ... ...*
யென்படினுமுன்றனைவிடுப்பதிலைமைந்தனென ... ... *
விட்டிடுவதில்லையெனவே... ... ... ... ... ...*
வன்புமனவெய்யனிதுகூறவெனையாளுடைய ... ... ... *
வள்ளலுரைசெய்தருளுவான் ... .. ... ... ...*

(இ-புரை.) ஆனந்தமே திருமேனியாகவுள்ள பரமசிவன் எனக்கருளிச்செய்த வரத்தின்தன்மையால் எக்காலமு மிப்படியேயிருப்பேனல்லது நானிறக்கமாட்டேன் என் னேவல்தொழிலைச் செய்துகொண்டுழ

பொழிப்புரை.

ளுகின்ற தேவர்களுடையவார்த்தையை யுண்மையென்று கருதிப் போர் ... ங்குவந்தனை இனியென்ன பாடுபட்டாலும் நான் உன்னைவிடுப் பேனுமோ சிறுபிள்ளையென்று விட்டுவிடுவேனோ அப்படியும் நிலையென்று கடினமனமுள்ள கொடியசூரனிவ்வாறுசொல்ல ... காள்ளுமிறைவர் மொழிந்தருளுகின்றார்.-(எ-று.)(௩௱௪)

உம்பரையலைத்தகொருவெங்கயவவம்புரை ... ... ... ...*
யுரைத்தனையுனதுருவினிற் ... ... ... ... ... *
செம்புனல்குதித்திடவியாம்விடுபெருங்கணைகள்... ... ...*
செப்பிடுமுனக்குமொழியென் ... ... ... ... *
றெம்பரமனோதலுநெடுஞ்சிலைவளைத்தன ... ... ... ...*
னிருந்திறல்கொள்பூதரொவரும் ... ... ... ... *
வெம்பியவுணன்றனைவளைந்தவன்விடுங்கணைகண் ... ... ...*
மெய்ப்படவுடைந்தனரரோ ... ... ... ... ... *

(இ-புரை.) தேவர்களையலைத்தகொடியகீழ்மகனே வம்புவார்த்தை சொல்லினை உன்னுடையசரீரத்திலிருந்து உதிரமொழுகும்படி நாமேவு கின்றபாணங்களுனக்குப் பிரதியுத்தரஞ் சொல்லுமென்று நம்முடைய கடவுள் சொன்னவளவில் தன்கையிலிருக்கும் பெரியவில்லினைவளைத்தா ன் அதனைக்கண்டு மிகுந்தபலமுள்ள பூதர்களெல்லாருங்கோபித்து-சூர னைவளைந்து அவன்விடும்பாணங்கள் தங்கள்சரீரத்திற்படுவதினாலேதாற் றோடிப்போனார்கள்.—(எ-று.) (௩௱௫)

இன்னசெயல்கண்டுதிறன்மொய்ம்பனுடனெண்மரு... ... *
மிலக்கநுமெதிர்ந்தவுணன்மேன்... ... ... ... ...*
மின்னுகணைமாரியின்விடுப்பமிசைபட்டவை ... ... ... *
விரைந்தவனொடிந்துவிழவு ... ... ... ... ...*
மன்னவுணனூறுபெறுகோடிகணைசிந்தியவா ... ... ... *
வையமொடுவில்லினையறுத்... ... ... ... ... ...*
தந்நிலையினன்குபெறுமாயிரநெடுங்கணையை ... ... ... *
யங்கமிசைவிட்டனனரோ... ... ... ... ... ...*

(இ-புரை.) இப்படிக்கொத்த செய்கையைக்கண்டு வீரவாகுதேவரு ம் அவருக்கிளையவீரர்களெட்டுப்பேரும்(இவர்களுமல்லாமல்)மற்றலக்ஷ

ம் வீரர்களும் எதிர்ந்து சூரன்மேல் ஒளிருகின்றபாணங்களை மழைபோ ற்சொரிந்தார்கள் அந்தப்பாணங்கள் சூரன் மேற்பட்டுபட்டவுடன் ஒடி ந்துவிழுந்தன அதற்குமேல் சூரனனவன் நூறுகோடி பாணங்களைமே வி அவர்கள்தேர்களையும் வில்லுகளையும் அறுத்து அப்பொழுதே பின் னும் நாலாயிரம்பாணங்களை அவர்கள் சரீரத்தின்மேற் படும்படி விட் டான்.—(எ-று.) (௩௱௬)

எண்மரிலிலக்கர்கள்கலக்கமொடிரிந்தன ... ... ... ...*
ரிருந்திறல்கொள்வாகுவவுணன் ... ... ... ... *
றிண்மையுளதேரனுகிவாள்கொடவனீள்சிலை... ... ... ...*
சிதைக்கவனையோனையவுணன்... ... ... ... ... *
வண்மையுறுமார்பிடையடித்துழிவிழுந்தயர ... ... ...*
வான்மிசையெறிந்தனனறிந் ... ... ... ... ... *
துண்மையுறுகந்தனயன்மேவவவுணன்சிலைகொ ... .. ...*
டொல்லைகுகன்முன்குறுகினன் ... ... ... ... *

(இ-புரை.) அந்தப்பாணங்கள்வந்துபட்ட மாத்திரத்தில் எட்டுவீர ர்களும் அவர்களேயன்றி லக்ஷம்வீரர்களும் மனங்கலங்கி யோட ... மிகுந்த பராக்கிரமங்கொண்ட வீரவாகுதேவர் சூரனுடைய ப... தேரிற்பாய்ந்து தம்முடையவாளாயுதத்தினால் அவனுடைய ... வினைவெட்டினார்அப்படிவெட்டியவீரவாகுதேவனைச்சூரன் அ... ருந்தியமார்பினிடத்தில் அறைந்தபோது அவர்பூமியில் விழுந்து மூர் சையானார் அப்படிமூர்ச்சையாய்விழுந்தவரையெடுத்து ஆகாயத்தி ... றிந்தான் அப்போது வீரவாகுதேவர் மூர்ச்சைதெளிந்து உண்மையுள் ள சுப்பிரமணியரிடத்திற்சேர்ந்தார்(அதன்பின்பு)சூரனனவன்வில்லேந் திக்கொண்டுவிரைவாக சுப்பிரமணியசுவாமிக்கெதிரில்வந்தான்.-(எ-று.)

வெந்திறல்கொள்வேலனெடுவிற்சமர்புரிந்தவன் ... ... *
விடுங்கணைவிலக்கிவிறல்சேர் ... ... ... ...*
கந்தனிரதத்துறுவிறற்கொடியறுத்துழி ... ... ... *
கறுத்தவன்விடுங்கணையெலாஞ்... ... ... ... ...*
சிந்தும்வகைசெய்துகணையேழுகொடுசூரனுறு ... ... *
தேரினிலுறுங்கொடியறுத் ... ... ... ... ...*
துந்துதிரைவேலைதனிவிட்டருளவானமுறு ... ... ... *
மும்பர்களொலித்தனரரோ ... ... ... ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) மிகுந்த பராக்கிரமமுள்ள சுப்பிரமணியருடன் விற்போர்செய்து அவர்விடுகிறபாணங்களைவிலக்கிவீரம்பொருந்தியசுப்பிரமணியசுவாமியின் ரதரிலிருக்கும்வெற்றிபொருந்தியகொடியை அறுத்தபோது சுவாமியானவர்கோபித்து அவன்விடுகிறபாணங்களெல்லாம் அறும்படிசெய்து எழுபாணங்களினால் சூரனிருக்கிறதேரிற் கட்டியிருக்குங்கொடியையறுத்து வீசுகின்ற அலைகளுள்ள சமுத்திரத்தில் விழச்செய்தருளினார் அதைக்கண்டு ஆகாயத்திலிருக்குந்தேவர்கள் ஆரவாரித்தார்கள்.—(எ-று.) (௩௱அ)

அன்னவனொலித்தலுமழன்றிரதமோடவுண... ... ... ...*
ரண்ணலுயர்விண்ணிடையடைந் ... ... ... ... *
தின்னலுறவும்பர்மிசைவெம்பகழிதூவலு ... ... ... ...*
மிளங்குமரனின்றபுவிமேற்... ... ... ... ... *
றுன்னுகணைவிட்டவையறுத்திலகுவையமொடு ... ... ...*
தூய்யகனத்தின்மிசைபோ ... ... ... ... ... *
யொன்னலனொடுங்கணைபொழிந்தமர்புரிந்தன ... ... ...*
னுமைக்கினிமையானபுதல்வன். ... ... ... ... *

(இ-புரை.) தேவர்களாரவாரித்தவளவில் சூரனானவன்கோபித்துத்தேருடன் ஆகாயத்தினிடத்தில் அடைந்து துன்பம்பொருந்தும்படி தேவர்கள்மேல் பாணங்களையேவினான் சுப்பிரமணிய சுவாமியானவர் (அதைக்கண்டு) பூமியிலிருந்தபடியே அழிவுபடாத பாணங்களையேவி அவன்விட்டபாணங்களையெல்லாம் அறுத்துப் பிரகாசிக்குந்தேருடன் தூயதாகிய ஆகாயத்தின்மேற்சென்று பகைவனாகிய சூரனுடன்பாணங்கள்சொரிந்துபோர்செய்தார் உமையம்மைக்கினிமையாகியபுத்திரர்.-()

பிலத்தினிடைபோவனநிலத்தினிடைமேவுவன ... ... ...*
பேசரியவாசைகளெனுந் ... ... ... ... ... ... *
தலத்தினிடையோடுவனநீடுகடல்கூடுவன ... ... ... ...*
சையமிசையெய்துவனசீர் ... ... ... ... ... ... *
மலர்த்தவிசயன்புவியினண்டுவனமண்டுகடல் ... ... ...*
வாளகிரிதாவியழியா ... ... ... ... ... ... *
நலத்தொடுறுமண்டமுனமேகுவனமீள்குவன ... ... ...*
நண்ணுமவர்வண்ணவிரதம் ... ... ... ... ... *

(இ-புரை.) பொருந்திய இவ்விருவர்களுடைய அழகுள்ளதேர்கள் பாதாளலோகத்திற்செல்லுவன மறுபடி பூமியினிடத்தில் வருவன அவ்விடம்விட்டுச்சொல்லுதற்கரிய எட்டுத்திசைகளிலுமோடுவன அங்கிருந்து நீண்டசமுத்திரத்தினிடத்திற்சேருவன இவ்விடத்திலுமன்றி அஷ்டகுல பரவதங்கள்மேலோடுவன அதற்குமேல் சீருள்ள தாமரைத்தவிசில் வீற்றிருக்கும் பிரமதேவனுலகத்திற்செல்லுவன நிறைந்துள்ளபெரும் புறக்கடலிலும் சக்கிரவாளகிரியிலுந்தாவி அதற்கப்புறம் அழியாதநலத்துடன்பொருந்திய அண்டங்களிற்பொருந்தும்படி செல்லுவன உடனேதிரும்பிவிடுவன.—(எ-று.) (௩௱ம)

இன்னபரிசன்னவர்களேறுமிருவீ்றிரத ... ... ... ... *
மெங்கணுமுலாவுபொழுதின்... ... ... ... ...*
மன்னவுணர்மன்னளவில்வெம்படைவிடுப்பவவை ... ... *
வாளிகொடுதூளிபுரியா ... ... ... ... ... ...*
வின்னமுதமானமுருகக்கடவு... ... ... ... ... ... *
ளேழினுடனேழுகணைவிட்டவுணர்கோன் ... ... ...*
பொன்னிரதநீறுபடநூழுதலும்வில்லிஞெடு ... ... ... *
பூமிசையடைந்தனனரோ... ... ... ... ... ...*

(இ-புரை.) இவ்வாறாக அவர்களேறிக்கொண்டிருக்கிற மேன்மையுள்ள இரண்டுதேர்களும் எல்லாவிடங்களிலும் உலாவும்போது அழியா வரம்பெற்றுள்ள சூரனனவன் அளவில்லாத பாணங்களை யேவினன் அதைக்கண்டு அவைகளுக்குச்சரியானபாணங்களால் அதுகளைப்பொடித்தருளி அடியார்களுக்கின்ப அமுதம்போன்ற சுப்பிரமணியசுவாமியானவர் பின்னும் பதினுலுபாணங்களேவிச் சூரனுடையபொன் மயமான தேரினைப்பொடியாக அழித்தவளவில் அவன்வில்லுடன் பூமியில்வந்தான்.—(எ-று.) (௩௱மக)

வையமிசைவந்ததொருசூரன்மிகுவாளிவிட ... ... ... *
வாளிகொடறுத்தருளியே... ... ... .. ... ...*
யையனெதிர்சூரனதுவீரமுறுதோளின்மிசை... ... ... *
யாயிரநெடுங்கணைகடா ... ... ... ... ... ...*
னெய்யவவைபட்டவஞெடிந்துவிழ ... ... ... ... *
வெய்யவனிராயிரநெடுங்கணைவிடத் .... ... ... ...*
துய்யகுகன்மொய்ம்பினிடைவாளிகள்பொருந்திமிகு... ... *
தூளிகள்பொருந்தினவரோ ... ... ... ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) பூமியினிடத்தில்வந்த சூரனானவன் அளவில்லாத பாணங்களைவிட்டான் சுப்பிரமணியக்கடவுள் அதனைக்கண்டு தாமும் அளவில்லாத பாணங்கள்விட்டு அவைகளை அறுத்தருளிப்பின்னும எதிர்ந்திருக்கிற சூரனுடைய வீரம்பொருந்திய தோளின்மேல் கொடிய ஆயிரம் பாணங்களைவிட்டார் அவைகள்போய்ப்பட்டு ஒடிந்துவிழவே சூரன் இரண்டாயிரம் பாணங்களைவிட்டான் அந்தப்பாணங்கள் நிர்மலராகிய சுப்பிரமணியசுவாமியினுடைய புசங்களிற்பட்டு மிகுந்ததூளிகளாயின.

பின்னுமவுணன்சொரிசரங்களைவிலக்குபு ... ... ... ...*
பெருங்கணைகளாயிரம்விடுத். ... ... ... ... ... *
தன்னவனடற்றனுவொடித்திடலுமற்றுமொ... ... ... ...*
ரருஞ்சிலைபிடித்தவுணர்கோன் ... ... ... ... *
மின்னுறுவிசும்பினிலெழுக்கடிதும்வேலவனும் ... ... ...*
விண்ணிடையெழுந்துபொரவே ... ... ... ... *
மன்னவுணன்மண்ணின்மிசைபின்னும்வரநம்பரனும் ... ...*
வந்தமர்புரிந்தருளினான் ... ... ... ... ... *

(இ-புரை.) மறுபடியுஞ் சூரன்விடுகிற பாணங்களைச் சுப்பிரமணியக்கடவுளானவர்விலக்கி தாம் ஆயிரம்பெருங்கணைகளைவிட்டு சூரனுடைய பலம்பொருந்திய வில்லை யொடித்தருளினார் அவன் மறுபடி வேறொரு வில்லெடுத்து ஒளிருகின்ற ஆகாயத்திலெழுந்தான் சுப்பிரமணியக்கடவுளும்விரைவாக ஆகாயத்திலெழுந்து போர்செய்யவே அவுணராசனானவன் உடனேபூமியில்வந்தான் அவன்வந்தவுடன் சுப்பிரமணியக்கடவுளும்பூமியில்வந்து போர்செய்தருளினார்.—(எ-று.) (௩௱௰௩)

காசினியினின்றவனளக்கரிடைதிக்கிடை... ... ... ... *
கவின்றருபிலத்தினிடைசீர். ... ... ... ... ... ...*
வீசுபுகழ்மேருவிடைமாயனுலகத்தினிடை ... ... ... *
மேவவவைதோறுமணுகிப். ... ... ... ... ... ...*
பூசன்முருகன்புரியவண்டமுறுவாயிலிடை ... ... ... *
போகவவனுங்குறுகியே... ... ... ... ... ...*
நீசனொடெதிர்ந்துவிறல்பட்டகணைவிட்டவுண... ... ... *
னெட்டிரதமட்டருளினான் ... ... ... ... ... *

(இ-பொ.) பூமியினிடத்திலிருந்த சூரன்சமுத்திரங்களினிடத்தும் திக்குகளினிடத்திலும் அழகுள்ள பாதலத்தினிடத்தும்சிறப்புப்பரவியமகம்மேருவினிடத்திலும் விஷ்ணுவுலகத்தினிடத்தும் செல்லும்போது சுப்பிரமணியக்கடவுளும் அந்த இடங்களுக்கெல்லாம் அவனுடன் போய்ப்போர்புரிந்தார் அதற்குமேல்சூரனனவன் அண்டத்திற்பொருந்திய வழியிற்சென்றான் சுவாமியானவர் அங்குந்தொடர்ந்துசூரனோடெதிர்த்து வீரம்பொருந்திய கணைகள்விட்டு அவனுடைய பெரியதேரினை அழித்தருளினார்.—(எ-று.) (௩௱௰௪)

தேரழியமுன்புரிமகத்தினிடையாதியருள் ... ... ... ...*
செய்தமனவேகமதுவாம் ... ... ... ... ... *
வீரமுறுதேனைநினையக்கடிதுவந்திட... ... ... ... ...*
விளங்கதனிலேறியருளே ... ... ... ... ... *
யாருமுருகன்கணைகொடண்டமுறுவாயிலை... ... ... ...*
யடைத்தகதவைக்கணைகடேய் ... ... ... ... ... *
வீரமொடறுத்திடலுமப்புறமிருந்தபடை... ... ... ...*
மேவியதுவேலனயலே... ... ... ... ... ... *

(இ-பொ.) தேரழியவே முன்செய்த யாகத்தினிடத்தில் பரமசிவன் அருளிச்செய்த மனவேகமென்கிற வீரம்பொருந்தியதேரினை நினைத்தான் அவனினைத்தவளவில அந்தத்தேர்வந்தது விளங்குகின்ற அதனிடத்திலேறிக்கொண்டு அருள்நிறைந்த சுப்பிரமணியசுவாமியானவர் முன்னம்பாணங்களேவி அண்டத்திற்பொருந்திய வழியை அடைத்தகதவை வீரமுடன்பாணங்களேவி யறுத்தான் அவ்வாறு அந்தக்கதவைச் சூரன் அறுத்தவுடன் அண்டத்துக்கு அப்புறத்திலிருந்த அவுணப்படைகள் சுப்பிரமணியசுவாமிக்கு அயலில்வந்துசேர்ந்தது.—(எ-று.) (௩௱௰௫)

வந்தபடைகந்தன்விழிபட்டிடலும்வல்லையின் ... ... ...*
மடிந்ததயலண்டமருவு .. ... ... ... ... ... *
முந்துபடைவந்திடவுரப்பினனுரப்பலு ... ... ... ...*
முடைந்ததயலண்டமருவும் ... ... ... ... ... *
வெந்திறலுறும்படைவரக்கமுறைம்படையை ... ... ...*
வேலவன்விடுப்பவவைபோய் ... ... ... ... *
நந்தில்பலவண்டமுறுசூர்படையனைத்தையு ... ... ... ...*
நடுக்குறவடர்த்தவல்லவி... ... ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறு வந்தசேனைகள் சுப்பிரமணியசுவாமியினுடைய உக்கிரமான திருஷ்டி பட்டமாத்திரத்தில் மடிந்துசாம்பலாய் விட்டது அதற்குமேலண்டத்திலிருக்கும் மேன்மைபொருந்திய படைகள் வந்தன அவைகளைக்கண்டு சுப்பிரமணியக்கடவுள் உங்காரஞ்செய்தருளினார் அப்படி உங்காரஞ்செய்த உடன் அவைகளும் அழிந்துபோய்விட்டன அதற்குமேலண்டத்திலிருக்குஞ் சேனைகள்வந்தன அவைகளைக்கண்டு சுப்பிரமணியசுவாமியானவர் தம்முடைய திருக்கரங்களிலிருக்கும் பஞ்சாயுதங்களையேவினார் அவைகள்போய் அழிதலில்லாத பல அண்டங்களிலிருக்கும் சூரனுடைய சேனைகளையெல்லாம் எவ்விடத்துஞ் சென்றுதிரிந்து அவுணர்கள்நடுங்கும்படிகொன்றன.—(எ-று.) (௩௱௰௧)

பஞ்சாயுதங்களாவன - சங்கு - சக்கரம் - வாள் - கோதண்டம் கதாயுதம் - என்பவைகளாம்.

தந்திரமுறும்படைகெடப்பரனளித்ததொரு ... ... ...*
சக்கரமெடுத்தவுணர்கோன் ... ... ... ... ... *
கந்தன்மிசைவிட்டிடவதைக்குமரவேளொரு ... ... ...*
கரங்கொடுபிடிப்பவதுகண் ... ... ... ... ... *
டந்தமிலுருக்கொடமராடமுருகேசனறி ... ... ... ...*
வானபடைவிடடையலான் .. ... ... ... ... *
வெந்திறல்கொண்மாயமதறுத்துழியொருத்தனென ... ...*
மேவினன்மிகுந்தகொடியோன் ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறு அண்டங்களிலிருந்துவந்த உபாயமிகுந்த சேனைகளெல்லாம் அழிந்துபோகவே சூரனானவன்முன்னம் பரமசிவன் கொடுத்தருளியதாகிய ஒப்பற்றசக்கராயுதத்தையெடுத்துச்சுப்பிரமணியசுவாமியின்மேலேவினான் அதைச்சுவாமியானவர்தம்முடைய ஒருதிருக்கரத்தினால் பிடித்துக் கொண்டார் அதைக்கண்ட சூரன் மாயையினால அநந்தம் உருவங்கொண்டுபோர்செய்தான் அப்போதுசுவாமிஞானஸ்திரத்தையேவி அந்தப்பகைவனுடைய மிகுக்க வெற்றிகொண்ட மாயத்தையழித்தபோது மிகுந்தகொடியவன் ஒருவனாய் நின்றான்.—(எ-று.)

[வேறு.]

அப்போதினின்மிகுதானவராசாயிரகோடி... ... ... ...*
யண்டத்தினுமண்டக்கடிதண்டிக்குமரேசன் ... ... *
மெய்ப்பாரமராடப்பினுமிப்பாரிடைவந்தே ... ... ...*
மிகநொந்துமனத்தாயைநினைத்தானதுபோதி... ... *

ஒப்பாராறுமவள்வந்திடநிகழ்வானவையவளோ... ... ...*
போதிப்படையிற்பட்டவருப்ந்தேயெழுமாறு... ... *
செப்பாயெனப்புறவேலையிலொருசாருறுமமுதத்... ... ...*
திருவெற்பதுவரிலாமெனச்செப்பிக்கரந்திட்டாள் ... *

•(இ-புரை.) தான்கொண்டமாயம் அழிந்தபோது சூரனுனவன் ஆயிரங்கோடி அண்டங்களிலுஞ்சென்முன் சுப்பிரமணிய சுவாமியும் அவ்வண்டங்களிலெல்லாம் விரைவாக அவனுடன் தொடர்ந்து யாவரும் புகழும்படிபொருந்தியபோாசெய்தருளினர் அதற் றபோ சூரனுமை ன்மறுபடியும் பூமியில்வந்துமிகவும்வருந்திநதல் தாயை மாயையை நினைத் தான்அப்படிநினைத்தபோதுஒப்பானவர்களையில் லாதமாயையவந்தாள் அ வளுடனிதுவரையிலநடந்தகாரியங்களைச் [illegible] மரிந்தவர்களெல்லாம்பிழைத்தெழுந்திருக்கும்படியோருபாயஞ்சொலலென்முன் அவள் சூரனைநோககிப் பெரும்புறககடலிலொரு டறத்திலிருககும் அமிர்தமலையிங்குவருமானுல் யாவருப்பிழைதெழுந்திருப்பார்கனென்று சொல்லி மறைந்துவிடடாள்.—(எ-று.) (௩௱௰அ)

இன்பாகியவவுணன்றனதிரதத்தினையொருவி ... ... ... *
யிறைவன்றருசிங்கதநினொருத்தத்தினணைந்தே ... ...*
கொன்பாகியவமுதந்திகழ்குன்றந்தனைச்சென்றே ... ... *
கொடுவாவெனத்தேர்போயதுகொடுவந்ததுபடையின்....*
முன்பாடுறுமரிமாமுகனிரவிப்பகைமுதலா ... ... ... *
முடிவுற்றிடுபடைமுற்றவுமுன்ம்பாலெழுந்தீண்டப் ...*
பொன்பாவியவுலகத்தவர்வெம்பூதர்கள்கண்டே ... ... *
புலிகண்டிடுபுலவாயதுபோலத்தளர்வுற்றார்... ... ...*

(இ-புரை.) மாயை சொன்னதைக்கேட்டவளவில்சந்தோஷமுடையவனுகிய சூரன் தன்தேரைவிட்டு நீங்கி பரமசிவன் அருளிச்செய்த சிங்கத்தின் பிடரியிலேறிக்கொண்டு தேரினைநோக்கி நீ சென்றுபெருமையவரவிய அமிர்தம் விளங்கிககொண்டிருக்கும் மலையை யிங்குக்கொண்டு வாவென்றுசொன்னவளவில் அதும்போய் அந்தமலையைக் கொண்டுவந்தது அந்தமலைவந்தமாத்திரத்தில் முன்னம்போர்செய்யத்தொடங்கினது முதல் இதுவரையி லிறந்துபோன சிங்கமுகாசூரன் பானுகோபன் முதலான அளவற்றசேனையெல்லாம் உயிர்பெற்றெழுந்து முன்போல் செ

ருங்கவே பொன்பரவியவுலகத்திலிருக்குந் தேவர்களும் கொடிய பூதர்கள் இவர்களெல்லாருங்கண்டு புலியைக்கண்ட மான்போலத் தளர்ச்சியடைந்தார்கள்.—(எ-று.) (௩௱௰௯)

கண்டானிதுமண்டாதிருகண்டானுடைவள்ளல் ... ... ...*
கடுவுண்டவனெடுவெம்படைகைக்கொண்டுவிடுப்பத்... *
தண்டாவிறலவுணப்படைமுற்றுங்கடிதட்ட ... ... ...*
தானுப்படைவேலன்புடைசாரக்கொடுஞ்சூர ... ... *
னண்டாகிடர்கொண்டானிடர்விண்டாரிமையோர்க ... ...*
ளல்லற்புரிசூர்பின்னரருந்தேரைவிடுப்பக் ... ... *
கொண்டாடுநெடுந்தேரதுகண்டார்கணடுக்கங் ... ... ...*
கொள்ளும்படிபொள்ளென்றுகொதித்தேகியதம்மா... *

(இ-புரை.) அருள்நிறைந்த பன்னிரண்டு திருநேத்திரங்களுள்ள சு[illegible]பிரமணியசுவாமியானவர் விஷபானஞ்செய்த பரமசிவனுடைய [illegible] படையாகிய சிவாஸ்திரத்தையெடுத்தேவினர் அதுசென்[illegible]னை ஏமுழுவதையும் விரைவில் அழித்துவிட்டு அந்தச் [illegible]ஸ்[illegible]பிரமணியரிடத்தில்வந்துசேர்ந்தது அதைக்கண்ட [illegible] பொருந்திய துன்பத்தைப் பொருந்தினன் அங்கி[illegible] துன்பம் நீங்கினர்கள் அதன்பின்பு தேவர்களுக்கு [illegible]பஞ்செய்த சூரனானவன் அருமையாகிய தன்னுடையதே[illegible] யாவருங்கொண்டாடும்படியாகிய அந்தத்தேரானது பார்த்த தேவர்களெல்லாரும் நடுக்கங்கொள்ளும்படி கொதிப்புள்ளதாய் விரைவுடன்சென்றது.—(எ-று.) (௩௨௰)

வகித்திறல்வாகுத்தனைவாகுற்றவிலக்கத் ... ... ... ... *
தெட்டானதிறத்தோரையிரும்பூதரையெல்லா ... ...*
மோகத்தொடுசோகப்படவாரிக்கடிதண்ட ... ... ... *
மூகடுற்றதுமுருகேசன்முனிந்தோர்கணைவிட்டான் ...*
வாகைக்கணைசென்றிந்திரஞாலச்சகடத்தை ... ... *
வைய்த்திடைகொடுவந்திடவாகுத்தனைமுதலோர் ... *
சோகத்தினையற்றார்குகனிரதத்தினைநிற்பச் ... ... ... *
சொற்றானதவனின்றதுசூர்கண்டுவெகுண்டு ... *

(இ-புரை.) அந்தத்தேரானது சென்று பராக்கிரமமுள்ள வீரவாகுதேவரையும் செயம்பொருந்திய லக்ஷத்தெட்டு வீரர்களையும்பெரிய பூ

தர்களெல்லாரையும் மயக்கத்துடன் சோகப்பட்டிருக்கும்படி செய்து வாரிக்கொண்டு விரைவுடன் அண்டமுகட்டிற் சேர்ந்தது அதைக்கண்ட சுப்பிரமணியசுவாமியானவர் கோபங்கொண்டு ஒருபாணமேவினார் வெற்றியுள்ள அந்தப்பாணமானது சென்று அந்த இந்திரஞாலத்தேராய்ப்பூமியினிடத்திற்கொண்டுவந்தவளவில் அதிலமயக்கத்துடனிருந்தவீரவாகு தேவர் முதலானவர்கள்சோகத்தை நீங்கினார்கள் அதற்குமேல் சுப்பிரமணிய சுவாமியானவர் அந்தத்தேர் அவ்விடத்தில நிற்கும்படி கட்டளையிட்டார் அது அப்படியே நின்றுவிட்டது அதைககண்டு சூரன்கோபித்து.—(எ-று.) (௩௨௧)

மூதண்டமளாவுற்றிடுகோதண்டம்வளைத்தேழ் ... ... ...*
முரணம்புசொரிந்தானறுமுகனுங்கணைதூவித் ... ... *
தீதண்டியசூர்வாளிவிலக்கித்தசநூறு ... ... ... ... ...*
திண்மைக்கணைசிந்திச்சமர்சிந்தித்திடுசூர்கைப் ... ... *
போதண்டியவில்லைத்துணிகண்டானதுபோதிற் ... ... ...*
பொருமூவிலைவேல்கொண்டுபுகழ்ச்சிக்குமரேசன் ... *
மீதண்டவிடுத்தானதுகண்டாயிரகோடி ... ... ... ...*
வெவ்வாளிசொரிந்தானருள்வீசும்முருகேசன் ... ... *

(இ-புரை.) பழமையாகிய அண்டத்தை அளாவுதல் பொருந்திய வில்லை வளைத்துபலம்பொருந்திய ஏழுபாணங்களைச் சொரிந்தான்-சுப்பிரமணிய சுவாமியானவரும் பாணப்பிரயோகஞ்செய்து தீமைபொருந்திய சூரன்விட்டபாணங்களை விலக்கிப் பின்னும் பலமுள்ள ஆயிரம் பாணங்களைவிட் - போர்செய்தலையே சிந்தித்திருக்கும் அந்தச் சூரன்கையிலிருக்கும்வில்லினைத்துணித்தருளினார் அப்போது சூரனை வன்போர்செய்வதற் கேதுவாகிய ஒரு சூலாயுதத்தையெடுத்து புகழ்ச்சியுள்ள சுப்பிரமணியக்கடவுள் மேலபடும்படி விடுத்தான் அடியாருக்கு அருள்பொழிகின்ற சுப்பிரமணியக்கடவுள் அந்தச் சூலம்வருவதைக் கண்டு கொடுமையுள்ள ஆயிரங்கோடிபாணங்கள்பொழிந்தார்.-(எ-று.)

வெலன்சொரிகோன்மூத்றவிறற்சூலமறுத்தே ... ... ... *
விரைவொடுதிர்வரவச்சிரம்விட்டானதுசென்றே ..*
அலைத்தல்தவ்விக்குமரன்பாணிபொருந்தச் ... ... ...*
சுடர்வேலைவனீராயிரந்தூவாளிகவேவி ... ... ... *

பொழிப்புரை.

யாலக்கொடியோனூற்றிடுசிங்கத்தைவதைப்ப ... ... ... *
வங்கத்துணைவெஞ்சத்தொடுமடலேமிகுகடலே ... ... *
போலப்பொலிவெம்பூதர்வருந்தும்படிநேமிப் ... ... *
புள்ளாயுருவங்கொண்டெதிர்பொருதானெறிகருதான் ... *

(இ-புரை.) இவ்வாறு சுப்பிரமணியக்கடவுளேவிய பாணங்கள்மூழுவதையும் வெற்றியுள்ள அந்தச்சூலம் அறுத்துவிரைவுடன் தம்மெதிரில்வரும்போது வச்சிராயுதத்தை யேவினுர் அதுசென்று சூலாயுதத்தின் தலையைக்கவ்விக்கொண்டு சுப்பிரமணிய சுவாமியினுடைய திருக்கரத்தில் வந்து பொருந்திநிற்று பின்னும் சுவாமியானவர் பகைவருடல் மாமிசம்பொருந்துவனவாகிய இரண்டாயிரம் பாணங்களேவி விஷம்போலக்கொடியவனாகிய சூரன் ஏறிக்கொண்டிருக்குஞ் சிங்கத்தைவதைத்தருளினார் அவ்வாறு சிங்கத்தைக்கொன்றவளவில் நன்மார்க்கத்தைக்கருதாத சூரனானவன் கோபத்துடன் பலமிகுந்த சமூத்திரம்போல் மிகுதியாயிராநின்ற பூதர்கள்வருந்தும்படி சக்கரவாகப்பக்ஷிபோல் உருவங்கொண்டு எதிர்த்துப்போர்செய்தான்.—(எ-று.) (௩௨௩)

துண்டங்கொடுகொத்திச்சிறைதன்னுன்மிகமோதித் ... ... *
துங்கம்பெறுவெம்பூதரைத்துயர்செய்ததுதிரிய ... *
மண்டும்புகழறுமாமுகன்மகவான்மயில்வடிவாய் ... ... ... *
வரவுன்னலுமவனப்படிவந்தானவன்மிசையே ... ... *
சண்டன்றனையுதைசெய்தவனருண்மாமகனேறிச் ... ... ... *
சயமோடுதரந்தேகொடிதாயுற்றிடுபுள்ளைக் ... ... *
கண்டம்படவாள்கொண்டுதுணித்தானதுபோதிற் ... ... ... *
கடலுற்றிடுவிடமொத்திடுகடியோனிதுபுரிவான் ... *

(இ-புரை.) மூக்கினாற்கொத்தியும் சிறையினால் அதிகமாகமோதியும் பெருமைபொருந்திய பூதர்களுக்குத் துயரத்தைச்செய்துகொண்டுதிரியும்போது புகழ்நிறையப்பட்டுள்ள ஆறுமுகக்கடவுளானவர் இவன் பக்ஷியாய் வடிவங்கொண்டு போர்செய்யும்போது (நாம் இரதத்தின் மேலிருந்துபோர்செய்வது நியாயமல்லவென்று)தேவேந்திரன்மயிலாய்வரும்படித்திருவுளத்தில் நினைத்தருளினவளவில் தேவேந்திரன் அப்படியேவந்தான் வந்தவளவில் கூற்றுவனை யுதைத்தருளிய பரமசிவன் அருளியபுத்திரராகிய சுப்பிரமணியக்கடவுள் அதன்மேலாரோகணித்துக்கொண்டு வெற்றியுடன்செலுத்தி கொடியதாய்ப்போர்செய்துகொண்

டிருக்கும் அந்தச் சக்கரவாகப்பக்ஷியை வாளாயுதத்தினால் இருதுண்ட மாகவெட்டினார் அவ்வாறு வெட்டினபோது கடலிலுண்டாகிய விஷத் தையொத்த கொடியவனின்னது செய்கின்றான்.—(எ-று.) (௩௨௪)

(மயிலும் சக்கரவாகப்பக்ஷியும் சற்றுநேரஞ் சண்டைசெய்தபோது சக் கரவாகப்பக்ஷியினால் மயில்வருந்தியதைக்கண்டு சுவாமி சிலபாணங்களை யேவினார் அந்தப்பாணங்களினால்வருந்தியசக்கரவாகப்பக்ஷியானது சு வாமியினுடைய திருக் கரத்திலிருக்கும் வில்லை முறிக்கும்படி வந்தது அப்போது வாளாயுதத்தினால் அதனையிரண்டு துண்டமாக வெட்டியரு ளினார் - இவ்வாறு மகாஸ்க்காந்தத்திற் சொலலப்படுகின்றது.)

மண்ணாகியும்புனலாகியுமனலாகியும்வங்கூழ் ... ... ... *
. வடிவாகியுமண்டந்தொடவளர்ந்தேயவனுறலும் ... ...*
விண்ணோர்வணங்காறிருகண்ணார்முருகேசன் ... ... ... *
வீறாயவைமாறாகியவெங்கோல்கள்விடுத்தே... ... ...*
யெண்ணானதுமாயத்துருமாயும்படிசெய்தா ... ... ... *
னிப்பான்மையிலிருநாளுடனிருநாள்வரையவுணன் ...*
பெண்ணொருமருங்கண்ணல்பெருங்கண்ணிடைவந்த ... ... *
பெருமானொடுபொருதேயினைபின்னுஞ்செயலுற்றான்...*

(இ-பொ.) பூமியாகியும் நீராகியும் அக்கினியாகியும் காற்றாகியும் (தனித்தனி)வடிவங்கொண்டு அண்டத்தையளாவும்படி அங்கிருந்த வள வில் தேவர்கள்வணங்கும் பன்னிரண்டு திருநேத்திரங்களுள்ள சுப்பிர ம ணியக்கடவுளானவர் பார்த்து இவ்வாறுவீறிவந்தவடிவங்களை (அப்போ தைக்கப்போது) வெவ்வேறு கொடிய பாணங்கள்விட்டு அந்தப்பகை வனுடையமாயவடிவம் அழியும்படி செய்தருளினார் இப்படியாக நாலு நாள்வரைக்கும் விடாமல் சூரனானவன்-பார்வதியையிடப்பாகத்திலுடை யபரமசிவனுடைய நெற்றிக்கண்ணிடமாகத் திருவவதாரஞ் செய்தருளி ய சுப்பிரமணிய சுவாமியினுடன் போர்செய்து பின்னும் இந்தக்காரி யஞ்செய்கின்றான்.—(எ-று.) (௩௨௫)

(அவன் பூமிவடிவமானதும் அதனை அழித்ததும் எவ்வாறெனில் பூமி ரூபமாய் ஏழுகடலையுந்தூர்த்தும் சூரியன்தேர் ஆகாயத்திற்செல்லுதற் கிடமில்லாமல்தடுத்தும் காற்றானது செல்லும்வழியைமாற்றியும் நின்றா ன் சுவாமிகண்டு ஏழுபாணங்களெடுத்து சூரனானவன் பூமிவடிவமாயிரு க்கிறான் ஆதலால்நீங்கள் ஏழுசமுத்திரங்களும் ஒன்றாய்க் கூடினதுபோ

ல் நீருருவங்கொண்டு சென்று அந்தமாயையை அழித்துவாருங்க ளென்று ஏவினர் அவ்வாறே அவைகள்சென்று அந்தமாயையை அழித்துச் சுவாமி திருக்கரத்தில்வந்துசேர்ந்தன அதன்பின்பு உலகங்களையெல்லா முண்ணும்பேரூழிவெள்ளம்போல வடிவங்கொண்டான் அதனைச்சுவாமிநோக்கி நூறு பாணங்களெடுத்து நீங்கள் ஊழித்தீவடிவங்கொண்டு சென்று அந்தமாயையினை அழித்துவந்து சேருங்களென்றேவினர் அவைகள் அவ்வாறேசென்று அந்தமாயவடிவத்தை அழித்துச் சுவாமிதிருக்கரத்தில்வந்துசேர்ந்தன அதற்குமேல் சூரனானவன் அக்கினிரூபங்கொண்டான் அப்போதுசுவாமி ஆயிரம்பாணங்கள்தொடுத்து நீங்கள் பிரசண்டமாருதவடிவங்கொண்டுசென்று சூரன்மாயத்தை அழித்துவாருங்களென்றேவினர் அவைகள்சென்று அக்கினிரூபமாயிருந்த மாயையினை அழித்துச் சுவாமிதிருக்கரத்தில்வந்திருந்தன அதன்பின்பு சூரனானவன் காற்றுவடிவங்கொண்டான் அப்போது சுவாமியானவர் லக்ஷம்பாணங்களெடுத்து நீங்கள்சர்ப்பரூபங்கொண்டு சென்று அந்தமாயையைத்தொலைத்துவிட்டு வாருங்களென்றுஉத்தரவுசெய்தேவினவளவில் அவைகள் சென்று அந்தமாயையை அழித்துவிட்டுச் சுவாமிதிருக்கரத்தில் வந்திருந்தன இவ்வாறு மஹாஸ்காந்தத்தில் கூறப்படுகின்றது.)

கூற்றுமெனவொருபால்வருமொருபால்வருமிருள்போற் ...*
குவடாமெனவொருபால்வருமொருபால்வருங்குறள்போற்.
காற்றுமெனவொருபால்வருமொருபால்வருமனல்போற் ...*
கடலாமெனவொருபால்வருமொருபால்வருங்கடிபோன் *
மாற்றுவிறலிளையோரெனவொருபால்வருமொருபால் ... ...*
வயமைந்தர்களெனவேவருமைவேலையின்முன்னந் ... *
தோற்றுவருவிடமாமெனவொருபால்வருமொருபா ... ...*
றன்னும்படையென்னும்படிசூழ்வுற்றிடுஞ்சூரன் ... *

(இ-புரை.) சூரன் ஒருபக்கத்தில் யமன்போலவருவான் ஒருபக்கத்தில் இருள்போலவருவான் ஒருபக்கத்தில் மலைபோலவருவான் ஒருபக்கத்தில்பூதம்போலவருவான் ஒருபக்கத்தில்காற்றுப்போலவருவான் ஒருபக்கத்தில் அக்கினிபோலவருவான் ஒருபக்கத்தில் கடல்போலவருவான் ஒருபக்கத்தில் பேய்போலவருவான் ஒருபக்கத்தில் மாற்றக்கூடாதவெற்றியுள்ள வாலிபர்கள்போலவருவான் ஒருபக்கத்தில்ஜெயமுள்ள வீரர்கள்போலவருவான் ஒருபக்கத்தில் கருமைநிறமுள்ளசமுத்திரத்தில்முன்

னமுண்டான ஆலகாலவிஷம்போலவொருவான் ஒருபக்கத்தில் நெருங்கிய ஆயுதவகைகளாகச் சூழ்ந்துகொள்வான்.—(எ-று.) (௩௨௬)

இப்பான்மையிலவுணர்க்கிறையெங்கெங்குநிறைந்தே ... ...*
யிரும்போர்செயவரும்போதினிலிருள்கொண்டிடுகண்டத்
துப்பார்கனல்விழியோனருள்சுதனுயிரகோடி ... ... ...*
தூவாளிகளேவவவைதொலையும்படிபுரியா... ... ... *
மெய்ப்பார்கடலேழும்புவியேழும்பிறபாவும் ... ... ...*
வீறொன்றியதாமலதுவேறொன்றிலையென்ன ... *
வொப்பாகியதில்லாவொருவடிவங்கொடுநின்று ... ... ...*
ஒன்னாரிருநயனங்களுமுளமெங்கணுமுருக ... *

(இ-புரை.) இத்தன்மையால்சூரனானவன் எல்லா இடத்திலும்நிறைந்து பெரும்போர்செய்வதற்கு வரும்போதில் கருமைகொண்டகண்டமும் செம்மைநிறமாகிய அக்கினிக்கண்ணுமுள்ள பரமசிவன் அருளிய திருமைந்தராகிய சுப்பிரமணியசுவாமியானவர் பகைவருடலூனில்தோயும்படியாகிய ஆயிரங்கோடிபாணங்களேவி அந்தமாயாரூபங்கள்தொலையும்படிசெய்து பெருமைபொருந்திய எழுகடல்களும் எழுலோகங்களும் வேறுள்ள எல்லாமும் மகத்துவம்பொருந்திய தாமலலது வேறொன்றுமில்லையென்னத்தக்க ஒப்பானதில்லாத ஒருசொரூபங்கொண்டு பகைவனாகிய சூரனுடைய இரண்டுநேத்திரங்களும் உள்ளமெல்லாமும் உருகும்படி நின்றருளினார்.—(எ-று.) (௩௨௭)

( சுப்பிரமணிய சுவாமியானவர் ஆயிரங்கோடி பாணங்களையெடுத்து பாணரூபமாயிருக்குந் தேவர்களே நீங்கள்சென்று சூரன்கொண்டிருக்கிற மாயாரூபங்களையெல்லாம் அழித்துவந்து சேருங்களென்று கட்டளையிட்டருளியேவினார் அவைகள்சூரன்கொண்டிருக்கும் மாயாரூபங்களொவ்வொன்றுக்கும் எவ்வேழு ரூபமாகச்சென்று அழித்துச்சுவாமியினுடைய அம்பறாத்தூணியில் வந்து சேர்ந்தன.)

எங்குந்தனதுருவாகியிருக்கின்றசொரூப ... ... ... ...*
மெய்திக்குகனிற்கும்பொழுதின்னற்புரிசூரன்... ... *
பொங்கும்புகழன்போடுமதித்தேயதுமாறப் ... ... ...*
பொள்ளென்றுசினத்தண்டர்புலம்பும்படிமாயந் ... *

பொழிப்புரை.

தங்கும்பலவடிவங்கொடுசமராடலுமுருகன்... ... ... ...*
றனிவேலைவிடுத்தானதுதகுவற்கிறைகண்டே ... ... *
சங்குந்தியவேலைப்புடைதடமாமரமாகிச் ... ... ... ...*
சாரக்கதிர்வேல்சென்றுதடிந்திட்டதுமாதோ ... ... *

(இ-புரை.) சுப்பிரமணியசுவாமியானவர் எங்குந்தம்முடையசொரூபமாகி நிற்கும்போது தேவர்களுக்குத் துன்பஞ்செய்த சூரன் கண்டு அதிகரிக்கும் அன்புள்ளவனாய் இவர்சாக்ஷாத்பரமசிவமேயென்றுதனக்குள் மதித்துப்பின்னுஞ்சற்றுநேரத்தில் அந்த எண்ணமாறி முன்போலவேவினைவாகக்கோபித்து தேவர்கள்புலம்பும்படி மாயம்பொருந்திய பலரூபங்கொண்டு போர்செய்யும்போது சுப்பிரமணியக்கடவுளானவர் ஒப்பில்லாத வேலாயுதத்தையேவினார் அந்தவேல்வருவதைச் சூரன் கண்டு அலைகளால் சங்குகளைக் கரையிலெறிகின்ற சமுத்திரத்தினிடத்திற் சென்று பெரியமாமரமாயிருந்தான் அதைக்கண்ட வேலானது சென்று அந்தமாமரத்தை யிரண்டு பிளவாகும்படிபிளந்திட்டது.—(எ-று.) ()

சங்கத்தியின்மேனின்றிடுமாவைக்கதிர்வேல்போய்ச் ... ... *
சாயும்படிசெய்திட்டிழிதகுவற்கிறைகண்டே ... ...*
துங்கத்தனதுருவங்கொடுபொரமேவவனைமார்பைத் ... ... *
துண்ணென்றுபிளந்தண்டர்கடுள்ளும்படிதள்ளி ... ...*
மங்குற்பொலிவானத்துறுகங்கைப்புனலாடி ... ... ... *
வந்தேகுமரன்பாணிபுகுந்தேகதிர்வைவே ... ... ...*
லங்குற்றதுவெஞ்சூரனிரண்டானபிளப்பு... ... ... ... *
மடன்மாமயிலொடுகுக்கிடமாகிப்பொரவந்தான்... ...*

(இ-புரை.) சங்குகளுள்ள சமுத்திரத்தினிடத்தில் நிற்கின்றமாமரத்தை ஒளியுள்ளவேல்சென்று பிளக்கும்படிசெய்தபோது சூரன் கண்டு புகழுள்ளதன்வடிவங்கொண்டுபோர்செய்யும்படிவந்தான் அதைக்கண்டவேலாயுதமானது அவன்மார்பைத் திடுக்கிடும்படி பிளந்து தேவர்கள் துள்ளும்படிகீழேதள்ளிமேகம்பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஆகாயத்திற்பொருந்திய கங்காநதியில்ஸ்நானஞ்செய்து வந்து ஒளியுங்கூர்மையுமுள்ள அந்தவேலாயுதமானது சுப்பிரமணியசுவாமியினுடைய திருக்கரத்தில்சேர்ந்திருந்தது இவ்வாறுவேலினால்பிளக்கப்பட்ட இருபிளப்பும் மயிலுஞ்சேவற்கோழியுமாகிச் சூரன் போர்செய்ய வந்தான்.—()

ஆறுறழ்ந்தியமுடிகொண்டவனுருகண்டசுரோச... ... ... ...*
னமராடியிளைக்குஞ்செயலாலங்கவெம்பீதே ... ... *
யேறுஞ்செயல்போலப்பொலிநீலச்சிகிமேலே ... ... .. *
மேயறிக்கொடிதாஙகவிருஞ்சவலுயர்த்தான் ... ... *
வீறண்டர்கள்கண்டேபரமுகனைப்பரவுற்றார் ... ... ...*
வெஞ்சூர்முதல்பட்டானெனவிட்டாருயிர்ந்தவி ... *
யீறின்றியவ்வலைப்படமீனுமிரணியனங் ... .. ...*
கிதுகண்டுபுலப்பிட்டுகளொம்பாலையடைந்தான் ... *

(இ-புரை.) ஆறென்கிறதொகையுள்ள மேன்மைபொருந்திய திருமுடிகளுள்ள சுப்பிரமணியசுவாமியானவர் அதனைக்கண்டு சூரனானவன் போர்செய்து தோற்றுப்போன தன்மையினாலவன் மேலேறின தன் மைபோல பிரகாசிக்கும் நீலநிறமுள்ள அந்தமயிலின்மேல் ஆரோகணித்துக்கொண்டு பெரியசேவற்கோழியாகிய கொடியைப் பிடித்தார் மேன்மைபொருந்திய தேவர்கள்கண்டு ஆறுமுகக்கடவுளைத் துதிசெய்தார்கள் இங்கிப்படியிருக்க சூரனாகிய தம் அண்ணனிறந்தானென்று கேள்விப்பட்டு பதுமகோமளை உயிர்நீங்கினாள் முடிவில்லாத சமுத்திரத்தினிடத்தில் மீனுருவங்கொண்டிருந்த இரணியனென்பவன் அறிந்துவந்து அழுதுதுயரமுற்றுத் தங்கள் குருவாகிய சுக்கிரபகவானிடத்திற் போனான்.

அனைவர்க்குமவற்றொண்டிடங்கானதுசெய்தா ... ... ...*
னறுமாமுகனடல்வாகுவையருளோடுந்தெரிந்தே... ... *
மனமுற்றுத்துயரத்தொடுசிறையின்புடைவாழும்... ... ...*
மகவான்மகன்முதலாகியவானோர்களைநநதம் ... ... *
முனமுய்க்குதியெனமுன்பறவுய்த்தானவர்தொழுதே ... ...*
மொய்த்தார்மிகுகுருநீரிலைபுநீர்கொளநலகிச் ... *
சினமெற்றியபூதப்படைவிண்ணோர்புடைசூழச் ... ... ...*
செந்திற்பதிவந்தானருள்சிநதித்திடுகந்தன் ... ... *

(இ-புரை.) சுக்கிரபகவான் இறந்துபோன சூரன்முதலாகிய எல்லாருக்கும் இரணியனைக்கொண்டு உத்தரகிரியைசெய்வித்தார் சுப்பிரமணியசுவாமியானவர் வெற்றிபெற்ற வீரவாகுதேவரை அருளுடனழைத்து மனதிற்பொருந்திய துயரத்துடன் சிறையினிடத்திற்பொருந்தியிருக்கும் தேவேந்திரன் மகன் முதலாகியதேவர்களை நம்மிடத்திற்கொண்டுவா

வென்று கட்டளையிட்டருளினார் வீரவாகுதேவர் அந்தக்கட்டளையைப் பெற்றுக்கொண்டுபோய்த்தேவர்களைச்சுவாமிசந்நிதியில்விட்டவளவில் அவர்களெல்லாருந் தொழுது சுவாமியினருகிற் சூழ்ந்திருந்தார்கள் அதன்பின்பு அருளைச்சிந்தித்துக்கொண்டிருக்குஞ் சுப்பிரமணியசுவாமியானவர் சூரனுடைய பெரிய பட்டணத்தைச் சமுத்திரங் கொள்ளும்படி கொடுத்துவிட்டு அவ்விடம்விட்டுநீங்கிக்கோபமுள்ளவர்களாய்மேன்மை பொருந்திய பூதப்படைகளும் தேவர்சேனையுஞ் சூழ்ந்து வரும்படி சென்று திருச்செந்தூரில் வந்து சேர்ந்தருளினார்.—(எ-று.) (௩௩௧)

யுத்த காண்டம் முற்றியது.

ஆக காண்டம் - ௪ - இற் திருவிருத்தம் - (௭௮௧)





உ

முருகன் துணை.

## ஐந்தாவது.

# தேவகாண்டம்.



[வேறு.]

வண்மைதங்குமயூரமிழிந்தே ... ... ... ... ... ...*
மந்திரத்திடைவந்துபுகுந்தே... ... ... ... ... *
திண்மைதங்குமடங்கலணைக்கண்... ... ... ... ... ...*
டேவரஞ்சலிசெய்யவிருந்தான் ... ... ... ... *
விண்மைதங்குதுணங்கறல்கொள்ள ... ... ... ... ...*
வெள்ளைவண்டிரைவேலையினூடே... ... ... ... *
யொண்மைதங்குகனற்கதிர்வெய்யோ... ... ... ... ..*
னெய்யெனப்படிவுற்றுமறைந்தான் ... ... ... *

(இ-புரை.) அழகுபொருந்திய மயில்வாகனத்தினின்று மிழிந்து ஆலயத்தினிடத்தில் வந்துசேர்ந்து திண்மைபொருந்திய சிங்காசனத்தில் தேவர்கள்தொழும்படி வீற்றிருந்தருளினர் அப்போது ஆகாயத்தில்கருமைதங்கியஇருளான துசூழும்படி வெண்மைநிறமுள்ளதாய்ப் புகழ்கொண்ட அலைகளையுடைய சமுத்திரத்தினுள் ஒளிபொருந்திய வைகளாய்வெப்பமுள்ள கிரணங்களையுடைய சூரியன்விரைவாகப்படிந்து மறைந்தான்.—(எ-று.) (க)

ஆசைகொண்டுபரண்டர்களெல்லா ... ... ... ... ...*
மாறுமாமுகவண்ணன்மலர்த்தாள் ... ... ... ... *
பூசைசெய்துபராவினர்நிற்பப் .. ... ... ... ... ...*
பொற்பலாவுபகழ்ந்தனிவேலோ ... ... ... ... *
னேசமுற்றமரர்க்கருள்செய்தா... ... ... ... ... ...*
னீசெங்குனெறிந்திறலவெஞ்சூர் ... ... ... ... *
மாசறுப்படிமாய்வுறவேலபோல... ... ... ... ... ...*
வந்தெழுந்தனன்வண்மையருக்கன்... ... ... ... *

(இ-புரை.) மேன்மையுள்ள தேவர்களெல்லாரும் சுப்பிரமணியசுவாமியைப் பூசிக்கவேண்டுமென்கிற ஆசைகொண்டவர்களாய் அவருடையதிருவடித்தாமரைகளைப் பூசித்துத்தோத்திரஞ்செய்துநின்றார்கள் பிரகாசமிகுந்ததாய்ப்புகழ்கொண்டு ஒப்பற்ற வேலாயுதமேந்திய சுவாமியானவர் கிருபைபொருந்தி அந்தத்தேவர்களுக்கு அருள்புரிந்தார் இவ்வாறாகச் சுவாமி வீற்றிருக்கும்போது மிகுந்த வெற்றியுள்ளவனாயிருந்த சூரனாகிய இருளொழியும்படி வேலாயுதமெழுந்ததுபோல் இராவிருளொழியும்படிபுகழுள்ளசூரியன் உதயஞ்செய்தான்.--(எ-று.) (உ)

மற்றவ்வேலையில்வேலையில்வேலை ... ... ... ... ... *
வல்லைபேவியவண்குமரேசன் ... ... ... ... ...*
புற்றராவினநண்ணியசெண்ணிப் ... ... ... ... ... *
புண்ணியன்கழப்பூசைபரிந்தே... ... ... ... ...*
வெற்றிமஞ்ஞையின்மீதுபுகுந்தே... ... ... ... ... *
வீறுபூதாமிடைந்தயலசூழ ... ... ... ... ...*
வற்றமற்றவெழிற்கொள்பரங்குன் ... ... ... ... ... *
றத்தின்மேவினனண்டர்வழுத்த... ... ... ... ...*

(இ-புரை.) அவ்வாறு சூரியனுதயமானபோது சமுத்திரத்தில்வேலாயுதத்தை விரைவாகச்செல்லும்படி யேவிய புகழுள்ள சுப்பிரமணியசுவாமியானவர் புற்றில்வாழும் சர்ப்பக்கூட்டம் பொருந்திய திருமுடியையுடைய பரமசிவன்திருவடிகளை ஆராதித்துவெற்றியுள்ளமயில்வாகனத்தின்மேலஆரோகணித்துக்கொண்டுபெருமையுள்ளபூதர்கள்நெருங்கிப்புடைசூழ்ந்துவரவும் தேவர்கள் துதிசெய்யவுஞ் சென்று குற்றமில்லாத திருப்பரங்குன்றத்திற் சேர்ந்தருளினார்.—(எ-று.) (௩)

புற்றராவினமென்றது - பாம்புகளினியல்பைச் சொன்னதேயன்றி சுவாமியின்திருமுடியிலிருக்குஞ் சர்ப்பம் புற்றில்வாழ்வதல்ல.

அண்டர்நம்பியனன்னவனைப்பா... ... ... ... ... ...*
லாலயத்தொடணிகமாடங் ... ... ... ... ... *
கொண்டவீதியிமைப்பிலமைப்பக் ... ... ... ... ...*
கோலமஞ்ஞைறுபினின்றுமகன்றே ... ... ... ... *
மண்டிசுந்தரமந்திரமுற்றே ... ... ... ... ... ...*
வண்மைகொண்டமடங்கலணைக்க ... ... ... ... *
ணண்டவிரந்தவுயிர்க்குயிராகி .. ... ... ... ... ...*
யிருக்குநாதனிருந்தனன்மன்னோ ... ... ... ... *

(இ-பொ.) தேவதச்சனானவன் அந்தத் திருப்பரங்குன்றத்தினிடத்தில் சுவாமிவீற்றிருப்பதற்கு ஆலயமும் பொன்மாளிகைநிறைந்திருக்கும் வீதிகளும் இமைப்பளவில்நிருமித்தான் சுவாமியானவர் அழகுள்ளமயில்வாகனத்தினின்றுமிழிந்து சுந்தரம்நிறைந்த ஆலயத்துக்குள் எழுந்தருளி அழகுபொருந்திய சிங்காசனத்தினிடத்தில அளவுகடந்த உயிர்களுக்கெல்லாமுயிராகியிருக்குஞ் சுப்பிரமணியக்கடவுள் வீற்றிருந்தார்.

குன்றுவானவர்தம்மைவிடுத்தே... ... ... ... ... ...*
துங்கவீரர்குலாவவிருப்ப ... ... ... ... ... *
வன்னம்போதுபராசரனல்கு ... ... ... ... ... ...*
மாறுமைந்தருமாறுமுகேசன் ... ... ... ... *
பொன்னுலாவியபுண்டரிகத்தாள் ... ... ... ... ...*
பூசைசெய்துபுகழ்ந்திடலோடு...... ... ... ... *
தன்னலம்பெறவன்னவர்தப்பான் ... ... ... ... ...*
ஞானபோதகநல்கியிருந்தான் ... ... ... ... *

(இ-பொ.) தம்மைச்சூழ்ந்திருந்த தேவர்களுக்கு விடைகொடுத்தருளிப்பெருமையுள்ளவீரர்களெல்லாருஞ்சூழ்ப்படிவீற்றிருந்தார் அப்படியிருக்கும்போது பராசரமுனிவர்பெற்ற ஆறுபுத்திரர்களும் ஆறுமுகக்கடவுளுடைய பொலிவுள்ள திருவடித்தாமரைகளைப் பூசித்துப்புகழ்ந்தார்கள் அவ்வாறுபூசித்த அவர்கள்மோக்ஷம் அடையும்படிஞானோபதேசஞ்செய்திருந்தருளினார்.—(எ-று.) (௫)

குன்றிடவிண்ணவரண்ண... ... ... ... ... ... *
லின்பமுற்றவெழிற்றெய்வயானை ... ... ... ...*
மாதெனுந்தனதொண்மடமன்னை ... ... ... ... ... *
மன்னிருந்திறல்வண்குமரேசற் ... ... ... ... ...*

பொழிப்புரை.

காதரத்தொடுநல்குவனென்றே ... ... ... ... ... *
யாழிமாலொடுமம்புயனோடு ... ... ... ... ...*
மோதினனவர்நன்றிதுநன்றிங்... ... ... ... ... ... *
கொல்லைசெய்குதியென்னவுரைத்தார்... ... ... ...*

(இ-புரை.) இதனை யிந்தமட்டில் சொல்லி மேலேசொல்லுகிறார் தேவேந்திரனானவன் தன்னுடையபொலிவுள்ள புத்திரியாகிய சௌந்தரியமுள்ள தெய்வயானையம்மையைப் பெருமைபெற்ற வெற்றியுள்ள சுப்பிரமணியசுவாமிக்கு அன்புடன் திருமணஞ்செய்துகொடுக்கிறேனென்று சக்கராயுதமேந்திய விஷ்ணுவுடனும்பிரமதேவனுடனும்சொன்னான் அவர்களிது நல்லகாரியம் நினைத்தபடி விரைவாகச்செய்யென்று சொன்னார்கள்.—(எ-று.) (௬)

உம்பர்மன்னவனுள்ளமுவந்தோ... ... ... ... ... ...*
ரொற்றன்மாமுகமொல்லைதெரிந்தே ... ... ... *
செம்பொன்மால்வரைமீதுபொருந்தென் ... ... ... ...*
றேவிதன்னொடுசீர்மடவன்னை... ... ... ... ... *
யிம்பர்நீகொடுவாவெனவேவ ... ... ... ... ... ...*
வேகியின்னதிசைத்திடவன்னார் ... ... ... ... *
கும்பமாமதவாரணமேறிக் ... ... ... ... ... ...*
குன்றுருப்பரங்குன்றமடைந்தார்... ... ... ... *

(இ-புரை.) தேவேந்திரன்மனமகிழ்ந்து உடனே ஒரு தூதன்முகத்தைப்பார்த்து மகமேருகிரியிலிருக்கும் என்மனைவியையும் என்புத்திரியாகியதெய்வயானையையும்இவ்வுலகத்துக்குநீஅழைத்துக்கொண்டுவாவென்றுசொல்லஅந்தத்தூதன்சென்றுஇந்தச்செய்தியைச்சொன்னவளவில் அவர்கள்மத்தகமுள்ளமதம்பொழிகின்றவெள்ளையானைமேலேறிக்கொண்டு குன்றாத திருப்பரங்குன்றத்திற்சேர்ந்தார்கள்.—(எ-று.) (எ)

இந்திரன்றனிருக்கையின்மாதோ ... ... ... ... ... *
டிந்திராணியிருந்தனளங்க ... ... ... ... ...*
ணுந்துசீருளசூரனதூரி ... ... ... ... ... ... *
லுற்றிடுஞ்சிறையற்றிடுமாதர் ... ... ... ... ...*

வந்திறைஞ்சவுவந்தருள்செய்தே ... ... ... ... ... *
மைந்தனைத்தழுவுற்றுமகிழ்ந்தா... ... ... ... ...*
ளந்தவேலைவரைச்சிறைகொய்தோ... ... ... ... ... *
னுறுமாமுகனாலயமுற்றான் ... ... ... ... ...*

(இ-பு.ரை.) தேவேந்திரனிருக்குமிடத்தில் இந்திராணியானவள்தன்மகளுடனிருந்தாள் அவ்வாறு அவளிருந்தவிடத்தில மேலானசிறப்புள்ள சூரனுடையநகரத்தில்சிறைபட்டிருந்த தேவமாதர்கள் வந்து வணங்கினார்கள் இந்திராணியானவள்சந்தோஷித்து அந்தத்தேவமாதர்களுக்கு கிருபைசெய்தாள் அதன்பின்பு தன்புத்திரனாகியசயந்தன்வந்துவணங்கினபோது அவனைத்தழுவிக்கொண்டு மகிழ்ச்சியடைந்தாள் அப்போதுதேவேந்திரனானவன் சுப்பிரமணியசுவாமி விற்றிருக்கும் ஆலயத்திற்குச்சென்றான்.—(எ-று.) (அ)

சென்னியாறுளதேவனளித்த... ... ... ... ... ... *
சென்னியாறுளதேவைவணங்கி ... ... ... ... *
யென்னையாளுடைநாயகநீயிங் ... ... ... ... ... ...*
கின்னருன்றிடையென்றிருமாதை ... ... ... ... *
மன்னமன்றலபுரிந்தருளென்ன... ... ... ... ... ...*
வாகைவேலுளமன்னவனோ... ... ... ... ... *
யன்னபான்மையியற்றுதுமென்ன ... ... ... ...*
வண்டரண்ணலகத்துண்மகிழ்ந்தான் ... ... ... *

(இ-புரை.) திருமுடியில்கங்காநதியையுடைய பரமசிவனளித்த ஆறுதிருமுடிகளையுடைய சுப்பிரமணியக்கடவுளைப்பணிந்து அடியேனை,ஆளுடையநாயகனே இந்தமலையினிடத்தில் என்னுடைய அழகுள்ள புத்திரியைப்பொருத்தமுள்ளதிருக்கலியாணஞ் செய்துகொண்டருளவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தான் வெற்றிமாலையணிந்த வேலாயுதமுள்ள சுப்பிரமணியசுவாமியானவர் நாளையதினம் அப்படியேசெய்துகொள்ளுகிறோமென்றருள்செய்தார் சுவாமி அவ்வாறு அருள்செய்தவளவில்தேவேந்திரன் தன்மனதுக்குள்மகிழ்ச்சியடைந்தான்.—(எ-று.)

அற்றமற்றமகிழ்ச்சியுடைந்தே ... ... ... ... ... *
யாலயத்தினகன்கடைவந்தே ... ... ... ... ...*

பொழிப்புரை.

கொற்றவொற்றர்முகங்கடெரிந்தே ... ... ... ... *
கோறிலாமுசுகுந்தனுமல்லால் ... ... ... ... ...*
வெற்றிமன்னருமும்பருமிங்ஙன் ... ... ... ... ... *
மேவுமாறுவிளங்கியவைவே ... ... ... ... ...*
னற்றிறற்றிருநாயகன்மன்ற ... ... ... .. ... .. *
ஞானமியன்றுநவின்றிடுமென்றான் ... ... ... ...*

(இ-ரை.) தேவேந்திரனிவ்வாறு சோர்வற்ற மகிழ்ச்சியடைந்து அந்த ஆலயத்தின்விசாலமாகிய கடைத்தலையில்வந்து வெற்றியுள்ள தூதர்கள் முகங்களைப்பார்த்து குற்றமில்லாத முசுகுந்த சக்கரவர்த்தியும் அந்தச்சக்கரவர்த்தியுமல்லாமல் ஜயமுடையவர்களாகிய மற்றுந்தேசத்து அரசர்களும் தேவர்களும் இங்குவருமாறு பிரகாசியாநின்ற கூர்மை பொருந்திய வேலாயுதந்தரித்தவெற்றியுள்ள சுப்பிரமணிய சுவாமிக்கு நாளையதினம் திருக்கலியாணமகோற்சவம் நடக்கின்றதென்று சொல்லுங்களென்று உத்தரவுசெய்தான்.—(எ-று.) (௰)

எண்ணிலொற்றர்விரைந்துபடர்ந்தா ... ... ... ... ...*
ரீதுநிற்கவெழிற்றவிசக்கைக்... ... ... ... ... *
கண்ணொராயிரமெண்ணிறெய்வக் ... ... ... .. ...*
கம்மியற்றொடுவந்தமுலாவும் ... ... ... ... *
வண்ணநீபநெருந்தொடைமார்பன் ... ... ... ... .. *
மன்றல்செய்திடமண்டபமன்றம் ... ... ... ... *
விண்ணுலாவியசோலைகளெலாம் ... ... ... ... ...*
விரைவுப்புரிவித்தனனன்றே ... ... ... ... *

(இ-ரை.) தேவேந்திரனிவ்வாறு உத்தரவுசெய்தவளவில் அளவில்லாததூதர்கள் சீக்கிரமாகச்சென்றார்கள் இதுநிற்க அழகுபொருந்திய வச்சிராயுதமேந்தியகையையும் ஆயிரங்கண்களையுமுடைய தேவேந்திரன் தேவதச்சனால்வாசனைவீசுகின்ற அழகுபொருந்திய கடப்பம்பூமாலையணிந்தமார்பினையுடைய சுப்பிரமணியசுவாமிக்குத் திருக்கலியாணமகோற்சவஞ்செய்வதற்காக கல்யாணமண்டபமும்சபையும் ஆகாயத்தையளாவிய சோலைகளுமாகிய இவைகளெல்லாம் பெருமையுடன் செய்வித்தான்.—(எ-று.) (௰௧)

மிக்கவின்னது நின்றிடமுன்னம் .. ... ... ... ... ...*
வெள்ளிவிண்டுவிலவிண்டொடுகாவி ... ... ... *
விக்கும்வளையெரித்தநுதற்க ... ... ... ... ... ...*
ணெம்பிரானுமையோடுமிருப்ப ... ... ... ... *
வக்கணத்தின்முசுக்கலையொன்றங் ... ... ... ... ...*
காதிமீதுனுமாரிலையமீதுந் ... ... ... ... ... *
தக்கவிலனுவநல்லிலைசிந்தத் ... ... ... ... ... ...*
தையலச்சீறலுமையன்விலக்கி ... ... ... ... ... *

(இ-புரை.) மேன்மைபொருந்தியதாகிய இந்தச்செய்தியிதுவனாயிவிருக்க ஆதிகாலத்தில கயிலாயமலைச் சாரலிலிராநின்ற ஆகாயத்தையளாவிய ஒருசோலையில கருப்புவிலலையுடைய மன்மதனையெரித்தநெற்றிகண்ணையுடைய பரமசிவன்பார்வதிதேவியாருடன் வீற்றிருந்தருளும் அப்பொழுது ஒரு ஆண்முசுவானது பரமசிவன்மேலும் பார்வதிதேவியார்மேலுமாகதத குதியுள்ளதான நலல வில்வப்பத்திரத்தைப் பறித்துப்பறித்துப்போட்டது அதனைப்பார்வதிதேவியார்கண்டுகோபிக்கவே சுவாமிதடுத்தது.—(எ-று.) (௰௨)

(முசுவெண்பது - ஒருசாதிக்குரங்கு.)

கூவிளைத்தழைகொண்டெமையிங்ஙன் ... ... ... ... *
மோதிலபூசைகுயிற்றியபண்பா... ... ... ... ...*
லீவளைத்திடவேலைசுலாவு ... ... ... ... ... ... *
நீள்புவிக்கரசாகுதியென்றே ... ... ... ... ...*
மாவளைக்கையிடத்தனிசைப்ப ... ... ... ... ... *
வையகத்திடைவந்துபிறந்தே ... ... ... ... ...*
காவளைத்தவயற்கருவூர்வாழ்... ... ... ... ... ... *
காமர்சேர்முசுகுந்தனிடத்தின் ... ... ... ... ...*

(இ-புரை.) வில்வத்தழையைக்கொண்டு நம்மையிவ்விடத்தில் குற்றமில்லாதபூசைசெய்ததன்மையினலவளைந்திடப்படி சமுத்திரஞ்சூழ்ந்தபெரிய பூலோகத்துக்கு அரசருகக் கடவையென்று பார்வதியையிடப்பாகத்திலுடையபரமசிவன்கட்டளையிட்டருளினமாத்திரத்தில் அந்த ஆண்முசுவானது பூலோகத்தினிடத்தில் முசுமுகத்துடன் சோழவமிசத்திற் பிறந்து சோலைகள்சூழ்ந்ததாய்வயலகளையுள்ளகருவூரினிடத்தில் வாழ்கின்ற அழகுநிறைந்தமுசுகுந்தச்சக்கரவர்த்தியினிடத்தில்.-(எ.று)

பொழிப்புரை.

மேகவாகனனொற்றர்படர்ந்தே ... ... ... ... ... *
வென்றிவேலவன்மணந் தலைவிளம்ப .. ... ... ... ...*
வோகையெய்தியெழுந்தனிகதமோ ... ... ... ... *
டும்பர்நாதனு றுங்கிரிபுற்றான் ... ... ... ... ...*
சேகரஞ்செறிசாகரமண்ணிற் ... ... ... ... ... ... *
சேருமன்னவர்யாருமடைந்தார்... ... ... ... ...*
மாகநேரிடைமாதர்கண்மைந்தர் ... ... ... ... ... *
வாவிகாவிலுலாவிமகிழ்ந்தார் ... ... ... ... ...*

(இ-புரை.) தேவேந்திரனுடைய தூதர்கள்போய் வெற்றியுள்ள வேலாயுதக்கடவுளுடைய திருக்கலியாண மகோற்சவத்தைச் சொன்னார்கள் அதைக்கேள்விப்பட்டவுடன் சந்தோஷமடைந்து சேனைகளுடன் புறப்பட்டுத் தேவேந்திரனிருக்குந் திருப்பரங்குன்றத்திற்போய்ச்சேர்ந்தான் இந்தச்சக்ரவர்த்தியந்தது மல்லாமல் இவனைப்பொருந்திய சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்திலிருக்கும் அரசர்களெல்லாரும் வந்து சேர்ந்தார்கள் மின்னையொத்த இடையையுடைய அரசமாதர்களும் ராஜபுத்திரர்களும் தடாகத்தினிடத்திலும் சோலையினிடத்தும் உலாவித்திரிந்தார்கள்.—(எ-று.) உம்பர்நாதன் என்பதனைப் பரமசிவனெனக் கூறினும் அமையும். (௰௪)

ஆனகாலையிலார்கலியூடே .. ... ... ... ... ... ...*
யாழியொன்றுடைவாடகவையப் ... ... ... ... *
பானுவெழுந்தனன்வந்ததுகங்குல்... ... ... ... ... ...*
பங்கமற்றபரங்கிரிமீதே ... ... ... ... ... *
வேனில்வேண்முசுகுந்தனுமல்லால் ... ... ... ... ...*
வீறுமன்னருமேறுபுவேள்விக் ... ... ... ... *
கோனைவந்தனைசெய்திடவன்னோன் ... ... ... ... ...*
போதிலாமுகமன்கள்புகன்றான் . . ... ... ... *

(இ-புரை.) அவ்வாறெல்லாரும் வந்திருக்கும்போது ஒருசக்கரமுள்ள பொன்மயமான தேரினையுடைய சூரியன்சமுத்திரத்திலெழுந்தான் உடனேயிருளும்விபாயிந்தது அதற்குமேல்மன்மதனையொத்த அழகுள்ள முசுகுந்தச்சக்கரவர்த்தியும் இந்தச்சக்ரவர்த்தியுமல்லாமல்மேன்மைபெற்றிருக்கும் மற்ற அரசர்களும்பழுதில்லாத திருப்பரங்குன்றத்தின்மேலேறித் தேவேந்திரனைப்பணிந்தார்கள் அவ்விந்திரனவர்களுக்குக் குற்றமில்லாத உபசாரவார்த்தைகள்சொன்னான்.—(எ-று.) (௰௫)

அன்னபோதினிலாதவனுதி... ... ... ... ... ... ...*
யண்டர்மாதவராருமடைந்தார் ... ... ... ... *
மன்னுமேவல்விழிமங்கையெல்லாம் ... ... ... ... ...*
வாரணத்திருமாதையடைந்தே • ... ... ... ... *
பொன்னுலாமணிசெய்தனரன்ன ... ... ... ... ...*
போதுகோயிற்போதினன்மாயோன் ... ... ... *
மின்னுவேலவனாலயமுற்றே ... ... ... ... ... ...*
மிக்கவன்பொடுமுன்புவணங்கி ... ... ... ... *

(இ-பொ.) அப்படியிருக்கும்போது சூரியன் முதலாகிய தேவர்களும் முனிவர்களுமற்ற எல்லாரும்வந்துசேர்ந்தார்கள் அதன்பின்பு வேல்போலப் பொருந்திய கண்களையுடைய தேவமாதர்களெல்லாரும் தெய்வயானையம்மையிடத்தில் வந்து பொன்முதலாகிய ரத்னாபரணங்களை அலங்கரித்தார்கள்அப்போதுதேவேந்திரனும்பிரமதேவனும்விஷ்ணுவும்பிரகாசியாநின்றவேலாயுதமேந்தியசுப்பிரமணியசுவாமியின் ஆலயத்திற்போய்மிகுந்தஅன்புடன்சுவாமியைத்தெரிசிவணங்கி-எ-று.(யசா)

வாரணத்திருமாமகடன்னை ... ... ... ... ... ... *
மன்றல்செய்திடவந்தருளென்ன... ... ... ... ...*
வாரணப்பொருளாகியபுத்தே ... ... ... ... ... *
ளங்கெழுந்துமயூரமடைந்தே ... ... ... ... ...*
தோரணத்திருவீதிபுகுந்தே .. ... ... ... ... ... *
துன்றுவானவர்தூமலர்தூவப் ... ... ... ... ...*
* பூரணக்கவின்மாதாநடிப்பப்... ... ... ... ... ... *
பொங்குபல்லியமெங்குமுழங்க... ... ... ... ...*

(இ-பொ.) தெய்வயானையம்மையை விவாகஞ்செய்து கொள்வதற்காகச்சுவாமியெழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள் வேதப்பொருளாகிய சுப்பிரமணியசுவாமியானவர் எழுந்துமயிலின்மேல்ஆரோகணித்துக்கொண்டுதோரணங்கள் நிறைந்திருக்கின்ற திருவீதியிற் சேர்ந்துநெருங்கி வருகிறதேவர்கள்நலபுஷ்பவருஷம் பொழியவும் பூரணமாகியசௌந்தரியமுள்ளரம்பாஸ்திரீகள்நடனஞ் செய்யவும் மிகுந்த பல வாத்தியங்கள் எவ்விடத்தும் ஆரவாரிக்கவும்.-()

---

* பூரணக்கவினமாதர்முப்பத்திரண்டுஅழகுமுள்ளமாதரெனக்கொள்க.

பொழிப்புரை.

இன்னபோலவளங்கள்விளங்க ... ... ... ... ... *
வெம்பிரானினிதேகிமணஞ்செய்... ... ... ... ...*
கொன்னுலாவியசாலைமுனீலக் ... ... ... ... ... *
குன்றமஞ்ஞையினின்றுமகன்று... ... ... ... ...*
னன்னபோதுபுலோமசைபால்கொண் ... ... ... ... *
டண்ணறாளைவிளக்கியகன்றன்... ... ... ... ...*
மன்னும்வேலவன்மன்றனிற்போய்... ... ... ... ... *
வாளரித்தவிசுற்றனன்மன்னோ ... ... ... ... ...*

(இ-புரை.) இத்தன்மைபோல வளங்கள்விளங்கவும் எம்பிரானினிதாகச்சென்று பெருமைபொருந்திய திருக்கலியாணமண்டபத்தின்முன் நீலமலைபோன்ற மயிலிலிருந்திழிந்தருளினார் அப்போது இந்திராணி காமதேனுவின் பால்விட்டுச் சுவாமியினுடையதிருவடிகளைவிளக்கஞ்செய்தகன்றாள் நித்தியத்துவமுள்ள வேலாயுதக்கடவுள் கலியாணமண்டபத்தினெழுந்தருளி ஒளிபொருந்திய சிங்காசனத்தில் வீற்றிருந்தார்.—(எ-று.) (௰அ)

வேலனேவலின்மான்முதல்விண்ணோர் ... ... ... ... *
வீறுதங்கவிருப்பவிருப்பக் ... ... ... ... ...*
கோலமாமுகசுந்தரனுமற்றைக் ... ... ... ... ... *
கொற்றவானவருங்குமரேசன் ... ... ... ... ...*
பாலடைந்துபணிந்தனரங்கண் ... ... ... ... ... *
பாரிடங்கள்பரிந்தயல்சூழ... ... ... ... ... ...*
வாலமுண்டமிடற்றினன்மாதோ ... ... ... ... ... *
டந்தரத்திடைவந்தனனம்மா ... ... ... ... ...*

(இ-புரை.) அதன்பின் சுப்பிரமணியசுவாமியினுடையகட்டளையினால் விஷ்ணுமுதலாகிய தேவர்கள் புகழ்பொருந்த இருந்தார்கள் அவர்களப்படியிருக்கும்போது விருப்பத்துடன் அழகுபொருந்திய வேலேந்தியமுகசுந்தச் சக்கிரவர்த்தியும் வெற்றியுடையமற்றை அரசர்களும்சுப்பிரமணியசுவாமியினிடத்தில் வந்து பணிந்து சூழ்ந்திருந்தார்கள் இவர்களுமல்லாமல் பூதர்களும்பரிவுடன் சூழ்ந்திருந்தார்கள் இங்கேயிவர்களெல்லாருமிருக்கும்போது ஆலகாலவிஷமுண்டகண்டத்தையுடையபரமசிவன்பார்வதிதேவியாருடன் ஆகாயத்திலெழுந்தருளினார்.

மங்கைதன்னொடுமான்மிழிந்தே... ... ... ... ... ...*
மன்றலெல்லையில்வந்திடவென்றி ... ... ... ... *
தங்குவேலன்மகிழ்ந்தெதிர்சென்றே ... ... ... ... ...*
தந்தைதன்னொடுதாயைவணங்கி ... ... ... ... *
வுங்கெடுத்தணர்புவிரன்போ... ... ... ... ... ...*
டுச்சிமோந்தனர்மால்முதலும்பர்... ... ... ... *
மங்குல்கண்டமயூரமதென்ன ... ... ... ... ... ...*
வந்துவந்துவணங்கிமகிழ்ந்தார் ... ... ... ... *

(இ-புரை.) பார்வதிதேவியாருடன் விமானம்விட்டிழிந் தருளிக் கல்யாண மண்டபத்தில் எழுந்தருளும்போது வெற்றி பொருந்திய வேலாயுதக்கடவுள்மகிழ்ந்து எதிர்சென்று மாதாபிதாக்களைவணங்க அவர்களெடுத்து அன்புடன் அணைத்துக்கொண்டு உச்சிமோந்தார்கள் அவ்வாறுமகிழ்ச்சியடைந்தவர்களை விஷ்ணுமுதலியதேவர்கள் மேகத்தைக்கண்ட மயிலைப்போல வந்துவணங்கிமகிழ்ச்சியடைந்தார்கள். (எ-று.)

பூமணப்புரிசோலைபுள்வேலன் ... ... ... ... ... ...*
பூவைபோபாடிறைவற்கொடுபோக ... .. ... ... *
மாமலிந்துவரித்தவிசொன்று ... ... ... ... ... ...*
வள்ளலாணையின்வந்தவண்மேவக் ... ... ... ... *
காமர்கொண்டவதன்கணிருந்தே ... ... ... ... ...*
கந்தனைத்தமதைகொடெடுத்தே ... ... ... ... *
துமருங்கிலிருத்தினர்மேவதன் ... ... ... ... ... ...*
சூர்மடிந்ததுமுற்றுமுரைத்தாள் ... ... ... ... *

(இ-புரை.) பொலிவாகிய திருக்கல்யாணமோச்சவஞ்செய்யும் மண்டபத்துக்கு சுப்பிரமணியசுவாமியானவர் பார்வதிதேவியாரையும் பரமசிவனையும் அழைத்துக்கொண்டுபோனார் அந்தச்சமயத்திலசுவாமியினுடையகட்டளையினால் ஆகாயத்தின்வழியாக ஒருசிங்காசனம் வந்து அங்கிருந்தது வழுத்திகொண்ட அதனிடத்திலிருவருமிருந்துசுப்பிரமணியசுவாமியைத்தங்களுடையதிருக்கைகளாலெடுத்துப்பரிசுத்தம்பொருந்தியதங்கள் அருகுமலைவைத்துக்கொண்டார்கள் அப்போது பிரமதேவன்சுவாமிக்கு சூரனிறந்ததையெல்லாஞ்சொன்னார். (எ-று.)

எந்தையன்னவிருவிமகிழ்ந்தே... ... ... ... ... *
யிங்குமன்றலியற்றுகவென்ன ... ... ... ... *

பொழிப்புரை.

வந்தரக்கிறைபேகிமகட்கொண் ... ... ... ... ... ...*
டங்கண்வந்திடவந்தமடந்தை ... ... ... ... ... *
நந்திமேபாலுமைபாளைவணங்க ... ... ... ... ... ...*
நாரிமுற்பநெற்றவிசின்கண் ... ... ... ... ... *
சுந்தரிமேடவடலின்னையிருத்தக் ... ... ... ... ... ...*
கண்டுகண்கள்களித்தனரியாரும் ... ... ... ... *

(இ-பு-ரை.) நம்முடைய அய்யனாகிய பரமசிவன் பிர்மதேவன் சொன்னவைகளையெல்லாம் விரும்பி மகிழ்ந்து இனித் திருக்கல்யாணஞ் செய்ததியென்று கட்டளையிட்டருளினவுடன் தேவேந்திரன்சென்றுதன் புத்திரியை அழைத்துக்கொண்டுவந்தான் வந்த தெய்வயானையம்மை பரமசிவனையும் பார்வதிதேவியாரையும் வணங்கினவளவில பார்வதிதேவியார் அந்தத்தெய்வயானையம்மையை அங்கிருக்குஞ் சிங்காசனத்தில் சுப்பிரமணியசுவாமியுடனிருக்கச்செய்தார் அதைக்கண்டு எல்லாருந்தங்கள்மனங்கள் களித்தார்கள்.—(எ-று.) (உஉ)

கற்பெருஞ்சிறைகொய்தவனங்கன் ... ... ... ... ... *
கன்னலொண்பனல்பன்னிவிடுப்ப ... ... ... ...*
பொற்புமேவிறைதாள்கள்விளக்கிப் ... ... ... ... ... *
பூசைசெய்துபுராரிகுமார ... ... ... ... ... ...*
னற்கரத்துடநந்தையைநல்கி .. ... ... ... ... ... *
நல்கமேனெனவாரமுகுட்ப ... ... ... ... ...*
வற்பன்மானவிளங்கயசெவ்வே ... .. ... ... ... *
வங்கைதட்டினிடையங்குகொண்டான் ... ... ... ...*

(இ-பு-ரை.) மலையினுடையபெரிய சிறகுகளை அறுத்ததேவேந்திரன் தன் மனைவியானவள் கரும்பிரச நீரைவிடுப்ப அழகுள்ளவேலேந்திய சுப்பிரமணியக்கடவுளுடைய திருவடிகளைவிளக்கி ஆராதனைசெய்து பரமசிவனுடையபுத்திரர் திருக்கரங்களிலதெய்வயானையம்மையைக்கொடுத்து என்புத்திரியைக் கொடுத்தேனென்று நீர்வார்த்தான்அவ்வாறு தேவேந்திரன்வார்த்தநீரினை சூரியனையொப்பாக விளங்குகின்ற சுப்பிரமணிய சுவாமியானவர் தம்முடைய திருக்கரத்திலேற்றுக் கொண்டார்.—(எ-று.) (உங)

அண்டர்போற்றபனங்குவிதித்த ... ... ... ... ... ...*
வாசிமங்கலநாணிணையந்நாள் ... ... .. ... ... *
கண்டமீதுதரித்தளகத்தோர் ... ... ... ... ... ...*
கந்தநீடுகவின்றொடைசூடா... ... ... ... ... *
வொண்டிறற்பெறுவன்னிவலங்கொண்... ... ... ... ...*
டும்பன்மாதினதோதிமமுட்க... ... ... ... ... *
மண்டுசீர்நடைகற்றிடுதாளை ... ... ... ... ... ...*
வலையிற்சிலைமீமிசைவைத்தான் ... ... ... ... *

(இ-ள்.) தேவர்கள் போற்றிசெய்யும்படியாகிய பிரமதேவன் அப்போது நிருமித்த குற்றமில்லாத மாங்கலியசூத்திரத்தைத் தெய்வயானையம்மை திருக்கண்டத்தினிடத்திலே தரித்து தாம் சூடிக்கொண்டிருக்கும் ஒருபூமாலையை அந்தத் தெய்வயானையம்மை அளகபாரத்திலேசூட்டிப் பிரகாசமும் வெற்றியும் பெற்ற அக்கினியை வலமாகவந்து தெய்வயானையம்மையினுடைய அன்னபட்சிகள் நாணும்படியான சீர்பொருந்திய நடையுள்ள வலப்பாதத்தை அம்மியின்மேல் விரைவுடன் எடுத்துவைத்தார்.—(எ-று.) (௨௪)

இன்னதன்மையின் மன்றலியற்றி... ... ... ... ... ...*
யீசனோடுமையாளை வணங்க ... ... ... ... ... *
நன்னலம்பெறுபேரருள்செய்தே ... ... ... ... ...*
நாரிதன்னொடுநாதனகன்றான்... ... ... ... ... *
மன்னுமேலையனங்கொருவித்தன்... ... ... ... ... ...*
மந்திரத்திடைமாதொடுவந்தே... ... ... ... ... *
பொன்னினாடினவாதியையாதிப்... ... ... ... ... ...*
போகமானவர்போகவுரைத்தான் ... ... ... ... *

(இ-ள்.) இத்தன்மையாகத் திருக்கலியாணஞ்செய்துகொண்டு பரமசிவனையும் பார்வதிதேவியாரையும் பணிந்தார் அவர்கள்நன்மையுண்டாகவாழ்த்துதல்செய்து கயிலாயத்துக்கெழுந்தருளினார்கள் அதற்குமேல் சுப்பிரமணியசுவாமியானவர் அவ்விடம்விட்டுநீங்கித் தெய்வயானையம்மையுடன் தம்முடைய ஆலயத்திற்சேர்ந்தருளிப் பொன்னாட்டிலுள்ள தேவேந்திரன்முதலானபோகமுள்ளதேவர்களெல்லாருந்தங்கள் பதிகளுக்குப்போகும்படி விடைகொடுத்தருளினார்.—(எ-று.) (௨௫)

பொழிப்புரை.

விண்ணுலாமிசையோரைவிடுத்தே... ... ... ... ... *
  வீரர்வாயிலின்மேவவிருத்தி ... ... ... ... .. *
யெண்ணிலாவெழில்கொண்டவிருக்கை ... ... ... ... *
  யெம்பிராட்டியொடேட்டியதன்கண்... ... ... ...*
டண்ணலாவியபஞ்சமணைமீத ... ... ... ... ... *
  தையறம்மொருதலனிகர்பெம்மா ... ... ... ...*
னுண்ணிலாவுவிருப்பொடவைய ... ... ... ... ... *
  முய்யநற்கலவித்தொழிலுற்றான்... ... ... ... ...*

(இ-ள்.) சுவர்க்கலோகத்தில்வாழுந் தேவர்களுக்கு விடைகொடுத்தருளியபின்பு நவவீரர்கள் கடைவாயிலிருக்கும்படி சட்டளையிட்டு அளவில்லாத அலங்காரமுள்ள மணவறையில நட்பிறவியாகிய தெய்வயானையம்மையுடன் எழுந்தருளி அவ்விடத்திலிருக்கும் குளிர்ச்சிபொருந்திய மஞ்சத்தின்மேலிருந்து தமகத்தாட்டபொட்பாகிய சுப்பிரமணியக்கடவுள் அந்தத்தெய்வயானையம்மையுடன் உள்ளத்துக்குண்டாகிய விருப்பத்துடன் உலகங்களுய்யும்பொருட்டு நலலசேர்க்கைத்தொழிலுள்ளவராயிருந்தருளினார்.—(எ-று.) (௨௬)

[வேறு.]

தாவிலும்பர்கடத்தமிருக்கையின் ... ... ... ... ... *
மேவினாரடலவேன்முசுகுந்தனு... ... ... ... ... ...*
மேவலாமன்னருமுந்தனிகத்தொடு... ... ... ... ... *
பூவிலுள்ளபுரங்களிற்போயினார்... ... .. ... ... ...*

(இ-ள்.) கெடுதலில்லாத தேவர்கள் தங்கள் தங்கள் விடுதிகளிற்போயிருந்தார்கள் வெற்றியுள்ள வேலாயுதமேந்திய முசுகுந்தசக்கரவர்த்தியும் நீங்குதலில்லாத மற்ற அரசர்களும் மேன்மைபொருந்திய சேனைகளுடன் பூலோகத்திலுள்ள தங்கள் தங்கள் நகரங்களுக்குப்போனார்கள்.—(எ-று.) (௨௭)

மன்னுவெற்பில்வளாயகல்வைகலெம்... ... ... ... ...*
மன்னனேயோடுமடலையடர்ந்தமோ ... ... ... ... ... *
பின்னமோர்பகற்சேயிவிண்ணோர்தொழக் ... ... ... ...*
கொன்னுலாமக்குவட்டினைநீங்கினான் ... ... ... ... *

(இ-புரை.) நிலைபெற்ற திருப்பரங்குன்றத்தில் அளவிறந்த நாள் நம்முடையதாயாகிய தெய்வயானையுடன் சுப்பிரமணியக்கடவுள் வீற்றிருந்துபின்புஒருநாள்பெருமைபொருந்திய தேவர்கள்தொழும்படிமேன்மைபொருந்திய அந்தத்திருப்பரங்கிரியைவிட்டுநீங்கினர்.—(எ-று.)

தவளநித்திலச்சங்கமூலாவிய ... ... ... ... ... ...*
வுவளகப்பரங்குன்றையொருவியே... ... ... ... ... *
பவளவார்சடைப்பண்ணவன்மைந்தனுந் ... ... ... ...*
துவளமேவுதுறக்கமடைந்தனன் ... ... ... ... ... *

(இ-புரை.) வெண்மைநிறமுடைய முத்துகளைச்சொரிகின்ற சங்கங்க ளூர்ந்துகொண்டிருக்கும்படியாகிய தடாகங்கள்சூழ்ந்த திருப்பரங்கிரியைவிட்டு நீங்கிப் பவளநிறமுள்ள நீண்டசடையினையுடைய பரமசிவனருளிய திருமைந்தரானவர் சோர்வை அடைந்திருக்குஞ் சுவர்க்கலோகத்திற்கு எழுந்தருளினர்.—(எ-று.) (உக)

அன்னகாலையமரர்கள்கம்மியன்... ... ... ... ... ...*
றன்னையின்னதலத்திடைமுன்புபோ ... ... ... ... *
னன்னலங்கொணகர்புரிவாயெனத் ... ... ... ... ...*
தொன்மைபோலத்துறக்கமியற்றினன் ... ... ... ... *

(இ-புரை.) அப்படியெழுந்தருளினவுடன் சுப்பிரமணியசுவாமியானவர் தேவதச்சனைநோக்கி இந்தவிடத்தில முன்னமிருந்ததுபோலமிகுந்தநன்மைபொருந்திய நகரஞ்செய்யெனக்கட்டளையிட்டவளவில் பழமைபோலச் சுவர்க்கலோக முண்டாக்கினன்.—(எ-று.) (௩0)

அந்தநாகத்தரசுபரிந்திட... ... ... ... ... ... ...*
விந்திரற்கங்கெழின்முடிசூடிவித் ... ... ... ... ... *
தந்திவான்மதியானனமாதொடு ... ... ... ... ... ...*
மெந்தையங்கணிருந்தனனெண்ணினள்... ... ... ... *

(இ-புரை.) அந்தச் சுவர்க்கலோகத்தில் அரசுசெய்யும்படி அங்கே தேவேந்திரனுக்கு அழகுபொருந்தியமகுடாபிஷேகஞ்செய்வித்துப்பூர்வதினத்தின் சாயங்காலமுதயமாகாநின்றசிறப்புள்ள சந்திரன்போன்ற திருமுகமுள்ள தெய்வயானையம்மையுடன் நம்மையளுகிய சுப்பிரமணியக்கடவுள் அவ்விடத்தில் அநேகநாள்வீற்றிருந்தருளினர்.(எ-று.)(௩௧)

பொழிப்புரை.

தேனுலாந்தொடைத்தேர்மிசையேறியே ... ... ... ...*
வானமேன்மகவானையிருத்தியே ... ... ... ... ... *
சேனைவீரருந்தேவருந்தானுமாய்க் ... ... ... ... ...*
கானமேவுகயிலையின்மேவினான் ... ... ... ... ... *

(இ-பொ.) தேன்பொழிகின்ற பூமாலைகளால் அலங்காரஞ்செய்யப்பட்ட தேரின்மேல் தெய்வயானையம்மையுடன் ஆரோகணித்துக்கொண்டு தேவேந்திரனை யவ்விடத்தில் அரசுசெய்துகொண்டிருக்கப்படிக் கட்டளையிட்டுச் சேனைவீரர்கள் சூழ்ந்துவரும்படிசென்று சோலைகள் சூழ்ந்தகயிலைபங்கிரியிற் சேர்ந்தருளினார்.—(எ-று.) (௩௨)

(அப்போது வீரவாகுதேவர் சாரதியாயிருந்தார்)

மங்கைமீசன்மகிழப்பணிந்தெழூஉந் ... ... ... ... ...*
தங்கணின்றுமருள்விடைகொண்டுசீர் ... ... ... ... *
பொங்குகந்தப்பொருப்பினின்மேவினான் ... ... ... ...*
றுங்கவீரருந்தொன்மையிலவைகினார் ... ... ... *

(இ-பொ.) கயிலைபங்கிரியில் எழுந்தருளினவுடன் பார்வதிதேவியாரையும் பரமசிவனையும் பணிந்தெழுந்து அவ்விடத்தினின்றும் அருள்விடைபெற்றுக்கொண்டுபோய்ச்சீர்மிகுந்தகந்தகிரியிலேவீற்றிருந்தருளினார் புகழ்பெற்றவீரர்களும் பழமைபோலச் சுப்பிரமணியசுவாமியின் சேவையிலிருந்தார்கள்.—(எ-று.) (௩௩)

இன்னபான்மையிருந்திடவுப்பர்கோன் ... ... ... ...*
பொன்னின்மாபுரந்தரசாற்றுழி ... ... ... ... ... *
மன்னில்மின்னிகர்வாழ்க்கைதுறந்திடாத் ... ... ... ...*
தன்னைநேர்கதி சார்ந்திடவெண்ணினான் ... ... ... ... *

(இ-பொ.) இவ்வாறுசுவாமியானவர்வீற்றிருந்தருளத் தேவேந்திரனானவன் சுவர்க்கலோகத்தைப்புரந்து அரசுசெய்துகொண்டிருக்கும்போது மின்னலையொத்ததாய்ப்பொருந்திய இலவாழ்க்கையைத்துறந்து தனக்குத்தானேயொப்பாகிய மோக்ஷம் பெற எண்ணினான்.- (எ-று.) ()

துறக்கவேந்தன்றுறக்கநினைந்ததைச் ... ... ... ... ...*
சிறக்குமும்பர்கடெரிந்துவந் ... ... ... ... *

* மன் - இலவாழ்க்கை யெனப் பதங் கூட்டுக.

துறக்குருத் துலகாயிதமாமதத் ... ... ... ... ... ...*
துறத்திருப்பினனூழ்வினைபோலவே ... ... ... ... *

(இ-பு-ளா.) சுவர்க்கலோகத்து அரசனாகியதேவேந்திரன் இல்வாழ்க்கையைத்துறக்க நினைந்ததைச் சிறப்புள்ள தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவான் அறிந்துவந்து தர்மவழியில்நிற்குந் தேவேந்திரனுடைய மனமானது உலகாயிதமதத்தில் பொருந்தும்படி ஊழ்வினைதிருப்புவதுபோலத்திருப்பினன்.—(எ-று.) (௩௫)

உலகாயிதம் - புறச்சமயம் ஆறிலொன்று அவை ஆறாவன உலகாயிதம் பவுத்தம் சமணம் மீமாஞ்சை பாஞ்சராத்திரம் பாட்டாசாரியம் என்பனவாம்.

உலகாயிதமதத்தின் முக்கியகோட்பாடாவது மாதர்கள் புணர்ச்சியிலுண்டாம் இன்பமே முத்தியென்பது - அரிவையரின் புறமுத்தியெண்ணுஞ் சிவப்பிரகாசத் திருவிருத்தத்திலும் அறிந்துகொள்க.

(வேறு.)

அன்னவனுரைத்தபொய்யைமெய்யெனக்கொண் ... ... ...*
டறிவிலாமடபதிசயந்தன் ... ... ... ... ... *
றன்வசமாகவரசினைநிறுவிச் ... ... ... ... ... ...*
சசிபொலந்துவீற்றிருப்ப ... ... ... ... *
மன்னரசியற்றுஞ்சயந்தனங்கொருநாள் ... ... ... ...*
வானவர்குருவினைநோக்கி ... ... ... ... ... *
யின்னநாளளவுஞ்சூரனான்மெலிந்த ... .... ... ... ...*
தென்கொலியாமெனவவனிசைப்பான் ... ... ... *

(இ-பு-ளா.) அந்தப்பிரகஸ்பதிபகவான் சொல்லியபொய்யை அறிவில்லாததேவேந்திரன்மெய்யென்று ஏற்றுக்கொண்டுதன்னுடைய அரசாட்சியைச் சயந்தன்வசத்தில் ஒப்பித்து இந்திராணியுடன் இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்தான் இவனிப்படி யிருக்கையில் அரசாட்சி செய்துகொண்டிருக்கும் சயந்தனானவன் ஒருநாள் தேவகுருவைநோக்கி நாங்களிந்நாளளவுஞ் சூரனால் மெலிவுற்றிருந்தது யாதுகாரணமென்று வினவினபோது தேவகுருசொல்லுகிறார்.(எ-று.) (௩௬)

தேவகாண்டம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்- அ௱௰௯.





உ

முருகன் துணை.

# ஆறுவது.

# தக்ஷகாண்டம்.



முன்பொருபகலிலிமையவர்பரவ ... ... ... ... ... *
முளரியந்தவிசிடைமுதல்வ... ... ... ... ... ...*
னின்புறவிளங்குஞ்சத்தியவுலகத் ... ... ... ... ... *
திருந்தனனிருந்துழிமேல்வைக் ... ... ... ... ...*
கொன்பொலிபனையாயிற்றனையரோர்பதின்மரீ ... ... ... *
குழுவினிற்றக்கனுஞ்சரிசில் ... ... ... ... ...*
மின்பொலிநுசுப்புவாணிசேர்புயத்தோன் ... ... ... *
வியன்முகநோக்கியேவினவும் ... ... .. ... ...*

(இ-ள்.) ஆதியிலொருநாள்தேவர்கள்துதிசெய்யும்படி தாமரை மலர்த்தவிசில் வீற்றிருக்கும் பிரமதேவன் இன்பம்பொருந்த விளங்காநின்ற சத்தியலோகத்தில வீற்றிருந்தார் அப்படிவீற்றிருக்கும்போது பெருமைபொருந்திய அவருடைய பத்துப்புத்திரர்கள் கூட்டத்தில் தக்கனென்கிற பெயருள்ள ஒருபுத்திரன் மின்னலம்போலவிளங்குகின்ற இடையினையுடைய சரஸ்வதிசேரும் தோள்களுள்ள பிரமதேவனுடைய பரந்ததிருமுகத்தைநோக்கி வினவுகின்றான்.—(எ-று.) (க)

மொய்வளரமரர்க்கிறையவனாகி ... ... ... ... ... ...*
மூவரினுயர்ந்தவனாகி ... ... ... ... ... ... *
யெவ்வகையுயிர்க்குமுயிரெனவிருக்கு... ... ... ... ...*
மியல்பினன்யாவனென்றிசைப்ப... ... ... ... *
மைவளருருவக்குரிசிலும்யானு... ... ... ... ... ...*
மாறுகொண்டிழியபழவடிவாய்ச் ... ... ... ... *
செவ்வொளிபரப்பியெழுந்துவானிமிர்ந்த... ... ... ...*
தேவனையதிகமாந்தேவன் ... ... ... ... ... *

(இ-பொ.) பலமிகுந்ததேவர்களுக்கு இறைவனாகியும் திருமூர்த்திகளினுயர்ந்தவனாகியும் எவ்வகைப்பட்ட உயிர்களுக்கும் உயிராகியுமிருக்குந் தன்மையையுடையகடவுள் யாரென்றுவினவினன் அப்படிவினவினபோது தக்கனேகேள் விஷ்ணுவும்நானும் நான்பிரமம் நான் பிரமமென்று போர்செய்யும்போது அக்கினிவடிவமாய்ச் செவ்விதானவொளியைப்பரப்பித்தோன்றி வானளாவியிருந்தகடவுளே யாவருக்குமேலாகியகடவுள்.—(எ-று.) (உ)

என்றயனிசைப்பவொருதொழிற்புரிவா ... ... ... ...*
னிருதொழில்செயு நுமக்கிறைபாய்... ... ... ... *
வன்றிறல்படைத்ததென்கொலோவெனலு ... ... ... ...*
மைந்தகேளெங்களைச்சுரரைத் ... ... ... ... *
தூன்றுபல்லுயிரையீற்றின்மாய்த்திடலாற் ... ... ... ...*
றோற்றுவித்தவனவனன்றோ .. ... ... ... ... *
வன்றியுமவனேயெங்கள்பாலிருந்தீண் .. ... ... ... ...*
டளித்தலும்புரத்தலுமருள்வான் ... ... ... ... *

(இ-பொ.) இவ்வாறுபிரமதேவன் சொல்லியவளவில் சிருஷ்டி-திதி- சங்காரமென்கிற மூன்றுதொழில்களில் சங்காரமாகிய ஒருதொழிலைசெய்கின்றவர் மற்றையிரண்டுதொழிலை செய்யும் உங்களுக்குக்கடவுளாகியிருந்த வல்லபம்பெற்றது யாதுகாரணமோவென்றான் புத்திரனே எங்களையும் தேவர்களையும் நிலையாகியபலவுயிர்களையும் இறுதிக்காலத்தில் சங்கரிப்பதினால் ஆதியிலசிருஷ்டித்தவரும் அவரல்லவோ இதுவுமல்லாமல் அந்தக்கடவுளேயெங்கள் பாலிருநது சிருஷ்டிப்பதும்திதிப்பதும்செய்தருள்கின்றார்.—(எ-று.) (௩)

எம்மொடுமொருவனாகியோர்கிரியை... ... ... ... ... *
யியற்றுவான்போலவுமியற்றும்... ... ... ... ...*
பொம்மலதடைந்தவுயிர்தொறுமலரிற் ... ... ... ... *
பொருந்தியவினையெனப்பொருந்துஞ் ... ... ...*
செம்மைகொளவனேமறைமுதற்கலைக ... ... ... ... *
டெரிந்தெமக்குணர்த்தலாற்றெளிந்தே ... ... ...*
மம்மர்கொண்மனத்துப்பேதையாயனையோ ... ... ... *
வவனையெம்போலநீமதித்தாய் ... ... ... ... ...*

பொழிப்புரை.

(இ-பொ.) எங்களுடன் ஒருவராகி ஒருதொழில் செய்கின்றவர் போலவந்து செய்தருளுவார் இதுவுமல்லாமல் பொலிவுள்ள வுயிர்தோறு ம்மலரிலிருக்கும் வாசனைபோலப்பொருந்திய செம்மைகொண்டிருக்கு ம் அந்தக்கடவுளை எங்களுடைய அறியாமையைத்திருவுளத்தறிந்தருளி வேதமுதலாகிய கலைகளை யெங்களுக்குப்போதித்ததினால் நாங்கள் அவ ர் தன்மையை உணர்ந்தோம் நீமயக்கங்கொண்ட மனமுள்ள அறிவீன னாகினையோ அந்தக்கடவுளை யெங்களைப்போல மதித்தனையே. (௪)

எனவிதி பகர்தலு மாயனிவ்வா ... ... ... ... ... *
றிறைபவ னருளிய மறைக ... ... ... ... ... ...*
ளனைவரு மனைத்துயப் பிரமமென்றியம்பிற் ... ... ... ... *
றறைபவி லதன்கொலென் றறையத் ... ... ... ...*
தினகரச் செழுங்கட்பவனைப் புகழ்ந்த ... ... ... ... *
திண்ண மற்றவையெலா முகமன் .. ... ... ... ...*
கனைகடற் புவியந்தணரியானெனமேவ ... ... ... ... *
கழறுதல்போலநீகாண்டி... ... ... ... ... ...*

(இ-பொ.) இவ்வாறுபிரமதேவன் சொன்னபோது அவர்புத்திர னாகியதக்கன் சொல்லுகின்றான் பரமசிவன் அருளிச்செய்த வேதங்கள்யா வையும் எப்பொருளையும் பிரமமென்று சொல்லியிருக்கின்றது அத்த னை இதுவென்னநாரணமென்று சொன்னான் சூரியசந்திரர்களாகிய திரு நேத்திரங்களுடைய பரமசிவனைப்புகழ்தல் உண்மையானபுகழ்ச்சிம ற்றவர்களைப்புகழ்தலெல்லாம்உபசாரவார்த்தை இதற்கொருதிருஷ்டா ந்தஞ் சொல்லுகின்றேன் என்னவெனில ஒலிக்காநின்றகடலாற் சூழப்பட் டபூலோகத்திலிருக்கும் பிராமணர்களை நானென்றுகருதிச் சொல்லுத ல்போலென்று அறிந்துகொள்.—(எ-று.) (௫)

ஆதலாலவனை பதியெனுங்கடவு ... ... ... ... ... *
ளருந்தனைப்பொருந்தியவனு நாங் .. ... ... ... ...*
காதலாலவனதருள்பெறுமடியர் ... ... ... ... ... *
கருதிலயார[illegible]தோன்றிலை ... ... ... ...*
கூதலாலனையமுலைநுழலரட்டுத் ... ... ... ... ... *
தோகைபோர்யருங்கினிற்றுலங்கும் ... ... ... ...*
கோதிலாவரனையடைதிநீயென்றான் .. ... ... ... ... *
குளிர்மலர்ப்பொதுட்டியவாழ்ந்துரிசில்... ... ... ...*

(இ-புரை.) ஆகையால்அவரோ பதியெனுங்கடவுள் நாங்களோவெனில் அரியதாகியபந்தப்பட்டிருக்கிறபசுக்களாம் அன்பினால் அவருடையதிருவருளைப்பெற்றவடியார்கள் நினைத்தாலல்லாமற் பொருள்களொன்றுமில்லை சொக்கட்டான் காயையொத்ததன்மையும் இருளைப்போத்த அளகமும் ஆலிலையொத்தவயிறுமுடைய உள்ளபார்வதி தேவியாரையிடப்பாகத்தில் வைத்தருளியபரமசிவனை நீ அடையக்கடவையென்று குளிர்ச்சியுள்ள தாமரைமலர்ப்பொகுட்டில்வீற்றிருக்கும்பிரமதேவர்சொன்னார் (எ-று)

* சூல - அல் ஆல் எனப் பதம் பிரித்துக்கொள்க.

அல்லிமாமலர்மே லிருந்தவன்மொழிந்த ... ... ... *
வமுதவாசகஞ்செவி புகுதச் ... ... ... ... ...*
செல்லுறழ்மிடற்றிறை யினையெவர்க்குந் ... ... ... *
தெளிந்துமானதத்திடத்தடைந்து ... ... ... ..*
மல்லல்பெற்றிவான் பரமனைக்கருதி ... ... ... ... *
வருடமாயிர ந்தவப்புரிய ... ... ... ... ...*
வில்லனபுருவத் துமைமயா டிப்விடை மேல் ... ... ... *
மேவினனிணையிலாவிமலன் ... ... ... ... ..*

(இ-புரை.) அகவிதழ்களையுடைய தாமரைமலர்ப்பொகுட்டில் வீற்றிருக்கும் பிரமதேவன்சொல்லிய அமுதம்போன்ற வார்த்தைகள் தக்கன்காது குளிரப் புகுந்தவளவில்கருமேகம்போன்ற காளகண்டமுடைய பரமசிவனேயாவருக்கும் இறைவனென்று தெரிந்து மானததடாகத்தருகிற்சேர்ந்து செல்வம்பெற்றிடப் பரமசிவனை மனதில் தியானம்பண்ணிக்கொண்டு ஆயிரம்வருஷம் தவஞ்செய்தான் இவ்வாறு தக்கன் தவஞ்செய்யும்போது தமக்குநிகரில்லாத பரமசிவன் வில்லையொத்த புருவமுள்ள பார்வதிதேவியாருடன் ரிஷபவாகனத்தின்மேல ஆரோகத்துக்கொண்டுவந்து காட்சிதந் தருளினார்—(எ-று.) (ஏ)

அன்னதுதெரிந்துதக்கனெம்மடிக ... ... ... ... ... *
ளடிகளைவணங்கிநின்றேத்த ... ... ... ... ...*
வுன்னதுகருத்திலுற்றதேயதனைய ... ... ... ... ... *
துரைத்தியென்றுரைத்திடவுரைப்பான் ... ... ...*
மன்னுமார்கலிசூழ்ஞாலமேல்லோகு ... ... ... ... ... *
மலரயனுலகுமாலுலகு ... ... ... ... ... ...*
மென்னதாணையினின்றிடவுநிற்பகழ்மேவா ... ... ... ... *
ரொவருமெந்தனைப்புகழ்ந்திடவும் ... ... ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) தக்கன் அதனையறிந்து நம்மிறைவனாகிய பரமசிவனுடைய திருவடிகளைவணங்கிநின்று தோத்திரஞ்செய்தான் சுவாமிதக்கனை நோக்கி உன்கருத்திலிருக்கும்விருப்பம்யாதோ அதனைச்சொல்லென்னச் சொல்லுகிறான் நிலைபெற்றசமுத்திரஞ்சூழ்ந்த உலகமும் தேவலோகமும் பிரமலோகமும் விஷ்ணுலோகமும் என் ஆக்கினையின்படி நிற்கவும் உன்னைப்புகழ்கின்றவர்கள் எல்லாரும்வந்து என்னைப்புகழவும்.. (அ)

எந்தைநின்னிடத்திலிருந்திடுமுமைபா... ... ... ... ...*
ளெனதுமாமகளெனவரவு ... ... ... ... ... ... *
மந்தணன்வடிவாயணைந்துநீமணஞ்செய் ... ... .. ...*
தருளவும்வேண்டுமென்றறைபக் ... ... ... ... *
சந்தரங்கடுத்தகந்தரக்கடவுள் .. ... ... ... ... ...*
கருணையாலிவையளித்தொளித்தா... ... ... ... *
னுந்துசீர்படைத்தசிறுவிதிமனத்தி ... ... ... ... ...*
லோதிமவூர்தியைநினைத்தான்... ... ... ... ... *

(இ-புரை.) எங்களிறைவனே உன்னிடப்பாகத்திலிருக்கும் பார்வதிதேவியார் அடியேனுக்குப் பெருமைபொருந்திய புத்திரியாகவரவும் நீ பிராமணவடிவமாய்வந்து திருமணஞ்செய்துகொண்டருளவும் வேண்டுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டான் இருண்டமேகத்தையொத்தகண்டத்தையுடைய பரமசிவன் அவ்வாறே வரங்கொடுத்தருளி மறைந்துபோனார் அதன்பின்புமேலாகிய சீர்பெற்ற தக்கனானவன் தன் மனதில் பிரமதேவனைநினைத்தான்.—(எ-று.) (௯)

அன்னவாகனத்தொ னன்னவாற்றிந்தாங்... ... ... ... *
கடைந்துநின்றுசி களறையப் ..., ... ... ... ...*
பொன்னுலாம்புரிசைப் புரியெனக்கிவணீ ... ... ... *
புரியெனத்தக்கமாபுரியென் ... ... ... ... ...*
றின்னதீர்பதியொன் றியற்றவங்கதிற்போ ... ... ... *
யெழிலரித்தவிசின்மேலிருந்து... ... ... ... ...*
தன்னைவானகாகமோ் முதலினோர்பரவத் ... ... ... *
தனியரசாற்றினன்றக்கன் ... ... ... ... ...*

(இ-புரை.) பிரமதேவன் தக்கனினைந்ததையறிந்து அங்குவந்து ஆசீர்வசனஞ்சொன்னபோது தக்கன் அவனைநோக்கி எனக்குப் பொன்

மயமாய் விளங்கும் மதில்சூழ்ந்த ஒருநகரம் இப்போது உண்டாக்கவே ண்டுமென்று சொன்னவளவில் பிரமதேவன் தக்கமா நகரமென்றுபெ யருள்ளதாகத் துன்பமில்லாத ஒருநகரம் உண்டாக்கிக்கொடுக்கத் தக்க ன் அந்தநகரத்திற்போய் அழகுள்ள சிங்காசனத்தின் மேலிருந்து கொ ண்டு தன்னைத்தேவேந்திரன்முதலானவர்கள்வந்து புகழும்படி தனியர சுசெய்துகொண்டிருந்தான்—.(எ-று.) (௰)

மற்றவன்மனைவியாயினாள்வேத... ... ... ... ... ...*
வல்லியாம்பெயருடை மடந்தை ... ... ... ... *
கற்றைவாரளகத்தவடனைமலரோன் ... ... ... ... ...*
காதலன்காதலாற்கலந்து ... .. ... ... ... *
முற்றவந்தனிலாயிரஞ்சிறார்ப்பயந்து ... ... ... ...*
முப்புரிநூல்விதிமுடித்துக் .. ... ... ... ... *
குற்றமின்மறையுமனையவர்க்குதவி ... ... ... ... ...*
யினையனவாசகங்கூறும் ... ... ... ... ... ... *

(இ-பொ.) வேதவல்லியென்கிறபெயருடையமாதானவள் தக்கனு க்கு மனைவியாயினாள் பிரமதேவனுடைய புத்திரனாகியதக்கன் கற்றை யாய் நீண்டிருக்கும் அளகபாரத்தையுடைய அந்தவேதவல்லியென்பவ ளை ஆசையுடன்சேர்ந்துபூர்வதபோபலத்தினால் ஆயிரம்பிள்ளைகளைப் பெற்றுப் பூணநூல்தரிக்கிற உபநயநச்சடங்குஞ்செய்து அப்போது அவர்களுக்குக்குற்றமில்லாத வேதமும் உபதேசித்து இந்தவார்த்தைக ளைச்சொல்லுகின்றான்.—(எ-று.) (௰௧)

(வேதவல்லி பிரமதேவனுடைய பாதத்தில் உற்பத்தியானவள்.)

நீவிர்களெவருமுயிர்த்தொகைபடைப்பா ... ... ... *
னிமலனைநினைந்துமானதத்தின் ... ... ... ... ...*
மேவிநாற்றுளத்தின்விழைந்துபொருந்தி ... ... ... *
மீள்திராவிவணெனவிடுப்பப் ... ... ... ... ...*
பூவில்வண்டினங்களிரைக்குமத்தடத்துப்... ... ... ... *
பொருந்தியாண்டருந்தவம்புரிந்தா ... ... ... ...*
ரோவில்சீர்படைத்தநாரதனவண்சேர்ந் ... ... ... ... *
துவர்தவநோக்கியீதுரைப்பான்... ... ... ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) நீங்களெல்லாரும் சிவகோடிகளைச்சிருஷ்டிக்கமானத தடாகத்தினருகில்சேர்ந்து பரமசிவனை நினைந்து தவஞ்செய்து மனதில் விரும்பிய வரத்தைப் பெற்றுக்கொண்டு இவ்விடத்திலவந்து சேருங்க ளென்று அனுப்பினன் அவர்களவ்வாறேசென்று மலர்களில்வண்டினங் களிசை பாடிக்கொண்டிருக்கும் படியான அந்தத்தடாகத்தினிடத்திற் போய் அருமையான தவஞ்செய்துகொண்டிருந்தார்கள் அப்படியிரு க்கும்போது நீங்குதலில்லாத சீர்பெற்ற நாரதமுனிவர் அங்கேவந்து அவர்கள்செய்கின்ற தவத்தைநோக்கி யின்னதுசொல்லுகின்றார்.. .—()

மெய்த்தவம்புரிவீரேதுகாரணநீர்... ... ... ... ... *
வெஃகியவியல்பெனவினவ ... ... ... ... ...*
வுத்தமமுனிகேள்படைப்பதுபொருட்டா ... .. ... *
லுழந்தனமீதெனவுரைப்ப ... ... ... ... ...*
முத்தியைக்கருதாதவத்தொழில்புரிவான்... ... ... ... *
முன்னினீர்பவமிதென்றவர்தம் .. ... ... ... ...*
புத்தியைத்திருப்பியுண்மைவீடளித்தான்... ... ... ... *
பொருவினாரதனெனும்புகழோன் ... ... ... ...*

(இ-புரை.) நீங்கள் மெய்த்தவஞ்செய்கின்றீர்கள் இந்தத்தவத்தை விரும்பிய தன்மைக்குக்காரணம் யாதென்று வினவினர் அவர்கள் அவ ரைநோக்கிஉத்தமமுனிவரேகேளும்சிருஷ்டித்தொழில்செய்யும்பொரு ட்டு இந்தத்தவஞ் செய்கின்றோமென்றார்கள் நாரதமுனிவர் அவர்கள் சொன்னதைக்கேட்டு மோக்ஷத்தைக் கருதாமல் பயனில்லாத காரியத் தைச்செய்ய நினைத்தீர்கள் இதுபாவமானகாரியமென்று சொல்லி அவர் களுடைய மனதைத் திருப்பி அழிவில்லாத மோக்ஷத்தைக் கொடுத்தார் ஒப்பில்லாத நாரதனென்கிறபுகழுள்ளமுனிவர்.—(எ-று.) (௰௩)

சேயிநோர்கதியிற்புகுந்தவாறுளத்தாற்... ... ... ... *
சிறுவிதியறிந்துநோய்செறிந்தாங் ... ... ... ...*
காயிரங்குமரர்ப்பயந்தவர்தமக்கு .. ... ... ... ...*
மவர்க்குமுன்னவர்க்குரைத்ததுபோ ... ... ... ...*
னேயமோடியம்பவவருமானதம்போய் ... ... ... ...*
நிகரிலாவருந்தவஞ்புரிந்து... ... ...*

தூயநாரதனுன்றன்புவீடடைந்த... ... ... ... ... *
துணைவர்போலின்பவீடடைந்தார் ... ... ... ...*

(இ-புரா.) தன் புத்திரர்களாகிய இவர்கள் மோக்ஷத்திற்சேர்ந்த தைத் தக்ஷன் தன் ஞானதிருஷ்டியினால் அறிந்துகொண்டுமனவருத்தம் அடைந்து பின்பு ஆயிரம்புத்திரர்களைப்பெற்று அவர்களுக்கும் அவர்களுக்குமுன்பிறந்தவர்களுக்குப்போதித்ததுபோலநேயத்துடன்போதித்தான் அவர்களும்மானததடாகக்கரையிற்போய் ஒப்பிலலாத அருந்தவஞ்செய்துகொண்டிருந்து அங்குமுன்பபோல நாரதர்வந்துபோதித்ததனால் முன் மோக்ஷமடைந்த தமையன்களைப்போலவே மோக்ஷமடைந்தார்கள்.—(எ-று.) (௰௪)

ஈதையுமறிந்துவெகுண்டுநாரதனை... ... ... ... ... *
யெங்கணுஞ்சுழலகவென்றிசைத்து ... ... ... ...*
மேதகுபுகழ்சோதக்கனோரிருபான் .. ... ... ... ... *
மேலுமூன்றுகியவேற்கண் .. ... ... ... ... ...*
மாதனையுதவித்தருமனேமுதலா ... ... ... ... ... *
மாதவர்க்களித்திருபானேழ் ... ... .. ... ...*
கோதையாதவையீன்றவளாமதிக்குக் ... ... ... ... *
கொடுத்திதுசசியொடுங்கூறும் ... ... ... ... ...*

(இ-புரா.) தக்ஷன் இதையுமறிந்து கோபங்கொண்டுநாரதமுனிவனை எவ்விடத்துந்திரிந்துகொண்டிருக்கக்கடவையென்றுசபித்துமேன்மைபொருந்தியபுகழ்பெற்றதக்கன்வேலபோன்றகண்களையுடையஇருபத்துமூன்று பெண்களைப்பெற்றுத் தருமன்முதலாகிய முனிவர்களுக்குக்கொடுத்து அதன்பின்பு இருபத்தேழுபெண்களைப்பெற்றுச்சந்திரனுக்குக்கொடுத்து இந்தவார்த்தை சந்திரனுடன் சொல்லுகின்றான்.-()

எல்லவரிடத்துமருத்தியோர்படித்தா ... ... ... ... ...*
யிரு[illegible]தியென்றிசைத்தனன்விடுப்ப... ... ... ... *
வல்லைவாண்மதியக்கடவுள்வானுகி ... ... ... ... ...*
வளரொளியிரவையேமுதலாச் ... ... ... ... *
சொல்லியவிருபானெழுவராமடவார்... ... ... ... ...*
துணைமுலைக்கிரிகண்மேற்றோய்ந்து... ... ... ... *

பொழிப்புரை.

மல்லலங்கலவியாரமுதருந்தி ... ... ... ... ... ...*
வாழுநாளுழ்வினைவலியால் ... ... ... ... ... ... *

(இ-புரை.) இந்தப்பெண்களெல்லாரிடத்திலும் ஒருதன்மையான விருப்பத்துடன் வாழ்ந்துகொண்டிருவென்று சொல்லி அனுப்பினான் அவ்வாறு அனுப்பப்பட்ட ஒளியுள்ளசந்திரன் ஆகாயத்தில்விரைவாகச் சேர்ந்து மிகுந்த ஒளியுள்ள அசுவனிமுதலாகச சொல்லப்பட்ட இருபத்தேழுமனைவியர்களுடைய இரண்டுமலைகளையொத்தத்தனங்களிலுந் தோய்ந்துவளப்பம் பொருந்தியகலவியமுதமுண்டு வாழும்நாளில் ஊழ்வினைவலியால்.—(எ-று.) (௰௬)

ஆரன்மாதினையுமவடனக்கிளைய ... ... ... ... ... *
வணிகொண்மாதினையுமேயவாவிற் ... ... ... ...*
சேருதல்புரிந்து துறந்தனரெழிந்த ... ... ... ... *
தேவிமார்தமையவர்சினம்பூத் ... ... ... ... ...*
தேருலாம்புகழ்தோய்தந்தைமாடணுகி... ... ... ... *
யிந்தவாறியம்பலுமனையா .. ... ... ... ... ...*
னேரிலாச்சசிதன்கலைபலாங்கலைய... ... ... ... *
நிகழ்த்தினன்கொடியசூணிலையே ... ... ... ...*

(இ-புரை.) கார்த்திகையென்னும் மனைவியையும் அவளுக்கிளையவளாகிய அழகுபொருந்திய உரோகணியென்னும் மனைவியையுமேவிருப்பத்துடன்புணர்ந்து மற்றைமனைவியர்களை நீங்கிவிட்டான் அவர்கள் அழகுபொருந்திய புகழ்பெற்ற தங்கள் தகப்பனிடத்திற்போய் இந்த முறைமையைச்சொல்லலும் அந்தத்தக்கன் ஒப்பிலலாத சந்திரனுடைய கலைகளெல்லாம் அழிந்துபோம்படி கொடியசாபங்கூறினான்.- (௰௭)

ஐந்துடனொருபான்கலைகளோர்பகற்கொன் ... ... ... *
றுகியேயழியவோர்கலையோ ... ... ... ... ...*
டிந்திரன்புடைபோய்நிகழ்ந்தனவிளம்பி... ... ... ... *
யென்செய்கேனிதற்கெனவிசைப்பச்... ... ... ...*
சுந்தரக்கமலத்தயனெடுதுணாக்கிற்... ... ... ... ... *
சொற்றருதநயனையிரந்தன் ... ... ... ... ...*

வெந்துயர்ப்பெருஞ்சூளகற்றுமென்றவன்பால்... ... ... *
விடுத்தனன்குலிசவேல்விடலை ... ... ... ... ...*

(இ-புரை.) பதினாறுகலைகளும் நாளொன்றுக் கொவ்வொன்றாக அழியவே சந்திரனானவன் மிகுந்துநின்ற ஒருகலையுடன் தேவேந்திரனிடத்திற்போய் நடந்ததைச்சொல்லி நானிதற்கென்னசெய்வேனென்று சொன்னான் அதைக்கேட்ட தேவேந்திரன்கொத்தாகிய மலர்ந்ததாமரை மலர்ப்பொகுட்டில் வீற்றிருக்கும் பிரமதேவனுக்குச்சொன்னால் கொடியனாகிய தன்புத்திரனையிரந்து வெவ்விதான துயரமுள்ள உன்சாபத்தை நீக்குவானென்றுசொல்லி வச்சிராயுதமுள்ள தேவேந்திரன் பிர்மதேவனிடத்துக்கு அனுப்பினான்.—(எ-று.) (௰அ)

சீதளகிரணத்தவிர்மதிக்கடவு ... ... ... ... ... ...*
டிசைமுகத்தொருவனைச்சேர்ந்தாங் ... ... ... *
கோதினனிகழ்ந்தவுனதுகான்முளைக்கி .. ... ... ... ...*
துணர்த்திநோயொழித்தியென்றுரைப்பப் ... ... *
போதமில்கொடியனெனதுரைமதியான் ... ... ... ...*
புகலிலவெஞ்சீற்றம்படிபுரிபு... ... ... ... ... *
மாதுபாகனைநீயடைதியென்றறைய ... ... ... ...*
மருவினன்கயிலைமாலவனாயில் ... ... ... ... *

(இ-புரை.) குளிர்ச்சிபொருந்திய கிரணங்களுடன் பிரகாசித்துக்கொண்டிருக்கும்சந்திரனானவன் பிரமதேவனிடத்திற்போய்நடந்தகாரியங்களைச்சொல்லி உன்புத்திரனாகியதக்கனுக்கு இதைத்தெரிவித்துஎனக்குநேரிட்டிருக்கிற வருத்தத்தை நீக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டான் அதைக்கேட்டபிரமதேவன்சந்திரனைநோக்கி அந்தத்தக்கன் விவேகமில்லாதகொடியவன் என்சொல்லினைமதிக்கான் சொன்னாலோ பின்னும் அதிகமானகோபம்கொள்வான் ஆதலால் நீபரமசிவனிடத்தில் அடைக்கலமாகப்போய்ச்சேரென்று சொன்னவளவில் சந்திரன்கயிலாயகிரியிற் சேர்ந்தான்.—(எ-று.) (௰௯)

நந்தியெம்பெருமானருளினால்விடுப்ப... ... ... ... ...*
நாதனைவணங்கிநின்றயன்சேய்... ... ... ... *
தந்தசூளதனான்மெலிந்தனனிதனைத் ... ... ... ...*
தவிர்த்தியென்றுரைத்தலுஞ்சடைமே ... ... ... *

விந்துவினழியாக்கலைதனைத்தரித்தே ... ... ... ... ...*
யிதனைநாமணிந்ததாலிதுதா... ... ... ... ... *
னிந்தனைபொருந்தவழிந்திடாதிதனி ... ... ... ... ...*
னீநிறின்கலையெலாங்கூடும் ... ... ... ... ... *

(இ-புரை.) நந்திதேவராகிய நம்முடையகடவுள் சந்திரனிடத்தில் கிருபையுள்ளவராய்ச் சுவாமி சந்நிதானத்துக்குப்போம்படி அனுப்பினார் அவருத்தரவுபெற்றுக்கொண்டுபோய்ப்பரமசிவனைப்பணிந்துநின்று பிரமன்தவன்புத்திரன் கூறியசாபத்தினால் அடியேன்வருந்துகின்றேன் அப்பனேயிதனைதீர்த்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டவளவில் சந்திரனிடத்தில் அழியாமலிருந்தஒருகலையையும் தம்முடையசடைமுடிமேல்தரித்துக்கொண்டுசந்திரனைநோக்கியிதனைநாம் தரித்துக்கொண்டபடியினாலேயினியிதுநிந்தனைபொருந்தும்படி அழியாதும்மேலுமோமுன் அழிந்துபோயிருக்கிற உன்னுடையபதினைந்துகலைகளும் இந்த ஒருகலையினால் முன்புபோலக் கூடிப்பூரணமாகும்.()

ஐந்துடனொருபான்பகலெல்லாம்வளரு ... ... ... ...*
மன்னநாட்பின்னமோசுருங்கு ... ... ... ... *
மிந்தவாறெழுகுமெனவிடைகொடுப்ப ... ... ... ...*
வெழின்மதிநிறைந்துவானெழலுஞ் ... ... ... *
சந்தணிநெடிந்தோட்டக்கனீதுணர்ந்து ... ... ... ...*
தனதுளாதடித்தலாற்பரனைப் ... ... ... ... *
புந்தியின்முனிந்துபுலகனாமுனிசொல் ... ... ...*
புந்தியாற்சினமொரீஇயிருந்தான் ... ... ... ... *

(இ-புரை.) நாளுக்குநாள் ஒவ்வொருகலையாகவளரும்பின்புபதினைந்துநாளாகிய பூரணைதிதியின் மறுநாள் முதற்கொண்டு ஒவ்வொருகலையாகக்குறையும் இவ்வாறேயெப்போதும் வளருவதும் குறைவதுமாயிருக்குமென்று கிருபைசெய்து நீபோவென்றுவிடைகொடுத்தருளினவளவில் அழகுள்ள சந்திரன்சோடசகலைகளும்நிறைந்து ஆகாயத்தில் எழுந்து விளங்குவதைச் சந்தனம்பூசிய நெடியதோள்களையுடையதக்கனறிந்து தன் சாபவார்த்தையைமாற்றினமையால் பரமசிவனைக் குறித்து மனதில்கோபமுள்ளவனாகிப் புலகனென்கிற முனிவன்வந்து புத்திசொல்ல அந்தக்கோபத்தைநீக்கியிருந்தான்.—(எ-று.) (உக)

(சந்தனத்துக்குச் சந்தணியென்றே பொருபெயர்.)

[வேறு.]

நின்றிடவினையது நிமலனிடைசேர் ... ... ... ... ...*
குன்றெனவளர்இருகுவிமுலையுமையாள் ... ... ... ... *
வென்றியதுறுசிறுவிதிமகளெனவே .. ... ... ... ...*
வன்றவநிலைமையில்வருசெயன்மொழிவாம் ... ... ... *

(இ-புரை.) இதுவரையில்சொல்லிவந்தகதைவிட்டு இனிபரமசிவனிடப்பாகத்தில்மகிழ்ந்திருக்கும் மலைபோலவளர்ந்து குவிந்திருக்குந் திருத்தனபாராமுள்ள உமையம்மை வென்றிபொருந்திய தக்கனுடைய மகளாக அவனுடையதவநிலைமையினால் திருவவதாரஞ்செய்ததைச்சொல்லுகிறோம்.—(எ-று.) (உ௨)

விண்டொடுகயிலையின்மிசையரியணைமே ... ... ... ...*
லண்டர்களழவெழுமழல்விடமமுதா ... ... ... ... *
யுண்டவனுறைபொழுதுமையவள்பணியா .. ... ... ...*
மண்டியவுனதுமெய்வகைபுகலெனவே .. ... ... .... *

(இ-புரை.) ஆகாயத்தையளாவுகின்ற கயிலாயமலையில்சிங்காதனத்தின்மேல் பரமசிவன்வீற்றிருக்கும்போது உமையம்மையெழுந்து பணிந்து எங்கும்நிறைந்திருக்குந் தேவரீருடைய உண்மைநிலையைச்சொல்லியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டார்.—(எ-று.)

செயல்குணமுருவிவைசெறிகிலமெவ்வணும் ... ... ... *
மயலறநிறைகுவமருவருவுருவென் ... ... ... ... ...*
றியல்பொடுபலவடிவிசைகுவமெனவண்... ... ... ... *
கயல்விழியுமையொடுகழறினனிமலன்... ... ... ... ...*

(இ-புரை.) தொழிலுங்குணமும் உருவமுமாகிய இவைகளையாம் பொருந்தோம் எவ்விடத்தும் விளக்கமுறநிறைந்திருப்போம் பொருந்திய அருவம் உருவம் என்கிற தன்மையுடன் பலவடிவம் பொருந்தியிருப்போமென்று அழகுபொருந்திய சேற்கெண்டையொத்த கிருபாநோக்கமுள்ள உமையம்மைக்குப் பரமசிவன்சொல்லியருளினார்(எ-று.)

நிறைபுகறலுமவணுருவிலையென் ... ... ... ... ...*
றேதினைபலவடிவுளதெனுமியல்பிற் ... ... ... ... *

பொழிப்புரை:

றேதெனவவையெமதருள்வடிவெனவிங் ... ... ... ...*
காதலினெனதுயர்வடிவவையெனலும் ... ... ... ... *

(இ-புரை.) பரமசிவனிவ்வாறுசொல்லியருளினவுடன் நமக்கு உருவமில்லையென்று இப்பொழுது உரைத்தருளி யின்னும்நமக்குப் பலஉருவமுமுண்டென்று சொல்லுந் தன்மையாதென்று உமையம்மைவினவினவளவில் பரமசிவன் அவ்வடிவங்கள்நம்முடைய அருள்வடிவமென்று சொல்லியருளினர் ஆனதால் அது என்னுடையவடிவமேயென்றாள்.

[வேறு.]

உன்னைநம்மெதிர்மனந்தனில்வியந்தனைநயந்தா ... ... *
யுனதிடத்தினுமுனையலாதனைவர்களுள்ளு ... ... ...*
மன்னியாமிருந்தியற்றுவமியற்றுதறவிர்ந்தால ... ... *
மதியெலாமொரீஇமருவுவர்சடமதாய்மாதோ ... ...*
வன்னவாறுநீதெரிதியென்றவனியுண்டவன்முன் ... ... *
னனவானவரானவரோனையோரகத்துட் ... ... ...*
பின்னியாங்குணர்வளித்திடுமியற்கையைவிடுத்தான் ... ... *
றோன்றல்பொன்றுதலின்றியாழ்கின்றநந்தோன்றல் ...*

(இ-புரை.) நம்மெதிரில் உன்னைமனதில் வியந்து சொல்லினை உன்னிடத்திலும் உன்னையல்லாத மற்ற எல்லாரிடத்திலும் நாம் நிலையையாயிருந்துதொழில்படுத்துகிறோம் அவ்வாறுதொழில் படுத்துதலொழிந்தால அறிவுமுழுவதும் நீங்கிச்சடமாயிருப்பார்கள் அந்தமுறைமையை நீ அறியென்று இவ்வுலகத்தையுண்டவன்முதலான தேவர்களுள்ளும்மற்றையோர்களுள்ளும்பொருந்தி அங்கங்கும் அறிவினை அளிக்குஞ் செய்கையைநீங்கினர் உற்பவிக்குதலும் இறப்பதுமில்லாமலெப்போதும் நித்தியராய்வாழ்கின்ற நம்முடையகடவுள்.—(எ-று.) (உகூ)

எங்கணாயகன் கணப்பொழுதினையவாறிருப்ப ... ... ... *
மவனையோர்க்கெலாமெண்ணிலாயுகமதாயெவருந் ...*
தங்கள்செய்கடனாகியமுறையெலாந்தவறிச் ... ... ... *
சடமதாகியேசார்தலுங்களரியாந்தலைவி ... ... ...*
கங்கைவார்சடைக்கருணையங்கடலடிபணிந்து ... ... ... *
கடியனேன்புரிபெரும்பிழைகருத்தினிற்கருதேல் ... ...*

லங்கணுதவிங்கருள்சுரந்தெவனையுமெழுப்பென் ... ... *
றறைந்திரந்திடவெழுப்பின னுருத்திரரவனை ... ...*

(இ-புரை.) நம்மிறைவனிவ்வாறு க்ஷணப்பொழுதிருந்தார்மற்றை யவர்களுக்கெல்லாம் அளவிலலாதயுகங்களாய்எல்லாரும் தங்கள்செய்க டனாகிய முறைகளெல்லாந் தவறிச் சடமாயிருப்பதைக் கவுரியாகிய இறைவிகண்டு கங்கையினையணிந்த நீண்டசடையையுடையகிருபாசமு த்திரமாகிய பரமசிவனுடைய திருவடிகளைவணங்கிகொடுமையேனாகி ய அடியேன்செய்த பெரும்பிழையைத் திருவுள்ளத்திற் கொள்ளாமல் எங்களிறைவனேயிப்போழ்து அருள்கூர்ந்தியாவரையும் எழுப்பவேண் டுமென்று சொல்லி யிரந்தம்பாது உருத்திரனாயுண்டாகின்றார்.-(எ-று.)

ஒன்றுமேவியபதின்மராமுருத்திரரொழுந்தே ... ... ... *
புவரிவாரணஞ்சூலவுபூவுலகில்வந்துலவாப் ... ... ...*
பொன்றபங்கியகொன்றையந்தொடைநெடுஞ்சடிலப் ... *
புனிதநாதனையருச்சனைபருச்சுனப்புவிமாட் ... ...*
டன்றுசெய்தலாற்பரம்பொருளெவரையுமெழுப்ப ... ... *
வரர்களரிபோர்மனந்தெளிந்தெழுந்தனரதற்பின் ..*
சென்றுவானிறகயிலைபஞ்சைலமேன்மருவித் .. ... ... *
திரிபுராரியைவணங்கிநின்றிவையுரைசெய்வார் ... ...*

(இ-புரை.) பதினோருருத்திரர்களிவ்வாறுண்டாகி உப்புநீர்க்கட ல்சூழ்ந்தபூலோகத்திலவந்து கெடாதபொன்னிறமுள்ளதாய் விளங்குகி ன்றகொன்றைப்பூமாலையணிந்த நெடியசடாமுடியையுடைய பரமசிவ னைத் திருவிடைமருதூரென்னுந்தலத்தில் அன்று அருச்சனைசெய்ததமை யால் பரமசிவம்யாவரையும் எழுப்ப விஷ்ணுமுதலானவர்கள் மனந்தெ ளிந்தெழுந்து அதன்பின்பு வெண்மைநிறமுள்ள கைலயங்கிரியிற்சேர் ந்து பரமசிவனை வணங்கி நின்று இந்தவார்த்தைகளை விண்ணப்பம்பண் ணிக்கொள்ளுகின்றார்கள்.—(எ-று.)

(உ-அ)

எண்ணிறந்தநாளதிவெலாமொருவியேசடமா... ... ... *
யெங்கடங்கடன்மறந்தளவிறந்ததீதிசைந்தே ... ...*
மண்ணமேலபவைதீரவொன்றருடியென்றறைய... ... ... *
வனையதிமைகளுமையவடனதிடத்தாகு ... ... ...*

பொழிப்புரை.

நண்ணுநும்பதத்தெனவிடைகொடுத்தனனதற்பி ... ... *
னக்கணரியைத்தக்கல்மாமகளென நணுகி ... ... ...*
மண்ணனிபவாழுதிவந்தியாடணைத்துமென்றிசைப்ப ... ... *
வணங்கிஞள்விடைகொண்டனள்கருணைசேர்வல்லி ...*

(இ-புரை.) அளவில்லாதநாள் நாங்கள் அறிவுமுழுவதும் நீங்கிச் சடமாகி எங்கள்குடன்களைமறந்து அளவிறந்தபாவங்களை யடைந்தோம் இறைவனே அந்தப்பாவங்கள் நீங்க ஒருவகை அருள்செய்யவேண்டுமெ ன்று விண்ணப்பஞ்செய்தார்கள் பரமசிவன் அவர்களைநோக்கி அந்தத் தீமை உமையவளிடத்ததேயன்றியுங்களிடத்ததன்று ஆகையால் உங்க ள்பதவியிற்போய்ச் சேருங்களென்று விடைகொடுத்தருளிப் பரமசிவ ன் அதன்பின்பு உமையவளைநோக்கி நீ தக்கனுடையபெருமையுள்ளபு த்திரியாகப்பொருந்திப்பூலோகத்தில்வாழ்ந்துகொண்டிரு அங்குநாம்வ ந்து உன்னை திருக்கலியாணஞ் செய்துகொள்ளுகிறோ மென்றுதிரு வாய்மலாந்தருளக்கிருபைநிறைந்தஉமையவள்விடைபெற்றுக்கொண்டு அவ்விடம் விட்டு நீங்கிஞள்.—(எ-று.) (உ௯)

அணியுமிந்துவினிளநிலாவெறிப்பதுகடுப்ப ... ... ... *
வறல்பரந்தசெஞ்சடைமுடிக்கடவுளையகன்று ... ...*
மணிபுமரமுங்கரைகளிற்றிரைகள்வந்திறைப்ப... ... ... *
மருவுகாளிந்தியினசமேல்வலம்புரிவடிவாய்ப் ... ...*
பணிதுவார்பிறப்பறுத்தருள்பரம்பொருளுமம் ... ... *
பன்னிபன்னவன்பன்னியங்கிருந்தனள்பன்ன ... ...*
டணிவிலாப்புகழ்மாசிமாமகப்புனலாடத் ... ... ... *
தக்கனென்பவன்மறைக்கொடியொடுமவண்சார்ந்தான் ...*

(இ-புரை.) அணிந்த சந்திரனுடைய இளநிலாவீசுவதையொப்பா கக் கங்கை நீர் பரந்த செஞ்சடைமுடியுள்ள பரமசிவனைவிட்டு நீங்கி ரத்தினங்களையுஞ்சந்தனக்கட்டைகளையும் கரைகளில் அலைகள்கொண்டு வந்துசிந்தும்படிபொருந்தியகாளிந்திநதியில் மலர்ந்திருக்குந்தாமரை மலர்களின்மேலவலம்புரிச்சங்கவடிவமாய்ப்பணிகின்றவர்கள்பிறவியை நீக்கியருளும் பரமசிவனுடைய திருப்பெயரை உச்சரித்துக் கொண்டு அந்தப்பரமசிவனுடையபத்தினியாகிய உமையம்மைநெடுநாள் அங்கிரு ந்தாள் அப்படியிருக்கும்போது குறைவில்லாத புகழுள்ள மாசிமாதத்

தில் வந்த மாமா நக்ஷத்திரதீர்த்தஸ்நானஞ்செய்யும்பொருட்டுத் தக்கனு னவன் தன்பத்தினியாகிய வேதவல்லியுடன் அவ்விடத்தில்வந்தானென-று

அண்டர்சூழ்தரமேவியதக்கனந்நதிநீ ... ... ... ... *
ராடிடும்பொழுதாங்கொருபாங்கரினலர்மே ... ...*
லெண்டயிரந்திருவுயிர்க்கெலமுயிரெனவிருப்போ ... *
னிடம்பிரிந்தயவள்வலம்புரியாகிவீற்றிருத்தல் ... ...*
கண்டெடுத்துழுக்குழவியாயினளவன்வியந்தே ... ... *
கௌவுரியெய்மமாளாகியுந்தனனெனக்களித்து ... ...*
மண்டிசீருளமறைக்கொடிதளிர்கரத்தளித்து .. ... ... *
மன்னுதன்னகரன்னவனடைந்தனன்மன்றே ... ...*

(இ-ள்.) தேவர்கள் சூழும்படிவந்த தக்கன் அந்தநதிநீரில் ஸ்நானஞ்செய்து திரும்பிவரும்பொழுது அந்தநதியின்ஒருபுறத்திலிருக்கும் தாமரைமலர்மேல் எண்ணிறந்த உயிர்களுக்கெல்லாம் உயிராயிருக்கும் பரமசிவனிடப்பாகத்தைவிட்டு நீங்கி உமையவள் வலம்புரிசங்கமாயிருப்பதைக் கண்டெடுத்தபொழுது குழந்தைவடிவமாயிருக்க அவன் சந்தோஷித்து உமையம்மையே குழந்தையாய்வந்தாளென்று களிப்படைந்து மிகுந்த சீருள்ள வேதவல்லியின் தாமரைமலர்போன்ற கையில்கொடுத்துத்தகவுடையவன் பொருந்திய தன்னகரத்திற்சேர்ந்தான்.—(எ-று.)

காதன்மீக்கொளக்கௌவுரியை மறைக்கொடிவளர்த்தாள் ... *
பரிணவாண்முககுவளையையாண்டவண்கட்பச ...*
தேவாண்மதியணிந்தருள்பரம்பொருள்வதுவை ... ... *
செய்யவேதவஞ்செய்வலென்றுமையுமாசெய்யப் .. ...*
போதநீடியதந்தைதாயுளந்தனின்மகிழ்ந்து ... ... ... *
பொருவிலாவொருமாடமட்புரிக்கயல்புரிவித் ... ...*
தாதரம்பெறுகன்னிமாடமாநலவிடம்போ... ... ... *
யாண்டுசென்றிருந்தருந்தவம்புரிந்தனளமலை ... ...*

(இ-ள்.) வேதவல்லியானவள்உமையவளை ஆசையதிகரிக்கவளர்க்கையில்கிருபைநிறைந்த ஒளிபொருந்திய முகமுள்ள உமையம்மை அஞ்சுவருஷஞ் சென்றபோது குளிர்ச்சியும்ஒளியுமுள்ளசந்திரனையணி

ந்தருளிய பரமசிவனைத் திருக்கல்யாணஞ்செய்துகொள்ளும் பொருட்டுத்தவஞ்செய்யவேண்டுமென்று உமாதேவியிருந்து தாய்தந்தையருடன் சொல்ல அவர்கள்மனமகிழ்ந்து ஒப்பில்லாத ஒருதவச்சாலை அந்தநகரத்துக்கயலில்செய்வித்து இசைபொருந்திய தோழிகளுடன் அந்தத் தவச்சாலையில் அனுப்பப்போய் அங்கு உமையவள் அரியதவஞ்செய்துகொண்டிருந்தாள்.—(எ-று.) (௩௨)

பத்தின்மேலுமங்கோரிரண்டாகியபருவம் ... ... ... *
பருவரற்பிறப்பறுத்தருள்பராபரையடைப்பத் ... ...*
தத்துவார்திரைக்கடனஞ்சடக்கியமிடற்றோன் ... ... ... *
றக்கன்மாபுரத்துமையவளிருந்துழித்தலத்து... ... ...*
மெத்துசீரொருமறையவன்போலவந்தணுக ... ... ... *
மிகவுமெம்பிராற்கன்பரிங்கவொளவிருப்பு ... ...*
வைத்தசிந்தையளாகியாங்கெழுந்தெதிர்நடந்து ... ... *
வணங்கிப்பத்துபுநின்றனளறமெலாம்வளர்ப்பாள் ...*

(இ-புரை.) துன்பத்துக்கேதுவாகிய பிறவியை அடியவர்களுக்கு ஒழித்தருளும் உமையம்மை பன்னிரண்டு வயது பொருந்தியபோது தாவுகின்ற நீண்ட அலைகளையுடைய கடலிலுண்டாகிய விஷத்தை அடக்கியகண்டத்தையுடைய பரமசிவன் தக்கமாபுரத்தில உமையம்மையிருக்குமிடத்தில் யாவரும்புகழத்தக்க சீருள்ள ஒருபிராமணன்போலச் சென்றுசேர்ந்தார் அவரைக்கண்டு முப்பத்திரண்டு தருமங்களும்வளர்த்த உமையம்மை இவர்நம்மிறைவனுக்கு மிகுந்த அன்பொன்று விருப்பங்கொண்ட மனமுள்ளவராய் உடனெழுந்து எதிர்கொண்டுவந்து வணங்கித் துதிசெய்து நின்றாள்.—(எ-று.) (௩௩)

எம்பிராட்டியையெம்பிரான்றெரிந்தொருபொருள்கேட் ...*
டுண்டுவந்தனந்தருதியேயுரைப்பமென்றிசைப்ப ... *
நம்பகேட்டியெற்கிசையுமேற்றருகுவனதனை ... ... ...*
நவிறிநீயெனவுனைமணம்புரிந்திடுநயப்பா ... ... *
லிம்பர்மேவினமதற்கிவண்மறுத்தினியுரையே ... ... ...*
லென்றுகூறலுமிடர்நெடுங்கடலில்வீழ்ந்தெழுமேய் *
கும்பமாமுலைசெவித்துணைகரத்தினலடைத்துக் ... ... ...*
குமுதவாய்திறந்தமுதவூறகமிவைகூறும் ... *

(இ-பொ.) நம்பிறைவியைப் பரமசிவனோக்கி நமக்கு ஒருபொருள்வேண்டியிங்குவந்தோம் நீ கொடுக்கிறதாய்ச் சம்மதித்துச் சொன்னால் நாம் சொல்லுகிறோமென்று சொல்ல அய்யரே கேளும் என்னால் கூடுமானதாயிருந்தால் கொடுக்கிறேன் அதனை நீர் சொல்லுமென்ன உன்னை மணஞ்செய்துகொள்ளவேண்டுமென்கிற விருப்பத்தாலிங்குவந்தோம் இப்போது அதற்கினிமறுத்துச் சொல்லாதேயென்று மொழிந்தவளவில் அழகுபொருந்திய பொற்கும்பமொத்த திருத்தனபாரமுள்ள உமையம்மை துன்பமாகிய சமுத்திரத்திலவீழ்ந்து இரண்டுசெவித் துவாரங்களையும் கைகளால் மூடிக்கொண்டு செவ்வலி மலர்போன்ற திருவாய்மலர்ந்து அமுர்தம்போல மதுரமுள்ள இந்தவார்த்தைகள் சொலலுகின்றாள்.—(எ-று.) (௩௪)

[வேறு.]

பெய்தேனிதழித்தொடையும்பிறையும்புனைவோன்வதுவை ...*
செய்தேபருளத்தவமேசெய்வேனுடனீதிசைத்தாய் ... *
பொய்த்தாய்மனத்தோய்கடிதேம்போவென்னப்புகன்று ...*
வைதேயொருபாலகன்றண்மறுவில்கற்பின்மடவாள்... ... *

(இ-பொ.) தேன்பொழியுங்கொன்றைப்பூமாலையையும்பிறையினையுஞ்சூடிய பரமசிவனெழுந்தருளியென்னைவிவாகஞ்செய்துகொள்ளும்பொருட்டுத்தவஞ்செய்துகொண்டிருக்குமென்னுடன் நீர் இந்தவார்த்தைசொன்னீர் பொய்பொருந்தியமனமுள்ளவரே விரைவிலபோய்விடும் போய்விடுமென்றுசொல்லிவைது குற்றமில்லாதகற்புள்ள உமையம்மையானவள் அப்புறமொருபக்கத்திலபோய்விட்டாள்.(எ-று.) (௩௫) மெய்யடியாராலிவ்வாறுசொலலாமொன்பது பற்றிப்பொய்த்தோய்மனத்தோயென்றது.

இவ்வாறுமையகலவெவருந்தெரியாவண்ண ... ... ...*
மைவ்வாழ்களநங்கடவுள்வளர்தன்னுருவமருவச்... ... ... *
செவ்வாய்க்கருங்கண்ணுமையாடெரியாவிழிநீர்சொரியா ...*
வெவ்வாவன்பிற்றொழுதுமுயர்கன்னியரீதுரைப்பார்... ... *

(இ-பொ.) இவ்வாறு உமையம்மையகலவே கருமைநிறந்தங்கிய கண்டமுள்ளநம்முடையகடவுள் எவர்களும் அறியாதபடி தம்முடைய

பொழிப்புரை:

திருமேனிகாட்டிநின்றருளினர் சிவந்தவாயுங்கருமைநிறமுள்ள நேத்திரமுமுடைய உமைபம்மைசிரிக்கக்கண்களிலேஆனந்தபாஷ்பம்பெருக ஒப்பிலாத அன்புடன்தொழுதார் இதைக்கண்டதோழியார்கள் இந்தவாரத்தைசொல்லுகிறார்கள்.—(எ-று.) (௩௬)

மன்னுங்காதன்மறையோன்மாயம்வல்லன்கொல்லோ ... ...*
வென்னேயிதுதான்கன்னிபெம்மைநோக்கிலாவென் ... *
றன்னநடையார்தம்மிலங்கண்சிலவரோடித் ... ... ... ...*
துன்னும்புகழ்சேர்தக்கன்முன்னரிதனைச்சொன்னார் ... ... *

(இ-புரை.) அசைபொருந்திவந்த பிராமணன் மாயையில்வல்லவனே இது என்னகாரணம் இந்தக்கன்னிகை நம்மைப்பார்க்கா திருக்கிறாளென்று பேசிக்கொண்டு அன்னநடைபோன்ற நடையுள்ள சிலதோழிகள் எங்கும்பொருந்திய புகழுள்ள தக்கனிடத்துக்கோடி அவன் முன்னிதைச்சொன்னார்கள்.—(எ-று.) (௩௭)

அந்தவேலைபானுமறிவாலரனென்றறிந்தே .. ... ... ...*
சிந்தைமகிழ்ந்துபரன்முன்செல்லறபோற்றிநின்றே .. ... *
யெந்தையெனதுநகரினணீதம்மேவணுமென்ற ... ... ...*
கொந்தார்குழலாளொடுதன்கொடிமாளிகையுடனொணர்ந்தான் *

(இ-புரை.) அப்போதுதக்கனவன்ஞானத்தினால்பரமசிவனென்றறிந்துகொண்டு மனமகிழ்ந்து சுவாமிமுன் சென்று போற்றிசெய்துநின்று அப்பனே அடியேனுடைய நகரத்துக்கெழுந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து பூங்கொத்துகள் பொருந்திய அளகபாரமுடைய உமைபம்மையுடன் கொடிகள்கட்டப்பட்டுள்ள மாளிகைநிறைந்திருக்குந்தன்னகரத்துக்கு அழைத்துக்கொண்டுவந்தான்.—(எ-று.) ()

ஆதிமுதல்வனங்கோரரியாதனமீதமர ... ... ... ...*
மாதுதன்னைவேதவல்லிபுல்லிமகிழ்ந்தேத... ... ... ... *
சோதிநன்னீராட்டித்துலங்குகலன்கள்சூட்டிக் ... ... ...*
கோதிலுயிர்கட்குயிராங்குழகன்பாங்கர்விடுத்தாள் ... .... *

(இ-புரை.) பரமசிவனங்கிடத்திலொருசிங்காதனத்தில் வீற்றிருந்தார் வேதவல்லியானவள் தன்மகளைக்கண்டு தழுவிக்கொண்டுமகிழ்ச்சி

யடைந்து பிரகாசமுள்ள நல்லநீரினால் ஸ்நாநஞ்செய்வித்து விளங்குகி ன்ற ரத்தினாபரணங்களை யணிந்து அழைத்துக்கொண்டுவந்து குற்றமி ல்லாத உயிர்களுக்குயிராகிய பரமசிவனிடத்தில் விடுத்தாள்.—(எ-று.)

கருந்தாழளகக்கௌவுரிகோனைச்சடலின்புடைவந் ... ... *
திருந்தாளிருந்தவமையத்திமையோரயன்மால்குறுகிப் ... ...*
பொருந்தாதவிற்பணிந்தேபணைதீரிதழ்பிரசஞ் .. ... *
சொரிந்தார்சடையானயல்சூழ்ந்தாரெஞ்சம்வாழ்ந்தார் ...*

(இ-பொ.) கருமைநிறமுள்ளதாய்த் தாழ்ந்திருக்கும் அளகபார முள்ள உமையம்மை கருபாசமுத்திரமாகிய பரமசிவனிடத்தில்வந்திரு ந்தாள் இவ்வாறமர்ந்திருந்தபோது தேவர்களும் பிரமதேவனும் விஷ் ணுவும் அங்குவந்து பொருந்திய அன்புடன் பணிந்து குற்றந்தீர்ந்த கொன்றைப் பூமாலையானது தேனைச்சொரிந்துகொண்டிருக்கும் படி யாகிய சடாமகுடமுள்ள பரமசிவனிடத்தில் வந்து பணிந்து சூழ்ந்திரு ந்து மனமகிழ்ச்சியடைந்தார்கள்.—(எ-று.) (௬௰)

[வேறு.]

தக்கனப்பொழுதெழுந்தனன்மறைக்கொடிதளிர்க்... ... *
கைக்கனுற்றசிரகப்புனல்விடக்கவினுலாஞ் ... ... ...*
செக்கர்பெற்றகமலக்கழல்விளக்கிநுதலம்ச ... ... ... *
ரக்கநக்கனையருச்சனைபுரிந்தனனரோ... ... ... ... ...*

(இ-பொ.) அப்பொழுது தக்கனெழுந்து தன் மனைவியாகிய வேதவல்லி தன்னுடையமாந்தளிர்போன்றகையினிடத்திற் பொருந்திய கரகத்திலிருக்கும் நீரைவிட நெற்றிக்கண்ணுள்ள பரமசிவனுடைய அழ குபொருந்தியவைகளாய்ச்சிவந்தநிறமுள்ளதிருவடித்தாமரை மலர்களை விளக்கஞ்செய்து ஆராதனைசெய்தான்.—(எ-று.) (௬௧)

அருத்திதன்னுடனருச்சனைபுரிந்தபினரன் ... ... ... *
கரத்திலம்பிகைகரத்தினையளித்தெனதுகண் ... ... ...*
வரத்தில்வந்துமகளானவுமையாளைமறையின் ... ... ... *
சிரத்தினிற்குமிறைநிற்குதவல்செய்குவனியான் ... ... ...*

(இ-புரை.) அன்புடன் ஆராதித்தபின்பு பரமசிவனுடையதிருக்க ரத்திலே உமையம்மை திருக்கரங்களைவைத்து அடியேனிடத்தில் வந்து புத்திரிபாகிய உமையம்மையை வேதமுடிவிலிருக்கு மிறைவனேயுனக் குக் கொடுத்தேன்.—(எ-று.) (சஉ)

என்றுகூறியுதகத்தினைவிடுப்பவிமையோர் ... ... ... *
வென்றியன்பொடுபுகழ்ந்தனர்மகிழ்ந்தனர்வினைக்... ... ...*
கொன்றைவேணிபன்மறைந்தனனிதறிந்துதுயர்கொண் ... *
டன்றுசங்கரிவருந்தியதுரைப்பதரிதால்... ... ... ...*

(இ-புரை.) இவ்வாறுசொல்லி நீரினைவிட்டான் அப்போது வென் றியுள்ள அன்புடன் தேவர்கள் புகழ்ந்து மகிழ்ந்தார்கள் இங்கிப்படி யிரு க்கவாசனைதங்கிய கொன்றைமாலையணிந்த சடைமுடியுள்ள பரமசிவ ன்மறைந்துவிட்டார்சுவாமி அவ்வாறுமறைந்ததையறிந்துஉமையம்மை மிகுந்த துயரம் அடைந்து வருந்தியதை யின்னபடியென்று சொல் லுவதரிது.—(எ-று.) (சங)

மன்னுதக்கனிவைகண்டழலெனச்சினமீறி... ... ... ...*
தன்னலம்பெறுகரத்துணைபுடைத்தனனகைத் ... ... ...*
தென்னையெண்ணலன்மறைந்துவசைதந்தனனெனா... ... *
முன்னவன்றனைமொழிந்தனனிகழ்ச்சிமொழியே... ... ...*

(இ-புரை.) பொருந்திய தக்கனிவைகளைக்கண்டு அக்கினிபோலக் கோபங்கொண்டு மிகுந்த நன்மைபொருந்திய கையுடன் கையை அடி த்துக்கொண்டு நகைத்து இந்தச்சிவன் என்னைமதிக்காமல் மறைந்து போய் எனக்குவசையானகாரியங் கொடுத்தானென்று பரமசிவனையிகழ் ந்து பேசினான்.—(எ-று.) (சச)

பண்டுபோலவுமைமாடமதனைடந்துபரிவால்... ... ... ...*
மண்டுநற்றவமியற்றினளியற்றமகிழ்வால்... ... ... ... *
விண்டுவன்னதனமங்கையெதிர்வந்துவிடைமேற்... ... ...*
கொண்டுபோயினனெழிற்கயிலைமீதுகுழகன்... ... ... *

(இ-புரை.) உமையம்மை முன்போலத் தவச்சாலையில் சேர்ந்து அன்புடன் நன்மைபொருந்திய தவஞ்செய்துகொண்டிருந்தார் அப்ப

டிசெய்துகொண்டிருக்கும்போது பரமசிவன்மகிழ்வாய்மலையொத்ததிருத்தனபாரமுள்ள உமையம்மையை திரில்வந்து ரிஷபவாகனத்தின்மேல் வைத்துக்கொண்டு அழகுபொருந்திய கயிலைபங்கிரிக்கு எழுந்தருளினார்.—(எ-று.) (சும)

கன்னிமாரிது தெரிந்தயன்மகன்புடைகலந் ... ... ... ✻
தின்னசெய்கையுரைசெய்யவிறைவன்றனையிகழ்ந் ... ... ...✻
தன்னநாண்முதன்மதித்திலனிருப்பவதனைத் ... ... ... ✻
துன்னுவானவரறிந்தறைகுவாரிணையசொல் ... ... ... ...✻

(இ-புரை.) தோழிமார்களிதையறிந்து பிரமனுடைய மகனாகிய தக்கனிடத்திற்போய் இந்தக்காரியத்தைச்சொன்னார்கள் அதைக்கேள்வியுற்ற தக்கனானவன் பரமசிவனை யிகழ்ந்து அந்தக்காலமுதல் மதித்திலனாயிருந்தான் அதனைநிலைபாகியதேவர்கள் அறிந்து இந்தவார்த்தைதங்களுக்குள் பேசிக்கொள்ளுகிறார்கள்.—(எ-று.) (சுசு)

தக்கனக்கனைமதிக்கிலனிறத்தல்சரத ... ... ... ... ✻
மிக்கவன்னவனிடப்பணியினிற்சுட்வினையா ... ... ... ...✻
லொக்கயாமுமழிவாகவருமென்றவனுறும் ... ... ... ✻
பொக்கின்மாநகரடைந்தவனொடின்னபகல்வார் ... ... ...✻

(இ-புரை.) தக்கனானவன் பரமசிவனை மதிக்காதவனா யிருக்கின்றமையால் அவனிறந்துபோவது நிச்சயம் மிக்கவனாகிய அவனிடம் ஏவலிலிருக்குஞ்செய்கையால்அவனுடனுமும் அழிந்தும்பாம்படி நேரிடுமென்று பேசிக்கொண்டு அவனிருக்கிற குற்றமில்லாத பெருமை பொருந்திய நகரத்திற்சென்று அவனுடனிந்தவார்த்தைசொல்லுகின்றார்கள்-()

[வேறு.]

பெற்றந்தனிலேறு பிரானையுமே ... ... ... ... ... ...✻
றுற்றுந்துமைதன்னையுமுன்னலை நீ ... ... ... ... ✻
குற்றங்கடெரிந்துகுறித்திடனற் ... ...... ... ... ...✻
சுற்றம்பெறுவாரொவர்சொல்லுதியால் ... ... ... ... ✻

பொழிப்புரை:

(இ-புரை.) ரிஷபவாகனத்தின் மேலாரோகணிக்கும் பரமசிவனையும் அழகுபொருந்தி மேன்மையுடைய உமையம்மையினையும் நீமதிக்கவில்லை குற்றங்களைத் தெரிந்து மனதிற்குறித்தால் நல்லசுற்றத் தாரைப் பெறுகின்றவர்கள் யார்சொல்லுவாய்.—(எ-று). (௪௮)

என்றேபலபுந்தியிசைத்திடலு ... ... ... ... ... ... ...*
நன்றேயெனவுன்னிநயந்ததனுக் ... ... ... ... ... ... *
இன்றேதுகுயிற்றுவதென்றிடலு ... ... ... ... ...*
நின்றேயிதுதன்னைநிகழ்த்தினமே ... ... ... ... ... ... *

(இ-புரை.) தேவர்க ளிவ்வாறு பலபுத்திகள் சொன்னவளவில் தக்கனைவனிதுண்மையே யெனக்கருதி யிசைந்து அதற்கிப்போது நான்செய்யத்தக்கது யாதென்றவளவில் அவனெதிரில் நின்று இந்தவார்த்தைசொல்லுகின்றார்கள்.—(எ-று.) (௪௯)

விண்டோய்கயிலைக்கிரிபீதணுகித் ... ... ... ... ... *
தண்டேன்மொழியாளொடுசங்கரனைக் ... ... ... ...*
கண்டேவருகென்றுகதித்தபுகழ்... ... ... ... ... *
கொண்டேசெறியும்பர்கள்கூறினரால் ... ... ... ...*

(இ-புரை.) ஆகாயத்தையளாவிய கயிலாசகிரியிடத்திற் சென்று குளிர்ச்சியுள்ள தேன்போல் இனியவார்த்தையுடையசங்கரியையுஞ்சங்கரனையுங் கண்டு தரிசித்துவரக்கடவையென்றுமிகுந்தபுகழ்கொண்டுநிறைந்துள்ள தேவர்கள்சொல்லினார்கள்.—(எ-று.) (௫0)

இவ்வாறிமையோர்களிசைப்பவிசைந் ... ... ... ... *
தவ்வானவரங்கணமர்ந்திடவைத் ... ... ... ... ... ...*
தொவ்வாரசிதக்கிரியுற்றனனுற் ... ... ... ... ... *
செவ்வாய்மறையல்லிதிருக்கொழுநன் ... ... ... ...*

(இ-புரை.) இவ்வாறு தேவர்கள் சொல்லத்தக்கனிசைந்து அந்தத் தேவர்கள் அங்கேதானே யிருக்கவைத்துச் சிவந்தவாயுடைய வேதவல்லிகணவனாகிய தக்கனைவன் ஒப்பில்லாத வெள்ளிமலையிற் சேர்ந்தான்.

[வேறு.]

சின்மயத்தனுவந்திருந்ததிருந்துமன்னசிலம்பின்மேற் ... ...*
பொன்மலிந்திடுமந்திரத்திடைமுன்புவாசல்புகுந்திட ... *
நன்மைதங்குறவங்குறுங்கணநாதர்நாதனையெள்ளிய ... ...*
புன்மையாயெமதீசனுக்கெதிர்போகலென்றுதடுத்தனர்... *

(இ-புரை.) பரமசிவன் சந்தோஷித்து வீற்றிருந்ததிருந்திய அந்தவெள்ளிமலையின்மேலிராநின்றபொன்னுலியன்று நிறைந்தஆலயத்தின்முன் வாயிலில்புகுந்தவளவில் நன்மைபொருந்த அங்கிருக்குங்கணநாதர்கள் பார்த்து எங்களிறை வனையிகழ்ச்சிசெய்தவனே எங்களீசனுக்கெதிர்போகாதேயென்று தடுத்தார்கள்.—(எ-று.) (ருஉ)

சீறுபூதர்தடுத்தல்கண்டுசினம்புரிந்துதிரும்பியே ... ... *
வீறுதன்னகர்தன்னில்வந்திதுவிண்ணவர்க்குரைசெய்துபின் ...*
னேறமேறியசங்கரன்றனையிந்தநாண்முதலாகநீர் ... ... *
மாறுகொண்டுமதித்திடாதிருமெனவிசைந்தனர்வானுளோர் ...*

(இ-புரை.) சீறுபூதர்கள் தடுத்தலைக்கண்டு தக்கன் திரும்பி மேன்மைபொருந்திய தன்னுடைய நகரத்தில்வந்து இந்தச்சேதியைத்தேவர்களுக்குச் சொல்லிப் பின்புரிஷபவாகனுரூடராகியபரமசிவனை இந்தநாள்முதலாக நீங்கள்மாறுகொண்டு மதிக்காமலிருங்களென்று சொல்ல அதற்குத்தேவர்கள் சம்மதித்தார்கள்.—(எ-று.) (ருங)

என்சொல்கேனிதையென்சொல்கேனெமதீசன்மேன்மையறிந்து ம
பொன்செயஞ்சடையானையெள்ளியபுல்லர்பட்டதுகண்டுநீள்[ப்*
கொன்செயுந்துயர்மாயவாழ்வுகுறித்திதற்குமிசைந்தனர் ...*
மின்செய்வானவராதலால்வினைவெல்லவல்லவரில்லையே ... *

(இ-புரை.) இதனையென்னென்றுசொல்லுவேன் என்னென்றுசொல்லுவேன் நம்முடைய இறைவன்மேன்மையை அறிந்தும் பொன்னிறமுள்ள அந்தப்பரமசிவனை யிகழ்ந்த புத்தியீனர்கள்பட்டதுகண்டும்மிகுந்தபயத்தினைச்செய்வதாய்த்துயர்தருகின்ற அநித்தியவாழ்வைக்குறித்து விளங்குகின்ற தேவர்கள் இந்தக்காரியத்திற்குஞ் சம்மதித்தார்களே ஆதலால் வினையைவெல்ல வல்லவர்களில்லை.—(எ-று.) (ருச)

பொழிப்புரை.

அன்னபோதிசைவானவானவராருமேகவறைந்தபோ ... ...*
வின்னபான்மையிருக்குநாளிலிருக்குநான்முகனேர்மகத் ... *
தன்னையங்கணியற்றவுன்னுபுதன்னதேவல்செய்தநயரை ...*
மன்னுமான்முதலும்பரைக்கொடுவம்மினென்றுவிடுத்தனன் *

(இ-புரை.) தன்வார்த்தைக்குச் சம்மதித்ததேவர்க ளெல்லாரும் போகும்படி சொல்லித்தக்கனித்தன்மையாயிருக்கிறநாளில் வேதமுணர்ந்த பிரமதேவன் ஒருயாகஞ்செய்ய நினைந்துதன்னேவல்செய்யும்புத்திரர்களை நோக்கி நீங்கள்போய் விஷ்ணுமுதலான தேவர்களை அழைத்துக்கொண்டு வாருங்களென்று அனுப்பினான்.—(எ-று.) (௫௫)

மூளுகின்றசினங்கொடன்மகன்முன்னிசைத்ததுமுன்னியான் *
மாளம்வவருமேனுமன்னதுவருகவென்றுமனந்துணிந் ... *
தாளுநாயகன்வெள்ளிவெற்பிலடைந்துநந்திவிடுத்திடக் ...*
காளகண்டனைமுன்பணிந்திருகைகுவித்துரைசெய்குவான் ... *

(இ-புரை.) அதிகரித்த கோபங்கொண்ட தக்கன்முன் சொல்லியிருப்பதைநினைத்து நானிறக்கும்படி நேரிட்டாலும்அதுவரட்டுமென்று மனந்துணிந்து பரமசிவன் வீற்றிருக்கும் வெள்ளிமலையிற்சென்று நந்திதேவர் விடுத்திட உள்ளேபோய்ப் பரமசிவனை முன்வணங்கி யிரண்டு கைகளையுங்குவித்துக் கொண்டு நின்றுசொல்லுகிறான்.—(எ-று.)(௫௬)

எந்தைகேளொருவேள்வியானதையானியற்றுவனங்கணீ ...*
வந்தெனக்கருள்செய்தியென்னமகிழ்ந்துநம்முருவானசீர் *
நந்திதன்னைவிடுப்பமேகெனநான்முகன்றொழுதேகியே ...*
மைந்தனுக்குமுரைத்துநீதிமனோவதிப்புடையுற்றனன் ... *

(இ-புரை.) என்னையனேகேளும் அடியேன் ஒருவேள்விசெய்ய எத்தனித்திருக்கிறேன் அவ்விடத்துக்குத் தாம்வந்து அடியேனுக்கருள்செய்ய வேண்டுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொள்ள அதற்குச் சுவாமி மகிழ்ந்துதம்முருவமாகிய சிறப்புள்ளநந்தியை அனுப்புகிறோம்நீபோவென்னப்பிரமதேவன்வணங்கிச்சென்று அதன்பின்புதக்கனுக்குஞ்சொல்லித் தன்பதியாகிய நீதியுள்ளமனோவதியினிடத்திற்சேர்ந்தான்.(எ-று.)

மிக்கவேள்வியவன்றொடங்கலும்வீறுமான்முதல்விண்ணுளோர்
தக்கனோடுமடைந்துவேள்விசெய்சாலையின்புடைசார்தலுஞ் ...*
செக்கர்வேணியர்நூறுகோடியர்சீறுசாரதர்சூழவே ... ... *
யக்கணந்தனினந்திவந்தனனாதிதேவனதேவலால் ... ... ...*

(இ-புரை.) பெரியதாகியயாகத்தைப் பிரமன்செய்யத் தொடங்கி னபோது வீறுகின்ற விஷ்ணுமுதலாகிய தேவர்கள் தக்கனோடு சென்று வேள்விசெய்யுஞ்சாலையினிடத்திற் சேர்ந்தார்கள் அப்போது பரமசிவ னுடையகட்டளையினால் நந்திதேவரானவர் செஞ்சடையுள்ளவர்களாய்ச் சீறுந்தன்மையுள்ள நூறுகோடிபூதர்கள் தம்முடன்சூழ்ந்து வரும்படி சென்று அந்தயாகசாலையினிடத்திற் சேர்ந்தார.—(எ-று.) (௫௮)

எந்தைவந்ததுகண்டுவேதனெழுந்துகைப்பதுமங்குவித் ... *
துந்துமாதனமீதிருத்தவுவந்திருந்தனனீதுகண் ... ... *
டந்தமற்றபவங்கொடக்கனழைத்துளாரெவனென்றுதன் ...*
சிந்தையூடுகுறித்துணர்ந்துசெயிர்த்துவேதனொடோதுவான் *

(இ-புரை.) எம்முடைய கர்த்தனாகிய நந்திதேவர் வந்ததைக்கண்டு பிரமதேவனெழுந்து தன்னுடையகையாகிய தாமரைமலரைக் குவித்து மேன்மைபொருந்திய ஆதனத்தின்மேல் வீற்றிருக்கும்படி விண்ணப் பஞ்செய்யச் சந்தோஷித்திருந்தார் இதனைக்கண்டு அளவற்றபாவங்கள் பொருந்தியதக்கன் அவரைஅழைத்தவர்கள் யாரென்றுதன்மனதுக்குள் குறித்துணர்ந்துகோபங்கொண்டு பிரமதேவனுடன்சொல்லுகிறான்.-()

சோதிமுன்னரடைந்துவேள்விதொடங்குகின்றதுசொற்றனை *
யாதியுந்தியநந்தியைத்தொழுதன்பினென்முன்னிருத்தினை ...*
வேதகேண்மதிதாதையாதலின்வெட்டிடாதுனைவிட்டனன் ... *
நீதியோவிதுசெய்ததென்றுபுகன்றுபின்னுநிகழ்த்துவான் ...*

(இ-புரை.) சிவனிடத்திற்சென்று நீயாகஞ்செய்யத் தொடங்கின தைச்சொல்லினை அதுவுமன்றிச்சிவன்அனுப்பியநந்தியையென்னெதிரி லிருக்கச்செய்தனை ஆதலால்வேதனேகேள் நீயெனக்குத்தகப்பனாயி ருக்குந்தன்மையைக்கொண்டுஉன்னைவெட்டாமல்விட்டேன்இப்போது நீசெய்தகாரியம் நீதியோவென்றுசொல்லிப்பின்னுஞ்சொல்லுகிறான்()

பொழிப்புரை.

எள்ளுநீர்மைகொள்பித்தனாகியிருக்குமீசன்மகத்தவி ... *
கொள்ளுதற்குரியன்கொலீது குறித்திடாதுகொடுத்தனர் ...*
தள்ளுமற்றவைதவிண்டுவேயுயர்தாணுவென்னமகிழ்த்துநற் ... *
கள்ளுறுங்கமலத்தமுன்பவிகாதறன்றெடுமீதிநீ ... ... ...*

(இ-புரை.) நல்லதேன்நிறைந்ததாமரைப் பொகுட்டில் வீற்றிருக்குந்தேவனை இகழ்ச்சிசெய்யத்தக்க பித்தனாகியிருக்குஞ் சிவன்யாகத்தில் அவிப்பாகங் கொள்ளுதற்குரியவென்று இதையறியாமல்முன்னங்கொடுத்தார்கள் நீயதைத்தள்ளிவிடுவிஷ்ணுமேமேலாகிய பரமென்றுகருதி அவிப்பாகத்தைவிஷ்ணுவுக்குமுன்னேநீகொடு.—(எ-று.) (௬௧)

மற்றெவர்க்குமளித்தியென்னலுமன்னு நந்திமனஞ்சினந் ...*
சுற்றதக்கன்முகந்தெரிந்துணர்வோடுநீதியில்பேதைநீ ... *
பெற்றமேலமலற்பழித்தனைபசிறுமையவனஃதிமேய ... ...*
கொற்றவேள்விகுயிற்றுவோர்முடிபோகவென்றுரைகூறியே *

(இ-புரை.) பின்புமற்றவர்களுக்கெல்லாங்கொடுவென்று சொன்னான் அதைக்கேட்ட நந்திதேவர்மனதிற்கோபங்கொண்டு தக்கன்முகத்தைப்பார்த்து அறிவும் நீதியுமில்லாதமூடனே நீரிஷபவாகனத்தின்மேலாரோகணித்தபரமசிவனை நிந்தித்துவார்த்தைசொல்லினை அவ்வாயன்றிவெற்றியுள்ளயாகஞ்செய்கின்றவர்கள் தலைகள் அறுந்துபோகக்கடவதென்று சாபவார்த்தைசொல்லி.—(எ-று.) (௬௨)

சீறியெம்பெருமானையெள்ளியதீயநின்றலைபோகவென் ... *
றீறிலாதபரம்பரன்றனையெள்ளுநின்றொடிருந்திடும் ... ...*
வீறுமான்முதலும்பரியாவரும்வீரமேவியசூரனுன் ... ... *
மாறருந்துயரத்துழந்திவருந்தவென்றுசபித்தனன் ... ...*

(இ-புரை.) நந்திதேவரிவ்வாறு கூறிக்கோபித்துஎம்மிறைவனையிகழ்ந்த கொடியவனே உன்னுடையதலையும் அறுந்துபோகக்கடவதென்று சபித்துப்பின்னும்முடிவில்லாத பரமசிவனையிகழ்ச்சிசெய்[illegible] னுடனிருந்தவிஷ்ணுமுதலாகியதேவர்களெல்லாரும்வீரம்[illegible] சூரனுல்மாறுதலில்லாத் துயரத்திலழுந்தி வருந்தக்கடவர்[illegible] சபித்தார்.—(எ-று.)

இந்தவாறுபுகன்றுநந்திமெயழுந்துசாரதர்சூழவே ... ... *
யந்தண்மாமதிவேணியானையடைந்தனைத்துமறைந்துபின் ...*
மைந்துறுங்குணவாசன்மேவினன்மன்னுவேதன்மகங்குலைந்த் *
துந்திடுந்துயர்கொண்டுதத்தமிடத்தியாவருமுற்றனர் ... ...*

(இ-புரை.) நந்திதேவரிந்தவாறுசாபங்கூறியெழுந்து பூதகணங் கள்சூழ்ந்துவரும்படி சென்று அழகுங் குளிர்ச்சியுமுள்ள பெருமை பொருந்திய சந்திரனையணிந்த சடையினையுடைய பரமசிவனதுசந்நி யிற்சேர்ந்துநடந்தசேதிகளை யெல்லாஞ்சொல்லிட்பின்பு வன்மைபொ ருந்தியகிழக்குக்கோபுரவாசலிலவீற்றிருந்தார் அவரப்படியிருக்கநிலை பெற்றபிரமதேவன் செய்யத்தொடங்கியயாகம்அழிந்துமேலிடடதுய ரங்கொண்டுதங்கள்தங்களிடத்திலெல்லாருஞ்சேர்ந்தார்கள்.—(எ-று.)()

சொற்றரும்புகழ்நந்திமுன்புகுளிந்துகூறியசூளினு ... ...*
லற்றைநாண்முதலியாரும்வேள்வியியற்றவஞ்சியடர்ந்தனர் *
மற்றையோர்பகறக்கனென்பவன்மாமகஞ்செய்வுன்னியே ...*
கொற்றநற்றொழில்கற்றவும்பர்கள்கம்மியற்கிதுகூறுவான் *

(இ-புரா.) யாவருஞ்சொல்லத்தக்க புகழுள்ள நந்திதேவர் முன் புகோபித்துச்சொல்லிய சாபத்தினால் அன்றுமுதலெல்லாரும் யாகஞ் செய்யப்பயந்திருந்தார்கள்இப்படியிருக்கும்போது தக்கனெனவன்பின் புஒருநாள்பெரியயாகஞ்செய்யநினைத்துவென்றியுள்ளநல்லசிற்பத்தொ ழில் கற்றுணர்ந்தம்தவதச்சனைநோக்கிச்சொல்லுகிறான்.--(எ-று.)(௬௫)

மகம்புரிந்திடுசாலையொன்றுவகுத்தியென்னலுமன்னவன்... *
நிகழ்ந்தகங்கைமருங்கடைந்துதிருந்துமாயிரயோசனை ...*
யகன்றசாலைபடொன்றியற்றலுமங்கணேகியபன்சுதன் ... *
சகம்புகழ்ந்திடுகாமர்கண்டுதனதுளங்களிகொண்டனன் ...*

(இ-புரா.) யாகஞ்செய்வதற்கு ஒருசாலையேற்படுத்தென்றுசொ ன்னவுடன் அந்தத்தேவதச்சன்பிரகாசிக்குங்கங்காநதிக்கருகிற்சேர்ந்து திருத்தமுள்ளதாய் ஆயிரம்யோசனை விசாலமுள்ளஒருயாகசாலை நிர்மி த்தான் [illegible] அங்கேதென் றுலகங்களெல்லாம்புகழும்படியாகிய அத ன் அலங்காரங்களைநோக்கித்தன்மனதிற்களிப்படைந்தான்.(எ-று.)(௬௬)

எள்ளுநீர்மைகொள்பித்தனாகியிருக்குமீசன்மகத்தவி ... *
கொள்ளுதற்குரியன்றொலீது குறித்திடாதுகொடுத்தனர் ...*
தள்ளுமற்றவிதவிண்டுவேயுயர்தானுவென்னமதித்துநற் ... *
கள்ளுறுங்கமலத்தமுன்பவிகாதறன்றெனுமீதிநீ ... ... ...*

(இ-புரை.) நல்லதேனிறைந்ததாமரைப் பொகுட்டில் வீற்றிருக்குந்தேவனே இகழ்ச்சிசெய்யத்தக்க பித்தனாகியிருக்குஞ் சிவன்யாகத்தில அவிப்பாகங் கொள்ளுதற்குரியனென்பதையறியாமலமுன்னங்கொடுத்தார்கள் நீயதைத்தள்ளிவிடுவிஷ்ணுவேமேலாகிய பரமனென்றுகருதி அவிப்பாகத்தைவிஷ்ணுவுக்குமுன்னேநீகொடு.—(எ-று.) (௬௧)

மற்றவர்க்குமளித்திடென்னவுமன்னுநந்திமனஞ்சினந் ...*
துற்றதக்கன்முகந்தெரிந்துணாவோடுநீதியிலம்பதைநீ ... *
பெற்றமேலமலற்பழிதருவாம்பசிறையவனன்றியே ... ...*
கொறமேவள்வியுயிற்றுமோர்முடிம்பாகவென்றுணாகூறியே *

(இ-புரை.) பின்புமற்றவர்களுக்கெல்லாங்கொடுவென்று சொன்னன் அதைகேட்ட நந்திதேவர்மனதிற்கோபங்கொண்டு தக்கன்முகத்தைப்பார்த்து அறிவும் நீதியுமில்லாதமூடனே நீரிஷபவாகனத்திமேலாரோகணிக்கும்பரமசிவனை நிந்தித்துவார்த்தைசொல்லினை அவ்வாயன்றி வெற்றியுள்ளயாகஞ்செய்கின்றவர்கள் தலைகள் அறுந்துபோகக்கடவதென்று சாபவார்த்தைசொல்லி.—(எ-று.) (௬௨)

சீறியெம்பெருமானையெள்ளியதீயநின்றலைபோகவென் ... *
றீறிலாதபரப்பரன்றனையெள்ளுநின்னொடிருந்திடும் ... ...*
வீறுமான்முதலுப்பரியாவரும்வீரமேவியசூரனால் ... ... *
மாறருந்துயரத்தழுந்திவருந்தவென்றுசபித்தனன் ... ...*

(இ-புரை.) நந்திதேவரிவ்வாறு கூறிக்கோபித்து எம்மிறைவனையிகழ்ந்த கொடியவனே உன்னுடையதலையும் அறுந்துபோகக் கடவதென்று சபித்துப்பின்னும்முடிவில்லாத பரமசிவனையிகழ்ச்சிசெய்த உன்னுடனிருந்தவிஷ்ணுமுதலாகியதேவர்களெல்லாரும்வீரம்பொருந்திய சூரனாலமாறுதலில்லாத் துயரத்திலழுந்தி வருந்தக்கடவர்களென்று சபித்தார்.—(எ-று.) (௬௩)

இந்தவாறுபுகன்றுநந்தியெழுந்துசாரதர்சூழவே ... ... *
யந்தண்மாமதிவேணியானையடைந்தனைத்துமறைந்தபின் ...*
மைந்துறுங்குணவாசன்மேவினன்மன்னுவேதன்மகங்குலைந் *
துந்திடுந்துயர்கொண்டுதத்தமிடத்தியாவருமுற்றனர் ... ...*

(இ-பொ.) நந்திதேவரிந்தவாறுசாபங்கூறியெழுந்து பூதகணங்கள்சூழ்ந்துவரும்படி சென்று அழகுங் குளிர்ச்சியுமுள்ள பெருமை பொருந்திய சந்திரனையணிந்த சடையினையுடைய பரமசிவனதுசந்நிதியிற்சேர்ந்துநடந்தசேதிகளை யெல்லாஞ்சொல்லிட்டபின்பு வன்மைபொருந்தியகிழக்குக்கோபுரவாசலில்வீற்றிருந்தார் அவரட்டபடியிருக்கநிலைபெற்றபிரமதேவன் செய்யத்தொடங்கியயாகம்அழிந்துமேலிட்டதுயரங்கொண்டுதங்கள்தங்களிடத்திலெல்லாருஞ்சேர்ந்தார்கள்.—(எ-று.)()

சொற்றரும்புகழ்நந்திமுன்புகளிந்துகூறியசூளினு ... ...*
லற்றைநாண்முதலியாரும்வெள்வியியற்றவஞ்சியடர்ந்தனர் *
மற்றையோர்பகறக்கனென்பவன்மாமகஞ்செய்பவுன்னியே ..*
கொற்றநற்றொழில்கற்றவும்பர்கள்கம்மியற்கிதுகூறுவான் *

(இ-பொ.) யாவருஞ்சொல்லத்தக்க புகழுள்ள நந்திதேவர் முன்புகோபித்துச்சொல்லிய சாபத்தினால் அன்றுமுதலெல்லாரும் யாகஞ்செய்யப்பயந்திருந்தார்கள்இப்படியிருக்கும்போது தக்கனனவன்பின்புஒருநாள்பெரியயாகஞ்செய்யநினைத்துவென்றியுள்ளநல்லசிற்பத்தொழில் கற்றுணர்ந்தம்தேவதச்சனைநோக்கிச்சொல்லுகிறான்.--(எ-று.)(௬௫)

மகம்புரிந்திடுசாலையொன்றுவகுத்தியென்னலுமன்னவன்... *
நிகழ்ந்தகங்கைமருங்கடைந்துதிருந்துமாயிரயோசனை ...*
யகன்றசாலைபதொன்றியற்றலுமங்கணேகியபன்சுதன் ... *
சகம்புகழ்ந்திடுகாமர்கண்டுதனதுளங்களிகொண்டனன் ...*

(இ-பொ.) யாகஞ்செய்வதற்கு ஒருசாலையேற்படுத்தென்றுசொன்னவுடன் அந்தத்தேவதச்சன்பிரகாசிக்குங்கங்காநதிக்கருகிற்சேர்ந்துதிருத்தமுள்ளதாய் ஆயிரம்யோசனை விசாலமுள்ளஒருயாகசாலை நிர்மித்தான் தக்கன் அங்கேசென்று உலகங்களெல்லாம்புகழும்படியாகியஅதன்அலங்காங்களைநோக்கித்தன்மனதிற்களிப்படைந்தான்.(எ-று.)(௬௬)

பொழிப்புரை.

பின்னமொற்றர்முகந்தெரிந்துபிறைக்கொழுந்துமிலைச்சிய ...*
மின்னிருஞ்சடையண்ணலல்லதுவேறுதேவர்களியாரையு... *
மன்னுமிவ்விடையுய்த்திரென்னலும்வல்லையேகியவர்க்கெலாஞ் *
சொன்னபோதரியாதிவானவரியாரும்வந்தனர்துன்னியே ...*

(இ-புரை.) பின்புதூதர்கள்முகங்களைப்பார்த்து இளந்திங்களணிந்தொளிருகின்ற பெருமைபொருந்திய சடையையுடைய சிவனுக்குச்சொல்லாமல்மற்றுள்ள தேவர்களையெல்லாம் இங்கேஅழைத்துக்கொண்டு வாருங்களென்றவளவில் அவர்கள்விரைவாகச்சென்று தேவர்களுக்கெல்லாஞ்சொன்னபோது விஷ்ணுமுதலானதேவர்களெல்லாருஞ்சூழ்ந்துவந்தார்கள்.—(எ-று.) (௬௭)

வந்துதக்கனதிபாகசாலையின்மாயனும்கமலத்தனு ... ... *
மிந்திரன்முதலானதேவர்களியாருமங்கணிருந்தபோ ... ...*
துந்தியப்புகழ்மாதவத்தருவந்துசூழ்தரவந்தனன் ... ... *
றந்திரம்புரிமாலைவென்றடன்மாலைகொண்டததீசியே ... ...*

(இ-புரை.) தக்கனுடையயாகசாலையில் விஷ்ணுவும்பிரமதேவனும்தேவேந்திரன்முதலானதேவர்களெல்லாரும்வந்துஅவ்விடத்திலிருந்தபோது மேன்மைபொருந்திய புகழுள்ளமுனிவர்கள்சந்தோஷித்துசூழ்ந்துவரச்சதந்திரங்கள்செய்யும் விஷ்ணுவைவென்று வெற்றிமாலையணிந்த ததீசிமுனிவர்வந்தனர்.—(எ-று.) (௬௮)

நன்றிகொன்றிடுதக்கன்மாமுனிநண்ணுகின்றதுகண்டபோ ...*
வின்றெனக்கிவனஞ்சிவந்தனனென்றுசிந்தையிலெண்ணியே *
வென்றிமாதவவருகவென்றொருவீறுமாதனமீதலுந் ... ...*
துன்றுமாதவமோடிருந்திதுசொல்லுவான்வினைவெல்லுவான் *

(இ-புரை.) நன்மையைக்கெடுத்திருக்கும்தக்கனானவன் பெருமைபொருந்தியததீசிமுனிவர்வந்ததைக்கண்டு இப்போதுஇவன் நமக்குப்பயந்து வந்தானென்று மனதிலெண்ணி வெற்றியுள்ள ததீசிமுனிவரே வாருமென்றுசொல்லி மேன்மையுள்ள ஆதனமொன்றுகொடுத்தவளவில்வினைகளைவென்ற அந்தமுனிவர் தம்மைச் சூழ்ந்துவந்த முனிவர்களுடனிருந்துஇந்தவார்த்தைசொல்லுகின்றார்.—(எ-று.) (௬௯)

எம்மைபிங்ஙனழைத்தகாரணமென்னவென்னலுமீசனெம் ...*
மம்மைதன்னைமணந்ததற்பினிகழ்ந்தயாவுமறைந்தரோ ... *

மைம்மலிந்திடுகண்டனுக்கவிமாற்றுவான்மகமாற்றுவே... ...*
னும்மையிங்குவிளித்ததன்மையுமின்றிதற்கெனமேவாதினான் *

(இ-புரை.) அந்தமுனிவர் தக்கனைநோக்கி எம்மையிவ்விடத்துக்கு அழைப்பித்த காரணமென்னவென்றார் அதைக்கேட்டதக்கன் சிவன் உமையம்மையைத் திருமணஞ்செய்து கொண்டபின்பு நடந்ததுகளை யெல்லாஞ்சொல்லிக் கருமைநிறந்தங்கிய கண்டத்தையுடைய சிவனுக்கு யாகத்தில்அவிர்ப்பாகங்கொடுப்பதைமாற்ற ஒருயாகஞ் செய்கின்றேன் ஆதலால் உம்மை அழைப்பித்தது அதற்கென்று சொன்னான்.—(எ.று.)

௨ஊறகன்றததீசிதக்கனுரைத்தபான்மைவினவியே... ... ...*
வீறுகொண்டபராபரன்றனிமேன்மைதன்னைவிளப்பியே ... *
யேறுதங்குபதாகையண்ணலெவர்க்குமீசனவற்குநீ ... ...*
மாறுகொண்டுமகஞ்செயேலெனமாசிலானிதுபேசினான் ... *

(இ-புரை.) பழுதுநீங்கிய ததீசிமுனிவர் தக்கன்சொல்லிய தன்மையைக்கேட்டு மேன்மைபொருந்தியபராபரனுடைய பெருமைகளைச்சொல்லிரிஷபக்கொடியுள்ளபரமசிவனே எல்லாருக்குமிறைவன்நீஅவருக்கு விரோதமாக யாகஞ் செய்யாதேயென்று குற்றமில்லாதவராகிய அந்தமுனிவரிந்தவார்த்தைசொன்னார்.—(எ-று.) (எக)

மாசுறென்புபுனைந்துசேகரமாலைபானதுபூணுமோ... ... *
தேசுநீறதுபூசுமோதசைதீர்ந்ததீயுடலேந்துமோ ... ...*
கேசமுங்கருமாமருப்பொடுகேடுறாமையினோடுமே ... *
நேசமோடுதரிக்குமோபரமாகிநின்றிடுநின்மலன்... ... ...*

(இ-புரை.) குற்றம்பொருந்திய எலும்புகளணிந்து தலைமாலைகள்பூணுவானோதேசுபொருந்தியசாம்பலைப்பூசிக்கொள்ளுவானோ மாமிசம் நீங்கிய தீயவுடலை யேந்துவானோ-மயிரும் பன்றிக்கொம்பும் கேடுபொருந்திய ஆமையோடும் நேசமுடன் தரித்துக்கொள்ளுவானோ பரமாயிருக்கும் நிருமலன்—(எ-று.) (எஉ)

கோலஞாலமெலாமுயிர்கள்செற்றல்குயிற்றுமோபுலிதந்தியின் *
றோலொடங்கிகணிச்சிதாவுழைசூலமின்னசுமக்குமோ ... *

பொழிப்புரை:

சாலவும்பலிகொள்ளுமோநடமாடுமோமிகுசாரதர் ... ...*
சீலமேவியபடையெனும்படிதிரியுமோவுயர்தேவனே ... *

(இ-புரை.) அழகுள்ள உலகத்துடன் உயிர்களை யழிக்குந்தலைச்செயாவனா புலியின் றோலையும் யானையின்றோலையும் தீயினையும் மழுவினையும் தாவுகின்றமானையும் சூலத்தையும் சுமப்பானோ மிகுதியாகப் பிக்ஷையெடுப்பானோ கூத்தாடுவானோ மிகுந்தபூதங்கள் நன்மையுள்ளபடையாகக்கொண்டு திரிவானோயாவருக்கும்மேலானதேவன்.—(எ-று.) (௭௩)

நஞ்செயிற்றுடைநாகம்வெண்டலைநவையறத்தரிக்குமோ ...*
விஞ்சுகின்றதன்மேனியல்லதுவேறுமோர்தனுமேவுமோ .. *
வெஞ்சுரதவிருந்திறற்பெறுமேறுதன்மிசையேறுமோ ... *
வஞ்சமாலமருந்துமோநிகரன்றிநின்றிடுமண்ணலே ... ...*

(இ-புரை.) விஷம்பொருந்திய பற்களையுடைய பலம்பொருந்திய சர்ப்பங்களையும் வெண்டலையினையும் குற்றமென்றெண்ணமல் தரிப்பானோ அதிகரிக்குந்தன்மேனியல்லது வேறொருமேனியைப்பொருந்துவானோ குறைவுபடாதமிகுந்த பலமுள்ளரிஷபவாகனமேலேறுவானோ யாவரும்பயப்படத்தக்க விஷத்தையுண்ணுவானோ ஒப்பில்லாதிருக்கும் பரமன்.—(எ-று.) (௭௪)

ஈமமாடலொருத்தியைத்தலையெய்தவைத்தலொருத்தியை ... *
வாமமீதினில்வைத்தல்பிள்ளைமகிழ்ந்துபெற்றிடல்வெங்குணங் *
காமரண்ணல்படைக்குமோவெனம்வகுவாகியகாதைகள் ... *
தாமமார்புளதக்கனோததீசிமாமுனிபேசுவான் ... ... ...*

(இ-புரை.) சுடுகாட்டில் ஆடுதலும்ஒருத்தியைத்தலையின்மேல்பொருந்தவைக்குதலும் மற்றொருத்தியை இடப்பாகத்தில்வைக்குதலும்பிள்ளைகளைமகிழ்ந்துபெறுதலும்தாமதகுணம் உடைமை என்னும் இவைகளெல்லாம் அழகுள்ளபராபரனாயிருப்பவன் படைப்பானோவென்று தக்கன்சொன்னான் அதைக்கேட்ட ததீசிமுனிவர் அவைகளுக்கெல்லாங் காரணமாகிய சரித்திரங்களை மாலையணியுமார்புள்ள தக்கனுக்குச்சொல்லுகின்றார்.—(எ-று.) (௭௫)

வேதன்மால்முதலோரை நம்பன்விதித்தழித்திடும்போதெலாந் *
தீதிலங்கவரென்பணிந்துசிரங்கள்கேசமணிந்துநீள் ... ...*
கோதிலாதொளிர்சூலமீதுடல்கொண்டுநீறதுகண்டுபின் ... *
மீதுபூசியியாவருந்தனைமேவியுய்ந்திடவேண்டியே ... ...*

(இ-பு.) பிரமதேவன் விஷ்ணுமுதலானவர்களைச் சிருஷ்டித்து அவர்களைச்சங்கரிக்கும்போதெல்லாம்குற்றமில்லாத அவர்களுடைய எலும்புகளை மாலையாக அணிந்தும் சிரங்களையுமுயிர்களையும் அணிந்தும் குற்றமில்லாமல் ஒளிருகின்ற பெரிய சூலத்தின்மேல் அவர்கள் உடலைவைத்துக் கொண்டும் யாவரையும் நீறாகவிட்டு அவரகளெல்லாந் தம்மைப் பொருந்தி உய்யவேண்டுமென்கிற கருணையினால் தம்முடைய திருமேனியில பூசிக் கொள்ளுவார்.—(எ-று.) (எ௭)

(மயிரையணிவது உட்சமயத்தில் ஒன்றாகிய மாவிரதமென்கிற சமயத்தினுக்கு உரிய துளவ்வாறணிவதெனில பூண்நூலாகப்பின்னித்தரித்துக்கொள்வது அப்படிதரிக்கப்பட்ட பூண்நூலுக்குப் பஞ்சவடியென்றுபெயர் இந்தச்சமயத்துக்கு எலும்புமணியுமுண்டு இந்தக்கிரமத்தைப்பெரியபுராணத்துகருள் மானக்கஞ்சாறநாயனார் புராணத்திலுங் கண்டுகொள்க.)

ஈதுநின்றிடவாடகக்கணனென்பவன்புவியுண்டுமுன் ... *
பாதலந்தனிலேகமாலொருபாரமேவனமதாகியே ... ... ...*
கோதினுனைமருப்பினைக்கொடுகொன்றுமுன்பெனவெய்தவே *
பூதலந்தனைவைத்தகந்தைபொருந்திமண்ணையழித்தனன் ... *

(இ-புரை.) இது நிற்க பொன்கண்ணனென்னும் ஒரு அவுணன் முன்னெனில பூமியையுண்டு பாதாளலோகத்தில் சென்றொளித்துக் கொண்டான் அதையறிந்தவிஷ்ணுவானவர்ஒருபெரியவராகமாகிக்குற்றமுள்ள அந்த அவுணனைத்தன்கொம்பினாற்கொன்று முன்போலிருக்கும்படி பூமியைவைத்துப்பின்புஅகந்தைமேலிடக்கொண்டுபூமியைஅழித்தார்.()

அந்தவேலையில்வேலைநஞ்சமயின்றநம்பனவன்றமேனர் ... ...*
வந்தொர்கோடுபறிப்பமுன்புலவ்வந்துவந்தனைசெய்திட... *
வெந்தையேனமருப்பணிந்தனனெண்ணிலாவனவரானவ ...*
ருந்துமாழிகடைந்தவேலையின்மந்தரந்தளர்வுற்றம்த ... *

(இ-புரை.) வராகமாகிய விஷ்ணுபூமியை யழிக்கும்போது சமுத்திரத்திலுண்டாகிய விஷத்தை யுண்டபரமசிவன் அவருக்கெதிரில் வந்து ஒருகொம்பைப்பறித்தவளவில் முன்னுணர்ச்சியுண்டாகி வந்தனைசெய்ய நம்முடைய ஐயன் அதற்குத்திருவுளமிரங்கி அந்தப்பன்றிக் கொம்பினைமார்பில் அணிந்துகொண்டார் மற்றொருகாலத்தில் தேவர்கள் அலைவீசுகின்ற சமுத்திரத்தைக்கடையும்போது அதில்மத்தாய்நாட்டிய மந்தரகிரிதளர்வுற்றது.—(எ-று.) (எஅ)

மாலவன்கமடத்துருக்கொடுமந்தரத்தைவெரிந்தனிற் ... ...*
சாலவன்றுபரித்தனன்கடறந்ததங்சுமுதந்தனை... ... ... *
நீலமாயனகந்தைகொண்டுநிறைந்தவேலையுழக்கவே ... ...*
யாலமுண்டவன்வந்துபற்றியவன்றன்வன்மைபழித்தனன்... *

(இ-புரை.) அப்போது விஷ்ணுகூர்மாவதாரங்கொண்டு அந்தமந்தரகிரியைத் தன்னுடைய முதுகில் நிதியாகத்தாங்கிக்கொண்டார் பின்பு தேவர்கள்கடையும்போது சமுத்திரமானது அமிர்தங்கொடுத்தது அதற்குமேல் அந்தநீலமேனிமாயவன் அகந்தைகொண்டு நிறைந்தகடலைக்கலக்குமளவில விஷபானஞ்செய்தகடவுள்வந்துபற்றி அவ்வகந்தையையழித்தார்.—(எ-று.) (எகூ)

உற்றமுன்னுணர்வெய்திமாயனுவப்பிமேனொடுபுகழ்ந்திட .. ...*
வற்றைநாளவனோடுமார்பிலணிந்தனன்னதுநின்றிட ... ... *
முற்றும்வேள்வியதேதரும்பரமுத்தியென்றுயர்புத்தியிற் ...*
சற்றுமெய்ப்பெருமானையெண்ணலர்தாருகாவனமாதவர் ... *

(இ-புரை.) மாயவன்பொருந்தியமுன் அறிவையடைந்துசந்தோஷித்துடன் புகழச் சுவாமி அந்நாளில் அந்த ஆமையோட்டை மார்பில் அணிந்துகொண்டார் இதுநிற்க - செய்கின்றயாகமே பரமுத்தியைத்தருமென்று கருதிக்கொண்டு தாருகாவனத்துரிஷிகள் நம்மிறைவனைத்தங்களுயர்ந்தபுத்தியில் சற்றுமெண்ணமலிருந்தார்கள்.—(எ-று.) (அ௰)

இன்னபான்மைபறிந்துநம்பனிலங்குசீருளமாலொடு ... ...*
மன்னிமங்கயிலாயவெற்பினைவல்லேதன்னிலகன்றுபோய்த் ...*

தன்னையுன்னலர் துன்னிவாழ்வுறு தாருகாவனந்தன்னினற் ... *
கன்னியாகிநடந்திடும்படிகண்ணனுக்கருள்செய்தனன்... ...*

(இ-புரை.) இந்தத்தன்மையையறிந்து பரமசிவன் விளங்குகின்றமாயவனுடன் நிலைபெற்ற கயிலைமங்கிரியை விட்டுநீங்கிவிளைவிற்போய்த்தம்மைநினையாதவர்களிருந்துவாழ்கின்ற தாருகாவனத்திலடைந்து மோகனிப்பெண்ணாகிவரும்படி விஷ்ணுவுக்குக் கட்டளையிட்டருளினார்.—()

மாரவேளையளித்தபச்சருமாயன்மாதுருவங்கொளாச் ... ...*
சாருநீடெழிலவ்வனத்துறு தாபதர்க்கெதிர்போகவிட் ... *
டேரிதேறுடைவர்பன்னிமார்களிருந்தவீதியிலெம்பிரான்... ...*
வாரமோடுபலிக்கடைந்திடுவார்களென்னவணைந்தனன் ... *

(இ-புரை.) மன்மதனையீன்ற பச்சைசமேனிமாயவன்சுவாமிகட்டளையின்படிமிதந்தவளப்பம்பொருந்திய அந்தவனத்திலிருக்குமுனிவர்க்கெதிரில்போக அனுப்பி அழகுடன் அவர்கள் பத்தினிமார்களிருந்தவீதியில் அன்புடன் பிக்ஷைக்குவருகின்றவர்கள்போலச்செய்தார்.—(எ-று.)

மாலைசேர்குழல்மாலைநோக்கினர்மாலையெய்திஞர்மாதவர் ... *
சாலவெம்பெருமானைமானினைமானுகின்றதடங்கணார் ... [யிச்
கோலமோடெதிர்கண்டுமாமயல்கொண்டுகொண்டகலன்களும்போ
சூலபாணிதனைத்துயின்றுயரத்திரோடுதொடர்ந்தனர் ... ...*

(இ-புரை.) பூமாலைபணிந்த அளகபாரத்தையுடைய விஷ்ணுவாகிய மோகினியைத் தாருகாவனத்து ரிஷிகள் பார்த்து மோகங்கொண்டார்கள் மான்பார்வையொத்த பார்வையையுடைய அந்த ரிஷி பத்தினிகள் பிக்ஷாடணமூர்த்தியாக எழுந்தருளிய எம்மிறைவனை மிகுதியான அழகுடன்பார்த்து அதிகமோகங்கொண்டு அணிந்திருந்த கைவளையல்களும் மேகலாபரணங்களு மிழந்து துயரத்துடன் சூலமேந்தியகையையுடையவராகிய தக்ஷிணாமூர்த்திபின்தொடர்ந்தார்கள்.—(எ-று.) ()

அந்தவேலையிலிந்துதாரியனேகமேனியனாகியே ... ... ...*
வந்துமங்கையரொன்னுமாறுமகிழ்ச்சிசெய்திடமாதரா ... *

பொழிப்புரை.

ரெந்தைபாலவனாலுபத்துடனெண் ணுகின்றவெண்ணாயிர ...*
மைந்தராத்தரவந்தமைந்தர்களவ்வளறனினேவணங்கினார் ... *

(இ-புரை.) அப்போது சந்திரசேகரமூர்த்தியானவர் அநேகந்திருமேனியுள்ளவராய்வந்தரிஷிபத்தினிகள் எண்ணும்படிமகிழ்ந்து மோகத்தையுண்டாக்கினவளவில்அந்தமாதர்கள்நம்முடையகர்த்தனுல்விளங்குகின்ற எண்ணாயிரம் புத்திரர்களை அப்பொழுதேபெற்றார்கள் அந்தப்புத்திரர்கள் பரமசிவனைவணங்கினார்கள்.—(எ-று.) (அச)

சங்கரன்னமையுன்னிநீவிர்தவம்புரிந்திடுமென்னவே ... ...*
பங்கணின்றிடமைந்தரேகினரந்தவேலேமுருந்தன ... ... *
மங்கைவந்திடமாதவத்தர்தொடர்ந்துவந்துதம்மாதரார்... ...*
பங்கமுற்றுயர்கற்பழிந்திடுபான்மைகண்டுசினந்தனர் ... *

(இ-புரை.) பரமசிவன் அவர்களைநோக்கி நீங்கள்நம்மைத்தியானித்துத் தவஞ்செய்யுங்களென்று கட்டளையிட்டருளினார் அவர்கள்அவ்வாறே தவஞ்செய்யச்சென்றார்கள் அந்தசச்சைபத்திலவிஷ்ணுவாகியமோகினியானவள் வரக்கண்டு அங்கிருந்தரிஷிகள் அவள்பின்தொடர்ந்துவந்து தங்கள்பத்தினிமார்கள் பங்கம்பொருந்தி உயர்ந்த கற்புஅழிந்ததன்மையைப்பார்த்துக்கோபங்கொண்டார்கள்.—(எ-று.) (அரு)

தீதின்மாதர்கள்கற்பழித்தவனைச்செகுத்திடுவோமெனு... ...*
மாதழற்கொண்மகம்புரிந்ததின்வந்துவந்துபிறந்திடும் ... *
காதுவெம்புலிபரசுநவ்விகடும்பணிதிரள்பூதர்கண் ... ...*
மோதுவெண்டலைதிண்டிறற்றுடிமுயலகன்றனையேவினார் .. *

(இ-புரை.) குற்றமில்லாத நம்முடைய பத்தினிமார்கள் கற்பினை அழித்தவனைக் கொன்றுவிடுவோமென்று எண்ணங்கொண்டு மிகுந்த அக்கினியுள்ளயாகஞ்செய்துஅதில்வந்துவந்துபிறந்தகொல்லும்புலிமழுமான் கொடியசர்ப்பக்கூட்டம் பூதர்கள் மோதும்வெண்டலை மிகுந்த பலமுள்ள தமருகம் முயலகன்என்னுமிவைகளையேவினார்கள்.—(எ-று.)()

வெங்கைதன்னைபுரித்துடுத்தனன்மிக்கமாதர்தானேயாய்ப் ...*
பாங்குறும்படியோதினனொருபாதவன்தலைதிண் ... *

மேலெங்குறும்படிமுயலகன்றனையீடழிந்துமிதித்தனன் ... ...*
வாங்கருங்கவினுற்றமேனியின்மற்றவையாவுமணிந்தனன் ... *

(இ-புரை.) இவைகளொவ்வொன்றாகவரச் சுவாமியானவர் புலியை யுரித்துவஸ்திரமாகத்தரித்துக்கொண்டார் மிகுந்த பூதர்கள்சேனையாய்த் தம்மிடத்திலிருக்கும்படிகட்டளையிட்டார் வன்மையுள்ள திருவடித்தா மரையினால் எங்கும்படி முயலகனைப்பலமாகமிதித்துக்கொண்டார் மற் றவைகளை நீங்குதற்கரிய அழகுபொருந்திய திருமேனியில் அணிந்து கொண்டார்.—(எ-று.) (௮௭)

கூடிகொண்டிடுவிண்ணுளார்தொழவெந்தைநாடகமாடினான் ...*
வீடினொனமாதவத்தர்வீழ்ந்துபின்னுமெழுந்தவங் ... *
கூடுமெங்கள்கொடும்பெரும்பிழைகொள்ளலென்றுவழுத்தவே*
நாடியன்பருள்செய்துபின்கயிலாயமாமலைநண்ணினான் ... *

(இ-புரை.) இவ்வாறு அணிந்து கொண்ட பரமசிவன்பெருமை பொருந்திய தேவர்கள் தொழும்படி அவ்விடத்தில்நடனஞ்செய்தருளி னார் அந்தரிஷிகள் சுவாமியினுடைய சோதிசொரூபத்தைக்கண்டு கண் கள்கூசி யிறந்தவர்கள்போலச சோபமாய் விழுந்து சுவாமியினுடைய அனுக்கிரகத்தினாலே பின்னுமெழுந்துபயனில்லாதமுயற்சியைக்கொண் டிருந்த எங்களுடையகொடியபெரும்பிழையைத் திருவுள்ளத்திற்கொ ள்ளாமல் அருள்செய்யவேண்டுமென்று தோத்திரஞ்செய்தார்கள் சுவா மி அதைக்கண்டு அவர்களுள்ளத்திலே சிவநேச முண்டாகும்படி அருள் செய்துபின்புபெருமைபொருந்தியகயிலையங்கிரியிற்சேர்ந்தருளினார்.

ஈதுநின்றிடவானைமேனியோடுகொண்டகயாசுரன் ... ...*
வேதனல்குவரத்தினாலுயர்விண்ணுமண்ணுமலைக்கவே ... *
மாதவத்தினராருமஞ்சிவளங்கொள்காசியிலோடினார் ... ...*
பாதகன்னவரைத்தொடர்ந்துபடர்ந்துகாசியடைந்தனன்... *

(இ-புரை.) இதுநிற்க ஆனைஉருவத்துடன் பலங்கொண்டகயாசுர னென்பவன் பிரமதேவன் தனக்குக் கொடுத்தவரத்தினால் உயர்ந்தவிண் ணுலகத்தாரையும் மண்ணுலகத்தாரையும் வருத்தஞ்செய்யும்போது மு னிவர்களெல்லாரும் அவனைக்கண்டு பயந்து வளப்பங்கொண்ட காசியி லோடினார்கள் அந்தப்பாதகன் அவர்களை விடாமல் தொடர்ந்துசென் று காசியில்சேர்ந்தான்.—(எ-று.) (௮௯)

கண்டுமாதவர்காசியின்மணிகன்னியாகியவாலயத்...... ... *
தண்டர்நாதனருட்பதத்திலடைக்கலம்புகவங்கணு... ... ...*
ளெண்டிறற்கரிமுன்னரோகியுரித்துமேனிதரித்தனன்... ... *
றுண்டவாண்மதிபோனுதற்பெறுந்தோகையும்பயமாகவே ...*

(இ-ரை.) அவன்வருவதைக்கண்டு முனிவர்கள் காசியிலிருக்கும் மணிகர்ணிகையென்னும் ஆலயத்தில் வீற்றிருக்கும் பரமசிவனுடைய அருட்பாதத்தில் அடைக்கலமாகச்சேர்ந்தார்கள் அதைக்கண்டு பரமசிவன் துண்டமாயிருக்கும்ஒளிபொருந்திய மதிபோன்ற நெற்றியையுடையபார்வதிதேவியாரும் அஞ்சும்படி உக்கிரமூர்த்திரூபங் கொண்டு அந்தயானையினெதிரிற்சென்று அதனையுரித்துத்திருமேனியில் தரித்துக்கொண்டருளினர்.—(எ-று.) (௬௰)

மற்றிவாறிவணிற்பமுற்பகன்மாயனந்தணன்மேருமே ... *
லுற்றகான்முனிவோர்களும்பருவந்துவந்துபணிந்துநீள் ...*
வெற்றிபெற்றிடுமூவர்தங்களில்வீறுடையவனென்றிட ... *
வற்றைவெல்லையின்வேதனானெனவரியுநானெனவோதினன் ...*

(இ-ரை.) இந்தச்சரித்திர மிந்தமட்டிலிருக்க முன்னாளில் விஷ்ணுவும்பிரமதேவனும்மகம்மேருகிரியிலிருக்கும்போது முனிவர்களுந்தேவர்களும்சந்தோஷித்துவந்து பணிந்து வெற்றிபெற்றதிரிமூர்த்திகளில் மேலானவர்கள்யாவரொன்றுவினவினார்கள்அப்படிவினவினபோது பிரமதேவன் நான் மேலானதேவனென்ன விஷ்ணுவும் அவ்வாறே சொல்லினர்.—(எ-று.) (௬௧)

மாறுகொண்டிருவோருமெண்டவிர்வைகல்பூசல்புரிந்திட... *
வாறுகொண்டிடுமண்ணலங்கொளியாகியந்தவொளிக்குளே ...*
வீறுகொண்டவனிற்பமாயன்விழுந்துபோற்றியகன்றன... *
னீறுகொண்டிடுமேனியெந்தையைநீடுவேதனிகழ்ந்தனன் ...*

(இ-ரை.) இந்தஇருவரும் இவ்வாறுமாறுபாடுகொண்டு அளவில்லாதகாலம் போர்செய்தார்கள் அவ்விடத்தில் நதியணிந்தபரமசிவன் ஒருசோதியாகி அந்தச்சோதிக்குள்ளே மேன்மை யுடனிருந்தார் விஷ்ணு அறிந்துபணிந்துபோற்றிசெய்துபோய்விட நீறணிந்ததிருமேனியுள்ள பரமசிவனைநீடியபிரமனிகழ்ந்தனன்.—(எ-று.) (௬௨)

*தையங்குமணத்திருலருளெய்துகாரியைநல்கவே... ... *
வந்துவேதனதுச்சியாமுடிவள்ளுகிர்க்கொடுகிள்ளலுஞ்... ...*
சிந்தைநொந்துவழுத்தவங்கருள்செய்துமாலுலகெய்தின... *
னுந்துமாயனிறைஞ்சிமற்றிவணுற்றதென்னெனவோதினன்...*

(இ-புரை.) தம்முடைய அய்யனாகிய பரமசிவன்திருவுள்ளத்தினால் அருள்பொருந்திய ஒருவயிரவனைஉண்டாக்கினார் அந்த வயிரவன்வந்து பிரமதேவனுடையஉச்சியிலிருக்கும் ஒருதலையைக்கூர்மைபொருந்திய நகத்தினால் கிள்ளினவளவில்பிரமதேவன்மனம்வருந்தித்துதிசெய்யக் கண்டு கிருபைசெய்து அதற்குமேல்விஷ்ணு உலகத்தில்சென்றார் மேன்மைபொருந்திய விஷ்ணுபணிந்து இங்குவந்தகாரணம் என்னென்றோதினார்.—(எ-று.) (௧௩)

உன்றலைப்படுசோரிநீரையுகுத்தியென்னநகத்தினற் ... ... *
றன்றனெற்றிபிளந்துசோரிதனைப்பொழிந்திடநம்பிரான் ...*
வென்றிசேரயனார்பெருஞ்சிரமீதிலேற்றனனூறுநூ... ... *
றென்றுகூறிடுமாண்டுசெல்லவிளைத்துமாயன்விழுந்தனன் ...*

(இ-புரை.) உன்சிரசிற் பொருந்தியஉதிரநீரைச்சிந்தக்கடவையென்றார் விஷ்ணுநகத்தினால்தன்னுடையநெற்றியைப்பிளந்து உதிரத்தைப்பொழிய நம்முடைய இறைவன் வென்றிபொருந்திய பிரமனுடைய தலையினிடத்தில் ஏற்றுக்கொண்டார் இவ்வாறு பதினாயிரம்வருஷம் செல்லவே விஷ்ணு இளைத்துவிழுந்தார்.(—எ-று.) (௧௪)

நீடுகைத்தலைபாதியேனுநிறைந்ததில்லையவன்றனைப் ... ...*
பீடுமேவியகாரியன்பொடுபின்பெழுப்பிநிறுததியே ... *
யீடுகொண்டுபொருந்துமேனுலகெய்தியண்டமியாவையு ...*
நாடியங்கணளித்திருந்தனனுதனாருளாலரோ... ... ... *

(இ-புரை.) வைரவமூர்த்திகையி லிருந்தபெரியதலையில பாதியும் நிறைந்ததில்லை அப்படியிருக்கப்பெருமைபொருந்தியவயிரவர் அந்தவிஷ்ணுவை அன்புடனெழுப்பிநி[illegible]தி அவ்விடம்விட்டு நீங்கிப்பெருமைகொண்டு பொருந்திய மேலுலகத்திற்சென்று அண்டங்களை யெல்லாம் பார்த்துப் பரமசிவனருளால் அவ்விடத்தில் காவலாயிருந்தார்.—(எ-று.)

பகர்ந்தவின்னதுநிற்கமுற்பகல்பண்ணவர்க்கிறையானவ ...*
னகந்தைகொண்டமனத்தொடங்கயிலாயமந்திரமுன்புற ... *
வுகந்துசாரதர்போலவெண்குணனுற்றனன்குலிசத்தினுன் ...*
மிகுந்தபூதவரன்றனக்கெனவேளேயென்றுவிளம்பினன் ... *

(இ-புரை.) சொல்லியஇதுநிற்க முன்னொருநாள்தேவேந்திரன்அகந்தைகொண்டமனதுடன் கயிலாயகிரியிலிருக்கும் ஆலயத்தின்எதிரிற்சேர்ந்தான் அவனுக்கெதிரில்எண்குணமுள்ளவராகிய கயிலாயபதியானவர் சந்தோஷித்து ஒருபூதன்போல வந்துநின்றார் வச்சிராயுதமுள்ள இந்திரன் அறிவின்மையினால் அதனைநோக்கி இப்போது சிவனுக்கு என்னசமயமென்றான்.—(எ-று.) (௬௬)

(எண்வகைக்குணமாவது - தன்வயத்தனாதல் - தூயஉடம்பினனாதல்-இயற்கை யுணர்வினனாதல - முற்றுமுணர்தல - இயல்பாகவேபாசங்களினின்றுநீங்குதல்-பேரருளுடைமை- முடிவில் ஆற்றலுடைமை- வரம்பிலின்பமுடைமை - என்பவைகளாம்.)

வேளேகேட்டுழிவேளையென்றவன்வெஞ்சினங்கொடுநின்றிடக் *
கோனுமிந்திரனுஞ்சினந்துயர்குலிசவேலினையெறியவே... ...*
யாளுமெம்பெருமானைமேவியருந்துகட்படவங்கண ... *
னீளுருத்திரமேனிகொண்டுநெடுஞ்சினங்கொடுநின்றனன் ...*

(இ-புரை.) இந்திரன்சமயங்கேட்டபோது மன்மதனை வென்றபரமசிவன் கோபங்கொண்டு நிற்கவே வலிபொருந்தியஇந்திரனுங்கோபங்கொண்டு உயர்ச்சியுள்ள வச்சிராயுதத்தையெறிந்தான் அது நம்மையாட்கொள்ளும் பரமசிவன் திருமேனியிற் பட்டுக்காணுதற்கரியதுகளாய்விட்டது அப்போதுபரமசிவம்பெரியருத்திரமூர்த்திவடிவத்துடன்மிகுந்தகோபங்கொண்டுநின்றார்.—(எ-று.) (௬௭)

அன்னகாலையினின்றன்மாயமறிந்திலேனநிவற்றயா ... ... *
னென்னிரும்பிழையெண்ண[illegible]னவிறைஞ்சிநிற்கவிடுத்தமோ.
மின்னுதன்சினமானதீயினைமேலைவேலையிலவீசது ... ... *
மன்னுகின்றசலந்தரப்பெயர்மைந்தனைகிவளர்ந்தனன் ... ...*

(இ-புரை.) அவ்வாறு சுவாமியிருந்தபோது இந்திரன் அய்யனே அறிவில்லாத நான் உன்மாயம் அறிந்திலேன் அடியேன்குற்றத்தைத் திருவுள்ளத்திற்கொள்ளலையென்றுபணிந்துநின்றான் சுவாமியானவர் தணிந்துவிளங்குகின்றதன்கோபாக்கினியைமேற்குச்சமுத்திரத்தில் வீசினார் அதுசலந்தரப்பெயருள்ள மைந்தனாகிவளர்ந்தது.—(எ-று.) (௯அ)

வளர்ந்தபின்பவுணகதலத்தொடுமண்ணிலுற்றுயர்விண்ணுளோர்.
தளர்ந்திடும்படிசெய்திரண்டுசதங்கொளாயிரவற்சரம் ... ...*
வளைந்துமாலொடும்போர்புரிந்திடமால்புகழ்ந்துபடர்ந்தனன் *
கிளர்ந்தவும்பர்களோடினார்கயிலாயமாகியகிரியின்மேல்... ...*

(இ-புரை.) வளர்ந்தபின்பு அவுணகதலத்துடன் பூமியிலவந்து உயர்வுள்ளதேவர்கள் தளரும்படிசெய்து இருநூறாயிரவருஷம் விஷ்ணுவுடன் வளைந்து போர்செய்தான் அதற்கும்மேல் விஷ்ணு சலந்தரனைப்புகழ்ந்து போயினர் விளங்குகின்ற தேவாகளிதனையறிந்து கயிலாயகிரியினிடத்திலோடினார்கள்.—(எ-று.) (௯௯)

வெள்ளிவெற்பிடைவிண்ணுளாரவர்மேவியுற்றதறிந்துபின் *
றள்ளுதற்கருமொய்ம்புகொண்டசலந்தரன்படைசூழவே ...*
யெள்ளரும்புகழ்மேவுறுங்கயிலாயவிண்டுவிலேகலும் .. *
வள்ளல்வாசவன்வேண்டவேதியன்வடிவுகொண்டவண்வந்தனன் *

(இ-புரை.) வெள்ளிமலையினிடத்தில தேவர்கள் சென்றிருப்பதையறிந்துபின்பு நீங்குதற்கரியபராக்கிரமமுள்ளசலந்தராசுரன்இகழ்தற்கரிய புகழ்பொருந்திய கயிலாயமலையில சேனைகளுடன்சென்றான் அப்போது தேவெந்திரன் வந்து வேண்டிக்கொண்டதினால பரமசிவன்ஒருபிராமணவடிவங்கொண்டு அவனெதிரிற்சென்றார்.—(எ-று.) (ா)

எங்கணுயகனெங்கணேகுதியென்றுகூறவரன்றனை ... ...*
யடிங்கமரிச்செயமேவினேனெனவீண்டுநின்றன்வலிகாண்டுமென்
றங்கண்மண்ணினிலொராழிதாளினமைத்தெடுக்குதியென்னவே...*
மங்குதன்சிரமீதெடுப்பவுடற்கிழிந்துமடிந்தனன் ... ... *

பொழிப்புரை.

(இ-புரை.) எங்களிறைவன் அவனைநோக்கி நீயெங்கே போகின்றா யென்று வினாவினார் சிவனுடன் போர்செய்ய இங்கேவந்தேனென்றான் அப்படியாகில் இப்போது உன்பலத்தைப் பார்ப்போமென்று அங்குப் பூமியினிடத்தில் தம்முடையதிருவடிவிரலால் ஒருசக்கரம்அமைத்து இதையெடுவென்றார் அதனைஅழியும்படியான தன்தலையின்மேலெடுத்தான்அப்படியெடுக்கும்போது உடல்கிழிந்து இறந்தான்.—(எ-று.) (௱௧)

வீறுமின்னதுநிற்கமாயன்விளிந்துயாவுமழிந்தபோ ... ...*
தூறிலாமலிருக்கநச்சியுரந்தருந்தருமத்திறை ... ... ... *
யேறதாமுருவெய்திநாதன்முனைவந்தனைசெய்துசீர் ...*
கூறியிங்கெனையூர்திகொண்டருளென்னவப்படிகொண்டனன் *

(இ-புரை.) வீறுகின்ற இதுநிற்க விஷ்ணு இறந்துஎல்லாமும் அழிந்தபோது தனக்குஅழிவுநேரிடாமலிருக்க விரும்பிமகத்துவமுள்ள தருமதேவதையான துரிஷபரூபங்கொண்டுபரமசிவனுடையசந்நிதானத்திற்போய் வந்தனைசெய்து அவருடையபுகழ்களையெல்லாம் எடுத்துத துதிசெய்து அடியேனைவாகனமாகக்கொண்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அவ்வாறேகொண்டருளினார்.—(எ-று.) (௱௨)

உற்றவின்னதுநிற்கவொற்கமிலுந்துபாலுறுவேலையில்... ...*
வற்றிடாவமுதம்பெறும்படிமந்தரந்தனைமத்தெனக... ... *
கொற்றவெம்பணிநாணெனும்படிகொண்டுமால்முதலண்டருந்.
துற்றதானவருங்கடைந்தனர்தொன்மைவைகலின்வன்மையால்..*

(இ-புரை.)பொருந்திய இதுநிற்க ஆதிகாலத்தில்பாற்கடலில்வற்றாத அமிர்தம்பெறும்படிமந்தரகிரிமத்தாகவும்வெற்றியுள்ளசர்ப்பமாகிய வாசுகியிறுகவுங்கொண்டு விஷ்ணுமுதலானதேவர்களும்நெருங்கியதானவர்களும் வன்மையுடன்குறைவில்லாத அக்கடலைக்கடைந்தார்கள்..-()

நாகவாயினுமாழிவாயினுநஞ்செழுந்துதொடர்ந்திட ... ...*
மேகமேனியனாதியாகியவிண்ணுளார்கள்வெரீஇயிரிந் ... *
தேகநாயகன்வாழ்பெருங்கயிலாயவிண்டுவிலேகியே ... *
சோகமோடரனைப்பணிந்துறுதுக்கநக்கனொடோதினார் ... *

(இ-புரை.) அவ்வாறுகடையும்போது வாசுகிவாயினிடத்து நின்று ம்சமுத்திரத்தினின்றும் விஷமுண்டாகித்தொடரவேநீருண்டமேகநிறம் போலஉருவமுள்ளவிஷ்ணுமுதலாகியதேவர்களெல்லாரும்பயந்து அவ் விடம்விட்டு ஓடிப்பரமசிவனுடைய கயிலாயகிரியில் சேர்ந்தும்சாகமு டன் அவரைப்பணிந்து தங்கள்துக்கத்தைச்சொல்லிக்கொண்டார்கள்.()

---

ஔஷதியென்னுங்கொடிவகைகள்போட்டுக் கடைந்தமையால்-அதிலி ருந்து அமுர்முண்டாவதற்குப்பதில் விஷமுண்டாயிற்று அதுதான் கடல்தந்தவிஷம்.

அந்தவேலையிலவிண்ணுளார்களுமாருமுய்யவிரங்கியே... ...*
யுந்துமேவல்செய்சுந்தரன்றனைபோலலைசென்றுவிடங்கொடே*
வந்திடென்னநடந்துகைக்கொடுவந்தரன்கையிலுய்ப்பவங் ...*
கெந்தையுண்டனனுண்டிலாவெனிலியாவாபின்னிருப்பவர் *

(இ-புரை.) அவர்கள்விண்ணப்பஞ்செய்துகொண்டபோதுதேவ ர்களும் மற்றுமுள்ளவர்களும் பிழைக்கும்பொருட்டு திருவுள்ளமிரங் கித்தாம் ஏவுகின்றபணிசெய்துகொண்டிருக்கும்சுந்தரமூர்த்தியை நோ க்கிநீவிரைவாகச்சென்று அந்தவிஷங்களைக்கொண்டுவாவென்றுகட்டளை யிட்டவுடன் அவர்சென்று அவைகளையுள்ளங்கையிலேற்றுக்கொண்டுபர மசிவனுடையதிருக்கரத்தில்கொடுக்கவாங்கிச்சுவாமியானவர்உட்கொண் டருளினர் அப்படியுட்கொள்ளாவிட்டால யார்பிழைத்திருப்பார்கள்.()

முக்கணாயகன்மிகுமுயிர்த்தொகையகிலமியாவுமுடித்தபோ *
தக்கணந்தனிலீமமாயிடுமன்னதாகியவீமமேன் ... ... *
மைக்கருங்கண்மடந்தைபங்குளவள்ளலாடுமிதன்றியுந் ... ...*
தக்ககங்கையையோங்குமாமுடிதாங்குகின்றதுசாற்றுவாம் *

(இ-புரை.) திரிநேத்திரங்களுள்ள பரமசிவன் மிகுந்த சீவகோடிக ளையும்எல்லாவுலகங்களையும்சங்காரஞ்செய்யும்போது அந்தக்ஷணத்தில் சுடலையாகிவிடும் அத்தன்மையானசுடலையில மையணிந்தநேத்திரங்களை யுடையபார்வதிதேவியாரையிடப்பாகத்திலுள்ள பரமசிவன்தாண்டவஞ் செய்தருளுவார் இதுவுமல்லாமல தகுதியுள்ளகங்கையைப் பெருமைமி குந்ததிருமுடியில்வைத்துக்கொண்டிருப்பதைச்சொல்லுகிறோம்.—()

முன்னமோர்பகலம்மைநம்பன்முரண்டருவிழிபொத்தலு ...*
மன்னகாலையிலெங்குமுச்சுடரற்றுவீதிருளாகவே ... ... *

பொழிப்புரை.

மின்னுநெற்றியினுற்றகண்ணைவிழிப்பவெங்கும்விளங்கியே ...*
தொன்மைபோலுறவஞ்சிவஞ்சிதுணைக்கரத்தைவிடுத்தனள் *

(இ-புரை.) ஆதியில் ஒருநாள் பார்வதிதேவியார் பரமசிவனுடையவன்மையுள்ள நேத்திரங்களை ஒருவிளையாட்டாக மூடினார் அப்போது சோமசூரியாக்கினிகளாகிய முச்சுடரும் ஒளியற்றுமிகுந்த இருள்சூழவே ஒளிருகின்ற நெற்றியிற்பொருந்தியகண்ணைத்திறந்தமாத்திரத்தில் எல்லா இடங்களும் பிரகாசமுள்ளதாய் முன்போலிருக்கக்கண்டு பார்வதியார்பயந்து தன்இரண்டு கைகளையும் நீக்கிக்கொண்டார்.—(எ-று.)

---

சோமசூரியாக்கினியென்னும் முச்சுடருக்கும் பிரகாசமுண்டாவதற்குப் பரமசிவனுடைய திரிநேத்திரங்களுங் காரணமாயிருப்பதாகையால் சுவாமியினுடையநேத்திரங்கள் மூடப்பட்டவுடன் அச்சுடர்களின் ஒளிமங்கியிருள் சூழ்ந்தது.

அம்மைதன்கரவங்குலிப்படையங்குவேர்வையெழுந்துபின் ...*
செம்மைகொண்டிடுபெர் தரனதிருந்துகங்கைகளாகியே ... *
வெம்மையோடுலகங்கள்கொண்டிடமேவமான்முதல்விண்ணுளோ
ரெம்மையாளுடையண்ணல்வாழ்கயிலாயவண்குவடெய்தினார்...*

(இ-புரை.) பார்வதிதேவியாருடைய விரல்களினிடத்தி லிருந்து வெயர்வை உண்டாகி வேகத்துடன் உலகங்களையெல்லாந் தனக்குள்கொள்ளும்படி வியாபிக்கவே விஷ்ணுமுதலாகியதேவர்கள்எம்மையாட்கொள்ளும் பரமசிவன் வீற்றிருக்கும் வளமைபொருந்திய கயிலையங்கிரியிற் சேர்ந்தார்கள்.—(எ-று.) (௱அ)

கண்ணுதற்பரமற்பணிந்துலகங்கள்கொண்டிடுகங்கையை *
யண்ணமேலயிவணியணிந்தெமையாள்தியென்றுவழுத்தலும் ...*
விண்ணளாவியகங்கைதன்னைவிளித்தொளித்திருவேணியிற் *
றண்ணிலாவொருரோமமீதுதரித்தனன்றனைநேரிலான் ... ...*

(இ-புரை.) நெற்றிக்கண்ணுடையபரமசிவனைப் பணிந்து உலகங்களையெல்லாந் தனக்குள் கொள்ளும்படி பெருகியகங்கையைஐயனே நீயணிந்துகொண்டு அடியேங்களை ரக்ஷித்தருளவேண்டுமென்று துதிசெய்தார்கள் தனக்குநிகரில்லாத பரமசிவன்கிருபைகூர்ந்து ஆகாயமளா

வும்பரவியகங்கையையழைத்துஒளியுள்ளசடாமுடியில்குளிர்ச்சியுடன் விளங்கும் ஒருரோமத்தில் தரித்துக்கொண்டருளினார்.—(எ-று.) (௱௯)

இன்னதல்லதுதொல்லைநாளிலிலங்குபங்கயவாழ்வினான் ... *
மன்னுகின்றபடைத்திடுந்தொழின்மாறிவீறியமாயவன்... ...*
முன்னரேகிமொழிந்தபொதவன்முண்டகத்திறைதன்னொடு *
மின்னிருங்கயிலாயமுற்றரனைப்பணிந்துவிளம்புவான்... ...*

(இ-புரை.) இதுவுமன்றி முன்னாளில் பிரகாசியாநின்ற தாமரைமலரில் வாழும்பிரமதேவன் பொருந்திய சிருஷ்டித்தொழிலமாறி மேன்மையுள்ள விஷ்ணுவினிடத்திற்போய்ச்சொன்னபோது அந்த விஷ்ணு பிரமதேவனுடன்விளங்குகின்றகயிலையங்கிரியிற்போய்ப்பரமசிவனைவணங்கிச்சொல்லுகின்றார்.—(எ-று.) (௱ய)

ஆதிநின்னருளால்விதிக்குமயன்றொழிற்சிதைவாயதா ... *
லீதியென்றிடமாலயன்றனையெங்களையகனோக்கியப் ... ...*
போதுநீறதுகண்டிடங்கொள்புயந்தரித்தனனவ்விடை ... *
மாதுதோன்றினள்பின்பெழுப்பிவரங்கொடுத்துவிடுத்தனன்...*

(இ-புரை.) பரமசிவனே உன்னுடையதிருவருளா லிதுவரையில் சிருஷ்டித்துக்கொண்டிருந்த பிரமதேவனுடைய தொழில்மாறிப்போயிற்று ஆதலால் முன்போல அருள்செய்யவேண்டுமென்று விஷ்ணுவிண்ணப்பஞ்செய்தபோது சுவாமியானவர்பிரமதேவனைநோக்கி நீறுசெய்துதம்முடையஇடப்புறத்தோளிலணிந்துகொள்ளலும் அவ்விடத்திலிருந்து ஒருசத்தியுண்டாயினாள் பின்பு பிரமதேவனையெழுப்பிவரங்கொடுத்தனுப்பினார்.—(எ-று.) (௱யக)

சொற்றவின்னதுநிற்கமுற்பகரேன்முகம்பெறுதானவ ... *
னற்றவம்பலநாள்புரிந்தரனல்குயர்ந்தவரத்தினா ... ... ...*
லுற்றசீரிமையோர்கள்வந்துதனேவலசெய்யவுறைந்தனன் *
மற்றுமோர்பணியிந்திராதியர்வந்துசெய்திடவோதினான் ...*

(இ-புரை.) சொல்லிய இதுநிற்க முன்னாளில் யானைமுகம்பெற்ற ஒரு அசுரனானவன்பலநாள் நல்லதவஞ்செய்து பரமசிவன் அருளிச்செய்தவரத்தினால்சீர்பொருந்தியதேவர்கள்வந்துதன்னேவல் செய்யும்படி

பொழிப்புரை:

பொருந்தியிருந்தான் இவ்வாறு செய்கின்ற ஏவலுமன்றிவேறொருதொழிலுஞ்செய்யும்படி கட்டளையிட்டான்.—(எ-று.) (௩௰௨)

இங்குநம்முனைடைந்துநுங்களிருஞ்சிரங்களின்மும்முறை... *
செங்கரங்கொடுதாக்கியேயிருசெவிகளூடுசெழுங்கரந் ...*
தங்கநின்றுநிலத்திலன்பொடுதாழ்ந்தெழுந்திடுமென்றிடப் *
பங்கமுற்றிடமன்னபுன்றொழிலபற்பகற்புரிந்தாரரோ... ...*

(இ-புரை.) இவ்விடத்தில் நம்மெதிரில்வந்து உங்களுடையதலைகளில் மூன்றுதரம் கைகளாலகுட்டிக்கொண்டு இரண்டு செவிகளினிடத்தும்கைள்பொருந்தும்படி பூமியின்மேல்அன்புடன்தாழ்ந்தெழுந்திருங்களென்று சொன்னான் அவ்வாறே பங்கமுள்ளஅந்தப்புன்தொழிலைஅநேகநாள் செய்தார்கள்.—(எ-று.) (௩௰௩)

(தாழ்ந்தெழுதல்தோப்பணம்போடுதல்.)

புரிந்தயர்ந்தயன்மாலினோடுதுபுகலவானவரைக்கொடே ... *
திருந்திடுங்கயிலாயமேவியசிற்பரன்றனைநண்ணியே ... ...*
பரிந்திறைஞ்சினரும்பரின்னல்பகர்ந்தபோதொருபாலனை *
விரைந்தளித்தவுணன்றனைக்கொலவிடுவமென்றுவிளம்பினன் *

(இ-புரை.)தேவர்களிவ்வாறுபலநாள்செய்துசோர்வடைந்துபிரமதேவனுடனும்விஷ்ணுவுடனும்சொல்லிக்கொண்டார்கள்அவ்விருவரும்தேவர்களைஅழைத்துக்கொண்டு திருந்திய கயிலையங்கிரியிற்சேர்ந்து பரமசிவனுடைய சந்நிதியிற் பரிவுடன்பணிந்து தேவர்களுடைய துன்பத்தைச்சொன்னபோது நாம் ஒருபுத்திரனையருளிச்செய்துக யமுகாசுரனைக்கொல்லும்படிஅனுப்புகிறோமென்றுதிருவாய்மலர்ந்தருளினார்.—

என்றபின்பரன்மாதினோடுமிலங்குசோலையுண்மேவவே ...*
குன்றுறுதபெரும்புகழ்ப்பெறுகுடிலைதானிருதந்தியா ... *
யன்றுநற்கலவித்தொழிற்செயவைங்கரத்தனுதித்துநீள் ...*
வன்றிறற்பரனோடுமாதைவணங்கமார்பிலணைத்தனர் ... ... *

(இ-புரை.) இவ்வாறுதிருவாய் மலர்ந்தருளியபின் பரமசிவன்பார்வதிதேவியாருடன் கயிலையங்கிரிச் சாரலில் விளங்கிக் கொண்டிருக்கும்

சோலையிலெழுந்தருளஅங்குச்சித்திரவடிவமாயிருந்தஅழிவுபடாதபெரும்புகழையுடையபிரணவமானது ஆண்யானையும் பெண்யானையுமாகவடிவங்கொண்டு அப்போது கலவித்தொழில்செய்தவளவில் ஐந்துகரங்களுள்ள விநாயகர்திருவவதாரஞ்செய்து மிகுந்தவல்லபமுள்ள பரமசிவனையும்பார்வதிதேவியாரையும்வணங்கினர் அவர்களிவரையெடுத்து மார்பில்தழுவிக் கொண்டார்கள்.—(எ-று.) (ாயரு)

அந்தவேலையிலாதிநோக்கியருந்திறற்பெறுதோன்முகன் ...*
சிந்தவேபொருதும்பர்தந்துயர்தீர்த்தியென்றருள்செய்திடத் *
தந்திமாமுகனோடுவெய்யசமர்ப்புரிந்தவனைக்கொலா ... ...*
வந்தனன்கயிலாயவெற்பினில்வானுளார்கள்வணங்கினர் ... *

(இ-புரை.) பரமசிவன் அப்போது விநாயக மூர்த்தியைநோக்கி அருமையான பராக்கிரமமுள்ள யானைமுகமுடைய கயாசுரனிறக்கும்படிபோர்செய்து வென்று தேவர்களுடைய துயரத்தைநீக்குவாயென்று கட்டளையிட்டருளினர் இவ்வாறுகட்டளையிட்டவுடன் விநாயகரெழுந்தருளிச்சென்று யானைமுகமுள்ள அந்த அசுரனுடன்போர்செய்து அவனைக்கொன்றுகயிலாயகிரியிற்சேர்ந்தவுடன்தேவர்கள் அங்குவந்துவணங்கினார்கள்.—(எ-று.) (ாயசா)

சீறுதோன்முகன்மாளவேயமர்செய்தநிற்கடியேங்கள்கைம் ...*
மாறுசெய்வதெனென்றுதாமவன்முன்புரிந்திடுவன்பணி ... *
யீறிலங்கரன்முன்புரிந்தவனேவவானகரேகினு ... ... ...*
ரூறிலாதபரன்கணோர்குணமுற்றதன்மையுணர்த்துவாம் ... *

(இ-புரை.) கோபங்கொள்ளும் யானைமுகமுள்ள அசுரன்மாளும்படிபோர்செய்து வென்ற தேவரீருக்கு அடியேங்கள்செய்யத்தக்கக்கைம்மாறுயாதிருக்கின்றதென்று சொல்லித்தாங்கள்முன்னே அவ்வசுரன்ளிரில் செய்ததுபோலச்செய்து அவருடையகட்டளைபெற்றுக்கொண்டு தேவலோகம்போய்ச்சேர்ந்தார்கள் பழுதில்லாத பரமசிவனிடத்தில் ஒருகுண மிருக்குந்தன்மையைஇனிச்சொல்லுகிறோம்.—(எ-று.) (ாயஎ)

மருமலிந்திடும்பங்கயத்தனைமாயவன்றனைநல்கியே... ... ...*
இருமலிந்திடுசாத்துகத்தொடுசீரிராசதமாகிய ... ... ... *

பொழிப்புரை.

விருமைகொண்டகுணங்கொடுத்தபினிதலோடுபுரத்தலுந் ...*
தருவன்யாவுமழித்திடுஞ்செயறன்னதென்றுதரிக்குமே ... *

(இ-புரை.) வாசனைநிறைந்ததாமரைமலரில்வீற்றிருக்கும்பிரமதேவனையும் விஷ்ணுவையுஞ்சிருஷ்டித்துச்சிறப்புப்பொருந்தியசத்துவமும்சீருள்ளஇராசதமுமாகியஇரண்டுகுணங்களையும் அவர்களுக்குக்கொடுத்தபின்புசிருஷ்டித்தலும் ரக்ஷித்தலும் அவர்களுக்குக்கொடுத்தருளியெல்லாவற்றையுஞ்சங்கரிக்குந் தொழிலைத்தன்னுடையதாக வைத்துக்கொள்ளுவார்.--(எ-று.) (௩௰அ)

ஏதமற்றிடுதானலாதெவராலுமற்றதியற்றொணா ... ... ...*
தாதலாலதுசெய்வனன்னதிலன்னவன்படைதாமத ... ... *
மோதுவாரலதங்கவன்கணுறைந்திடுங்குணமன்றரோ ... ...*
வேதமானவைசிற்குணத்தினன்விமலனென்றுவிளம்புமால் *

(இ-புரை.) குற்றமற்ற தன்னையல்லாமல மற்றையெவர்களாலும் அந்தச்சங்காரகிர்த்தியஞ்செய்யவொண்ணாது ஆதலால் அந்தக்கிர்த்தியத்தைத்தாமேசெய்கின்றார் அதனால்அவரிடத்திலதாமதகுணமுண்டென்று சிலர்சொல்லுகிறார்களேயலலாமல் அது அவரிடத்தில் பொருந்தியகுணமல்ல வேதங்கள் ஞானகுணத்தனென்றும் விமலனென்றுஞ் சொல்லும்.—(எ-று.) (௩௰௧)

என்றுபற்பலவாசகங்களிருந்ததீசியியம்பலும் .. ... ... *
வென்றிநான்மறைநான்முகன்றருவெய்யதக்கன்விளம்பியே ...*
பொன்றுகாலமடுத்தலாலதுவெபுந்தியென்றுநினைந்திலன் ... *
குன்றவில்லியபதத்திலன்புறுமேகாதிலாரெடுமேதாதுவான் ...*

(இ-புரை.) இவ்வாறு பலவார்த்தைகள் பெருமையுள்ள ததீசிமுனிவர்சொன்னவளவில் வெற்றியுள்ள நாலுவேதமும் உணர்ந்த பிரமதேவனீன்றகொடியனாகியதக்கன்கேட்டுக்கொண்டிருந்து இறக்குங்காலம் நேரிட்டிருட்பதினால் அவர்சொல்லிய வசனங்கள் தனக்குப் புத்தியென்றுநினையாதவனாய் மகமேருவை வில்லாகவளைத்த பரமசிவனுடைய திருவடிகளில் அன்புவைத்திருக்கும்பரிசுத்தரான ததீசிமுனிவருடன் இந்தவார்த்தைகள்சொல்லுகிறான்.—(எ-று.) (௩௰௨)

பெண்ணினுக்குருநல்குமுங்கள்பிரானெவர்க்குமுயர்ந்தசீ ...*
ரண்ணலாயினுமாகவிங்கவியன்னவற்குதவேனியா ... ... *
னெண்ணியாதுமியம்புறுதினியேகுவாயெனவோதலுந் ...*
துண்ணெனச்சினமுற்றெழுந்திதுசொல்லுவான்வினைவெல்லுவான்

(இ-புரை.) பெண்ணுக்கு ஒருபாகங்கொடுத்த உங்கள்கடவுள்யாவருக்கு முயர்ந்த பெருமையுள்ள கடவுளாயிருந்தாலு மிருக்கட்டும் அவனுக்குநானிப்போது அவிர்ப்பாகங்கொடேன் இனியெண்ண மிட்டியாதொன்றுஞ்சொல்லாமல் போய்விடு என்று தக்கன்சொல்லியபோதுவினைவிற்கொடம்மேலெழுந்ததீசிமுனிவரிந்தவார்த்தைசொல்லுகிறார்.

இந்துலாவுநெடுஞ்சடாடவியெம்பிரானைவிலக்கியிங் ...... ...*
குந்துசீரொடியற்றுமிம்மகமொல்லையின்னழிவாருக ... *
பிந்தியற்றிடுமுன்றமுறு பொருந்துமும்பருமிவ்விடை ...*
யந்தமேவுகவென்றுபின்னிமேந்தணர்க்குமுரைத்தனன் ... *

(இ-புரை.) சந்திரன் விளங்கிக்கொண்டிருக்கிற நெடியசடாடவியையுடைய எங்களிறைவனை நீக்கியிங்கு ஓங்கியசிறுடன்செய்யும் இந்தயாகம்விரைவில் அழியக்கடவது இவ்விடத்திலவிபேட்சமற்ற உன்னுடனிருக்கும் தேவர்களும் அழியக்கடவர்களென்றுசொல்லிப்பின்புமுனிவர்களுக்கு மிந்தவார்த்தைகள் சொல்லுகிறார்.—(எ-று.) (௱௨௨)

வீறுதங்கியநுங்குலத்தினியற்கைதன்னைவிடுத்துநீ ... ...*
ராறுதங்கியசென்னியானையுமன்னவற்கடியாரையு ... ... *
நீறுகண்டிகைமாலைதன்னையுநீங்கிவெந்துயர்தாங்கியே ... ...*
பேறுதங்கியவீடுறாதுபிறந்திறந்திடுமென்றனன் ... ... *

(இ-புரை.) மேன்மைபொருந்திய உங்கள்குலத்தினியற்கையைவிட்டுக்கங்காநதிபொருந்திய திருமுடியையுடைய பரம சிவனையும் அவருக்கு அடியார்களாயிருப்பவர்களையும் விபூதியினையும் ருத்திராக்ஷமாலிகையினையும் நீங்கிக்கொடுந்துயர்தாங்கிப் பேறுள்ளமோக்ஷத்தையடையாமல் பிறந்து பிறந்திறக்கக்கடவீர்களென்றுசபித்தார்.(எ-று.)

இன்னல்கொண்டிடவின்னசாபமெவர்க்குமங்கணிசைத்தபின் *
மன்னுநன்னெறிமாதவத்தர்மருங்கிரண்டுநெருங்கவே ... ...*

பொழிப்புரை:

தன்னிருக்கையிலேகிருறுயர்சங்குதங்குரத்தனை ... ... *
முன்னர்வெந்ததுகண்டதண்பிறைமுடியவன்றனதடியவன் ...*

(இ-புரை.) துன்பங்கொள்ளும்படி இவ்வகையானசாபம் எல்லாருக்குஞ்சொல்லியபின் உயர்ந்த சங்கு சக்கரமேந்தியகைகளுள்ள விஷ்ணுவை ஆதியிலொருநாள் மூக்கறுகாட்டி போகப்படி தாத்தினவரும் பிறைமுடியையுடைய பரமசிவன் அடியவருமாகிய ததீசிமுனிவரானவர் நிலைபெற்ற நன்மார்க்கத்தையுடைய முனிவர்களிரண்டு பக்கத்திலும் சூழ்ந்துவரச்சென்றுதம்முடைய ஆச்சிரமத்தில்சேர்ந்தார்...-(எ-று.)()

*[ௐவறு.]

மாசில்பெரும்புகழ்சேர்மாமுனிவன்போனதற்பி ... ... *
றுசிலயினியளித்தாடகமுமாடைகளு .. ... ... ... ...*
நேசமுறையநிறையமறையோர்பால ... ... ... ... *
வீசிவிதிபுதல்வன்வேள்விபுரிந்தனனே ... ... ... ...*

(இ-புரை.) குற்றமில்லாத பெரும்புகழ்பொருந்திய ததீசிமுனிவர்போனபிற்பாடு நிறைந்திருக்கும்பிராமணர்களுக்கெல்லாம்குற்றமில்லாதபோசனஞ்செய்வித்துப்பொன்னும்வஸ்திரங்களும் இன்பம்பொருந்தும்படி நிறைவாகக்கொடுத்துப் பிரமதேவன் புத்திரனாகியதக்கன் யாகஞ்செய்தான்.—(எ-று.) (௱உ௫)

(அயினியெனப்படுவது - சாதம்.)

அவ்வாறுகண்டானகல்வான்றனிற்றிரியுஞ் .. ... ... ... *
செவ்வார்சடிலத்திருநாரதமுனிவன் ... ... ... ... ...*
மைவ்வாழ்பெருங்குவட்டிவண்மைகயிலையிற்போய்ப் ... *
பைவ்வாழுந்துத்திப்பணியான்பதம்பணிந்து ..... ... ...*

(இ-புரை.) அவ்வாறு தக்கன்செய்ததைவிசாலமாகிய ஆகாசமார்க்கத்திலசஞ்சரித்துக்கொண்டிருக்கும் நீட்சியுள்ளசெஞ்சடைமுடியையுடைய சிறந்த நாரதமுனிவர்கண்டு மேகங்கள்தவழும்படியாகிய சிகரங்களையுடைய வளப்பம்பொருந்திய கயிலைமலையிற் போய்ப்பொறிகளுள்ளபடத்துடன்வாழுஞ்சர்ப்பாபரணமணிந்தபரமசிவனுடையதிருவடிகளைவணங்கி —(எ-று.) (௱உ௬)

நின்றான்பரன்பாராநீள்புவியிலேதுநிகழ் ... ... ... *
வென்றானனுமிறைவமரரொடு .. ... ... ... ...*
மென்றாமரைமேலவிதிபுதல்வன்வேள்விபுரி ... ... .. *
கின்றானெனவெழுந்தாள்கெண்டையங்கட்காரிகையே... ...*

(இ-புரை.) நின்றார் அவ்வாறு நின்றமுனிவரைப்பரமசிவனேக்கிப் பெரிதானபூலோகத்தில் நடக்கின்றகாரியம் யாதென்றுவினவினர் அப்படிவினவினபோது இறையவனே மென்மைத்தன்மையுள்ள தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமதேவனுடைய புத்திரனாகிய தக்கன்தேவர்களுடனிருந்து யாகஞ்செய்கின்றானென்று நாரதமுனிவர்விண்ணப்பஞ்செய்தளவில் சேற்கெண்டையொத்தகிருபா நோக்கமுள்ளபார்வதிதேவியாரெழுந்து.—(எ-று.) (௱உள

(காரிகை என்பது -மாதர்களுக்குப்பொதுப்பெயர்.)

எழுந்தாள்பரமனெழிற்கமலத்தாண்முன் ... ... ... *
விழுந்தாண்மகந்தெரிந்துமீள்வேனெனுமாற்ற ... ... ...*
மழுந்தாதரவாலவள்புகலப்பின்னற் ... ... ... ... *
செழுந்தாதகிச்சடிலத்தேவன்விடைகொடுத்தான்... ... ...*

(இ-புரை.) எழுந்தபார்வதிதேவியார் பரமசிவனுடைய அழகுள்ள திருவடிகளினிடத்தில பணிந்து எம்பிதாவானவர் செய்கின்ற யாகத்தைக்கண்டு வருகிறேனென்னும்வார்த்தையைமுதிர்ந்தஆவலுடன் விண்ணப்பஞ்செய்தபோது செழுமையுள்ளஆத்திமாலையணிந்த பின்னலாகிய சடாமகுடமுடையபரமசிவன்விடைகொடுத்தருளினார்.—(எ-று.) ()

பொன்றங்குமானம்புகுந்தாள்புகழ்மாதர் ... ... ... *
துன்றவயமேல்சுலவத்தன்றாதையிடைச் ... ... ... ...*
சென்றாளையான்றெரிந்திகழ்ந்துபோதிகடி ... ... ... *
தென்றான்பலநிந்தைபேசினையும்பேசினனே... ... ... ...*

(இ-புரை.) பொன்பொருந்திய விமானத்தில் ஆரோகணித்துக் கொண்டு புகழுள்ளதோழிமார்கள் நெருங்கிப்புடைசூழ்ந்துவரும்படி தன் தகப்பனிடத்திற்சென்றாள் அவன்பார்த்து உபசாரஞ்செய்யாமல்

பொழிப்புரை.

இகழ்ச்சிசெய்து இப்போதேநீபோவென்றுசொல்லியதுமன்றிப்பரம சிவனையும்பலவாறாகநிந்தித்துப்பேசினான்.—(எ-று.) * (௱உக)

நக்கன்றனைப்பழிக்கநாரியதுகேளா ... ... ... ... *
மிக்கசினம்படைத்துவெள்ளிப்பொருப்படைந்து ... ...*
முக்கட்பரன்பாதமுன்பணிந்துன்றன்னையெண்ணாத்... ... *
தக்கனதுவேள்விதலையழிகவேண்டுமென... ... ... ...*

(இ-புரை.) தக்கனிவ்வாறுநிந்தித்ததைப்பார்வதிதேவியார்கேட்டு மிகுந்தகோபங்கொண்டு கயிலாயமலையிற்சேர்ந்துதிரிம்நேத்திரங்களுள்ள பரமசிவன்திருவடிகளினிடத்திற்பணிந்துதேவரீரைமதியாததக்கனுடையயாகத்தை அழித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய.-()

அம்மைபணிந்திரப்பவன்னசெயன்முடிப்பா... ... ... *
னெம்மையினிதாளுமிறையோனினைத்திடலுஞ் ... ... ...*
செம்மைநுதலவிழியிற்செங்கிணமோராயிரத்தோ ... ... *
டிம்மெனவேவந்தானெழிலவீரபத்திரனே... ... ... ...*

(இ-புரை.) பார்வதிதேவியார்பணிந்து வேண்டுதலினால் அந்தகாரியத்தைமுடிக்கும்பொருட்டு நம்மைக்கிருபையுடன் ஆட்கொண்டருளுகின்ற பரமசிவன் திருவுள்ளத்தில நினைத்தவளவில செவ்விதாகிய நெற்றிக்கண்ணினின்றும்ஆயிரந்திருமுடிகளுடன் அழகுள்ள வீரபத்திரர்விரைவில் உற்பத்தியாயினார்.—(எ-று.) (௱௩க)

அப்போதுதன்னிலெமதன்னைபெருஞ்சினத்தாற்... ... ...*
கைப்போதிராயிரமுங்காமர்முகமாயிரமுந் ... ... ... *
துப்போடிலங்கத்துலங்குவிறற்காளியுதித் ... ... ...*
தொப்போரிலவீரன்பாற்றேவியாயுற்றனளே .. ... ... *

(இ-புரை.) வீரபத்திரசுவாமி உற்பத்தியானபோது நம்முடைய தாயாகிய பார்வதிதேவியார் பெருங்கோபத்தால் தாமரைமலரொத்த இரண்டாயிரங்கைகளும் அழகுபொருந்திய ஆயிரமுகங்களும்பராக்கிரமத்துடன்விளங்கும்படி பிரகாசிக்கும்காளியுதித்து ஒப்பவர்களில்லாத வீரபத்திரன்பால்தேவியாய்ப்பொருந்தினாள்.—(எ-று.) (௱௩உ)

அன்னபொழுதரனையன்னநடையம்பிகையைப் ... ... ...*
பன்னருஞ்சீர்வீரன்பணிந்தேதபணியடியேற் ... ... ... *
தென்னையெனலுமெமைமையெண்ணாதக்கன்மகந் ... ... ...*
தன்னமருவியவிதந்திடெனச்சாற்றுதியால் ... ... ... *

(இ-புரை.) அவ்வாறுகாளியுதித்தபோது பரமசிவனையும் அன்னத்தினது நடையையொத்த நடையினையுடைய பார்வதிதேவியாரையும் சொல்லுதற்கரியசீருள்ள வீரபத்திரமூர்த்தியானவர்பணிந்து அடியேனுக்குக்கட்டளையாதென்ன நம்மைமதியாத தக்கன் யாகசாலையினிடத்திற்போய் நமக்கு அவிர்ப்பாகங்கொடுக்கும்படிசொல்.(எ-று)(௩௩௩)

தந்தாலிவண்வருதிதாராமேனலக்கொடியோன் ... ... ...*
சிந்தாகுலஞ்சேரச்சென்னிதடிந்தாங்கிருந்தோ ... ... *
ருந்தாவிகொண்டுமகமொல்லையழித்துவிதி ... ... ... ...*
மைந்தாவியாமும்வருகின்றோமென்றனனே ... ... ...*

(இ-புரை.) தருவானாலிங்குவா தராவிட்டால் அந்தக்கொடியவன் சிந்தாகுலம்பொருந்தத்தலையை அறுத்துமேலும் அங்கிருப்பவர்களுடையமேன்மைபொருந்திய உயிர்களையும்வாங்கி அந்தயாகத்தையும் விரைவாக அழித்துவிடுமைந்தனேநாமும்வருகின்றோமென்றுகட்டளையிட்டருளினர்.—(எ-று). (௩௩௪)

என்னவிடைகொண்டெழுந்தேமேவுகாளியொடுந் ... ... *
தன்னுருவில்வந்துதித்தசாரதர்கள்சேனையொடு ... ... ...*
மன்னுபுகழ்த்தக்கன்மகச்சாலைவந்தணுகிப் ... ... ... *
பொன்னினிகர்செஞ்சடிலப்பூதர்க்கிதுபுகல்வான் ... ... ...*

(இ-புரை.) பரமசிவனிவ்வாறு கட்டளையிட்டவுடன் விடைபெற்றுக்கொண்டு அழகுபொருந்தியகாளியுடனும் தம்முடைய உருவத்தில் வந்துதித்தகொடுமையுள்ள பூதப்படையுடனும்புகழ்பெற்ற தக்கன்யாகசாலையில்சென்றுசேர்ந்து பொன்போலவிளங்குகின்ற செஞ்சடையினையுடைய பூதர்க்கிதுசொல்கின்றார்.—(எ-று.) (௩௩௫)

ஆலமிடற்றெம்மானையன்றிமகஞ்செய்யுமிந்தச் ... ... *
சாலையெயிலில்வாசறனைக்காவல் கொண்மினெனச் ... ... ...*

பொழிப்புரை.

சீலமிகும்பூதர்சிலவர்சுலவவெழில்... ... ... ... ... *
வேலனைகட்காளியொடும்வேள்விச்சாலைபுகுந்தான் ... .. ...*

(இ-ள்.) விஷந்தங்கிய காளகண்டத்தையுடைய நம்பிறைவனை யல்லாமல் யாகஞ்செய்யும்படியாகிய இந்தச்சாலையின் மதில்வாசலையுங் கள்காவலில்வைத்துக்கொண்டிருங்களென்று சிலபூதர்களுக்குக் கட்டளையிட்டு அவ்வாறேயவர்கள் சூழ்ந்துகொள்ளத்தாம் அழகுபொருந்திய வேலொத்த நேத்திரமுள்ளகாளியுடன் யாகசாலையிற்சேர்ந்தார்.—()

தண்டாமரையான்றநயன்மகம்புரிதல் ... ... ... ... *
கண்டான்வெகுண்டானுருமேறனக்கலித்தான் ... ... ...*
வண்டார்நெடுந்தார்வயக்கொம்பினைக்குறித்தாங் ... ... *
கண்டார்வெருவவடலோடுநின்றனனே... ... ... ... ...*

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய தாமரைமலர்மேலிருக்கும்பிரமதேவன்மகனாகிய தக்கனானவன்யாகஞ்செய்வதைக்கண்டார் கண்டவுடன்கோபங்கொண்டு இடிபோல ஆரவாரித்துவண்டுகள்நிறைந்தநெடிய மாலையணிந்தவெற்றியுள்ள ஊதுகொம்பைவாயில்வைத்து நாதஞ்செய்து அங்கிருந்தவர்கள் முதலாகியபகைவர்களெல்லாரும் பயப்படும்படி பராக்கிரமத்துடனின்றார்.—(எ-று.) (௱௩௭)

ஈடுசேர்வீரனிசைத்தவிசைகேளா ... ... ... ... ... *
வாடினார்சிந்தைவருந்தினார்வல்லையெழுந் ... ... ... ...*
தோடினார்மீண்டாருலைந்தாருறுதுயரந்... ... ... ... *
கூடினார்விண்ணோர்கொடியோனிதுதெரிந்தான் ... ...*

(இ-ள்.) தேவர்கள்பராக்கிரமமுள்ள வீரபத்திர சுவாமியானவர் ஆரவாரித்த ஓசையைக்கேட்டு மனம்வாடினவர்களும் வருந்தினவர்களுமாய்ச் சீக்கிரத்திலெழுந்து ஓடினார்கள்மறுபடியுந்திரும்பிவந்தார்கள் மெலிந்தார்கள் மிகுந்ததுன்பம் அடைந்தார்கள் தக்கனிதனையறிந்தான்.—(எ-று.) (௱௩௮)

வீரன்றனைநோக்கிவேதன்றருங்கொடியோ ... ... ... *
னாயிவணீயடைந்ததேவனென்றிடலுங் ... ... ... ...*
காரிலகுகண்டக்கடவுள்விடவந்தனனென் ... ... ... *
னேரிலவனவிநீயீர்வாயெனவிசைத்தான் ... ... ... ...*

(இ-புரை.) பிரமதேவர்பெற்ற தக்கன் வீரபத்திரசுவாமியைநோக்கி நீயார் இங்குவந்தகாரியம் என்னவென்று சொல்லியவளவில் காளகண்டமுடைய பரமசிவன் அனுப்ப அடைந்தேன் என்னெதிரில் அவருடைய அவிர்ப்பாகத்தைக்கொடுவெனச்சொன்னார்.—(எ-று.) (௱௩௯)

காவிநயனக்கலசமுலைக்காளியெனுந் ... ... ... ... ...*
தேவியொடுநின்றதிறலாளனீதிசைப்பக் ... ... ... ... *
கோவின்மிசையேறுங்கோவையிகழ்ந்துமொழிந் ... ...*
தாவிகொடுப்பானவிகொடேனென்றனனே ... ... ... *

(இ-புரை.) நீலோற்பல மலர்போன்ற நேத்திரங்களும் கும்பம்போன்ற தனங்களுமுள்ள பத்திரகாளியென்னுந்தேவியுடனின்ற வீரபத்திரசுவாமியானவர் இந்தவார்த்தைசொல்ல ரிஷபவாகனத்தின்மேலாரோகணித்துச் செலுத்தும் பரமசிவனையிகழ்ந்து பேசித்தன்னுயிரைக்கொடுப்பவன் நான் அவிர்ப்பாகங்கொடேனென்றான்.-(எ-று.) (௱௪0)

தன்னைமதித்தகொடுந்தக்கனிதுசாற்றுதலு... ... ... ...*
மன்னுதிறலவீரன்வானோர்தமைநோக்கி... ... ... ... *
யின்னருமக்குமிசைவோவெனவிசைப்ப ... ... ... ...*
வுன்னியொன்றுமோதாமலூமர்போலுற்றனரே ... ... *

(இ-புரை.) தன்னைத்தானேமதித்துக்கொண்டிருக்குங் கொடியதக்கன் இந்தவார்த்தை சொன்ன மாத்திரத்தில வெற்றிபொருந்திய வீரபத்திரமூர்த்தியானவர் தேவர்களைப்பார்த்து இவன் சொல்லும் வார்த்தை யுங்களுக்குச் சம்மதியோவென்றுவினவ அவர்கள்நினைத்துயாதொருவார்த்தையுஞ்சொல்லாமலூமைகள்போலிருந்தார்கள்.(எ-று.)(௱௪௧)

[வேறு.]

இவ்வாறுவானவரிருப்பச ... ... ... ... ... ... ...*
செவ்வாய்திறந்துநகைசெய்தே ... ... ... ... ... *
மைவ்வாழ்களத்தனருண்மைந்த... ... ... ... ... ...*
னவ்வாயியற்றுமிவையும்மா ... ... ... ... ... ... *

பொழிப்புரை.

(இ-புரை.) தேவர்களிவ்வாறு ஊமைகள்போலிருக்கவேகாளகண்டமூர்த்தியருளிச்செய்த புத்திரனாகியவீரபத்திரசுவாமியானவர்தமது செவ்வாயைத்திறந்து நகைத்து அந்தயாகசாலையினிடத்தில் இந்தச்செய்கைகளைச்செய்கிறார்.—(எ-று.) (௩௪௨)

தண்டாவிறற்குலவுதண்டால் ... ... ... ... ... ...*
வண்டார்நறுந்துளவமாலைப் ... ... ... ... ... ... *
புண்டானுறும்படிபுடைப்ப ... ... ... ... ... ...*
விண்டானெனப்படிவிழுந்தான் ... ... ... ... ... *

(இ-புரை.) நீங்காதபலமுள்ள தண்டாயுதத்தினால்வண்டுகள்பொருந்திய துளசிமாலையணிந்த விஷ்ணுவைப்புண்பொருந்தும்படி அடித்தார் அப்படியடித்தமாத்திரத்தில இறந்தானென்று சொல்லும்படி விழுந்தான்.—(எ-று.) (௩௪௩)

மட்டுறுவிரைக்கமலமன்முன் ... ... ... ... ... ...*
கிட்டிநளினத்தெழில்கெடுத்துக் ... ... ... ... ... *
கட்டழகுதங்கியகரத்தாற் .. ... ... ... ... ... ...*
குட்டினன்முடித்திரள்குலுங்க ... ... ... ... ... *

(இ-புரை.)தேன்பொருந்தியவாசனையுள்ள தாமரைமலர்மேலிருக்கும்பிரமதேவன்முன்கிட்டித்தாமரைமலரின்அழகினைக்கெடுத்துக்கட்டழகுபொருந்திய தம்முடையகையினால் அவனுடையநான்குமுடிகளுங் குலுங்கும்படி குட்டினார்.—(எ-று.) (௩௪௪)

[வேறு;]

விழுந்தான்வேதனும்வெண்மைமாமதி ... ... ... ...*
யெழுந்தானேடவுமீசன்மாமகன்... ... ... ... ... *
செழுந்தாள்கொண்டிடறேயுமாறுசெய் ... ... ... ...*
தொழிந்தார்தம்மையுமுழியற்றினான் ... ... ... ... *

(இ-புரை.) அப்படிகுட்டினமாத்திரத்தில் பிரமனும்விழுந்தான் அதுகண்டுவெண்மைநிறமுடன் பெருமைபொருந்தியசந்திரனெழுந்

துஓடினபோது சிவகுமாரனாகிய வீரபத்திரசுவாமியானவர் செழுமையு ள்ளபாதத்தினால் அவனுடலம் தேயும்படி செய்து மற்றுமுள்ளவர்களையும் கொலைசெய்தார்.—(எ-று.) (ாசகு)

அறந்தானேவியவண்டர்யாவரு... ... ... ... ... ... ...*
மிறந்தாராயுமிலங்குணர்ச்சிகள் ... ... ... ... ... ... *
மறந்தாராயுமகக்களத்தின்வா ... ... ... ... ... ...*
யுறைந்தாராடலுவந்தவீரனால் ... ... ... ... ... *

(இ-புரை.) போர்செய்தலை வீரபத்திரசுவாமியால்தருமநெறியை நீங்கியதேவர்களெல்லாரும் சிலர் இறந்தவர்களாயும்தெளிவுள்ள அறிவு நீங்கினவர்களாகியும்யாகசாலையினிடத்தில்விழுந்துகிடந்தார்கள்-எ-று.

கண்டானீதுகலங்கிவெந்துயர் .. ... ... ... ... ...*
கொண்டானெஞ்சுகுலைந்துமெய்ம்பினித ... ... ... *
றண்டார்கொண்டிளதக்கனிற்றலு ... ... ... ... ...*
மண்டார்கூற்றினைத்தாற்றுவானமோ ... ... ... ... ... *

(இ-புரை.) புயங்களில்குளிர்ச்சிபொருந்திய மாலையணிந்துள்ள தக்கனிதனைக்கண்டுகலங்கிடும் வெந்துயர்கொண்டும் மனங்குலைந்தும் நின்றான் பகைவர்களுக்கு யமனையொத்த வீரபத்திரசுவாமியானவர் இதனைச்செய்கின்றார்.—(எ-று.) (ாசஎ)

செறுத்தானேறியதேவைவெள்ளிய ... ... ... ... ...*
மறுத்தானெஞ்சுடைவஞ்சன்மாமுடி ... .. ... ... *
யறுத்தானங்கியருந்தநலகினன் ... ... ... ... ... ...*
வெறித்தார்மொய்ம்புளவீரவீரனே... ... ... ... ... *

(இ-புரை.) வாசனைதங்கிய மாலையினை யணிந்த புசங்களை யுடையவீரமுள்ளவீரபத்திரசுவாமியானவர்ரிஷபவாகனத்தின் மேலேறி ச்செலுத்தும் பரமசிவனைப்பகைத்துஇகழ்ந்தகுற்றம்பொருந்தியமன முள்ள வஞ்சகனாகியதக்கனுடையபெரியதலையைஅறுத்து ஓமகுண்ட த்தீயுண்ணும்படி கொடுத்தார்.—(எ-று.) (ாசஅ)

பொழிப்புரை.

மாலைதங்கியவஞ்சன்மாய்தலும் ... ... ... ... ... *
வேலையன்னகண்வேதவல்லிதன்... ... ... ... ... ...*
பாலைமாதர்பரம்பிவந்திடக் .. ... ... ... ... ... *
காலைபோன்றுகடிதினமேவினாள் ... ... ... ... ...*

(இ-புரை.) அஞ்ஞானமேகுடிகொண்ட வஞ்சனிறந்து போனவளவில் வேலொத்த கண்களுள்ள வேதவல்லியென்னும் அவன்மனைவியானவள் தன்பக்கத்திலமற்றமாதர்களுப்பரந்துசூழ்ந்துவரும்படிசென்று காற்றினைப்போல அதிவேகமாக அங்கு வந்தாள்.—(எ-று.) (௱௪௯)

துன்பங்கொண்டுதுளங்கிவந்துளாண் ... ... ... ...*
முன்பங்கெய்திமுரண்கொள் காளிந ... ... ... ... *
ணம்பன்னேரவணங்கின்வார்குழை ... ... ... ... ...*
மின்கொள்கேள்வியறுப்பவீழ்ந்ததே ... ... ... ... *

(இ-புரை.) துயரங்கொண்டு நடுங்கிவந்தவள் எதிரில சென்றுபலங்கொண்டகாளியானவள் தன்கணவனெதிரில அந்தவேதவல்லியின் நீண்டகுழையணிந்த ஒளியுள்ள காதினையறுக்கவளவில அதுபூமியில் வீழ்ந்தது.—(எ-று.) (௱௫௰)

பிடித்தாண்மற்றுளபேதைமாதரைக் .. ... .. ... ...*
கடித்தார்கொண்டகவின்குழற்றலை ... ... ... ... *
வடித்தார்வாள்கொடுவலைகொய்துபந் ... ... ... ...*
தடித்தாளெம்மையளிக்குமன்னையே ... ... .. ... *

(இ-புரை.) நம்முடைய தாயாகிய பத்திரகாளியானவள் தக்கனுடையமனைவியர்களாயிருக்குமற்றமாதர்களையும்பிடித்து அவர்களுடைய வாசனைதங்கியபூமாலையணிந்துள்ள அழகுபொருந்திய அளகபாரமுள்ள தலைகளை-வடித்துக் கூர்மையுள்ளவாளினால்சீக்கிரமாக அறுத்துப்பந்தாடினாள்.—(எ-று.) (௱௫௧)

[வேறு.]

வீரனைவலின்விரைந்தெய்தியுடைத்தே
தாருலாவும்மகச்சாலையையழித்தே

கோரமோடுபல்கொடுந்தொழில்புரிந்தார் ... ... ... ...*
போரெனிற்களிபொருந்தியிடுபூதர் ... ... ... ... *

(இ-புரை.) வீரபத்திரசுவாமியினுடைய கட்டளையினால் போரென்கிற சொல்லினைக்கேட்டால் களிப்புக்கொள்ளும் பூதர்கள் விரைவாக மதிலையிடித்தும் பூமாலைகளால் அலங்காரஞ்செய்திருக்கும்யாகசாலையினையழித்துங்கோரமுடனேபலகொடுந்தொழில்புரிந்தார்கள்.—(எ-று.)

மூழ்ந்துநொந்திடுமுகுந்தனெனுமேலோன் ... ... ... ...*
சிந்தைவெந்துயர்தெளிந்திவைதெரிந்தே ... ... ... *
யுந்துகின்றவுவணத்தின்மிசையுற்றே ... ... ... ... ...*
மைந்துகொண்டகணைமாரிகள்சொரிந்தான் ... ... ... *

(இ-புரை.) முன்னம் அடிபட்டு வீழ்ந்துகிடந்த விஷ்ணு சிந்தையிற்கொண்ட வெய்யதுயரம்நீங்கித் தெளிந்தெழுந்து இன்ன காரியங்கள் செய்வோமென்று ஆலோசித்துச்செலுத்துகின்ற கருடன்மேலேறிக்கொண்டு பலம்பொருந்திய பாணவருஷங்கள் பொழிந்தான்.-(எ-று.)

நின்றபூதருநெருப்பெழவிழித்தே ... ... ... ... ...*
துன்றுவாளிகள்சொரிந்தமர்புரிந்தார் ... ... ... ... *
வென்றிகொண்டபயவீரனிதுகண்டே ... ... ... ...*
சென்றுமாலொடுசெருச்செயநினைந்தான் ... ... ... *

(இ-புரை.) அங்கிருந்த பூதர்களும் அக்கினிப்பொறியுண்டாகும்படி உக்கிரத்துடன்பார்த்து நெருங்கியபாணங்கள்சொரிந்துபோர்செய்தார்கள் செயங்கொண்டபுகழுள்ள வீரபத்திரசுவாமியானவர் இதை நோக்கி விஷ்ணுவுடன்போர்செய்யநினைத்தார்.—(எ-று.) (௩௫௪)

அன்னபோதிலெமதண்ணலருளாலோர் ... ... ... ...*
மின்னுதேரணுகவேதனைதலீடுதே ... ... ... ... *
துன்னுவீரனெதிர்சூதனெனவந்தே ... ... ... ...*
பின்னுவையுமிசையேறெனவிரப்ப ... ... ... ... *

(இ-புரை.) அப்போது நம்மிறைவனாகிய பரமசிவனுடைய அருளினால் பிரகாசிக்காநின்ற ஒருதேர் அங்குவந்தமாத்திரத்தில் பிரமதேவ

பொழிப்புரை:

ன் அதன் மேல்சாரதியாய் வந்து இந்தத்தேரின்மேல் ஆரோகணித்துக் கொள்ளவேண்டுமென்று வீரபத்திரசுவாமியையிரந்து விண்ணப்பஞ் செய்தான்.—(எ-று.) (௭௫௫)

வீறுகாளியொடுவீரனதன்மீதே ... ... ... ... ...*
யேறிநான்முகனிலங்கிரதமுய்ப்ப... ... ... ... ... *
மாறுகொண்டுபொருமாயனெதிர்வல்லே ... ... ... ...*
சேறலோடுமிவைசெட்புவல்முராரி ... ... ... ... *

(இ-பு.) மேன்மைபொருந்திய பத்திரகாளியுடன் வீரபத்திர சுமாமியானவர் அந்தத்தேர்மேல்ஆரோகணித்துகொண்டுபிரமதேவன் செலுத்தப் பகைகொண்டு போர்செய்கின்ற விஷ்ணுவினெதிரில்விரை விற்சென்றவளவில் விஷ்ணுசொல்லுகிறார்.—(எ-று.) (௭௫௬)

[வேறு.]

தன்னிகரண்ணலை யெள்ளுந்தக்கனையட்டிடலல்லான் ... ...*
மன்னியவிண்ணவரொல்லாமாளவியற்றியதென்னோ ... ... *
வென்னலுமக்கொடியோனோடெய்துதல்கண்டுயிர்கொண்டோ*
முன்னையுமின்னுயிரின்னேயுண்குவமென்னவுரைத்தான் ...*

(இ-பு.) தனக்குத்தானேயொத்தபரமசிவனை யிகழ்ச்சிசெய்ய த்தக்கவர்களைக் கொல்லவேண்டுமேயல்லாமல் இவ்விடத்தில்வந்திருக்கிற தேவரெல்லாரு மாளும்படி கொல்லுதல் யாதோவென்றவளவில அந்த க்கொடியவனுடன் சேர்ந்ததினால் அவர்கள் உயிரையெல்லாமும் வாங்கி னோம்உன்னுயிரையுமிப்போதேவாங்கிக்கொள்ளுகிறோமென்றுசொன் னார்.—(எ-று.) (௭௫௭)

வண்டுபடிந்தநெடுந்தார்மார்பின்மிடைந்தவளைக்கைக்... ...*
கொண்டல்வெகுண்டுகரத்தேகொண்டநெடுஞ்சிலைகோட்டித் *
திண்டிறலொன்றுலிகாட்டித்தீயசரம்பலபூட்டிப் ... ... ...*
புண்டருவெய்யபடைக்கைப்பூதர்கண்மீதுபொழிந்தான்... * *

(இ-புரை.) வண்டுகள்பொருந்திய மார்பினையும் சங்கம் பொருந் தியகையினையுமுடைய மேகநிறமுள்ள விஷ்ணுகோபித்துத்தன்கையிலி

ருக்கும் சார்ங்க மென்னும்வில்லைவளைத்துமிகுந்தபலமுள்ளநாணிலேறு சையைக்காட்டிக் கொடியபாணங்களைப்பூட்டிப் பகைவர் உடலில்புண் ணுண்டாகச்செய்யத்தக்க படைகளேந்தியகைகளையுடையபூதர்கள்மே லேயேவினார்.—(எ-று.) (௩௫௮)

[வேறு.]

கண்டனனிருண்டகண்டன்மகனுந்து ... ... .. ...*
காா்முகமிசைச்சிலீமுகமிசைத்து ... ... ... *
வண்டிளிமகிழ்ந்தவண்டுளபலங்கன் ... ... ... .. ...*
மாயவன்விடுத்தவாளிகண்முருக்கி ... ... ... ... *
யொண்டிறல்பொருந்தவிண்டுநுதலின்க ... ... ... ...*
ணோர்கணையழுத்தவோகையிலிடுக்க ... ... ... *
ணண்டினனகன்றுமொய்ம்பனெதிர்பின்பு ... ... ...*
மாசுகமளப்பிலாதனவுகைப்ப ... ... ... ... *

(இ-பொ.) காளகண்ட மூர்த்தியினுடைய புதல்வராகிய வீரபத் திரசுவாமியானவர் அதைக்கண்டு நீண்டசிலையில்பாணங்களைவைத்துவண் டுகள் மனமகிழும் வளப்பமுள்ள துளவமாலையணிந்த விஷ்ணுஎவியபா ணங்களையழித்து ஒளியுள்ள பராக்கிரமம்பொருந்திய அந்தவிஷ்ணுவி னுடைய நெற்றியில் ஒருபாணம் அழுத்தினார் அது பட்டவுடன் விஷ் ணுமுன்னிருந்த சந்தோஷ மில்லாமல் துன்பம்பொருந்திப் பின்னும் அளவில்லாதபாணங்களைச்செலுத்தினார்.—(எ-று.) (௩௫௯)

உத்தமனுமெற்றுமத்திரமுரத்தொ ... ... ... ... ...*
டுந்தியரியுந்துமுந்துகணைசிந்தி ... ... ... ... *
நத்துறுகரத்தனற்றனுவையொற்றை ... ... ... ... ...*
நன்கணைதுரந்துநந்திடல்புரிந்து ... ... ... ... *
கொத்துமுவணத்தடற்சிறகைமிக்க ... ... ... ... ...*
கொன்கணையிரண்டுகொண்டரிதல்கண்டு ... ... *
மைத்திருநிறத்தன்மற்றிகிரியுய்ப்ப ... ... ... ... ...*
வந்ததுவிளைந்துமண்டலநடுங்க ... ... ... ... *

(இ-பொ.) வீரபத்திரசுவாமியும் பராக்கிரமத்துடன் செல்லும் படியான பாணங்களேவி விஷ்ணு எவுகின்ற முதன்மையான அம்பு

களை அறுத்துச்சங்கம்பொருந்தியகையுள்ள விஷ்ணு வினுடைய நல்ல வில்லினைக்கூர்மையுள்ளஒருபாணம்விட்டு ஒடியச்செய்து கொத்துகின் றழுக்கினையுடைய கருடனது பலமுள்ள சிறகையிருந்த பெருமையுள் ள இரண்டு பாணங்களை விட்டு அறுத்ததைக்கண்டு மேகநிறமுள்ள வி ஷ்ணு பாரமுள்ள சக்கரத்தினை யேவ அது பூமியிலுள்ள வர்களெல்லா ரும்நடுங்கும்படிவேகத்துடன் வந்தது —(எ-று.) (ளசு)

[வேறு.]

அங்காழிப்படைவருதறெரிந்தா ... ... ... ... ... *
னடல்வீரன்கடிதுபிடித்தயின்றான் ... ... ... ...*
கொங்காருநறுந்துளபநெடியோன் ... ... ... ... *
கொடுவாள்கொண்டிறையோன்முன்குறுக ... ... ...*
வுங்காரஞ்செய்தனனெம்பெருமா ... ... ... ... *
னோவியம்போன்மாயவனுங்குறைந்தான் ... ... ...*
மங்காதபெருஞ்சினமென்னினைந்தோ ... ... ... ... *
மருவினனுதலவிழியான்மதலை... ... ... ... ...*

(இ-புரை.) விஷ்ணு விட்டசக்கராயுதம் வருவதை அறிந்துபராக் கிரமமுள்ள வீரபத்திரசுவாமி யானவர் அதனைத துரிதத்துடன் பிடித் து உண்டு விட்டார் தேன்பொருந்திய வாசனையுள்ள விஷ்ணு வானவர் கொடுமையுடைய வாளாயுதமேந்திகொண்டு நெற்றிக்கண்ணுள்ள பர மசிவனுடையபுத்திரனாகியவீரபத்திரசுவாமிக்கெதிரில்செல்ல அவாஉங் காரஞ்செய்தவளவில விஷ்ணுவானவர் சித்திரம்போலஒருசெய்கையுமி ல்லாமல் குன்றி நின்றார் அப்படியிருக்க பரமசிவனுடைய புத்திரர் யாதுநினைந்தோகெடாதபெருங்கோபத்தைப்பொருந்தினார்.—(எ-று.)

எம்பெருமான்சினந்திடலுஞ்சினவே ... ... ... ... ...*
லெனவிசும்பில்வாசகமொன்றிசைப்ப ... ... ... *
வும்பர்பிரான்றனதுசுதனதுகேட் ... ... ... .. ...*
டுள்ளெழுவெஞ்சினமகன்றங்குறலுஞ் ... ... ... *
செம்பதுமத்தணங்குரத்தோன்புகழ்ந்தே ... ... ...*
சிதடனென்புரிந்தபிழைசெழுந்தீ... ... ... ... *
யம்பகநாயகன்புதல்வபொறுத்தீண் ... ... ... ... ...*
டளித்தியெனவருள்புரிந்தானமலன் ... ... ... *

(இ-புரை.)எம்பிறைவனாகியவீரபத்திரர்கோபித்தவளவில்கோபங்கொள்ளாதேயென்று ஆகாசத்திலொருவாக்குண்டாகவே தேவர்பிரான் புத்திரன் அதனைக்கேட்டுஉள்ளத்திலுண்டாகியவெவ்வியகோபம் நீங்கியிருக்கக்கண்டு இலக்ஷுமியைமார்பில்வைத்துக்கொண்டிருக்கும் விஷ்ணு வானவர்புகழ்ந்து அறிவிலலாதநான் செய்தகுற்றத்தைப் பொறுத்துக்கொண்டு செழுமையாகிய அக்கினிநேத்திரமுள்ளபரமசிவனுடையபுத்திரனேயிப்போது இரக்ஷியென்று விண்ணப்பஞ்செய்ய அமலனாகிய வீரபத்திரசுவாமியானவர்கிருபைசெய்தார்.—(எ-று.) (ாகூஉ)

அவ்வேலைவேலைவிடமருந்தி ... ... ... ... ... ... *
யமரர்தமதுயிர்காத்தவமலன் ... ... ... ... ...*
வைவ்வேலைமுனிந்தநெடுந்தடங்கண் ... ... ... ... *
மாதொடுவான்மீதுவரலுஞ் ... ... ... ... ...*
செவ்வேணித்திறல்வீரன்றொழுதான் ... ... ... ... *
றிருமாலுமயனுமமாமசெய்யுங் ... ... ... ... ...*
கைவ்வேழமுரித்தபிரான்றிருத்தாட் ... ... ... ... *
கமலமலரொதிர்பணிந்துகளித்தார் ... ... .. ...*

(இ-புரை.)அப்போதுசமுத்திரத்திலுண்டாகியவிஷத்தையுண்டு தேவர்களுடைய உயிர்களைக்காத்தபரமசிவன்கூறாமைபொருந்தியவேலை முனிந்தநெடியதிருநோக்கமுள்ளபார்வதிதேவியுடன்ரிஷபவாகனத்தின்மேல்ஆரோகணித்துக்கொண்டு ஆகாயத்திலெழுந்தவளவில் செஞ்சடையுள்ளவீரபத்திரசுவாமியானவர்வணங்கினார் விஷ்ணுவும்பிரமதேவனும் போர்செய்யுந்துதிக்கையுள்ளயானையையுரித்தபரமசிவனுடைய திருவடித்தாமரைகள்முன்பணிந்து களிப்படைந்தார்கள்.—(எ-று.)(ாகூங)

ஓங்குறுமக்களத்திலிடைமடிந்தே ... ... ... ... ... *
யுறுகின்றோர்தமையுமையாளுடைகண் ... ... ...*
டீங்கிவர்களெனதுபொருட்டிறந்தா ... ... ... ... *
ரிறைவபிழைபொறுத்தெழுப்பென்றிரப்ப ... ...*
நீங்கருந்திண்டிறல்புனைதன்சுதனு .. ... ... ... ... *
னிமலனெனவரையுமெழுப்பநிலமேற் ... ... ... ...*
றூங்கியெழுந்தெனவெழுந்தார்மறையோர் ... ... ... *
துகடிருமுனிவரொடுசுரர்கள் ... ... ... ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) பெரியதாகிய அந்தப்போர்க்களத்தில் இறந்து விழுந்திருப்பவர்களை நம்மையாட்கொள்ளும் உமையம்மைநோக்கி இங்குஇவர்கள் என் பொருட்டிறந்தார்கள் ஆகையாலிறைவனேஇவர்கள் குற்றங்களை க்ஷமித்துக்கொண்டு பிழைப்பிக்கவேண்டுமென்றிரப்ப நீங்குதற்கரிய மிகுந்தபலமுள்ள தன்புத்திரனாகியவீரபத்திரரால் பரமசிவன் எவர்களையுமெழுப்பினவளவிலபிராமணர்களும்பரிசுத்த முள்ள முனிவர்களும் தேவர்களும் நிலமேல் நித்திரைசெய் தெழுகின்றவாபோல எழுந்தார்கள்.—(எ-று.) (௱௬௪)

உஞ்செழுந்தவமரர்மால்விடைமே *
லுயர்விசும்பிலிறைவனைமாதொடுங்கண் *
டஞ்சிமிகநடுங்குதலுமதிரு... *
டருளாளனஞ்சலிமொன்றருள *
நெஞ்சமகிழ்ந்தடிபணிந்தார்புகழ்ந்தார் ... *
நெடிமலரோன்மகற்காணுநிமலன் *
கஞ்சமலர்க்கழல்பணிந்தென்மகனுங் *
கயவனெழுந்திலனெனவேகழறி *

(இ-புரை.) பிழைத்தெழுந்த தேவர்கள் பெரியரிஷபவாகனத்தின் மேல் உயர்ந்த ஆகாயத்தில் பார்வதிதேவியுடன் பரமேஸ்வரனைக்கண்டு பயந்து நடுங்கவே சந்திரனையணிந்த கிருபாமூர்த்தியானவர் நீங்கள்பயப்படாமலிருங்களென்று அபயாஸ்தங்கொடுத்தருளினார்அதனால்தேவர்கள் மகிழ்ந்து சுவாமியினுடைய திருவடியில பணிந்து துதிசெய்தார்கள்பிரமதேவன்தன்மகனைக்காணுமையால்பரம சிவனுடையசெந்தாமரைமலர்போன்றதிருவடிகளைப்பணிந்துஅடியேன்புத்திரனாகியகீழ்மைப்பட்டவனெழுந்திலனென்று விண்ணப்பஞ்செய்து.(எ-று.) (௱௬௫)

ஐயவவனுய்யவருள்செய்யென்... *
றயனிரப்பவுமையபாகனருளாற் ... *
சையநிகர்டயவீரன்கடிதே ... *
தக்கனுடன்மீளுமறித்தலையொன் *
றுய்யவிசைத்தெழுதியெனவெழுந்தாங் ... *
குளநாணிவெருவவிடமுமிழும் ... *
வெய்யபணிச்சடையாளன்றக்க *
வெருவேலென்றருள்புரிந்தான்மிகவும் *

(இ-புரை.) அத்தனே அவன்பிழைக்கும்படி அருள்செய்யவேண்டுமென்று பிரமதேவனிரப்பப் பார்வதிபாகராகிய பரமசிவன் அருளினால் மலையினையொத்த புயங்களுள்ள வீரபத்திர சுவாமியானவர் அப்பொழுதே தக்கனுடைய உடலின்மேல் ஒரு ஆட்டின்தலையைச் சேர்த்துப் பிழைத்தெழுந்திருவென்று சொல்ல எழுந்து மனம்வெட்கி அஞ்சிநின்றான் விஷத்தைக்கக்குங் கொடிய சர்ப்பங்களை அணிந்த சடாமுடியையுடைய பரமசிவன் அவனைநோக்கித் தக்கனே நீபயப்படாதே யென்று மிகுதியாகக் கிருபைசெய்தார்.—(எ-று.) (௱௬௬)

ஆசறுநல்லறிவொருவிமையா ... ... ... ... ... *
மறிவுறலாலானனமுடனைத்தாய்க் ... ... ... ...*
காசினியிலெழுந்தவனம்பெருமான் ... ... ... ... *
கழல்பணிந்துபுகழ்ந்திடலுங்கருணை... ... ... ...*
நேசமொடுபுரிந்தருளியமர்க்கு ... ... ... ... ... *
நிகரிலாவீரனெனுநிமலன்... ... ... ... ... ...*
வீசுபுகழ்க்கயிலையடைந்தடல்சேர் ... ... ... ... *
வீரனுக்கோருலகளித்துவிடுத்தான் ... ... ... ...*

(இ-புரை.) குற்றமற்றநல்ல ஞானம் நீங்கி இருள்போன்ற அஞ்ஞானத்தைப்பொருந்துதலினால் ஆட்டுமுக முள்ளவனாய்ப் பூமியிலெழுந்ததக்கன் நம்மிறைவன் திருவடிகளைப்பணிந்து புகழ்ந்திடலும்இரக்கத்துடன் கிருபைசெய்தருள்ப்போர்செய்தலுக்குத்தனக்குநிகரிலாதவீரபத்திரசுவாமியுடன்கயிலைக்கெழுந்தருளிவெற்றிபொருந்திய வீரபத்திரசுவாமிக்குஒருஉலகமேற்படுத்தியவிடத்துக்கனுப்பினார்.--()

[வேறு.]

மற்றிதுநிற்கமகக்களத்தினூடே ... ... ... ... ...*
யுற்றிடும்பரிலுந்துமலர்வேதன் ... ... ... ... *
பெற்றிடுமைந்தன்முகந்தெரிந்துபோதா ... ... ... ...*
யெற்றையியற்றினையென்றினையகூறும் ... ... ... ... *

(இ-புரை.) இப்போதுசொல்லிவந்ததுநிற்க-யாகசாலையினிடத்திலிருக்குந் தேவர்களில்மேன்மை பொருந்திய பிரமதேவன் தன்மகன்

முகத்தைநோக்கி அறிவில்லாதவனே என்னகாரியஞ்செய்தனை யென்று இந்தவாசகத்தைச்சொல்லுகின்றார்.—(எ-று.) (௱௬௮)

ஈசனையெள்ளியவின்னபிழைதிர... ... ... ... ... ...*
வாசறுமன்பொடவன்றனை நும்பொற்றாள் ... ... ... ... *
பூசனைபுரிந்துபுய்ந்திடுதியென்றே... ... ... ... ...*
பேசவனிவ்வகைபின்னுமுரைப்போனே ... ... ... .. *

(இ-புரை.) பரமசிவனையிகழ்ச்சிசெய்ததாகியஇத்தன்மையுள்ள குற்றந்தீரும்படி அன்புடன் அவருடைய பொலிவுள்ள திருவடிகளைப் பூசித்துஉய்தாத்திரஞ்செய்யென்று சொலலிப்பின்னும் பிரமதேவனிவ்வகைசொல்லுகிறார். —(எ-று.) (௱௬௯)

தேனமர்கொன்றைச்செழுஞ்சடைமுடித்த ... ... ... ...*
வானவன்மேன்மை மறந்தொருநாட்க ... ... ... ... *
ஞானிறைவியம் றனுரைாணனெனவாகருந் ... .. ... ...*
தானிறையென்றுதருக்குடனுரைத்தான் ... ... .. ... *

(இ-புரை.) தேன்பொருந்தியகொன்றைமாலையைச்செழுமையுள்ளசடைமுடியில்சூடியபரமசிவனுடையமேன்மையைஒருநாள்மறந்து நானேயிறைவனென்றுசொன்னேன் விஷ்ணுவானவர் எல்லாருக்குந் தான்இறைவனென்று தருக்குடன்சொலலினார்.—(எ-று.) (௱௭௰)

வெஞ்சமர்செய்குதும்வென்றவரெவர்க்குந் ... ... ... ...*
தஞ்சமெனப்படிதானுவெனவோதிக ... ... ... ... *
கஞ்சமடக்கொடிகாதலனும்யானு ... ... ...* ... ...*
நெஞ்சமுனிந்துநெடுஞ்செருவிழைத்தோம் ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுவாதுநேரிட்டதினால் இனிநாமிருவரும் பெரும்போர்செய்யக்கடவோம் அந்தப்போரில்வென்றவர்களே யாவருக்குந் தஞ்சமாகியதானுவென்றுசொல்லித்தாமரைமலரில்வீற்றிருக்கும்இலக்குமிகணவனும்நானும்மனதிற்கோபித்துப்பெரும்போர்செய்தோம்.(எ-று.)

அந்தரிதங்கியவங்கணெனமையாள்வான் ... ... ... ...*
வந்தெரியாகியுமண்ணும்விண்ணுமொன்று ... ... ... *
யுந்துபுநின்றிடவொல்லையதுகண்டே... .. ... ... ...*
வெந்திறலாடலவிளைப்பதுவிடுத்தேம் ... ... ... ... *

(இ-புரை.) பார்வதிதேவியாரைத் தமதிடப்பாகத்தில் வைத்திருக்கும் பரமசிவன் எங்களையாளக் கிருபைகூர்ந்து அக்கினிமலையாய்ப்பூமிக்கும் ஆகாசத்துக்கும் ஒன்றாயோங்கிநின்றார் அதனை நாங் கண்டுமிகுந்தவீரத்துடன் போர்செய்வதை அப்போதே நீக்கிவிட்டோம்.(எ-று.)

திண்டிறலின்னசிலம்பிணடி சென்னி ... ... ... ... ...*
கண்டவரோயுயர்காரணரென்ச்சீர் ... ... ... .. ... *
கொண்டபதத்தொடுமோங்கிமுடி தேடிக் ... ... ... *
கண்டிலம்வன்மைமடிந்தகந்தைவிட்டேம் ... ... ... ...*

(இ-புரை.) மிகுந்தபலமுள்ள இந்தமலையின் அடியையுமுடியையும் கண்டவர் தமேள யுபார்ந்தகாரணக்கடவுளரென்று சொலலக் கேட்டுச்சீர்பொருந்திய அடியையும் நற்றமிலத்துமுடியையுந்தேடிக்காணமையால் வலியிழந்து மனதிற்கொண்ட அகந்தையினையும்விட்டோம்()

சம்புவையன்பொடுதாழ்ந்தடிபணிந்தே... ... ... ... *
மெம்பிழைபெண்ணலினின்னருள்புரிந்தா ... ... ... ...*
னம்புவியின்புடையன்னவனைநீபு ... ... ... ... ... *
நம்பிவணங்குதிநல்குமருளென்றான் ... ... ... ... ...*

(இ-புரை.) அதற்குமேல பரமசிவனுடைய திருவடிகளையன்புடன்பணிந்து துதிசெய்தோம் அவர் நாங்கள்செய்தகுற்றத்தைத் திருவுளத்திற்கொள்ளாமல இனிய அருள்புரிந்தார் ஆதலா லிப்போது நீயும் பூமியினிடத்தில் அந்தக்கடவுளை நம்பிவணங்குவையாயின் அருள்செய்வாரென்றுசொன்னார்.—(எ-று.) (௲௭௪)

இன்னவிசைப்பவிசைந்தடிபணிந்தே ... ... ... ... *
சின்னனெருங்கியகாசிநகருற்றே ... ... ... ... ...*
மன்னியவாயிரவர்ச்சரமரன்றாள் ... ... ... ... ... *
நன்னெறியர்ச்சனைசெய்திடலுநம்பன் ... ... ... ...*

பொழிப்புரை:

(இ-புரை.) பிரமதேவன் இவ்வாறு சொல்லத் தக்கன் சம்மதித்துக் கரும்புகள் நெருங்கிய மருதநிலஞ்சூழ்ந்த காசிப்பதியிற் சேர்ந்து பொருந்திய ஆயிரம் வருஷம் பரமசிவனுடைய திருவடிகளில் நல்லொழுக்கத்துடன் அருச்சனை செய்தார் அதற்குப் பரமசிவன்.—(எ-று,) (ாஎரு)

வந்துகணப்படைமன்னவனெனுஞ்சீர் ... ... ... ... ✻
தந்தனனும்பர்கடத்தமிடையுற்றே ... ... ... ... ...✻
யிந்துநெடுஞ்சடைபெற்றைபெருமானைப் ... ... ... ✻
புந்தியிலன்பொடுபூசனைபுரிந்தார் ... ... ... ... ...✻

(இ-புரை.) அவ்விடத்திலெழுந்தருளித் தக்கனுக்குப் பூதப்படைகளுக்குத் தலைமையான சிறப்பினை அருளிச்செய்தார் தேவர்கள் தங்கள் தங்கள் பதவியிற் போயிருந்துகொண்டு சந்திரனையணிந்த நெடிய சடைமுடியினையுடைய பரமசிவனைமனதிலுண்டாகிய அன்புடன் பூசை செய்தார்கள்.—(எ-று.) (ாஎகூ)

என்றிவையாவுமிருங்குலிசவேலாற் ... ... ... ... ✻
குன்றினெடுஞ்சிறைகொய்தவன்மகற்கு ... ... ... ...✻
வென்றிபொருந்துவியாழமெனுமேலோ ... ... ... ✻
னென்றெழியாமலுவப்புடனுரைத்தான் ... ... ... ...✻

(இ-புரை.) என்றுசொல்லிய இவைகளையெல்லாம் பெரியவச்சிராயுதத்தினால் மலைகளின் நெடிய சிறகுகளையறுத்த தேவேந்திரன் மகனாகிய சயந்தனுக்கு வியாழனென்கிற பெயருள்ள பிரகஸ்பதியானவர் சந்தோஷத்துடன் ஒருசரித்திரத்தையும் விடாமற் சொன்னார்.—(எ-று.)

[வேறு.]

கூறிதுநின்றிடவேறொருநாண்முகசுந்தனெனுந்தலைவன் ...✻
மாறுதலற்றவிசிட்டமடைந்தவசிட்டனைவந்துபணிந் ... ✻
தாறுமுடித்தவருட்கடனல்கியவாறுமுடிப்பெருமான் ... ...✻
வீறுபுகழ்ப்பெறுவிரதருரைத்தருளென்றுவிளம்புதலும் ✻

(இ-புரை.) சொல்லிய இது நிற்க வேறொருநாள் முசுகுந்தனென்னுஞ் சக்கிரவர்த்தியானவர் மாறுபடுதலில்லாதமேன்மைபொருந்திய வசிட்டமுனிவரிடத்திலே வந்து பணிந்து கங்கை நதியினைத்தரித்த கிருபாசமுத்திரமாகியபரமசிவன் அருளிச்செய்த மிகுந்தபுகழ்பெற்றஆறுமுகக்கடவுளுடையவிரதம்அடியேனுக்கருள்செய்ய வேண்டுமென்றுசொல்லுதலும்.—(எ-று.) (௩௭௬)

வெள்ளியெனுந்தினமாரலதன்றியும்வென்றியுறுந்துலையா ...*
மொள்ளியதிங்களிலிந்துவளர்ந்திடவோங்குமுன்வைகன்முறு *
வெள்ளரிதாமறுநாளுமெழிற்பரசேந்தியவேந்தறரும் ... ...*
வள்ளன்மகிழ்ந்தருள்விரதமெனப்புகழ்மாதவனோதியரோ *

(இ-புரை.) வெள்ளிக்கிழமைகார்த்திகை நக்ஷத்திரம் அதுகளுமல்லாமல்வென்றிபொருந்தியஐப்பசிமாதத்தில் சந்திரன்வளர்ந்திடஓங்கியமுதலுள்முதலாகியஆறுநாளும்அழகுள்ளமழுவேந்தியபரமசிவனீன்றருளிய சுப்பிரமணியககடவுள் மகிழ்ச்சி கொள்ளத்தக்க விரதமாகுமென்றுவசிஷ்டமுனிவர்சொல்லி.—(எ-று.) (௩௭௭)

அன்னதியற்றலுமன்னருதன்னிலருத்திபொருத்திமுடித் ...*
துன்னருமேன்மையடைந்தவர்தம்மையுமோதினனோதுதலு *
மின்னலின்மன்னவனப்படிபற்பகலிப்புவியிற்புரியா ... *
வொன்னலர்வந்துபணிந்திடவையமுவந்துபுரந்தனனே ...*

(இ.புரை.)அந்தவிரதமனுஷ்டிக்குமுறைமையினையும்அந்தவிரதத்தில் ஆசைவைத்துஅனுஷ்டித்துநிறைவேற்றி நினைத்துணைப்பதற்கரியமேன்மையடைந்தவர்கள் இன்னொன்றுஞ்சொல்லியவளவில்துன்பமில்லாதமுசுகுந்தச் சக்கிரவர்த்திஅவ்வாறேஅனேகநாளிவ்வுலகில் அனுஷ்டித்துப்பகைவர்களெல்லாரும் வந்துதன்னைவணங்கும்படி சந்தோஷத்துடன் உலகாண்டான்.—(எ-று.) (௩௭௮)

மேலொருநாடனின்மண்ணுலகத்தினும்விண்ணுலகத்தணுகித் *
தவர்வணங்குறுகோவைவருத்துதிருக்கவுணப்படைவென் ...*
றொலிப்பெரும்புகழ்மேழுவிடங்கலாயொண்புவிமீது கொணர்ந் *
தேவருமன்பொடுகாணவிருத்தியிருங்கதியுற்றனனே ... *

பொழிப்புரை.

(இ-புரை.) இவ்வாறிருக்கும் நாட்களில் ஒருநாள் பூலோகத்திலிருந்து தேவலோகத்துக்குப் போய்த்தேவர்கள்தொழும்தேவேந்திரனை வருத்துகின்ற கொடுமையுள்ள அசுரசேனையைவென்று நீங்குதலில்லாத எழுதியாகரை ஒளியுள்ள பூலோகத்தில் கொண்டு வந்து எல்லாரும் அன்புடன் கண்டுதெரிசிக்கும்படி திருவாரூர்முதலானஎழுதலங்களில் தாபனஞ்செய்து பெரியமோக்ஷத்தையடைந்தான்.—(எ-று.) (௱அக)

சொற்றிடுமின்னதிருக்கவிருப்பொடுதொண்டைநன்னாடதனின் *
மற்றொருவெற்பிடைபொற்புறுநற்சிவமாமுனிமேவியகா *
னற்றிறநவ்வியடைந்திடவன்னதைநச்சினனச்சியம்த ... ...*
யுற்றிடுமோர்கருவாயதுநவ்வியுலாயதம்மால்வரைமேல் ... *

(இ-புரை.) சொல்லுகின்றஇது நிற்க விருப்பமுடன் தொண்டைநாட்டிலிருக்கும் ஒருமலையினிடத்தில தவப்பொலிவுடன் சிவமுனிவரென்பவர் பொருந்தியிருக்கும்போது நல்லதன்மையுள்ள ஒரு மான் வந்தது அதைவிருப்பமுடன் பார்த்தார் அவ்வாறுபார்த்ததே பொருந்தியகருப்பமாகக்கொண்டு அம்மான்மலையினிடத்திலஉலாவியது(எ-று.)

குன்றவர்வள்ளியின் கழலமெடுத்தகுழிப்புடைவந்தணுகா ...*
நன்றிபெறுந்திருமங்கையைபங்கதினலகுபுதன்னதின ... *
மன்றியிருந்ததுகண்டுவெருண்டதகன்றதகன்றிடலும் ... ...*
வன்றிறல்கொண்டகிராதர்பெருந்தைவந்துதெரிந்தனனே *

(இ-புரை.) இவ்வாறுசஞ்சரிக்குமானானது அம்மலையில்வாழுங்குறவர்கள் வள்ளிக்கிழங்கு அகழ்ந்தெடுத்த குழியினிடத்தில நன்மைபெற்ற திருமகள்போல அழகுள்ள ஒருபெண்குழந்தையை அந்தக்குழியிலீன்றுதன்னினமல்லாததாயிருப்பதைக் கண்டுபயந்து போய்விட்டது அந்தச்சமையத்தில் மிகுந்தபலமுள்ளவேடராசன் வந்துபார்த்தான்(எ-று.)

தெரிந்துமகிழ்ந்துகரங்கொடெடுத்துயர்செல்வமனைப்புடையுற்
றிருந்திறல்கொண்டவிருத்தர்கள்வள்ளியெனப்பெயர் சொற்றிடவே
பரிந்துசிறப்பொடுகுன்றவர்மன்னதுபாரில்வளர்த்திடுநா... *
டிருந்தியயாணரிளங்குயிலாறிருதிருவயதுற்றனளால. ... ...*

(இ-புரை.) பார்த்துமகிழ்ந்து கைகளால் எடுத்துக்கொண்டுஉயர்ந்தசெல்வமுள்ள தன்குறிச்சியிற் கொண்டுபோய் மிகுந்த வல்லமைகொண்ட தங்கள்குலமுதியோர்கள் அந்தக்குழந்தைக்குவள்ளியென்று பெயர்கூற அவ்வேடராசன் பரிவுடன் பாரில்வளர்க்கும் நாளில் திருந்திய அழகுள்ள இளங்குயில்போன்ற அந்தப்பெண் பன்னிரண்டு திருவயதுபொருந்தினுள்.—(எ-று.) (௱அச)

ஏவைமுனிந்தொளிரொஃகநெடும்படையென்னவிலங்கியகட் *
பூவையைவேடுவரானவரோனல்புரந்திடவைத்திடலுங் ... ...*
காவல்புரிந்திதணைத்துறுநாளுயர்கந்தவிலங்கலெரீஇச் ... *
சேவனெடுங்கொடியண்ணலபெருத்தசெருத்தணியுற்றனனே *

(இ-புரை.) பாணங்கள் தனக்கு ஒப்பாகாமையால் அவைகளைக் கோபித்துப் பிரகாசியா நின்ற நெடியவேலாயுதம் போல் விளங்குகின்ற கண்களுள்ளவள்ளியை அவ்வேடர்கள் தினைப்புனங்காக்க வைத்தார்கள் வள்ளியம்மை அந்தத்தினைப்புனங்காத்துக்கொண்டு பரணின்மேலிருக்கும் நாளில் கோழிக்கொடியுள்ளசுப்பிரமணியக்கடவுள் உயர்ந்தகந்தமலையை விட்டுப் பெரிய திருத்தணிகையில் வந்தருளினர்.—(எ-று.)

(திருத்தணிகைக்குச்செருத்தணியென்றும்பெயர்.)

வந்துசெருத்தணியற்புதவெற்பிடைவள்ளலிருந்தருளச் ... *
சுந்தரவள்ளியைநாரதனுகியதொன்மைகொண்மாமுனிகண் ...*
டெந்தைகுகன்கணிணங்கிவணங்கியிசைத்திடமாமயல்கொண் *
டுந்தியவ்வலவன்வேடுவர்போலவுருக்கொடுசென்றனனே ...*

(இ-புரை.) அற்புதமுள்ள திருத்தணிமலையில் சுப்பிரமணியக்கடவுள் வந்திருக்கும் போது பழமையாகிய நாரதமுனிவர் சுந்தரமுள்ள வள்ளிநாயகியைக்கண்டுஎம்மையனுகிய முருகக்கடவுளிடத்தில்வந்து வணங்கிச்சொல்லமிகுந்தமோகங்கொண்டு வேலாயுதககடவுள் வேடர்போலத்திருமேனிகொண்டுதினைப்புனத்துக்கெழுந்தருளினர். (எ-று.)

விண்டொடுவள்ளிவிலங்கலினேகிவிலங்கலிலாவெழிலோ ...*
டண்டரிதாமிதணத்திலிருந்தவருங்குறமாதுதனைக்... ... *

பொழிப்புரை.

கண்டனன்மாமயல்கொண்டிடர்கொண்டகருத்தொடுநின்றுபுகழ்ந்
தொண்டிறலோன்விரகத்துனாபற்பலவோதினன்மாதினொடும் *

(இ-புரை.) ஆகாயத்தையளாவிய வள்ளிமலையிற் சென்றருளி நீங்காத அழகுடன் சேர்தற்கரியதாகியபரணியிலிருக்கிற வள்ளிநாயகியைக் கண்டு மிகுந்தமோகங்கொண்டு இடர்பொருந்திய மனத்துடனிருந்து புகழ்ந்து சுப்பிரமணியக்கடவுள் அந்தவள்ளிநாயகியுடன் விரகமொழிகளைப் பலபலவாகச்சொல்லினார்.—(எ-று.) (௱அஎ)

ஆங்கதுகாலையில்வேடுவரோடவளத்தனடைந்திடலும் ... *
வேங்கையுரித்தபரம்பரன் மாமகன்வேங்கையுருக்கொளவே ...*
வாங்கில்புகழ்ப்பெறுகானவரானவர்வந்துவளைந்துசினந் ... *
தீங்கிதுவல்லைபறித்துமுறித்திடுமென்றுபகன்றனரோ ... ...*

(இ-புரை.) அந்தச்சமையத்தில வேடராசன்வேடர்களுடன் வந்தபோது புலியையுரித்த பரமசிவன் அருளியதிருமைந்தரானவர் வேங்கைமரமாக உருவங்கொண்டிருந்தார் நீங்குதலில்லாத புகழ்பெற்றுள்ள அந்தவேடர்கள் அருகில் வந்து சூழ்ந்து கோபித்து இந்தமரம் புதிதாயிருப்பதினாலிப்போதே யிதனைமுறித்து விடக்கடவோமென்று சொன்னார்கள்.—(எ-று.) (௱அஅ)

அன்னவர்தம்மைவிலக்கியவர்க்கிறையன்புமகட்டெரியா ... *
வின்னதியாதெனவேதமறிந்திலனென்றுபுகன்றிடலு... ...*
மன்னியவின்னதுநின்றுணையாகிவளர்ந்திவணிற்கவென ... *
வந்நிலைதன்னிலகன்றனன்முன்பெனவண்ணலுநின்றனனே ...*

(இ-புரை.) அவர்களுக்கிறைவனானவன் இந்தமரத்தைவெட்டவேண்டுவதில்லையென்று அவர்களைவிலக்கிஅன்புள்ள தன்மகளைநோக்கிஇந்தமரம் யாதென்று வினாவினான்அவள் நான்யாதொன்றும்அறியேனென்றுசொன்னாள்அப்படியானால்இவ்விருக்ஷமானது உனக்குத்துணையாயிருக்கட்டுமென்று சொல்லி அவ்விடம்விட்டுப்போய்விட்டான் சுப்பிரமணியக்கடவுள் முன்போலவேடவுருவமாய் நின்றார்.—(எ-று.) (௱அகூ)

இன்பொடுநின்றவனுன்றனையன்றியெனக்கொருதஞ்சமிலை *
யன்புடனாளுதியென்றனையென்றெமதன்னையொடோதலுமே *

பின்புமிருங்குறவர்க்கிறையானபெருந்தகைவந்திடவே ...*
பொன்புனைசைவவிருத்தனெனும்படிபோயினனங்கவனேர் *

(இ-புரா.) இன்பமொடு நின்ற சுப்பிரமணியக் கடவுள் பெண்ணே உன்னையல்லாமல் எனக்கு வேறொருதுணையுமில்லை ஆதலால்அன்புடனென்னை யாளக்கடவை யென்று நம்முடைய தாயாகிய வள்ளிநாச்சியாருடன் சொல்லிக்கொண்டிருக்கும்போது வேடர்க்கிறைவன்மறுபடியும் அங்கேவரக்கண்டு சைவவிருத்தப்பிராமணன் போல ,அவனுக்கெதிரில்சுவாமிசென்றருளினார்.—(எ-று) (௱௬௰)

ஆதரவிற்றிருநீறுகொடுத்தனனாசிபுகன்றிடலு ... ... ...*
மேதமில்கொற்றவனச்சினதேமனவிவ்வனாயிற்குமரி ... *
தீதறவாடுறவந்தனமென்றருள்செய்யவதாடுபுநம் ... ...*
மாதினொடுந்துணையாயிருமென்றவனவைத்தகல்வுற்றனனே *

(இ-புரா.) அன்புடன் திருநீறுகொடுத்து ஆசீர்வசனஞ்சொன்னார் குற்றமில்லாத அந்தவேடராசன் நீர்யாதுவிரும்பி யிங்கு வந்தீரென்னச் சுவாமி அவனைநோக்கி யிந்த மலைச்சாரலிலிருக்கும் குமரியினிடத்துத்தீர்த்தமாட வந்தோமென்றருள்செய்யஅப்படியானால் உம்முடைய இஷ்டப்படி குமரியினிடத்து ஆடி என்மகளுடன் துணையாயிருமென்று அங்கேவைத்துவிட்டுப்போனான்.—(எ-று.) (௱௬௧)

(குமரி என்பது-ஆற்றுக்கும் கன்னிகைக்கும்பெயர்.)

வள்ளியைநோக்கிவிருத்தனெனும்படிவந்திடுமெந்தைபிரா ...*
னுள்ளுறுநீரில்விடாயுடையேனெனவோதவதற்கொருசா... *
ரொள்ளியபுகழ்க்கொடி நற்சுனையின்கரையெய்தமெலிந்தவர்போ
லள்ளியரும்புனலுண்டமையானுடையண்ணலறைந்தருள்வான்

(இ-புரா.) கிழரூபங்கொண்டிருக்குஞ்சுப்பிரமணியக்கடவுள்வள்ளியம்மையைநோக்கிக கருதுகின்றநீரில்விடாயுடையேனென்றுசொல்லஇகழ்ச்சியில்லாதபுகழ்ச்சியுள்ளவள்ளியம்மைஅவரைஅழைத்துக்கொண்டு அம்மலைக்கொருபுறத்திலிருக்கும்ஒருநல்லசுனையின்கரைக்குப்போனவளவில் சுவாமியானவர்விடாயினால்மிகுதியாகமெலிந்தவர்போலஅந்

தச் சுலை நீரினையள்ளி யுண்டு வள்ளி நாயகியைநோக்கி அருளிச் செய்கின்றார்.—(எ-று.) (௱௯௨)

ஏதமினீரின்விடாயையகற்றினையென்னையினித்தழுவிக் ... *
காதலகற்றுதியென்றுபகன்றிருகைகள்குவித்திடலு ... ...*
மாதுசினந்துபடர்ந்தனளத்தியின்வத்திரனைக்குமர... ...*
னாதரவோடுநினைப்பவெதிர்ந்தனனனையதாயெதிரே ... ...*

(இ-புரை.) குற்றமில்லாத நீர்விடாயை நீக்கினை இனி யென்னைத்தழுவி என்னாசையை நீக்கென்றுசொல்லித்தம்முடைய இரண்டுகைகளையுங்குவித்துக் கும்பிட்டார் வள்ளிநாச்சியார் அதனைக் கண்டு கோபித்து அப்புறம்போய்விட்டாள் அப்போது சுவாமியானவர் யானைமுகக்கடவுளையன்புடன் தமது திருவுள்ளத்தில நினைத்தவுடன்அவர்யானையுருவமாய் வள்ளிநாச்சியாருக்கெதிரில்வந்தருளினார்.—(எ-று.) (௱௯௩)

கண்டனள்வள்ளிவெருண்டுதிரும்பினள்கந்தனைவந்துதழீஇக் *
கொண்டனளும்பலகற்றிடினீர்நசைகொண்டதுசெய்வனெனா *
வண்டர்பிரானிருகைகள்குவித்தனனத்தவெழுந்தருளென் ...*
றெண்டிறல்வேழமொரோடதலுமன்னதுவப்பொடுசென்றதுவே

(இ-புரை.) வள்ளியம்மை அந்தயானையைக்கண்டு பயந்து திரும்பிவந்து சுப்பிரமணியசுவாமியைத்தழுவிக கொண்டு இந்தயானையை அகற்றிவிட்டால நீரிச்சைகொண்டது செய்வேனென்று சொல்ல தேவர்பிரானாகிய சுப்பிரமணியக்கடவுள் யானையைநோக்கிஅத்தனேயெழுந்தருளென்று அஞ்சலிசெய்துபிரகாசமானவெற்றி யுள்ளயானையுடன்சொன்னவளவில் அதுசந்தோஷித்துடன்போய்விட்டது.—(எ-று.) (௱௯௪)

அன்னதுபின்பறுமாமுகன்வள்ளியையாசையொடும்புணராப் *
பன்னிருதோளொடிருந்திடமங்கைபணிந்துபுகழ்ந்திட்டு ...*
மன்னுதினைப்புனமேகுதியாமவண்வந்திடுவோமெனவே ... *
துன்னியவேனலுறும்படியுற்றனபோழியுமெய்தினளே... ...*

(இ-புரை.) அதன்பின்பு ஆறுமுகசுவாமியானவர்வள்ளிநாயகியை ஆசையுடன்புணர்ந்து பன்னிரண்டு திருக்கரங்களும் ஆறு திருமுகங்களும் விளங்கும்படி தம்முடைய உண்மைத்திரு வுருவத்துடன் நின்றருளக்கண்டு வள்ளியம்மை பணிந்து துதிசெய்யப் பழையபடி நீயிருந்த தினைப் புனத்திற் போயிரு நாம் வருகிறோமென்று உரைத் தருளமுன் பொருந்திய தினைப்புனத்தி லிருக்கும்படிசென்றவுடன் தோழியும் அங்கே வந்தாள்.—(எ-று.) (௱௯௫)

ஏனலழிந்திடவெங்ஙனமேகினையென்றுவிளம்புதலும் ... ...*
பூநறுமென்சுனையாடிவரும்படிபோயினனென்றிடவே ... *
மேனிவியர்ப்பமுலைத்துணைவிம்மவெளுத்திடவாய்புரியு ...*
மூனமிறண்சுனை யெவ்விடையுற்றுளதோவெனவோதினளே *

(இ-புரை.) தினை அழிந்திடும்படியெங்கேபோனாயென்றுதோழி வினவலும் நான்மலர்களுள்ள வாசனைதங்கிய சுனைநீரில ஸ்நானஞ்செய்யச் சென்றேனென்று வள்ளியம்மைசொன்னாள் அதைக்கேட்ட தோழியானவள் வள்ளியம்மையை நோக்கி மேனிவியர்வுகொள்ளவும் ஸ்தனங்கள் பூரிக்கவும் வாய்வெளுக்கவும் செய்யத்தக்க சுனையெங்கே யிருக்கின்றது சொல்லென்றாள்.—(எ-று.) (௱௯௬)

நன்றிது நன்றிதெனக்குமொர்குற்ற நவின்றனையென்றுவெகுண்.
டொன்றியிருந்துழிவேலவன்வேடருருக்கொடுவெய்யமதந் ...*
துன்றுவிறற்கரியொன்றெனதம்பொடுசோரிசொரிந்திடவே *
யின்றிவணவந்துளதோவெனவோதினனேதமின் மாதர்கண்முன்.

(இ-புரை.) என்னிடத்திலும் ஒருகுற்றஞ்சொல்லினையல்லவா இது நன்று நன்றெனக்கோபித்துச் சொல்லிப்பின்ப அவ்விருவருஞ் சமாதானமாயிருக்கும்போது சுப்பிரமணியசுவாமியானவர் வேட ருருவங்கொண்டு குற்றமில்லாத அம்மாதர்முன்வந்து மதம்பொருந்திய ஒருயானையானது இன்று என்அம்புடன் உதிரம்பெருகும்படி இங்குவந்ததோவென்றுவினவினார்.—(எ-று.) (௱௯௭)

அவ்விடையிற்குகன்மங்கைபுணர்ந்ததையங்கவர் பார்வையினான்
மைவ்விழிநண்பியறிந்துபிறிந்தயல்வன்புனமீதுறலும் ... *

கவ்வியவேலவனன்னவண்முன்புகலந்தெழில்வள்ளியையெற் *
இவ்விடையீகுதியல்லதியான்மடலேறுவனென்றனனே... ...*

(இ-புரை.) அப்போது சுப்பிரமணியரானவர் வள்ளிநாயகியைப் புணர்ந்ததன்மையை அவர்கள் பார்வையினுல்மைதீட்டிய நேத்திரமுள்ளபாங்கி அறிந்துகொண்டு பக்கத்திலிருக்கு மற்றொருதினைப் புனத்திற்போயினள் அவுணர்களாகிய பகைவர் உடல் மாமிசத்தைக் கவ்விய வேலாயுதத்தையுடைய சுப்பிரமணியக்கடவுள் அவளெதிரிற்போய் இப்போதுவள்ளி நாயகியையெனக்குக்கொடு கொடாவிட்டால் நான்மடலேறுவேனென்றுசொன்னர்.—(எ-று.) (௱௯அ)

என்னலுமன்னவள்வள்ளியைபெய்தியிணங்குறுமாறுணாயூா... *
மன்னியவேலனிடைக்கொடுவந்திடவள்ளியும்வேலவனு... ...*
மின்னல்றுங்கலவித்தொழில்செய்துபின்னைனல்புரந்திடவே *
பொன்னுறுமேவலன்விடுத்தலுமெம்மனைபோயினள்சேடியொடும்*

(இ-புரை.) சுப்பிரமணியசுவாமியானவர் இவ்வாறு சொல்லியவளவில் பாங்கியானவள் வள்ளியம்மையிடத்தில்வந்துஅவள்சம்மதிப்படும்படி சொல்லி அங்குவந்திருக்கிறசுப்பிரமணியசுவாமியினிடத்தில்அழைத்துக்கொண்டு போய்விட்டாள் வள்ளியம்மையும் சுப்பிரமணியக் கடவுளும் மகிழ்ச்சியுள்ள கலவித்தொழில்செய்து பின்பு தினைப்புனங்காக்கும்படி பொலிவுள்ள வேலாயுதக்கடவுளுடையஉத்தரவினுல் நம்முடைய தாயாகிய வள்ளியம்மைபாங்கியுடன்சென்றுள்.—(எ-று.) (௱௯௯)

'வென்றிகொள்குன்றவரோனறடிந்திடமேவினர்மாதினையிற் ...*
சென்றிடனத்துணைமாதொடுவீடுசெறிந்துவருந்தியுறப்... *
பொன்றிகழ்வள்ளியைநாடிமெலிந்துபுலம்பி யிருட்பொழுதின்
வன்திறல்வேலவன்மங்கையிருந்தமனைப்புறமுற்றனனே. ...*

(இ-புரை.) வென்றிபொருந்திய வேடர்கள் தினையறுப்பதற்குவந்து வள்ளியம்மையைக் குறிச்சிக்குப்போம்படிசொல்லப்பாங்கியுடன் குறிச்சியிற்போய் வருத்தமுடையவளா யிருந்தாள்அப்படியிருக்கவன்மையும் வெற்றியுமுள்ள வேலாயுதக் கடவுளோவெனில் அங்குவிளங்கும் வள்ளிநாயகியை நாடிப்புலம்பிமெலிந்து இருட்பொழுதில் வள்ளியம்மையிருக்கும் குறிச்சியின்புறத்திற்போயி ருந்தார்.—(எ-று.) (௨௱)

வேலனையன்பொடுகண்டனள்சேடிவிருப்புறுவள்ளிதனைக் ...*
கோலமொடுங்கொடுவந்தனள்பாணிகொடுத்தனளின்னவளைச் *
சாலவுமன்பொடுகாத்தருளென்றுரைசாற்றலுநம்மிடைநீ ...*
மாலைநறுங்குழல்வைத்திடுமன்புமறக்கிலமென்றனனே ... *

(இ-புரை.) சுப்பிரமணியசுவாமியை அன்புடன் பாங்கிகண்டு வள்ளியம்மையைக்கொண்டுவந்து அவளுடையகையைச் சுப்பிரமணியசுவாமிதிருக்கரத்தில் கொடுத்து இந்தவள்ளிநாயகியைமிகுந்தஅன்புடன் காத்தருளென்றுசொல்லலும்சுவாமியானவர்பாங்கியைநோக்கிப்பூமாலையணிந்த வாசனைதங்கிய அளகபாரத்தையுடையபாங்கியேநீநம்மிடத்தில் வைத்திருக்கிற அன்பினை நாம் மறப்பதில்லையென்றுமொழிந்தருளினார்.

என்றுபுகன்றவணின்றுமகன்றெழிலெய்தியமாதொடுஞ் ...*
சென்றொருகாவிலிருந்தனனவ்வைகறைசேர்தலும்வள்ளிதனைத் *
துன்றெயினர்க்கிறைகண்டிலன்மண்டியசுற்றமொடுங்குழுமிப் *
பொன்றிலடிச்சுவடொற்றிநடந்துபொழிற்புடையுற்றனனே *

(இ-புரை.) இவ்வாறு பாங்கிக்குச் சொல்லிச் சுப்பிரமணியக்கடவுள் அவ்விடம்விட்டு நீங்கிச்சௌந்தரியமுள்ளவள்ளிநாயகியுடன்சென்று ஒருசோலையில் வீற்றிருந்தார் இங்கு வேடராசன்பொழுதுவிடிந்தபோது தன்மகளாகிய வள்ளியம்மையைக்காணாமல் நெருங்கியதன் சுற்றத்தாருடன் கூடிக்கெடுதலில்லாத அடிச்சுவட்டினைப்பார்த்துக் கொண்டுசென்று அந்தச்சோலையினிடத்திற்சேர்ந்தான்.—(எ-று.) (உ௱உ)

கண்டனள்வள்ளிவெருண்டனளன்பொடுகந்தனைவந்தனைசெய் *
தண்டினர்வேடுவரென்செய்வதென்றிடவன்றெதிர்சூருயிரைக்...*
கொண்டிடுமெஃகமிருந்துளதஞ்சலைகொல்லுதும் யாமெனவே.
மண்டியவேடுவர்வந்துவளைந்துவடிக்கணைவீசினரே ... ... *

(இ-புரை.) இவர்கள் வருவதை வள்ளிநாச்சியார்கண்டு பயந்து அன்புடன் சுப்பிரமணியசுவாமியைவணங்கிவேடர்கள்வந்துவிட்டார்களே யினியென்ன செய்யத்தக்கதென்று சொல்ல முன்னாள் நம்முடனெதிர்த்த சூரனுயிரை வாங்கிய வேலாயுதம் நம்மிடத்தி லிருக்கின்றது ஆதலால் நீபயங்கொள்ளவேண்டுவதில்லை இத்தனைபேரையும் நாம்கொல்லுகிறோமென்று சொல்லிக்கொண்டிருக்கும்போதில் எதிரேற்றுவருகிறவேடர்கள் சூழ்ந்துவடித்துள்ளபாணங்களையேவினார்கள்.—(எ-று.)(உ௱ஙு)

# கந்தப்புராணச்சுருக்கப்.

பொழிப்புரை:

மாரியெனும்படிவாளிசொரிந்திடவள்ளறன்ஞதருளாற் ... ...*
சீரியகையிலுறுங்கொடியாகியசேவலொலித்திடவே... ... *
யாருமிறந்தனர்வேலவனங்கணகன்றுநடந்திடலுஞ் ... ...*
சோர்விலெழிற்பெறுகுன்றவர்மாதுதொடர்ந்துபடர்ந்தனளே*

(இ-புரை.) இவ்வாறு வேடர்கள் மழைபோலப் பாணங்கள்பொழியும்போது சுப்பிரமணியசுவாமியினுடையகட்டளையினால் அவருடைய அழகியதிருக்கரத்திலிருக்குங் கொடியாகிய கோழியொலித்தது அந்ஒலியினால் வேடர்களெல்லாரும் இறந்தார்கள்சுவாமியானவர் அவ்விடம்விட்டுநீங்கி நடந்திடச்சோர்வில்லாத அழகுபொருந்திய வேடர்மாதாகியவள்ளியம்மையுஞ்சுவாமியுடன் தொடர்ந்துசென்றாள்.(எ-று)(உாச)

மேதகுநாரதனவ்விடைவந்தனன்வேலவனைப்பணியா... ... *
வோதுதிவிங்ஙனியற்றியதென்னவுவப்புறுவள்ளிபொருட் ...*
டேதமில்வேலவனிங்ஙனியற்றியயாவுமறைந்திடவே... ... *
தீதறுநாரதனாகியபேருளசீர்முனிகூறுவனால் ... ... ...*

(இ-புரை.) மேன்மைபொருந்தியநாரதமுனிவர் அவ்விடத்தில்வந்துவேலாயுதக்கடவுளைவணங்கிச்சுவாமிகளிவ்விடத்தில்செய்தகாரியம்யாதோஉரைத்தருளவேண்டுமென்னச்சந்தோஷமுள்ளவள்ளிநாயகிபொருட்டு இவ்விடத்தில் நடந்தகாரியங்களை யெல்லாம் மொழிந்தருளக்கேட்டுக் குற்றம் நீங்கிய நாரத னென்னும்பெயருள்ள சிறப்புப் பொருந்திய முனிவர்கூறுகின்றார்.—(எ-று.) (உாரு)

எம்பெருமானிவண்வேடுவர்யாருமிறப்பவியற்றினையிக் ... *
கொம்பினைவவ்வியகன்றிடனீதிகொலோவெனவோதுதலு ...*
மும்பரிடுக்கணகற்றியவேலனுவந்துதிரும்பியசோ ... ... *
வம்புறுசோலையின்வந்தனன்மாதவன்வள்ளியொடுங்கடிதே ...*

(இ-புரை.) எம்பெருமானே யிவ்விடத்தில் வேடர்க ளெல்லாரும் இறக்கும்படி செய்தருளி இந்த வள்ளியம்மையைக் கூட்டிக் கொண்டு போகுதல் நீதியாகுமோ வென்று சொல்லவும் தேவர்கள் துன்பத்தை நீக்கிய வேலாயுதக்கடவுள் சந்தோஷித்துத் திரும்பி வாசனை பொருந்திய சோலையினிடத்துநாரதரும்வள்ளியம்மையுங்கூடவரவந்தனர்.—(எ-று.)

ஒல்லையில்வேலவன்வள்ளிமடந்தையொடின்றமருய்ந்தெழவே *
சொல்லுதியென்னலுமன்னையுமவ்வகை சொற்றனள்சொற்றிடலும்.
வல்லையெழுந்தனராறுமுகம்பெறுவள்ளலையன்பொடுகண் ...*
டெல்லையிலாதவெருக்கொடிறைஞ்சியிசைத்திடுவாரிவையே...*

(இ-புரை.) அங்குவந்தவுடனேசுப்பிரமணியக்கடவுள்வள்ளிநாச்சியாரைநோக்கிஉன்னுடையசுற்றத்தார்பிழைத்தெழுந்திருக்கும்படிசொல்லென்றார்நம்முடையதாயானவளும் அவ்வாறேசொல்லினள் சொன்ன அப்பொழுதேவேடர்கள்பிழைத்தெழுந்து ஆறுதிருமுகமுள்ள சுப்பிரமணியசுவாமியை அன்புடன்கண்டு அளவில்லாதஅச்சங்கொண்டு இவ்வார்த்தைசொல்லுகின்றார்கள்.—(எ-று.) (உ௱எ)

எங்கள்பிரானினியெம்மனையுற்றெழிலெம்மனைதன்னைமணந் ...*
தங்கொளுநின்பதியேகுதியென்னலுமன்னசெயற்கிசையா.. *
மங்குனெருங்கியகுன்றுறைகானவர்மன்னவனிற்குறுகித் ...*
துங்கநெடும்புலியாதனமீதுதுலங்கவிருந்தனனே... ... *

(இ-புரை.) எங்களிறையவனே இனியெங்கள் குறிச்சிக்குவந்து சௌந்தரியமுள்ள எங்கள்தாயாகிய வள்ளிநாச்சியாரை விவாகஞ்செய்துகொண்டு அழகுகொண்ட உன்பதிக்குச் செல்லவேண்டு மென்று விண்ணப்பஞ்செய்தார்கள் அதற்குச்சம்மதித்து மேகங்கள் சூழ்ந்தமலையில் வாசமாயிருக்கும் வேடராசன்குறிச்சியில் எழுந்தருளிப் பலம்பொருந்தியபுலித்தோல்ஆசனத்தின்மேல்விளக்கமுற வீற்றிருந்தார்()

அங்கதுகாலையில்வள்ளியையன்பினொடண்ணலெறிந்திடலுங்...*
கொங்குநறுந்தொடைவேடுவர்மாதர்குயிற்றியகோலமொரீஇ *
மங்கில்வளம்பெறுதெய்வவனப்புடன்மன்னினளின்னதுகண் *
டிங்கிவளெம்புடைவந்ததுநந்தமிருந்தவமென்றனரோ... ...*

(இ-புரை.) சுப்பிரமணியசுவாமியானவர் புலித்தோலாசனத்தில் இருந்தபோது வள்ளிநாயகியை அன்புடன்பார்த்த மாத்திரத்தில் தேனும்வாசனையும் பொருந்திய பூமாலையணிந்த வேடுவமாதர்கள் முன்அலங்கரித்திருந்த கோலம்நீங்கிக் கெடுதலில்லாத வளமைபெற்ற தெய்வக்கோலமாயிருந்தனள் அதைக்கண்டுஇத்தன்மையுள்ள இவள் நம்மிடத்

துவந்ததுநாம்பூர்வஞ்செய்தபெரியதவமென்றுவேடுவர்கள் சொன்னார்கள்.—(எ-று.) (உாகூ)

கொற்றமதுற்றிடுகோனவரானவர்கொற்றவன்முற்றெழிலான்... *
மற்றிணையற்றுயர்வள்ளிகரத்தினைவள்ளல்கரத்தினில்வைத்... *
துற்றிடுமென்மகளைக்குமரேசவுனக்கருள்செய்தனனென்... *
றற்றமிலன்பொடடைந்துசிறந்தவரும்புனலுய்த்தனனே ...*

(இ-புரை.) வெற்றி பொருந்திய வேடர்களுக்கெல்லாம் அரசனானவன் நிறைந்த அழகினால் தனக்கு ஒப்பில்லாமலிருக்கும் வள்ளியம்மை கையினைச் சுவாமி திருக்கரத்தில் வைத்துச் சுப்பிரமணியக்கடவுளே பொருந்திய வென்மகளை உனக்குக்கொடுத்தேனென்று சோர்வில்லாதஅன்புடன்சொல்லிச்சிறந்துள்ளஅரியநீரினைவிட்டான் (எ-று.)

அன்னதுகாலையிலெஃகநெடுங்கரவண்ணறனுதருளாற் ... *
றன்னிகர்நாரதன்மன்றலினுள்ள சடங்குபுரிந்திடலுந்... ... *
துன்னியவிண்ணவர்கண்ணனயன்புடை சுற்றிவழுத்திடவே *
கன்னிமடந்தையொடந்தரமீதிருள் கந்தரன்வந்தனனே ...*

(இ-புரை.)அத்தன்மையாகியகாலத்தில்வேலாயுதமேந்திய சுப்பிரமணியசுவாமியின் அருளினால் தனக்குத்தானே யொப்பாகிய நாரதமுனிவர் திருமணத்துக்குரியதாகிய சடங்குகள் செய்யும்போது நெருங்கிய தேவர்களும் விஷ்ணுவும் பிரமதேவனும் புடைசூழ்ந்து தோத்திரஞ்செய்யத்தக்கதாகப்பார்வதிதேவியுடன்பரமசிவன்ஆகாயத்தின்மேல்எழுந்தருளினார்.—(எ-று.) (உாயக)

தந்தையுமன்னையும்வந்ததுகண்டொருதந்திமுகற்கிளவல் ... *
சிந்தைகளித்தெவரும்முணராவகை செய்யகரங்கள்குவித் ... *
துந்துபெரும்புகழும்பர்தமக்கு முவந்தருள்செய்திடலும்...*
புந்திமகிழ்ந்துயர்விண்ணவரோடுபுராந்தகனேகினனே... ... *

(இ-புரை.) பிதாவுந்தாயும் வந்ததைக்கண்டு யானைமுகக்கடவுளுக்கு இளையவரானவர் மனங்களித்து யாரும் அறியாவண்ணமாகத் தம்முடையதிருக்கரங்களைக்குவித்து நமஸ்கரித்துமேலானபெரும்புகழுள்ள தேவர்களுக்குச் சந்தோஷித்துஅருள்செய்தவளவில் மனமகிழ்ந்து பரமசிவன்தேவர்களுடன் எழுந்தருளினார்.—(எ-று.) (உாயஉ)

சம்புவகன்றுழிநாரதனுற்று சடங்குமுடிந்திடலும்.......... ...*
மம்புநெடுஞ்சிலைவேடுவர்மாதர்களாசிபுகன்றிடவே ... ... *
வம்புபொருந்துகடம்புதடம்புயன்மங்கையொடங்கனெழூந் *
தும்பர்புகழ்ந்திடுகுன்றவர்மன்னொடுரைத்திடுவானிவையே ...*

(இ-புரை.) பரமசிவன் எழுந்தருளியபின்பு நாரதமுனிவர் செய்யுஞ் சடங்குமுடிந்தவுடன் அம்பும்வில்லுமுள்ள வேடர்மாதர்கள் ஆசீர்வசனஞ் சொல்லவாசனைதங்கிய கடப்பமாலையணிந்த பெரியபுசமுள்ள முருகேசர் வள்ளிநாயகியுடனெழுந்து தேவர்கள் புகழும்படியான வேடராசனுடன் இம்மொழிகள் உரைத்தருள்கின்றார்.—(எ-று.) ()

அருத்திபொருந்தியவுன்றனியற்கையனைத்துமியற்றுபுவிங் *
கிருத்தியெனககடிதங்கணிறுத்தியிலங்கெழில்வள்ளியொடும்...*
பெருத்திடுமன்னசிலம்பையகன்றுபிறங்குவளங்குலவுந் ... *
திருத்தணிமால்வரைவந்தனனுந்தியசேவலுயர்த்தபிரான் ...*

(இ-புரை.) விருப்பமுள்ளஉன்னுடைய அரசினை நடத்திக்கொண்டுஇங்கிருவென்று அருளிச்செய்து அந்தவள்ளியம்மையைவிட்டு விளங்குகின்றசௌந்தரியமுள்ள வள்ளிநாயகியுடன்சேவற்கொடியுயர்த்தசுப்பிரமணியக்கடவுள்விளங்குகின்ற வளப்பங்கள் மிகுந்திருக்குந்திருத்தணிகைக்கு எழுந்தருளினார்.—(எ-று.) (உாயச)

அண்டர்கள்கம்மியனன்னதின்முன்னரமைத்திடுமாலயமுற் *
றொண்டொடியோடுதிருத்தலுமங்கையுவந்துவணங்கியெழில்..*
கொண்டிடுமின்னசிலம்பினியற்கைகள்கூறுதியென்றிடலும்... *
மண்டியவக்கிரிமேன்மையனைத்தையும்வள்ளல்புகன்றனனே ...*

(இ-புரை.) தேவதச்சனுனவன் அதற்குமுன்னமே அமைத்திருக்கும் ஆலயத்தில் வள்ளிநாயகியுடன்வீற்றிருக்கையில்வள்ளியம்மையெழுந்துவணங்கி அழகுபொருந்திய இந்தமலையின் பெருமைகளைமொழிந்தருள வேண்டுமென்னச் சுவாமி அம்மலையின் பெருமைகளை உரைத்தருளினார்.—(எ-று.) (உாயரு)

உய்வகைதந்திடுகந்தனதற்பினுரக்கிரிவில்லுடையோ ... ...*
னைவகைமேனியிலோர்வடிவங்கணமைத்தனையாமகிழ்வான் ... *
மெய்வகையர்ச்சனைசெய்ததினுள்பலமேவிவிளங்கெழில்சேர் *
மைவிழிமாதொடுகந்தவிலங்கலின்மந்திரமூற்றனனே ... ...*

(இ-புரை.) அதன்பின்பு அடியார்கள் உய்யும் நெறியருளும் சுப்பிரமணியக்கடவுள் பலம்பொருந்திய மலைவிலமேலந்தியபரமசிவனுடையஐந்து வகையான திருவுருவங்களில் ஒருதிருவுருவம்அங்குஸ்தாபித்து அடங்காதமகிழ்ச்சியுடன் உண்மையான அருச்சனைசெய்து அங்குப்பல நாள்வீற்றிருந்து விளங்குகின்ற சௌந்தரியம்பொருந்தியமைதீட்டிய நேத்திரமுள்ள வள்ளிநாயகியுடன் ஸ்கந்த கிரியிலிருக்கும் ஆலயத்தில் எழுந்தருளினார்.—(எ-று.) (உளயசு)

(ஐந்துவகை திருமேனியிலொன்றாவது உருவாருவம் அதுவேசிவலிங்கமூர்த்தம்-)

[வேறு.]

வண்டார்தொடைக்குழன்மருத்துவனளித்ததிருமங்கை ... *
கண்டாளெழுந்தெதிர்நடந்தாள்பணிந்தனள்கரத்தா ... *
லண்டார்தமக்கரியெடுத்தேயுரத்திடையணைத்தான் ... ... *
விண்டானுறழ்ந்தவிடைவள்ளியவடாண்மிசைவிழுந்தாள் ...*

(இ-புரை.) வண்டுகள் பொருந்தும் படியான மாலையணிந்த அளகபாரத்தையுடைய தேவேந்திரன் புத்திரியாகிய தெய்வயானையம்மைகண்டு எழுந்து எதிர்நடந்து பணிந்தாள் பகைவரானயானைகளுக்குச் சிங்கமொத்த சுவாமியானவரெடுத்துமார்புடன்தழுவிக்கொண்டார் வெளியையொத்த இடையினையுடைய வள்ளியம்மை தெய்வயானையம்மையினுடைய பாதங்களைப்பணிந்தாள்(.எ-று.) (உளயஎ)

ஈறானதற்றபுகழ்யாணருளவள்ளினயயெடுத்தே ... ... *
மாறுநெடுங்கிரியிரண்டுடனிரண்டுபொருமாபோல்... ... ...*
வீறானகொங்கையொடுகொங்கைகணெருங்கவுரமீதே ... *
பாறுணிகர்த்தமொழிபுல்லிமுகமன்பலபகர்ந்தாள் ... ...*

(இ-புரை,) முடிவில்லாத புகழும் அழகுமுள்ள வள்ளியம்மையையெடுத்துஒன்றுக்கொன்றுமாறுபடாமல்சரியொத்திருக்கத்தக்க இரண்டுகிரிகளுடன் அவ்வண்ணமுள்ள இரண்டுகிரிகள் பொருந்துதல்போல உயர்ந்ததனங்களுடன் தனங்கள்நெருங்கும்படி தன்னுடையமார்பில் தழுவிக்கொண்டு பாலினையொத்த மதுரவசனமுள்ள தெய்வயானையம்மையுபஉபசாரவார்த்தைகள்சொல்லினள்.(எ-று) (உளயஅ)

மின்னூர்நுசுப்பனையமாதரொடரித்தவிசின்மீதே ... ... *
யொன்னூருடம்பிடியுடம்பிடிபிடித்தவனுறைந்தான் ... ...*
பொன்னூடன்மங்கையிவள்வந்தபரிசென்னபுகலென்ன ... *
வன்னூடனக்கிவையுரைக்குமெமையாளுடையவண்ணல்... ...*

(இ-பு௱.) மின்னற்கொடியையொத்த இடையினையுடைய அந்த இரண்டு மாதர்களுடனும் சிங்காசனத்தின் மேல்பகைவர்கள் உடம்பினை யிடிக்கத்தக்கவேலாயுதமேந்தியசுப்பிரமணியக்கடவுள் வீற்றிருந்தருளி னூர்தேவேந்திரன்புத்திரியாகிய தெய்வயானையம்மை சுவாமியைநோக்கி இந்தவள்ளிநாயகிவந்தவரலாறு அடியாளாகியஎனக்கு உரைத்தருளவே ண்டுமென்ன அன்னவளுக்கு நம்மையாட்கொண் டருளுமிறைவன் இவ் த்தைகள் அருளிச்செய்கின்றார்.—(எ-று.) (உ௱௰௬)

முன்னூண்முகுந்தனிடைவந்தீரொமைத்தழுவமுன்னிப் ... *
பன்னூளெணுஞ்சரவணத்தேதவத்தொழிலடயின்றீ ... ...*
ரந்நாளினும்புடையடைந்தேமகத்திறையகத்து ... ... *
மின்னூர்படைப்புளினர்கண்ணும்வளர்வீரொனவிடுத்தாம் ...*

(இ-பு௱.) நீங்களிருவரும் ஆதிகாலத்தில் விஷ்ணுவினிடத்தில் உ ற்பவித்த பின்பு நம்மைத்திருமணஞ்செய்து கொள்ள வேண்டுமென் றுகருதிச்சரவணப்பொய்கையினிடத்தில்அநேகநாள்தவஞ்செய்து கொ ண்டிருந்தீர்கள் அப்போது நாம் உங்களிடத்தில்வந்து தேவேந்திரனிட த்திலும் ஒளிபொருந்திய படைக்கலமுள்ள வேடரிடத்தும் வளர்ந்து கொண்டிருங்களென்று விடைகொடுத்தருளினோம்.—(எ-று.) (உஉ௰)

மருந்தானவின்பமொழியிந்திரனிடத்துமகளாய்நீ ... ... *
யிருந்தாயிருந்துழிமணந்தாமுனக்கிளையவின்னூ ... ...*
டிருந்தார்வணங்கெயினர்பாலவளரயாமினிதுசென்றே ... *
பொருந்தாசையோடுபலசெய்துவதுவைத்தொழில்புரிந்தாம் *

(இ-பு௱.)அமிர்தம்போன்ற இன்பமொழியுள்ளவளே நீதேவேந் திரனிடத்தில் புத்திரியாயிருந்தாய்அவ்வாறிருக்கும்போது நாம்உன்னைத் திருமணஞ்செய்து கொண்டோம் உனக்கிளைய இந்தவள்ளிநாயகி ப கைவர்வணங்கத்தக்க வேடர்களிடத்தில் வளர்ந்தாள் நாமங்கு இன்ப மோடுசென்று பொருந்திய ஆசையுடன் பலதிருவிளையாடல் செய்து பின்பு திருமணஞ்செய்துகொண்டோம்.—(எ-று.) (உஉக)

பொழிப்புரை:

செந்தேனறும்பொழின்மருத்தருசெருத்தணிவரைக்கண் ...*
*பந்தேபொருந்தியகரத்தாயிருந்தொளிபரப்பு ... ... *
ழிந்தேபுரிந்தமுகவின்னமடமங்கையொடுமிங்ஙன் ... ...*
வந்தேமியாமெனமகிழ்ந்தாண்மருத்துவன்மடந்தை ... ... *

(இ-புரை.) செந்தேன் பொழியும் நல்லசோலையானது வாசனையைவீசுகின்ற திருத்தணிகைமலையில் வீற்றிருந்து பின்புபந்துபொருந்தியகைகளையுடையவளே நிலவைப்பரப்புகின்ற சந்திரனையொத்தமுகமுள்ள இந்த வள்ளி நாயகியுடன் இவ்விடத்தில வந்தோ மென்னத் தேவேந்திரன்மகள்மகிழ்ச்சியடைந்தாள்.—(எ-று.) (உஉஉ)

சீராரடற்குலிசபாணிமகளானதிருமாதும் ... ... ... ...*
வாரார்முலைக்குறவர்மாதுமிருபாலினும்வயங்கப் ... .... *
போராரரித்தவிசின்மீமிசையிளம்பரிதிபோல ... ... ...*
வேராரடற்குமரநாயகனுவப்புடனிருந்தான் ... ... ... *

(இ-புரை.) சீர்பொருந்திய வெற்றியுள்ள வச்சிராயுத மேந்தியகையுள்ளதேவேந்திரன்மகளும்கச்சணிந்ததனங்களுடையகுறவர்மாதும்இருபுறத்திலும் விளங்கிக்கொண்டிருக்கும்படி யானைகளுடன் போர்செய்யத்தக்க சிங்கஞ்சுமக்கும் ஆசனத்தின்மேல உதயகாலசூரியன்போல் சௌந்தரியம் பொருந்திய வெற்றியுள்ள சுப்பிரமணியக்கடவுள் வீற்றிருந்தருளினர்.—(எ—று.) (உஉ௩.)

மைந்துற்றசேவலுமிருந்தகருமொண்பணியைவவ்விச்... ...*
சிந்துற்றிடுந்திறன்மயூரமொடுவேலுமுயர்தேரு ... ... *
மெந்தைக்குநாடொறுமிடும்பணிபுரிந்தவணிருந்த ... ...*
கந்தப்புராணச்சுருக்கமுநிறைந்ததுகளிப்பால் ... ... *

(இ-புரை.) பலம்பொருந்திய கோழியும் பெரியஆடும் ஒளிபொருந்தியசர்ப்பங்களைவாயாற் கவ்விச்சிதறிவிடுகின்றபராக்கிரமமுள்ளமயிலும் வேலாயுதமும் உயர்ந்தஇரதமும்தம்முடையஅய்யனுகியசுப்பிரமணியசுவாமியானவர் ஏவுகின்றபணியை நாடோறுஞ் செய்துகொண்டு அங்கிருந்தன கந்தப்புராணச் சுருக்கமுங் களிப்புடன் இங்கு முற்றுப் பெற்றது.—(எ-று.) (உஉச)

---

*பந்தேபொருந்தியகரம் - என்பதற்குப்பந்துபோலத்திரண்டநுனிவிரலுள்ளகரமென அக்கூறினும் அமையும்

(வேறு.)

வேல்வாழிமயில்வாழிசேவல்வாழி ... ... ... ... ... *
வேறுமுளபடைவாழிவிளங்குதண்டைக் ... ... ...*
கால்வாழியருள்பொழியும்விழிகள்வாழி... ... ... ... *
கவின்குலவுமீராறுகரங்கள்வாழி ... ... ... ...*
மால்வாழிவாழியெனப்பணிந்துவாழ்த்து... ... ... ... *
மலைமாதுதருமுருகன்மகிழ்ந்தவாறு... ... ... ...*
பால்வாழியெனையாளுங்கருணைவாழி... ... ... ... ...*
பங்கிருந்தமங்கையர்தம்பதங்கள்வாழி ... ... ... *

(இ-புரை.) வேலாயுதம் வாழக்கடவது மயில்வாழக்கடவது கோழிக்கொடிவாழக்கடவது மற்றைப்பதினொரு ஆயுதங்களும் வாழக்கடவன விளங்குகின்றதண்டைகள் அணிந்ததிருவடிகள் வாழக்கடவன அருள்பொழியும்திருக்கண்கள்வாழக்கடவனதிருமாலானவர்வாழிவாழியெனப்பணிந்துவாழ்த்துகின்றபர்வதாரசன் தவபுத்திரியாகிய பார்வதிதேவியார் அருளியமுருகக்கடவுள் மகிழ்ச்சிகொண்டு வீற்றிருக்கும் படைவீடாகிய ஆறு திருப்பதிகளும் வாழக்கடவன என்னையாட்கொள்ளுந்திருவருள் வாழக்கடவது இருபக்கத்திலும் வீற்றிருக்குந் தெய்வயானையம்மைவள்ளிநாச்சியாரென்னுமிவ்விருவர்களுடைய திருவடிகள் வாழக்கடவன.—(எ-று.) (உ௨௫)

(வேறு.)

ஆதிவாழியவஞ்செழுத்தோடுவெண் ... ... ... ... *
பூதிவாழியபுண்ணியர்வாழிய ... ... ... ... ... ...*
நீதிவாழியநீள்புவிவாழிய ... ... ... ... ... ... *
கோதில்சைவக்குழுமிகவாழியே .. ... ... ... ... ...*

(இ-புரை.) பரமசிவம் வாழக்கடவது பஞ்சாக்ஷரமும்திருநீறும் வாழக்கடவன புண்ணியர்களாகிய அடியார்கள்வாழக்கடவர்கள் நீதிவாழக் கூடவது பெரியபூமிவாழக்கடவதுகுற்றமில்லாதசைவசமயக்கூட்டத்தார்மிகவும்வாழக்கடவர்கள்.—(எ-று.) (உ௨௬)

மெத்துமின்பவியாபகமாகிய ... ... ... ... ... *
முத்திதந்தெனையாட்கொண்டமுன்னவன் ... ... ... ...*
பத்தர்மொய்த்தசம்பந்தன்கமலைவா... ... ... ... ... *
மூத்தன்வாழியடியவர்வாழியே ... ... ... ... ... *

பொழிப்புரை.

(இ-ரை.) உண்மையுள்ள இன்பவியாபகமாகிய மோக்ஷவழி அருளியென்னையாட்கொண்ட முதல்வராகிய அடியார்கள் சூழவீற்றிருக்கும் திருஞான சம்பந்தசுவாமிகளென்னுந்திருப்பெயருள்ள வராய்த்திருவாரூரில் வீற்றிருக்கும் ஆசாரியசுவாமிகள் வாழக்கடவர்கள் அவருடைய அடியார்கள் வாழக்கடவர்கள்.—(எ-று.) (௨௨௭)

வீரவேற்கைவிமலன்மகிழ்ந்திடப்... ... .. ... ... *
பாரினோர்கள்பரிந்துபுகழ்ந்திடச் ... ... ... ... ...*
சீருலாவியசெந்திநகரிடை ... ... ... ... ... ... *
யேரினோடரங்கேற்றியதிந்தநூல் ... ... ... ... ...*

(இ-ரை.) வீரமுள்ளவேலாயுதமேந்தியதிருஅஸ்தமுடைய சுப்பிரமணியசுவாமி திருவுள்ளமகிழவும் பூலோகத்திலுள்ளவர்கள் பரிந்து புகழவும் அழகுபொருந்தியதிருச்சேந்தூரினிடத்தில் இந்தப்புராணம் அரங்கேற்றியது.—(எ-று.) (௨௨௮)



கந்தப்புராணச்சுருக்கப்பொழிப்புரை சுப்பிரமணியசுவாமியின்
திருவருளால்நிறைவேறியது
வேலுமயிலுந்துணை.

---

காப்பு.......................................க
பாயிரம்.......................................௰௩
புராணவரலாறு.................................௧௮
உற்பத்திகாண்டம்.............................௱௬௭
அசுரகாண்டம்.................................௱௪௮
மகேந்திரகாண்டம்.............................௱௫
யுத்தகாண்டம்................................௩௱௩௧
தேவகாண்டம்.................................௩௬
தக்ஷகாண்டம்.................................௨௱௨௮

ஆ-காண்டம்-௬-இ-திருவிருத்தம்-௲௪௰௭.





௨

வேலுமயிலுந்துணை

# உபதேசகாண்டம்.

## சூராதிகளொடுக்கப்பொழிப்புரை.



உள்ளமோர்ந்தனர்கேட்டுளி ... ... ... ... ... ... *
யெம்முறைமையொருங்குணர்ந்தொருங்காகப் .... ...*
பள்ளவார்மடைப்புனலெனத் ... ... ... ... ... *
தொகுத்தனையாமதன்பயன்றுய்த்தேம் ... ... ...*
வெள்ளெயிற்றுவெஞ்சூரனை... ... ... ... ... ... *
முதலியோர்விளிந்தபின்னவராவி, ... ... ... ...*
கொள்ளைவேற்படையொடுக்கிய ... ... ... ... *
தன்மையைக்கூறுதியெமக்கென்றார் ... ... ... ...*

(இ-புரை.) நைமிசாரணியமுனிவர்கள் சூதமுனிவர்சொல்லத்தங்களுள்ளத்தில்ஞாபகத்துடன் கேள்விப்பட்டபோது சுப்பிரமணியக்கடவுளுடைய சரிதங்களையெல்லாம் உணர்ந்துகொண்டு பள்ளத்திற் செல்லும்புனல்போலாக எங்களுக்குச்சொல்லினீர் நாங்கள் அதனாலடையும்பயனை அடைந்தோம் இனிவெண்மையாகியபற்களையுடைய சூரன் முதலானவர்களிறந்தபின்அவர்களுயிர்களைவேலாயுதமானது ஒடுக்கிக்கொண்ட தன்மையை யெங்களுக்குச் சொலலுமென்றார்கள்.—(எ-று.) (க)

பன்னுமாதவத்துறையுளோர் ... ... ... ... ... *
கேட்டுழிப்பழவினைப்பகைவென்றோன் ... ... ...*
பின்னல்ஞ்சடைநெடுமுடி ... ... ... ... ... ... *
துளக்கினனுவகையிற்பெரிதுற்று ... ... ... ...*
னன்னகாரணமறைகுதுங் ... ... ... ... ... ... *
கேண்மினென்றறைகுவாளொருகாலம் ... ... ...*
பொன்னிலங்குதார்ப்பன்னிரு ... ... ... .... ...*
தடம்புயப்புங்கவனெங்கோமான் ... ... ... ... *

பொழிப்புரை:

(இ-புரை.) இவ்வாறு நைமிசாரணியமுனிவர்கள் கேட்டபோது பழையவினையாகிய பகையையென்ற சூதமுனிவர் பின்னலாகிய சடைமுடியை அசைத்து மிகுந்தசந்தோஷம் அடைந்து அதனைச்சொல்லுகிறோம் கேளுங்களென்று சொல்லுகின்றார் முன்ன மொருகாலத்தில் பொலிவுள்ளதாய்ப் பிரகாசியாநின்ற பூமாலையணிந்த பன்னிரண்டுபுயங்களுள்ள சுப்பிரமணியசுவாமியாகிய எம்மிறைவன்—(எ-று.) (உ)

கானவண்டறாக்கற்பகப் ... ... ... ... ... ... ... ...*
பொதும்பர்சூழ் கந்தமாதனநின்று ... ... ... *
மானவேலொடுமரகதக் ... ... ... ... ... ... ... ...*
கலவமாமயிற்புறமினிதேந்த ... ... ... ... *
வேனைமாநிலத்திருவிளை ... ... ... ... ... ... ... ...*
யாடலுக்கெழுந்தருளியஞான்று ... ... ... ... *
ஞானநாயகனுமையொடு ... ... ... ... ... ... ...*
மினிதுறைகயிலையைநணுகுற்றான் ... ... ... *

(இ-புரை.) இசைபாடுகின்றவண்டுகள் நீங்காதகற்பகச்சோலைசூழ்ந்த கந்தமாதனகிரியினின்றும்புறப்பட்டு மரகதமணிபோலப் பச்சைநிறமுள்ள தோகையினையுடைய மயிலின்புற மினிதாக வந்தும்படிவேலாயுதத்துடன் ஆரோகணித்துக்கொண்டு புவனங்களெங்குந் திருவிளையாடல்செய்யும்படி எழுந்தருளியநாளில் பார்வதிதேவியாருடன் பரமசிவன் இனிதாகவீற்றிருக்குங்கயிலாயகிரியிற்சேர்ந்தருளினார்—(எ-று.)

உற்றகாலையிற்களிமயிற் ... ... ... ... ... ... ...*
புறனிழிந்தொலிதருசிறுதண்டைச் ... ... ... *
சிற்றடித்துணைநோவர ... ... ... ... ... ... ...*
மென்மெலச்சென்றவச்சிறுகாலைக் ... ... ... ...*
கொற்றவார்கொடிமயிலொடுங் ... ... ... ... ... ...*
கயிலையின்கீழுறக்குடமேசன் ... ... ... ... *
கற்றைவார்கதிர்க்கயிலைசென் ... ... ... ... ... ...*
றிறைஞசினன்பன்னிருகரங்கூப்பி ... ... ... *

(இ-புரை.) அவ்வாறுகயிலாயகிரியிற்சேர்ந்தபோது களிப்புள்ள மயில்வாகனத்தின்புறம்விட்டிழிந்து சிறியதண்டை யணியப்பட்டிருக்

குஞ்சிறிய இரண்டு திருவடிகளும் வருந்தும்படி மெல்லென நடந்த சிறுபொழுதில் வெற்றிபொருந்திய நீண்ட கோழிக்கொடியும் மயில் வாகனமும் கயிலாயகிரியின் சாரலிலிருக்க சுப்பிரமணிய சுவாமியானவர்கற்றைகற்றையாகிய நீண்டகிரணங்களையுடைய அந்தக்கயிலாயகிரியிற் சென்றுபன்னிருகரங்களையுங்கூப்பித்தொழுதுபணிந்தார்--(எ-று) (ச)

கறுத்தகண்டனைக்கண்ணுதற் ... ... ... ... ... ... *
பரமனையடியவர்கருத்தீமை ... ... ... ... ...*
வெறுத்தநாதனைவெண்ணிலாச் ... ... ... ... ... *
சடிலியைவெருவலார்புரந்தீய ... ... ... ... ...*
வொறுத்தவாணகைப்புனிதனைக் ... ... ... ... ... *
கண்டுகண்களித்தனனுளநெக்கான் ... ... ... ...*
மறுத்துவார்குழன்மரகதக் ... ... ... ... ... ... *
கொம்பனைவணங்கினன்மகிழ்பெற்றான் ... ... ...*

(இ-புரை.) காளகண்டமூர்த்தியை நெற்றிக்கண்ணினையுடைய பரமசிவனை அடியவர் பிறவித்தீமையை நீக்கியநாதனைவெண்மைநிறமுள்ள இளந்திங்களணிந்த சடாமகுட முடையகடவுளைப்பகைவருடையதிரிபுரங்களையழித்த ஒளிபொருந்திய நகையினையுடைய பரமசிவனைக்கண்டுமனங்களித்து உள்ளம் நெகிழ்ந்தார் பின்னும் மரகதமணிக் கொம்பு போன்றவளாகிய பார்வதி தேவியாரையும் வணங்கி மகிழ்ச்சியடைந்தார்—(எ-று.) (ரு)

வருகழற்சிறுதண்டையஞ் ... ... ... ... ... ... *
சீறடிமைந்தனையெதிர்நோக்கி ... ... ... ... ...*
யுருகுகாதன்மிக்கெழுந்தன... ... ... ... ... ... *
னுவகையானும்பரிற்றலைநின்றான் ... ... ... ...*
திருநடம்புரிந்தனனது ... ... ... ... ... ... *
நோக்கினன்சிந்தையன்பொடுநெக்கா ... ... ...*
னருகுநின்றனன்மெய்ப்பொடித் ... ... ... ... ... *
தரும்பினனயர்ந்தனனக்காலை ... ... ... ... ...*

(இ-புரை.) வீரகண்டையுடன் சிறியதண்டையும் அணிந்தசிற்றடியினையுடைய புத்திரனாகிய சுப்பிரமணியக்கடவுளை நோக்கி திருவுள்ளமுருகும்படியான ஆசையதிகரித்தலால் உண்டாகிய சந்தோஷத்தினு

பொழிப்புரை.

ல் தேவர்களுக்குள் முதன்மையாகிய பரமசிவன் திருநடஞ் செய்தரு ளினர் சுப்பிரமணியசுவாமி அதனைக் கண்டு அன்புடன் திருவுளமுருகி ப்புளகாங்கிதங்கொண்டு பரவசமடைந் திருந்தனர்அப்போது.-(சு)

(நடநத்தைமேற்சொல்லுகின்றார்.)

முடங்குவெண்டிரைப்பொருதிருப் ... ... ... ... ...*
பாற்கடன்முன்றிலின்முடத்துத்திப் ... .. ... *
படங்கொள்பாம்பணைக்கண்டுயில ... ... ... .. ...*
படலையம்பசுந்துழாய்மணிமார்பன் ... ... ... *
றடங்கொடுஞ்சிறையுவணமீப் ... ... .. ... ... ...*
பொலிந்தொருமேருவின்றலைமூந்நீ ... ... ... *
ரிடங்கொள்கார்மழைமுளரிபூத்... ... ... ... ... ...*
தனவெனவெழுந்தனன்வருகின்றான் ... ... ... *

(இ-பு.ரை.) சுருணடுவருகின்ற வெண்மைநிறமுள்ள அலைகளால் கரையினைமோதாநின்ற திருப்பாற்கடல்நடுவிலமுடங்கிய தாய்ப்பொறியினையுடைய படமுள்ளசர்ப்பசயனத்தில் அறிதுயிலமர்ந்தபசுமைநிறம்பொருந்திய துளசிமாலையுங் கவுத்துவமணிமாலையுந் தரித்துக்கொண்டிராநின்ற திருமாலானவர் ஒப்பற்ற மகம்மேருவினிடத்தில் கருமைநிறமுள்ள மேகமானது செந்தாமரைமலர்களைப் பூததுக்கொண்டுவருவதுபோல்வளைந்தபெரியசிறையினையுடையகருடவாகனத்தின்மேல ஆரோகணித்துககொணடு எழுந்தருளிவருகின்றா—(எ-று.) (எ)

தேவிவாழியதிருமறுமார்பினன் ... ... ... ... ... *
சென்றுறுந்திசைநோக்கித் ... ... ... ... ...*
தூவியன்னமொன்றுகைத்தனனான்முகச் ... ... ... *
சுருதியெம்பெருமானு ... ... ... ... ... ...*
மேவுகற்பகநறுநிழலினிதுறை ... .. ... ... .. *
விண்ணவர்கணஞ்சூழ ... . . ... ... ... .. *
மூவெயிற்புரஞ்செற்றவனுற்றுறை ... ... ... ... *
கயிலையைமுடுகுற்றார் ... ... ... ... ... ...*

(இ-புரை.) திருமகள்வாழ்கிற மார்பினையுடைய விஷ்ணுசென்ற திசையைநோக்கிச்சிறகையுடைய அன்னவாகனத்தின்மேலேறிக்கொண்

டுபிரமதேவனும் கற்பகவிருக்ஷத்தின் நல்லநிழலில் வாசஞ்செய்கிற தே வேந்திரன்முதலாகிய தேவர்களெல்லாருஞ் சூழ்ந்துவரும்படிதிரிபுர த்தகனஞ்செய்த பரமசிவன் வீற்றிருக்கும் கயிலையங்கிரியிற் சேர்ந்தா ர்கள்—(எ-று.) (அ)

ஆழிமாயனுமருமறைக்
கிழவனுமவணிழிந்தயலாகப் ... *
பாழிவெண்சிறையுவணமு
மன்னமுமொழித்தனர்படர்கின்றார் ... *
ஊழிபற்பலகாண்கினும் ... *
பிரளயமொடுக்கினுமுலவாத ... *
சூழிமால்வரைக்கயிலையீச ... *
சென்றனர்திருநடந்தொழுதேத்த ... *

(இ-பொ.) சக்கராயுதமுள்ள திருமாலும் அரிய வேதத்துக்குரிய பிரமதேவனும் அவ்விடத்திலிறங்கி அதற் கொருபுறத்தில் பலமுள்ள சிறையினையுடையகருடவாகனத்தையும் அன்னவாகனத்தையும் விட்டொ ழித்துச்சென்று பலபலஊழிசென்றாலும் பிரளயமுடிவிலும் அழியாத சிகரங்களையுடையகயிலையங்கிரியில திருநடந்தரிசிக்கச்சென்றார்கள்(கூ

தொழுதகையினர்துளங்கிய ... *
மெய்யினருருகியதொடர்போறி ... *
மழுதகண்ணினரன்பினர் ... *
சென்றுழியணிநெடுமணிவாயில் ... *
முழுதுணர்ந்தநந்திகைப் ... *
பிரம்படிமுடிதொடநெருக்கூடு ... *
வழுவியேகினர்திருநடந் ... *
தொழுதனர்வழுத்தினரயனின்றார் ... *

(இ-பொ.) இவ்வாறுசென்றவர்கள் தொழுதகையையுடைய வர்களும்நடுங்கிய சரீரமுள்ளவர்களும் இத்தொடர்ச்சி யுடன் அழுதக ண்களையுடையவர்களும் அன்பினையுடையவர்களுமாய்ச் சென்றபோது அழகியநெடியமணிகள்பதித்த கோபுரவாயிலில வீற்றிராநின்றமுழுவ தும் அறிந்துணர்ந்த நந்திதேவர் கைப்பிரம்படி தங்கள் முடியில்படு

பொழிப்புரை.

ம்படி நெருங்கிய நெருக்கத்தில் ஒருவாறுள்ளேசென்று திருநடத்தொழுது துதித்து ஒருபறத்திலநின்றார்கள்—(எ-று.) (௰)

மறைமுழங்கியமுழக்கொலி... ... ... ... ... ... *
யளவறுமாதிரங்கிழித்தோட ... ... ... ... ...*
வறைகருங்கழலரிமுதற் .. ... ... ... ... ... ... *
பிரமரோத்தண்டகோளகையோங்க ... ... ... ...*
விறைதிருப்பதச்சிலம்பொலி ... ... ... ... ... *
மன்னுயிர்க்கினிதளித்திடரோட்ட ... ... ... ...*
நிறைபெருங்கணமரகர ... ... ... ... ... ... *
வெனுந்தொனிபெருநெடுநிலம்போர்ப்ப... ... ...*

(இ-புரை.) வேதங்கள்கோஷிக்கும்ஒலியானது அளவற்றிருக்கும் எட்டுத்திசைகளையுங்கடந்துசெல்லவும் வீரகண்டையணிந்தவிஷ்ணுபிரமாமுதலாகியதேவர்கள் துதிசெய்யும் ஒலியானது அண்டகோளகைவரையில் செல்லவும் பரமசிவனுடைய நடனச்சிலம்பொலி மன்னுயிர்கட்குஇனிதாகக்கிருபைசெய்து துன்பங்களையொழிக்கவும்நிறைந்தகணங்களாயுள்ளவர்கள் அரகரா என்கிற ஓசையானது பூலோகமெங்குஞ்சூழவும்.—(எ-று ) (௰௧)

தேவதுந்துமிமுரட்டொடு ... ... ... ... ... ....*
பஃறாளைச்சிலலரிச்சிறுபாண்டில் .. ... ... ... *
பாவுகண்படுமார்ப்பொடுதிமிலைவெம் ... ... ... ...*
பல்லியத்தொகையார்ப்ப ... ... ... ... ... *
மேவருஞ்சடைப்பகிரதி... ... ... ... ... ... ...*
யுவட்டெழவிண்ணவர்கணஞ்சூழத்... ... ... ... *
தாவினந்திகைப்பிரம்பினு ... ... ... ... ... ...*
விமையவர்முடிமணிதகர்ந்தோட.... ... ... ... *

(இ-புரை.) தேவதுந்துமிகளுஞ்சிறுபேரிகையும்பல்துளைகளையுடைய தாய்ச்சிறியபாரத்கள்பொருந்தியபாண்டிலென்னும்வாத்தியங்களின்பரவியவிடத்திலுண்டாகும் ஒலியுடன் திமிலைமுதலாகிய பலவாத்தியங்களொலிக்கவும் சடாமகுடத்திலிருக்குங் கங்கைதுளும்பவும்

தேவர்கூட்டஞ்சூழவும் நந்திதேவர் கைப்பிரம்பினால்தேவர்களுடையமு
டியிலிருக்கும்நவரத்தினங்கள் தெறித்தோடவும்.—(எ-று.) (௰௨)

பனிப்படாம்பொதியிமயமீன் ... ... ... ... ... *
றளித்தருண்மரகதப்பசும்பாவை ... ... ... ...*
கனித்தசிந்தையினருகுநின் ... ... ... ... ... ... *
றியற்றியகமலமென்கரப்பாணி ... ... ... ... ...*
தொனித்தபன்மூறைச்சதிவழி ... ... ... ... ... *
சீர்தொறுந்தாக்கிசைசெவிதுங்கக் ... ... ... ...*
குனித்தநாயகன்றிருநடந் ... ... ... ... ... ... *
தொழுதனர்விண்ணவர்குழாத்தோடும் ... ... ...*

(இ-பொ.) பனியாகியபோர்வைபோர்த்த இமயமலைதவத்தினாலீ
ன்ற பசுமைநிறமுள்ள பார்வதிதேவியார்கனிந்த உள்ளத்துடன்சமீப
த்தினின்று ஒத்துகின்ற தாமரைமலர்போன்ற திருக்கரத்திலிருக்குந்தா
ளம்தொனிக்கும் தாளவொத்தின்பிரகாரம் சீர்கள்தோறுமுண்டாகும்பா
ட்டிஞ்சைதம்முடைய திருச்செவியில் பொருந்தவும் நடிக்கும் பரம
சிவனதுதிருக்கூத்தினைத்தேவர்களுடன்தொழுதார்கள்.—(எ-று.) (௰௩)

குழைந்தசிந்தையர்குமிழிவிட் ... ... ... ... ... *
டொழுகியகண்ணினர்குழையாநின் ... ... ... ...*
றிழைந்தவன்பினருருகிய ... ... ... ... ... ... *
வென்பினர்முகிழ்த்தகையினைவாங்கார்- ... ... ...*
விழைந்தவேட்கையினின்றன .. ... ... ... ... ... *
ரயர்ந்தனர்மெய்பொடித்துளநெக்கார் .. ... ... ...*
தழைந்தசெஞ்சடைப்பரமனை.... ... ... ... ... ... *
யாடல்கண்டுவப்பொடுந்தலைநின்றார் .... ... ... ...*

(இ-பொ.) குழைந்த சிந்தையுள்ளவர்களும் குமிழிவிட்டுக்கொ
ண்டொழுகாநின்ற கண்ணீருடையவர்களும் மனங்குழைந்த அன்பினை
யுடையவர்களுமாய்ச் சிரசில் குவித்துவைத்த கைகளை வாங்காமல்விரு
ப்பத்துடனின்று பரவசப்பட்டு உடல் புளகமடைந்து உள் நெக்குவி
ட தழைந்தசெஞ்சடையினையுடையபரமசிவ னடனத்தைத் தரிசித்துச்ச
ந்தோஷித்துடனின்றார்கள்.—(எ-று.) (௰௪)

பொழிப்புரை.

இன்னரின்னணமாடல்கண் ... ... ... ... ... ... ... *
டுவப்புழியெறிகதிர்க்கயிலைக்கிந் ... ... ... ...*
மன்னுசேவலுமரகதக் ... ... ... ... ... ... ... *
கொடுஞ்சிறைமயூரமுமினிதுற்ற ... ... ... ...*
வன்னகாலேயிற்சூரனும் ... ... ... ... ... ... ... *
பதுமனுமரிமுகத்தவனுங்கூர் ... ... ... ... ...*
மின்னுவெள்‡ளெயிற்றடுசினத் ... ... ... ... ... ... *
தாருகனெனப்படுவெய்யோனும். ... ... ... ...*

(இ-ள.) இத்தன்மையராய்ப் *பிர்மவிஷ்ணுக்கள் பரம சிவனது திருநடனத்தைத்தரிசித்துச் சந்தோஷிக்கும்போது ஒளிவீசுகின்றஅந் தக்கயிலைமலேச்சாரலில் அழிவில்லாத சேவலும்மரகதமணிநிறமுள்ள வளைந்தசிறையினையுடைய மயிலும் இனிதுடன் பொருந்தியிருந்தன அப்போதுசூரனும் பதுமனும் சிங்கமுகனும் கூர்மையுள்ளதுகளாய் ஒளி பொருந்தி வெண்மைநிறமுள்ளதந்தங்களையுடைய தாருகனென்றுசொல்லப்படுகிறகொடியவனும்.-(எ-று.) (௰ரு)

பூதவெங்கணக்குலத்திவர் ... ... ... ... ... ... ...*
நால்வரும்பொறிமயிற்கருகேகிப் ... ... ... ... *
பாதகிண்கிணிப்பங்கயம் ... ... ... ... ... ... ...*
பொறுத்தநின்பெருந்திறல்சொலற்பாற்றே ... ... *
கேதனத்திறற்குக்குடத் ... ... ... ... ... ... ...*
தடுதிறலெவர்கிளத்துவர்*கெட்டேம் ... ... ... *
போதினுன்முகத்தலைவனு ... ... ... ... ... ...*
நும்மடிபோற்றுதலெளிதன்றே. ... ... ... ... *

(இ-புரை.) இவ்வகைப்பெயருள்ள பூதகணத்தலைவர்கள் நால்வரும்பொறிகளையுடையமயிலுக்கு அருகில்சென்று அதனைநோக்கிச்சுப்பிரமணியக்கடவுளுடைய கிங்கிணியணிந்ததிருவடித் தாமரைகளைத்தாங்கும்படிபெற்ற உன்னுடைய பெரியவல்லமையான் துஒருவரால் சொல்லும் தன்மையையுடையதோ வெற்றிபொருந்திய கொடியாகியசேவலின்பரா

‡தாருகன் யானைமுகமுள்ளவனுதலால்எயிறுகூறினர்

* கெட்டேமென்பதுகண்டுவியப்புப்பொருள்காட்டிநின்றது.

க்கிரமத்தை எவர்கள் சொல்லத்தக்கவர்கள்தாமரைப்பூவில்வீற்றிருக்கும் பிரமதேவனும்உம்முடையதிருவடியைப்போற்றுதற்குஎளிதல்ல(எ-று)

இவையறிந்துமற்றறிகிலராமெனவெறுழ்வலிக்... ... ... *
குடையோர்போற் ... ... ... ... ... ... ...*
கவர்கொடுஞ்சிறைக்கலுழனுமன்னமும் .. ... ... ... *
கருத்துறமதியாவா.... ... ... ... ... ... ...*
யவமதித்தனவறிந்திலீர்போலுமற்றும்மொடு... ... ... *
மடுபோர்க்கென் • ... ... ... ... ... ... ...*
றுவைசெறுப்புழிநும்மொடுநால் வருமுருத்தெழுந் ... *
துடனிற்பேம் ... .. ... ... ... ... ...*

(இ-புரை.) இவைகளைஅறிந்தும் அறியாதவர்கள்போலமிகுந்தபலத்துக்குத்தாங்களே யுரியவர்கள்போலவளேவாகிய சிறையினையுடைய கருடராசனும் அன்னமுங்கருத்தில் பொருந்த உங்களைமதிக்காதவைகளாய்அவமதித்திருக்கின்றன நீங்கள் அறிகின்றிலிரோ அவ்வாறு அவமதித்திருப்பதுமன்றி உங்களுடன்போர் செய்யவருமானால் நாங்கள் நால்வருங்கோபங்கொண்டுஉங்களுடனிற்கிறோம்.—(எ-று.) (யஎ)

எனமொழிந்தனவிருசெவித்துளைபுக... .. ... ... ...*
வெரிப்பொறிவிழிகால ... .. ... ... ... *
வனமயிற்குலச்சிறைபுடைதமதழுந்தது ... ... ... ...*
வாரணஞ்சினஞ்சீறிப் ... ... ... ... ... ... *
புனைபுடைச்சிறையடிதொடப்போர்த்தது.... ... ... ...*
பொரத்துணிந்ததுபூதத் ... ... ... ... ... *
தினம்விழிக்குலம்வடவைகக்கியவுருத் ... ... ... ... ...*
தெழுந்தனவெதிர்நோக்கி ... ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறு கணங்கள் சொன்னவார்த்தைகள்காதுக்குள் புகுந்தவுடன் கண்களில் அக்கினிப்பொறிகக்கும்படி மயிலானதுசிறையையடித்துக் கொண்டெழுந்தது சேவலானது கோபத்துடன் சீறிச்சிறையானதுதன்னடிதொடப்போர்க்கப் போர்செய்யத்துணிந்தது பூதகணங்கள்கண்களில் வடவாமுகாக்கினி யுண்டாகும்படி எதிர்நோக்கிக் கோபித்தெழுந்தன—(எ-று.) (யஅ)

பொழிப்புரை.

உருவுசீற்றமொத்தெதிர்வரநோக்கிய ... ... ... ... *
வுவணமுமுலகோங்கிப் ... ... ... ... ... ...*
பொருபெருந்திரைப்பிரளயஞ்சுவற்றிய ... ... ... *
புடைச்சிறைப்புடைத்தார்ப்ப ... ... ... ... ...*
விருகொடுஞ்சிறைமலரயனன்னமு... ... ... ... ... *
மெதிர்நடந்ததுதம்மிற் ... ... ... ... ... ...*
செருவிளைத்தடுதிமிலடிட்டுரப்பின ... ... ... ... *
திருகினசினஞ்சீறி ... ... ... ... ... ... ...*

(இ-புரை.)மிகுந்தகோபத்தினால் தமக்கொத்தவைகளாய்வருகின்றதை ப்பார்த்தகருடனும் உலகத்தின்மேலோங்கிமோதுகின்றபெரிய அலையி னையுடைய ஊழிவெள்ளத்தை வற்றச்செய்தசிறையைஅடித்துக்கொண் டு ஆரவாரிக்கப் பிரமதேவன்வாகனமாகிய அன்னமும்எதிர்சென்றுதம க்குள்போர்விளைக்கும்படியான பேரோசையிட்டு அதட்டினகோபாவே சத்துடன்எதிர்சென்றது—(எ-று.) (ருகக)

(வேறு)

தெழித்தனவுரப்பினசினத்தனகனற்பொறி...... ... ... *
தெறிப்பவெதிரோ ... ... ... ... ... ... ...*
விழித்தனகடித்தனமிதித்தனவலங்குதிரை ... ... ... *
வேலைசிறையாற் ... ... ... ... ... ... ...*
சுழித்தனவுவட்டெழுநெடுங்கிரிமுடித்தலை ... ... ... *
துளங்கியதிரக்... ... ... .. ... ... ... ...*
கொழித்தெழுநிலத்துகள்கொழுந்தொடுபடர்ந்துதிசை ... *
கொண்டுமறுக... ... ... ... ... ... ... ...*

(இ-புரை.) அதட்டின அந்த அதட்டுதலை யொத்த கோபத்தையு டையன தீப்பொறி சிந்தும்படி எதிரொதிராகக் கண்களைவிழித்தன ஒன்றை மற்றொன்றுகடித்தன மிதித்தன அலைகின்ற அலைகளையுடைய சமுத்திரநீர்மேலெழும்படிசிறைகளால் சுழலச்செய்தனபெரியமலைக ளின்சிரங்கள்நடுங்கியதிரும்படி கொழித்துவிட்டு பூமியிலிருந்துதுக ளெழுந்துபடர்ந்து திசைகளைமூடிக்கொண்டு அங்கிருப்பவர்கள்மனங் கள்கலங்கவும்—(எ-று.) (உஉ)

ஆதவனொளித்தனனசும்புறுபசும்பொழுல ... ... ... *
கண்டர்வெருவிப் ... ... ... ... ... ... ...*

போதரநினைத்தனரிடிக்குலமிடிப்பொடு ... ... ... *
பொரிந்துதிருமான் ... ... ... ... ... ...*
மீதொடுநெடுஞ்சிகரமாயிரநிரைத்தவட ... ... ... ... *
மேருவரையு ... ... ... ... ... ... ... ...*
மாதிரமுழக்கவருமாருதமெனப்பதறி ... ... ... ... *
மம்மருறுமால்... ... ... ... ... ... ... ...*

(இ-புரை.) சூரியன் ஒளித்தனன் பொன்னுலகத்திலிருக்குந்தேவர்கள்பயந்து அப்புறம்போகும்படி நினைத்தனர் இடிக்குலங்கள் குமுறலுடன்பொரிந்துதிருகின்றன அண்டத்தையளாவிய ஆயிரங்கொடுமுடிகளையுடைய மகமேருவானதும் திக்குகளெல்லா முழங்கவருகின்ற பிரசண்டமாருதமென்று பதறிமயங்குகின்றது—(எ-று.) (உக)

(அசும்புறுபசும்பொன் என்பது - ஒளிவிட்டுக்கொண்டிருக்கும்படியானமாற்றுயர்ந்தபொன்எனப்பொருள்கொள்க.)

வாளெயிறதுக்கியகணத்தலைவர்நால்வரு ... ... ... ...*
மனஞ்சினவினர்... ... ... ... ... ... ... *
கோளுறுசிறைக்கலுழனோடெதிர்மலைந்தமர்... ... ... ...*
கொடுத்தனர்களாற் ... ... ... ... ... ... *
றுளொடுசெடித்தலைகடித்துதறிடச்சிகி ... ... ... ...*
தடஞ்சிறையினன் ... ... ... ... ... ... ...*
மூளுறுசினக்கலுழனைப்பிடர்புடைத்தது ... ... ... *
முழக்கமெழவே ... ... ... ... ... ... ...*

(இ-புரை.) இவ்வாறுநிகழும்போது பூதகணங்களாகிய நால்வரும் பற்களை அதுக்கிக்கொண்டு கோபமுடையவர்களாய்ப் பலம்பொருந்தியசிறையினையுடைய கருடனுடன்எதிர்மலைந்துபோர்செய்தார்கள் மயிலானது கருடனுடைய கால்களையுந் தலையினையுங்கடித்துதறிமுழக்கமுண்டாகும்படிதன்பெரிய சிறையினலதன் பிடரியிலடித்தது.(எ-று.)

(செடித்தலைஉரோமங்கள்நெருங்கியதலை.)

ஆரணமுதற்றலைவனேறியதடஞ்சிறை ... ... ... ... *
யனத்தினுடனே ... ... ... ... ... ... ...*
வாரணநெடுங்கொடிமலைந்ததிறலீதென... ... ... ... *
வழங்கவசமோ ... ... ... ... ... ... ...*

கஷ்ணியமனத்தொடுதொடர்ந்தடிபடர்ந்தது... ... ... ...*
கலாபமயிலே ... ... ... ... ... ... ... *

(இ-பொ.) அவ்வாறு செல்லுகின்ற பெருந்திசைகளும் அண்டங்களும் அதிர்ந்து அவைகளிலிருக்கும் உயிர்களெல்லாஞ் சிதைந்துகலங்க அன்னமானது பிரமதேவனுலகத்திற் சென்று ஒளித்துக்கொண்டது வெற்றிபொருந்திய கருடனும் நடுக்கத்துடனோடி விஷ்ணுவினுடைய உலகத்தில்ஒளித்துக்கொண்டது மயிலானது அந்தமட்டிலவிடடுவிடாமல் மிகுந்தகோபத்துடனே அதனடியைப்பிடித்துத் தொடர்ந்தது.—(எ-று.) (உரு)

ஆயிரமிதழ்க்கமல பீடிகையிருக்குமய...... ... ... ...*
னுநியுலகிற்... ... ... ... ... ... ... ... *
பாயநுகணத்தினிலனைத்துயிர்செகுத்தது... ... ... ...*
படர்ந்துநெடுவா... ... ... ... ... ... ... *
னேயதுமுகுந்தனுலகெய்தியவிருஞ்சிறை... ... ... ...*
வயக்கலுழனைப் ... ... ... ... .. ... ... *
போயுயிர்பற்சகதமுகுந்தனுலகம்பொடி .. ... .. .. *
படச்சிதறிப்ப .. ... ... ... .. ... ... ...*

(இ-பொ.) ஆயிரமிதழ்களையுடைய தாமரைமலர்ப்பீடத்தி லிருக்கும் பிரமதேவனுலகத்திற்போய் ஒரு கணப்பொழுதில் அங்கிருக்குமுயிர்களையெல்லாங்கொன்று மகாவிஷ்ணுவினுடைய உலகத்திற்சென்று பிரகாசியாநின்ற வெற்றிபொருந்திய கருடனுயிரைக்கொன்றது மன்றிவிஷ்ணு லோகம்பொடியாகும்படி சிதைத்தது—(எ-று.) (உசா)

அங்கணமரர்க்குமுதலுயகமுருந்தனுல ... ... ... ...*
கத்தையழியாச் ... ... ... ... ... ... ... *
செங்கமலநாயகனிருந்தவுலகப்பதவி... ... ... ... ...*
சிந்திடமுனிந் ... ... ... ... ... ... ... *
தெங்கணும்வெகுண்டுகொடிவாரணமுயிர்ப்பொறை... ... *
கொறித்துதெரிசூழ்... ... ... ... ... ... ...*
வெங்கணிகல்வாளெயிறுடைத்தலைவரெங்கணும் ... ... *
வெகுண்டுமுனிவார்... ... ... ... ... ... ...*

(இ-புரை.) அவ்விடத்தில் தேவருக்குமுதல்நாயகனுகிய விஷ்ணு வினுலகத்தைஅழித்துப் பிரமதேவனுலகத்திற்சென்று அவ்வுலகத்தை யும்அழிக்கக்கோழிக்கொடியானதுகோபித்துஅங்கிருக்கும்உடலையெல் லாம் கொறித்துவிட்டது இப்படியிருக்க அக்கினிப்பொறிகள்சூழ்ந்தக ண்களேயும் வெண்மைநிறமுள்ளபற்களேயுமுடைய கணத்தலைவர்கள்நா ல்வரும் கோபித்து அவ்விடமெங்குந் தங்கள்கோபச்செய்கையை காட் டினூர்கள்—(ஏ-று.) (உஎ)

இப்படியருஞ்சமரிழைத்திடுமதிர்ப்பினி... ... ... ... *
லெழுந்தவிமையோர் ... ... ... ... ... ...*
கற்படிவிரற்பதமுறுத்தநெடிதோடினர் ... ... ... ...*
கலக்கமுறுவா .. ... ... ... ... ... ... *
ரெப்படியினிக்குடியிருப்பதெனவிம்மலி.... ... ... ...*
னிரங்கிவெருவா.... ... ... ... ... ... ... *
மைப்படிகளத்தனடனம்புரிதருங்கயிலை.... ... ... *
வந்தணுகினூர் ... ... ... ... ... ... ... *

(இ-புரை) இவ்வாறு அரிதானபோர்செய்கின்ற ஆரவாரத்தினுல் தேவர்கள்பயந்துகற்பரல்கள் நெருங்கியபூமியானதுதங்கள்விரலுள்ள பாதத்தில் உறுத்தும்படியோடிக்கலக்கங்கொண்டுஎப்படிகுடியிருப்ப தென்றுதுயரத்துடனிரங்கிப்பயந்து ஸ்ரீநீலகண்டமூர்த்தியானவர் நட னஞ்செய்தருளுகின்றகயிலையங்கிரியிற்சேர்ந்தனர்.—(எ-று.) (உஅ)

அன்னவர்திருக்கயிலையண்மினர்கொடுஞ்சம .. ... ... ...*
ரடர்ந்தமயிலு ... ... ... ... ... ... ... *
மின்னெயிறுடைக்கணமும்வாரணமுமக்கயிலை ... ... ...*
வெற்படமருவி ... ... ... ... ... ... ... *
மன்னியொருபாகமுறமுந்தமரரம்பொனணி ... ... ...*
வாயிலினுறு ... ... ... ... ... ... ... *
வின்னலிவையாரொடும்விளம்புதுமெனத்தனி...... .. ...*
யிரங்கிமெலிவார்... ... ... ... ... ... ... *

(இ-ரை.) அந்தத்தேவர்கள் திருக்கயிலையைச்சேர்ந்தபோது கொ டியபோர்செய்தமயிலும் விளங்குகின்றபற்களையுடைய கணத்தலைவர்

ள் நால்வரும் சேவலும் அந்தக்கயிலையங்கிரியிற்பொருந்தி யொருபுறத்தி லிருக்க இங்கிருந்துபோனதேவர்கள் பொன்னுலாகிய கோபுரவாயிலிற் சேர்ந்து நமக்கு நேரிட்டதுன்பத்தை யாருடன்சொல்லிக்கொள்ளலா மெனவருந்தியிரங்குகின்றார்கள்.—(எ-று) (உ௯)

ஆயதுநிகழ்ந்தபொழுதாரணமுதற்பரனை ... ...... ... *
யாடல்பரவிச் ... ... ... ... ... ... ...*
சேயொளிவிரிந்தபதபங்கயம்வணங்கினர்... ... ... ... *
திரும்பிவரலு ... ... ... ... ... ... ...*
மாயனையெதிர்ந்துநெடுவானவர்குழாமொடு... ... ... ...*
வணங்கிவழிபா ... ... ... ... ... ... ... *
டேயதுபுரிந்துவெருவந்துபடுதங்குறை ... ... ... ...*
யிரந்துபுகல்வார்... ... ... ... ... ... ... *

(இ-புரை.) அவ்வாறுதேவர்க ளெண்ணமிட்டுக் கொண்டிருக்கும் போது வேதமுதற்பொருளாகிய பரமசிவனுடைய திருநடனத்தைத் துதிசெய்து ஒளிபரந்து விளங்கும்படியான திருவடித்தாமரைகளை வணங்கித்திரும்பி வரும்போது அந்தத்தேவர்கள் விஷ்ணுவைக்கண்டு இயன்றவளவுஆராதனைசெய்து வணங்கிதாங்கள்பட்டதுன்பத்தை அனுபவித்த தங்குறைகளை யிரந்துசொல்லுகிறார்கள்- (எ-று) (௩0)

(வேறு)

மூவாமுதலேமுளரித்திருநாபிப் ... ... ... ... ... ... *
பூவாலுலகளித்தபுண்ணியனேயெம்முயிரை ... ... ... *
காவாயெனிலெவரோகாப்பார்கடலுறங்குந் .. ... ... ...*
தேவாபசுந்துழாய்ச்சென்னிப்பெருமானே .. ... ... *

(இ-புரை.) மூப்பில்லாதமுதல்வனே திருநாபிக்கமலத்தினால் உலகங்களையளித்தபுண்ணியனே தேவரீர் எங்களுயிரைக்காப்பாற்றாவிட்டால் எவர்களேகாப்பவர்கள் திருப்பாற்கடலிலறிதுயிலமருந் துளவணிந்ததிருமுடியினையுடைய பெருமானே(எ-று.) (௩க)

அன்றோர்களிறுதிமூலமெனவழைப்பச்... ... ... ... *
சென்றோடியோடாவிடர்தீர்த்தசேவகனே ...... ... ...*

பொழிப்புரை.

குன்றேடினங்காத்தகோவேபலகளந்து ... ... ... *
நின்றேயெரிவிழிக்குநேமியபெருமானே... ... ... ...*

(இ-ரைபு.) முன்னாளிலொரு யானையானது ஆதிமூலமே யென்றழைக்கச்சென்றேடிநீங்காததுன்பத்தைநீக்கியசேவகனே கோவர்த்தனகிரியினால் பசுக்கூட்டமுதலானதுகளைக்காத்தஇறைவனே உலகத்தையளந்துநின்றகடவுளேஅக்கினியைக்கக்கும்சக்கராயுதமேந்தியகர்த்தனே. என்றவாறு. (௩உ)

அய்யோவமரருலகிழந்ததாழியாய் ... ... ... ... ... *
வெய்யோமெமைக்காப்பாருன்னன்றிவேறுளரோ... ... ...*
மையோடுமேனிமயூரக்கடுஞ்சிறையாற் ... ... ... ... *
செய்யாளுறைபநின் திருநாடுஞ்சிந்தியதே ... ... ... ...*

(இ புரை.) சக்கராயுதக்கடவுளே அய்யோ தேவருலகம் அழிந்துவிட்டது கொடியவர்களாகிய எங்களைக்காப்பவர்கள் நீயல்லாமல் வேறுருவரிருக்கின்றார்களோ நீலநிறம்பொருந்திய மயிலின் கொடுஞ்சிறையால திருமகள் வாழும் உன்னுடையபதவியும் அழிந்துவிட்டது. என்றவாறு. (௩௩)

வாழிமலரோனிருக்குமலர்க்கோயில ... ... ... ... *
பூழிபடசசிதைந்துபோயினதேடபங்கவரு ... ... ... ...*
மாழிவரைப்புறத்தோவண்டத்தினப்புறமோ ... ... ... *
பூழியிகந்தாயெளியேமுணமோமால ... ... ... ... ...*

(இ-புரை.)பிரமதேவன்வீற்றிருக்குமலர்க்கோயிலும்தூளியாய்ப்போய்விட்டது தேவர்களோவெனில சககரவாளகிரிக்கப்புறமோ. அலலது அண்டகோளத்தினப்புறமோ எங்கேபோனார்களோ அனந்தம் ஊழிகா ந்தவனென்றாங்களறியோம்:- (எ-று.) (௩௪)

நீரோறுதாமரையோனேறுநெடுந்தூவிச் ... ... .. ... *
சீரோறுமன்னஞ்சிதைந்ததாற்றேந்துளவக ... ... ... ...*
காரோறேபூங்கமலக்கண்ணாகடலவண்ணா ... ... ... ... *
போரோறேநீயேறும்புள்ளரசும்போயிற்றால் ... ... ...*

(இ-ள்.) நீரிற்படர்ந்தோங்கியதாமரைப்பூவில்வீற்றிருக்கும்பிரமதேவன் ஏறிச்செலுத்தும் சிறகினை யுடைய புகழ்மிகுந்துள்ளஅன்ன மும் சிதைவுபட்டது மணமுள்ள துளவமாலை யணிந்திருக்கும் மேக நிறமுள்ள சிங்கமேதாமரைமலர்போன்ற திருநேத்திரங்களுடையவரோ கடல்வண்ணமுள்ளவரோ அவுணராதியோர்போரில் ஆண்சிங்கம்போன்றிருப்பவரோ தேவரீரேறிச்செலுத்தும் கருடனும் ஓடிப்போய்விட்டது —(எ-று.) (௩௫)

வெண்பாற்பிறையெயிற்றுவெவ்வாய்க்கணநாலவ... ... ...*
ருண்பானவர்க்கிவ்வுலகடையப்போதுமோ ... ... ... *
வெண்பாலடங்குமோவெம்மோரிருப்பையெல்லாங் ... ...*
கண்பாற்கருணைசிறிதுளவேற்காண்பேமால்... ... ... *

(இ-பு.ரை.) வெண்மைநிறமுள்ளபால்போன்ற தந்தங்கள் பொருந்தியவாயினையுடைய பூதகணத்தலைவர்கள் நால்வர்களும் உண்ணப்புகுவார்களாகில் இந்தஉலகமெல்லாம்அவர்களிலொவ்வொருவர்வயிற்றுக்குப்போதுமோபோதாதே அவர்களுடைய செய்கை நினைப்பினிடத்திலடங்குமோ எங்களுடையஇருப்பிடத்தையெல்லாம்தேவரீருடையகிருபாநோக்கஞ்சிறிதுஉண்டாகுமாகில் நாங்கள்காண்போம்.--(எ-று)(௩௬)

(கருணையில்லையாகில இருப்பிடமில்லையென்பதுகருத்து.)

என்றுவணங்கியிமையோரெதிர்நிற்பப் ... ... ... ... *
பொன்றுண்முளரிபுயல்பூத்தனையோனும் ... ... ...*
பன்றுண்மலர்க்கமலப்பண்ணவனும்போயினார் ... ... *
மின்றாலங்கிலையவேலோற்குறுகினார் ... ... ... ... ...*

(இ புரை.) இவ்வாறுமுறையிட்டுத்தேவர்கள்நிற்கக்கண்டுபொலிவுள்ளதாமரை மலர்களை மேகம்பூத்திருப்பதை யொத்த உருவமுள்ள திருமாலும் தாமரைமலரிலிருக்கும் பிரமதேவனுஞ் சென்றுஒளிபொருந்தியதகட்டுவடிவமுள்ளவேலாயுதமேந்திய சுப்பிரமணியரிடத்திற்சேர்ந்தார்கள்:—(எ-று.) (௩௭)

செய்யுளும் உரையும்.

கண்டாரிருகண்களிகூர்ந்தாரோர்மருங்கு... ... ... ... *
தண்டாமரைமேகமன்னுன்றனிநின்ரு ... ... ... ... ...*
ஞெண்டாமரைத்தவிசில்வீற்றிருக்குமோதிமநதொன் ... *
விண்டாளுழந்தபரிசெல்லாம்விளம்புவான்... ... ... ...*

(இ-புரை.) இவ்வாறுசென்றவர்கள் சுப்பிரமணியசுவாமியைக்கண் டுகண்களிப்படைந்து குளிர்ச்சிபொருந்திய தாமரை மலர்களை யுடைய மேகம்போன்ற திருமாலானவர் ஒருபுறத்தில்நின்றார் பிரமதேவன்தேவ ருலகங்கள் பட்டதன்மையெல்லாஞ்சொல்லுகின்றான்—(எ-று.) (௩அ)

வாரார்முலைபுமையாளீன்றமகவேயெம் ... ... ... ...*
போரேறேவானுலகங்காத்தளித்தபுண்ணியனே... ... ... *
*தாரோறியகடப்பந்தாரோப்சமர்கடந்த... ... ... ... ...*
வீராமயூராவிளங்கிலையவேலோனே ... ... ... ... *

(இ-புரை.) கச்சணிந்ததிருத்தனபாரமுள்ள பார்வதிதேவியாரீன்ற ருளியபுத்திரசிகாமணியே பகைவர்போரில ஆண்சிங்கம்போன்றகடவு ளே தேவருலகத்தைக்காத்தளித்தபுண்ணியமூர்த்தியே ஒழுங்காகமலர்க ளேறியகடப்பம்பூமாலையணிந்தவரோஅவுணர்போரினைகடந்த வீரமு ள்ளவரோமயில்வாகனமுடையவரோ விளங்குகின்றதகட்டுவடிவமாகியவே லேந்தியகடவுளே(எ-று.) (௩௯)

* தாரோறியஎன்பதற்கு ஆட்டுக்கடாவின்மேலேறியஎனப்பொருள் கூறினும் ஒருவாறமையும்' அவ்வாறுகூறுங்கால் தகர் - தார் எனநீட்டல் விகாரமாயின தாகக்கொள்க- அகல்-ஆல-எனமருவியது போலென்க)

தேவேபுரந்தரனார்செல்வமேசெங்கமலப் ... ... ... ...*
பூவேயெனக்கும் பொருள்விரித்தபுண்ணியனே ... ... *
தூவேயலங்கிலையவேலோயசுருதியருக் ... ... ... ...*
கோவேகடம்பலரும்பன்னிருதோட்குன்றமே'... ... ... *

(இ-புரை) தேவேதேவேந்திரனுடையசெல்வமேசெந்தாமரைமல ரிற்பொருந்திய எனக்குப் பிரணவப்பொருளையுபதேசித்தபுண்ணியமூ

ர்த்தியே அவுணருடல்மாமிசத்தைஅணிந்துகொள்ளும்படியான வேலாயுதமேந்யதிகடவுளேவேதமுடியைவிட்டு நீங்காத இறைவனேகடப்பம்பூமலரும்பன்னிருபுயங்களாகியமலைகளுள்ளவரே.(எ-று) (சம)

நாதாவொருதனியேநான்மறையேநாப்பரட்டி ... ... ...*
யோதாமறையேபிரணவத்தினுண்மையே... ... ... ... *
பூதாதிநின்றும்புலப்படாப்பேர்க்கறகளிறே ... ... ... ...*
வேதாகமத்துறையேதண்கருணைவெள்ளமே ... ... ... *

(இ-புரை) நாதனே ஒப்பற்றஏகனே நாலுவேதமே நாவினைப்புரட்டி யோதவொண்ணாதவேதமேபிரணவத்தின்உண்மைப்பொருளேபஞ்சபூதமுதலானவைகளிலிருந்துந்தெரியககாணவொண்ணாதபேர்க்களிறேவேதாகமங்களின் துறையேகுளிர்ந்தகிருபாசமுத்திரமே.— (எ-று)

தேங்குதிரைததும்புதெண்ணீரின்மெய்ஞ்ஞான ... ... ... *
மோங்கிநிரம்புசரவணத்தினுற்பவமே... ... ... ... ...*
தாங்குசிறியதண்டைத்தாளோயிடையறாப்... ... ... ... *
பூங்கருணையாறுமுகம்பூத்தபொற்கிரியே ... ... .. ...*

(இ-புரை) நிறைந்தஅலைகள் ததும்புகின்ற கங்கைநீரிலிருக்கும் மெய்ஞ்ஞானமாகிய ஓங்கிநிறைந்தசரவணத்தி லுற்பவமேசிறியதண்டையணிந்ததிருவடிகளையுடையகடவுளேஇடையறாதுநிறைந்தகிருபையினையுடைய ஆறுமுகம்உண்டாகியபொற்குன்றமே எ-று.) (சஉ)

கூற்றமுரணறுக்குமாறெழுத்துக்கொண்டடியேம் ... ... *
போற்றுமெளிபாய்வலியாய்பாதனமே ... ... ... ...*
யாற்றவரும்புலத்தைவென்றோரகந்தெளிய ... ... ... *
நோற்றிழைத்தவெண்ணூலுடங்குமணிமார்போனே ... ...*

(இ-புரை) கூற்றுவனுடையவலியையறுக்கும்படியானசடாக்ஷரத்தைக்கொண்டுஅடியேங்கள்போற்றுதற்கெளியகடவுளேமற்றையர்க்குவன்மையானகடவுளேபழமையானகடவுளேதடுக்கவரியஐம்புலன்களையும்வென்றமுனிவர்கள்தவஞ்செய்து இழைத்தவெண்மைநிறமுள்ள பூணநூல் அசைந்துகொண்டிருக்கும்படியான திருமார்பினையுடையகடவுளே.()

பொழிப்புரை.

என்றுபலவுமெடுத்தெதிர்க்கைகூப்பி ... ... ... ... *
நின்றுமலர்வாய்புதையாநிகழ்த்துவான் ... ... ... ...*
கன்றுசினக்கணமுங்குகக்கிடமுங்கார்மயிலுஞ்... ... ... *
சென்றேசினத்தந்தாடுங்கலுழனொடுஞ்சீறினவால் ... ... ...*

(இ-புரை) இவ்வாறுபலவும் எடுத்துத்துதித்துக்கைகளைக் கூப்பித்தொழுது நின்றுவாயைப்புதைத்துக்கொண்டுசொல்லுகின்றான்கோபிக்கும்கணத்தலைவர்கள் நால்வர்களும்சேவலும்மயிலும்சென்றுஅன்னத்துடனும் கருடனுடனும் சீறின.(எ-று) (௪௪)

சீறுஞ்செயலொழிந்ததிண் சிறையவன்கலுழ .. ... ... *
னேறுந்தமியேனைத்தாங்குமோதிமத்தோ ... ... ...*
டாறுஞ்சிறகோய்ந்தலமந்தமரிழந்து ... ... ... *
மாறஞ்சினவாய்ப்புறங்கொடுத்துவானடைந்த ... ... ...*

(இ-புரை) சீறுஞ்செய்கையை யொழிந்ததிண்ணிய சிறையினையுடையவலியகருடனும்ஏறுகின்ற அடியேனைத்தாங்கும் அன்னமும் செல்லுகின்றசிறகோய்ந்துபோரினையிழந்து பகைக்கஞ்சிப்புறங்கொடுத்து வானில் அடைந்தன.(எ-று) (௪௫)

பின்போவெனதிருக்கைமாளப் பெரிதிழைத்து .. ... ... *
வன்போடென்றேதிமத்தைமாய்த்துவயக்கலுழ ... .. ...*
னென்போடொடிபமுடித்துமறுத்தேகினவாற் ... ... ...*
பொன்போலுருவாயரியுலகும்போயிற்றால் ... ... ... *

(இ-புரை) அவ்விரண்டுமொளித்து விட்டபின்பும் விடாமல் பின்றொடர்ந்து என்னுலகம்மாளும்படி செய்துஅன்னத்தையுங் கொன்று வெற்றிபொருந்திய கருடன் எலும்புகளுடன் ஒடியும்படிமுடித்து அங்கிருந்துபின்னும் தேவருலகத்திற்சென்றன அவைகளால பொன்போல உருவமுள்ளகடவுளே தேவருலகமும் அழிந்தும்போயிற்று.(எ-று) ()

வானோர்மனைகரிறந்தாரவ்வானோரி ... ... ... ... ... *
னேனோர்வடவரையும்பல்வரையுமெய்தினார் ... ... ... ...*

யாமேருபுகல்வனிவர்பிழைத்தாரீங்குற்றார் ... ... ... *
தேமேருடினவண்டுமுழுபூந்தெரியலாய் .. ... ... ... ...*

(இ-புரை) தேவர்கள்அனேகம்பெரிறந்தார்கள் அந்தத்தேவர்களில் பிழைத்தவர்கள் மகமேருவினிடத்திலுமற்ற மலைகளினிடத்துஞ் சென்றார்கள் அந்தக்காரியத்தை நானேவகுத்துச்சொல்லத்தக்கவன்தேனென்கிறவண்டுகளும் வண்டுஎன்கிற மற்றொருசாதி வண்டுகளுங் குடைந்து தேனுண்ணும்படியான பூமாலையணிந்தகடவுளே பிழைத்தவர்களாயுள்ளவர்கள் இதோஇங்குவந்திருக்கிறார்கள்.(எ-று.) (சஎ)

என்றுரைத்தவெலாந்திருச்செவிதாழ்த்தெம்பிரான்... ... *
குன்றுருவமன்னகணத்தோர்க்கொணர்கென்ற ... ... ...*
வின்றகணந்தோர்நெடிதோடிக்கூவுறலு... ... ... ... *
மன்றிழைந்தசூரன்முதலோர்வந்தணமினார்... ... ... ...*

(இ-புரை.) இவ்வாறுபிரமதேவன் சொன்னவைகளை யெல்லாம் நம்மிறைவனாகிய சுப்பிரமணியக்கடவுள் திருச்செவிகொடுத்துக் கேட்டருளி மலையுருவம்போன்ற அந்தப்பூதகணத்தோர் நால்வரையும்இங்கே கொண்டுவாருங்களென்று கட்டளையிட அங்கிருந்தகணந்தவர்கள் அதிசீக்கிரமாக ஒடி அழைத்தமாத்திரத்தில பகையானசெய்கையைச்செய்த சூரன்முதலானவர்கள் சுவாமியினிடத்தில்வந்து சேர்ந்தார்கள்.(எ-று)()

நாவாய்வறப்பக்குறுத்தாண நடுங்க ... ... ... ... ...*
வோவாத்திறலோய்ந்துயிர்நடுங்கியுள்ளழிந்து... ... ... *
மேவாவெருவருத்தநின்றனரால்வெங்கால்த்... ... ... ...*
தீபோல்விழித்தவிழிபாலிற்றெளிந்தனவால் ... ... ... *

(இ-புரை)நாக்கும்வாயும்வறளவும் குறியகால்கள்நடுநடுங்கவும்ஒழியாதவல்லமைமொழிந்து உயிர்நடுங்கியுளம் அழிந்துபயம்நேரிட்டுவருந்தஊழித்தீபோலசெவேலெனவிழிக்கும் அவர்கள்கண்கள்பால் போலவெண்மைநிறம்பொருந்தின.—(எ-று.) (சஅ)

வந்தாரடியற்றமாமரம்போல்வீழ்ந்துபணி .. ... ... ...*
தந்தாரவனைத்தனிவேலிறைநோக்கிச் ..., ... ... ... *

## சூராதிகளொடுக்கப்,

பொழிப்புரை:

செந்தாமரையுலகுமேனுலகுஞ்சேதித்தீர் ... ... ... ...*
நந்தாவலிதொலைத்துவானவர்நாடழித்தீர்... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுவந்தவர்கள் அடியற்ற பெரியமரம்போலவீழ்ந்துபணிந்தார்கள் அவர்களை ஒப்பற்றவேலாயுதமேந்திய சுப்பிரமணியசுவாமியார் பார்த்துப் பிர்ம்மலோகத்தையும் விஷ்ணுலோகத்தையும் அழித்தீர்கள் கெடாதவலிமையத்தொலைத்துத் தேவர்களுலகத்தையும் அழித்தீர்கள்.—(எ-று.) (௫ய)

நீவிரினிப்போய்நெடுநீர்ப்பெருநிலத்துப் ... ... ... ...*
பாவநிருதக்குலத்துற்பவித்துப்பன்முறையாற்... ... ... *
றேவரிவர்க்கிடுக்கண்செய்வீர்கடைமுறையெம் ... ... ...*
பூவிலையவேலாற்றொலைந்துகதிபுகுவீர்... ... ... ... *

(இ-புரை.) ஆகையால் இனிநீங்கள் சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்திற் போய்ப்பாவமுள்ள அசுரகுலத்திற்பிறந்து இந்தத் தேவர்களுக்குப்பலவாறுகத்துன்பஞ் செய்வீர்கள்அந்தககாரணத்தினல் கடைமுறையில் நம்முடையபொலிவுள்ளதாய்த் தகடுவடிவுள்ள வேலாயுதத்தாலிறந்து கதியடையககடவீர்கள்—(எ—று.) (௫க)

என்னுங்கடுஞ்சாபங்கேளாவிப்பூதர்... ... ... ... ...*
மின்னுஞ்சுடரிலைவெள்வேலோற்பதம்போற்றி ... ... ... *
மன்னுங்கொடியநிருதர்குலம்வைகுறினு ... ... ... *
நின்னன்பகலாதநெஞ்செமக்குவேண்டுமால் ... ... ...*

(இ-புரை.) சுப்பிரமணியக்கடவுள் இவ்வாறுகூறிய கொடியசாபத்தைப்பலமுள்ள அந்தநான்குபூதகணத்தவர்களுங்கேட்டுப்பிரகாசியாநின்றஒளியுள்ள வேலாயுதமேந்திய சுப்பிரமணியக்கடவுளுடையதிருவடியைப்பணிந்து துதிசெய்து கொடியபாவிகளாகிய நாங்கள் அசுரகுலத்திற்பிறந்திருந்தாலும் தேவரீருடைய அன்பு நீங்காதமனம் எங்களுக்குஅனுக்கிரகஞ்செய்யவேண்டும்—(எ—று.) (௫௨)

ஈதன்றிமற்றொன்றுளதாலெளியேங்கள் ... ... ... ...*
போதாங்குலத்துப்புரிதவத்தானெட்டிலைவேல்... ... ... *

காதுந்திறத்திறக்குங்காலமயிலாகிப்... ... ... ... ...*
பாதம்பொறுக்கக்கொடியாகப்பால்ப்பாய் ... ... ... *

(இ-புரை.) இதுவேயன்றிவே றொருவரமுமிருக்கின்றது அதாவது நாங்கள் பிறக்குங்குலத்தில செய்யுநதவத்தால் நெடியதகட்டுவடிவமுள்ளவேலாயுதங் கொல்லுந்தன்மையிலுலிறகும்போது மயிலாகித் திருவடியைத்தாங்கவும் கொடியாயிருக்கவும் அனுககிரகஞ் செய்யவேண்டும்.—(எ-று.) (ருங)

ஆயவரமிரண்டுமெம்பாலருடியெனந் ... ... ... ... *
தூயமுறுக்கெயிற்றுச்சூரன்பதுமனொடு ... ... ... ...*
மேயவுவகையொடும்பெற்றான்மிகுதவத்தான்... .... ... *
மாயைவயிற்றிலிவர்நால்வோருமவைகினர் ... ... ... *...

(இ-புரை.) இவ்வாறாகிய இரண்டுவரமும் எங்களுக்குக் கிருபைசெய்யவேண்டுமென்று- வெண்மைநிறமுள்ளதாய் முறுக்கிக்கொண்டிருக்கும் பற்களையுடையசூரனும் பதுமனென்பவனும் பொருந்தியசந்தோஷத்துடன்பெற்றுக்கொண்டு மிகுந்த தவத்தினால் நால்வர்களும் மாயைவயிற்றில் பொருந்தினர்கள்.—(எ-று.) (ருச)

மாளாவலிதொலைந்துமாண்டவயக்கலுழன் ... ... ... ...*
றாளாரவிந்தனேறுந்தனியெகினந் .... ... ... ... ...*
தூளாய்முடிந்தசுரருலகமெம்பிரான் ... ... ... ... *
றோளாறிரண்டுடையான்சொல்லினிலைபெற்றனவால் ... ...*

(இ-புரை) மாளாதபலமிழந்து மாண்டவெற்றியுள்ள கருடனும் பிரமதேவனேறிச்செலுத்தும் அன்னமும் தூளாயழிந்ததேவருலகமும் பன்னிரண்டுபுயங்களுள்ள நம்மிறைவன் திருவாக்கினால் பழையபடிநிலைபெற்றிருந்தன.—(எ-று.) (ருரு)

மூரிக்கமலவிழியரர்க்குமூதுணர்ந்த ... ... ... ... ...*
வேரிக்கமலத்தயற்கும்விடையருளி ... ... ... ... *
வாரிக்கருணைப்பெருமான்மயிலுகைத்துப்... ... ... ...*
பாரித்தகந்தப்பனிவரையிற்போயினன்... ... ... ... *

(இ-புரை.) தாமரைமலர்போன்ற கண்களையுடையவராய்ப் பலம் பொருந்தியவிஷ்ணுவுக்கும் வேதமுழுவதூ முணர்ந்தவராய்த் தேனி றைந்த தாமரைப்பூவில்வீற்றிருக்கும் பிரமதேவனுக்கும் விடைகொ டுத்தருளிக் கருணைக்கடலாகிய சுப்பிரமணியசுவாமியானவர் மயில்வாக னத்தைச்செலுத்திக்கொண்டு பருத்ததாய்ப் பனியால் சூழப்பட்டகந் தவெற்பிலெழுந்தருளினார்—(எ-று.) (௫௬)

என்றுமிளையானியம்பமொழிதிறப்பாத் ... ... ... ...*
துன்றுந்துணைத்தடந்தோட்சூரன்பதுமனொடு... ... ... *
மொன்றுதனிவயிற்றிரேருருவாயுறபவித்தான்... ... ...*
நின்றவிருவருடன்பிறந்தார்நீணிலத்தின்... ... ... ... *

(இ-புரை.) எந்நாளும் இளையவன்சொல்லும் வார்த்தைகடவாத இரண்டுபெரியதோள்களையுடைய சூரனெனவன்பதுமனுடன் மாயையி னுடையவயிற்றில் ஒரு உருவமாக உற்பவித்தான் மற்ற விருவர்களும் உடன்பிறந்தார்கள்.—(எ-று.) (௫௭)

சூலப்படைபொறுத்தசூரபன்மனென்றொருவன் .. ... ...*
சீலக்குணமொழிந்தசிங்கமுகனென்றொருவன்... ... ... *
சாலத்தவமிழைத்ததாருகனென்றொருவன் ... ... ...*
ஞாலத்தசுரர்குலமன்னவராய்நண்ணினார் .. ... ... ... *

(இ-புரை) சூலப்படைதாங்கிய சூரபன்மனென்றொருவனும்சீல க்குணமொழிந்த சிங்கமுகனென்றொருவனும் மிகுந்ததவஞ்செய்த தா ருகனென்பவனொருவனும் இவ்வுலகத்தில்அசுரர்குலராசர்களாய்ப் பொ ருந்தினார்கள்.—(எ-று.) (௫௮)

(சூரனும்பதுமனும்ஒருருவம்பெற்றமையால்சூரபன்மனென்)
(பெயர்கூறப்பட்டது.)

பூவிற்பொலியும்புணைகழலோன்போர்வேலாற். ... ... ...*
காவற்கணத்தொடிருவர்கலந்தொழிந்தார் ... ... ... *
தூவிற்பொலிசூலச்சூரனுயிரிறந்து ... ... ... ... ...*
சேவற்கொடியுமயிலுமெனச்சென்றொழிந்தான் ... ... *

(இ-புரை.) தாமரைமலர்போல விளங்குகின்றதாய் வீரகண்டை யணிந்த திருவடிகளையுடைய சுப்பிரமணியக்கடவுள் வேலாயுதத்தினால் சுவாமிசந்நிதியில் காவலாயிருக்குங் கணநாதர்களுட னிருவர்கலந்து போனார்கள் மாமிசத்தினால் விளங்கும் சூலமுள்ள சூரபன்மனேவெளி ல்உயிரிழந்து கோழிக்கொடியுமயிலுமாய்ச்சென்றான். (ருக)

ஈதுநிருதர்பிரானெய்தியவாறிக்காதை... ... ... ... ...*
யாதிமுதனாளரும்பியதாலென்றருளிச் ... ... ... ... *
சூதனுரைத்தபரிசெல்லாந்துரிசறுத்த... ... ... ... ...*
மாதவத்தோர்கேட்டுவழுத்திமகிழ்சிறந்தார் .. ... ... *

(இ-புரை) இதுசூரன்வந்தமுறைமை இந்தச்சரித்திரம்ஆதிமுதல் நாளேயுண்டாயதென்று சூதமுனிவர் சொல்லியதையெல்லாம் முக்குற் றம் நீங்கியதவத்தையுடைய நைமிசாரணியமுனிவர்கள்கேட்டுத்துதிசெ ய்து மகிழ்ந்தார்கள்-எ-று. (சூய)

(வேறு)

ஈங்கிவணிப்பரிசாயதெனவுணர்த்தவுணர்ந்தனம்யா ... ... *
மினிநீயைய ... ... ... ... ... ... ... ...*
வாங்குபிறைவளையெயிற்றுவாளவுணருயிரொழிய ... ... *
மடிந்தனரான்று ... ... ... ... ... ... ...*
வீங்குதுணைப்பணைத்தமுலையயமுகியுமிவட்பயந்த ... ... *
வெய்யவேற்கட் ... ... ... ... ... ... ...*
டாங்குகருங்குழன்மாயையெனுமவளுமொழிந்தவழி ... *
சாற்றவேண்டும் ... ... ... ... ... ... ...*

(இ-புரை.) சூரன்பிறந்திருந்த திவ்வாறாயதென்றுதேவரீர்சொல்ல நாங்களுணர்ந்தோம்இனிவளைந்த பிறைபோன்றதந்தங்களையுடையவாள வுணர்களுயிரொழியமடிந்தநாளில்பருத்துப் பூரித்துத்தமக்குத் தாமே யொப்பாகியதனங்களையுடைய அயமுகியும் இவளைப்பெற்றவளாய்க் கொடியவேல்போன்ற கண்களையும் தாங்கும்படியானகரிய அளகபா ரத்தையு முடையமாயையென் பவளும் போனவழியைச் சொல்லவே ண்டும்-எ-று. (சுக)

என்றுமுனிவரரியம்பவிருந்தவத்தினிருங்கொழுந்தா... ... *
யெழுந்தசூதன் ... ... ... ... ... ... ...*
வென்றுபுலன்களையிகந்தமாதவத்தீர்கேண்மினென... ... *
விளம்புமேனுட் ... ... ... ... ... ... ...*
பொன்றிகழ்கிண்கிணிமுளரித்தண்டையந்தாண்முருகனொடும் *
பொருதஞாட்பின் ... ... ... ... ... ... ...*
மன்றலெழுங்குழன்மாயைகதிர்ப்பகைக்கோர்மறையறைந்து *
மறைந்துபோனாள் ... ... ... ... ... ... ...*

(இ-புரை) இவ்வாறுநைமிசாரணியமுனிவர்கள்சொல்லப்பெரியதவத்தின்கொழுந்துபோலிராநின்ற சூதமுனிவர்ஐம்புலன்களையும்வென்று நீக்கியதவமுனிவர்களே கேளுங்களென்று சொல்லுகின்றார்கிண்கிணியுந்தண்டையுமணிந்த திருவடித் தாமரைகளையுடைய சுப்பிரமணியக்கடவுளுடன் முன்னாள் போர்செய்தகளத்தில் வாசனை வீசும் அளகத்தையுடைய மாயையானவள் பானுகோபனுக்கு ஒருரகசியஞ்சொல்லிமறைந்துபோனாள்(எ-று.) (சாஉ)

போயநெறித்தலைப்பயந்தமகட்புணர்ந்துன்னொடும்பிறந்த ...*
புதல்வர்க்கெல்லா ... ... ... ... ... ... *
மேயவிறலினிப்புகுதாதொருகுமரன்றிருக்கைவடி ... ...*
வேலால்வீவ ... ... ... ... ... ... ... *
ராயதுவந்துறுமளவையிவணிருத்திமந்தரவெற் ... ... ...*
படைகின்றேன்யான் ... ... ... ... ... ... *
தீயநெறிக்கொடுஞ்சூரன்முதலியோர் களத்துலக்குஞ் ... ...*
செயனீயோர்வாய்... ... ... ... ... ... ... *

(இ-புரை.)அவ்வாறுபோனமார்க்கத்திலிடத்தில்தன்மகளாகியஅயமுகியினிடத்திற்சேர்ந்து அவளைநோக்கி உன்னுடன்பிறந்தபுத்திரர்களுக்கெல்லாம் இதுவரையில் கிடைத்ததுபோல இனிவென்றி கிடையாது ஒப்பில்லாதசுப்பிர மணியக்கடவுளுடையவேலாயுதத்தால் இறந்துபோவார்கள் அந்தக்காரியம்நேரிடுகிறவரைக்கும் நீயிங்கேயிருநானோமந்தரகிரியினிடத்திற் போய்ச்சேர்கிறேன் நீயிங்கேயிருந்தால்தீயநெறியுடைவர்களிறக்கிறவகையெல்லாம்அறிவை(எ-று) (சாங)

மந்தரவெற்பினையடைந்துசீகுலமாபருப்பதத்து... ... ...*
வருகின்றேன்யா... ... ... ... ... ... ... *
னிந்தநெடுங்கொடுஞ்சமரினிவரிறப்பதுணர்ந்துபின்ன... ...*
ரிவணுருது... ... ... ... ... ... ... ... *
வந்தொழிதிவருந்தலைநீசீகுலவெற்பினைநோக்கி ... ... ...*
வருதியென்று ... ... ... ... ... ... ... *
வந்தரவானவர்குறித்துநகைவிளம்பமாயையவ ... ... ...*
ணகன்றும்போனுள் ... ... ... ... ... ... *

(இ-புரை.) நானிப்போது மந்தரகிரியிற்சேர்ந்திருந்தபின்பு ஸ்ரீச யிலத்துக்குவருகிறேன் இந்தப்போரிலிவர்களிறப்பதையறிந்துபின்புஇ ங்கேயிராமல்வந்துவிடு வருந்தவேண்டாம்இவ்விடம்விட்டுவரும்போது மற்றெங்கும்போகாமல் ஸ்ரீ சயிலத்தைக் குறித்து வந்துசேரென்று சொல்லிவிண்ணிலிருக்கும் தேவர்களெல்லாரும் நகைசெய்யும்படிமா யையானவள் அவ்விடம்விட்டு நீங்கிப்போய்விட்டாள்(எ-று) (சுச)

பொருசினத்தவாளவுணர்கிளைமுழுதுமடுகளத்துப்... ... *
புலவுவேலாற் .. ... ... ... ... ... ... ...*
செருவொழியவுயிரிறந்தார்மாயைதனைட்பயந்தளித்த ... *
தீயோனுந் .. ... ... ... ... ... ... ...*
தருவுலகஞ்சிறைப்படுத்தசூரனருளிரணியன்பா ... ... *
தலத்துச்சார்ந்தா ... ... ... ... ... ... ...*
னுருகியசெம்பெனத்தெளிந்தகண்ணியயமுகியரற்றி... ... *
யோடினுளால்... ... ... ... ... ... ... ...*

(இ-புரை.) போர்செய்தற்கேதுவானகோபமுள்ளவாளவுணர்சுற்ற முழுவதும்கொல்லுகின்றபோர்க்களத்தில் வேலாயுதத்தினுல் போர்செய் தலொழியும்படியுயிரிறந்தார்கள் மாயை யென்பவளைப்பெற்ற அசுரேந் திரனும் கற்பகவிருட்சமுள்ளபொன் னுலகத்துத் தேவர்களைச் சிறை யில்போட்டுவைத்தசூரன் பெற்ற இரணியனும் பாதாளத்திற்போய்ச் சேர்ந்தார்கள் உருகியசெம்பினைப்போலத் தெளிந்த கண்களையுடைய அயமுகியானவள்அழுதுகொண்டுஓடினுள்(எ-று) (சுரு)

மீல்லிந்தலைவெம்முலைத்தனத்தினிடியெனத்தன்கரம்புடைக்கு...*
மருளுமேங்கும் ... ... ... ... ... ... ... *

சூராதிகளொடுக்கப்,

பொழிப்புரை:

மலைப்பகுவாய்திறந்துமுகடதிரவெடுத்தழுதரற்றும்... ... *
பின்பார்த்தோடுங் ... ... ... ... ... ... ...*
கொலைத்தலைமுத்தலைப்படையோன்கொடுத்தவரமின்றளவோ *
வென்றுகூறு ... ... ... ... .. ... ... ...*
முலைத்தலைநின்றுருகுமெழுகெனக்குழைந்துதனையீன்று ... *
ளுறையுளுற்றாள்... ... ... ... ... ... ... ...*

(இ-புரை) மலையினிடத்தில்இடிவிழுவதுபோலத் தன்முலையினிடத்தில்மோதியடித்துக்கொள்ளுவாள் மயங்கிவிழுவாள் ஏங்குவாள் பிலம்போன்றபெரியவாயைத்திறந்துஅண்டமுகடும் அதிரும்படிசூரன்முதலியர் பெயரையெடுத்துச்சொல்லிஅழுது கூவுவள்பின்புறத்தில்யார்வந்து தன்னைக்கொல்லுகிறார்களோவென்று பார்த்துக்கொண்டோடுவாள் கொல்லுஞ்சிகையினையுடைய சூலாயுதமேந்திய பரமசிவன்கொடுத்தவரம் இன்றளவுதானோவென்றுசொல்லுவாள் உலைக்களத்திற்பொருந்தியுருகுமெழுகைப்போல உருகிமாயையிருக்குமிடத்திற்சேர்ந்தாள்.(எ-று)

சீகுலமாப்பருப்பதத்தினழுதரற்றிச்செல்வாளை ... ... ...*
யெதிர்ந்துசெல்லா ... ... ... ... ... ... ... *
மாகுலமுற்றுறமுடிந்ததெனவுணர்ந்துமாயைநெடு ... ...*
மண்ணில்வீழ்ந்தாள் ... ... ... ... ... ... *
சோகமெடுத்தலைப்பமற்றவையமுகியுமவளடியிற் ... ...*
றுயர்ந்துவீழ்ந்தா ... ... ... ... ... ... *
ளாகுலத்துக்கொருநிலையருலகதிரத்தழுவியழு ... ... ...*
தரற்றினரால் ... ... ... ... ... ... ... *

(இ-புரை) இவ்வாறுஅழுது கொண்டுஸ்ரீ சயிலத்தைநோக்கிச்செல்லுகின்றவளைக்கண்டு அழியாதநம்முடையபெரியகுலமெல்லாம் முடிந்ததென்று அறிந்துஎதிர் சென்றுமாயையானவள் பூமியில்விழுந்தாள் சோகமேலிட்டுஅலைப்ப அயமுகியும் அவளடியில்விழுந்தாள் இவ்வாறு சோகத்துக்கு இருவரும் ஒருதன்மையர்களாய் உலகங்களெல்லாம் அதிரும்படி ஒருவரையொருவர் கட்டிக்கொண்டுஅழுதார்கள்(எ-று.) (கூஎ)

அந்தரவானவர்பணித்தபணிதலைக்கொண்டியற்றுமட்டும் ... *
பயர்வுதீர்ந்தார் ... ... ... ... ... ... ...*

கந்தருவரியக்கர்சித்தர்விஞ்சையர்தந்தீராத ... ... ... *
கவ்வைதீர்ந்தார் .. ... ... ... ... ... ...*
சுந்தரிமங்கலந்தடவிநெஞ்சுதொட்டு முறுவலித்துத் ... ... *
துயரந்தீர்ந்தா ... .. ... ... ... ... ... ...*
விந்திரனைமுதலினோர்காற்றழும்புங்கரத்தழும்பு ... ... *
மிழந்தாரின்றே ... ... ... ... ... ... ...*

(இ-புரை) விண்ணுலகத்தி லிருக்குந்தேவர்கள் சூரனேவிய ஏவலைச்சிரசிலேற்றுக்கொண்டு செய்யும் உடலிளைப்புநீங்கினர்களே கந்தருவர்யக்ஷர் சித்தர்வித்தியாதரர் என்னுமிவர்கள்தீராததுக் கந்திர்ந்தார்களே இந்திராணியானவள் தன்மார்பினைத்தொட்டுமாங்கிலியத்தைத்தடவிப்பார்த்து நகைத்துமகிழ்ந்து முன்னிருந்ததுயரம்நீங்கினளே இந்திரன் முதலாகிய தேவர்கள் நாள்தோறுமீன் சுமந்து நடந்துவந்ததினால்உண்டாயிருந்தகால் தழும்பும் சூரன்முதலானவர்கள் பாதங்களைவருடினதால் உண்டாயிருந்த கைத்தழும்பும்இன்றுதீர்ந்தார்களே.—(எ-று.) (சுஅ)

பொருவருவெண்குடைநிழற்றிப்பொதுக்கடிந்துபலவண்டம் *
புவனமெல்லா ... ... ... ... ... ... ... ...*
மருவரம்பெற்றினிதளித்தவசுரர்குலம்பொருகளத்தி ... *
னவிந்துமாளத் ... ... ... ... ... ... ...*
தருவிழந்தவிந்திரர்க்கன்றமர்களத்தினெதிர்ந்துபுறந் ... ... *
தந்துமானச் .. ... ... ... .. ... ... ...*
செருவிழந்ததலைவரினிமுகமலர்ந்துதமதுபதஞ் ... ... *
செலுத்துவாரால் ... ... ... ... ... ... ...*

(இ-புரை) பரமசிவனிடத்தில் வரம்பெற்றுக்கொண்டு ஒப்பில்லாதவெண்குடைநிழல்எங்கும்பரவச்செய்து பொதுநீக்கிப்பல அண்டங்களையும் புவனங்களையும் இனிதாக ஆண்டுகொண்டிருந்த அசுரர்குலம் பொருகளத்திலமாண்டுபோனதினாலினிக்கற்பகவிருக்ஷத்தையிழந்துவிட்டஇந்திரனுக்காகப்போர்க்களத்திலுன்னுடன்போர்செய்து புறந்தந்துபோனாயிழந்து போன அரசர்களினிமுகமலர்ந்து தங்கள்தங்கள் அரசினைச்செய்வார்களே.—(எ-று) (சுகூ)

அரிமுகவனெடுத்துரைத்தமொழியுண்ராயண்டமுற்று ... *
மளந்தசெங்கோ ... ... ... ... ... ... *

பொழிப்புரை.

லெரியினுகுத்தனைபோலும்பெருவரனுமெறுழ்வலியு ... ...*
மிழந்தாய்போலு ... ... ... ... ... ... *
முரியவுயிர்த்துணைவனொருவராரினிப்பிறப்பா ... ...*
ருளரோகேட்டேன் ... ... ... ... ... ... *
விரிதருகற்பகநீழலிந்திரனரசுகொண்ட ... ... ... ...*
வெகுளிவேலோய்! ... ... ... ... ... ... *

(இ-புரை.) சிங்கமுகன் எடுத்துச்சொல்லிய ஆலோசனையைக்கே ளாமல்ஆயிரத்தெட்டண்டங்களில்செலுத்தியசெங்கோலைத்தீயிற்போட் டுவிட்டனையே பரமசிவன் அருளிச்செய்தபெரியவரங்களையும்மிகுந்த பராக்கிரமத்தையு மிழந்துவிட்டாயே உங்களைப்போலச்சகோதரர்கள் இரண்டுடலுக்குஒருயிராய்ப்பிறப்பவர்கள் உளரோ(கேட்டேன்)பரந்த கற்பகவிருக்ஷத்தினிழலிலிருக்குந்தேவேந்திரனுடைய அரசினைஅபகரி த்துக்கொண்டஉக்கிரமாகியவெலாயுதத்தையுடையசூரனே—(எ-று.) ()

ஒழியாதபெருவளனுமூவர்க்குஞ்சலியாத ... ... ... ...*
வரனுமென்று ... ... ... ... ... ... ... *
மழியாதபெருவரனுமழிந்தனைமற்றனதெழிலு .. ... ...*
மழிந்ததேயோ .. ... ... ... ... ... ... *
சுழியாறுசடைக்கரந்தோன்மதலையிவனெனவுரைத்த ... ...*
சொற்கேளாயாற்... ... ... ... ... ... ... *
* பழியாவிசுமந்துநும்மையிழந்திருந்தேனுடன்பிறந்த......*
பரிசுநன்றே ... ... ... ... ... ... ... *

(இ-புரை) எக்காலத்தும் ஒழியாதபெருஞ்செல்வங்களும்திரிமூர் த்திகளுக்குஞ் சலிக்காதபராக்கிரமமும் எந்நாளும் அழியாவண்ணம் பெற்றவரங்களும் அழிந்தனையே இதுவுமன்றியுன்னுடைய சவுந்தரிய மும் அழிந்துபோயதே சுழியுள்ளகங்காநதியைச்சடையில் ஒளித்தப ரமசிவனுடைய புத்திரன்இந்தச்சுப்பிரமணியனென்றுசொன்னசொல் லைக்கேளாமற் போயினையே நீயிறந்தபின்பும் பழியுள்ள இந்தவுயிரா

*பழியாவியென்பதற்கு-பழியினையும்உயிரையும்எனப்பொ ருள் கூறினுமமையும்.

ச்சுமந்து கொண்டிருக்கிறேன் உன்னுடன் பிறந்ததன்மைமிகவும் நன்றே (எ-று.) (எக)

எனவாற்றுமயமுகிகட்குமிழியெடுத்தெறிபுனலை ... ... *
யிருகைமாற்றி ... ... ... ... ... ... ...*
மனமயக்கமொழிதியெனமாமைமகட்கருகிருந்து ... ... *
மம்மர்தீர்ப்பாள் ... ... ... ... ... ... ...*
புனைமயிலுங்கொடியுமெனப்பெறற்கரும்பேறினிதுபெற்றுப் *
பொலிந்தான்முன்னே ... ... ... ... ... ... *
னனமுகைக்குநான்முகனுமரியுமிவனடிதொழுதற் ... ...*
கணியவன்றே ... ... ... ... ... ... ... *

(இ-புரை) இவ்வாறு அழுகின்ற அயமுகியினுடைய இரண்டுகண்களிலு மிருந்துகுமிழியிட்டுக்கொண்டு ஒழுகுகின்ற நீரைத்தன்னிரண்டுகைகளாலுந் துடைத்து நீமனமயக்கத்தை யொழியென்று மாயையானவள் தன்மகளருகிருந்து சோபத்தைத்தீர்ப்பவள் மகளேயுன்பெரியதமையன் சுப்பிரமணியசுவாமிக்கு வாகனமாகியமயிலும் கொடியாகிய சேவலுமான பெறுதற்கரிய பெரும்பேறு இனிதுபெற்று விளங்கினான் அன்னவாகனத்திலேறிச்செலுத்தும் பிரமதேவனும் மகாவிஷ்ணுவுமிவனடியைத்தொழும்படியானபேறுகிடைத்ததே.—(எ-று) (எஉ)

பண்டிழைத்தமாதவத்தாற்கிடைத்தனன்மற்றிதுவிதன்மேற் ...*
பதவியுண்டோ ... ... ... ... ... ... ... *
தண்டையஞ்சிறடிகதுவுந்துகளிழுகற்பெற்றனனெனத் ... ...*
தவமோவென்ன... ... ... ... ... ... ... *
வண்டிமிர்பைந்துணரோதியனையுரைத்தனளவளை ... ...*
வதனநோக்கிக்... ... ... ... ... ... ... *
கெண்டையங்கணயமுகியுஞ்சிறிதுமனக்கவலொழிந்து... ...*
கிளப்பதானுள் ... ... ... ... ... ... ... *

(இ-புரை) முன்செய்தபெரியதவத்தால் இந்தப்பேறு பெற்றுக்கொண்டான் இனி யிதற்குமேலானபதவியுண்டோ சுப்பிரமணியக்கடவுளுடைய தண்டை யணிந்த அழகுள்ள சிறியதிருவடிகளிற் பொருந்துந்துகள்படும்படியாகப் பெற்றான் அது எத்தவமோ வென்று வண்டு

பொழிப்புரை:

களிசைபாடிக்கொண்டிராநின்ற பூங்கொத்துகளணிந்த அளகத்தையுடைய தாயாகியமாயை அவள்முகத்தைநோக்கிச்சொல்லினள் இவ்வாறு தன்தாய் சொன்னதின்மேல் சேற்கண்டைபோன்றகண்களுள்ள அயமுகியானவள் மனத்துயரஞ்சிறிது நீங்கிச்சொல்லுகின்றாள்.(எ-று) (எ௩)

சூரபன்மனைபெருகுருதிப்புகர்முகத்தவேலினுரந் ... ... ...*
தொலைந்துவெற்றி ... ... ... ... ... ... *
வீரநெடுஞ்சிறைமயிலுஞ் சேவலுமாயினனென்ன ... ...*
வியம்பினையத்...... ... ... ... ... ... ... *
தாருகனுமரிமுகனுஞ்சென்றடைந்ததிசையுணரேன் ... ...*
றமியேனன்றோ... ... ... ... ... ... ... *
* சோரிசொரிமுத்தலைச்சூன்மறலிவலைப்பட்டனரோ ... ...*
சொல்கவென்றாள் ... ... ... ... ... ... *

(இ-புரை) சூரபன்மனானவன் பகைவருடலுதிரந்தோயும்படியான புகர்முகத்தையுடைய வேலாயுதத்தினால்பலமிழந்து வெற்றியுள்ளமயிலுஞ் சேவலுமாயினனென்று சொலலினை தாருகனும் சிங்கமுகனும் போயினதிசைதெரிந்திலேன் அவர்கள் சூலமேந்தியநமனுடையபாசத்தில் அகப்பட்டுக்கொண்டார்களோ அதுவும் தெரியும்படி சொல்லுவாய்.(எ-று) (எ௪)

ஆயதுமுற்றுணர்ந்தறிவானுரைக்கின்றேனயமுகிமற்... ... *
றறிதியென்ன... ... ... ... ... ... ... ...*
மாயையுரைத்திடுமனையோர்கயிலைவருகணத்தினொடும்...... *
வாழ்ந்தாரொன்னத்... ... ... ... ... ... ...*
தீயவிளைத்திடுமிவரிப்பெறற்கரும்பேறடைந்ததென்னை ... *
செப்புகென்று... ... ... ... ... ... ... ...*
டாயெனநின்றிவட்பயந்தாளவட்கறிந்தமுறையனைத்துஞ்... *
சாற்றலுற்றாள் ... ... ... ... ... ... ...*

---

*சோரிசொரியெனபதற்குஉதிரத்தைச்சொரிகின்றவெனப் பொருள்கூறுக.

(இ-புரை.) அந்தச்சரித்திரமுழுவதும் என்னறிவினுலுணர்ந்து சொல்லுகிறேன் அசமுகியேநீயறிந்து கொள்ளென்று மாயையானவள் அவர்கள்கயிலையிலிருக்கிற கணங்களோடும் வாழ்கின்றார்களென்ன அதைக்கேட்டஅயமுகிதீமைகளையே செய்து கொண்டிருந்தவர்கள் பெறுதற்கரியஇந்தப்பேறுபெற்றதென்னகாரணமோ அதனையுஞ் சொல்லவேண்டுமென்ன இவளைப்பெற்றதாயாகிய மாயையானவள் தன்மகளாகிய அயமுகிக்குத்தானறிந்த முறைகளைச்சொல்லுகின்றாள்.(எ-று)(எடு)

முன்னொழிந்தநெடுங்காலத்திலாதினாதிலம் றுவட்டெடுக்கு … *
மூரிமுந்நீர் … … … … … … … …*
தன்னகத்துநவதீவிற்சாகத்தீவொன்றுளதா … … … *
லதனுட்டோன்றி … … … … … … …*
மன்னியசெங்கோலோச்சியொருகுடையினுயிர்புரக்கு … *
மன்னர்மன்னன் … … … … … … …*
பொன்னவிர்பைங்கழற்காற்பிரபாகரனென்றளொருவன் *
* புலவுவேலோன் … … … … … … …*

(இ-புரை.) சென்றநெடுங்காலத்துக்குமுன்னே ஒலிக்காநின்ற அலைகள்நின்று மேலெழுகின்ற சமுத்திரங்களின் மத்திகளிலாநின்றநவதீவுகளில் சாகத்தீவென்றொருதீவுண்டு அதிலுண்டாகிஅழியாத செங்கோல்செலுத்தி ஒருகுடைநிழலில் உயிர்களைக்காத்த அரசர்க்கரசன் பொன்னலசெய்யப்பட்டுவிளங்குகின்றவீரகண்டையணிந்தகாலுள்ளபிரபாகரனென்றுஒருமன்னவனிருந்தான்.—(எ-று.) (எசு)

* புலவுவேலோன் என்பது-பகைவருதிரந்தோயும் வேலுடையவனென்க.

அனையவனுக்குயிரனையாளொருத்தியகமாட்சிபுரந்தளிப்பா …*
ளன்றாள் … … … … … … … … *
புனைமணிமேகலையசுகுமாரியெனும்பெயருடையாள் … …*
பொற்பினீங்காள் … … … … … … *
கனைகழற்காலரசனெறிமுறைதிறம்பாளருந்ததியிற் … …*
கற்பினிற்பா … … … … … … … *

பொழிப்புரை:

வினையறிவாளளவிறந்தநெடுங்காலமரசுபுரிந் ... ... ...*
திருந்தாரன்றே ... ... ... ... ... ... ... *

(இ-புரை.) அவ்வரசனுக்குஉயிரையொத்தவளாகியமனைவியொருத்தியிருந்தாள் அவள் இல்வாழ்க்கைக்குப் பழுதுவராமல்பாதுகாப்பவள் மணிவடமாகிய மேகலாபரணந்தரித்துக்கொண்டிருக்கும் சுகுமாரியென்னும்பெயர்பூண்டவள் மிகுந்தசவுந்தரியமுடையவள் ஒலிக்காநின்றவீரகண்டைகூடியகாலினையுடைய அரசனாகியதன்கணவன்சொல்லுமுறைக்கு மாறுபடாதவள்மேலும் அருந்ததிபோலப் பதிவிரதைத்தன்மையிலிருக்கும்படிசிந்தித்துக்கொண்டிருக்கும் அறிவினையுடையவள் இத்தன்மையினையுடையஇவர்கள்அளவிறந்தநெடுங்காலம்அரசுசெய்துகொண்டிருந்தார்கள்.—(எ-று.) (எஎ)

பெண்பாலாயிருக்குமவளை அரசுசெய்தற்கண்சேர்த்துக்கூறியது உலகத்துயிர்களுக்கு நலியாகிய மழைபொழிதற்கேதுவான கற்புமுதலாகிய நற்குணங்களையுடையவளாதலாலென்றுணர்க.

ஈங்கிவர்நின்றிழைத்தபெருந்தவப்பயத்தாலினிதுவப்பி .. ...*
னெடுத்துமோப்பத் ... ... ... ... ... ... *
றீங்குதலைமதலையொருநால்வர்பிறந்துளரிவர்க்குச் ... ...*
செங்கோல்வேந்த ... ... ... ... ... ... ... *
னோங்குதிறற்சூரனென்றும்பதுமனென்றுமிரடடையருக் ...*
குரைத்தேனோர்க்குத் ... ... ... ... ... ... *
தாங்குகழற்சிங்கனென்றுந்தாருகனென்றும்புனைந்தான்... ...*
றுமவேலான்... ... ... ... ... ... ... ... *

(இ-புரை.) இவ்விருவர்களுஞ் செய்ததபோபலத்தினால் இனிதாகச்சந்தோஷித்து எடுக்கவும் உச்சிமோந்துமுத்தமிடவும் மதுரமானகுதலைச்சொல்லையுடைய நான்குபுத்திரர்கள் பிறந்தார்கள் இந்தப்புத்திரர்களுக்குச்செங்கோல்செலுத்தும் அவ்வரசனானவன் சூரனென்றும்பதுமனென்றும் இருவருக்குப்பெயர்கூறி மற்றை யிருவருக்கும் வீரகண்டையணிந்தசிங்கனென்றும் தாருகனென்றும் பெயர்கூறினான்-(எ-று)

தங்குலத்துமுநியோர்பேரீன்றெடுத்தமதலையர்க்குத்... ... *
தந்தபின்னர்ப்... ... ... ... ... ... ... ...*

பொங்கொளிப்பைங்கழலிவர்க்குண்முன்பிறந்தசூரனுக்குப் *
புரவுநல்கிச் ... ... ... ... ... ... ... ...*
சிங்கவாதனத்திருத்திதேவியொடுமருந்தவத்திற் ... ... *
சென்றனன்றே ... ... ... ... ... ... ...*
வங்கணவனுலகுபுரந்தொருகுடையினுயிர்க்குதவி ... ...*
யருளினுனல் ... ... ... ... ... ... ... ... *

(இ-புரை.) தன்குலத்தில்வந்த முன்னோர்கள்பெயரைத் தான்பெற்றெடுத்தபிள்ளைகளுக்குக்கூறியபின்னர் ஒளிமிருந்த பொன்னலாகிய வீரகண்டையணிந்த இவர்களுக்குள் முன்பிறந்தசூரனுக்கு அரசாட்சி கொடுத்துச்சிங்காதனத்திலிருத்தித் தான்மனைவியுடன் அரியதவஞ்செய்யவனத்திற்சென்றான் அதன்பின்பு சூரனெனவன் ஒருகுடைநிழலில் உலகத்தைக்காத்து உயிர்களுக்கெல்லாம் நன்மையைததந்தருளினன்-(எ-று)

அறநெறிச்செங்கோலோச்சியவனிபுரந்தினிதளிக்கு ... ...*
மந்நாட்டென்பாற்... ... ... ... ... ... ... *
குறுமுனிகுண்டிகைதூக்குங்கரத்தினுதரிததிடுகைக் ... ...*
குடையனுகி... ... ... ... ... ... ... ... *
மறைதவத்தோருருவுகொண்டுவந்தனையோன்றனதிடத்து ...*
வரவுநோக்கி... ... ... ... ... .. ... ... *
முறையினினிதுயிர்புரக்குஞ்சூரனருந்தவற்கெதிர்போய் ...*
முறையிற்றாழ்ந்தான் ... ... ... ... ... ... ... *

(இ-புரை.) தருமம்வழுவாமல செங்கோல்செலுத்தி யிவ்வுலகத்தையினிதாகக்காக்கும்நாளில் தென்னட்டிலிருக்கும் அகஸ்தியமுனிவர்கமண்டலமேந்தியகையினையுடையவரும் விரும்புகின்றசிறியகுடையினையுடைய வருமாய் வேதமானது தவசி வடிவங் கொண்டு வந்ததைபொத்தவராய்த்தன்னிடத்தில் வருவதைநீதியுடன் உயிர்களைக்காக்குஞ் சூரனறிந்து எதிர்சென்றுபணிந்தான்.—(எ-று.) (அய)

அருந்தவமேயருந்தவத்தோர்க்கருமருந்தேயாரணமே... ...*
யெளியேம்பெற்ற .. ... ... ... ... ... ... *
பெருந்தவமேமுழுஞானக்கலைக்கடலேயெழுந்தருளப்... *
பெற்றேனெந்தை... ... ... ... ... ... ...*

பொழிப்புரை:

திருந்துமலரடிதீண்டக்கடற்கிடந்ததீவுஞ்செய் ... ... ...*
திறனன்றெனனுக்... ... ... .. ... ... ... *
குருந்தமலர்த்தமிழ்ப்பொதியக்குறுமுனியைத்தன்கோயில ...*
கொண்டுபுககான்... ... ... ... ... ... ... *

(இ-புரை.) அரியதவமே அருந்தவத்தோர்கரும் கிடைப்பதற்கரியஅமுதமே வேதமே தங்கள் கிருபைககுரியவர்களாகிய நாங்கள் பெற்றதவமே பூரணஞானமுள்ளசாஸ்திரககடலே தேவரெழுந்தருளப்பெற்றேன் தேவருடையதிருவடியைச்சமுத்திரத்தின்மத்தியிலிருக்கும் இந்தத்தீவுந்தீண்டும்படிசெய்ததவம் பெரிதேயென்று உபசாரவார்த்தைகள்சொல்லிக் குருந்தமலர்நிறைந்த தமிழ்ப்பொதியமலையில் வீற்றிருக்கும் அகஸ்தியமுனிவரைத் தன் கோயிலுக்குள் அழைத்துக்கொண்டு போனான்---(எ-று.) (அக)

புக்கமுனிவனைத்தரளங்குயிற்றுமரியாசனத்தி ... ... ...*
னிருத்திப்போற்றித்...... ... ... ... ... ... *
தக்ககடன்முறையாவுந்தம்பியரோடினிதியற்றத் ... ...*
தமிழினவேந்தன் ... .. ... ... ... ... ... *
மிக்கெழுந்தபெருவகைவெள்ளமுளததுவட்டெறிய ... ...*
வியநதுநோக்கிப்... .. ... ... ... ... .. *
பக்கமருங்கிருத்தினெனத்தொழுதிருந்தாரன்னவர்க்குப்... ...*
பகர்தலுற்றான் ... ... ... ... ... .. ... *

(இ-புரை.) இவ்வாறு அழைததுக்கொண்டுபோய் முத்துகள்பதித்தசிங்காதனத்தில்வீற்றிருக்கச்செய்து துதித்துச்செய்யவேண்டியஉபசாரங்களை யெல்லாம்அவன்தன் தம்பியருடன்செய்யத்தமிழுக்கிறைவராகிய அகஸ்தியமுனிவர் தம்முடைய திருவுள்ளத்தில் மிகுந்தெழுந்தசந்தோஷவெள்ளம்பெருக்கெடுகக அவர்களை மகிழ்ந்துநோக்கி நமக்குச்சமீபமாக அருகிலிருங்களென்றுசொல்ல அவர்கள் தொழுதிருந்தவுடன் அவர்களுக்குச்சொல்லுகின்றார்.---(எ-று.) (அஉ)

(வேறு)

ஆயவெண்குடைநீழலினவனிகாத்தளிக்குந்... ... ... ...*
தூயசிந்தையிற்றூரிசறுபெருங்குணமுடையீர்... ... ... *

மேயநுங்களைக்காண்குறும்விருப்பொடுமடைந்தோ ... ...*
மேயநுன்னபொருளொன்றுளதியம்புதுங்கேண்மின்... ... *

(இ-புரை.) திருத்தமாகியவெண்குடைநிழலின் கீழ்வைத்து இவ்வு லகத்தைக் காத்துரக்ஷிக்கும் பரிசுத்தமானசித்தத்துடன் குற்றமற்ற சத் துவகுணமுடையவர்களே உங்களைக் காணவேண்டுமென்கிற விருப்புட ன் இங்குவந்தோம் ஆகிலும்நாம் உங்களுக்குச்சொல்லவேண்டியபொரு ளொன்றிருக்கின்றது அதனைச்சொல்லுகின்றும்கேளுங்கள்(எ-று)(அ௩)

அறிவினுலுளந்தூயவர்க்கன்றிமற்றறிவிற் ... ... ... ...*
சிறியசிந்தையிற்றீட்டுவதன்றிதுதெரிக்கின் ... ... ... *
மறுவின்மாட்சியின் மந்திரத்துபநிடத்துச்சி ... ... ...*
புறுவதியாரினும்புலப்படாதொருபொருளுளதால்... ... *

(இ புரை.) அந்தப்பொருளை அறிவினல் சுத்தசித்தமுடையவர் களுக்கு அறிவிக்கலாமேயன்றி அறிவினுல் சிறியராயிருப்பவர்கள் சித் தத்தில் எழுதிவைக்கத்தக்கதல்ல இன்னும் அதன்பெருமையைத் தெரி விக்குமிடத்தில் குற்றமில்லாதமாட்சிமையினையுடைய மந்திரங்களிலும் உபநிடதத்துசசியிலுமிருப்பது மேலும் அப்பொருள் யாவராலும் அறிவிக்கப்படாதது.---(எ-று.) (அச)

கண்ணிற்காண்பனயாவையுங் கட்புலங்கதுவா...... ... ...*
தெண்ணிற்காண்பதுமெண்ணுறுபுலங்களுமெண்ணும் ... *
விண்ணிற்காண்பதுமேலெனுமெவற்றிற்குமேலாய் ... ...*
நண்ணிக்காண்பதுமப்பொருளல்லதார்நவில்வார் ... ... *

(இ-புரை.) கண்களால்காணப்படுகின்றவைகள்யாவும் கண்பார் வைக்குகெட்டாமல்மனதினுற்காண்பதும்எண்ணுகின்ற புலங்களும்ஆகா யவெளிபோற்காண்பதும்மேலென்றுசொல்லப்படுகிறமேலானபொரு ள்கள்யாவுக்கு மேலானதாகக்காணப்படுவதும் அந்தப்பொருளேயன்றி வேறொருபொருளிருக்கின்றதென்று யாவர்சொல்வார்கள்.(எ-று.)(அ௫)

திருமுகங்களோராறுடன்றீவினையனைத்தும் ... ... ... *
பொருதுவென்றுளன்பன்னிருபுயமுளன்புலரிப் ... ... ...*
பருதியாயிரமென்னநின்றிமைப்பதுபணியார்... ... ... *
குருதியூற்றெழுவேற்படைதிருக்கரங்கொள்ளும் ... ... ...*

பொழிப்புரை

(இ-புரை.) அப்பொருளே சுப்பிரமணியக்கடவுள்-அவர் ஆறுதிருமுகங்களுள்ளவர் தீவினைகளையெல்லாம் பொருதுவென்றுள்ள பன்னிரண்டு புசங்களையுடையவர் விடியற்காலத்துதிக்கும் ஆயிரம்சூரியர்கள் போலநின்று விளங்குகின்ற தாய்ப்பகைவர்உடலிலிருந்து உதிரமூறும்படிசெய்கின்றதுமாகிய வேலாயுதமொன்றினைத்திருக்கரத்தில்வைத்துக்கொண்டிருப்பவர்.(எ-று) (௮௬)

தெய்வமாமயிலொன்றவன்சேவடிதாங்கு... ... ... ... *
மையவம்மயிற்பெருவலியாரளந்தறிவார் ... ... ... ...*
வையமுற்றவுங்கொறிக்குமோர்வாரணக்கொடியன் ... ... *
பொய்யில்கேள்வியீர தன்றிறம்யாவரோபுகல்வார் ... ... ...*

(இ-புரை.) தெய்வத்தன்மையுள்ள மயிலொன்று அவருடையசெய்யதிருவடியைத்தாங்கும் அழகியஅந்தமயிலின் பெருமையையாவர்அளவிடத்தக்கவர்கள் இதுவுமன்றி உலகத்தையெல்லாம் கொறித்துவிடத்தக்கதான கோழிக்கொடியுமொன்றுடையவர் உண்மையானகேள்வியையுடையீர் அந்தக்கோழியின்வல்லபத்தையாவரோ சொல்லத்தக்கவர்கள் ()

முருகநாயகன்சீறடிமுளரியிற்சிறுதாள் ... ... ... ... *
பொருவின்முக்கணன்புயங்களுமுமைமுலைப்பொருப்பு ...*
மருவிவாழ்ந்தனசிறிதுநாண்மாமயிற்பெருமா... ... ... *
ஒருவில்வைகலும்பொறுத்தனனென்னிலென்னுரைக்கேம் *

(இ-புரை.) முருகக்கடவுளுடைய சிறியதிருவடித்தாமரையிற்படியுஞ்சிறியதாள்களை ஒப்பில்லாத பரமசிவனுடைய புசங்களும் பார்வதிதேவியாருடைய திருத்தனபாரமும் சிறிதுநாள் பொருந்திவாழ்ந்தன பெருமைபொருந்திய மயில்வாகனமாகிய நம்முடையகடவுள்அந்தத்திருவடியை இடைவிடாமல் தாங்கிக்கொண்டிருந்ததென்றால் அதன்பெருமையையாதென்றுசொல்லுவோம்.---(எ-று.) (௮௮)

மூவராகியமுப்பெருந்தொழிலுடையவர்க்குந் ... ... ... *
தேவரியாவர்க்குமருந்துறுஞ்செய்தியற்றவர்க்கு ... ... ...*
மேவிலெண்குணத்தனையனையுளத்தமைத்தல்லா... ... ... *
லியாவதாகுவதன்னவர்கெடுத்தியாமியம்பில் ... ... ...*

(இ-புரை.) இன்னமும் எடுத்துச் சொல்லுமிடத்தில் திரிமூர்த்திகளாகிய முத்தொழிலை நடத்துகின்றவர்களுக்கும்ஐம்பொறி நுகர்ச்சியை அவுருந்துஞ் செய்கைவிட்ட முனிவர்களுக்கும் நீங்குதலில்லாத எண்குணமுடையசுப்பிரமணியக்கடவுளைத் தங்கள் தங்கள்உள்ளத்தில் அமைத்தாலல்லதுயாதொருகாரியமும் ஆகுவதல்ல.---(எ-று.) (அகூ

ஈதுளப்படுத்திருத்தி நீரெம்பிரானிருதாட் ... ... ... ...*
போதுவைகலும்போற்றுதிரென்றனன்புகலா ... ... ... *
வாதிநாயகற்குவமைசாலருந்தவத்தலைவன் ... ... ... ...*
வேதவேதியனுசிகண்மொழிந்தனன்வியப்பின்... ... ... *

(இ-புரை.) இப்போது நாம் சொல்லியதுகளை உங்களுள்ளத்தில வைத்துக்கொண்டு நீங்கள் நம்மிறைவனுகிய சுப்பிரமணியக்கடவுளுடையதிருவடித்தாமரைமலர்களை நாள்தோறுந் துதிசெய்யுங்களென்று சொல்லிப் பரமசிவனுக்கே யொப்பாகிய தவசிரேஷ்டரும் வேதவேதியருமாகிய அகஸ்தியமுனிவர்சந்தோஷத்துடன் ஆசீர்வசனஞ் சொன்னார். என்றவாறு. (கூய)

சாகதீவினின்றருந்தவத்தவமுனிதணவா ... ... ... ...*
யோகநாயகனொருவழிப்புகுந்தனனுவர்கள் ... ... ... *
தோகைவாகனமெம்பிரான்சேவலந்துவச... ... ... ... *
மாகல்வேண்டு நாமென்றுதம்மருமனத்தடைத்தார் ... ...*

(இ-புரை.)இவ்வாறுசொல்லி நீங்காதயோகநாயராகிய அகஸ்தியமுனிவர்அந்தச்சாக தீவினைவிட்டு ஒருவழியேநீங்கிப் போனபின்புசூரன் பதுமன் என்னும் அவ்விருவரும்நம்பெருமானுக்கு மயில்வாகனமும் சேவற்கொடியும் நாம்ஆகுதல்வேண்டுமென்று தங்கள்மனதில் எண்ணங்கொண்டார்கள்.—(எ-று.) (கூக)

திரணவிந்துவென்றொருமுனிசென்றனன்றிரைநீ ... ... *
ரரணவேலியச்சாகத்தீவாங்கவர்க்கெதிர்போய்ச் ... ... ...*
சரணபங்கயம்பணிந்தனன்முருகன்சிந்தை...... ... ... *
மூரணகற்றரிமுகவனும்பணிந்துகைமுகிழ்த்தான் ... ...*

பொழிப்புரை.

(இ-புரை.) திரணவிந்துவென்கிற ஒருமுனிவர் அலைகளையுடைய சமூத்திரமே அரணாகியசாகத்தீவிலிருக்கும் அவர்களுக்கு எதிரில்சென்றனர் அதையறிந்துமனதின்வன்மையைமாற்றிய சிங்கமுகன் தாருகன் என்னும் இவ்விருவர்களும் எதிர்கொண்டுவணங்கிக்கைகளைக்குவித்துக்கும்பிட்டார்கள்.—(எ-று.) (கூஉ)

முகிழ்த்தகையினருருகியசிந்தையர்முனிபா... ... ... ... *
னெகிழ்த்தநெஞ்சினர்புனற்படுகண்ணினர்நிறைந்த ... *
மகிழ்ச்சிகூர்தரமாமதிற்கோயில்கொண்டணைந்தா... ... ...*
திகட்சியில்லதோர்முழுமணித்தவிசகமிருத்தி ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுகூப்பிய கையினையுடையவர்களும் உருகிய சிந்தையையுடையவர்களும் அம்முனிவரிடத்தில் நெகிழ்ந்தமனமுடையவர்களும் ஆநந்தபாஷ்பம் பொழிகின்ற கண்களையுடையவர்களுமாய் நிறைந்த மகிழ்ச்சியானதுமேலுமேலும்பெருக அவரைப்பெரியமதில் சூழ்ந்ததாகிய தங்கள் அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு போய்ப் பெரியமணிகள் பதித்தஆசனத்தில் வீற்றிருக்கச்செய்து.—(எ-று.) ()

செய்யவேண்டுவுவரன்முறையாவைபுஞ்செய்தா ... ... ...*
ரையநின்னடிதொழப்பெறுமருந்தவமியாதோ ... ... *
வையமியாவையும்புரந்தனமாயினுமறுமை... ... ... ...*
வெய்யதீவினையொழிந்தனமியாமெனவியந்தார் ... ... *

(இ-புரை.) செய்யவேண்டியஉபசாரங்களை யெல்லாஞ்செய்துஐயனேதேவரீருடைய திருவடிகளையின்று வணங்கும்படிநாங்கள்முன்செய்ததவம்யாதோ-உலகங்களையெல்லாம் காத்திருந்தோமாறுலும் மறுபிறப்பைத்தருவதாகிய கொடியதீவினையையின்றுதான் ஒழிந்தோமென்று சொல்லிச்சந்தோஷித்தார்கள்.--(எ-று.) (கூச)

அன்னமன்னவர்க்காசிசொற்றங்கையாலமைத்து ... ... ...*
மன்னுயிர்க்கினிதோர்குடைநீழலின்வகுத்தீர் .... ... ... *
பன்னுநூன்முறைதிறம்புறுதறனெறியபயந்தீ ... ... ...*
ரின்னுமொன்றுளதுமக்கெடுத்தியம்புவானியைந்தேம் ... *

(இ-புரை.) அவர்களவ்வாறுசொன்னபோது பிரணவிந்து என்கி ன்றமுனிவர் அந்த அரசரிருவர்களுக்கும் ஆசீர்வசனஞ்சொல்லி அவர்க ளைநோக்கிக்கையமைத்து ஒப்பற்ற ஒருகுடைநிழலிற்ப உலகத்துயிர்க ளுக்கெல்லாம் இன்பஞ்செய்தீர்கள் மனுவிதியாலேவர சாஸ்திரமு றைமாறுபடாமல தருமநெறியை விரதஞ்செய்தீர்கள் உங்களுககு நாம் சொல்லுவதொன்றிருககின்றது. —(எ-று.) (சுசு)

அதுகருத்துணர்ந்ததிருதிரரிபரற்ெடையோர் .. ... ...*
மதலைதோன்றினன்மாநிலத்துயிர்புரந்தளிப்பான் ... ... *
விதுமுடிச்சடையவனைபும்வேரிவண்டாற்றும் .. ... ...*
புதுநறுந்துளாயவனையுமொழித்துயிர்புரப்பான் ... ... *

(இ-புரை.) அவ்வாறுநாம்சொல்லுவதை உங்கள் கருத்தில அமை யும்படிதெரிந்துகொள்ளுங்கள்அதுதானென்னவெனில்இவ்வுலகத்துயி ர்களைரக்ஷிக்கும்படி அரியராகளுக்கு ஒருபுத்திரன் தோன்றினன்அவன் சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடைய பரமசிவனையும் தேனுடைய தாய்வண்டிசைபாடும் புதுமணமுள்ள துளவமாலையணிந்ததிருமாலையு ம்நீக்கி உயிர்களைரக்ஷிககத்தக்கவன்:---- (எ-று.) (சுஙு)

அவனுகைக்குமோரழிமதகக லுழிமாலயானை... ... ... ...*
புவனமுற்றுறவிடிபடுத்தண்டமேற்புரட்டி ... ... ... *
யிவர்தடந்திரைப்பிரளயநடப்புறின்னதிர்போப்க... ... ...*
கவர்துளைக்கரத்துறிஞ்சிநின்றுருயிர்காக்கும் ... ... ... *

(இ-புரை.) அக்கடவுளேறிச்செலுத்தந்தக்க மதநீர்காலுறு போலப்பொழிகின்ற பெரியயானையானது உலகமுழுவதும் அழிந்து போம்படி ஒலித்து அண்டத்தையும் மேல் கீழாகப்புரட்டி உயர்ந்த அ லைகளுள்ள சமுத்திரமேழுமொன்றாக ஊழிவெள்ளம் பெருகிவரும் போது எதிர்சென்று இரண்டுதுவாரமுள்ள துதிக்கையினால் அந்நீரை யெல்லாம் உறிஞ்சி உயிர்களைககாக்கும்.---(எ-று.) (சுஎ)

அன்றியின்னுமோராருமறைப்பொருளுளதறைவாங்... ... *
குன்றுயிர்த்தெழுமரகதக்கொழுங்கொடியுருவாய் ... ...*
மின்றிரித்தனமுததலைவேற்படைபொறுத்தாள் .. ... ... *
பொன்றிகழ்ந்திடுமேருவும்வையமும்புரந்தாள் ... ... ...*

# சூராதிகளொடுக்கப்,

## பொழிப்புரை

(இ-புரை.) இதுவுமன்றியின்னுமொருரகசியப்பொருளிருக்கின்றது அதென்னவெனில் சொல்லுகிறோம்மலையானது செழுமையுள்ளமரகதக்கொடியுருமாயுயிர்பெற்றெழுந்ததுபோன்றஉருவமுள்ளவளாய்மின்னலைமுறுக்கிவைத்ததுபோன்றமுத் தலைச்சூலப்படையினைத்தாங்கிக்கொண்டும்பொன்மயமானமகமேருவையும்உலகத்தையுங்காப்பவள்(எ-று.)

புரந்துமாநிலம்பலகைபுஞ்சுரிகையும்பொறுத்துக் ... ...*
கரந்துயல்லுயிரனைத்தையுமொருநெறிகாப்பாள் ... ... *
சுரந்தகங்கையஞ்சடையினருடனடந்தொகுத்தாள் ... ...*
பரங்குறித்திடிலவளலதுயர்ந்துளோர்பகரார் ... ... ... *

(இ-புரா ) இவ்வாறுஉலகத்தைக்காப்பதுமல்லாமல்கேடயமும்வாளும் கைகளிலேந்திக்கொண்டு உயிர்கள்தோறுமறைந்திருந்து ஒருமுறைகாப்பவள் சுரக்கும் நீருருவமானகங்காநதியணிந்திருக்கும் பரமசிவத்துடன் நடனஞ்செய்தவள் மேன்மையைக் குறிக்குமிடத்துப்பெரியோர்களாயிருப்பவர்கள்அவளையன்றிவேறொருவரையுஞ்சொல்லார்கள்.

அனையநூபுரத்தளிரடிதாங்குவாளரிக்குப் ... ... ... ...*
புனையுநான்மறைநாற்பதமெனுந்தவம்புரிந்த... ... ... *
சினவுவள்ளுகிரெனத்தவம்புரிந்ததுதிங்கள் ... ... ... ...*
கனலியீற்றெழுந்துருப்பினுமெதிருறீஇக்கவரும் ... ... *

(இ-புரா.) அத்தன்மையுள்ள காளிகாதேவியின் நூபுரமணிந்த தளிர்போன்ற திருவடிகளைத்தாங்குகின்றவாகனமாகிய சிங்கத்துக்குநான்குபாதங்களாயிருக்கும்படி நான்குவேதங்களுந்தவஞ்செய்து பெற்றுக்கொண்டன அந்தநான்குபாதங்களினிடத்தும் கூர்மையுள்ளநகங்ளாயிருக்கும்படி சந்திரன்தவஞ்செய்துபெற்றது ஊழிகாலத்தில் வடவாமுகாக்கினிகொதித்துவந்தாலும் எதிர்சென்று அதனையும்வாயில்போட்டுக்கொள்ளும்.—(எ-று.) (௩)

நுமக்குவேண்டியதிக்கதிநோக்கிமற்றினையோர்... ... ... *
தமக்குவேண்டியபூசனைவரன்முறைதந்து... ... ... ...*
சமர்த்தலைப்பகைகடந்துபுன்பிறவிநோய்தவிர்ப்ப... ... *
தெமக்குவேண்டியதிதுவெனமொழிந்தனனெழுந்தான்... ...*

(இ-புரை.) உங்களுக்குவேண்டியகதியாவது இந்த வாகனத்தேவர்களு க்குமுறைப்படிபூசைசெய்து போர்முகத்தில்பகையைவென்று பின்பு இந்தப்புன்பிறவியைத்தீர்த்துக்கொள்வதாகும் இவ்வாறு போதிக்குங்க டமை எமக்குவேண்டியதென்று சொல்லிஎழுந்தருளினார்.—(எ-று) ()

முனைவனேகியபின்னரிந்நால்வருமுயலாத் ... ... ... ...*
தனையர்பாலுலகளித்தனர்தவஞ்செயத்தணந்தார் ... ... *
புனையுமாமயில்வாரணம்வாளரிபுகர்மா ... ... ... ...*
நினையுநெஞ்சினரப்பதம்பெறுகுவானினைந்தார் ... ... *

(இ - புரை.) இவ்வாறு போதித்த திரணவிந்துவென்னு முனிவர் போனபின்பு அந்தநால்வரும் யோசித்துப் புத்திரர்களிடத்தில பூமிபா ரத்தைக்கொடுத்துவிட்டுத் தவஞ்செய்யக்கருதி மனைவாழ்க்கையை நீங்கி ப்போய் மயில் சேவல் சிங்கம் ஆனை இவைகளைத் தனித்தனி யொவ்வொ ருவன் மனதில் தியானித்துக்கொண்டு அவைகளின்பதவிபெற்றுக் கொ ள்ள நினைந்தார்கள்.--(எ-று.) (௱௨)

மஞ்சியங்கியபருப்பதவனத்திடைவைகிப் ... ... ... ...*
பஞ்சவக்கினிநாப்பணின்றருந்தவம்பயிலவார்... ... ... *
செஞ்சுடர்க்கதிர்பொழிமழையிரும்பனித்திவலை .. ... ...*
நஞ்செதிர்ப்பினுமந்நிலையலலதுநடுங்கார் ... ... *

(இ-புரை.) மேகங்கள்தவழும்படியான ஸ்ரீ சயிலவனத்தினிடத்தில் பஞ்சாக்கினி மத்தியில்நின்றுகொண்டு அருமையான தவஞ்செய்கின்ற வர்கள் சூரியகிரணம் பொழியுமழை பனிதுளி நஞ்சு இவைகளெதிர்த் தாலும் அந்நிலையில்நிற்பதல்லதுமேற்கூறியவைகளால்நடுங்காதவர்களா யிருந்தார்கள்---(எ-று) (௱௩)

இக்கணின்னவரருந்தவமியற்றிடுமெல்லைத் ... ... ... *
தொக்கநான்முகனரிமுதல்வானவர்துவன்றிப் ... ... ...*
புக்கியாமளைபுதல்வன்மற்றரியரன்புதல்வன் ... ... ... *
முக்கணன்றிருநடந்தொழக்கயிலையின்முன்னி ... ... ...*

# சூராதிகளொடுக்கப்
## பொழிப்புரை:

(இ-புரை.) இத்தஇடத்திலிவர்கள் அரியதவஞ்செய்து கொண்டிருக்கும்போது பிரமவிஷ்ணுமுதலாகிய தேவர்கள்ஒன்றாகக்கூடிச் சென்றதுமன்றிச் சுப்பிர மணியக்கடவுள் அரிகர புத்திரன் இவர்களும் பரமசிவனது நடனந்தரிசிக்கக்கயிலையிற்சென்று- (எ-று.) (௱ச)

தத்தமூர்தியக்கயிலையின்மருங்குறத்தணவா... ... ... ...*
வத்தனைத்திருநடந்தொழக்கயிலைவெற்படைந்தா .. ... *
ரித்தலைச்சிறைக்கலுழனுமன்னமுமெதிர்ந்த ... ... ...*
சித்திரக்கலாமயிலினையடைந்தனசெப்பும் ... ... ... *

(இ-புரை) தங்கள் தங்கள் வாகனங்கள் அந்தக்கயிலைச்சாரலிலிருக்கும்படிநீங்கிப்பரமசிவனுடைய நடனத்தைத்தொழும்படி கயிலையிற்சேர்ந்தார்கள் இவ்விடத்திலிருந்தகருடனும் அன்னமும் எதிரிற்கண்ட சித்திரமான தோகையினையுடைய மயிலினிடத்திற்போய்ச்சொல்லுகின்றன.—(எ-று) (௱டு)

சாகதீவகத்தரசரோர்நாலவருந்தழுவித் ... ... ... ... *
தோகையுங்கொடிச்சேவலுந்தூற்கைவாளரியும் .. ... ...*
வேகவெம்பரிசாத்தனின்றுகைக்கும்வெங்கரியு ... ... *
மாகவேண்டிநின்றருந்தவமழன்முகத்திழைப்பார் ... ...*

(இ-புரை.) சாகதீவிலிருக்கும் அரசர்கள்நால்வருங்கூடி மயிலுஞ்சேவலும்காளிவாகனமாகிய சிங்கமும் வேகமுள்ளகுதிரையையுடைய சாத்தன்செலுத்துகிறயானையுமாக வேண்டுமென்று பஞ்சாக்கினிமத்தியில் தவஞ்செய்கின்றார்கள்.—(எ-று) (௱சு)

வருடநாற்பதினாயிர்ஞ்சென்றனமதியீ... .. ... ... ...*
ருட்ரும்பதமுங்களுக்கிழக்குநாளடுத்த ... ... ... ... *
பொருவினும்பதமின்றுகொளுனேகொல்புகுவார்... ... ...*
வெருவரும்புனல்வருமுனமணைசெயல்வேண்டும் ... ... *

(இ-புரை.) நாற்பதினாயிரம்வருடஞ்சென்றன அருளால் பெற்றிருக்கும்உங்கள்பதம் உங்களுக்கு இழக்கும் நாள் அடுத்தன ஒப்பில்லாத உங்கள் பதத்தில் இன்றோநாளையோவருவார்கள் அஞ்சும்படியான வெள்ளம்வருவதற்குமுன் அணைகட்டவேண்டும்.—(எ-று) (௱எ)

என்னக்கூறியகலுழனுமன்னமுமேக... ... ... ... ...*
வன்னக்கார்மயின்முதலியவாகனந்குழுமித் ... ... ... *
தின்னச்சீறியவாமெனுமடுசினந்திருகிக் ... ... ... ...*
கன்னற்போதினிலவருறைக்கடுகினகனலா ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுகூறியகருடனும் அன்னமும்போய்விட மேக நிறமுள்ளஅந்தமயில்முதலாகியவாகனங்கள்ஒன்றாகச்சேர்ந்துதின்றுவிடுமென்று சொல்லும்படியான கோபம்கொண்டுமனங்கொதித்து ஒருநாழிகைப் பொழுதுக்குள்ளாக அவர்களிடத்திற்சென்றன.---(எ-று.) ()

கனல்விழித்தனவனமெலாம்பொடித்தனகதுவி... ... ... *
யனன்முகத்துநீரருந்தவழிழைத்தவாறறைவி ... ... ...*
ரனவுரப்புளைசெவிபுகநால்வருமேங்கி... ... ... ... *
மன்னடுக்குறவரன்முறைநினைந்தவாவலித்தார் ... ... ...*

(இ-புரை.) அவ்வாறு சென்றவாகனங்கள் தீப்பொறிசிந்தும்படி நோக்கி அந்தவனத்தையெல்லாம் முறித்தனவாய்நெருங்கி நீங்கள் நால்வரும் அக்கினிமத்தியில் தவஞ்செய்யுங் காரணம்யாது சொல்லுங்களென்ன அதட்டுகிறசொற்கள் தங்கள்காதில்நுழையவேஅவர்கள்ஏக்கங்கொண்டு மனம்நடுங்கிக் கிரமமாகத்தாங்கள் தியானித்துக்கொண்டிருக்கும் முறைமையைச்சொன்னார்கள்.---(எ-று.) • (ளகூ)

அச்சொற்கேட்டலுமயின்முதற்கூடியவனைத்தும்... ... ...*
மிச்சைமாதவம்புரிந்தருள்ம்வந்தனைவெகுளா ... ... ... *
மிச்சையெம்பதம்விரும்பினீராதலினினிநீர்... ... ... ...*
கொச்சைமாகணக்குலத்தொடுங்கலத்திரொன்றுரையா... ... *

(இ-புரை.) அந்தச்சொல்லைக்கேட்டமயில்முதலாகிய நான்குஞ் ஞானநெறியாகியபெரியதவஞ்செய்கின்ற அரசர்களைநோக்கிக்கோபித்து இச்சையுள்ள எங்கள்பதவிகளை விரும்பினீர்களாகையினால் இனி நீங்கள் கொச்சையாகிய பெரியபூதகணங்களுடன் சேர்ந்திருக்கக்கடவீர்களென்று சாபங்கூறி.---(எ-று.) (ளய)

மீண்டடைந்தனகயிலையின்மருங்குறவேந்தர்... ... ... ...*
மாண்டவெங்கணத்தலைவராய்வதிந்தனர்மதித்து... ... ... *

பொழிப்புரை:

மாண்டுமாமயின்முதலியவவற்றொடுமெளியேம் ... ... ...*
வேண்டுமாதவமுறுங்கொலென்றிரந்தனர்விளம்ப ... ... *

(இ-புரை) மயில்முதலாகிய அந்தநான்கும்திரும்பிவந்து கயிலையினிடத்திருக்கப் பூதகணங்களாயிருக்கிற அரசர்கள்நால்வரும் அக்கயிலையிலிருக்குமயில்முதலானவைகளைக்கண்டு அடியேங்கள்விரும்பியதவங்களுக்குக்கிடைக்குமாவெனறிரந்தார்கள்.---(எ-று) (௱௰௧)

மயிலுஞ்சேவலுமுதலியமனநெகிழ்ந்திரங்கிக் ... ... ...*
கயிலைமாகணத்திருந்துநீர்நாள்பலகழித்தால்... ... ... *
முயலுறுந்தவப்பயனெலாமுற்றுதிரென்னப் ... ... ...*
புயனிறக்கணமண்டவாபரணனிற்புகுந்த... ... ... ... *

(இ-புரை.) மயிலுஞ்சேவலும் முதலாகியதுகள்மனமிளகி யிரங்கிநீங்களிந்தக்கயிலையிலிருக்கும் கணங்களுடன் அநேகநாளிருந்தால் நீங்கள்கருதிய தவப்பயனெல்லாம் அடைவீர்களென்றுசொல்ல மேகநிறமுள்ள அந்தக்கணங்கள் அண்டவாபரணனாகிய பரமசிவம்வீற்றிராநின்ற கயிலையங்கிரியிற் சேர்ந்திருந்தன.—(எ-று.) (௱௰௨)

மாயனூர்தியுமலரயனூர்தியும்வனத்தி ... ... ... ...*
னேயநந்தவமழிப்பதற்கியற்றினவென்னத்... ... ... *
தீயசிந்தையிற்கிடத்தியக்கணத்தவர்சினவி ... ... ... ...*
மேயதோகையுங்கருடனுமுடற்றுபோர்விளைத்தார்... ... *

(இ-புரை.) விஷ்ணுவின்வாகனமும் பிரமன்வாகனமும்வனத்தில் பொருந்திய நம்முடையதவத்தைவிழக்கும்படி செய்தனவென்று பழியைத்தங்கள் சிந்தையில்வைத்துக்கொண்டு அந்தக்கணங்கள் கோபங்கொண்டுமயிலுங்கருடனும்போர்செய்யமூட்டிவிட்டார்கள்.— ()

முக்கணன்றிருநடந்தொழுமுதன்மையோர்யாரு ... ... ...*
மக்கணத்தினிற்றம்பதியடைந்தனரதன்பின்... ... ... *
மிக்கநால்வருமறுமுகனிணையால்விரிநீர் ... ... ... ...*
தொக்கமாநிலத்தசுரரிற்றோன்றினர்தொடர்பால் ... ... *

(இ-புரை.) பரமசிவனது நடனதெரிசனஞ்செய்யப் போயிருந்தவிஷ்ணுமுதலானவர்கள் அப்பொழுது தங்கள்பதவியிற் போய்ச்சேர்ந்தார்கள் அதன்பின்பு அந்த நான்குகணத்தவர்களும் ஊழ்வினைத்தொடர்பினுல்சுப்பிரமணியக்கடவுள் கட்டளையின்படி சமுத்திரஞ்சூழ்ந்தஉலகிலிருக்கும் அசுரர்களிற்பிறந்தார்கள்.—(எ-று.) (௱ய௪)

ஆயதன்மையினசுரரிற்றோன்றினரொன்றால் ... ... ...*
சேயவானவர்தங்களைத்தீமைசெய்தொறுப்பா... ... ... *
னேயகாரணமென்கொன்மற்றியம்புதியென்றண் ... ...*
மாயைதன்மகளயமுகிக்குணர்த்துவாண்மறித்தும்... ... *

(இ-புரை.) அந்தக்காரணத்தினுல் அசுரர்களிற்பிறந்தார்களானுல் தேவர்களுக்குத் தீங்குசெய்துவருத்திய காரணம்யாதோ அதனையுஞ் சொல்லென்றுள் மாயையானவள் தன்மகளாகிய அயமுகிக்குமீட்டுஞ் சொல்லுகிறுள்.—(எ-று.) (௱யரு)

பூதராயிவர்கணைத்தொடும்பொருந்தியமேனுட் ... ... *
காதுவெஞ்சினத்தசுரருமமரருங்களத்தின்... ... ... ...*
மோதவானவர்பேரமரிழந்தனர்முறிந்தார்... ... ... ...*
பாதுகாப்பியொன்றிவரைவந்தடைந்தனர்பதறி... ... ... *

(இ-புரை.) கயிலையிலிருக்கும் பூதகணங்களுடன் இந்தநால்வருங்கணங்களாயிருந்த முன்னுளில் கொல்லும்படியான கொடியகோபத்தையுடைய அசுரரும்தேவரும் போர்க்களத்தில் யுத்தஞ்செய்யும்போது தேவர்கள்தோற்றோடிப்போனுர்கள் அவ்வாறுதோற்றோடினதேவர்கள் எங்களைக்காக்கவேண்டுமென்று இவர்களைவந்தடைந்தார்கள்.—(எ-று.)

அன்றுவானவர்க்குதவுவானகலிடத்தடைந்து ... ... ... *
குன்றுருத்தெனக்குவலயப்பூதரிற்குழுமிச் .. ... ... ...*
சென்றுருத்தெழுநிருதர்வெஞ்சேனையைச்செருவிற் ... *
கொன்றுவானுலகிந்திரற்குடியிருத்தினரால்... ... ... *

(இ-புரை.) அந்நாளில் தேவர்களுக்குஉதவிசெய்ய இவ்வுலகத்தில்வந்து மலைகளுருவங்கொண்டதுபோலப் பூதலத்திலிருக்கும் பூதர்களுடன் சேர்ந்துபோர்செய்யச்சென்று கோபித்தெழுகின்றஅசுரர்சே

னையைக்கொன்று இந்திரனைத் தேவலோகத்தில் குடியிருத்தினார்கள் —(எ-று.) (௱௰௭)

அந்தரத்தவர்க்குதவிவான்கயிலையையடைந்தார் ... ... *
சந்தவார்புயத்தகுவர்கோனிடரொடுந்தமித்து ... ... ...*
வந்திரங்கியவண்டவாபரணனைவழுத்தி ... ... ... ...*
யெந்தைகேண்மதியெம்முறையுளதெனவிசைப்பான் ... *

(இ-புரை.) அந்தப்பூததலைவர்கள்நால்வரும் இவ்வாறுதேவர்களுக்குதவிசெய்து சிறப்புள்ளகயிலைக்குச் சென்றார்கள் அதற்குமேல்சந்தனக்குழம்புபூசியபெரியதோளையுடைய அசுரேந்திரனானவன் இடருடன்தனித்துவந்துஇரக்கங்கொள்ளும்பரமசிவனைத்துதித்துஎம்மையனே எங்கள்குறையொன்றிருக்கின்றது அதனைக்கேட்டருளவேண்டுமென்று சொல்லுகிறான்—(எ-று.) (௱௰௮)

நின்னதாணையினிலைபெறுபூதமோர்நால்வ ... ... ... *
ரென்னதாகியசேனையையுயிர்செகுத்திறுத்துப் ... ... ...*
பின்னரீங்கிவணடைந்தனரென்றனன்பிழையோர்ந் ... ...*
தன்னகாலையிற்பூதநாயகன்வெகுண்டானால் ... ... ... *

(இ-புரை.) சுவாமிகளுடையஆக்கினையிலால்விளங்குகின்றநாலுபூதர்களும் என்னுடையசேனையை உயிர்கொன்றுபின்புஇங்குவந்துசேர்ந்தார்கள் என்றுசொன்னான் சுவாமியானவர் அந்தக்குற்றத்தைத் திருவுளத்திற்கொண்டுகோபங்கொண்டார்.—(எ-று.) (௱௰௯)

வருதிர்நால்வருநீவிரென்னுணையைமதியா ... ... ... *
தொருவிவானவர்க்குதவிசெய்தவுணரையொறுத்தீர்... ... *
குருதிவாளெயிற்றசுரர்வெங்குலத்திடைதோன்றித் ... ...*
தருவினாட்டவர்க்கிடும்பைசெய்தகனிலஞ்சரிப்பீர் ... ... *

(இ-புரை.) கோபங்கொண்ட சுவாமியானவர் அவர்களைநோக்கிப் பூதர்களேயிங்குவாருங்கள் நீங்கள்நால்வர்களும் நம்முடையஆக்கினையை மதிக்காமல் நீங்கித்தேவர்களுக்கு உதவிசெய்து அசுரர்களைக் கொன்றீர்கள் ஆதலால் உதிரந்தோயந்தவாள்போன்ற பற்களையுடை- கொடிய அசுரர்குலத்திற் பிறந்துகற்பகவிருட்சமுள்ள பொன்னாட்டி

விருக்குந் தேவர்களுக்குத் துன்பஞ்செய்து விசாலமாகியபூலோகத்தி ல்சஞ்சரிக்கக்கடவீர்கள்.—(எ-று.) (௱உ௰)

என்றுரைத்தனனண்டவாபரணன்மற்றிவரு ... ... ... *
மன்றவன்சொலுஞ்சாபத்தாலம்பரத்தவர்க்குக் ... ... ...*
கன்றுவெஞ்சினத்திடும்பைமுற்றிழைத்தனர்கண்டா ... *
யன்றுதொட்டவரிழைத்திடுமிடும்பையின்றகன்ற ... ... *

(இ-புரை.) பரமசிவன் இவ்வாறு சாபமிட இவர்கள்அவருடைய சாபத்தினால்தேவர்களுக்கு வெம்பிய கோபத்துடன் மிகுந்த துன்பத் தைச்செய்தார்கள் அவ்வாறுஅவர்கள் அந்நாள்முதல்செய்த துன்பம்இ ப்போது நீங்கிவிட்டன.—(எ-று.) (௱உக)

இவணிகழ்ந்தனவின்னணமீங்கிதன்மேனாட்... ... ... ...*
டவறின்மாதவமியற்றியசாகதீவரச... ... ... ... ... *
ரவனைமாதவமழித்தனதிருவுளத்தடையாக் ... ... ... *
கவிரொளிக்கழன்முருகவேள்வெகுளியிற் ழறும் ... ...*

(இ-புரை.) இத்தன்மையனவாக இங்கேநடந்தன இதற்குமுன்னா ளில்வழுவுதலில்லாததவஞ்செய்தசாகத்தீவுஅரசர்களைஇந்தப்பூதர்கள்த வத்தினின்றும் அழித்ததைப்-பார்க்கும் பார்வையையபகரிக்கின்ற ஒளி பொருந்தியபொற்கழலையுடைய சுப்பிரமணியக்கடவுள் திருவுள்ளத்த த்துக்கோபத்துடன்சொல்லுகின்றார்—(எ-று.) (௱உஉ)

கொடியெனப்பிடித்துயரியசேவலைக்கொழுங்கார் ... ...*
நெடியதோகைமாமயிலினை நீவிர்போயுருத்து...... ... *
முடிவின்மாதவமுயற்சியையொழித்தனிரதனாற்... ... ...*
கடியபாதகமடைந்தனிரெனமனங்கறுத்தான் ... ... ... *

(இ-புரை.) கொடியாகப்பிடித்துயர்த்த சேவலையுஞ்செழுமையு ள்ளமேகம்போல நீண்டகலாபத்தையுடைய மயிலையும் நோக்கி நீங்க ள்போயிக்கோபித்து முடிவில்லாததவமுயற்சியை ஒழித்தீர்கள் அத னால்கொடியபாவம் அடைந்தீர்களென்று திருவுளத்திற் கோபங்கொ ண்டருளினார்.—(எ-று.) (௱உங)

பொழிப்புரை

இற்றைநாண்முதலெம்மடிதாங்கலையினிநீ... ... ... ...*
கொற்றவார்கொடியல்லையென்றிவற்றினைக்குறித்துச் ... ... *
சொற்றவாசகங்கேட்டுழிக்கொடியொடுந்தோகை ... ...*
வெற்றிவேலவற்பணிந்துநின்றினையனவிளம்பும்...... ... *

(இ-புரை.) மயிலைநோக்கி இன்றுமுதல்இனிநீநம்மைத் தாங்கவேண்டுவதில்லை சேவலைநோக்கிநீகொடியா யிருப்பதூஉம் வேண்டியதில்லையென்று இவ்விரண்டினையுங்குறித்துச்சொன்னவார்த்தையைக்கேட்டவளவில் சேவலும்மயிலும் வெற்றிபொருந்திய வேலாயுதக்கடவுளைப்பணிந்து இத்தன்மையானவார்த்தைகள் சொல்லுகின்றன.—(எ-று.) ()

இன்றுகாறுநின்னிணையடித்தொண்டுபூண்டிருந்தே ... ... *
மென்றுநின்னடிபுகுதுவதெனமனத்துணரோம் ... ... ...*
வென்றிபூத்தொளிர்விளங்கிலைவேற்படைப்பெரும ... ... *
வொன்றிவேழையேம்புரிகுவதுரைத்தியென்றிரப்ப ... ...*

(இ-புரை.) இன்றுவரையில் சுவாமிகளுடைய திருவடிகளுக்குத்தொண்டுசெய்துகொண்டிருந்தோம் இனியெந்நாள் தேவரீருடையதிருவடிகளைச்சேருவதென்று மனதிலறியோம்-செயங்கொண்டுவிளங்குகின்ற வேலாயுதமேந்திய பெருமானே அடியேங்கள் இனிச் செய்யத்தக்கதுயாதோ உரைத்தருளவேண்டுமென்றிரப்ப.—(எ-று)(௱௨௫)

கஞ்சிமாநகரடைந்துநீரொமையுணர்கருத்தான் ... ... ...*
மஞ்சுதோய்வரைமாதவம்புரிகுதிர்புரிந்தாற் ... ... ... *
றஞ்சமெம்மடிதருகுதுமெனச்சென்றுசாரா ... ... ...*
வஞ்சிலம்படிநினைந்துநின்றவனடியடைந்த ... ... ... *

(இ-புரை.) காஞ்சிநகரத்துககுச்சென்று அங்கிருக்குமலைமேலிருந்து நம்மைத்தியானித்துக்கொண்டு தவஞ்செய்யுங்கள்செய்தால்தஞ்சமாக நம்முடையதிருவடியைத் தருகிறோமென்று அருள்செய்ய அவ்வாறே யவ்விரண்டுஞ்சென்றுசேர்ந்து சுப்பிரமணியக்கடவுளுடைய அழகியசிலம்பணிந்ததிருவடிகளைத்தியானித்துக்கொண்டிருந்துஅவர்திருவடிகளைச்சேர்ந்தன.—(எ-று) (௱௨௬)

பயிலுஞ்சூரனும்பதுமனுமியற்றியதவத்தான் ... ... ...*
மயிலுஞ்சேவலுமாயினர்வாளரிமுகனு ... ... ... ... *
மியலுந்தம்பியுநினைந்தனமுடிப்பதற்கெண்ணிப் ... ...*
புயலுண்டேகுறுகயிலையினந்திபாற்புகுந்தார் ... ... *

(இ-புரை.) சூரனும்பதுமனும்செய்ததவத்தினால் மயிலுஞ்சேவலுமாயினார்கள்கொலைத்தொழிலசெய்யுஞ்சிங்கமுகனும் அவனுக்குத்தம்பியும்தாங்கள்நினைத்தவற்றைமுடிப்பதற் கெண்ணிமேகங்கள்தவழுங்கயிலையங்கிரியிலிருக்கும் நந்திதேவரிடத்திற் சேர்ந்தார்கள்.—(எ-று)

நந்திநாதநின்னளிர்கழற்பங்கயமடைந்தேம் ... ... ... *
புந்திகூர்தவநாள்பலகழிதரப்புரிந்தேம்...... ... ... ...*
விந்தையூர்தியும்வெண்ணிறச்சூர்ப்படைச்சாத்தன் ... ... *
றந்தியூர்தியுமாகுவமெனமனந்தரித்து ... ... ... ...*

(இ-புரை.) நந்தியெம்பெருமானேதேவரீருடையதிருவடித்தாமரைமலர்களையடைந்தநாங்கள்ஞானமிகுந்ததவம் பலநாள்கழியச்செய்தனம்காளிகாதேவியின்வாகனமும்சூலப்படையுள்ளசாத்தாவின் வெள்ளையானையும் ஆகுவோமென்று மனதிலெண்ணிக்கொண்டு.—(எ-று)()

(எண்ணிக்கொண்டுதவஞ்செய்தனமெனக்கூட்டுக:)

அளியமாற்றியவருந்தவமவப்படாதருளி ... ... ... ...*
யொளியநீறணியெம்பிரானருடியென்றுரைப்ப ... ... *
வெளியவாளெயிற்றிவர்முகநோக்கினன்வியவாத் ... ... ...*
தெளியுநான்மறைநந்திமற்றினையனசெப்பும் ... ... ... *

(இ-புரை.) தேவர்கிருபைக்குப் பாத்திரர்களாகிய நாங்கள்செய்ததவமானது அப்பிரயோசனமாகாவண்ணம்அருளிஒளியுள்ளவிபூதிஅணிந்த எம்பெருமானே அந்தவரம்அடியேங்களுக்கு அருள்செய்யவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்ய-வெண்மைநிறமுள்ளதந்தங்கள்பொருந்திய வாயினையுடைய இவர்கள்முகங்களை நோக்கிச் சந்தோஷித்துநான்குவேதங்களையுந் தெளிந்த அந்தநந்திதேவர் இவ்வார்த்தைசொல்லுகிறார்.—(எ-று) (ரஉக)

நீறணிந்தருளெம்பிரானேறியநெடுங்கோட் ... ... ... *
டேறவர்க்குளவூர்திகட்கிருங்கதிகொடுக்கும்... ... ... ...*

பொழிப்புரை:

காறுமெம்முழைழயிருத்திரொன்றுரைத்தனன்கருதி ... ... *
வேறுகொண்டிலரிருவருந்தமதுளம்வியந்தார் ... ... ...*

(இ-புரை.) விபூதியையணிந்தருளிய பரமசிவம்ஏறிச்செலுத்தும் பெரியகொம்பினையுடைய விடைத்தேவராகிய நந்திதேவர் அவருக்குள்ள வாகனங்களுக்கு மோக்ஷங்கொடுக்குங்காலமட்டும்நம்மிடத்திலிருங்களென்று சொன்னார் அந்தவார்த்தைகேட்ட அவ்விருவரும் ஒருமித்து மகிழ்ந்திருந்தார்கள்.(—எ-று) (௱௩ய)

இப்பெருங்கதைகேட்டுழியயமுகியென்பாள் ... ... ... *
கப்பிளந்தனச்சுமையுடைத்தாயொடுங்கவைக்கோட் ... ...*
டொப்பருந்திறலேற்றினூர்திகளனைத்துந் ... ... ... *
தப்பில்வான்கதிபெறுவனசாற்றெனச்சாற்றும் ... ... ...*

(இ-புரை.) இந்தச்சரித்திரத்தைக் கேட்டபோது அசமுகியென்பவள் இரண்டு பிரிவாகத் தோற்றுகின்ற முதிராத தனபாரமுள்ள தன்தாயாகிய மாயையுடன் பிரிவாகிய கொம்புள்ள ஒப்பற்ற வெற்றி பொருந்திய நந்திதேவரால் அந்தவாகனங்களெல்லாம் பழுதில்லாத சிறந்த கதியடையும் வகைகளைச் சொல்லவேண்டுமென்ன அந்தமாயைசொல்லுகிறாள்.—(எ-று) (௱௩யக)

வெள்ளியங்கிரிக்கோட்டகமேவருமிறைவன்... ... ... ...*
வள்ளிநுண்மருங்குமையிடைத்துர்க்கையைவருத்திப் ... ...*
புள்ளிவண்டறைதுளவணிமுகிலிடைப்புலவு ... ... ... *
னள்ளிலைப்படைச்சாத்தனைவருத்தினனதுநாள் ... ... ...*

(இ-புரை.) வெள்ளிமலைச்சிகரத்திலிடத்து வீற்றிருக்கும் பரமசிவன் பூங்கொடியொத்தநுண்ணிய இடையினையுடைய பார்வதிதேவியாரிடத்திருக்கும் துர்க்கையைவருவித்துப்புள்ளிகள்பொருந்தியவண்டிசைபாடிக்கொண்டிருக்கும் துளசிமாலையணிந்த விஷ்ணுவினிடத்திலிருக்கும் சாத்தனையும்வருவித்தார்.—(எ-று.) (௱௩உ)

{ புலவூன் - பகைவருடல் மாமிசம்பொருந்திய
சூலாயுதமுள்ளசாத்தனென்க }

இணையர்போற்றனரெம்பிரான்றிருவடியேத்தி ... ... ...*
வினையவூர்திமற்றெங்களுக்கருளெனவேண்ட... ... ... *
வனையவேற்றிணையழைத்திவர்க்கூர்திநீயருள்வா ... ... *
யெனவுரைத்தலுமெழுந்துவலித்துணைமருப்பிடபம் .. ... *

(இ-புரை.) பரமசிவன்வரவழைக்கவந்த இவ்விருவர்களும்நம்பெருமான்றிருவடிகளைத் துதிசெய்து வினையமுள்ள வாகனங்கள் அடியேங்களுக்கு அருள்செய்யென்று வேண்ட-பரமசிவன்நந்தி தேவரையழைப்பித்து நீயிவர்களுக்குவாகனங்கள் கொடுவென்றருளினவுடன் அங்கிருந்ததிறமுள்ள இரண்டாகிய கொம்புகளையுடைய இடபத்தேவர் என்றவாறு. (சாஙங)

அருவிமால்வரைக்கயிலையினருகுறச்சரிக்குந் ... ... ... *
திருகுசீற்றவெஞ்சீயமொன்றிழிமதச்செருக்கி ... ... ...*
னெரிவிழிக்கரத்தந்தியொன்றீங்கிவர்க்களிப்பக் ... ... *
கரியுமத்திறலாளியுந்தனிமனங்கவலா .. ... ... ... ...*

(இ-புரை.) அருவிநீர்விழுகின்ற பெரியகயிலையங்கிரியின் சாரலில்இடைவிடாமல் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் மாறுபடும்படியான கோபத்தையுடைய ஒருசிங்கத்தையும் மதநீரொழுகும்படியான செருக்கினையும் தீப்பொறிக்கும் கண்களையும்துதிக்கையினையுமுடைய ஒருயானையினையும் இவர்களுக்குக்கொடுத்தவளவில் அந்தயானையும்வெற்றியுள்ளசிங்கமும்தனித்தனி மனதில்துயரங்கூர்ந்து.—(எ-று.)(சாஙச)

இடபநாயகயாங்களிக்கயிலையினிருந்துன் ... ... ... ...*
படரொளிப்பதம்பெறுகுவானருந்தவம்பயின்றே... ... *
மிடையினீங்கிதுபலித்தவாறெதுவெனவிசைப்ப... ... ...*
வடன்மருப்புடைவிடையவர்க்கின்னனமறையும் ... ... *

(இ-புரை ) நாங்களிந்தக்கயிலையிலிருந்துதேவருடைய திருவடியை அடைய அரியதவஞ்செய்தோம் அப்படியிருக்கமத்தியிலிந்தவாறு நேரிட்டகாரணம்யாதெனவினவ உறுதியானகொம்புகளுள்ள விடைத்தேவர் அவர்களுக்குச்சொல்லுகின்றார்.—(எ-று.) (சாஙரு)

## சூராதிகளொடுக்கப்,

### பொழிப்புரை:

சேயகாலமற்றிணையவர்க்கூர்தியாய்த்திரிந்து ... ... ... *
போயபின்கதியளிக்குதும்போமினென்றிவரை ... ... ...*
யேயபின்னர்மற்றவர்க்கவையூர்தியாயிருந்து... ... ... *
மாயிரும்பதமேற்றினாலடைந்தனமகிழ்ந்து... ... ... ...*

(இ-புரை.) நெடுங்காலம் நீங்களிவர்களுக்குவாகனமாய்ச் சஞ்சரித்துக் காலஞ்சென்றபின் உங்களுக்குக்கதிகொடுக்கிறோம் நீங்கள்போங்களென்று சொன்னபின்பு துர்க்கைக்குஞ் சாத்தாவுக்கும் அவைகள் வாகனங்களாயிருந்து அதன்பின்பு நந்தி தேவரால் மோக்ஷம் பெற்றன.—(எ-று.) (௱௩௬)

ஏறூர்திமற்றிலமெனவிருவருமெதிர்ந்து ... ... ...*
கூறுநான்மறையேற்றொடுரைத்தனர்குறுகி... ... ... *
நீறிலங்கொளிநந்திதன்னுளத்தொடு நினைந்தான் ... ... ...*
வேறுகொண்டிவரிருவரைக்கொடுத்தன்னவிரும்பி ... ... *

(இ-புரை.) துர்க்கையுஞ்சாத்தாவும்நந்திதேவரிடத்தில் சென்றுநாங்கள்இப்போதுவாகனமில்லாதவர்களாயிருக்கின்றோம்என்றுசொல்ல விபூதிபிரகாசித்துக்கொண்டிருக்கும்திருமேனியையுடையநந்திதேவர் தனித்திருந்து தம்முடைய திருவுள்ளத்தில்ஆலோசித்துஇந்தஇருவரையும்அவர்களுக்குவாகனமாகக்கொடுத்தருளினார்:(எ-று.) (௱௩௭)



சூராதிகளொடுக்கமுற்றியது.





உ

வேலுமயிலுந்துணை.

# உபதேசகாண்டம்.

## அயமுகிவரலாற்றுப்படலம்.



ஈதுகேட்டுநின்றயமுகிபின்னருமினிநீ ... ... ... ...*
தாதுவார்குழலன்னையென்னிலைசொலத்தருமேன் ... ... *
றோதவோதுவன்கேண்மதியென்றனளுரைப்பாள் ... ......*
சீதவார்பெருங்கடலகத்துளதொருதீவு... ... ... ...| *

(இ-ள்.) இவ்வாறுமாயைசொன்னதைக்கேட்டஅயமுகியானவ ள்பின்னும்மாயையினைநோக்கிமகரந்தநிறைந்தநீண்டஅளகத்தையுடை ய அன்னையேநீஎன்னுடைய பூர்வநிலையையும் சொல்லவேண்டுமென் ன-மகளே சொல்லுகிறேன்கேள்குளிர்ச்சிபொருந்தியகடலின் மத்தியி லொருதீவிருக்கின்றது.—(எ-று.) (க)

தேங்குதண்புனற்கிடந்தகோமேதகத்தீவின் ... ... ... *
வாங்குநான்மறைவசிட்டனென்றுளனொருமறையோ... ... *
னாங்கவன்றனிச்சுவேதையைவேட்டனனவள்பா ... ... ...*
லோங்குமாதவத்துதித்தனள்சித்திரரேகை... ... ... ...*

(இ-ள்.)நிறைந்துகுளிர்ச்சியுள்ள நீரினையுடையசமுத்திரத்தின் மத்தியிலிருக்கும் அந்தக்கோமேதகத்தீவினிடத்திலநான்குவேதங்களை யுமுணர்ந்தவசிட்டனென்று ஒருபிராமணனிருந்தான்அவன்ஒப்பில்லா தவளாகிய சுவேதையென்பவளை விவாகஞ்செய்துகொண்டான் அந்தச் சுவேதையென்பவளிடத்தில் மிகுந்ததவத்தால் சித்திரரேகையென்கிற ஒருபெண்பிறந்தாள்.—(எ-று.) (உ)

அழகெலாந்திரண்டோருருக்கொண்டனவனையாள் ... ... *
குழவிமானிளம்பிடியெனத்தவழ்தொறுங்குழைவாள் ... *
மழலைவாய்மொழிக்குதலையிற்கேட்பினுமாறுந் ... ... ...*
தழையுலர்ந்தனவாயினுமரும்பினதழைக்கும்... ... ... *

# அயமுகிவரலாற்றுப்.

பொழிப்புரை

(இ-புரை.) சௌந்தரியமெல்லாந்திரண்டு ஒருவடிவங்கொண்டதையொத்தவள் அவளுடையவாய்மொழியாகிய குதலைச்சொல்லைக்கேட்டாலும் தழையுலர்ந்த மரங்களுந்தழைந்து அரும்புவிடும். (எ-று)(௩)

குழைத்தசெம்பொனாலியற்றியபுனைந்தகூன்சிலம்பு ... ...*
தழைத்தசில்லொலிகலிப்பறத்தளர்நடைபயின்று ... ...*
விழைத்தமாதவத்தன்னைகண்களித்தனளிருப்ப ... ... *
மழைத்தவார்குழலேழ்வயதுற்றனள்வளர்நாள் ... ... ...*

(இ-புரை.) ஓடவிட்டசெம்பொன்னாற் செய்யப்பட்டு அலங்கரித்தவளைந்தவடிவாகிய சிலம்பானது தழைத்த ஓசையாக மெல்லென்ன ஒலிக்கும்படி தளர்நடைபயின்று தவஞ்செய்துபெற்றதாய்கண்களித்திருக்கும்படி மேகம்போன்றகரிய அளகத்தையுடைய வளராய்வளர்ந்து ஏழுவயது அடைந்தாள்—(எ-று.) (௪)

அனையதீவகத்தயல்கிளர்ந்துளதொருநகரந் ... ... ... *
தனையுரைத்திடிற்றயங்குபூசக்கரமதன்பா ... ... ... ...*
னினையுநான்மறைக்குலத்தரிசன்மனோர்நெறியோன் ... ...*
மனைவயிற்றிடைத்தோன்றினனொருதனிமதலை ... ... ...*

( இ-புரை. ) மேற்சொல்லிய தீவுக்குச் சமீபத்தில் ஒருநகரமுண்டு அதன்பெயரைச் சொல்லுமிடத்தில் விளங்குகின்றபூச்சக்கிரமென்றுசொல்லப்படும் அந்நகரத்தினிடத்தில் பிராமணகுலத்தனாகிய அரிசன்மனென்பவனுடைய மனைவிவயிற்றினிடமாக ஒருபுத்திரன் பிறந்தான்.—(எ-று.) (௫)

புனிதமாதவன்புண்டரீகப்பெரும்பெயரான் ... ... ...*
றனிமறைப்பெருந்தலைவனத்தையலைமணந்தா ... ... *
னினிதுகொண்டுபோய்த்தனதகத்திருத்தினனிவளை ... ...*
வனைகனங்குழைபுதுவனப்பொருங்குறவளர்வாள் ... ... *

(இ-புரை.) பரிசுத்தமானஒழுக்கமுள்ள அந்தப்பிராமணன்பெயர்புண்டரீக சன்மனெனப்படும்வேதத்துக்குத் தலைமையானவன் அவன் அந்தச்சித்திரரேகை யென்பவளைவிவாகஞ்செய்துகொண்டு போய்த்தன்வீட்டிற்சேர்த்தான் அவள்அதுமுதல் புதுமையானசௌந்தரியமெல்லாம் ஒருங்காகச்சேர்ந்திருக்கும்படி வளர்கின்றாள்.—(எ-று.) (௬)

எரியுநஞ்சமுமமுதமுமெடுத்துறக்குழைத்துப் ... ... *
பரிவினீட்டினகிடைத்தனவாமெனப்புதைத்த ... ... ...*
வரிபரந்தனவயல்பிறழ்ந்தணிகுழைநடந்த ... ... ... *
கரியவாயினவெளியவாயினதடங்கண்கள்... ... ... ...*

(இ-புரை.) கொடுமையுள்ளவிஷத்தைபும் அமிர்தத்தையும் எடுத்துக்குழைத்துப் பரிவுடன்ஒன்றுபடச்சேர்த்துஇருப்பவைத்ததென்று சொல்லும்படி மருட்சியையுடையனவாயும் அரிபரந்தவைகளாயும் அயற்புறத்திற்பிறழ்ந்து அணிந்திருக்குங்குழையளவுஞ் செல்வனவாகியும் கருமைநிறமுள்ளவைகளாயும் வெண்மைநிறமுள்ள வைகளாயும் இருப்பன அவளுடையபெரியகண்கள்.(எ-று.) (எ)

ஆரிருட்பிழம்பொழுக்குவிட்டனையதோகமஞ்சூற் ... ...*
காரிருட்கொழுந்தொருவழிக்கான்றமேதாகமய்ந்த ... ... *
வேரியஞ்சனமயிரெனவிழுந்துவீழ்ந்ததுவோ ... ... *
வாரிணர்ச்சுருளோதியையாதெனமதிப்பாம் ... ... ... *

(இ-புரை.) நிறைந்தஇருட் கூட்டமானது ஒழுங்குபட்டுநின்றதோகருப்பம்நிறைந்தமேகத்தின்கருங்கொழுந்து ஒரோயிடத்தில்தளிர்த்ததோபரிமளிக்காநின்ற அஞ்சனமானது மயிராகவிழுதுபட்டு நின்றதோஅவளுடைய நீண்டதாய்ச்சுருண்டிருக்கும் அளகத்தையென்னென்றுமதிப்பாம்.—(எ-று.) (அ)

மூளைத்தவான்பிறைமுத்தினமுற்றியபின்னர்க் ... ... ...*
கிளைத்தவாரிருட்கீழ்வடிம்பினைப்பெறக்கிடத்தித் ... ... *
தளைத்தவாமெனக்கரும்புரூரத்தொடுந்தயங்குந் ... ... *
திளைத்தசிந்துரவாணுதல் யாதெனத்தெரிப்பாம் ... ... *

(இ-புரை.) ஒருகலையுடன்முளைத்தபிறையானது முத்துடன்முற்றிய பின்புஇருளையிரண்டு வடிம்பாகக்கீழேவைத்து அதற்கடுத்தமேலே அப்பிறையைவைத்திருப்பது போலக்கருமைநிறமுள்ள புருவத்துடன்விளங்குகின்ற சிந்துரப்பொட்டணிந்த நெற்றியினையாதென்றுசொல்லுவாம்.—(எ-று.) (௯)

பயிற்செய்கானகமரகதப்பசும்பணித்தோகை ... ... *
மயிற்குலங்குழீஇமயங்கினசாயலின்மயங்கு ... ... ...*

பொழிப்புரை

முயிர்த்தபூந்தழைமாஞ்சினையிடனுறைந்திசைக்குங் .. ... *
குயிற்கொழுங்குரலமுதொடுங்கூட்டினகுதலை ... ... ...*

(இ-புரை.) காட்டிற்சஞ்சரிக்கும்பசுமைநிறம்பொருந்தியதாய்க்குளிர்ச்சியினையுடையகலாபமுள்ளமயிற்கூட்டங்கூடிஅவளுடையசாயலைக்கண்டுமயங்கிக்கொண்டிருக்கும்அவளுடையகுதலைமொழியோவெனின் தழைகளீன்றமாங்கிளைகளினிடத்திலிருந்து கூவுகின்றகுயிலினது செழுமையுள்ளகுரலோசையைத்தேவாமிர்தத்துடன் சேர்த்ததையொப்பாகும்.—(எ-று.) (ய)

முழுத்தபானிலாப்பிதிர்த்தனமுறைமுறைதிருத்தி... ... *
யழுத்திவைத்தவோவமிழ்தினையரும்பெனலாக்கிப் ... ...*
பழுத்தவெண்ணிலாப்படுத்திவைத்தனகொன்மற்றறியே ... *
மொழுக்குவாணகையாதெனவுணர்ந்திலமின்னும் ... ...*

(இ-புரை.) வெண்மைநிறமுள்ள பூரணசந்திரனைப் பிதிர்த்து முறைமுறையாகத்திருத்தி அழுத்திவைத்தவைகளோதேவா மிர்தத்தை முல்லையரும்புவடிவாகச்செய்துஅதனிடத்து முதிர்ந்தவெண்ணிலாவைப்பொருத்திவைக்தவைகளோயாமொன்றும்அறியோம்(பின்பாவதுதெரிந்ததோவெனில்)ஒழுங்குள்ளதாயொளிபொருந்திய அந்தத்தந்தவரிசையையின்னதென்றின்னமுந்தெரியேம்.—(எ-று.) (யக)

வட்டவார்சுருளோலையிற்பொலிந்தனவள்ளை ... ... ...*
கெட்டகாமனுக்கன்றுயிர்கொடுத்ததிக்கிளையே ... ... *
தொட்டவார்திரைப்பரவைமாநிலத்துயிர்சூறை ... ... ...*
யிட்டருந்துறமறலிகைத்திருத்தியவிலக்கே ... ... ... *

(இ-புரை.) வட்டவடிவமான பொற்சுருளோலை விளங்கிக் கொண்டிருக்கும் வள்ளைத்தண்டுபோன்றகாதுகள்முன்னெரிறந்துபோன மன்மதனுக்கு உயிர்கொடுத்தன தோள்களோ வெனில் சகரர்களால் தோண்டப்பட்டு நீண்டஅலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்தபூலோகத்திலிருக்கும் உயிர்களைச்சூறைகொண்டு உண்ணும்படியேமன்கையினால் திருத்தஞ்செய்துவைத்தகுறியே.—எ-று.) (யஉ)

{ வள்ளைக்கொத்தண்டுபோலவுவமிக்குங்காதினை வள்ளையென்றும்மூங்கில்போல உவமிக்குந் தோளைமூங்கிலென்றும் சொல்வது உவமாகுபெயரென்பர். * }

இலவுபூத்ததிற்பவளமென்கொழுந்தொளியிருந்தி ... ... *
மலர்முருக்கிதழ்ச்சேயொளிவழித்ததின்விரவிக்... ... ...*
குலநறுங்கனிவீழ்யிற்கொடுத்தனவெனலா ... ... ... *
யலைகடற்படுமாரமுதருப்புசெவ்*விதழாள்... ... ... *

* இதழ்என்பது-உதடு.

(இ-புரை.) மலர்ந்த இலவம்பூவில் பவளக்கொழுந்தினைவைத்து முருக்கம்பூவிதழிலிருக்குஞ் செம்மைநிறத்தைவழித்துக் கலந்துவீழ்ப்பழத்தில கொடுத்ததுபோல்வதென்றுசொல்லலாய்ப் பாற்கடலிலுண்டான அமுதமூறும்படியான செவ்விதழையுடையவள்.(எ-று.) (யரு)

அரும்புகண்கறுத்தாரமுதகம்பொதிந்தமிழ்தின் ... ... *
குரும்பையொத்தணிதிதலைமீப்பொடித்தறக்குழைந்த ... ...*
மருங்கினுக்கிரங்காதிருமருங்கொளிபழுத்து ... ... ... *
முருங்குதன்மைபெற்றெழுந்தனமுகிழ்த்தவெம்முலையாள் ...*

(இ-புரை.) மங்கைப்பருவத்திலுண்டாகின்ற தாய்க்கண்கறுத்துக்கிடைத்ததற்கரிய அமுதம்உள்ளே நிறைபக்கொண்டு அமுதமயமாகியகுரும்பையினை யொத்துத்தேமல மேலேபரந்து மிகவுஞ்சுருங்கியஇடைதாங்க மாட்டாதேயென்றிரங்காமல் இருபுறத்தும் ஒளிநிறைந்துகாமுகரை வருத்துந்தன்மையினையும் பெற்றுத்தாமரையரும் பொத்தெழுந்ததனமுள்ளவள்.—(எ-று.) (யசு)

மறுவின்மென்கலைசுருககவக்கலையொடுமயங்கி ... ... *
யுறுவதின்மைபெற்றுலகெலாமயக்கியமார ... ... ... *
னிறுதிபெற்றபின்னெடுத்தவோருருவெனலாகிச் ... ... *
சிறியசிற்றிடையவனுயிராமெனத்திகழும் .. ... ... ...*

(இ-புரை.) அவளுடையசிறியஇடையானதுமாசில்லாதமெல்லியகலையானதுசுருக்க அந்தக்கலையுடன்கூடிப்பார்வைக்குத்தெரியுமியல்பில்லாமையைப்பெற்றுஉலகங்களை யெல்லாமயக்கியமன்மதன் இறந்தபின்எடுத்தஅருவமென்றுசொல்லலாகியும்அவனுயிராமென்றுசொல்லும்படியும்விளங்கும்.—(எ-று.) (யஎ)

பொழிப்புரை.

அருப்பிளந்தனத்தாருயிரளித்தவராசை ... ... ... ...*
விருப்பமெய்வளவவ்வளவாகியவிரிவா ... ... ... ... *
யுருத்துருத்தமுதாற்றிருந்தன்னவருளம்போற் ... ... *
பெருத்தறக்கனிந்தகலியவல்குல்பெற்றுடையாள் ... *

இதுவெளிப்படை (௰௬)

பாயொளிப்பனித்தாமரைபரிதிவிட்டுமிழுங் ... ... ...*
காயொளிக்கதிர்படப்படக்கருகுவகதுவா ... ... ... *
மீயொளிப்படமென்மையுந்தண்மையும்விரவிச் ... ... *
சேயொளிப்படசிவந்தனசீறடிச்சிலம்பு ... ... ... ...*

(இ-ள்.) பரந்தவொளியினையுங் குளிர்ச்சியினையுமுடைய செந்தாமரைமலர்களில் சூரியகிரணங்கள்படுந்தோறும் அந்தமலர்கள்கருகுந் தன்மையுடையன அவள்சிற்றடியிலணிந்திருக்குஞ் சிலம்புகள் அந்தச்சிற்றடியினீங்காத மிகுந்தவொளிமேல் படுவதினால் மென்மைத்தன்மையுங்குளிர்ச்சியும் பொருந்திமிகுந்த செம்மைநிறமுண்டாகும்படி சிவந்தன—(எ-று.) (௰௭)

{ ° இவள் பாதமாகிய தாமரைசிலம்பாகியசூரியனால்கருகித் தன்னொளிகெடாமல் அந்தச்சிலம்புக்குத் தன்னியல்பைக் கொடுத்தனவென்பதுதாற்பரியம். }

சாந்தளாவியபொதியநின்றுயிர்ப்புறத்தவழ்ந்து ... ... ...*
போந்ததென்றலங்குழவியோர்தளர்நடைபோலு ... ... *
மாந்தராருயிர்மயக்கியமடநடைக்குவமை ... ... ... *
கூந்தலம்பிடியன்றிமற்றியாதெனக்குணிப்பாம்... ... ... *

(இ-ள்.) சந்தனம்அளாவியபொதிய மென்கிற ஓர்மாதுகருவிருந்தீனத்தவழ்ந்து சென்றஇளந்தென்றலாகிய குழந்தையின் தளர்நடையேபோல்வதுஅன்றியுமக் காமுகருயிரைமயக்கிய அவளுடையமடநடைக்கு உவமைபெட்டையானையின்நடையல்லது வேறேயெது உவமையாகுமென்றுகருதுவோம்—(எ-று.) (௰௮)

இவளையின்னுயிர்க்குயிரெனத்தழுவினனிருந்தாழ் ... ...*
புவனமுண்டுமிழ்ந்தளந்தவனிணையடிபோற்றித் ... ... *

தவமுயற்சியிரெழுகுவானறநெறிதவறு ... ... ... *
னுவர்கருங்கடலுலகமொத்தொழுங்குறவாழ்வான் ... ... *

(இ-புரை.) இத்தன்மையானஅழகுள்ளவ ளாகியசித்திரரேகையெ ன்பவளைப்புண்டரீகனென்னும் பெயருள்ளபிராமணன் விவாகஞ்செய் துகொண்டபின்பு தன்னுயிர்க்குயிர்போலத் தழுவியிருந்தான் அந்த ப்பிராமணன் எத்தன்மையுள்ளவனென்னில இவ்வுலகங்களை யுண்டுமீ ட்டும் உமிழ்ந்தும் அளந்தவருமாகிய நாராயணமூர்த்தியின்திருவடிக ளைத்துதிசெய்து தவமுயற்சியினடப்பவனும் அறநெறியில்வழுவாத வனும் கடல்சூழ்ந்தஉலகநடைக்குஒத்து ஒழுக்கட்டொருந்தவும்வாழ் பவன்.—(எ-று.) (௰௧)

துளபமார்பினன்சுருக்கியவுத்தரீயத்த ... ... ... ... *
னளவுதாமரைமணியினனுரைமுதலைநீந்த... ... ... ... *
கிளவிமென்குயிலம்புயத்திருமகள்கேள்வ ... ... ...*
னுளனினைந்திடுவயிணவத்தலைமைபெற்றுடையோன் ... *

(இ-புரை.) துளபமணிந்தமார்பினையுடையவனும் சுருங்கியஉத்த ரீயத்தையுடையவனும் தாமரைமணியணிந்தவனும் தேவாமிர்தம்போ ன்றவசனமுள்ளவளாய்த் தாமரைமலரில் வீற்றிருக்கும்திருமகள்கேள் வனாகிய நாராயணமூர்த்தியைத் தன்னுளத்தில்தியானித்துத்துதிக்கும் வைணவசமயத்தில் முதன்மைத்தன்மைபெற்றவனுமாயிருப்பவன் ()

பொருவின்மாதவப்புண்டரீகப்பெரும்பெயரான் ... ...*
மருவுசித்திரரேகைபூண்வனமுலைமயங்கி ... ... ... ...*
யொருவுறுவருங்காமவெங்கடற்படிந்துற்றான் ... ... *
திருகுசிந்தையளிவனொடுஞ்சிறந்தனள்சிலநாள் .. ... ... *

(இ-புரை.) இத்தன்மையுள்ளவனாகிய புண்டரீகனென்னும் பிரா மணன் சித்திரரேகையைப்புணர்ந்து நீங்காதகாமக்கடலில் அழுந்தினு ன்மாறுபட்ட மனமுடையஅந்தச்சித்திரரேகையானவள் சிலநாளிவனு டனின்பங்கொண்டிருந்தாள்.—(எ-று.) (௨௧)

மறைக்குநாயகனீங்கிவன்வறுமைகண்டிரங்கி ... ... ...*
நறைப்பசுந்துளாய்நாயகனொருமணிநல்க ... ... ... *

பொழிப்புரை.

நிறைத்தமாநிதிக்குப்பையங்கதுதரநின்றான் ... ... ...*
செறித்தவாயிரஞ்சீடருக்கருளினன்சிறந்தான்... ... ... *

(இ-புரை.)வேதவுணர்ச்சியில் தலைமையானவனாகிய இந்தப்பிராமணனுடைய வறுமையைக்கண்டிரக்கங்கொண்டு தேனிறைந்த பசிய துளவமாலையணிந்த திருமாலானவர் ஒப்பில்லாததான சிந்தாமணியைக்கொடுக்க அதுமிருந்ததிரவியத்தைத் தரப்பெற்று அனேகமாகியசீஷருக்குக்கொடுத்துச்சிறப்புடனிருந்தான்.—(எ-று.) (உஉ)

இவனகத்திருந்தில்லறமாட்சியினிழிந்தா ... ... ... *
ளவனடித்துணைச்சீடரையவாவினைளணைந்தாள் ... ... *
குவிமுகிழ்த்துணைக்கொங்கையாள்குறிப்புவேறாகிக் ... ...*
கவருளத்தினள்காமமிக்குடர்தரக்கவல்வாள்...... ... ... *

(இ-புரை.) இவனிப்படியிருக்க தாமரையரும்பு போற்குவிந்த தனமுள்ளவள் இந்தப்பிராமணன் மனையிலிருந்து இல்வாழ்க்கைக்குரியகற்புநிலையிழந்து அவனுடையசீஷர்களை விரும்பிப்புணர்ந்து குறிப்புவேறாகி ஒருவழிப்பட்டமனமில்லாமல் காமம்அதிகரிக்கத் துன்பமுறுவள்.—(எ-று.) (உ௩)

வாளரித்தடங்கண்களாலுயிருகமருட்டு... ... ... ... *
மூளெரிக்கடுங்காமவெந்நோய்கெடமுயங்கு ... ... ...*
நாளொர்நாழிகையாயினுமொழிவுறாணையப்பாள் ... ... *
வேள்விகற்பமெய்யல்லதுவேண்டிழிவேண்டாள் ... ...*

(இ-புரை.) வாளாயுதம்போன்ற செவ்வரிபரந்த கண்களால்காமுகர் உயிர்கெடும்படிமயக்குவாள் அவ்வாறுமயக்கித் தனக்குள்மூளுகின்றவெவ்வியகாம நோய்கெடும்படி அவர்களுடன்சேர்வாள் ஒருநாளில் ஒருநாழிகையாகிலும் ஆடவரைப்புணராதிராள் மன்மதலீலாவிநோதங்களை விரும்புவதொன்றேயன்றி மற்றொன்றையும்வேண்டுமிடத்தும்விரும்பாள்.—(எ-று.) (உ௪)

அள்ளல்வார்கடலகனிலத்தாடவரனேக... ... ... ... ...*
ரெள்ளிறைப்பொழுதொழிவுறாதியற்றினுந்தமித்தாற் ... *

கள்ளவாணெடுங்கண்ணிதன்னனுபவக்கலவி ... ... ...*
யுள்ளமோர்ந்துமெய்பொடித்திருங்காமநீரொழுகும் ... *

இதுவும்வெளிப்படை.(உடு)

கோட்டிரும்புனற்கொள்ளையக்கோடிறமுறித்து ... ... *
நீட்டிநீடொறுமாயிரங்கவர்த்தலைநிமிரும் . ... ... ...*
வாட்டடங்கணுமனையனமாந்தரிற்படருந் ... ... ... *
தோட்டலங்கலாள்சிந்தையுமவ்வழித்தொடரும் ... ... ...*

(இ-பு.) கரைக்குட்பட்டிருக்கிற மிகுந்த நீர்வெள்ளமானது அந்தக்கரையிடியும்படியிடித்து நீண்டு அவ்வாறு நீளுந்தோறும் பல பல காலாக வோடும் அதுபோலப் பூமாலையணிந்திருக்கும் அவளுடைய வாள்போன்றபெரியகண்களானவை ஆடவர்கள் யாவரிடத்துஞ் செல்லும் அவள்மனமும் அவ்வழியாகவேதொடரும்:—(எ-று.) (உசா)

மனையிழந்தனர்மாநிதியிழந்தனர்மயங்கி ... ... ... ...*
நினைவிழந்தனர்நெஞ்சிழந்தனர்நிலையிழந்தார் ... ... *
புனைசெய்மாநகர்மாந்தரிலவளொடும்புணர்ந்தா ... ...*
ரினையவென்பெழுந்தியங்கியவாக்கையரினைத்தார் ... ... *

(இ-பு.) அலங்காரஞ்செய்திருக்கும் இந்தநகரத்தில் வாசஞ்செய்கிற ஆடவர்களில் அவளோடும் புணர்ந்தவர்கள் வீடுகளிழந்தார்கள் பெரியதனங்களையிழந்தார்கள் மயங்கிநினைவிழந்தார்கள் மனமுமிழந்தார்கள் தங்கள் தங்கள் நிலைமையினையும் இழந்தார்கள் இவ்வாறிழந்ததுமன்றி இவர்கள்யாவரும் எலும்புமேலெழுந்து தோன்றும்படியான சரீரத்தையுடையவர்களா யிளைத்தார்கள்.—(எ-று) (உஎ)

(வேறு.)

ஆயளின்னணமவ்வழியெய்துறு ... ... ... ... ... *
மேயவேதவயிணவவேந்தனை ... ... ... ... ... ...*
நேயநெஞ்சொடுநீண்மறையோரொடுந்... ... ... !... *
தூயசிந்தைத்துருமுனியெய்தினன்... ... ... ... ...*

(இ-பு.) அவளிவ்வாறு நடந்துகொண்டிருக்கும்போது அந்தவைஷ்ணவப்பிராமணசிரேஷ்டனிடத்தில் மனதில்நேசமும் தம்மு

டைய சீஷர்களுந் தொடரப்பரிசுத்தமுள்ள தூர்வாசமுனிவர் எழுந்த தருளினர்.—(எ-று) (உஅ)

சென்றவத்துருவாசற்கெதிர்செலா ... ... ... ... ...*
வொன்றுசிந்தையுருகவுருகிறு ... ... ... ... ... *
னின்றுநீவரற்கெத்தவஞ்செய்தனன் ... ... ... ... ...*
வென்றிமாதவவென்றுவிளம்பினுன் ... ... ... ... *

(இ-புரை.) தூர்வாசமுனிவர்சென்றவளவில் அந்தவைஷ்ணவபி ராமணச்சிரேஷ்டன்எதிர்கொண்டுமனமுருகிவென்றியுள்ளமகா தபோ தனரே தாம்இங்கேயெழுந்தருளுதற்குஅடியேன்யாது தவஞ்செய்தே னேவென்றுசொன்னுன்.—(எ-று) (உகூ)

பொய்யின்மாதவப்புங்கவனைத்தொழு ... ... ... ... *
தய்யபொன்னடிசாத்தினையாதலி ... ... ... ... ...*
னெய்துமென்னகமெத்தவஞ்செய்ததோ ... ...... ... *
செய்தமாதவவுண்மைசிறந்தன... ... ... ... ... ...*

(இபுரை.) உண்மையானதவமுள்ளமுனிசிரேஷ்டனைத்தொழுது சுவாமிகளேதேவரீர்திருவடிகளைச் சாத்தினதால் என்மாளிகையெத்த வஞ்செய்ததோ அடியேன்செய்ததவ மிப்போதுசிறந்தன.—(எ-று)

என்னுமன்பினெடுத்தெடுத்தேத்துபு ... ... ... ... *
வுன்னருந்தனுறையுள்கொண்டேகினுன் ... ... ... ...*
றுன்னருந்துருவாசனெடுஞ்சுடர்... ... ... ... ... *
மன்னுமாமணிமண்டபம்வைகினுன் ... ... ... ... ...*

(இ-புரை. இவ்வாறுஅம்முனிவருடைய புகழைஅன்புடனெடுத் தேத்தித தன்மாளிகைக்குள் கொண்டுபோய் அவருடன் ஒருமண்டபத் திற்சேர்ந்தான்.—(எ-று) (௩௰)

ஆசனந்தந்தருச்சனைசெய்தபின் ... ... ... ... ... *
போசனஞ்சொற்றமைக்கப்புகுந்தனன் ... ... ... ...*
பாசிழைக்குப்பரிந்துசொற்றுனவண் ... ... ... ... *
மாசகற்றியமைத்தனண்மாட்சியின் ... ... ... ... ...*

(இ-புரை.) அவருக்கு ஆசனங்கொடுத்தபின் அருச்சனையுஞ்செய்து சுவாமிகளிங்கேபோசனமுஞ் செய்யவேண்டுமென்று சொல்லியனைக்குட் போய்த்தன்மனைவியை நோக்கியிம்முனிவருக்கு அமுது சமைக்கவேண்டுமென்றுசொல்ல அவள்பழுதில்லாமல் சமைத்தாள். ()

இயலுமன்பினடிசிலிழைத்தபின்... ... ... ... ... *
புயனறுங்குழல்கொண்டனைபோவெனக் ... ... ... ...*
கயனெடுங்கட்கரும்புகொண்டேகிமு ... ... ... ... *
டுயிலினெஞ்சிற்றுயில்வளர்வான்றனை ... ... ... ...*

(இ-புரை.) பொருந்திய அன்பினுடன் அமுதுசமைத்தபின்மேகம் போன்றநறிய அளகத்தையுடையவளே நீகொண்டுபோவென்று தன்மனைவிக்கு உத்தரவுசெய்தான் சேலபோன்ற கண்களையும்நெடிய கரும்புபோன்ற வடிவத்தையுமுடையவள் அந்தஉத்தரவுபெற்றுக்கொண்டுபோய் மறப்பிலலாதமனமுடன் நித்திரைசெய்யும் அம்முனிவரை என்றவாறு. (௩௩)

கண்டுவெஃகியகாமக்கலவியுட்... ... ... ... ... ...*
கொண்டுவீழ்ந்துகுலத்தோடழிவிஞ ... ... ... ... *
ளண்டரோத்துமருந்தவன்றன்விழி ... ... ... ... ...*
விண்டுநோக்கவெருவரவோடினுள்... ... ... ... ... *

(இ-புரை.) நோக்கிவிரும்பியகாமக் கலவிசெய்யமனதில்எண்ணங்கொண்டு மேல்விழுந்து அம்முனிவருடைய தோளைத்தழுவினள் தேவர்களும் துதிசெய்பத்தக்க அம்முனிவர்நித்திரைதெளிந்து பார்த்தவளவில்பயந்து ஓடினுள்.—(எ-று) (௩௪)

ஓடினுற்சதுக்கத்துயராலடிக் ... ... ... ... ... ...*
கூடினுள்செந்துருவைக்குழாத்திடை ... ... . ... *
நீடுமாதவனின்றுவெகுண்டுதன்... ... ... ... ... ...*
சீடனைக்கடிந்தன்னவட்டேடென்முன் ... ... ... ... *

(இ-புரை. நாலுதெருக்கூடுமிடத்திலிருக்கும் ஒருஆலமரத்தினிடத்திலிருக்குஞ்செம்மறியாட்டுக்கூட்டத்துள் ஒளித்துக்கொண்டாள்

## சாகைய அயமுகிவரலாற்றுப்,

பொழிப்புரை.

தூர்வாசரிஷிகோபங்கொண்டு தம்முடைய சிஷனைநோக்கி அவளைத் தேடென்றார்.—(எ-று) (௫௫)

விரும்புசீடன்விரைவிற்றுருவியுீ ... ... ... ... ... *
மரும்புகொங்கையையவ்வழிக்கண்டிலன் ... ... ... ...*
திரும்பிமாமுனிதன்னொடுஞ்செப்பின ... ... ... ... *
ணிருந்தமாதவன்றன்னுளத்தெண்ணினன் ... ... ... ...*

(இ-புரை.) அந்தச்சிஷன்விரைவிற் சென்றுதேடியும்அவளைஅவ்விடத்தில் காணமலதிரும்பிவந்து தூர்வாசமுனிவருடன் சொல்லஅதைக்கேட்டமுனியா தம்முள்ளத்தில் நினைத்தனர்.—(எ-று) (௫௬)

தழுவிநாலுசதுக்கந்தருதெரு ... ... .. ... ... ...*
வெழுவுமாலினிருநிழற்றுஞ்சிபே... .. ... ... ... *
குழுவுபள்ளைகநுழாடராட்கரந்தன ... ... ... ... .. *
வழுவிறிபிற்றுவம்பயிதை ஞானாள் ... ... ... ... *

(இ-புரை.) இல்லறக்கிரமம்வழுவிக் கற்பநிலைஅழிந்தவள் நாலுசதுக்கங்கூடிய தெருவிலிருக்கும் ஆலமரத்தடியில நித்திரைசெய்யும்ஆட்டுமந்தையில ஒளிந்துக்கொண்டிருக்கிறளென்று அறிந்துகொண்டு.—(எ-று.) (௫௭)

தவறினில்லறத்தாறிழிந்தாடனைக் ... ... ... ... ... *
குவளையுண்கட்பொதுமகட்கொண்டுபோ ... ... ... *
யிவர்தடஞ்சினையாலிடத்தேற்றியுன் ... ... ... ... *
றவமுயற்சியைக்காட்டுதிதன்மையோய்... ... ... ... *

(இ-புரை.) பழுதில்லாத இல்லறவியல்பினின்றும் வழுவிப்பொதுமகள்போன்ற அவளைக்கொண்டுபோய் உயர்ந்தஅந்த ஆலமரத்தின் உச்சிக்கிளையிலேற்றி உன்தவப் பெருமையை யாவரும் அறியும்படி செய்யென்று கட்டளையிட்டார்.—(எ-று.) (௫௮)

சேறியென்றவத்திதருசிந்தையோன் ... ... ... ... *
கூறுசொற்றலைக்கொண்டகுலத்தவன்... ... ... ...*

வேறுகொண்டவிருப்பினளைப்பிடித் ... ... ... *
தேறுதொன்மரத்துச்சியினேற்றினான் ... ... ... ...*

(இ-புரை.) போவென்று தூர்வாசர்சொல்ல சீஷன்அந்தவார்த்தையைச்சிரத்தின் மேற்கொண்டுவேறுபட்ட சிந்தையுடையவளைப் பிடித்து உயர்ந்தஆலமரத்தின் உச்சியிலேற்றினான்.—(எ-று.) (௩௯)

உளடுவாடையுறுந்தொறுமென்சினை ... ... ... ... *
யாடுதோறுமலமந்தலறுவாள் ... ... ... ... ... ...*
கோடுபற்றிக்கிடந்துகுலுங்குவா ... ... ... ... ... *
ணீடுநெஞ்சினிழியநினைந்துளாள் ... ... ... ... ...*

(இ-புரை.) வடகாற்றடிப்பதினால் அந்தமெல்லியகிளையாடுந்தோறும் சுழன்று அலறுவாள் அந்தக்கொம்பைப் பிடித்துக்கொண்டு குலுங்குவாள்இறங்கவேண்டுமென்றுமனதிலநினைப்பாள்.—(எ-று.) (௪௰)

மானமாநகர்மைந்தருமாதருங் ... ... ... .. ... *
கானவார்குழற்கன்னியைக்கண்டபின் ... ... ... ...*
போனமாமரத்தெவ்வணம்போயினாள்... ... ... ... *
மோனஞானிமொழிகொடிதென்றனர் ... ... ... ...*

(இ-புரை.) பெருமைபொருந்திய அந்நகரத்திலிருக்கும் ஆடவர்களும் மாதர்களும்வாசனையுள்ள நீண்டஅளகமுள்ள அந்தச்சித்திரரேகையைக்கண்டு ஆகாயவளாக்கும் ஓங்கியஇந்தமரத்தினுச்சியில் இவள்எவ்வாறுஏறினாள் ஞானமுள்ளதூர்வாசர் சாபமொழி கொடியதென்பார்கள்.—(எ-று.) (௪௧)

அறிந்தவட்குயிராகியவந்தணன் ... ... ... ... ... *
பிறிந்திருக்கப்பெறுகிலன்பேரருட் ... ... ... ... ...*
செறிந்தமாதவச்செல்வனையெத்துரு ... ... ... ... *
மறிந்துவீழ்ந்தமரனெனவீழ்ந்தனன்... ... ... ... ...*

(இ-புரை.) அவளுக்குயிர்போன்றவனாகிய அந்தப்பிராமணன் அவளுக்குச் சம்பவித்ததையறிந்துஅவளைவிட்டுப்பிரிந்திருக்க மாட்டாமல் மிகுந்தகிருபையுள்ள தூர்வாசமுனியைக்கண்டு துதிசெய்து அடியற்றுவீழ்ந்த மரம்போலவீழ்ந்துபணிந்தனன்.—(எ-று.) (௪௨)

பொழிப்புரை.

அய்யநின்னருளின்மையென்னுயிழை ... ... ... ... *
வையம்யாவும்வழூச்சொலவைகினள் ... .. ... ... *
வெய்யவாலேவிடுத்திழிதற்கருள்... ... ... ... ... ...*
செய்யவேண்டுந்திருவருள்செய்கென்றான் ... ... ... ...*

(இ-புரை.) சுவாமிதேவரீருடைய அருளில்லாமையால் என்மனை வியானவள் உலகத்தாரெல்லாரும் பழிசொல்லும்படி யிருக்கிறாள் ஆகையால் அந்தஆலமரத்தைவிட்டு இழிவதற்கு தேவரீர் கட்டளை யிட்டருள வேண்டுமென்றான்.—(எ-று.) (சங)

இல்லறத்தையிகந்தொழிவாளிவள் ... ... ... ... ...*
புல்லொழுக்கம்பொருந்துறுபுன்மையோய் ... ... ...*
வல்லறுத்தவனமூலமாநிலத்... ... ... ... ... ... *
தெல்லவர்க்குமினிதளித்தாளரோ ... ... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுசொல்லிய பிராமணனைநோக்கி இல்வாழ்க் கைத் தருமத்தையிழந்தவளுடைய புல்லியஒழுக்கத்துக்குச் சம்மதித் திருக்கும் நீசனேஅவள்தனத்தை இவ்வுலகத்திலெல்லார்க்குங் கொடுத்தாள்.—(எ-று.) (சச)

இன்னதன்மையிவளையுனக்கென... ... ... ... ... *
வன்னிமுன்னர்வழங்கினராலவ ... ... ... ... ...*
டன்னலம்பிறர்க்காகச்சமைந்தன... ... ... ... ... *
ளுன்னையோர்பொழுதுள்ளுகிலாளென்றான் ... ... ...*

(இ-புரை.) இத்தன்மையுடைய இவளைஅக்கினிதேவன் முன்னாக உனக்கென்று கொடுத்தார்கள் அப்படியிருக்கஅவள்தன்னுடைய இன் பம்பிறருக்குப் பயன்படச்சமைந்திருக்கிறாள்அன்றியும்உன்னையொரு பொழுதும் நினைப்பவளல்லள்.—(எ-று) (சரு)

எதுகுற்றமிழைத்தனளேனுமம்... ... ... ... ... ...*
மாதுகுற்றமனக்கொளலய்யநீ ... ... ... ... ... *
மீதுயர்ந்தவடதருவிட்டிவள் ... ... ... ... ...*
யோதுகென்றடிபுகலுகியென்றனன். ... ... ... ... *

(இ-புரை) சுவாமிஅவள் எப்படிக்கொத்தகுற்றஞ் செய்திருந்தாலும் தங்கள்திருவுள்ளத்திற் கொள்ளாமல் ஆலமரத்தைவிட்டு அவளிறங்கக்கடவளென்றுஒருவார்த்தை சொல்லவேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.—(எ-று) (௪௬)

கற்பினின்றகனங்குழையாயினின் ... ... ... ... ..... ✱
சொற்படிக்குயர்தொன்மரநீங்குவா ... ... ... ... ... ✱
ளெற்படுஞ்சினைபற்றியிறங்குவாண் ... ... ... ... ✱
மூற்படப்போய்மொழிகுதிநீயென்றான் ... ... ... ...✱

(இ-புரை) பதிவிரதாதருமத்தில் வழுவுதலில்லாதவளானால் நீ சொல்லுஞ்சொற்படியுயர்ந்த அந்தஆலமரத்தினின்றும் இறங்குவாள் ஆதலால்நீபோய்ச் சூரியமண்டலத்தையளாவிய அந்தமரக்கிளையிலிருந்து இறங்கும்படிசொல்லென்றார்.—(எ-று) (௪௭)

வந்துநின்றென்மனைவிவருகெனச்... ... ... ... ... ✱
சந்தவார்முலைநாலடித்தாழ்ந்தன ... ... ... ... ...✱
ளந்தவெல்லையிறங்கப்படாதென்றாள் ... ... ... ... ✱
குந்தி[illegible]னன்மாதவர்க்கடிமுன்... ... ... ... ...✱

(இ-புரை. அவர்சொன்னபடியேசென்றுஆலமரத்தினருகில்நின்றுகொண்டு என்மனைவியேவரக்கடவை யென்றுசொல்லஅவள்நாலடியிறங்கி யிவ்விடத்திலிருந்து இறங்கக்கூடாமையா யிருக்கின்ற தென்றாள் அந்தவார்த்தையைக்கேட்டவுடன் இளைப்பினால்குந்திக்குந்தித் தூர்வாசரிடத்திற்கோடினான்.—(எ-று) (௪௮)

நாலடிச்சினைதாழ்ந்தனணம்பவென் ... ... ... ... ✱
ணேல்வார்குழல்பின்னரிறங்கிலள்... ... ... ... ...✱
மாலடிக்கொண்டமம்மரினென்னினிச்... ... ... ... ✱
சீலமாதவசெய்குவதேதென்றான் ... ... ... ... ...✱

(இ-புரை.) சுவாமியென்மனைவியானவள் நாலடிக்கிளையிறங்கி ஆசையைமுதலாகக்கொண்ட மயக்கத்தினால்அதன் கீழிறங்கமாட்டாதிருக்கின்றாள்இனியாதுசெய்வதோ அனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்றான்.

# அயமுகிவரலாற்றுப்.

பொழிப்புரை

மங்கைகொங்கைமயங்கிமுயங்கிறு ... ... ... ... ...*
ரங்கண்மாநிலத்தாடவர்யாவரும் ... ... ... ... ... *
பொங்குமாலடிப்பொத்திறங்காயெனி ... .... ... ...*
னங்கீழ்வருமென்னநவிற்றினான் ... ... ... ... *

(இ-புரை.) அப்படியானால் அவளைப்புணர்ந்த ஆடவர்களெல்லாரும் அந்தஆலமரத்தடியில்வந்து இறங்கென்றுசொல்வார்களாகில் இறங்குவாளென்றுசொன்னார்.—(எ-று.) (௫௰)

மையலொன்றுமனக்கொடிருந்தவர் ... ... ... ... *
தையலைப்புணர்ந்தாரவர்யாவரையும் .. ... ... ... ...*
வெய்தினோடுங்கொணரவிளித்தன ... .. ... ... ...*
ரெய்துமாமரம்பாதியிறங்கினாள் ... ... ... ... ...*

(இ-புரை.) அவளிடத்து மயல்கொண்டிருந்துமனமயங்கிப்புணர்ந்தவர்களையெல்லாம் அருமையாக அழைத்துக்கொண்டுவர அவர்கள்வந்து பெண்ணேயிறங்கென்றார்கள் அப்போதுபாதிமரத்திலிறங்கினாள்.—(எ-று.) (௫௧)

இப்புறத்தினிறங்கரிதாயவ ... ... ... ... ... ...*
டப்பறத்தமுவிச்சினைசார்தலு ... ... ... ... ... *
மெய்ப்புறுத்தமுனியருகோடினான் ... ... ... ... ...*
குப்புறுத்தமுகத்தினன்கூறுவான் ... ... ... ... ...*

(இ-புரை.) அவள்அவ்விடம்விட்டிப் புறமிறங்கக்கூடாமல்அங்கிருக்குங்கிளையைப் பற்றிக்கொண்டிருக்கக்கண்டு மீட்டும் துர்வாசரிடத்துக்கோடி நின்றுநாணத்தினால் முகத்தைதவளைத்துக்கொண்டு சொல்லுகின்றான்.—(எ-று.) (௫௨)

என்னையிவ்வணங்கண்டனையேயினிக் ... ... ... ... *
கன்னிபாற்றிருக்கண்ணருள்செய்யென ... ... ... ...*
நின்னருட்பெறுவார்நின்றகூவிலுன் ... ... ... ... *
பொன்னனாளுமிறங்குவள்போவென்றான் ... ... ...*

(இ-பு-ரை.) சுவாமியிவ்வாறு வேடிக்கைசெய்வது யாதுகாரணம் இனியவளிடத்தில் கடாக்ஷம்வைத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான் அதைக்கேட்டமுனிவர் உன்னுடையசிஷ்ர்களெல்லாம் அழைத்தால்இறங்குவாள்போவென்றார்.—(எ-று. (௫௩)

அன்னசீடருந்தானுமடைந்துதன் ... ... ... ... ...*
பன்னிதன்னையழைக்கப்பகர்ந்தனன் ... ... ... ... *
பின்னரன்னவர்கூவப்பெருமர... ... ... ... ... ...*
மன்னடிக்கவைவந்திருந்தாளரோ... ... ... ... ... *

(இ-பு-ரை.) அந்தச்சிஷ்ருந்தானுமாக அந்தமரத்தின்கீழ்ப்போயிருந்து சிஷ்ர்களைநோக்கித் தன்மனைவியையழைக்கச் சொன்னான்பின்பு அவர்கள் நின்றுஅழைத்தவளவில் அந்தஆலமரத்தின் அடிக்கவட்டில்வந்திருந்தாள்.—(எ-று.) (௫௪)

கூண்டபின்னற்குடுமியலைந்திடப் ... ... ... ... *
பூண்டதாமரைமாலைபுரண்டிட ... ... ... ... ......*
வீண்டுதுன்பத்திரைத்திடவோடினான்... ... ... ... *
மீண்டுமாதவவேந்தனைநண்ணினான் ... ... ... ... *

(இ-பு-ரை.) அதைநோக்கிய அவள்புருஷன்கற்றையாகியபின்னற்குடுமியலையவும் தரித்திருக்குந் தாமரைப்பூமாலை புரண்டு புரண்டு அலையவும் நேரிட்டதுன்பத்துடன் இரைக்கவிரைக்கவோடி மீட்டும் தூர்வாசமுனிவரிடத்திற்சேர்ந்தான்.—(எ-று.) (௫௫)

கவர்தருஞ்சினைக்கப்பினிறங்கினு ... ... ... ... ...*
ளிவளைமுற்றுமிறங்கப்பணித்தியென் ... ... ... ... *
றவனையேத்தியிரத்தனனந்தணன் ... ... ... ... ...*
புவனமேத்துமுனிபுகல்வானரோ... ... ... ... ... *

(இ-பு-ரை.) அய்யரோயென்மனைவி இருபிரிவாயிருக்கிற கப்புவைக்குமிறங்கினாள் இவளைமுழுவதுமிறங்கும்படி கட்டளைசெய்தருளவேண்டுமென்று அந்தப்பிராமணன் இரந்துதொழுது துதித்தான் உலகமெல்லாம் துதிசெய்யும்படியான அம்முனிவர் சொல்லுகிறார்.—(எ-று.) (௫௬)

பொழிப்புரை.

பேதைதன்னைபுணர்ந்தவர்பேரெல்லா ... ... ... ..*
மோதியோதியுணர்த்திலிறங்குமென் ... ... ... ... *
றூதிவேதமளந்தவன்சொற்றுழி ... ... ... ... ... *
வேதவேதியன்பின்னருமீண்டனன் ... ... ... ... *

(இ-புரை.) உன்மனைவியைப் புணர்ந்தவர்கள் பெயரையெல்லாம்சொல்லிச்சொல்லித் தெரிவித்தால் இறங்குவாளென்று ஆதியாகிய வேதங்களையெல்லாங் கரைகண்டதூர்வாசர் சொல்லமீட்டும் அந்தப் பிராமணன் ஆலமரத்தின்கீழப் போனான்:—(எ-று.) (௫௭)

ஏடிநின்னிளங்கொங்கையிணைத்தடங் ... ... ... ... *
கூடினார்பெயர்முற்றுறக்கூறினீ ... . ... ... ... *
தோடுவார்ந்ததொடுசினைவிட்டடி ... ... ... ... ...*
* மூடிறங்குவையென்றுமொழிந்தனன்... ... ... ... *

(இ-புரை.) மனைவியேயுன்னைப் புணர்ந்தவர்கள் பெயர்களையெல்லாம்சொன்னால் இந்தக்கிளையை விட்டு அடிமூட்டிலிறங்குவை யென்றுசொன்னான்.—(எ-று.) (௫௮)

* அடிமூடு-என்பது-அடித்திப்பை.

இன்னவாசகங்கேட்டலுமேந்திழை ... ... ... ... *
யன்னகேள்வரனேகரையெண்ணினாள் ... ... ... ... *
பின்னரிந்தப்பெருங்கவைநீத்ததின் ... ... ... ... *
மன்னுகீழ்க்கவைவந்துவதிந்தனள்... ... ... ... ... *

(இ-புரை.) அவளிந்தவார்த்தையைக்கேட்டவளவில் அந்தச்சோரபுருஷரையெல்லாம் எண்ணிப்பெயர்கூறினாள் அவ்வாறுசொல்லினபின் அந்தப்பெரியகவரான கிளையைவிட்டிறங்கி அதிற்சேர்ந்த கீழ்க்கவட்டில்வந்திருந்தாள்.—(எ-று.) (௫௯)

எவற்றினாலுமிறங்கிலாளினிச் ... ... ... ... ...*
சிவத்திறந்தெரிநீயவட்சென்றிடிற்... ... ... ... ... *
கவர்த்தடம்பணைக்கைவிடுமெய்துவாய் ... ... ... ...*
தவப்பெருங்கடவேசரனென்றனன் ... ... ... ... *

(இ-புரை.) அவள்கணவனிதைக்கண்டு தூர்வாசரிடத்திற்போய்த் தவக்கடலேசரணம்சரணம் என்மனைவியானவள் எவ்விதத்திலும் இற ங்கமாட்டாதவளாயிருக்கிறாள் ஆனதால் இனிச்சிவத்தின்உண்மைத்தன் மையைத்தெரிந்ததேவரீர்அவ்விடத்திற்குவந்தால்அந்தக்கிளையைவிட்டி றங்குவாள்.—(எ-று.) (கூ௰)

மூரலித்தமுகத்தினனந்தண ...*
ஞர்வநோக்கியகநெகிழ்ந்தாரணச் ... *
சீரளந்தறிசிட்டர்குழாத்தொடும் ...*
பாரவெம்பழுவத்தருகெய்தினன்... *

(இ-புரை. என்றஅந்தவைஷ்ணவப்பிராமணன்வார்த்தையைக்கேட் டதூர்வாசர்புன்னகைகொண்டமுகமுள்ளவராய்அவனுசையைநோக்கிம னமிளகிவேதத்தின்பெருமையினை யளவிட்டறிந்தசிஷ்டர்கூட்டத்துட ன்அந்த ஆலமரத்தினருகிற்சென்றருளினர்.—(எ-று.) (கூக)

எய்தியன்னவிளமுலைவேட்டருள் ...*
பொய்யிலான்மறைப்புண்டரிகன்றனை ...*
வைதிகத்தனிமாமுனிநோக்கிநின்... *
செய்கைசிற்றொழுக்கத்திற்சிறந்ததால ... *

(இ-புரை.) ஆலமரத்தின்அடியிற் சேர்ந்துஅவளைவிவாகஞ் செ ய்துகொண்டஉண்மையாகியவேதமுணர்ந்தபுண்டரீகன்முகத்தைஅம் முனிவர்நோக்கி உன்செய்கையானதுதாழ்ந்த ஒழுக்கத்திற்சிறந்தது.—

வாளைவென்றமதர்விழியாளிவள் ...*
சூளையென்பதுணர்ந்துந்துணைமுலை ... *
மூளுமாசையின்முற்றிமுயங்கினாய் ... *
கோளறுந்தவத்தன்மைகுறைந்தனை... *

(இ-புரை.) வாளாயுதத்தைவென்ற களிப்புள்ள நேத்திரத்தையு டைய இவள்வேசியென்பதை யுணர்ந்தும்மிகுந்த ஆசையினால் இவளை ப் புணர்ந்திருந்தாய் அதனால்உன்னுடைய குற்றமில்லாத்தவத்தன்மை குறைந்தனை.—(எ-று.) (கூ௩)

பொழிப்புரை

மற்றோர்மாதைமணந்திலைமாதிவள்... ... ... ... ...*
பெற்றபாவம்பிரித்தொருபாதியு ... ... ... ... ...*
முற்றதானுனையோங்கெயின்மூப்புரஞ் ... ... ... ... *
செற்றதேவனடித்துணைசேர்கலாய் ... ... ... ... ...*

(இ-புரை.) இவளித்தன்மையளா யிருப்பதைக்கண்டும் வேறொரு மாதினைவிவாகஞ்செய்து கொள்ளாமலிருந்தனை இவளிதுவரையில்செய்தபாவங்களில்பாதியுன்னைச்சேர்ந்தது ஆகையால் உயர்ந்தமதில்சூழ்ந்த திரிபுரங்களைத்தகனஞ்செய்த பரமசிவன்திருவடிகளைச்சேரமாட்டாய்-

புண்டரீகனதுபுலத்தோர்ந்தனன்... ... ... ... ... *
விண்டுவாய்மொழியொன்றும்விளம்பலன் ... ... ... *
றண்டருஞ்சொற்சமயவிரோதமுட் .. ... ... ... ...*
கொண்டெனக்கிதுகோளுனாத்தாயென்றான்... ... ... *

(இ-புரை.) இவ்வாறுதுர்வாச முனிவர்சொல்லிய வார்த்தையைப் புண்டரீகன்என்பவன் தன்னறிவில்யோசித்து வேறொருவார்த்தையுஞ் சொல்லாமல் ஓய்முனிவரோநீர்சமய விரோதத்தையுட் கொண்டுஎனக்கிந்தச்சாபங்கூறினீர்-என்றான்.—(எ-று.) (௬௫)

வேகவெஞ்சினமீக்கொண்டுதன்மன ... ... ... ... *
மாகவற்சிதரத்துருவாசனும்...... ... ... ... ... ...*
யொகசித்தனையோனிமனத்தின ... ... ... ... ... *
னாகநின்பெயரொன்றறைந்தானரோ ... ... ... ... ...*

(இ-புரை.) புண்டரீகன்சொன்னதைக் கேட்டவுடன் துர்வாசமுனிவருக்குக் கோப மூண்டு மனத்தில் மிகுந்ததுயரமூண்டாக அவனை நோக்கிதியானபங்கனேஉன்பெயர்யோனிமனத்தினனென்று வழங்கக்கடவதென்றுபின்னுஞ்சபித்தார்.—(எ-று.) (௬௬)

புன்புறச்சமயப்புறநின்றுநீ ... ... ... ... ... *
யென்பெருக்கணியெந்தைபிரானடி... ... ... ... ...*
யன்புறப்பெறுவாயலைவெண்ணிற,.. ... ... ... ... *
மின்பிறக்குவிபூதியும்வேண்டலை ... ... ... ... ...*

(இ-புரை.) புன்மைத்தன்மையுள்ள புறச்சமயத்திலிருந்து எனும் புமாலையும் எருக்கம்பூமாலையு மணிந்த எம்பெருமான் திருவடியைஅ ன்புகொண்டுபெறுகின்றவனல்லை வெண்மைநிறமுள்ள விபூதியினையு ம்விரும்புகின்றனையல்லை.—(எ-று.) (௯௭)

ஆகியப்புறப்புன்சமயத்தனுய்ப் ... ... ... ... ... *
போகபோகவெனப்புகன்றன்னவன் ... ... ... ... ...*
பாகமுற்றிடுஞ்சீடனைப்பார்த்துள ... ... ... ... ...*
வேகவெஞ்சினமீக்கொண்டறைகுவான்... ... ... ... *

(இ-புரை.) அந்தப்புன்புறச்சமயத்தவனுகியே போகக்கடவை போகக்கடவையென்று சபித்துஅவ னருகிலிருக்குஞ் சிஷனைநோக்கி உள்ளத்தில்நின்றும் வேகமாகமேலெழுந்தகோபங்கொண்டு சொல்லு கிறார்.—(எ-று.) (௯அ)

பின்னுசிந்தைப்பிணக்கறுத்தாரண ... ... ... ... *
மன்னுசிந்தையராக்கியமாதவன்... ... ... ... ... ...*
பன்னிகொங்கையிற்பற்றுவைத்தீர்களும் ... ... ... *
மின்னனுர்களும்வேசையராகுவார் ... ... ... ... ...*

(இ-புரை.) மயங்குகின்றஉங்கள்மனவேறு பாட்டைநீக்கிவேதம்நி றைந்த சிந்தையராக்கியகுருவினுடைய பத்தினியைவிரும்பினீர்கள்ஆ கையால்உங்கள்பத்தினிமார்களும்வேசையர்களாவார்கள் (எ-று.) (௯௯)

என்றுகூறியெரிவிழித்தாங்கவர்க் ... ... ... ... ...*
கொன்றலாதபலமுனிந்தோதினன்... ... ... ... ... ...*
கன்றுநெஞ்சக்கனங்குழைவைகிய ... .. ... ... ...*
துன்திருஞ்சினைத்தொன்மரநோக்கினன்... ... ... ... *

(இ-புரை.) இவ்வாறுசொல்லிக்கண்களில் தீப்பொறியுண்டாகத்த க்ககோபமுடையவராய் அவர்களுக்குஅனேகசாபவசனங்கூறி அப்போ து மனம்வருந்திக்கொண் டிருக்கிறவள் தொத்திக்கொண்டிருக்கும்ஆல மரத்தை நோக்கினர்—(எ-று.)

வார்த்தகூந்தல்கவிந்திட்மாமரஞ் ... ... ... ... ...*
சேர்ந்தமார்பங்குருதிசிலும்பிடச் ... ... ... ... *

. பொழிப்புரை.

சோர்ந்துமாமரந்தொத்தியிருந்தன... ... ... ... ...*
ணோர்ந்தசிந்தைமுனிவனிகழ்த்துவான் ... ... ... *

(இ-புரை.) நீண்டஅளகபாரம் மேனிமுழுவதுந்தவியவள் அந்த ப்பெரிய மரத்தைச்சார்ந்திருக்கிற மாமியின்மேலே உதிரம்பொங்கவு ம்சோர்ந்து பெரியமரத்தைத தொத்திக்கொண்டிருந்தாள் அவளைநோக் கித் தூர்வாசமுனிவர் சொல்லுகிறார்- (எ-று.) (எக)

கொம்மைவெம்முலைக்கோற்றொடியிய ... ... *
ணெம்மைமேல்விழுந்தெம்முடம்பட்டனா... ... ... *
லம்மவெங்கணசுரர்க்ற்றோன்றியே ... ... ... .. ...*
வெம்மைக்காமவிகாரம்பெறுதியால் ... ... ... ... *

(இ-புரை.) இளமையினையுடையதாய் விருப்பந்தக்க முலையினை யுடையவளே நீயிங்கேநம்மேல்விழுந்தநம்முடைய மேனியைத்தீண்டின மையால் கொடியபார்வையையுடைய அசுரகுலத்திற்பிறந்துநீங்காத காமவிகாரம் பெற்றிருப்பை. (எ.று.) (எஉ)

அயக்குலத்துட்கரந்தனையாதலி ... ... ... ... ...*
மயக்குநின்முகமட்டயமாகுமால் ... ... ... .. ... *
வியக்குமக்குலமேவியும்வெம்முலை ... ... ... ... ...*
முயக்குகாமமுடிவொழியாயென்றான் ... ... ... ... *

(இ-புரை.) ஆட்டின்கூட்டத்துள் ஒளித்திருந்தனை ஆதலால்உன்மு கமட்டும் ஆட்டின்முகமாகும்அந்தஅசுரகுலத்திற் பிறந்தும்பல்பேரை ப்புணருங்காமம் ஒருக்காலும் ஒழியாதிருப்பை யென்றார்.—(எ-று.) ()

ஈதுகூறிமரத்தினிறங்கினை... ... ... ... ... ... ...*
போதியென்னவிறங்கிப்புகுந்தனள் ... ... ... ... *
கோதின்மாதவன்பாதங்குறுகினள் ... ... ... ... ...*
மாதரார்க்குமரபுவழூச்செய்தாள் ... ... ... ... *

(இ-புரை.) இந்தவார்த்தைசொல்லி இனிமரத்தைவிட்டிறங்கிப் போவென்றுசொல்லலும்மாதர்குலத்துக்கெல்லாம்பழிநேரிடச்செய்த அந்தப்பாதகியானவள் மரத்தைவிட்டிறங்கித் தூர்வாசமுனிவர் பாதத்தி னருகுசேர்ந்தாள்.—(எ-று.) (எச)

எந்தைநீயிவனென்னுடைக்கேள்வனைத் ... ... ... ...*
தந்தைகேள்வித்தலைவராச்சாபியா...... ... ... ... *
நிந்தைதந்தனையாயினுநின்னுழைச் ... ... ... ... ...*
சிந்தைதந்தனனென்கொடுந்தேறுகேன் ... ... ... ... *

(இ-புரை.) என்னையனேநீஇப்போது என்கணவனையும் அவருடைய சீஷர்களையுஞ்சபித்து நிந்தைகொடுத்தீராகிலும் உம்மிடத்தில் சிந்தையைவைத்தநான் இனியெந்த ஆதாரவைக்கொண்டு தேறுவேன். ()

ஈதுபட்டுமெளியனிணைமலர்ப் ... ... ... ... ... *
பாதந்தீண்டப்பணித்திலைபோலுமென் ... ... ... ...*
ஞுதரத்தினவளிரப்பத்தனி ... ... ... ... ... ... *
வேதமாமுனிபின்னர்விளம்புவான் ... ... ... ... ...*

(இ-புரை.) இத்தனைபாடுபட்டும் எளியவளாகிய நான்தேவர்திருவடிகளைப்பரிசிக்கும்படி அருளிச்செய்கின்றிலீரென்று ஆசையுடன் அவளிரந்ததினால் தூர்வாசமுனிவர் சொல்லுகின்றார்.—(எ-று) (எசா)

செய்தபாதகஞ்செப்புறப்போமெனப் ... ... ... ... *
மைகொண்மாநிலமோதும்பழமொழி ... ... ... ...*
யையநுண்மருங்காயறியாய்கொலோ ... ... ... ... *
தையனிம்பவந்தானேதொலைந்ததால்... ... ... ... ...*

(இ-புரை.) நுண்ணியஇடையினையுடையவளே ஒருவர்செய்தபாவமெல்லாம்அவர்களேபகுத்துச்சொன்னால்தொலைந்துபோமென்று ஆதிசேடன்படத்திற்கொண்டஉலகத்தில் சொல்லப்படுகிற பழமொழியைநீ அறிவையேஆதலால்உன்பாவமெல்லாம் நீங்கிவிட்டது:—(எ-று) (எஎ)

பெண்ணுருக்கொண்டசுரர்பெருங்குல ... ... ... ... *
நண்ணுநாளருங்காமநயப்பினுற்... ... ... ... ... ...*
கண்ணிணைக்குரியார்தமைக்கைக்கொளா ... ... ... *
வண்ணவெம்முலைக்கோட்டின்மருவுவாய் ... ... ... ...*

(இ-புரை.) பெண்ணுருவங்கொண்டு அசுரர்குலத்தி லிருக்கும்நாளில்காமவிருப்பததினால் உன்கண்ணினுக்கின்பமா யிருப்பவர்களைக்கைக்கொண்டுஉன் அழகியதனங்களால் தழுவிப்புணர்குவை-(எ-று.) (எஅ)

பொழிப்புரை.

ஆயகாலத்தியாமவணெய்துவந் ... ... ... ... ... *
தாயவெம்மைத்தொடர்ந்தனையாகிநீ ... ... ... ... ...*
மேயகாமவிருப்பொழிந்தக்குலத் ... ... ... ... ...*
தேயமைந்தரிருவர்ப்பெறுதியால் ... ... ... ... ... *

(இ-புரை.) அப்படியிருக்குங்காலத்தில் நாம்அங்குவருவோம்நீஅங்கேகண்டுதொடர்ந்து புணர்ந்துஉன்காமவிருப்ப மொழிந்துஅந்தக்குலத்துக்குப்பொருந்திய இரண்டுபுத்திரர்களைப்பெறுவாய்.—(எ-று-)

மாக்கணத்தொடுவைகியவையனைக் ... ... ... ... ... *
காக்கும்வெங்கதைக்காளர்கரத்தினன் ... ... ... ... ...*
மூக்குமிந்தமுலையுங்கரத்தொடும் ... ... ... ... ... *
போக்கிவீழ்ந்துபுலம்புவைநீயென ... ... ... ... ...*

(இ-புரை.) பெருமைபொருந்திய சிவகணங்களுடன் பொருந்திய அரிகரபுத்திரனைக்காக்கும் மாகாளர்கையினல் மூக்குமுலையுங்கையுமிழந்துவிழுந்து அழுவையென்றுஞ் சபித்து.—(எ-று.) (அய)

ஆங்கவன்றொடவன்றளவுன்வயி... ... ... ... ... .. *
ருேங்குபாவமொழிந்துணர்வுற்றுநீ.. ... ... ... ... *
தேங்குதண்சுனைச்சீகுலவெற்பிடை ... ... ... ... ...*
வாங்கருந்தவமன்னுதியேகென்றுன் ... ... ... ... *

(இ-புரை.) அவன்தொடுவதினல் அன்றுவனையில்செய்தபாவமெல்லாம் நீங்கி உணர்ச்சியடைந்து நிறைந்தசுனைகளுள்ள ஸ்ரீ சைலத்தைச்சேர்ந்து நீக்குதற்கரிதான தவஞ்செய்துகொண்டிருபோவென்றுர். ()

அனையளாயவணீயென்னருந்தவத் ... ... ... ... ...*
தனையளாகச்சனித்தனையத்தவ... ... ... ... ... ... *
முனைவனேதிய சாபமுடிந்ததால் ... ... ... ... ...*
வினையினீங்கித்தவத்தைவிரும்புவாய் ... ... ... ... *

(இ-புரை) அத்தன்மையளானவள் நீ என் அருந்தவபுத்திரியாகப்பிறந்தனை அந்தமுனிவர்கூறியசாபமுடிந்தது ஆதலாலினிமுதல்பாவத்தினின்றும் நீங்கித்தவஞ்செய்யவிரும்புதி.—(எ-று) (அஉ)

அயமுகிவரலாறுமுற்றியது.



உ

வேலுமயிலுந்துணை.

# உபதேசகாண்டம்.

## மாயைவரலாற்றுப்பொழிப்புரை



என்றுரைத்துணர்த்துமாயைதன்முகமினிதுநோக்கி... ... *
வன்புறமுரட்டுக்கொங்கையயமுகிமறுத்துங்கேட்கு ... ...*
நின்றவென்னியற்கையெல்லாநிகழ்த்தினைநிகழ்த்தாநின்ற ... *
உன்றனதியற்கையெல்லாம்புலப்படவுரைத்தியென்றாள்... ...*

(இ-ரை.) இவ்வாறுசொல்லித் தெரிவித்தமாயைமுகத்தை நோக்கி வலிதாய்த்திரண்ட முரட்டுத்தனத்தையுடைய அயமுகிமறுபடி கேட்கின்றாள் அன்னையே யென்னுடைய முற்பிறப்பின் செய்கையெல்லாஞ்சொல்லினை இனி உன்னுடையமுன்செனனத்தின் செயற்கையெல்லாந்தெரியச்சொல்லென்றாள்.—(எ-று.) (க)

முற்படுதொல்லைநாளிற்காசிபமுனிவற்கியானே ... ... ...*
ரிற்படுபன்னியாகியில்லறத்தொழுகிநின்றேன் ... ... *
பற்பலமைந்தர்கோடிபயந்தனன்வாக்குவானே ... ... ...*
ரெற்படுபடையினன்னோரிறந்தனர்மடிந்துபோனார்... ... *

(இ-ள்) முன்கடந்தநாளாகிய பூர்வகாலத்தில் காசிபரிஷிக்குநானொருபத்தினியாகி இல்லறநடத்திக் கொண்டிருந்து அவருக்குப் பலவாகிய கோடிபுத்திரர்களையீன்றேன் அந்தப்பிள்ளைகள் யாவரும் தேவர்கள்கையாயுதங்களாலிறந்தார்கள்.—(எ-று.) (உ)

செருமுகத்திறந்துபோனமக்களிற்சிந்தைகோட்டிப்... ...*
பருவரற்கிடனாய்நின்றுபற்பகலிரங்கிமாழ்கித்... ... ... *
தருமமழற்பகையைவெல்வான் கருதியித்தரணிசார்ந்து ... ...*
பொருமுகட்டேச்சியேறிவீழ்ந்துயிர்போக்கினேனால் ... *

(இ-ள்) அந்தயுத்தமுகத்தில் இறந்துபோன புத்திரர்களிடத்திற் சித்தத்தைச்செலுத்தித் துன்பத்துக்கிடனாகிப் பலநாளிரங்கி யழுது கற்பகவிருக்ஷத்தின்கீழிருக்கும் இந்திரன்முதலியபகைவரை வெல்லக்கருதியிம்மலையிலவந்துபெரிய இதனுச்சியி லேறிவிழுந்து உயிர்விட்டேன்.(எ-று.) (௩)

பின்னருந்தகுவர்கோற்குப்பெண்ணெனப்பிறந்துமாயை ...*
யென்னுமோர்பெயராலந்தக்காசிபற்கினியளாகும்... ... *
பன்னியாய்நும்மையெல்லாம்பயந்தனன்பகைத்ததேவர் ...*
பொன்னினுடலைத்துமீளாச்சிறைபுகப்பொருமறீர்ந்தென் *

(இ-புரை.) பின்பு அசுரேந்திரனுக்குப் புத்திரியாகப்பிறந்துமாயையென்னும் பெயருள்ளவளாய் காசிபரிஷிக்குப் பத்தினியாகியுங்களையெல்லாம்பெற்றுப் பகைகொண்ட தேவர்களுடைய பொன்னுலகத்தையெல்லாம் மீளாதசிறையில் சேரச்செய்து என் துயரந்தீர்ந்தேன்.

பிள்ளைகணால்வர்யார்க்கும்பெறற்கரும்பேறுபெற்றார் .. ...*
வள்ளைவார்குழையாயானுமிப்பெருங்கிரிக்கண்வந்தே ... ...*
னெள்ளருந்தவத்தைப்பன்னாளிழைத்தருங்கயிலைசேர்வென் *
வெள்ளியங்கிரியினம்மையுமைபதம்பெறுவன்மேனாள் ...*

(இ-புரை) என்பிள்ளைகள்நால்வர்களும் யார்க்கும் பெறுதற்கரிய பேறுபெற்றார்கள் வள்ளைத்தண்டுபோன்ற நீண்டகாதினையுடையவளே நானுமிந்தப்பெரிய மலையினிடத்தில்வந்தேன் இங்கிருந்து நல்லதவஞ்செய்துகயிலையங்கிரியைச்சேர்ந்து மேல்வருநாளில் உமையவள்பதத்தைச்சேர்வேன்:—(எ-று.) (௫)

நீபெறுங்கதியுமின்றேநிகழ்த்துவனீயுமற்ற ... ... ... *
மாபெருங்கயிலைசேர்வாயென்றனண்மகிழ்வுகூர்ந்தாள்... ...*
கோபவெந்தீயிற்றோன்றுங்கொடியவளன்னைதன்னைத் ... *
தாபதற்பிரிந்தஞான்று தனித்தவாசாற்றுகென்றாள் ... ...*

(இ-புரை.) நீபெறுங்கதியுமின்னதென்று இப்போதே சொல்லுகிறேன்யாதெனில் நீயும் அந்தப்பெரியகயிலாயகிரியிற்சேர்வாயென்றனள் அதைக்கேட்டு மகிழ்ச்சியடைந்து கோபாக்கினியுடன் தோன்றிய கொடிய அயமுகியானவள் அன்னையே உன்னைப்பிரிந்தபின்பு காசிபரிஷியெவ்வாறு தனித்திருந்தார் அதையுஞ்சொல்லென்றாள்.—(எ-று)(௬)

குனிசிலைப்பகழிமாரியனங்கவேள்குறித்துநீட்டத் ... ... *
தனிகிடந்துயிர்த்துவாடைதைவரத்தழலாநின்றான் ... ...*
பனிமதிவடவைகாலப்பதைத்தனனாகித்தென்பா ... ... *
லினியபூந்தென்றனோக்கியெரிமெழுகென்னலானான் .... ...*

(இ-புரை.) வளைக்கும் வில்லிலே பூட்டி யெய்யும் பாணவருஷங்களை மன்மதன் பொழிவதனாலே தனியாயிருந்து வருந்தி வாடைவீசுவதினால் வெதும்புகின்றவனும் சந்திரன் வடவாமுகாக்கினிபோலத் தீயைவீசுதலால் பதைப்பவனும் தென்றிசையிலிருந்து வருந் தென்றலைநோக்கி மெழுகுபோலமனமுருகுகின்றவனுமாவான். எ-று.) (எ)

அந்நிலைகமலபீடத்தந்தணனுணர்ந்துபோந்தா ... .... *
னுன்னருந்தவத்துமேளாரிலொருங்கிருந்தவத்தின்மிக்காய் ...*
கன்னல்வெஞ்சிலைபிற்றாங்குங்கணைக்கிலக்கென்னநின்று..... *
பின்[illegible]லுற்றுழந்தாய்கெடடேனீ துனக்கியைவதன்றால் ... ...*

(இ-புரை) அந்தநிலைமையைப் பிரமதேவனறிந்துவந்து காசிப ரிஷியைநோக்கித்தபசிகளுக்குள் மேலான தவமுள்ளவனே கரும்புவிலிலிருந்துவருகின்ற பஞ்சபாணங்களுக்குக் குறியாயிருந்து துன்பத்துளழுந்தினாய் இது உனக்குத்தகுதியல்ல(எ-று) (அ)

என்றனபலவுங்கூறியிடரொழித்தாற்றிநின்றான் ... ... ...*
றன்றனித்தலைமையோனுந்தனிசதுயரொழிந்துபின்னர் *
பொன்றிகழுருவமங்கைபுலத்தியன்மகளைவேட்டு... ... ...*
நின்றனனொழியப்பெற்றானெடுந்துயர்விரகவெந்தீ ... *

(இ-புரை:) இவ்வாறு பலவசனங்கள் சொல்லி யிடரைநீக்கிமனதையாற்றினான் அதன்பின்பு காசிபரிஷியுந் துயரம்நீங்கிப் புலத்தியரிஷிமகளை விவாகஞ்செய்துகொண்டு மிகுந்ததுயரத்துக் கேதுவாகிய விரகாக்கினியையொழித்தார். (எ-று.) (கூ)

அன்னசொற்றறியப்பெற்றுளதிசயமடைந்தானின்ன ... *
வென்ன[illegible]மியப்பெற்றகாரணமியம்புகென்று ... ... ...*
முன்னரு[illegible]வத்துட்டோன்றாஞ்சுக்கிரனுரைப்பமேனை ... *
வித்திலை[illegible]ர்ந்தேன்காலமும்மையுமுணர்மேவனென்றாள் ...*

(இ-புரை.) இவ்வாறு தாய்சொன்னதையறிந்து அதிசயம் அடைந்தவளாய்த்தாயைநோக்கி யிவைகளையெல்லாம் நீயறியப்பெற்றதற்குக் காரணஞ்சொல்லென்றாள் பொருந்துதற்கரிய தவத்துடன் தோன்றிய சுக்கிரபகவான்சொல்ல இந்த நிலைமைகளையெல்லாம் அறிந்தேன் இதுவுமன்றித்திரிகாலமும் அறிவேனென்றாள். (எ-று.) (ய)

இவையெலாமுணர்ந்தபின்னர்மாயைதாளிறைஞ்சியேத்தி ...*
நவையெலாமொழியப்பெற்றநற்றவமுயற்சிபெற்று... ... *
ளிவர்கருங்கண்ணிமாயைதன்னொடுமிழைத்துத்தேவ ... ...*
ரவையெலாந்தழுவாநிற்குங்கயிலையையடைந்தாளன்றே ... *

(இ-புரை.) இவைகளையெல்லாம்அறிந்தபின்பு மாயையினுடைய பாதங்களைவணங்கித்துதித்துக் குற்றங்களையெல்லா மொழியப்பெற்ற நல்லதவமுயற்சியைப் பெற்றவளாய் மாயையுடனிருந்துதவஞ்செய்து தேவர்கூட்டமெல்லாம் சூழ்ந்திருக்குங்கயிலாயத்தைச்சேர்ந்தாள். (யக)

எனவிவணிகழ்ந்தகாதைப்பரிசெலாமெடுத்துக்காட்டி.... ...*
நனைமலர்ப்படப்பைசூழ்ந்தநைமிசாரணியத்தோங்கும் .... *
புனைசடைமவுலியோர்க்குப்புகன்றனன்சூதன்கேளா ... *
வனையவர்மகிழ்ச்சிகூரவணிமுடிதுளக்கினரால்... ... ...*

(இ-புரை.) இவ்வாறு இங்குநடந்த சரிதங்களின் தன்மையெல்லாமெடுத்துக்காட்டிமலர்ச்சோலைநெருங்கிய நைமிசாரணிய முனிவர்களுக்குச் சூதமுனிவர்சொல்ல அவர்கள்மகிழ்ச்சியடைந்துசடை முடியசைத்துஅற்புதங்கொண்டார்கள். (எ-று.) (யஉ)

மாயைவரலாறுமுற்றிற்று.





உ

விநாயகர் துணை.

# அட்டவணை,


| பக்கம். | காண்டங்கள் | பாடற்றொகை. |
|---|---|---|
| ௧. | பாயிரம். | ௰௩. |
| ௯. | புராணவரலாறு. | ௰௮. |
| ௰௯. | உற்பத்திகாண்டம். | ௱௯௮. |
| ௭௭. | அசுரகாண்டம் | ௱௪௮. |
| ௱௪௪. | மகேந்திரகாண்டம். | ௱௫. |
| ௱௮௧. | யுத்தகாண்டம். | ௩௩௩. |
| ஷெ. | முதல்நாள்பானுகோபன்யுத்தம். | |
| ௨௱௨. | இரண்டாநாள்சூரன்யுத்தம், | |
| ௨௨௫. | மூன்றுநாள்பானுகோபன்யுத்தம், | |
| ௨௩௪: | மூன்றுநாளிராத்திரிஇரணியன் யுத்தம். | |
| ௨௪௧. | நாலாநாள்அக்கினிமுகன்யுத்தம். | |
| ௨௫௧. | மூவாயிரம்பிள்ளைகள்வதை. | |
| ௨௫௯. | நாலாநாளிராத்திரிதருமகோபன்யுத்தம். | |
| ௨௯௧. | ஐந்தாநாள்பானுகோபன்யுத்தம்; | |
| ௨௭௩. | ஆறுநாள்சிங்கமுகாசுரன்யுத்தம். | |
| ௩௱. | ஏழாநாள்சூரபத்மன்யுத்தம். | |
| ௩௨௩. | தேவகாண்டம். | ௩௰௯. |
| ௩௪௰. | தக்ஷகாண்டம். | ௨௨௮. |
| ௪௨௫. | உபதேசகாண்டத்தில். | ௨௩௧. |
| ஷெ | சூராதிகளொடுக்கம். | |
| ௪௭௯. | அயமுகிவரலாறு. | |
| ௫௱௩. | மாயைவரலாறு. | |




# பிழைதிருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| உய | உ | மமெகளன்று | மகளென்று |
| உக | யரு | தகுர்ர் | தருவர் |
| ௸ | ஙங | உடதேசி | உபதேச |
| உங | ச | பசபாச | பசுபாச |
| உஎ | உசா | வார்தை | வார்த்தை |
| ௸ | யச | சித்தத்திருக்கு | சித்தத்தில் |
| உஅ | எ | திண்டிறிறலி | திண்டிறலி |
| ௸ | ய | விறப்பத்தை | விறப்பதை |
| உகூ | ஙய | பாரம | பரம |
| ஙய | உ | யலமோறுதி | யலமோறுதி |
| ஙக | யஎ | பிராம | பிராமண |
| ஙங | கூ | வீறுத்தத் | வீறுதத்த |
| ஙச | உ | பரமவஇன் | பரமசிவன் |
| சகூ | உஉ | நாரதர் | பிரகஸ்பதி |
| ருங | உச | சொல்லி | சொல்லுமதன்பொ ருளைச்சொல்லி |
| ருகூ | ய | வணக்கி | வணங்கி |
| எங | யஎ | சேழானுக்கு | சோழனுக்கு |
| அகூ | யசா | தொடுக் | தொடுக்க |
| ளஎ | க | பதுபகோளை | பதுமகோமளை |
| ளய | யஎ | வளைய | வளைய |
| ளயஉ | உஉ | செய்தரும் | செய்தருளும் |
| ளஉச | ய | பொன்னுல கில்விட்டுநீரா | பொன்னுலகின் மன்னவநீ. |
| ளஙச | யக | முகனுள்ள | முகமுள்ள |
| ளசஅ | யஉ | வகைபோல | படியாக |
| ளசகூ | யக | வாயிலில்லு யுத்மேந்திய | வாயிலிலிருக்குஞ் சேனைபோலச் |
| ளருஉ | ங | சிகரத்தின் | மனைச்சிகரத்தின் |
| ளருரு | ங. | [illegible]கொண் [illegible]ரதண் [illegible]யணிந்த | சாற்றினிடத்திற்பெரி ருந்தியவேகமுள்ள |

# பிழை திருத்தல்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தல் |
|---|---|---|---|
| ௱௬௧ | ௨௰ | சரீத்தில் | சரீரத்தில் |
| ௱௭௧ | ௰௧ | குருதாறுக | குறுதாருக |
| ௸ | ௩௧ | மள்திரிகள் | மந்திரிகள் |
| ௱௮௪ | ௪ | னுயர்ந்பூத | னுயர்ந்தபூத |
| ௱௯௪ | ௰௬ | சூரியனுக்கு | சூரியனுக்கு |
| ௱௯௯ | ௬ | வழினால் | வழியினால் |
| ௸ | ௸ | அம்புருத்தோ | அம்புருத்து |
| ௸ | ௰௯ | தளர்து | தளர்ந்து |
| ௨௱௯ | ௫ | வேர்களும் | யோர்களும் |
| ௨௨௬ | ௨௰ | சொலில்னான் | சொல்லினான் |
| ௨௨௭ | ௨௯ | பாகோபன் | பானுகோபன் |
| ௨௩௰ | ௨ | முதறிந்தே | முறிந்ததே |
| ௨௬௩ | ௨௯ | தடைவாத | தடைவதா |
| ௨௭௧ | ௨௮ | சின்னதமாகிய | சின்னமதாகிய |
| ௨௯௩ | ௩ | றெழிப்ப | றெளிப்ப |
| ௩௱௧ | ௰௮ | இன்பமான | இன்பமானு [illegible]காரமுண்டு |
| ௩௱௰௪ | ௬ | கடிதட் | கடிதுட்டிட |
| ௩௩௰ | ௰௭ | உம்பர்நான் | உம்பர்நாதன் |
| ௩௩௧ | ௩௧ | றொக்கொள்க | றொனக்கொள்க |
| ௩௩௫ | ௨ | வாசிமங்கல | வாசின்மங்கல |
| ௩௩௯ | ௰௩ | விருத்ததினால் | விருத்தத்தினால் |
| ௩௪௰ | ௨ | தவசிடை | தவிசிடை |
| ௩௪௩ | ௨௪ | ஆரோகத்து | ஆரோகணித்து |
| ௩௫௪ | ௨௮ | மலர்களின் | மலரின் |
| ௩௭௮ | ௰௧ | தன்வயத்தனால் | தன்வயத்தனாதல் |
| ௩௮௨ | ௰௮ | உண்டாகி | உண்டாகிப்பத்துக் கங்கைகளாகி |
| ௩௮௭ | ௰௨ | பிந்தி | புந்தி |
| ௩௯௨ | ௨௮ | அடைந்ததேவ | அடைந்ததெவ |
| ௪௱௮ | ௰௯ | பெருந்கை | பொருந்தகை |
| ௪௱௰௯ | ௰௫ | வள்ளியம்மையைவிட்டு | இந்தச்சொல்லைத்தள்ளிவிடவேண்டியது |

# பிழைதிருத்தல்.

பக்கம்.
௨௰
௨௧
௯
௨௩
௨௭
௭

| பக்கம். | வரி | பிழை. | திருத்தல் |
|---|---|---|---|
| ௪௨௧. | ௰. | இவ்த்தைகள் | இவைகள் |
| ௪௬௨. | ௰. | நணடத்தை | நடனத்தை |
| ௪௪௰. | ௰௪. | வெறுருவ | வேறுருவ |
| ௪௪௬. | ௧. | தெத்தி | தேத்தி |
| ௪௪௫. | ௨௫. | போலண்மை | போலவெண்மை |
| ௪௪௯. | ௰௮. | வெள் வேலோ | வொள்வேலோ |
| ௪௯௨. | ௨௩. | வாகன மாகிய | வாகனனாகிய |
| ௪௯௪. | ௰௯. | பாவைபுஞ் | யாவையுஞ் |
| ௪௯௯ | ௩. | கொடியுரு | கொடியுருவ |
| ௪௭௰. | ௮. | தீர் | நீர் |
| ௪௭௬. | ௰௮. | உள்ளத்தத்துக் | உள்ளத்திற் |
| ௪௮௯. | ௨௰. | மெய்யல்லது | மேயலலது |
| ௪௯௬ | ௨௭. | மாடம | மட்டாம |
| ௪௯௮ | ௰௯. | யொகசித்த | யோகசித்த |

